ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

# சிவமணியம்

## ஸ்ரீ பகவானது வாய்மொழியில்
## ஆத்மவிசாரம்

## சமர்ப்பணம்

அருணாசலமே ஆகிய
பகவான் ஸ்ரீரமண மகர்ஷிகளுக்கு
இந்நூல் பாதமலராக சமர்ப்பிக்கப்படுகிறது

# பதிப்புரை

'சிவமணியம்' என்னும் இந்நூல் ஸ்ரீரமண மகரிஷிகளிடம் 1935 முதல் 1939 ம் ஆண்டு வரை நான்காண்டுகளில் நாடி வந்த அன்பர்களின் சந்தேகங்களுக்கு அருளிய தெளிவேயாகும். பற்பல நிலைகளினின்று கேட்கப்படும் சந்தேகங்களுக்கு பெரும்பாலும் தமிழ்மொழியிலேயே பகவான் அருளிய விளக்கங்களின் தொகுப்பாகும் இந்நூல். பேச்சுத்தமிழில் இந்நூல் அமைந்திருப்பது சிறப்பாகும்.

'உலகச் சரித்திரத்திலேயே பரமார்த்த ஸத்யம் பாமரரும் எளிதில் உணர்ந்து அனுபவிக்குமாறு இப்பொழுது காண்பிக்கப் பெற்றவாறு எப்பொழுதும் காண்பிக்கப்பட்டதே இல்லை' என்று பகவானைத் தரிசித்து பிறவிப்பயனுற்ற ஆங்கில பக்தர் கிராண்ட் டஃப் (Grant Duff) கூறியது மிகையல்ல என்பது இந்நூலை வாசித்தால் மட்டுமே உணர முடியும்.

பகவானின் பேச்சு தனிச்சிறப்புடையது. அவருடைய இயல்பான நிலை மௌனமே. பொதுவாக அதிகம் பேசமாட்டார்கள். எப்போதாவது தரிசிக்க வருபவர்கள், 'பகவான் பேச மாட்டார். மௌனி' என்றே நினைப்பார்கள்.

பகவானிடம் கேள்வி கேட்டு பதில் பெறுவது என்பதே ஒரு தவம். அதற்கு மிகுந்த மன அடக்கமும் பொறுமையும் தேவை. அவரிடம் கேட்கப்பட்ட நியாயமான கேள்விகளும், சிரத்தையான சந்தேகங்களும் பதிலில்லாமல் போனதில்லை. சில சமயம் அவரது மௌனமே சிறந்த பதிலாக அமையும். தெளிவு வேண்டுபவர் மிகப் பொறுமையாக காத்திருக்க வேண்டும். ஒரு சரியான விளக்கம் பெற சந்தேகத்தை எளிமையாகவும் சுருக்கமாகவும் பகவானிடம் வைக்க வேண்டும். பொறுமையுடன் கவனமாக காத்திருக்க வேண்டும். பகவான் மெதுவாக நிறுத்தி

நிதானமாக பேச ஆரம்பிப்பார். பேச்சு தொடரத்தொடர வேகம் எடுக்கும். ஒரு சிறு சாரலாக ஆரம்பித்து நல்ல மழையாக மாறுவது போல் அது இருக்கும். சில சமயங்களில் மணிக்கணக்கில் பேச்சு செல்லும். கேட்போர் அனைவரும் காலம் கடந்து கட்டிப் போடப்படுவார்கள். முழுப்பேச்சின் போதும் யாவரும் அமைதியாகக் கேட்டாலே போதும். ஏதும் குறுக்கிட்டால் பேச்சு தடைப்பட்டு தன் இயல்பான மௌனத்திற்குத் திரும்பிவிடுவார். பொதுவாகக் கலந்துரையாடல்களில் (Discussion) கலந்து கொள்வது இல்லை. யாருடனும் வாதம் புரிவது இல்லை.

வாஸ்தவத்தில் அவரது பேச்சு ஒரு கருத்தோ ஒரு பார்வையோ அல்ல. அது சந்தேகம் கேட்பவரின் அறியாமை இருளைப் போக்க அவ்வருடைய ஆத்மப்பிரகாசம் வார்த்தையாக வெளிப்படுவதே. அவருடைய பேச்சின் நோக்கமே தெளிவு வேண்டுவோரை உள்ளே திருப்பி உண்மையை உணர வைப்பதே.

இந்நூலின் முக்ய சாராம்சம் பகவான் கூறும் இக்கதையே.

வியாபாரி ஒருவனை திருடர்கள் பிடித்து, உதைத்து, அவனிடம் இருந்த பொருட்களை கைப்பற்றிக்கொண்டு, அவன் கண்களை கட்டி, கை, கால்களை கட்டி, ஒரு காட்டினில் விட்டுச் சென்று விட்டார்கள்.

அவன் ஒரு வழியாகக் கை, கால் மற்றும் கண் கட்டுகளை அவிழ்த்துக் கொண்டான். அந்தக் காட்டைக் கடந்து வீடு சேர முயன்றான். அவனுக்கு வழி தெரியவில்லை. எவ்வளவு அலைந்தாலும் திரும்பத்திரும்ப புறப்பட்ட இடத்திற்கே வந்து கொண்டிருந்தான்.

அப்பொழுது தெய்வாதீனமாக ஒரு தேவதூதர் அவ்வழியாக வந்தார். அவன் அவரிடம் தன் நிலையை எடுத்துரைத்தான். தேவதூதர் அவனிடம், 'இந்தக் காட்டிலிருந்து வீடு செல்ல நான்கு மார்க்கங்கள் உள்ளன. ஒவ்வொருவர் பூர்வ ஸம்ஸ்காரத்திற்கும் பக்குவத்திற்கும் ஏற்றபடி ஏதோ ஒரு மார்க்கம் சுலபமாக

இருக்கும். அதில், உனக்கு சுலபமாக இருப்பதில் சென்றால் நீ வீட்டையடைவாய்' என்று கூறி நான்கு மார்க்கங்களின் வரைபடம் ஒன்றைக் கொடுத்தார்.

அதைப் பெற்றுக்கொண்ட வியாபாரி அவருக்கு நன்றி கூறினான். அதற்கு அந்த தேவதூதர், 'நான் உனக்கு ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன். நீ வீட்டை அடைந்தவுடன் உன் நன்றியையும், நீ பத்திரமாக வீடு சேர்ந்ததைத் தெரியப்படுத்தும் விதமாக இந்த மந்திரத்தை மூன்று முறை கூறுவாயாக. மற்றபடி இந்த மந்திரத்தை கூறத்தேவையில்லை.

ஒரு வேளை நீ செல்லும் மார்க்கத்தில் தெய்வகதியாலோ வேறு கர்மானுசாரத்தினாலோ உன் பயணம் தடைபட்டு நீ வீட்டை அடைய முடியாத நிலை ஏற்பட்டால் இந்த மந்திரத்தை மூன்றுமுறை கூறினால் உடனடியாக வீட்டை அடைந்து விடுவாய். அல்லது உனக்கு உடனடியாக வீட்டை அடைய வேண்டும் என்ற உண்மையான தவிப்பு ஏற்பட்டாலும் இம் மந்திரத்தை மூன்று முறை கூறினால் உடனடியாக வீட்டை அடைந்து விடுவாய். மற்றபடி இந்த மந்திரத்தை நான் கூறிய மூன்று காரணங்கள் இல்லாமல் கூறக்கூடாது' என்று சொல்லி சென்று விட்டார்.

வியாபாரியும் அவர் கொடுத்த வரைபடப்படியே ஒரு சுலபமான மார்க்கத்தை தேர்ந்து வீட்டை அடைந்தான்.

அவன் வீடு திரும்பியதைக் கேள்விப்பட்ட அவ்வூர் மக்கள் அவனை மிக அதிசயத்தோடு தரிசிக்க வந்தார்கள். ஏனெனில் அந்தக் காட்டிலிருந்து வீடு திரும்புவது அவ்வளவு சுலபம் அல்ல, யாரோ கோடியில் ஒருவரே அக்காட்டைக் கடந்து வீட்டை அடைவார்கள். அவ்வூர் மக்கள் அவனுக்கு மாலை மரியாதை செய்யவும், அக்காட்டைக் கடந்த சாகசத்தைக் கேட்பதற்காகவும் அவ்வீட்டில் திரண்டார்கள்.

அந்த வியாபாரியும் அவர்களை வரவேற்று அந்தக் காட்டைப் பற்றியும், அதைக் கடக்க உள்ள நான்கு மார்க்கங்கள்

பற்றியும், தான் கடந்து வந்த மார்க்கத்தின் சிறப்பையும் விளக்கிக் கூறினான். மக்களும் மிகவும் ஆர்வத்தோடும் சிரத்தையாகவும் ஒரு வேளை நமக்கும் இக்கதி ஏற்பட்டால் அக்காட்டை க் கடக்க உதவும் என்று கேட்டுக்கொண்டார்கள்.

அப்போது வியாபாரி வீட்டுக்கதவின் உள் தாழ்ப்பாள் போடப்பட்டிருந்ததைக் கவனித்தான். அவனுக்கு மிகுந்த ஆச்சர்யமாக இருந்தது. 'இப்பொழுதுதானே நான் காட்டிலிருந்து வந்து கதவைத் திறந்து உள்ளே வந்தேன், மக்களும் வந்து கொண்டும் போய்க்கொண்டுமாக இருக்கிறார்கள்; எப்படி உள் தாழ்ப்பாள் போட்டிருக்க முடியும்?' என்று சிந்திக்கும்போதே அவனுக்கு தேவதூதர் கேட்ட வாக்குறுதியை மறந்தது ஞாபகத்திற்கு வந்தது. வீட்டை பத்திரமாக அடைந்து விட்டேன் என்பதை அவருக்குத் தெரிவிக்கவும், நன்றி கூறுமுகமாகவும் அவர் உபதேசித்த மந்திரத்தை பலமாக உச்சரித்தான். அந்த மந்திரம்

நான் யார்?

நான் யார்?

நான் யார்?

அந்த மந்திரத்தை மூன்று முறை உச்சரித்தவுடன் அவனை சுற்றி மாலை மரியாதை செய்து கொண்டிருந்த மக்கள் எல்லோரும் கலங்கலாகத் தெரிய ஆரம்பித்து மறைந்து விட்டார்கள்.

அவன் தன்னுடைய படுக்கை அறையிலேயே படுக்கையில் தான் இருந்ததைக் கண்டான். அவனை எந்தத் திருடர்களும் காட்டில் விடவில்லை. அவனும் காட்டில் இருந்து வீடு திரும்பவும் இல்லை. எப்போதும்போல் வீட்டிலேயே இருந்தான். அவன் கண்ட கனவில் இருந்து விழித்துக்கொண்டான். அவ்வளவுதான்.

இந்தக்கதையின் கருத்தையே பிற்காலத்தில் பகவான் ஏகான்ம பஞ்சகத்தின் முதல் பாடலாக அருளினார்.

**'தன்னை மறந்து தனுவே தானாய் எண்ணி**
**எண்ணில் பிறவி எடுத்து இறுதி - தன்னை**
**உணர்ந்து தானாதல் உலக சஞ்சாரக்**
**கனவின் விழித்தலே காண்'**

இதுகாறும் உண்மையை உணர்த்தும் நூல்கள்

**'தன்னையும் தனக்கு ஆதாரத்**
**தலைவனையும் கண்டானேல்**
**பின்னை அத் தலைவனே தானாய்**
**பிரம்மமாய் பிறப்புத் தீர்வன்'**

என்றே கூறிவந்தது.

அதாவது தன்னை உணர்தலை ஒரு செயலாகவும், ஆதாரத்தலைவனை உணர்தலை ஒரு செயலாகவும், கடைசியாக அந்த ஆதாரத்தலைவனே தானாகுதலை (அதிலேயே நிலைபெறுதலை) ஒரு செயலாகவும் கூறிவந்தது.

பகவான், தன்னை உணர்தலும், பிறகு அதுவாகவே நிலைபெறுதலாகிய தானாகுதலும் ஆகிய இரண்டும் உலக சஞ்சாரக் கனவே. இதிலிருந்து விழிப்பதே உண்மையில் தன்னை உணர்ந்து தானாகுதல் என்று ஒளிவு மறைவின்றி அவரது வாழ்க்கையைப் போலவே விளக்குகிறார்.

உலகசஞ்சாரக் கனவு ஏற்படுவதற்கு அடிப்படைக் காரணம் தன்னை மறத்தல் என்னும் அஞ்ஞான உறக்கம். சிலந்திப் பூச்சி தன்னிடம் இருந்தே வெளியில் நூலை நூற்று மறுபடியும் தன்னுள் இழுத்துக் கொள்கிறதோ, அப்படியே மனமும் தன்னிடத்தில் இருந்தே உடல் உலகத்தைத் தோற்றுவித்து மறுபடியும் தன்னிடமே ஒடுக்கிக் கொள்கிறது.

மனம் இந்த உண்மையை மறைத்து விடுகிறது. இதுவே தன்மறதி. இந்த உண்மையை ஆராய்ந்து தெளிவதே உலக சஞ்சாரக் கனவுக்கு ஆதாரமான அஞ்ஞான உறக்கத்தில் இருந்து விழித்தல்.

இந்நூலில் தவறான பார்வை (misperception), அஞ்ஞானம், அவித்தை, தேகாத்மபுத்தி, ஆத்மாவை அனாத்மாவோடு சேர்த்து குழப்புதல், நினைப்பு நினைப்போடு சேர்தல், முதல் எண்ணம், போலி நான், விட்சேபம், சிட் ஜட கிரந்தி, நீ யாரென்று பார், பிறந்திருக்கிறாயா என்று பார், உன்னைத் தெரிந்துகொள் என்ற பதங்களால் உணர்த்தப்படுவது தன்னை மறத்தலே.

யாவும் என்றும் தன்னைத் தவிர வேறில்லாதபடி பரமார்த்த சொரூபம் விளங்குவதால் அதை அடைதல் என்னும் செயல் என்றும் எத்துணையும் இல்லவே இல்லை என்று தெளிந்து இருப்பதே சரியான பார்வை, திருஷ்டியை ஞானமயமாக்குதல், சும்மாயிருத்தல், நினைப்பற்ற நிலை, கவலையில்லாமல் இருத்தல், தூங்காது தூங்குதல், ஞானம், சரணடைதல், ப்ரபத்தி.

**தேனுண்டு உமிழும் திறன்போல் சிவானந்த**
**மோனம் தளும்பி மொழி காலத்தே - நின்று**
**தோன்றிருது போலும் ஒன்றைச் சுட்டாது கேட்பவர்க்கு**
**ஆன்றதவம் வேதம் அது.**

இந்தப்பாடல் பகவான் ரமணமகர்ஷிகளுக்கும் அவருடைய அன்பர்களுக்குமே பொருந்தும். இந்த உரையாடல் தொகுப்பில் பல அன்பர்களின் கேள்விகளே அவர்களின் தபஸ். அதற்கு பகவான் அருளிய விளக்கமே வேதம். நமக்கும் இந்நூலைப் படிப்பதே தபஸ்; இந்நூலே வேதம்.

இந்நூலை சிரத்தையாய் வாசிப்பதாகிய தபஸ் இக்காலத்தில் எல்லோராலும் இயற்றக் கூடியதே.

**தம்மால் இயன்றதைத் தாம் செய்தால்**
**தம்மால் இயலாததை அம்மான் செய்வார்**
**தம்மால் இயன்றதும் தாம் செய்யத் தவறினரேல்**
**அம்மான் அருளுக்கு ஓர் குறை இல்லை.**

சிலகருத்துக்களே மீண்டும் மீண்டும் சொல்லப்படுவதாகத் தோன்றினாலும் சிரத்தையோடு வாசிப்பவர்க்கு உட்பொருள் பலப்படும்.

இந்நூலை வாசிப்பதோடு நிறுத்தி விடாமல் அருணாசலேஸ்வரரின் அபேதஸ்வரூபமாம் ஸ்ரீரமண மகர்ஷிகளை நேரில் திருவண்ணாமலை ஸ்ரீரமணாச்ரமத்திற்கு சென்று வணங்கி அவரது அருளையும், நேர் உபதேசமான மௌனத்தையும் பெற்று உய்யுமாறு வேண்டுகிறோம்.

இதுவே பிறவிப்பயன். வேறொன்றும் இல்லை.

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

# சிவமணியம்

(T-1) *சன்யாசி ஒருவர் கேட்டார்.*

**கேள்வி: உலகமெல்லாம் கடவுள்மயம்னு எப்படி உணர்றது?**

**பகவான்:** பாக்கறவனிடம் ஞானமிருந்தா பாக்கறதெல்லாம் கடவுள்னு தெரியும்.

"திருஷ்டிம் ஞானமயீம் கிருத்வா பச்யேத் பிரம்மமயம் ஜகத்".

ப்ரம்மம்னா என்னன்னு தெரியாமே எப்படி ப்ரம்ம மயமாகும் ஜகத்?

(2) *தரிசனம் பண்ணவந்த ஒரு அன்பர் கேட்டார்.*

**கே: திருஷ்டின்னா என்ன? அதை எப்படி ஞானமயமாக்கறது?**

**ப:** நாம எந்த ஸ்திதியிலே இருக்கோமோ... அந்தந்த ஸ்திதி பிரகாரம் திருஷ்டி ஏற்படும்.

ஜாக்ர ஸ்திதியிலே... ஸ்தூல சரீரம், ஸ்தூல நாம ரூபங்களைப் பாக்கறது.

சொப்ன ஸ்திதியிலே... சூட்சும சரீரம், சூட்சும நாம ரூபங்களைப் பாக்கறது.

சுஷுப்தியிலே... சரீரமும் இல்லை; திருஷ்டியும் இல்லை.

ஞானதிருஷ்டியிலே பிரம்மத்தோடு ஏற்படற ஐக்கிய பாவத்துலே... எல்லாம் சரியா நடக்கும்.

**அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ள எண்கள் ஆங்கில மூல நூலான *Talks with Sri Ramana Maharshi*-யின் Talk number-ஐக் குறிக்கின்றன**

அப்போ ஞானத்தை தவிர வேறெதுவும் இருக்காது.
ஞானத்துக்கு அன்னியமா எதுவும் இருக்காது.

(6) *தரிசனம் பண்ண வந்த சன்யாசி ஒருவர் கேட்டார்.*

**கே: மனத்தை எப்படி சலனமில்லாம வைச்சுக்கறது?**

ப: நீர் யாருங்கறத மறந்தா....உலகம் உண்மையாத் தெரியும், சலனப்படும்.

நீர் யாருங்கறத மறக்காமயிருந்தா... உலகம் அப்படித் தெரியாது. சலனப்படாது.



(13) *திருமதி. பிக்கட் என்ற ஆங்கிலப் பெண்மணி கேட்டார்.*

**கே: ஞானமடையறதுக்கு குரு அவசியமா?**

ப: குரு அருளாலே மட்டுந்தான் ஞானம் ஏற்படும்.

தியானம், உபதேசம், சொற்பொழிவு இந்த மாதிரி வேறு எதனாலும் ஞானம் வராது. இதெல்லாம் இரண்டாம் பட்சம்.

ஞானத்துக்கு குரு அருள்தான் ப்ரதானமும், முக்கிய காரணமும்.

**கே: ஞானமடையறதுக்கு உள்ள தடை எது?**

ப: பூர்வ வாசனைகள்.

**கே: வாசனைகளை எப்படி இல்லாம பண்றது?**

ப: ஞானத்தாலேதான்.

**கே: இது குழப்புதே! ஞானமடையத் தடை வாசனைங்கறீங்க, அப்புறம் வாசனை எப்படி போகும்னா.... ஞானமடைஞ்சா போயிருங்கறீங்க. சரியா சொல்லுங்க.**

ப: ஏதோ தடையிருக்கறதாகவும், அப்புறம் நீக்கணுங்கறதாகவும், இப்படி எல்லாக் குழப்பமும்... அகந்தை பண்ற சேஷ்டை.

இந்தக் கேள்வியெல்லாம் கேட்டுக்கொண்டு இருக்கறது யாருன்னு பாருங்கோ!

உண்மை பிடிபடும்.

**கே: ஞானமடைய சாதனம் என்ன?**

ப: சாஸ்திரங்களும், பெரியவாளும் சொல்றதக் கேக்கறதுதான்.

**கே: சாஸ்திரங்களைப் படிக்கறதா அல்லது அதைப்பத்தி பேசறவங்களைக் கேக்கறதா... தியானம் பண்றதா?**

ப: எல்லாந்தான். ஆனா இதெல்லாம் இரண்டாம் பட்சம்.
குரு அருளாலே மட்டுந்தான் ஞானம் வரும்.

**கே: குருவருள் கிடைக்கறதுக்கு எவ்வளவு காலம் ஆகும்?**

ப: தெரிஞ்சுகொண்டு என்ன பண்ணப்போறேள்?

**கே: ஒரு நம்பிக்கைக்குத்தான்.**

ப: இந்த நம்பிக்கைதான் பெரிய தடை.
'நாம' எப்பவும் இருக்கோம்.
நாம இல்லாமே எதுவும் இல்லே.

பேசாம சும்மாயிருந்தா... எல்லா ஆசையும் சந்தேகமும் ஓடிடும்.

மூணு அவஸ்தைக்கும் (நிலைக்கும்) சாட்சியாய் நாமதான் இருக்கோம். அவஸ்தை எல்லாம் அகந்தைக்குத்தான்.

'நாம இருக்கோமே' அதுதான் இதுக்கெல்லாம் ஆதாரமாயிருக்கு.

அகந்தைக்கும் சேத்துதான்.

தூக்கத்திலே நாம இல்லாமலா போனோம்?

அப்போ 'நான் இல்லே'... 'உலகம் இல்லே'ன்னுல்லாம் தோணித்தா?

விழிச்ச உடனேதான் 'ஒண்ணும் தெரியலே'... 'எதையும் பாக்கலே' அப்படி....ன்னுலாம் சொல்றோம்.

தூக்கத்துலே எது இருந்ததோ... அதேதான் இப்பவும் இருக்கு.

விழிப்புலே நாம யாருன்னு தெரிஞ்சா மூணு நிலைமையிலும் அதேதான் மாறாம இருக்குன்னு தெரிய வரும்.

தூக்கத்துலே நாம இருக்கோம்கறது புரிஞ்சாலே... பக்குவமானவனுக்குப் போதும்.

இப்போ 'இருக்கறது' நல்லாத் தெரியும்.

**கே: தூக்கத்துலே நான் எப்படி இருக்கேன்னு பாக்கப் போனா... தூக்கந்தான் வருது!**

ப: ஆமா... தூக்கந்தான் வரும்.

**கே: ஆனா தூங்கும்போது ஒண்ணும் தெரியலையே?**

ப: ஒண்ணும் தெரியலேன்னு சொல்றது யார்?
யாருக்கு ஒண்ணும் தெரியலே?
கண்டுபிடிங்கோ!
நீங்க இல்லேன்னு சொல்லவே முடியாது.
'நான்ங்கறது' மூணு நிலையிலேயும் இருக்கு.
அகண்டமா (இடைவிடாம) இருக்கு. எப்பவும் இருக்கு.

**கே: அப்போ நான் தூக்கத்துலே இருக்கற மாதிரியே எப்பவும் இருக்கணுமா? அதாவது விழிப்புலேயும் அப்படியே இருக்கணுமா?**

ப: ஆமா... ஜாக்கிரதையா (விழிப்பா) இருக்கறதுதான் ஜாக்கிர அவஸ்தை (விழிப்பு நிலை). ஆனா அது தூக்கமில்லை. அதுதான் 'தூங்காமத் தூங்கறது'.

அதை விட்டுட்டுக் கண்டதை நினைச்சா குழப்பந்தான் மிஞ்சும்.

**கே: அப்போ நான் எதையும் நினைக்கவே கூடாதா?**

ப: ஆமா.

நினைப்பெல்லாம் போய், நான்கறதா...அதாவது 'வெறும் இருக்கேன்'கறதா மிஞ்சுவோம்.

உண்மையிலேயே.... நமக்கு உள்ளே வெளியே அப்படினு எல்லாம் கிடையாது. அதுவும் அகந்தை கொண்டு வர்ற கற்பனைதான்!

'நான்கறது' எப்பவும் சுத்தமா, பரிபூரணமாயிருக்கு.

**கே: நீங்க சொல்றது எல்லாம் புத்திபூர்வமா புரியுது. இது ஞானத்துக்கு உதவுமா?**

ப: ஓரளவுக்கு உதவும்.

'நான்கறது'....புத்தியைத் தாண்டி புத்திக்கே ஆதாரமாயிருக்கு.

நாம....நம்மளா இருக்கறதுக்கு புத்தியெல்லாம் தேவையில்லே!

**கே: நான் ஞானமடைஞ்சா எல்லோருக்கும் உதவ முடியுமா?**

ப: ஆமா.... நிச்சயமா! அதுதான் உண்மையிலேயே எல்லோருக்கும் உதவறது.

ஆனா.... அப்போ உதவறதுக்கு அங்கே யாரும் இருக்க மாட்டா.

உண்மையை உணர்ந்தவன், எல்லாத்துலேயும், தன்னையே தான் பார்ப்பான்.

எப்படி, கம்மாளன் எல்லா நகையிலேயும் தங்கத்தையே பாக்கறானோ... அப்படி, எல்லாத்துலேயும் அவனையேதான் பார்ப்பான்.

நம்மள உடம்பாப் பாத்தா... எல்லாம் நாம ரூபமா தெரியும்.

'நான்கறத'.... உடம்பைத் தாண்டி இருக்கறதா பாத்தா...நம்ம உடம்போட சேத்து எல்லா உடம்பும் போயிடும்.

**கே: மரஞ்செடி எல்லாம் போயிடுமா?**

ப: நீங்க இல்லாமே இதெல்லாம் இருக்கா?

சொல்லுங்கோ!

உங்களிடமிருந்து மனம் வெளிப்படறப்போ எல்லாம் வந்துடறது.

எங்கேருந்து வர்றதுன்னு பாருங்கோ! மனம் வெளிப்படாது. நாம மாத்ரம் இருப்போம்.

**கே: நீங்க சொல்றது புத்திபூர்வமா புரியுது. அனுபவம் ஏற்படலையே! இந்த உலகமெல்லாம் அப்படியே இருக்கே?**

ப: ஆமா... இது ஒரு சினிமா மாதிரி! ஸ்கிரீன்லே வெளிச்சம் வந்தவுடனே... அங்கே ஊர் வந்து, ஆள்கள்...வா வந்து, உண்மையிலேயே ஏதோ சம்பவம் நடக்கற மாதிரி தெரியறதில்லையா! அப்படியேதான் இதுவும்.

இப்போ... அந்தப் படத்திலேயே படம் பாக்கறவனையும் சேத்து, படம் பாக்கற மாதிரியே காட்டறா...னு வச்சிக்கோ.

இப்போ படமும்... படம் பாக்கறவனும் ஒண்ணா ஸ்கிரீன்லே தான் இருக்கா. எல்லாம் ஸ்கிரீன்தான்.

இதை உங்களுக்குப் பொருத்திப் பாருங்கோ!

'நீ'ங்கறதுதான் ஸ்கிரீன். அந்த ஸ்கிரீனே பிக்சட்ன்னு ஒரு படத்தைப் போடறது. அந்தப் படத்துலேதான் நீங்க கேக்கற 'மரஞ்செடி கொடி', 'எல்லோரும்', 'உலகம்' எல்லாம் தெரியறது.

உண்மையிலேயே... இது எல்லாம் நாமதான்.

நம்மளத்தவிர வேற ஒண்ணும் இல்லை.

நாம யாருன்னு தெரிஞ்சா... நம்மளேதான் எல்லா இடத்திலேயும், எல்லாமுமா, எப்போதும் இருக்கோம்னு தெரியும்.

நம்மளத் தவிர வேற எதுவும் இங்கே இல்லே.

**கே: நீங்க விளக்கறது இன்னும் எனக்கு புத்திபூர்வமாத்தான் புரியுது. அனுபவமா இல்லை. ஆனாலும் ரொம்பத் தெளிவா அழகா சொல்றீங்க.**

ப: "எனக்கு இன்னும் அனுபவமாகலே".... 'நான் இன்னும் உண்மையை அனுபவமா உணரலே'... அப்படின்னு சொல்றதில்லையா... அதுதான் அகந்தை.

எல்லாம் அது பண்ற சேஷ்டை.

இதுதான் பெரிய தடை.

உண்மையிலேயே நான்கறது மட்டும்தான் அனுபவமா இருக்கு.

'நான்கறதுக்கு' இன்னொரு பெயர்தான் அனுபவம்.



(16) கிராண்ட் டஃப் என்கிற ஆங்கிலப் பெரியவர் கேட்டார்.

**கே: இறந்து போன எங்கே அம்மாவை மறுபடியும் பார்க்க முடியுமா? அவங்களுக்கு நான் ஏதாவது நல்லது செய்ய முடியுமா?**

ப: ஒருத்தன் தன்னை ஒரு உடம்போட அபிமானிச்சுக்கற வரைக்கும், உலகத் தோற்றம்... அவனுக்கு உண்மைங்கற மாதிரியே இருக்கும்.

அவன் உடம்பு... இன்னொரு உடம்பிலேயிருந்து பிறந்ததாத் தான் நினைப்பான்.

பிறந்தது இறந்தே தீரும். ஏன்னா... பிறந்தேன்கற நினைப்பு இவன்கிட்டேயிருக்கறதாலே! இந்த நினைப்பு இருக்கறவரைக்கும் மறுஉலகங்கறதும் உண்மை.

இறந்தவா... இவன் கொடுக்கற திதி கர்மாக்களாலே பயன் பெறுவா.

இதையே இன்னொரு விதமா சொல்றேன், யோசிச்சுப் பாருங்கோ...

'நான்கற' ஒரே உண்மைதான்.... இப்படி அகந்தையாவும், உடம்பாவும் உலகமாவும் தோற்றமாறது.

'நான்கறது'தான் இதையெல்லாம் ஒளிர்விக்கறது.

ஆனா... அகந்தை இதை மறைச்சு, உடம்பைப் பிடிச்சுக் கொண்டு, நாம உடம்புதான்னும், இன்னாருக்குப் பிறந்ததாவும்... இந்த உலகம் ஏதோ சாஸ்வதமா இருக்கறதாவும்... நம்ப வச்சு, இந்த வாழ்கையையே துன்பமா மாத்திடறது.

நாம படம் மாதிரி போட்டுத்தான் வந்தோங்கறதை மறக்கறதுதான்... உண்மையிலேயே பிறப்பு.

அதனாலே... நாம பிறந்த உடனேயே அம்மாவை (மறந்துட்டோம்) கொன்னுட்டோம்.

இப்போ செத்துப்போன அம்மாவை... மறுபடி பாக்கணும்னு நினைக்கறது... உண்மையிலேயே நம்மள நாம எங்கேயிருந்து, எப்படி வந்தோம்னு உணர்றதுதான்.

இந்த மறைப்பெல்லாம் நீங்கறதான 'அகந்தை நாசம்'தான்... அம்மாவுக்கு சரணடையறது.

அப்புறம் அம்மா மட்டுந்தான் எப்பவுமே இருப்பா.

(17) E.Y. *இவான் வென்ட்ஸ் என்ற ஆங்கில ஆராய்ச்சியாளர் கேட்டார்.*

**கே: மாயைன்னா என்ன? மாயை ஏன் ஏற்படுது?**

ப: மாயை யாருக்கு? அதைக் கண்டுபிடி! அப்புறம் மாயை இருக்காது; ஓடிடும்.

பொதுவா எல்லோரும் மாயைன்னா என்னன்னு தெரிஞ்சுக்கணும்ன்னுதான் நினைக்கறாளே தவிர, அது யாருக்குன்னு பாக்க மாட்டேங்கறா.

மாயை...ன்னு ஒண்ணு இருக்கோ! இல்லையோ! நமக்குத் தெரியாது.

அது வெளியே! ஆனா 'நான்கறது' நல்லாத் தெரியறதே!

இங்கேயே இப்போவே இருக்கே!

இதை என்னன்னு பாப்போம்ன்னு யாரும் நினைக்கறது இல்லை.

இப்படி உள்ளங்கை நெல்லியாயிருக்கறதை விட்டுட்டு, இல்லாத மாயைன்னா என்ன? அது எதுக்கு இருக்குன்னு ஆராய்ச்சி பண்றா.

**கே: வேலை பாக்கறது ஞானமடையத் தடையா?**

ப: இல்லவே இல்லே.

உண்மையை உணர்ந்தவனுக்கு 'நான்கறது'தான் ஒரே உண்மை.

எந்த வேலையும் இந்த 'நான்கறத' பாதிக்காது.

வேலை தானா நடக்கும்.

அவன் சும்மா.... வேலையிலே எந்தப் பற்றும் இல்லாமே பாத்துக்கொண்டு இருப்பான்.

அவன் செய்யற வேலைக்கு எந்த நோக்கமும் இல்லை.

ஞானமார்க்கத்தை அப்பியாசிக்கறவாளும் வேலை பாக்கலாம். ஆரம்ப சாதகனுக்கு முதல்லே கொஞ்சம் சிரமமா தெரியும். தெளிவு பிறக்க, பிறக்க, வேலை... ஞானத்துக்கு, அமைதிக்குத் தடையா இருக்காது.

**கே: ஆரம்ப சாதகன் அப்பியாசிக்கும்போதுன்னு சொல்றீங்களே.... அது என்ன அப்பியாசம்?**

ப: 'நான்கறத'... எந்தக் கலப்புமில்லாமே நன்னா அனுபவிக்கறது.

இதுதான் அப்பியாசம்.

இதுக்குத்தான்... 'நான் யார்'ங்கற ஆத்ம விசாரம் பண்றது.

நான் எப்படி வந்தேன்... எங்கிருந்து வந்தேன்னு பாக்கறது.

இதை மறந்ததாலேதான்... எல்லா அனர்த்தமும்.

இதை மறக்காமயிருந்தா... எதுவும் நம்மள ஒண்ணும் பண்ணாது.

**கே: திருமணம் பண்ணாம பிரம்மச்சரியம் கடைப்பிடிக்கறது ஆத்ம ஞானமடைய ரொம்ப அவசியமா?**

ப: பிரம்மச்சரியம்ன்னா... 'பிரம்மத்திலே சரித்தல்' அதாவது 'வசித்தல்'. அதுக்கும் திருமணத்துக்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

உண்மையை உணர்ந்தவன்தான் உண்மையிலேயே பிரம்மச்சாரி.

**கே: அப்போ திருமணம் பண்ணிக்கலாமா? கிருஹஸ்தன் ஞானம் அடைய முடியுமா?**

ப: தாராளமா பண்ணிக்கலாம்.

பிரம்மச்சாரியோ... கிருஹஸ்தனோ.... யாராயிருந்தாலும் ஞானம் அடையலாம்.

ஏன்னா... ஞானங்கறது இங்கேயே இப்போவே இருக்கு. அது இனிமே ரொம்பப் பாடுபட்டுத்தான் எப்பவோ வரும்ன்னா.... அதை அடையறதிலே ஒரு பிரயோஜனமும் இல்லே.

எது எப்பவும் இயல்பாயில்லாமே இருக்கோ... அது நிரந்தரமில்லே.

ஆனா நான் சொல்ற 'நான்கறது' இங்கேயே... இப்போவே... தானே தானாய் இயல்பாயிருக்கு.

**கே: நாம இப்போ செய்யற செயல்கள் மறுபிறப்பிலே பாதிக்காதா?**

ப: முதல்லே... நீங்க இப்போ பிறந்திருக்கேளான்னு பாருங்கோ! ஏன் மறுபிறப்பைப் பத்தி இப்போ யோசனை?

உண்மை என்னன்னா... யாரும் பிறக்கலே; யாரும் இறக்கலே.

எவன் பிறந்தவனோ... அவன் இறப்பையும் பிறப்பையும் பத்தி யோசிச்சுக்கட்டும்!

**கே: சுவாமி நீங்க ஞானமடைய எவ்வளவு நாள் ஆச்சு? எப்போ ஞானமடைஞ்சீங்க?**

ப: ஸ்தூலமா சுவாமின்னு ஒரு உடம்பு தெரியறதனாலேதான் இந்தக் கேள்வி கேக்கறேள்.

'நான்கற' உணர்வுலே... ஒரு ஸ்தூலமா உடம்பும், அபிமானமும் ஏற்பட்டு ஸ்தூல நாம ரூபங்களைப் பாக்கறோம்.

இதுக்குப் பேர் ஜாக்ர ஸ்திதி (விழிப்பு நிலை).

'நான்கறதுலே'... சூட்சும உடம்பும் அபிமானமும் ஏற்பட்டு சூட்சும உலகத்தைப் பாக்கறோம்.

அதோட பேர் சொப்ன ஸ்திதி (கனவு நிலை).

தூங்கும்போது ஒரு உடம்புமில்லை; எந்த உலகமுமில்லை; அபிமானமும் இல்லை; திருஷ்டியுமில்லை.

ஆனா நான்கறது இல்லாம போயிருச்சா....

நான்கறது அங்கே இல்லாம... தூங்கினோம்கற ஞாபகம் எப்படி ஏற்படும்?

அப்போ யாரு தூங்கினா?

யாரோவா?

தூங்கும்போது யாரும் 'நான் இப்போ தூங்கிக்கொண்டு இருக்கேன்'னு சொல்லலியே.

விழிப்பு வந்தவுடனேதான் 'நான் தூங்கினேன்'னு சொல்றோம்.

முன்னாடி தூங்கினேன்னு தன் இருப்பை விழிப்பிலே நினைவு கூர்றோம்.

அதனாலே 'நான்கறது'தான் மூணு நிலையிலேயும் மாறாம ஒரேமாதிரியா இருக்கு.

இந்த மாறாம இருக்கற 'நான்கறது'தான் 'உள்ள பொருள்'... 'ஞானம்'... எல்லாம்.

அது வெறும் இருப்புமாத்ரமா இருக்கு.

அதுலே நீயுமில்லை; நானுமில்லை. கடந்தகாலம்; நிகழ்காலம்; எதிர்காலம் எதுவும் இல்லை.

அதுதான் காலம் தேசம் எல்லாத்துக்கும் ஆதாரமாகவும், எப்பவும் இருக்கு.

ஒரு வாழைமரம் எப்படிக் குலைதள்ளி அது அழியறதுக்கு முன்னாடி பக்ககன்னுகளை விட்டுட்டுப் போறதோ.... அந்த பக்ககன்னுகளும்....பின்னாடி அதே வேலையைப் பாக்கறதோ.... அந்த மாதிரிதான் ஆதிகுரு தட்சிணாமூர்த்தி சனகாதி நால்வருக்கு மௌனத்தாலே உபதேசம் பண்ணி, பக்ககன்னுகளை விட்டுட்டுப் போனார்.

அது இப்போவரைக்கும் பெருகிக்கொண்டே இருக்கு.

ஒரு குரு.... தட்சிணாமூர்த்தியோட கன்னுதான்.

வாழையடி வாழையாய் வந்துகொண்டே இருக்கு.

அதனாலே இது எப்போ ஆரம்பிச்சது....ங்கற கேள்விக்கு இடமில்லே.

நான்கறத உணர்ந்தாலும் இந்தக் கேள்விக்கு இடமில்லே.

**கே: ஞானிக்கு ஏகாந்தம் அவசியமா?**

ப: எல்லாம் மனசுதான்.

ஒருத்தன் கூட்டத்துக்கு நடுவிலேயும் மன பிரசாந்தத்தோட இருக்கலாம்.

அவன் ஏகாந்தவாசிதான். இன்னொருத்தன் காட்டுலே மனசை அடக்க முடியாம சிரமப்படலாம். அவன் ஏகாந்தத்திலே இருக்கான்னு சொல்ல முடியாது.

அதனாலே.... ஏகாந்தம்கறது மனசைப் பொறுத்தது. பற்று இருந்தா.... ஏகாந்தமிருக்காது. பற்றற்றவன் எங்கே இருந்தாலும்.... ஏகாந்தந்தான்.

**கே: அப்போ ஒருத்தன் உலகத்துல வேலை பாத்துகிட்டே ஏகாந்தமாயிருக்கலாம். அப்படித்தானே!**

ப: ஆமா.

பற்றோட செய்யற வேலை பந்தம். பற்றில்லாமே.... தன் வேலைகளைச் செய்யறது ஒண்ணும் செய்யாது. அவன் எப்பவும் ஏகாந்தவாசிதான்.

**கே: ஞானிகள் மக்களோட கலந்து அவங்களுக்கு உதவறது ரொம்ப அவசியமில்லையா?**

ப: ‘நான்கறது’தான்.... இங்கே ஒரே உண்மை.

உலகமும் மத்த எல்லாம் கற்பனை. உண்மையை உணர்ந்தவன், தனக்கு அன்னியமா உலகத்தைப் பார்க்க மாட்டான்.

உதவறதுக்கு அங்கே யாரும் இல்லே.

**கே: நூறு பேர் ஞானமடைஞ்சவங்க இருந்தா உலகத்துக்கு ரொம்ப உதவியாயிருக்குமா?**

ப: ‘ஞானம்’ங்கறப்ப வரையற்றது குறிக்கப்படறது.

நூறு பேர்ங்கறப்ப... வரையறுக்கப்படறது.

வரையற்றத.... வரையறுக்கறது பொருந்தாது.

இருக்கறது வரையற்ற ஒரே உண்மை மட்டுந்தான்.

நீங்க யார்ன்னு தெரிஞ்சுகொண்டா.... எல்லோரும் தெரிஞ்சு கொண்டா மாதிரி.

நீங்க ஒரு கனவு காண்றேள்... அதிலே நிறைய பேரைப் பாக்கறேள்.... கனவிலே இருந்து முழிச்சபிறகு... அதிலே இருந்தவாள்லாம் அந்தக் கனவிலேர்ந்து முழிச்சுக்கொண்டாளா? இல்லே அந்தக் கனவிலேதான் இருக்காளா?

**கே: மாயைன்னா என்ன?**

ப: மாயைன்னா என்ன.... உண்மைதான்.

உண்மைதான் மாயை.

**கே: மாயைங்கறது பொய்யில்லையா?**

ப: மாயைங்கறது.... உண்மையிலேயிருந்து வெளிவந்து உண்மையையே மறைக்கறதுன்னு சொல்றதாலே... அதைப் பொய்ன்னு சொல்றா.

வாஸ்தவத்திலே மாயைங்கறது... உண்மையேதான்.

(21) *திரு. எல்லப்ப செட்டியார், எம்.எல்.சி கேட்டார்.*

**கே: கேள்வி ஞானத்தாலே ஏற்படற ஞானம் திடமாயிருக்காது.... அனுபவஞானம்தான் திடம்ன்னு சொல்றாங்களே! அது எப்படி?**

ப: பரோக்ஷ ஞானம் (கேள்வி ஞானம்) திடமாயிராது. அபரோக்ஷ ஞானம் (அனுபவ ஞானம்)தான் திடம் அப்படின்னு சொல்றா.

சிரவணத்திலே முதல்லே உண்மை நல்லா புரியும். அப்புறம் தியானத்திலே அது ஸ்பஷ்டமா விளங்கும். கடைசியிலே இடைவிடாத நிதித்தியாசனத்தாலே, ஞானம் திடமாயிடறதுன்னு சொல்றா.

இன்னும் ஒரு சிலர்.... இந்த சிரவண மனன நிதித்தியாசனமெல்லாம் திடமாயிருக்காது... எப்போ ஒருத்தனுக்கு உள்ளங்கை நெல்லிக்கனி மாதிரி விளங்கறதோ...... அப்போதான் திடம்ன்னு சொல்றா.

வேறு சிலர்.... உண்மையைப் பத்திக் கேட்டாலே போதும்.

ஏன்னா... பக்குவமானவனுக்கு அவ்வளவு சொன்னாலே போதும், அமைதிப்பட்டுடுவான்.

பக்குவமில்லாதவன் முன்னாடி சொன்ன எல்லா படிநிலையிலேயும் முன்னேறி ஸ்வபாவத்துக்குத் திரும்பறான்.

*இவான் வென்ட்ஸ் கேட்டார்.*

**கே: ஒருத்தருக்கு ஒண்ணுக்கு மேற்பட்ட குரு இருக்கலாமா?**

ப: குருங்கறது யாரு?

குருங்கறது ஆத்மாதான்.

ஒவ்வொருத்தருடைய பக்குவத்துக்கு ஏத்த மாதிரி ஆத்மாவே வெளியே குருவா வர்றது.

தத்தாத்திரேயருக்கு இருபத்திநாலு குருவாம்.

யார்கிட்டேயிருந்து கத்துக்கொண்டாலும் அவாளே குருதான்.

குரு சில சமயங்கள்லே ஜடப்பொருளாக் கூட இருக்கலாம்.

கடவுள், குரு, ஆத்மா எல்லாம் ஒண்ணுதான்.

ஆரம்ப சாதகன் முதல்லே கடவுளையே எல்லாம் அறிந்தவர்ன்னு... குருவா எடுத்துக்கறான்.

அப்புறம் ஒரு பக்குவத்திலே... கடவுள் அவனை ஒருத்தரிடம் கூட்டி வைக்கறது.

அவர்தான் குரு.

அந்த குருதான் சர்வம்ன்னு அவன் உணர்றான்.

கடைசியிலே குரு அருளாலே.... அதே சாதகன் 'இருக்கறது' ஒண்ணுதான் உண்மை... அதைத்தவிர வேறு எதுவும் இல்லைன்னு உணர்றான்.

அப்போ தன்னுடைய அந்தராத்மாவேதான் குருன்னு உணர்றான்.

(22) *திருமதி பிக்கட் கேட்டார்.*

**கே: சிந்தனை ஓயும்போது... திடீர்ன்னு நான்-நான்ன்னு ஒரு உணர்வு ஏற்படுது. 'நான்'கறது இருக்கற உணர்வுன்னு தெரியுது. புத்திபூர்வமா இல்லாம அனுபவமாவே தெரியுது. அது சரியா?**

ப: அதுதான் சரி.

சிந்தனை அற்றபோதுதான் 'நான்-நான்'ங்கறது ஸ்புரண மாகும்.

அங்கே புத்தி கிடையாது.

அனுபவம்தான் அது.

**கே: அது தலையில இல்லை. மார்போட வலப்பக்கத்துல இருக்கற மாதிரி தெரியுது.**

ப: அப்படித்தான் இருக்கணும்.

ஏன்னா.... ஹ்ருதயம் அங்கேதான் இருக்கு.

**கே: என்னுடைய கவனம் வெளியே போச்சுன்னா அது மறைஞ்சுடுது. என்ன செய்யறது?**

ப: கவனத்தை வெளியே விடாமே பிடிச்சுக்கோங்கோ.

**கே: அந்த கவனத்தோட எல்லா வேலையும் செய்ய முடியுமா? அந்த காரியங்கள் சரியா இருக்குமா?**

ப: அந்தக் கவனத்தோடதான் எல்லா வேலையும் செய்யணும்.

அந்தக் கவனத்தோட இருக்கறவன்.... நாம செஞ்சது சரியா... தப்பான்னுல்லாம் கவலைப்படமாட்டான்.

அப்படிப்பட்டவனுடைய காரியமெல்லாம் இறைவனே செய்யறதுதான்.

சரியாத்தான் இருக்கும்.

**கே: அப்படிப்பட்ட ஒருத்தனுக்கு உணவு கட்டுப்பாடு அவசியமா?**

ப: அவனுக்குத் தேவையில்லே. ஆனா உங்களுக்குத் தேவை.

உங்களோட இந்த அனுபவம் இங்கே இருக்கற சாந்நித்ய பலத்தாலே ஏற்படறது.

நீங்க ஊருக்குப் போன பிறகு இப்படி இருக்குமா...?

இது தற்காலிக அனுபவந்தான்.

இது நிரந்தரமாகற வரைக்கும்..... பயிற்சி அவசியம்.

உணவுக்கட்டுப்பாடு, இந்த அனுபவம் அடிக்கடி ஏற்பட ஹேதுவாயிருக்கும் (உதவி).

இது நல்லா விளங்கி உண்மை திடமாயிடுத்துன்னா...... எல்லாக் கட்டுப்பாடும்... தானா கழண்டுடும்.

ஆனாலும்...நாம சாப்பிடற உணவுதான் நம்மளோட மனசு. அதனாலே....அது எப்பவும் சாத்வீகமாயிருக்கறது நல்லது.

(25-28) ***பி.வி. நரசிம்ம சுவாமி கேட்டார்.***

**கே: நான் யார்? அதை எப்படி கண்டுபிடிக்கறது?**

ப: முதல்லே இந்தக் கேள்வியை உங்களுக்குள்ளேயே நல்லாக் கேளுங்கோ.

உடம்பும்...... அதனோட செயல்களும் 'நான்'கறதா இல்லே.

இன்னும் ஆழ்ந்து பாத்தா...

மனசும்.... மனசோட செயல்களும் 'நான்'கறதா இல்லே.

அடுத்த கேள்விக்குப் போவோம்.

இந்த நினைப்பெல்லாம் எங்கிருந்து வர்றது?

சிலது அதுவா வர்றது. சிலது மேலோட்டமா இருக்கு. சிலது ஆராய்ச்சியா இருக்கு.

இதெல்லாம் புத்திக்குத்தான் புலப்படறது.

நினைப்பு வர்றதும், அதோட செயல்பாடுகளும், அதோட செய்திகளும், யாரோ ஒருத்தனுக்குத்தான் ஏற்படறது.

ஒரு தனித்தன்மைதான் (Individual) ... இந்த நினைப்புகளுக்கெல்லாம் காரணகர்த்தாவா இருக்கு.

இந்த நினைப்புகளாலே அவதிப்படறதும்... அந்தத் தனித் தன்மைதான்.

இதைத்தான் 'அகந்தை'.... போலி நான்....ன்னு எல்லாரும் சொல்றா.

விஞ்ஞானமய கோசத்திலேதான் இந்த 'நான்' இருக்கு. ஆனா இந்த விஞ்ஞானம் 'நான்' கிடையாது.

இதை மேலும் விசாரிச்சா... இந்தத் தனித்தன்மை 'நான்' எங்கிருந்து வந்தது?

நான் யார்? யார் இந்த தனித்தன்மை?

தூக்கத்திலே இந்த தனித்தன்மையைக் காணோம்... உணர முடியலே!

இந்தத் தனித்தன்மை கிளம்பின உடனேயே......தூக்கம்.... விழிப்பாவோ, கனவாவோ மாறிடறது.

கனவைப்பத்தி இப்போ கவலையில்லை.

இந்த விழிப்பிலே நான் யார்?

நான் தூக்கத்திலே இருந்துதான் வந்தேன்னு சொன்னா... நான் ஒரு அறியாமைங்கற இருட்டுக்குள்ளேயிருந்து வந்தேன்னு சொல்லணும்.

இப்படி இருட்டாயிருக்கறதையா.... நம்மளோட மூலமா சாஸ்திரங்களும், பெரியவாளும், பூரணப்பொருள்ன்னு சொல்றா?

இருக்க முடியாது.

அப்போ 'நான்'கறது தூக்கமும் கடந்த பொருளாயிருக்கணும்.

அதாவது 'நான்'கறது தூக்கத்திலேயும்...... கனவிலேயும்.... அதுக்கு ஆதாரமா இருக்கணும்.

அது எப்பவும் இருக்கணும்.

இங்கேயே... இப்போவே... இருக்கணும்.

ஆக 'நான்'கறதுதான் எல்லாத்துக்கும் ஆதாரம்.

அதாவது இந்த மூணு நிலைக்கும் ஆதாரம்.

சுருக்கமா 'நான்'கறது பஞ்ச கோசங்களுக்கு அப்பாலே இருக்கறது.

எல்லாத்தையும் அனாத்மான்னு தள்ளினது போக மிஞ்சறது ஆத்மா.

**கே: ஆத்மாவை உணர்றது எப்படி?**

ப: முதல்லே இப்போ இருக்கற பார்வை மாறணும்.

தனித்தன்மையோடு கூடிய ஜீவன்... தனக்கு அன்னியமா ஒரு உலகத்தை அறியறான்.

அதாவது... காண்பான் காட்சின்னு இரண்டா இருக்கு.

இந்தக் காண்பானுக்கும்... காட்சிக்கும்... ஏதோ ஒரு சம்பந்தம் இருக்கு.

இதுதான் அகந்தையா எழுந்து சம்பந்தத்தை உண்டு பண்றது.

இந்த அகந்தை உண்மையிலேயே சித்து (அறிவு) தான்.

சித் இல்லாதது ஜடம்.

இந்த காண்பான் காட்சி இரண்டுலே....... காண்பான் பக்கம்தான் சித் இருக்கு.

இந்தக்காண்பான் யாருன்னு தேடினா... காட்சி மறைஞ்சிடும்.

காண்பான் சூட்சுமமும் அதிசூட்சுமமுமா ஆகிக்கொண்டே போய் உண்மையான காண்பான் மாத்திரமா மிஞ்சும்.

இதுக்குப் பெயர் 'திருஷ்ய விலயம்' அதாவது காட்சி இல்லாமே போறது.

**கே: ஆத்மாவை உணர்வதற்கு எதுக்கு காட்சி (உலகம்) இல்லாம போகணும்? உலகக்காட்சி இருக்கும்போதே ஆத்மாவை உணரமுடியாதா?**

ப: முடியாது.

உலகக் காட்சியை இல்லாமே பண்றதுன்னா.... தனித்தனியா உலகம்ன்னும் நாமன்னும் இரண்டு இல்லாமே.... உலகத்தைப் பிரிக்க முடியாத ஒரே வஸ்துவா உணர்றது.

பாக்கற உலகத்துக்கு.... வாஸ்தவத்திலேயே இருப்பு இருக்கு....ங்கற தப்பான பார்வை நீங்கறதுதான்... வாஸ்தவமான இருப்பைத் தெரிஞ்சுக்கறது.

ஒரு கயிறைப் பாம்பு இல்லேன்னு பாத்தாப்போதும்.

கயிறைத் தேடத் தேவையில்லே.

பாம்பு போயிடுத்துன்னா... கயிறுதான் மிஞ்சும்.

இந்தத் தப்பான பார்வை போகாம உண்மை புலராது.

**கே: இந்த உலகக்காட்சி எப்போது நீங்கும்? எப்படி நீங்கும்?**

**ப:** நாம உண்மை... இந்த உலகம் உண்மை...ன்னு கற்பிக்கற மனம் அறவே நாசமாகும்போது உலகக்காட்சி நீங்கிடும்.

இந்தத் தவறான எண்ணந்தான் எல்லா துக்கத்துக்கும் காரணமாயிருக்கு.

**கே: இந்த மனங்கறது என்ன?**

ப: இதையெல்லாம் உண்டுபண்ணி அனுபவிச்சுக்கொண்டு இருக்கற ஒரு அதிசய சக்தி.

**கே: இந்த மனதுக்கும், உலகத்துக்கும் என்ன சம்பந்தம்?**

ப: உலகம் விழிப்பு நிலையிலேயும், கனவிலேயும் மட்டுந்தான் உணரப்படறது.

அதாவது......நினைப்பு இருக்கறப்போ மட்டுந்தான் உணரப் படறது.

நினைப்பு இல்லேன்னா... ஜாக்ரம், சொப்னம் இரண்டும் இல்லே.

தூக்கத்திலே நினைப்பு இல்லே, உலகமும் இல்லே.

ஆகையாலே மனம் வெளிப்படும்போது... அதாவது தூக்கத்திலே இருந்து விழிக்கறப்போ....உலகம் தோணறது.

மறுபடியும்... தூங்கும்போது... மனம், உலகத்தை உள்ளே இழுத்துக்கறது.

சிலந்தி, எப்படி தன் வாயிலே இருந்தே நூலை வெளிவிட்டு... வலைபின்னி... மறுபடியும் உள்ளேயே இழுத்துக்கறதோ... அப்படித்தான் மனம் உலகத்தை வெளியேவிட்டு இழுத்துக்கறது.

அந்தச் சிலந்தி மாதிரிதான் ஆத்மா.

ஒவ்வொருத்தரிடமும் இருக்கற சிலந்திதான் ஆத்மா.

அதே சிலந்தியை உலகத்துக்காகச் சொல்லும்போது...... ப்ரம்மம்ன்னு சொல்றா...

"இங்கே எவன் இருக்கானோ அவனேதான் சூரியனிலும் இருக்கான்."

(உலகம் சூரியனில் இருந்து வந்ததா உபநிஷத்திலே இருக்கு)

மனம், வெளிப்படாமலும்... சும்மாயிருக்கும்போது... காண்பான் காட்சியில்லே.

மனம்ன்னா என்ன?

அது எங்கேயிருந்து வந்ததுன்னு விசாரிச்சா....'மனங்கறது ஆத்மாவேதான்'னு முடியும்.

மனத்தைதான் சூட்சும சரீரம், சிச்ச கிரந்தி, ஜீவன், அகந்தை, சம்சாரம் இப்படிப் பல பெயர்களாலே சொல்றா.

இந்த மனம் எப்போதும் தனியாக இருக்காது.

சித்தையும், ஜடத்தையும் சேத்து பிடிச்சுக்கொண்டுதான் நிக்கும்.

அதனாலே மனங்கறதும்... உலகங்கறதும்...... தனித்தனி இல்லே. இரண்டும் ஒண்ணுதான்.

**கே: மனத்தின் சொரூபத்தை எப்படி தெரிஞ்சிக்கறது?**

**ப:** எண்ணங்களை வரிசைப்படுத்தினா... 'நான்'கற எண்ணந் தான் முக்யமான முதல் எண்ணமாயிருக்கு.

ஒரு தனித்தன்மைதான் மற்ற எல்லா எண்ணங்களுக்கும் வேர் அடிமரமாயிருக்கு.

ஏன்னா... எல்லா நினைப்புகளும் யாரோ ஒருத்தருக்குத் தானே வர்றது!

அந்த யாரோ ஒருத்தன் இல்லேன்னா.... எந்த நினைப்பும் வராது. 'நான்'கற அகந்தைதான் இந்த வேலையைப் பாக்கறது.

தன்மைக்குதான் முன்னிலை படர்க்கை. தன்மை வந்த பிறகுதான் முன்னிலை படர்க்கை வர்றது. இந்த மூணும் ஏககாலத்திலே தோன்றி ஏககாலத்திலே மறையறது.

இந்த 'நான்' எங்கேயிருந்து வர்றதுன்னு பாக்கணும்.

'நான்'கற எண்ணம் உடம்பளவாத்தான் இருக்கு.

இப்போ அது உடம்பிலே ஏதோ ஒரு இடத்தோட சம்பந்தப்பட்டு இருக்கா?

அதாவது.... பேச்சு மூளையிலே இருந்து வர்றது.... அந்த மாதிரி இந்த 'நான்' ஏதாவது மூளை, ரத்தம், நரம்பு இப்படி ஏதாவது ஒண்ணுலே இருந்து வர்றதா?

உடலியக்கங்களுக்குக் காரணமான ஜீவசக்தியைத்தான் உயிர்ன்னு சொல்றோம்.

ஆகையாலே 'நான்'கறது அதாவது 'மனம்'கறது ஜீவ சக்தியோட வெளிப்பாடு.

இது ஹிருதயத்திலே இருந்து வெளிவர்றது.

**கே: மனோநாசம் அடையறதுக்கு என்ன செய்யணும்?**

ப: மனத்தோட சுபாவமே சலிப்பதுதான்.

மனத்தை சஞ்சலமில்லாமே வைச்சுக்கணும்.

அதுக்கு அமைதியைத் தரணும்; சிதறாம பாத்துக்கணும்.

'நான் யார்'ங்கற விசாரமான உண்முக ஸ்திதியைப் பழக்கணும்.

வெளியிலே உலகம்ன்னு உண்மையிலேயே ஒண்ணும் கிடையாதுன்னு அதுக்கு சொல்லி... மன அமைதிக்கு தடையாய் இருக்கறத நீக்கணும்.

**கே: மனத்தோட சஞ்சல சுபாவத்தை எப்படிப் போக்குவது?**

ப: தனக்கு அன்னியமாய் விஷயங்களைப் பாக்கறதுதான் மனத்தோட சஞ்சல சுபாவத்துக்கு முக்கிய காரணம்.

இதுக்கு முதற்படி

அநாத்ம விஷயங்கள்லே வைராக்கியம் ஏற்படறது.

அடுத்ததா

உண்முகமான விசாரம்

கடைசியா

தாரணை ஏற்படும்.

இதைத்தான் 'சமாதமாதி சமாதி ஷட்க சம்பத்தி'ன்னு சொல்றா.

**கே: இதை எப்படி பயிற்சில கொண்டு வர்றது?**

ப: நான் யார்?

இந்த உலகம் என்ன? இரண்டுக்கும் இருக்கற சம்பந்தம் என்ன?

இதுக்கெல்லாம் காரணம் என்ன?

எனக்கு ஏதாவது சுதந்திரம் இருக்கா? இல்லே இந்த உலகத்துக்கு ஏதாவது சுதந்திரம் இருக்கா?

இப்படியான ஆராய்ச்சி, வைராக்கியத்தைக் கூட்டிவைக்கும்.

விசாரம்தான் முதலும், முக்கியமான படிங்கறதனாலே... விசாரம் பண்ணணும்.

விசாரம் சகஜமாயிடுத்துன்னா... உறவு, பொருள், புகழ் இதுமேலே இருக்கற பற்று நீங்கும்.

நீங்கவே.... 'நான்'கறது ஸ்பஷ்டமா துலங்க ஆரம்பிக்கும்.

சொரூப அனுபவமாகும். இதுதான் முடிவு.

சாதகன் விசாரத்துக்கு பக்குவியா இல்லேன்னா... பக்தி பண்ணணும். ஏதோ ஒரு குருகிட்டேயோ, தெய்வத்துக்கிட்டேயோ நம்மளை முழுசா ஒப்படைக்கணும். குருவோ, தெய்வமோ ஆட்கொண்டா...பற்றுகள் எல்லாம் பலமிழக்கும்.

வைராக்கியம் விருத்தியாகும்.

குருகிட்டேயோ, தெய்வத்துக்கிட்டேயோ இருக்கற பிரியம் கூடிக்கொண்டே வரும்.

கடைசியா அவனை முழுசா ஆட்கொண்டுடும்.

விசாரத்துக்கோ, பக்திக்கோ ஒருத்தன் பக்குவமா இல்லேன்னா மூச்சைப் பிடிச்சு மனசை உக்கார வைக்கலாம், அது யோக மார்க்கம்.

விசாரத்துக்கோ, பக்திக்கோ, வயது காரணமா யோகமார்க்கத்துக்கோ ஒருத்தன் பொருந்தலேன்னா... கர்ம மார்க்கத்தை அனுசரிக்கலாம். அனுசரிச்சுக்கொண்டே வந்தா இப்போ சொன்ன ஏதாவது ஒண்ணுக்கு காலக்கிரமத்திலே பக்குவமடைவான்.

**கே: 'மனதை ஹிருதயத்தில் தங்க வைத்தல்' அப்படின்னா என்ன? அதை எப்படிப் பண்றது?**

ப: தேவையில்லாத சிந்தனைக்கு இடங்கொடுக்காம இருக்கறதுதான்...மனத்தை ஹிருதயத்திலே தங்க வைக்கறது.

வேறு சிந்தனை கிளம்பினா... அதோட சேரக்கூடாது.

சேராம இருக்கறதுக்கு உபாயம்தான்... நான் யார்?.

இந்த நினைப்பு யாருக்கு வர்றதுன்னு பாக்கணும்.

இப்படிப் பாத்தா... சிந்தனையை விட்டுவிடுவோம். சேரமாட்டோம்.

ஆனா.... இது குரு அருளாலேதான் சாத்தியமாகும்.

**கே: இப்படி எவ்வளவு காலம் தங்க வைக்கணும்?**

ப: அவரவர் பயிற்சியையும், ஸம்ஸ்காரத்தையும் பொறுத்தது.

**கே: முடிவில் என்ன ஆகும்?**

ப: மனம் ததாகாரமாயிடும்.

எல்லாம் ஒண்ணாத் தெரியும்.

எல்லாம் ஒண்ணுங்கறது போய்..: பேதம் வந்தா... மனம் கிளம்பிடுத்துன்னு அர்த்தம்.

அமைதியா இருக்கற மனம்.... ஹிருதயத்திலே தங்கிய மனம்தான்.

**கே: இது புத்திபூர்வமான பயிற்சியா? இல்ல உணர்வு பூர்வமானதா?**

ப: இரண்டாவது.

**கே: நீங்க சொல்ற மாதிரி மனம் உண்மையிலேயே ஹிருதயத்தில தங்கிடுமா?**

ப: விசாரத்திலே இருக்கற சிரத்தையாலும்... குரு அருளாலும்... குரு சொல்லிலே ஏற்படற நம்பிக்கையாலும்... கண்டிப்பா தங்கும்.

**கே: மனம் ஹிருதயத்தில தங்கறதால என்ன பிரயோஜனம்?**

ப: சித்த ஏகாக்கிரம்......பற்றின்மை.... ஸமத்துவம்.

**கே: மனம் ஏகாக்கிரம் ஆகறதுக்கும், சஞ்சல சுபாவத்தை போக்குவதற்கும் என்ன வழி?**

ப: வயிறை நிதானமா வச்சுக்கணும்.

அதாவது மலச்சிக்கல், அஜீரணம் இல்லாம பாத்துக்கணும்.

உணவு சாத்வீகமா மிதமா இருக்கணும்.

அதிக காரம், புளிப்பு, உப்பு, போதை வஸ்துகள், மது விலக்கணும்.

மனசை ஒரே விஷயத்திலே, குருவோ... தெய்வமோ... தியானமோ... அதிலேயே ஈடுபடுத்தி அதிலேயே நிலைக்கச் செய்யணும்.

விசாரம் சகஜமாயிடுத்துன்னா... உறவு, பொருள், புகழ் இதுமேலே இருக்கற பற்று நீங்கும்.

நீங்கவே.... 'நான்'கறது ஸ்பஷ்டமா துலங்க ஆரம்பிக்கும்.

சொரூப அனுபவமாகும். இதுதான் முடிவு.

சாதகன் விசாரத்துக்கு பக்குவியா இல்லேன்னா... பக்தி பண்ணணும். ஏதோ ஒரு குருகிட்டேயோ, தெய்வத்துக்கிட்டேயோ நம்மள முழுசா ஒப்படைக்கணும். குருவோ, தெய்வமோ ஆட்கொண்டா...பற்றுகள் எல்லாம் பலமிழக்கும்.

வைராக்கியம் விருத்தியாகும்.

குருகிட்டேயோ, தெய்வத்துக்கிட்டேயோ இருக்கற பிரியம் கூடிக்கொண்டே வரும்.

கடைசியா அவனை முழுசா ஆட்கொண்டுடும்.

விசாரத்துக்கோ, பக்திக்கோ ஒருத்தன் பக்குவமா இல்லேன்னா மூச்சைப் பிடிச்சு மனசை உக்கார வைக்கலாம், அது யோக மார்க்கம்.

விசாரத்துக்கோ, பக்திக்கோ, வயது காரணமா யோகமார்க்கத்துக்கோ ஒருத்தன் பொருந்தலேன்னா... கர்ம மார்க்கத்தை அனுசரிக்கலாம். அனுசரிச்சுக்கொண்டே வந்தா இப்போ சொன்ன ஏதாவது ஒண்ணுக்கு காலக்கிரமத்திலே பக்குவமடைவான்.

**கே: 'மனதை ஹிருதயத்தில் தங்க வைத்தல்' அப்படின்னா என்ன? அதை எப்படிப் பண்றது?**

ப: தேவையில்லாத சிந்தனைக்கு இடங்கொடுக்காம இருக்கறதுதான்...மனத்தை ஹிருதயத்திலே தங்க வைக்கறது.

வேறு சிந்தனை கிளம்பினா... அதோட சேரக்கூடாது.

சேராம இருக்கறதுக்கு உபாயம்தான்... நான் யார்?.

இந்த நினைப்பு யாருக்கு வர்றதுன்னு பாக்கணும்.

இப்படிப் பாத்தா... சிந்தனையை விட்டுவிடுவோம். சேரமாட்டோம்.

ஆனா.... இது குரு அருளாலேதான் சாத்தியமாகும்.

**கே: இப்படி எவ்வளவு காலம் தங்க வைக்கணும்?**

ப: அவரவர் பயிற்சியையும், ஸம்ஸ்காரத்தையும் பொறுத்தது.

**கே: முடிவில் என்ன ஆகும்?**

ப: மனம் ததாகாரமாயிடும்.

எல்லாம் ஒண்ணாத் தெரியும்.

எல்லாம் ஒண்ணுங்கறது போய்..: பேதம் வந்தா... மனம் கிளம்பிடுத்துன்னு அர்த்தம்.

அமைதியா இருக்கற மனம்.... ஹிருதயத்திலே தங்கிய மனம்தான்.

**கே: இது புத்திபூர்வமான பயிற்சியா? இல்ல உணர்வு பூர்வமானதா?**

ப: இரண்டாவது.

**கே: நீங்க சொல்ற மாதிரி மனம் உண்மையிலேயே ஹிருதயத்தில தங்கிடுமா?**

ப: விசாரத்திலே இருக்கற சிரத்தையாலும்... குரு அருளாலும்... குரு சொல்லிலே ஏற்படற நம்பிக்கையாலும்... கண்டிப்பா தங்கும்.

**கே: மனம் ஹிருதயத்தில தங்கறதால என்ன பிரயோஜனம்?**

ப: சித்த ஏகாக்கிரம்......பற்றின்மை.... ஸமத்துவம்.

**கே: மனம் ஏகாக்கிரம் ஆகறதுக்கும், சஞ்சல சுபாவத்தை போக்குவதற்கும் என்ன வழி?**

ப: வயிறை நிதானமா வச்சுக்கணும்.

அதாவது மலச்சிக்கல், அஜீரணம் இல்லாம பாத்துக்கணும்.

உணவு சாத்வீகமா மிதமா இருக்கணும்.

அதிக காரம், புளிப்பு, உப்பு, போதை வஸ்துகள், மது விலக்கணும்.

மனசை ஒரே விஷயத்திலே, குருவோ... தெய்வமோ... தியானமோ... அதிலேயே ஈடுபடுத்தி அதிலேயே நிலைக்கச் செய்யணும்.

அதிலே ஏற்படற ஈடுபாடு மற்ற விஷயங்கள்லே கவனம் சிதறாம வச்சுக்கும்.

இதுக்கு பெயர்தான் வைராக்கியம்; ஏகாக்கிரம்.

தன்னிலையிலே நிக்கற மனசுக்குதான் சூட்சுமஸ்திதி பிடிபடும்.

அப்புறம் ததாகாரமாயிடும்.

**கே: மனசு ஒரு விஷயத்தையே எவ்வளவு சொன்னாலும் திரும்ப, திரும்ப நினைக்குதே! இது பூர்வ வாசனைகளாலதானா? அதை எப்படி ஒழிக்கறது?**

ப: ஆமா. பூர்வ வாசனைகளாலேதான்.

நிறையப் பேர் அதை ஒழிச்சு நினைப்பற்ற நிலையை அடைஞ்சிருக்கா.

அதை உறுதியா நம்பு!

அவாளாலே முடியும்ன்னு நம்பினதாலேதான்... வாசனாட்சயம் அடைஞ்சிருக்கா.

நினைவுகளை முற்றிலும் ஒழிக்க முடியும்.

நினைப்புகள் இல்லாத இடத்திலே நின்னு பழகணும்.

இந்த இடம்தான் வாசனைகளுக்கு எல்லாம் மூலம்.

**கே: எவ்வளவு காலம் அப்பியாசிக்கணும்?**

ப: வெற்றி, வெற்றியடைறவனையே தேடிப்போகும்.

ஒவ்வொரு நினைப்பா வர வர வெட்டிக் கொண்டேயிருந்தா, கடைசிலே எல்லாம் போயிடும்.

கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்றுகிற மாதிரிதான்.

உள்ளே இருந்து ஒவ்வொரு எதிரியா வர வர வெட்டிக்கொண்டே இருந்தா, கோட்டை கைவசப்படும்.

**கே: இந்த அப்பியாசத்தோட முடிவு என்ன?**

ப: உள்ளதை உள்ளபடி உணர்தல்.

**கே: 'உள்ளது'ன்னா என்ன?**

ப: எது ஆரம்பமும் முடிவும் இல்லாம எப்பவும் இருக்கோ,

எது எங்கும் வரையற்று இருக்கோ,

எது எல்லா நாமரூபங்களாகவும் இருக்கோ,

எது காண்பான், காட்சி, காணப்படுபொருள் எல்லாத்துக்கும் அதீதமாகவும், ஆதாரமாகவும் இருக்கோ,

எல்லாம் மாறினாலும், எது மாறாம இருக்கோ,

அதுதான் 'உள்ளது'.

**கே: 'நான்' கறது பொய்... மாயைன்னா.... யார் இந்த மாயையை ஏற்படுத்தினது? யார் இதை விலக்கப் போறது?**

ப: 'நான்'கறதே மாயையை ஏற்படுத்திக்கொண்டு அப்புறம் அதே விலக்கிக்கறது.

மாயையாலே மறைபட்டபோது எப்படியிருந்ததோ... அப்படியேதான் மாயை நீங்கின பிறகும் இருக்கும்.

இதுதான் ஞானத்தோட புதிர்.

உண்மையை உணர்ந்தவாளுக்கு இது புதிராயிருக்காது.

பக்தியிலே 'நான்'கறது ஈஸ்வரனை அணுகி, என்னை உங்கள்லே கரைச்சிடுங்கோன்னு வேண்டிக்கறது.

சரணாகதி பண்றது.

அப்புறம் என்ன மிஞ்சினது...?

பழைய 'நான்'கறது போய்... இறைவனையேதான் சரணாகதி மிஞ்ச வைக்கறது.

சரணாகதி பண்றதுக்கு முன்னாடியும்.... அதே இறைவன்தான் அங்கேயிருந்தான்.

சரணாகதி பண்ணினபிறகும்.... அவனேதான் அங்கேயிருக்கான்.

இதுதான் ப்ரபத்தி.

சரணாகதி வைராக்கியத்தோட உச்சம்.

'எனது'ங்கறத விடறத விட 'நான்'கறதை இறைவன்கிட்டே சரணாகதி பண்றது... ஒரே வீச்சுலே எல்லாத்தையும் விடற மாதிரி.

இதனாலே... துக்கம் முளையிலேயே கிள்ளி எறியப்படறது.

ஆனா அதுக்கு வைராக்கியம் ரொம்ப வேணும்.

ஜலத்துலே முழுகினவன் வெளியே வர்றதுக்கு எப்படி துடிப்பா இருப்பானோ அவ்வளவு வீர்யம் வேணும்.

**கே: நான் என்னை உணர்றதுக்கும், இறைவனை அடையற துக்கும் இவ்வளவு சிரமப்படணுமா? குருவருள் இவ்வளவு சிரமத்தையும் குறைச்சு எளிமையாக்காதா? குருவருளால உள்ளதை உள்ளபடி உணர்றதுக்கான சக்தி ஏற்படாதா?**

ப: இறைவனை அடையறதுக்கு குருவருள்தான் ரொம்ப முக்யம்.

ஆனாலும்... உங்க பக்கமும் முயற்சிங்கறது வேணும்.

தன்னை உணர்றதுக்கான முயற்சியே... அருளாலேதான் ஏற்படறது.

**கே: என்னுடைய மதிக்கும், இறைவனோட நியதிக்கும் என்ன சம்பந்தம்?**

**என்னுடைய மதி, இறைவனோட நியதிப்படிதான் செயல்படுதா?**

**என்னுடைய அறிவு, இறைவனோட அறிவினாலதான் செயல்படுதா?**

**இயற்கை விதி, இறைவனோட அறிவுலதான் செயல்படுதா?**

ப: நிச்சயமா... ஆமா.

ஒரு தனியிருப்புக்குத்தான்... மதின்னு ஒண்ணு இருக்கற மாதிரி தெரியறது.

அதே மதிதான் முடிஞ்சு போன காரியங்களை இறைவனோட நியதின்னோ... விதின்னோ... பாக்கறது.

இறைவனோட நியதி நடக்கறதுக்கான காரணமாகவும் தன்னைப் பாக்கறது.

இறை நியதிதான் தன்னோட மதி வழியா செயல்படறதுன்னு புரிஞ்சு... தான் ஒரு தோற்ற மாத்ரம்தான்னு உரு இழக்கறது.

இயற்கை நியதி... இறைநியதி பிரகாரம்தான்.

**கே: அறிவியல், மனக்கூறுசாஸ்திரம், உடற்கூறு சாஸ்திரம், தத்துவங்கள் இதெல்லாம் படிக்கறது மோட்சமடைய உதவுமா?**

ப: ரொம்பக் கொஞ்சமா... மோட்சம்னா என்ன... ஏது...ன்னு கொஞ்ச அறிவு புத்தகங்கள்லே இருந்து கிடைக்கும்.

நாம அதை அனுபவத்திலே கொண்டுவர்றதுதான் முக்கியம்.

அதுதான் அவசியமான பிரயோஜனம்.

அதுக்குத் தனிப்பட்ட ஒருத்தரோட முன் உதாரணம்... அவரோட சொந்த அனுபவத்திலே இருந்து சொல்ற ரஹஸ்யார்த்தம்....அவரோட இருக்கற நெருக்கத்திலே.... புரியாதது... பிடிபடும்.

இதுதான் உண்மையிலேயே உதவும்.

எவ்வளவுதான் கஷ்டப்பட்டு ஏகப்பட்டதைப் படிச்சாலும்... உண்மை இன்னதுதான்னு புத்திபூர்வமா சமாதானமானாலும்.... அனுபவமான உண்மை.... பயிற்சியாலேயும்... தன்னை உணர்ந்தவரோடு ஏற்படற கூட்டுறவாலேயும்தான் ஸ்பஷ்டமாகும்.

வெறும் புத்தகத்தைப் படிக்கறது பிரயோஜனப்படாது.

அனுபவத்துக்குப் பக்கத்திலே கூட வராது.

தலையிலே இருக்கற சுமையை இறக்கறமாதிரி, தன்னை உணர்ந்தா, தலையிலே இருக்கற எல்லா அறிவையும், தேவையில்லே... சுமைதான்னு தூக்கிப் போட்டுடுவோம்.

'நான்'கறதத் தூக்கிப் போட்டுட்டா... எல்லாம் சரியா இருக்கும்.

**கே: கனவுக்கும் நனவுக்கும் என்ன வித்தியாசம்?**

ப: கனவிலே வேற உடம்புலே இருப்போம்.

கனவு முடிஞ்சதும் இந்த உடம்புக்கு வந்துடுவோம்.

**கே: சுகம்னா என்ன? சுகம் ஆத்மாவில் இருக்கா... இல்லை விஷயங்கள்ல இருக்கா? இல்லை ஆத்மா-விஷய சேர்க்கையால ஏற்படுதா? ஆனா என் வாழ்க்கையில ஒரு சுகமுமில்லை. எப்போதான் நான் சுகப்படுவேன்?**

ப: இச்சித்த பொருளை அடையறபோதும், வெறுத்த பொருளுக்குக் கேடு உண்டாகறபோதும், இதை நினைச்சுப் பாக்கறபோதும், நாம சுகப்படறதா சொல்லிக்கறோம்.

அந்தச் சுகம் தற்காலிகம். அதை இன்பம்ன்னுதான் சொல்லணும். ஆனா... எல்லோரும் இதை விட சுகத்தையே விரும்பறோம். அது விஷயங்கள்லே இல்லே.

அது ஆத்மாவிலேதான் இருக்கு. அது அமைதியா... இன்பமும்... துன்பமும் இல்லாத ஒரு நிலை. அதுதான் சுகம்.

சுகம்தான் நம்மளோட ஸ்வபாவம்.

ஆத்மா வேற, சுகம் வேற, அமைதி வேற இல்லை.

**கே: எதனால சுகம்தான் நம்ம ஸ்வபாவம்ன்னு சொல்றீங்க?**

ப: ஏன்னா... ப்ரம்மம் பரிபூரண சுகமயம்.

ஆத்மா பரிபூரண அமைதிமயம்.

இந்த முடிவுக்கு... தத்துவார்த்தமாவோ... பக்தி பரமாவோ... கூட வரலாம். இறைவன்கிட்டே சுகமா இருக்கணும்னுதான் வேண்டிக்கறோம்.

சுகத்தை அளிப்பவர் சுக சொரூபமாத்தானே இருக்கணும்?

ஆகையினாலே ஈஸ்வரன்தான் அளவில்லா ஆனந்தம்.

ப்ரம்மம் நிர்குண ஆனந்தம்.

ஜீவன், ஈஸ்வரன், ப்ரம்மம் எல்லாம் ஸ்வபாவத்திலே ஒண்ணுதான்.

**கே: ஏன் இந்த சம்சாரம் (உலகம்) தீமையும் துக்க மயமுமாயிருக்குது?**

ப: ஈஸ்வர சித்தம்.

**கே: ஏன் ஈஸ்வர சித்தம் அப்படி இருக்கு?**

ப: புரிஞ்சுக்க முடியாது.

பரமேஸ்வர சக்திக்கு எந்த நோக்கமும் கற்பிக்க முடியாது.

எந்தக் கர்மமும் ஈஸ்வரனை ஒட்டாது.

ஆனா... அவன் சந்நிதி மாத்திரத்தாலேயேதான் எல்லாம் நடக்கும்.

ஏகம்தான் நானாவாகறது.

உலகக்கருமங்கள் சூரியனை ஒட்டாதமாதிரி, ஈஸ்வரனை எதுக்கும் பொறுப்பாக்க முடியாது.

எல்லாம் ஈஸ்வர நியதிங்கறதுதான்... அகந்தையாலே ஏற்படற துன்பங்களுக்கு எல்லாம் தீர்வு.

குறையுணர்ச்சியாலே... அதாவது... ஆஹா! இதைப் போய் செஞ்சுட்டோமே! அடடா! இதைச் செய்யாம விட்டுட்டோமேங்கற நினைப்பு ஏற்படுத்தற துன்பத்தை... நம்மள எல்லாம் ஒரு பரமேஸ்வர சக்திதான் நடத்தறதுன்னும்... அதுக்கு அடங்கி... இன்பமோ, துன்பமோ அது இஷ்டம்ன்னு.... நம்மள ஈசனோட கருவியா நினைச்சுக்கணும்.

ஈசன் பேரில் எவ்வளவு பாரத்தைப் போட்டாலும்... அவர் வஹித்துப்பார்.

நமக்கு ஒரு பாரமும் இல்லை.

(29) *கடலூர் சப்ஜட்ஜ் கேட்டார்.*

**கே: ஆத்மா-அனாத்ம விவேசனம் (புத்தியால் பிரித்துப் பார்ப்பது) மட்டுமே ஆத்ம சாட்சாத்காரத்துக்கு கொண்டு போய் விட்டுடுமா?**

ப: ஆத்மா... நமக்குள்ளேயே.... நம்மளாவே இருக்கறதாலே... எவ்வளவு விவேசனம் பண்ணாலும் ஒரு படி வேணா உள்ளே கொண்டு போகும்.

வைராக்கியத்தை உண்டுபண்ணி... தோற்றத்தை மித்யைன்னு ஒதுக்க வைக்கும்.

பரஉண்மையில் நிஷ்டனாயிருக்கறது மாத்ரந்தான்... உள்ளதை உள்ளவாறு உணர வைக்கும்.

எல்லாப் பெரியவாளும் இதைத்தான் சொல்றா.

**கே: ஈசப்பிரசாதமான அருள்தான், ஒருத்தனை தன்னிலையில் சேக்குதா? இல்லை... ஜீவனோட உண்மையான சிரத்தையும், இடைவிடா முயற்சியும்தான் தன்னிலையில் கூட்டி வைக்குதா?**

ப: ஈசனருள்தான் தன்னிலை சேர்க்கும்.

ஆனா ஈசனருள் எந்த ஒரு சாதகன் சிரத்தையும்... இடைவிடா முயற்சியும் உடையவனா இருக்கானோ அவனுக்கே வாய்க்கும்.

**கே: ஜீவன் ஹிருதயத்தில் வசிப்பதா சொல்லப்படுதே. அது எப்படி?**

ப: ஆமாம்.... ஜீவனுடைய யதாஸ்தானம் ஹிருதயந்தான்.

தூங்கும்போது ஹிருதயத்திலேயும்... விழிப்பின்போது சகஸ்ரத்திலேயும் இருக்கறதா சாஸ்திரங்கள்லே சொல்லப்படறது.

'நான்'கறது ஹிருதயத்திலே இருக்கா... சஹஸ்ராரத்திலே இருக்காங்கறது முக்கியம் இல்லை.

'நான்'கறதுதான் முக்கியம்.

நம்ம... நமக்குள்ளேதான் இருக்கோம்.

இதிலே எந்த சந்தேகமும் இல்லை.

'ஹிருதயம்'கற சொல்லே வேதத்திலே 'நான் உதிக்கும் ஸ்தானம்'ங்கற அர்த்தத்திலேதான் உபயோகப்படுத்தப்படறது.

ஒரு மாம்ஸ பிண்டத்திலே இருந்தா 'நான்'கறது உதிக்கறது?

நம்மகிட்டே இருந்தேதான் 'நான்'கறது உதிக்கறது.

உண்மையிலேயே...... ஆத்மாவுக்கு எந்த ஸ்தானமும் கிடையாது.

எல்லாம் ஆத்மாதான்.

நம்மளத்தவிர வேறு ஒண்ணும் இல்லை.

அதனாலே ஹிருதயம்ன்னா... உடம்பு பூராவுந்தான்... இந்த உலகம் பூராவுந்தான்.

ஆரம்ப சாதகனுக்கு காட்டறதுக்காக உடம்பிலே ஒரு ஸ்தானத்தைச் சொல்ல வேண்டியிருக்கு.

உண்மையிலேயே... 'நான்'கறது எல்லா இடமும்தான்.

'நான்'கறத தவிர வேறு ஒண்ணும் இல்லே.

**கே: இறைவன் அருள்ன்னா என்ன? 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' அதன் பொருள் என்ன?**

ப: நான்கறதுதான் ஈஸ்வரன்.

இந்தத் திருஷ்டி ஏற்படறதுதான்... 'அவன் தாள் வணங்கறது'.
இந்தத் திருஷ்டி ஈஸ்வர அருளாலேதான் ஏற்படும்...
அதுதான் 'அவனருளாலே அவன்தாள் வணங்குதல்'.
ஈஸ்வர திருஷ்டிதான் ஈஸ்வர அருள்.

**கே: குருவருள்... இறையருளோட பலனா?**

ப: ஏன் இரண்டையும் பிரிக்கறேள்?
குருதான்... இறைவன்.
குரு... இறைவனைத் தவிர வேறு இல்லை.

**கே: ஆத்ம பிரஞ்ஞையோட நல்ல தர்மார்த்தமான வாழ்க்கை வாழணும்னு நினைக்கறப்பத்தான் எல்லா பிரச்சனையும் வருது. என்ன செய்யறது?**

ப: எல்லாம் முடிவிலே சரியா வரும்.

சற்றும் தவிரா பிரயத்தனத்தாலே.... தடைகளுக்கு பயப்படாம... முன் செல்லணும்.

படிப்படியா தடைகள் எல்லாம் குறைஞ்சு ஆத்ம பிரஞ்ஞை நல்லாத் துலங்கும்.

எல்லாம் முடிவிலே சரியாகும்... விடா முயற்சிதான் அவசியம்.

(30) N. *நடேசய்யர், பிரபல வக்கீல் கேட்டார்.*

**கே: ஈஸ்வரன், விஷ்ணு, கைலாசம், வைகுண்டம் இதெல்லாம் உண்மையா?**

ப: நீங்க இந்த உடம்பிலே இருக்கறது எந்த அளவுக்கு உண்மையோ... அந்த அளவுக்கு.

**கே: என்னுடைய உடம்பு விவகார ஸத்யம். அது மாதிரி அவங்களும் விவகார சத்யமா? இல்ல முயற்கொம்பு மாதிரி மித்தையா?**

ப: அவாள்லாம் இருக்கா.

**கே: இருக்கான்னா எங்கே இருக்கா?**

ப: பாத்தவா எங்கேயோ இருக்கறதா சொல்றா. அதை நம்பித்தான் ஆகணும்.

**கே: உண்மையிலேயே அவா எங்கே இருக்கா?**

ப: உங்களிடம்தான்.

**கே: அப்போ என்னோட கற்பனை தானா?**

ப: எல்லாம் அப்படித்தான்.

**கே: என் கற்பனையைத் தாண்டி சிலது நியதியாவே இருக்கே! அந்த மாதிரியா ஈஸ்வரன், விஷ்ணு எல்லாம்?**

ப: ஆமாம்.

**கே: பிரளயத்திலே அழிஞ்சுடுவாளா?**

ப: ஏன் மனுஷாளே தன்னை உணர்ந்தா, பிரளயத்தைத் தாண்டி முக்தனாகும்போது, சர்வசக்தியும், சர்வவல்லமையும் கொண்ட ஈஸ்வரன் தாண்ட மாட்டானோ?

**கே: இதே மாதிரிதான் பேய், பிசாசு, தேவதை எல்லாம் இருக்கா?**

ப: ஆமாம்.

**கே: பிரம்மத்தை உணர்வது எப்படி?**

ப: அது எப்படி இருக்கோ அப்படியே உணரணும்.

**கே: சுயம் பிரகாசமா சுயஞ்சோதியா பாவிக்கலாமா?**

ப: ஆத்மா இருள், பிரகாசம் எல்லாத்தையும் தாண்டினது.

ஒரு தனித்தன்மையுடைய ஜீவன்தான் இதை இரண்டையும் பாக்கறான்.

ஜீவனை விளக்கற ஒளிதான் ஆத்மா.

**கே: நான் உடம்பு இல்லே; கர்த்தா இல்லே; நான் போக்தா இல்லே; அப்படின்னு பாவிக்கலாமா?**

ப: எதுக்கு பாவனை?

நான் மனுஷன்னு பாவிக்கறேளா?

அப்படி நினைக்கலேன்னா.... நாம மனுஷாளா இல்லாம போயிடுவோமா?

**கே: எனக்கும் உண்மைக்கும் எந்த பேதமும் இல்லேன்னு பாவிக்கலாமா?**

ப: எதுக்கு அதுகூட....

**கே: நானே ஸத்யம். இது சரியா?**

ப: இந்த எல்லா நினைப்பும் ஞானத்துக்குப் பொருந்தாது.

நான்கற நினைப்பு இல்லாம இருக்கறதுதான்... சரியான ஸ்திதி.

நினைப்பு வேறே; ஞானம் வேறே.

**கே: ஐக்கியமான முக்தியிலே உடம்பு மறையணுமே!**

ப: அதையேன் நினைக்கறேள்! நீங்க உடம்பா?

**கே: இல்லே. ஆனாலும் உடம்பு மறைஞ்சிடும்ன்னு சொல்றாளே!**

ப: எதுக்காக மறையணும்? ஏன்?

**கே: மறைஞ்சாத்தான் ஞானம் அடைஞ்சிருக்கான்னு அர்த்தம்!**

ப: அப்படின்னா... இதைப் பேசி, எழுதி, வாழ்ந்து பிறர் கண்ணுக்கு முன்னாலேயே உடம்பை விட்டவா எல்லாம் அஞ்ஞானிகளா?

**கே: வசிஷ்டர், வால்மீகி எல்லாம் மறையற சக்தி படைச்சவாளா இருந்துருக்காளே?**

ப: ஞானத்தோட சேர்த்து சித்திகளையும் அடையறது அவாளோட பிராப்தமா இருக்கும்.

ஏன் முக்ய பிரயோஜனமான ஞானத்தை விட்டுட்டு இரண்டாவது கட்ட, தடையாயிருக்கற பிரயோஜனத்தை ஆசைப்படறே?

உடம்பை.... பிறர் பாக்க விட்றதிலே ஞானிக்கு ஏதாவது வருத்தம் இருக்கா?

**கே: இல்லை.**

ப: ஜாலவித்தைக்காரன் அவனை மறைச்சுக்கறான். அதுக்காக அவன் ஞானியா?

**கே: இல்லை.**

ப: மறையறதும், தெரியறதும் பாக்கறவனுக்குதான்.
பாக்கறது யார்?
அதைக் கண்டுபிடிங்கோ!
மத்ததெல்லாம் அனாவசியம்.

**கே: வேதங்கள்லே சிருஷ்டி கிரமத்தைப் பத்தி சொல்லும்போது ஒவ்வொண்ணும் முரண்படறதே! இதை எப்படி சரியா பாக்கறது? அப்போ வேதம் பொய்யா?**

ப: ஒவ்வொரு ரிஷியும் ஒவ்வொரு விதமா பாத்துருக்கா! அதனாலேதான் அப்படி! அதையேன் யோசிக்கணும்?
வேதப்பொருள் ஆத்மஞானந்தான்.
நாம அதுன்னு காட்டறதுதான்.

**கே: அதிலே எனக்கு ஒண்ணும் பிரச்சனையில்லே.**

ப: அப்போ மத்ததை எல்லாம் அர்த்தவாதம்ன்னு விட்டுடுங்கோ.
வெவ்வேறு பக்குவர்களுக்காக சொன்னது.

**கே: நான் ஒரு பாவி. நித்திய கர்மாக்களை செய்யாதவன். எனக்கு அதுக்காக மோசமான மறுபிறப்பு வருமா? என்னைக் காப்பாத்த முடியுமா?**

ப: உங்களை ஏன் பாவின்னு நினைச்சுக்கறேள்!
இறைவன் மேலே இருக்கற நம்பிக்கை போதும்!
ஜன்ம ஜன்மமா காப்பாத்தும்.
பாரம் இறைவன் மேலே!

திருவாசகத்திலே சொல்றார்.

**"நாயிற் கடையாம் நாயேனை**
**நயந்து நீயே ஆட்கொண்டாய்**
**மாயப் பிறவி உன்வசமே**
**வைத்திட் டிருக்கும் அதுவன்றி**
**ஆயக் கடவேன் நானோதான்**
**என்னதோ இங்கு அதிகாரம்**
**காயத் திடுவாய் உன்னுடைய**
**கழல்கீழ் வைப்பாய் கண்ணுதலே."**

அதனாலே... இறைவன் மேலே இருக்கற நம்பிக்கையே போதும்.

அது காப்பாத்தும்.

**கே: எனக்கு நம்பிக்கை இருக்கு. ஆனா சோர்வும், மயக்கமும் அடிக்கடி வந்து தியானம் பண்ண முடியலே!**

ப: சரியா தியானம் பண்ணா பலம் ஏற்படும்.

**கே: எனக்கு அலுவலகத்திலே வேலை நிறைய இருக்கு; ஆனா தியானத்திலே முழுமை அடையணும்னு விரும்புறேன். சூழ்நிலை முரண்பாடா இருக்கு. என்ன செய்யறது?**

ப: ஒரு முரணும் இல்லே.

பயிற்சியோட முதிர்ச்சியாலே... இரண்டையும் சரிவர செய்ய முடியும்.

வேலையை ஒரு ஸ்வப்னம் மாதிரி பாக்க ஆரம்பிச்சுடுவேள்.



(31) ***பகவானைத் தரிசனம் பண்ண வந்தவர் கேட்டார்.***

**கே: மோட்சமடைய என்ன செய்யணும்?**

ப: மோட்சம்னா என்னன்னு தெரிஞ்சுக்கணும்.

**கே: உபாசனை பண்ணணுமா?**

ப: உபாசனை சித்த நிரோதத்துக்காகத்தான்.

உடம்பை.... பிறர் பாக்க விடறதிலே ஞானிக்கு ஏதாவது வருத்தம் இருக்கா?

**கே: இல்லை.**

ப: ஜாலவித்தைக்காரன் அவனை மறைச்சுக்கறான். அதுக்காக அவன் ஞானியா?

**கே: இல்லை.**

ப: மறையறதும், தெரியறதும் பாக்கறவனுக்குதான்.
பாக்கறது யார்?
அதைக் கண்டுபிடிங்கோ!
மத்ததெல்லாம் அனாவசியம்.

**கே: வேதங்கள்லே சிருஷ்டி கிரமத்தைப் பத்தி சொல்லும்போது ஒவ்வொண்ணும் முரண்படறதே! இதை எப்படி சரியா பாக்கறது? அப்போ வேதம் பொய்யா?**

ப: ஒவ்வொரு ரிஷியும் ஒவ்வொரு விதமா பாத்துருக்கா! அதனாலேதான் அப்படி! அதையேன் யோசிக்கணும்?
வேதப்பொருள் ஆத்மஞானந்தான்.
நாம அதுன்னு காட்டறதுதான்.

**கே: அதிலே எனக்கு ஒண்ணும் பிரச்சனையில்லே.**

ப: அப்போ மத்ததை எல்லாம் அர்த்தவாதம்ன்னு விட்டுடுங்கோ.
வெவ்வேறு பக்குவர்களுக்காக சொன்னது.

**கே: நான் ஒரு பாவி. நித்திய கர்மாக்களை செய்யாதவன். எனக்கு அதுக்காக மோசமான மறுபிறப்பு வருமா? என்னைக் காப்பாத்த முடியுமா?**

ப: உங்களை ஏன் பாவின்னு நினைச்சுக்கறேள்!
இறைவன் மேலே இருக்கற நம்பிக்கை போதும்!
ஜன்ம ஜன்மமா காப்பாத்தும்.
பாரம் இறைவன் மேலே!

திருவாசகத்திலே சொல்றார்.

**"நாயிற் கடையாம் நாயேனை**
**நயந்து நீயே ஆட்கொண்டாய்**
**மாயப் பிறவி உன்வசமே**
**வைத்திட் டிருக்கும் அதுவன்றி**
**ஆயக் கடவேன் நானோதான்**
**என்னதோ இங்கு அதிகாரம்**
**காயத் திடுவாய் உன்னுடைய**
**கழல்கீழ் வைப்பாய் கண்ணுதலே."**

அதனாலே... இறைவன் மேலே இருக்கற நம்பிக்கையே போதும்.

அது காப்பாத்தும்.

**கே: எனக்கு நம்பிக்கை இருக்கு. ஆனா சோர்வும், மயக்கமும் அடிக்கடி வந்து தியானம் பண்ண முடியலே!**

ப: சரியா தியானம் பண்ணா பலம் ஏற்படும்.

**கே: எனக்கு அலுவலகத்திலே வேலை நிறைய இருக்கு; ஆனா தியானத்திலே முழுமை அடையணும்னு விரும்புறேன். சூழ்நிலை முரண்பாடா இருக்கு. என்ன செய்யறது?**

ப: ஒரு முரணும் இல்லே.

பயிற்சியோட முதிர்ச்சியாலே... இரண்டையும் சரிவர செய்ய முடியும்.

வேலையை ஒரு ஸ்வப்னம் மாதிரி பாக்க ஆரம்பிச்சுடுவேள்.



(31) ***பகவானைத் தரிசனம் பண்ண வந்தவர் கேட்டார்.***

**கே: மோட்சமடைய என்ன செய்யணும்?**

ப: மோட்சம்னா என்னன்னு தெரிஞ்சுக்கணும்.

**கே: உபாசனை பண்ணணுமா?**

ப: உபாசனை சித்த நிரோதத்துக்காகத்தான்.

அதனாலே ஏகாக்கிரம் கூடும்.

**கே: விக்ரகம் வைச்சு உபாசனை பண்ணலாமா? அதனால ஒண்ணும் தப்பில்லையே?**

ப: உங்களை உடம்பாக் கருதற வரைக்கும் தப்பில்லே.

**கே: ஜனனமரண சுழல்ல இருந்து எப்படி விடுபடறது?**

ப: ஜனனம்ன்னா என்ன, மரணம்ன்னா என்னன்னு தெரிஞ்சு கொண்டா விடுபடலாம்.

**கே: மனைவி குடும்பத்தை விட்டுடவா?**

ப: அவா என்ன பாவம் பண்ணினா!
நீங்க யார்ன்னு தெரிஞ்சுக்கோங்கோ!

**கே: சம்சாரத்தில இருந்து விடுபட வேணாமா? மனைவி, வீடு, செல்வம் எல்லாத்தையும் துறக்க வேணாமா?**

ப: முதல்லே சம்சாரம்ன்னா என்னன்னு தெரிஞ்சுக்கோங்கோ!
இதெல்லாம்தான் சம்சாரமா!
இதெல்லாமே இருக்கற யாரும் உண்மையை உணரலியா?

**கே: அதுக்கான சாதனை என்ன?**

ப: அந்த அந்த சாதகனையும், பக்குவத்தையும் பொறுத்தது.

**கே: நான் விக்கிரகத்தை வைச்சு கும்பிடுறேன்.**

ப: அதையே செய்யலாம், ஏகாக்கிரம் கூடும்.
ஏகாக்கிரம் கைவந்தா எல்லாம் கைவந்த மாதிரி.
எல்லோரும் மோட்சம்ன்னா... எங்கேயோ இருக்குன்னு நினைக்கறா. அதை அடையணும்ன்னு சொல்றா....தப்பு.
மோட்சம்கறது தன்னையே... தான் உணர்றதுதான்.
உண்முகப்பட்டா தெரியும்.
மனசுதான் சம்சாரம்.

**கே: என் மனசு நிலையில்லாம இருக்கு. நான் என்ன செய்யணும்?**

ப: ஏதாவது ஒரு நாமத்திலேயோ, ரூபத்திலேயோ மனசை ஒருநிலைப்படுத்தணும்... பதிக்கணும்... அதை அப்படியே பிடிச்சுக்கொண்டா போதும்.

எல்லாம் சரியாயிடும்.

**கே: ஒருநிலைப்படுத்த முடியலை.**

ப: பழகிக்கொண்டே வாங்கோ; சரியா வரும்.

மூச்சு விடறமாதிரி சுலபமாயிடும்.

அதுதான் உங்களோட முயற்சிக்குக் கிடைக்கற வெற்றிக் கிரீடம்.

**கே: பிரம்மச்சரியமும் சாத்வீக உணவும் உறுதுணையா இருக்குமா?**

ப: ஆமாம். எல்லாம் நல்லதுதான்.

**கே: தியானம் பண்ண வேண்டாமா?**

ப: ஏகாக்கிரம் ஏற்படறதுக்குதான் தியானம்.

**கே: ஏகாக்கிரத்துக்கு என்ன செய்யணும்?**

ப: துதி, ஜபம், தியானம், பிராணாயாமம் உதவும்.

**கே: இறைவனைப் பாக்க முடியுமா?**

ப: முடியும்.

அதையும் இதையும் பாக்கறோம். இறைவனைப் பாக்க முடியாதா என்ன...? இறைவன்னா எதுன்னு தெரிஞ்சாபோதும்.

எல்லோரும் இறைவனைத்தான் பாத்துக்கொண்டே இருக்கா. ஆனா அவாளுக்கு அது புரியறது இல்லே.

கடவுள்னா என்னன்னு தெரிஞ்சுக்கோங்கோ.

எல்லோரும் பாத்தும்... பாக்கலே ஏன்னா... கடவுளைத் தெரிஞ்சுக்கலே.

**கே: விக்ரக உபாசனை பண்ணும்போது நாம ஜபம் பண்ணலாமா?**

ப: மானசிக ஜபம் ரொம்ப உசந்தது.

தியானம் கூடும்.

மனம் ஜபத்திலே ததாகாரமாயிடும்.

அப்போதான் உபாசனையோட [illegible] [illegible]ங்கள் புரியும்.

அதாவது உபாசிக்கப்படும் வஸ்திலே உபாசகன் ததாகாரமாயிடுவான்.

**கே: பரமாத்மா நம்மள்ல இருந்து வேறா?**

ப: பொதுவா எல்லோரும் அப்படித்தான் நினைக்கறா.
பரமாத்மாவை நம்மள்லே இருந்து வேறா நினைக்கக்கூடாது.
அப்போதான் ஐக்கியம் ஏற்படும்.

**கே: அத்வைதம்கறது கடவுளோட ஒண்ணா ஆகறதுதானே!**

ப: எங்கே ஆகறது! ஆகணும்னு நினைக்கறவன்தான்... ஆரம்பத்திலே இருந்தே உண்மை.

இது கடைசியிலே புரியும்.

நாம யார்ங்கறத மறந்துடறோம். தூக்கத்திலே... கனவிலே மாதிரி.

**கே: நான் உபாசனை பண்றேன். அது போக குருவோட உதவி அவசியமா?**

ப: உபாசனையை நீங்களாவா பண்ண ஆரம்பிச்சேள்?

புராணங்கள்லே, சாஸ்திரங்கள்லே இருந்து கடவுளைப் பத்தி யாராவது சொல்ல வேண்டியிருக்கு.

கடவுளே சொன்னா... கடவுள்தான் குரு.

இல்லேன்னா... சொன்னவன்தான் குரு.

குரு யாராயிருந்தா என்ன... நாமளும் குருவும் கடவுளும் எல்லாம் ஒண்ணுதான்.

கடவுளும், குருவும் வேற வேறயில்லே.

இதெல்லாம் கடைசியிலே புரியும்.

மனுஷ குருவுக்கும், கடவுளே குருவாயிருக்கறதுக்கும் ஒண்ணும் வித்தியாசமில்லே.

**கே: பூர்வ புண்ணியம் நிறையயிருந்தா எப்படியும் நம்மள இறைவன்கிட்டே கொண்டு போய் சேத்துடும்ன்னு நினைக்கறேன்.**

ப: உங்களோட பிராப்தம் அப்படியாயிருந்தா அப்படித்தான்.

**கே: ஞான குரு வழி காட்ட மாட்டாரா?**

ப: காட்டுவார்.

இப்போ உங்களுக்குக் கிடைச்சிருக்கற வெளிச்சத்தைப் பிடிச்சுக்கொண்டே போனா... குருகிட்டே கொண்டு போய் சேக்கும்.

ஏன்னா... குரு உங்களை எதிர்பாத்துகிட்டே இருக்கார்.

**கே: ஞான மார்க்கத்துக்கும், பரபத்திக்கும் (சம்பூர்ண சரணாகதி) வேறுபாடு இருக்கா?**

ப: இரண்டும் ஒண்ணுதான்.

சம்பூர்ண சரணாகதி... விசாரம் எதிலே கொண்டு போய் சேக்குமோ... அங்கேயேதான் சேக்கும்.

சம்பூர்ண சரணாகதின்னா... 'நான்'கற நினைப்பு இனி இல்லே.

அப்புறம்... ஸம்ஸ்காரங்கள் எல்லாம் ஒண்ணா தொலைஞ்சுடும்.

விடுபடுவோம்.

நாம எந்த வழியா போனாலும்... கடைசியிலே தனியிருப்பா இருக்க மாட்டோம்.

**கே: நம்ம செயல்களோட பலனால சொர்க்கத்துக்குப் போக மாட்டோமா?**

ப: நீ எவ்வளவுக்கு உண்மையோ அவ்வளவுக்கு அதுவும் உண்மை.

நாம யார்?

ஆத்மான்னா என்ன?

அப்படின்னு விசாரிச்சா.... சொர்க்கத்தைப் பத்தி எல்லாம் விசாரிக்கத் தேவையில்லே.

**கே: மறுபிறப்பில இருந்து விடுபடவேண்டாமா?**

ப: ஆமா... விடுபடணும்.

முதல்லே... பிறந்தது யாருன்னு பாருங்கோ! பிறப்போட துயரம் யாருக்குன்னு பாருங்கோ!

தூங்கும்போது மறுபிறப்பைப் பத்தி யோசிச்சேளா? இல்லே... இந்தப் பிறப்பை பத்தியாவது யோசிச்சேளா?

அதனாலே... இந்தப் பிரச்னை எங்கே இருந்து கிளம்பறதுன்னு பாருங்கோ! அங்கேதான் தீர்வும் இருக்கு.

உண்மையிலேயே பிறப்புன்னு ஒண்ணு கிடையவே கிடையாதுன்னு தெரிஞ்சுப்பேள்! ஒரு துக்கமும் இருக்காது. எல்லாம் அதுதான். எல்லாம் ஆனந்தந்தான்.

மறுபிறப்பில் இருந்து தப்பிச்சுடுவோம்.

ஏன் அதைப் பத்தி கவலைப்படறேள்?



(32) ***பகவானைத் தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.***

**கே: சைதன்யர், இராமகிருஷ்ணர் இவங்க எல்லாம் இறைவனிடம் அழுது இறைவனை அடைஞ்சுருக்காங்களே! அதை பின்பற்றலாமா?**

ப: செய்யலாம்.

ஒரு பெரிய சக்திக்கு வசப்பட்டுத்தான் இந்த அனுபவமெல்லாம் வந்தது.

அந்த சக்தியிலே நம்பிக்கை வச்சா... அதே கொண்டு போய் நம்மள சேர வேண்டிய இடம் சேக்கும்.

அழறது... பலஹீனம்ன்னு பொதுவா நினைக்கறோம்.

அந்த மகான்கள் எல்லாம் பலஹீனமானவாளா? ஒரு மஹா சக்திக்கு ஆட்பட்டதோட அடையாளம் அது. பின்னாடி அவாள்லாம் என்னவா ஆனாள்ன்னுதான் பாக்கணும்.

**கே: உடம்பை மறைய வைக்க முடியுமா?**

ப: ஏன் நாம உடம்பு இல்லேன்னு தெரிஞ்சா போதாதா?

**கே: வசிஷ்டர், விஸ்வாமித்திரர் மாதிரி அந்தர்கதமாக முடியுமா?**

ப: இதெல்லாம் ஸ்தூல விஷயம்.

அதுதான் முக்யமா?

நாம ஆத்மாவாச்சே! இதைப் பத்தியா கவலைப்படறது!

சாரத்தை எடுத்துக்கொண்டு சக்கையைத் தூக்கிப் போட்டுடணும்!

உடம்பு மறைஞ்சாத்தான் முக்தின்னு சொல்றவா... தவறாப் புரிஞ்சுகொண்டிருக்கா. உண்மையிலேயே அப்படித் தேவையில்லே.

நாம உடம்பு இல்லே.

அது மறைஞ்சா என்ன... மறையாட்டா என்ன... இதிலேயெல்லாம் ஒரு சிறப்பும் இல்லே.

இதிலே என்ன ஏற்றத்தாழ்வு?

ஞானமடையறதுதான் விஷயம்.

'நான்'கறது இல்லாம போறதுதான் முக்யம். உடம்பு இல்லாம போறது இல்லே.

நம்மள உடம்போட சம்பந்தப் படுத்திக்கறதுதான் உண்மையிலேயே பந்தம்.

இந்த அஞ்ஞானத்தைத் தொலைச்சு நாம யாருங்கற ஞானம் ஏற்படறதுதான் ஆத்ம ஞானம்.

அதுதான் முக்யம்.

ஒரு தங்க ஆபரணத்தை சுத்தமான தங்கமான்னு சோதிக்கறதுக்கு... எப்படி உருக்கினா என்ன?

கொஞ்சமா உருக்கினா என்ன?

மொத்தமா உருக்கினா என்ன?

உருக்கினதுக்கு அப்புறம்... அது முன்னாடி என்ன ஆபரணமா இருந்தது... இதெல்லாமா முக்யம்!

அது தங்கம்தானா? அதுதான் முக்யம்!

செத்தவா யாரும், உடம்பைப் பாக்கப் போறதில்லே.

உயிரோடு இருக்கறவன்தான், ஞானிபோனா உடம்பு மறைஞ்சுத்தா... இல்லையான்னு யோசிக்கறான்.

உண்மையை உணர்ந்தவனுக்கு உண்மையிலேயே சாவு கிடையாது.

உடம்பு இருந்தாலும், உடம்பு இல்லேன்னாலும் அவனுக்கு ஒரு வித்தியாசமும் கிடையாது.

பிறருக்கு ஞானியின் உடம்பு இருக்கறதனாலேயோ... மறையறதனாலேயோ... எந்த பிரயோஜனமும் இல்லே.

நாம வந்த வேலையை நாம பாக்கணும்.

முதல்லே ஞானத்தை அடைவோம்.

அப்புறம் எப்படி உடம்பை விடலாம்ன்னு ஆலோசிப்போம்.

'உடம்புதான் நான்'கற அஞ்ஞானந்தான் இந்த யோசனைக்கெல்லாம் காரணம்.

நீ இந்த உடம்பா?

தூங்கும்போது இந்த உடம்பு எங்கே?

இந்த யோசனையெல்லாம் எங்கே?

இப்போ விழிச்சுக் கொண்டவுடனே எது கிளம்பறதனாலே இந்த யோசனையெல்லாம் வந்து தொல்லை பண்றது?

அதுதான் அகந்தை! திருட்டுப் படவா! விரட்டிட்டா சுகமாயிருக்கலாம்.



(33) **பகவானைத் தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: 'பிரம்மம் ஸத்யம்', 'ஜகத் மித்யை'ன்னு சொல்றதுதான் சங்கரரோட முக்ய ஸ்லோகம். மத்தவங்க உலகம் உண்மைன்னு சொல்றாங்களே? எது உண்மை?**

ப: இரண்டும் சரிதான்.

வெவ்வேறு பக்குவத்திலே இருக்கறவாளுக்காக, வெவ்வேறு கோணத்திலே இருந்து சொல்றதனாலே அப்படி இருக்கு.

ஒரு ஆத்மசாதகன், ஸத்யங்கறது (உண்மை)... எப்பவும் மாறாம ஒரே மாதிரியா இருக்கணுங்கற வரையறையோடதான் அப்பியாசத்தை ஆரம்பிக்கறான்.

அப்புறம் உலகத்தை உண்மையில்லேன்னு ஒதுக்கறான்.

ஏன்னா... அது மாறிக்கொண்டே இருக்கு.

இப்படி 'நேதி' 'நேதி' ('இது இல்லை' 'இது இல்லை')ன்னு தள்ளிக்கொண்டே வர்றப்போ, அதுக்கு மேலே தள்ள முடியாம, உண்மைதான் ஏகமா மிஞ்சறது.

இப்போ... எதையெல்லாம் முன்னாடி பொய்ன்னு தள்ளினானோ, அதெல்லாம் மிஞ்சுன ஏகமாத்தான் இருக்கு.

ஏகந்தான் அனேகமாயிருக்கு.

இப்போ என்ன சொல்றான்... இந்த ஏகமான உண்மைலே இருந்து பாக்கும்போது... இந்த உலகமும் உண்மைதாங்கறான்.

வாஸ்தவத்திலே அந்த ஏகம் மாத்ரம்தான் இருக்கு.

இருப்பு மாத்ரம்தான் உண்மை.

இருப்பைத் தவிர வேறு எதுவும் இல்லை.

ஸத்யம்கற வார்த்தையை சிலர் வேறு வேறு விதமா உபயோகிக்கறா. சத்யத்தின் வெளிப்பாடு மூணுதரத்திலே இருக்குன்னு சொல்றா.

அதாவது விவகார ஸத்யம், பிராதிபாசிக ஸத்யம், பரமார்த்த ஸத்யம்ன்னு மூணு ஸத்யம்.

விவகார ஸத்யம்:-

அதாவது ஒரு நாற்காலி இருக்குன்னா... அதை நானும் பாக்கறேன்... பிறரும் அதைப் பாக்கறா.

இந்த உலகத்தை நானும் பாக்கறேன்... பிறரும் பாக்கறா.

உலகத்தை விவகார ஸத்யம்ன்னு சொல்றா.

பிராதிபாசிக ஸத்யம்:-

கயிறு பாம்பாத் தெரியறது. அப்படி நினைக்கற எனக்கு மட்டும்தான் தெரியும். மத்தவாளுக்கு இல்லை.

ஒரு குறிப்பிட்ட காலத்திலே, குறிப்பிட்ட சூழ்நிலைகள்லே ஏற்படறது. கனவிலே வர்ற உலகத்தை பிராதிபாசிகம்னு சொல்றா.

ஏன்னா... மத்தவா பாக்கல்யாம்.

அவனுக்கு மட்டும்தான் தெரிஞ்சுதாம்.

பரமார்த்த ஸத்யம்:-

எங்கும், எப்போதும், மாறாமல் ஒரே ரூபமா எது இருக்கோ அது.

உலகத்தை சிலர் விவகார ஸத்யம்ன்னு சொல்றா.

வேறு சிலர் அதை ஒத்துக்கறது இல்லே.

அதுவும் மனசு போடற படம்தான்... அதனாலே அதுவும் பிராதிபாசிகம்னு சொல்றா.

(35) ***உத்தியோகஸ்தர் ஒருவர் கேட்டார்.***

**கே: துவைதம்னா என்ன? அத்துவிதம்னா என்ன?**

ப: தேகாத்மபுத்திதான் துவைதம்... நான் இந்த உடம்புதான்கறது.

உடம்போட நம்மள சேக்கலேன்னா அத்துவிதம்.

(38) ***புதிதாக ஆசிரமத்தில் சேவை செய்ய வந்த சுவாமி கேட்டார்.***

**கே: மோட்சத்துக்கான வழி என்ன?**

ப: இதோ கேக்கறேல்லையா... அதுதான்.

மோட்சத்துக்கான வழிக்கு வந்துட்டே!

(39) ***இரா. சேஷகிரிராவ் கேட்டார்.***

**கே: கர்மயோகம்னா என்ன?**

ப: செய்யறவன் 'நான்'கற எண்ணம் போறது.

'செய்யறது நான்தான்'கற எண்ணம் இல்லாமே வேலை செய்யறது.

இதுக்குப் பேர்தான் கர்மயோகம்.

ஞானி ஒருத்தன்தான் உண்மையிலேயே கர்மயோகி.

**கே: நான்கற எண்ணம் இல்லைன்னா எப்படி வேலை நடக்கும்?**

ப: முதல்லே 'நான்' போகட்டும்.

அப்புறம் வேலை நடக்கறதா இல்லையான்னு பாக்கலாம்.

**கே: சங்கரர் துறவைத்தான் வலியுறுத்துறார். 'கர்மங்களை துறந்துடு'ன்னுதான சொல்றார்?**

ப: ஆமாம்.

துறவைத்தான் உபதேசிக்கறார்.

ஆனா அவர் நிறைய பாஷ்யங்கள், சாஸ்திரங்கள், ஸ்துதின்னு நிறைய வேலை பாத்திருக்காரே!

நிறைய வாதங்கள் செஞ்சு சன்மதத்தை ஸ்தாபிச்சார்ன்னே சொல்றா!

வேலையைச் செய்வோமா? விட்டுடுவோமா?ன்னு தேவையில்லாமே சிரமப்படுத்திக்காதேள்!

நீங்க யாருன்னு தெரிஞ்சுக்கோங்கோ!

அப்புறம் இந்த வேலையெல்லாம் யாரோடதுன்னு தெரியும்!

யாரு செய்யறதுன்னும் தெரியும்.

வேலை தானே நடக்கும்.

செய்யறவன் நான்தான்னு நினைச்சா... அதுக்கான கர்மபலனை அனுபவிச்சே தீரணும்.

செய்யறவன் நான்கற நினைப்பு போயிடுத்துன்னா... நம்மளோட வேலைன்னு ஒரு வேலையும் இல்லை.

அவன்தான் உண்மையான துறவி; சன்யாசி.

கர்மத்தைத் துறந்தவன் சன்யாசி இல்லே. கர்த்துருத்துவத்தை துறந்தவன்தான் உண்மையிலே சன்யாசி.

**கே: அகந்தை எப்படிக் கிளம்பறது?**

ப: உண்மை இங்கேயே இப்போவே இருக்குங்கறேன்...

அதைப் பாக்கறத விட்டுட்டு தேவையில்லாததை எல்லாம் யோசிக்கறே!

அகந்தை எப்படிக் கிளம்பறது?

இப்படித்தான். தேவையில்லாத 'கேள்வியைக் 'கேட்டுக் கொண்டு!

**கே: உலகம் உண்மையிலேயே இருக்கா? எனக்கு உலகம் உண்மைன்னுதான் தோணுது.**

ப: ஆமா! உலகம் உங்களிடம் வந்து சொல்லித்து. 'நான் இருக்கேன்... நான் உண்மை...'ன்னு.

உலகம் நமக்குள்ளே இருக்கா... நமக்கு வெளியே இருக்கா? நம்மள விட்டு தனியா இருக்கா?

(40) ***உத்யோகஸ்தர் மீண்டும் கேட்டார்.***

**கே: இது நம்ம கர்மந்தானா இல்லையான்னு எப்படி தெரிஞ்சுக்கறது?**

ப: அது நம்மளப் பாதிக்கும். அதிலேயே தெரிஞ்சுக்கலாம். பாதிக்கலேன்னா அவன் கர்மம் இல்லை.

**கே: உண்மையைப் புத்திபூர்வமா தெரிஞ்சுக்கறது போதுமா?**

ப: புத்திபூர்வமா தெரிஞ்சுக்காமே எப்படி அப்பியாசம் பண்ணுவேள்!

முதல்லே புத்திபூர்வமா தெரிஞ்சுக்கோங்கோ!

அதை அப்பியாசிங்கோ!

அனுபவத்துக்குக் கொண்டு வாங்கோ!



***பகவான் யாரும் கேள்வி எதுவும் கேட்காமல் பொதுவா பேசினது.***

ப: நாம பொதுவா இல்லாம, ஒரு சித்தாந்தத்துக்குன்னு நின்னா... மத்தவா சித்தாந்தத்தை கண்டனம் பண்ணனும்.

அது எல்லாம் மடாதிபதிகளோட சமாச்சாரம்.

தொல்லை.

நாம எப்பவும் பொதுவா நிக்கணும்.

எல்லாரும் எல்லாத்தையும் செய்ய முடியாது.

அவா அவாளோட பூர்வ ஸம்ஸ்காரத்தையும், பக்குவத்தையும் பொறுத்து வேறுபடுவா.

ஒருத்தருக்கு ஞானம் எளிமையா தெரியும். ஒருத்தருக்கு பக்தி, ஒருத்தருக்கு தியானம், ஒருத்தருக்கு கர்மம்.

வாஸ்தவத்திலே ஞானம், பக்தி, தியானம், கர்மம் எல்லாம் ஒண்ணோட ஒண்ணு பின்னிப் பிணைஞ்சது.

ஆரம்பத்திலே எடுத்த எடுப்பிலேயே ஹிருதயத்திலே, நிர்க்குணத்திலே நின்னுட முடியாது.

சகுணத்திலே மனசு பிடிபட்டாதான்.... மத்த சிந்தனை போகும்.

சகுணத்திலே மனசு ததாகாரமாகும்போதுதான்... நிர்க்குணம் பிடிபடும்.

அதனாலே எல்லா வழியும் அவசியம்.

பகவத்கீதையிலே முதல்லே எடுத்த உடனேயே கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு இப்படித்தான் சொல்றார். "உனக்கு, எனக்கும், யாருக்கும் இங்கே பிறப்புமில்லே; இறப்புமில்லே."

அப்புறம் அவரே "ஆதித்தனுக்கு முன்னாடியே நான் பிறந்தேன். எனக்கு என்னோட எல்லாப் பிறப்பும் தெரியும், உனக்குத் தெரியாது"ங்கறார்.

'நீ இப்போதானே பிறந்தே! எப்போ ஆதித்தனுக்கு முன்னாடி பிறந்தே'ன்னு அர்ஜுனன் ஒத்துக்க மாட்டேங்கறான்.

என்னதான், உள்ளதை உள்ளபடி சொன்னாலும், அவனவன் பக்குவத்துக்கு ஏத்த மாதிரிதான் கிரஹிப்பான்.

முழிச்சுக்கொண்டு இருக்கும்போது 'இந்த உடம்புதான் நான்'ன்னு சொல்றா!

கனவிலே வேற உடம்பை நான்ன்னு சொல்றா!

தூங்கறப்போ உடம்பே இல்லாம இருக்கே!

ஜீவனுக்கே இத்தனை உடம்பு, இத்தனை விசேஷம் இருக்கும்போது ஈஸ்வரனுக்கு இருக்காதா?

எந்த மார்க்கமா இருந்தாலும் பெரியவா அதை ஊக்குவிக்கத்தான் செய்வா! எல்லா மார்க்கமும் ஒரே இடத்திலேதான் சேர்க்கும்.

(41) ***தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.***

**கே: சொர்க்கம், நரகம் எல்லாம் இருக்கா?**

ப: அங்கேயெல்லாம் போறதுக்கு யாரோ ஒருத்தன் இருக்கணுமே... அவன் யாருன்னு பாருங்கோ!

வீட்டுலே தூங்கும்போது சொப்பனத்துலே இன்னொரு இடத்துலே இருக்கறமாதிரி இருக்கு.

நாம இந்த நனவு இடத்தை விட்டுக் கனவு இடத்துக்குப் போனோமா?

இல்லே கனவு இடம் இங்கே வந்துதா?

எது உண்மை?

கனவா இல்லே நனவா?

**கே: காமத்தை விட வேண்டாமா?**

ப: இந்த நினைப்பை விடுங்கோ. வேற எதையும் விடவேண்டாம்.

எதைப் பாத்து சலனப்படறதுக்கும் நீங்க இருக்கணும்.

எதைப் பாத்து சலனப்பட்டாலும், சலனப்படறதுக்கு முன்னாடியும், சலனப்படறபோதும், சலனம் முடிஞ்ச பிறகும் நீ...ன்னு ஒண்ணு சர்வசாதாரணமா இருக்குமில்லையா... அதுதான் ஆத்மா.

அதுக்கு எந்த சலனமும் இல்லே.

காமமும் இல்லே.

அதுதான் நான்.

அது எப்பவும் அறிவு மாத்திரமா இருக்கு.

**கே: யாத்திரை முதலியன நல்லதா?**

ப: ஆமாம். நல்லது.

**கே: ஆத்மாவை அடையத் தேவையானது என்ன?**

ப: அகந்தை நாசமாகணும்.

ஆத்மாவை அடையறதுன்னு ஒண்ணு உண்மையிலேயே இல்லை.

ஆத்மா இல்லாத ஒரு கணமும் இல்லை.

ஆத்மா நித்ய சித்தம். புதுசா வரப்போறது இல்லை.

புதுசா வந்தா போயிடும்.

உள்ள பொருள்ன்னா... அது எப்பவும் இயல்பாவே இருக்கணும்.

நீங்க இருக்கறபடியே இருந்தாப் போதும்.

**கே: யக்ஞம்னா என்ன? ஞான யக்ஞம்னா என்ன?**

ப: யக்ஞம்னா என்னன்னு சாஸ்திரங்கள்லே இருக்கு தெரிஞ்சுக்கோங்கோ.

ஆத்ம விசாரம்தான் ஞான யக்ஞம்.

**கே: முக்தர்கள் வேற வேறயா இருப்பாங்களா?**

ப: வெளித் தோற்றத்திலேயும், செயல்லேயும் வேற வேறயா தெரிஞ்சாலும் அவாளோட ஞானம் ஒண்ணாத்தான் இருக்கும்.

**கே: ஒரு குருவுக்கு அடிமை செஞ்ச பிறகு வேற குருவை கும்பிடலாமா?**

ப: குரு ஒண்ணுதான்.
அது ஸ்தூல உடம்பில்லே.
குருவை உடம்பா பாக்கறது பாவம்னே சொல்றா.

**கே: ஜெ.கிருஷ்ணமூர்த்தி 'குரு அவசியமில்லை'ன்னு சொல்றாரே?**

ப: உண்மையை உணர்ந்த பிறகு வேணா அப்படி சொல்லலாம்.
அவருக்கு எப்படி உண்மை தெரிஞ்சதாம்?

**கே: நீங்க பெரியவங்க.... பெரிய நிலையிலே இருக்கீங்க. நாங்கள்லாம் சம்சாரத்திலே மாட்டிக்கொண்டு இருக்கோம். கீழான ஆத்மாக்களான எங்களால் என்ன செஞ்சுட முடியும்?**

ப: எல்லோரும் பெரிய நிலையிலேதான் இருக்கோம்.
யாரும் சம்சாரத்திலே இல்லே.
யாரும் மாட்டிக்கவும் இல்லே.

**கே: கீதையில புருவமத்தியில ஏகாக்கிரம் பண்ணி பிராண கும்பகம் பண்ணா பரமார்த்த நிலையை அடையலாம்னு சொல்லப்படுதே. அதை எப்படி செய்யறது?**

ப: நீங்க எப்பவும் ஆத்மாவிலேதான் இருக்கேள்.
அதை அடையறதுன்னு ஒண்ணு கிடையவே கிடையாது.

**கே: உலகத்துல வேலைகளை எப்படிச் செய்யணும்?**

ப: அர்ஜுனன் கிருஷ்ணரிடம் கேக்கறான், 'கர்மத்தையே ஒரு சாதனமா நான் அனுஷ்டிக்கலாமா'ன்னு.

அதுக்கு கிருஷ்ணர் சொல்றார், 'கர்த்ருத்துவம் இல்லாம செஞ்சா.... சாதனம் ஆகும்'னு.

கர்மங்களைப் பொய்ன்னு சொல்ற வேதங்களே கர்மத்தை செய்யவும் சொல்றது. கர்த்ருத்வத்தோட செய்யற கர்மத்தை வேதங்கள் ஒத்துக்கறது இல்லே.

வேலையை விட முடியாது. கர்மத்தை விடக் கூடாது.

கர்த்ருத்வத்தை விடணும்.

வேலை எல்லாம் தானே நடக்கும்.

இல்லேன்னா... வேலை நம்மள விட்டு அதுவா விலகிடும்.

வேலையைச் செய்யவோ, துறக்கவோ, முயற்சிக்கக் கூடாது. விதிச்சது நடக்கும்.

வேலை விதிச்சிருந்தா அதை விட்டு ஓட முடியாது. வேலை விதிக்கலேன்னா... எவ்வளவு தேடினாலும் அது அகப்படாது.

நீ விரும்பினாலும், விரும்பலேன்னாலும் உன்னாலே நடக்க வேண்டியது நடந்தே தீரும்.

அதெல்லாம் பரமேஸ்வர சித்தம்.

ஜனகர், சுகர் இன்னும் எத்தனையோ பெரியவா பற்றில்லாமல் எவ்வளவோ கர்மங்களை செஞ்சுருக்கா.

சிலர் கர்மத்தை புகழுக்காக செய்றா.

சிலர் சுயநலமில்லாம, பொது நலமா செய்றோம்ன்னு சொல்றா.

ஆனா எல்லாரும் பாராட்டணும்ங்கற ஆசை ஒளிஞ்சு இருக்கு.

அது சுயநலந்தான்.

**கே: எது ஒண்ணத் தெரிஞ்சா சந்தேகம் எல்லாம் தெளிஞ்சதாகும்?**

ப: "சந்தேகி"யைத் தெரிஞ்சுகொண்டா போதும்.

"சந்தேகி"யைக் கெட்டியா பிடிச்சுக்கொண்டா, ஒரு சந்தேகமும் வராது.

சந்தேகின்னா... இந்தத் தேகத்திலே இருக்கற சிரேஸ்ட வஸ்து.

இப்படியும் சொல்லலாம்... சந்தேகப்படறவன் இல்லேன்னா ஒரு சந்தேகமும் வராது.

உண்மையிலேயே எல்லாரும் ஞானிதான்... முக்தர்தான்.

இது யாருக்கும் தெரியலே.

சந்தேகத்தைத் தீக்கறதுன்னா.... சந்தேகப்படறவனை தீத்துக் கட்டறதுதான்.

அதாவது அகந்தையை ஒழிக்கறதுதான்.

**கே: அகந்தையை எப்படி ஒழிக்கறது?**

ப: நான் யார்ங்கற விசாரம்தான் அகந்தையை வேரறுக்கற கோடாரி.

**கே: அஹம் பிரம்மாஸ்மின்னு ஜபம் பண்ணலாமா?**

ப: ஏன் அப்படி நினைக்கணும்?

விசாரம் பண்ணா நினைப்பெல்லாம் போய் உள்ளது மிஞ்சும்.

**கே: ஹடயோகம் அவசியமா?**

ப: அது ஒரு சகாயம். அவசியம் கிடையாது.

சாதகனைப் பொறுத்தது.

விசாரணையிலே பிராணன் அடங்கிடும்.

பிராணனை அடக்கியோ, மனசை அடக்கியோ உண்மைக்குப் போயிடலாம்.

ஹடயோகம் பிராணனை அடக்கும்.

விசாரம் மனசை நாசம் பண்ணிடும்.

**கே: ஞானத்துக்கு அப்புறம் ஞானிக்கு தனித்தன்மை இருக்குமா?**

ப: எப்படி வச்சுக்கொள்ள முடியும்!

**கே: 'நேதி நேதி'ன்னு நான் தியானம் பண்றேன். அது சரியா?**

ப: இல்லே.

அது முதல்லே தியானமே இல்லே.

நான்கறதோட மூலத்தைக் கண்டுபிடிங்கோ.

தவறாம அங்கே போகணும்.

போலியா இருக்கற 'நான்'கறது போய், எப்போதும் இருக்கற 'தான்' மாத்ரம் மிஞ்சும்.

'தான்'கறது இல்லாம... போலியா நான் இருக்காது.

(52) *டங்கன் கிரீன்லிஸ், மதனபள்ளி கேட்டார்.*

**கே: எனக்கு சில சமயங்கள்ல ஆத்மானுபவம் ஏற்படுது. அதை எப்படி திரும்பப் பெறுவது? எப்படி தக்க வைக்கறது? எப்படி நீடித்து இருக்கறது? இதுக்கு அப்பியாசம் என்ன? அந்த அப்பியாசத்துக்கு தனி இடம் தேவையா?**

ப: நீங்க திரும்பப்பெறுவது எப்படின்னு கேக்கறேள்... ஆனா... ஆத்மா எப்போதும் நித்ய சித்தமாக இருக்கு. அஞ்ஞான நீக்கமே ஆத்மாவை அடையறதா சொல்லப்படறது.

நீங்க தக்க வைக்கறது எப்படின்னு கேக்கறேள்...ஆனா... ஒருமுறை அடைஞ்சா... அது இங்கேயே இப்போவே இருக்குன்னு தெரிஞ்சுடும். அது தொலையறதே இல்லே.

நீங்க நீடித்து ஆத்மானுபவத்திலே இருக்கறது எப்படின்னு கேக்கறேள்... ஆனா...அதை நீட்டிக்க, சுருக்கிக்க முடியாது. அது இருக்கற வஸ்து.

நீங்க தனியிடம் தேவையான்னு கேக்கறேள்...ஆத்மாவிலே இருக்கறதுக்கு பெயர்தான் ஏகாந்தம். ஆத்மாவிற்கு அன்னியமா இடம் இல்லை.

நீங்க இதுக்கு என்ன அப்பியாசம்ன்னு கேக்கறேள்...ஆத்ம விசாரணையே அப்பியாசம்.

(43) *வேலூர் கலெக்டர் ச. ரங்கநாதன் கேட்டார்.*

**கே: மனதை அடக்குவது எப்படி?**

ப: இரண்டு வழியிருக்கு-ஒண்ணு மனசுன்னா என்னன்னு பாக்கறது.

அப்படிப் பாத்தா அடக்கறதுக்கு மனசுன்னு ஒண்ணும் இருக்காது.

இல்லே... மனசை ஏதோ ஒண்ணுலே நிலை நிறுத்தணும். அப்போ மனசு அமைதியா இருக்கும்.

*புதுக்கோட்டை திவான் ராகவய்யா கேட்டார்.*

**கே: நாங்கள்லாம் உலகத்துல உழல்றவங்க. ஒண்ணு மாத்தி ஒண்ணு ஏதாவது பிரச்சனை இருந்துகிட்டேயிருக்கு! எப்படி வெளியே வர்றதுன்னே தெரியலை. இறைவன் கிட்டே எவ்வளவு முறையிட்டாலும் ஒண்ணும் திருப்தியா இல்லை. என்ன செய்யறது?**

ப: இறைவன்கிட்டே முறையிடாதேள்! சரணடைங்கோ!

**கே: சரணடைஞ்சாலும் ஒண்ணும் மாறமாட்டேங்குது!**

ப: சரணடைஞ்சாலும் ஒண்ணும் மாறமாட்டேங்குது... அப்படின்னெல்லாம் குறை சொல்லக் கூடாது.

சரணடைஞ்சுட்டா... அவர் எப்படி நடத்தறாரோ நடத்தட்டும்ன்னு... அவரிஷ்டத்துக்கு விட்டுடணும்.

நம்மளோட இஷ்டப்பிரகாரம் நடக்க வேண்டாம். உங்க இஷ்டப் பிரகாரமே நடத்துங்கோன்னு விட்டுடணும். அதுக்கு வருத்தப்படக் கூடாது.

துன்பமா இருக்கறமாதிரி இருக்கும். முடிவிலே வேறுவிதமா இருக்கும்.

நமக்கு அதெல்லாம் பிடிபடாது.

**கே: நாங்க உங்கள மாதிரி இல்லை! எங்களுக்கு எல்லாம் குடும்பம் சொந்தம் பந்தம்னு நிறைய இருக்கு. அவங்கள்லாம் எக்கேடும் கெட்டுப் போகட்டும்! உன் இஷ்டம்ன்னு இருக்க முடியல பகவானே!**

ப: அப்போ நீங்க சொன்ன மாதிரி சரணடையலேன்னுதான் அர்த்தம்.

எல்லாத்தையும் இறைவன் பாரம்ன்னு ஒப்படைச்சுடுங்கோ.

*மிஸ்டர் ச.இரா.ராமமூர்த்தி, ஐ.சி.எஸ். கேட்டார்.*

**கே: உடம்பில ஒரு பூச்சி ஏறுறது தெரியாம... ஏதாவது ஒரு யோசனையிலேயே மூழ்கி இருக்கலாம். ஆனா யோசனையே இல்லாம இருக்கலாம்னு சொல்றீங்களே... மனசைக் கடந்து இருக்க முடியுமா?**

ப: முடியும்.

இருக்கறது ஆத்மா ஒண்ணுதான். அதுதான் மூணு நிலைமையிலேயும் இருக்கு... மாறாம இருக்கு.

தூக்கத்துலே நான்கற எண்ணம் இல்லை. அது வந்த உடனே விழிச்சுக்கறோம்.

உடலுலகம் வந்துடறது. தூங்கும்போது இந்த ராமமூர்த்தி எங்கே போனார்?

நீங்க தூங்கும்போது இருந்தேளா? இல்லையா?

தூங்கும்போது ராமமூர்த்தி இருந்திருக்கணும். ஆனா... இப்போ இருக்கற ராமமூர்த்தியா இல்லே.

இப்போ இருக்கறதுக்கு பெயர் 'நான்'கற முதல் எண்ணம்.

தூங்கும்போது இருக்கறதுக்கு பெயர்தான் உண்மையான 'நான்'.

இந்த 'நான்'... மூணு நிலைமைலேயும் மாறாம இருக்கு.

அது அறிவாவும் இருக்கு.

'நான்'கறது என்னன்னு தெரிஞ்சுகொண்டா... அது நினைப்புக்கு அப்பால்ன்னு தெரியும்.

**கே: சிந்திக்காம இருக்க முடியுமா?**

ப: மற்ற உடலியக்கங்கள் மாதிரி அதுவும் ஒரு இயக்கந்தான்.

அது இயங்கினாலும், இயங்கலேன்னாலும் நான்கற அறிவைப் பாதிக்காது.

**கே: பிறர் என்ன நினைக்கறாங்கன்னு தெரிஞ்சுக்க முடியுமா?**

ப: மத்தவாளப் பத்தி நமக்கென்ன... நம்மளோட கதையப் பாப்போம்.

நாமதான் எல்லோரும்.

நமக்கு அன்னியமா யாரும் இல்லே.



***புதுக்கோட்டை திவான் ராகவய்யா கேட்டார்.***

**கே: உலக அனுபவத்தோட ஆத்மானுபவத்திலே இருக்க முடியுமா?**

ப: இருக்கறது ஒரே அனுபவந்தான்.

உலக அனுபவம்ன்னா என்ன?

ஒரு போலி 'நான்' மேலே கட்டப்பட்டிருக்கற அனுபவங்கள் தான்.

ரொம்ப உலக அனுபவமான ஆள்கிட்டே... நீ யார்ன்னு தெரியுமான்னு கேட்டா... தெரியாதுன்னுதான் சொல்லுவான்.

நம்மளத் தெரியாமே... எதைத் தெரிஞ்சு என்ன ஆகப்போறது?

எல்லா உலக அறிவும் சாரமே இல்லாததுதான்.

***எஸ். வி. ராமமூர்த்தி, ஐ.சி.எஸ் கேட்டார்.***

**கே: போலி நான்ல இருந்து உண்மையான நானை எப்படி பிரிச்சு அறியறது?**

ப: நான் இல்லேன்னு யாராவது சொல்லுவாளா?

சொல்ல முடியுமா?

தன்னோட இருப்பை யாராவது சந்தேகிக்க முடியுமா?

எல்லோருக்கும் சந்தேகமே இல்லாம அனுபவமாயிருக்கறதைத் தெரியலேன்னு சொல்றோம்.

இது பெரிய புதிர்.

**கே: மனதை எப்படி அடக்கறது?**

ப: நான்கற எண்ணம்தான் மனசு.

நான் யார்ன்னு விசாரம் பண்ணினா... நான்னு ஒண்ணும் மிஞ்சாது.

ஆத்மாவே மிஞ்சும்.

இப்படித்தான் மனதை அடக்கணும்.

அதை விட்டுட்டு... நான் ஏதோ உண்மை பொருள், அது எதையோ சிந்திக்கறது, அதை அடக்கப்போறேன்னு கிளம்பிடறது.... 'நான்'கறத அடக்க, 'நான்'கறதே கிளம்பிடறதுதான்.

அதாவது மனசை வச்சே மனசை அடக்கறது.

திருடன் ஒருத்தன்... அவனைப் பிடிக்கறதுக்கு அவனே போலீஸ் ஆனானாம்.

மனம் எப்பவுமே தன்னை மறைச்சு வெளிப்படும்.



(44) *ஏகநாதராவ் இஞ்ஜினியர் கேட்டார்.*

**கே: ஆத்மா விசாரத்துக்கு ஏகாந்தம் அவசியமா?**

ப: எல்லாம் ஏகாந்தந்தான்.
ஜீவன் எப்போதும் ஏகந்தான்.
நம்மள உள்ளே தேடணும்.
வெளியே தேடக்கூடாது.

**கே: உலக விவகாரங்கள் திசை திருப்பிடுது? என்ன செய்ய?**

ப: திருப்ப விடாதேள்!
கவனம் சிதர்றப்போ எல்லாம் விசாரம் பண்ணுங்கோ!

யார் திசை திரும்புறான்னு... கவனம் சிதர்றப்ப... விசாரம் பிறக்கணும்.

விசாரம் பிறக்க ஆரம்பிச்சுடுத்துன்னாலே... குருவருளுக்கு பாத்தியமாயிட்டோம்னு அர்த்தம்.

கொஞ்சம் பயிற்சியிலே எல்லாம் சரியாயிடும்.

**கே: அங்கதான் விசாரம் வரமாட்டேங்குது? ரொம்பக் கஷ்டமா இருக்கு.**

ப: செய்யுங்கோ. வந்துடும்.
ஒரு கஷ்டமும் இருக்காது.

**கே: நான் யார்ன்னு விசாரம் பண்ணினா... ஒரு பதிலும் வர மாட்டேங்குதே?**

ப: ஒரு பதிலும் வராது.

விசாரிதான் பதில். அவன்தான் மிஞ்சுவான். என்ன மிஞ்சறதோ அதுதான் பதில்.

புதுசா எது வந்தாலும்... அது உண்மை கிடையாது. போயிடும்.

எப்பவும் இருக்கறதுதான் உண்மை.

**கே: ஆன்மீகப்பாதை ரொம்ப கஷ்டம். உலகத்துல இருக்கற விஷயங்கள் புரியறது ரொம்ப எளிமையாயிருக்கு. வாஸ்தவந்தானே?**

ப: ஆமாம் மனசு புறவிஷயங்களை அறியாமே கிளம்பும். தன்னை விட்டுடும்.

**கே: பகவான் கூட ஒரு நாள் இருந்தா... நல்லாயிருக்கு. இரண்டு நாள் தங்கியிருந்தா... ரொம்ப நல்லாயிருக்கு. மூணு நாள்...சொல்லவே முடியாத அளவுக்கு நல்லாயிருக்கு. வேலையைப் பாக்க வேண்டியதா இருக்கு...என்ன செய்யறது?**

ப: இங்கே இருந்தாலும், எங்கே இருந்தாலும் ஒண்ணுதான்.
ஒரே பலன்தான்.
இது புரிஞ்சாப் போதும்.

(46) ***நாகர்கோவில் ராமச்சந்திர ஐயர் கேட்டார்.***

**கே: மனம்னா என்ன? அதை எப்படி ஏகாக்கிரம் பண்றது? எப்படி கட்டுப்படுத்தறது?**

ப: தேகாத்ம புத்திதான் மனம்.

அதாவது பிறப்பில்லாத ஆத்மாவோட, தோற்றமா தோணற உடம்பை சம்பந்தப்படுத்தி, 'நான் இந்த உடம்புதான்', 'நான் இன்னார், இன்னாருக்கு மகனாப் பிறந்தேன்'னு நினைக்க வைக்கறதுதான் மனம்.

ஒரு போலியான நான்னு ஒண்ணு கிளம்பி... இப்படித் தப்பான அபிப்பிராயத்தை ஏற்படுத்தி... அதிலேயே நல்லா உழலும்.

உண்மையிலேயே... இந்த உலகம், நீ, நான் எல்லாம் பொய்.

ஆத்மா ஒண்ணுதான் இங்கே இருக்கற உண்மை.

பாக்கற பொருளுக்கெல்லாம் வாஸ்தவத்திலேயே இருப்பு இருக்குங்கற நினைப்புதான் மனம்... தப்பான எண்ணம்... அஞ்ஞானம்... பந்தம்.

இப்படித் தப்பா நினைக்கறது போயிடுத்துன்னா... அதான் மோட்சம்.

இந்தப் போலி நான் போயிடுத்துன்னா... மறைஞ்சுடுத்துன்னா... உண்மை கர தலக் கனியாயிடும்.

அப்படின்னா... உண்மை இனி எப்பவோ வரப் போறது... இங்கேயே இப்போவே இல்லைன்னு அர்த்தம் இல்லை.

அது எப்பவும் இருக்கு. இங்கேயே... இப்போவே... ஒரே மாதிரியா இருக்கு.

அது எல்லோருக்கும் இருக்கற சாமான்ய அனுபவந்தான்.

தான் இருக்கறத... யாரும் மறுக்கறது இல்லை.

பார்க்கப்படறது எல்லாம் பொய்.

நாம உலகத்தை மட்டும் பாக்கலே. நம்மளோட உடம்பையும் சேத்துதான் பாக்கறோம்.

எது பாக்கறதோ அதான் உள்ள பொருள்.

நாம இருக்கோங்கற... சாமான்ய அனுபவந்தான் எல்லாத்தையும் பாக்கறது.

அதுதான் ஒரே உண்மை. அதுதான் ஆத்மா.

உடம்போட நம்மள சம்பந்தப்படுத்திக்கக் கூடாது. இந்த சம்பந்தம்தான் போலி நானை உண்டு பண்றது. உலகத்தை உண்மைன்னு உண்டு பண்ணிடறது.

அப்புறம் அதைச் செய்யணும், இதைச் செய்யணும், அதைச் செய்யக்கூடாது, இதைச் செய்யக்கூடாதுன்னு கிளம்பி துக்கம் கொடுக்கறது.

உங்களை இதுவாவோ, அதுவாவோ, எதுவாவோ கூட சிந்திக்காதேள்!

அதாவது...இன்ன ஊர்லே இன்னாருக்கு மகனா பிறந்தேன் இன்னது படிச்சேன் இன்ன வேலை பாக்கறேன் அப்படின்னு நினைக்காதேள்! இந்தத் தப்பான எண்ணம் போச்சுன்னா...அதுவே போதும். ஞானம், பாம்பு சட்டையை உரிச்சுக்கொண்டு வர்ற மாதிரி வந்துடும்.

சாஸ்திரங்கள்லாம் ஆத்மா நித்ய சித்தம்ன்னு சொல்றது.

ஆத்மா நித்யமாவும்; எப்பவும் சித்தமாவும் இருக்குதுன்னா... அஞ்ஞானம்ன்னு ஒண்ணு எங்கிருந்து குதிச்சுது?

யாருக்கு அஞ்ஞானம்?

சாஸ்திரங்கள் அஞ்ஞானம் நீக்கத்தைப் [illegible] பேசறது. இது பொருத்தமா இல்லை.

ஆனா, ஏன் சொல்றதுன்னா... எடுத்த எடுப்பிலேயே உண்மையை சொன்னா எல்லாராலேயும் கிரஹிக்க முடியாது.

'நானுமில்லை, நீயுமில்லை' யாருமில்லைன்னு சொன்னா... அர்ஜுனனுக்குப் புரியலே.

பின்னாடி கிருஷ்ணர் 'உடலோடுதான் என்னை எல்லோரும் பாக்கறா; ஆனா உண்மையிலேயே எனக்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை'ன்னு சொல்றார்.

அர்ஜுனனுக்கு உண்மை புரிய மொத்த கீதையும் தேவைப்படறது.

சொன்னதைத் திரும்பவும் சுருக்கமா சொல்றேன்.

இருக்கறது மாத்ரம்தான் ஆத்மா. அதுவாவோ, இதுவாவோ, இல்லை.

நாம இருக்கோம்கற சாமான்ய இருப்பு இருக்கில்லையா... அதுதான் ஆத்மா.

நீங்க இப்போ எப்படி இருக்கேளோ... அப்படியே இருங்கோ!

அஞ்ஞானம் நீங்கிடும்.

இல்லேன்னா... யாருக்கு அஞ்ஞானம்ன்னு பாருங்கோ!

பாத்தா... நாம இருக்கோம்கறதுதான் மிஞ்சும்.

அது அறிவாத்தான் இருக்கு.

தூக்கத்திலே இருந்து விழிச்சவுடனேயேதான் இந்தப் போலி நான் கிளம்பிடறது.

தூக்கத்துலே யாரும் 'இப்போ நான் தூங்கிக்கொண்டு இருக்கேன்' இல்லே... 'இப்போ விழிக்கப் போறேன்' இல்லே... 'ரொம்ப நேரமா தூங்கிக்கொண்டு இருக்கேன்' அப்படின்னு எல்லாம் சொல்றது இல்லே. ஆனாலும் நாம இருக்கோம்.

தூங்கி விழித்த உடனேதான்... 'நான் தூங்கினேன்னு' நினைவுகூர்றோம்.

முன்னாடி தூங்கினேன்னு நினைவுகூர்றவனும், தூங்கும் போது இருந்ததும் ஒரே ஆள்தான்.

அதைப் புரிஞ்சுக்கோங்கோ!

அதை உடம்போட குழப்பிக்காதேள்!

உடம்பே... சாமான்ய இருப்பிலே ஏற்படற நினைப்புதான்.

அந்த உடம்பிலே ஏதாவது நினைப்பு வந்தாலும்... போனாலும்... அதனாலே நான்கற இருப்புக்கு ஒரு கவலையும் இல்லை.

தூங்கும்போது எப்படிக் கவலையில்லாம இருக்கோமோ... அப்படியே இப்பவும் இருக்கலாமே!

*அப்பொழுது ஏகநாதராவ் கேட்டார்.*

**கே: பகவான் சொல்ற நிலை அன்றாடம் வேலை செஞ்சாத்தான் ஜீவனம்கற நிலையில இருக்கற எங்களுக்கு பொருந்துமா?**

ப: எந்த வேலையும் பந்தம் இல்லை.

பந்தமெல்லாம் 'நான்தான் செய்றேன்'கற தப்பபிப்பிரா யத்திலேதான்.

அந்தத் தப்பான அபிப்பிராயம்தான் போகணும்.

உடம்பும், புலன்களும் அதோட வேலையைச் செய்யட்டும்.

நாம குறுக்கே போகக் கூடாது.

(48) *தரிசனம் பண்ண வந்த ஒருத்தர் கேட்டார்.*

**கே: நீங்க பகவான்... நான் எப்போ ஞானமடைவேன்னு சொல்லுங்க? நான் எப்போ ஞானியாவேன்?**

ப: நான் பகவான்னா... எனக்கு ஆத்மாவைத் தவிர வேறு எதுவும் இல்லை.

எனக்கு இங்கே யாரும் ஞானியும் கிடையாது; அஞ்ஞானியும் கிடையாது.

நான் பகவான் இல்லேன்னா... உனக்கு என்ன தெரியுமோ, அதுதான் எனக்கும் தெரியும்.

நானும் உன்னை மாதிரிதான்.

*(49) தரிசனத்திற்கு வந்த சிலர் கேட்டது.*

**கே: எவ்வளவு முயன்றாலும் 'நான்'கறது சரியா புலப்பட மாட்டேங்குதே?**

ப: நான் சரியாத் துலங்கலேன்னு சொல்றது யாரு?

புலப்படாத 'நான்'... புரியணும்னு 'முயற்சி பண்ற நான்'ன்னு இரண்டு 'நான்' இருக்கா?

இதையெல்லாம் விசாரம் பண்ணுங்கோ.

அகந்தைதான் இப்படியெல்லாம்... அதுதெரியலே... இது தெரியலே...ன்னு கூத்தடிக்கும்.

எப்படி இந்த அகந்தை வர்றது?

எங்கிருந்து வர்றது? அது என்ன?

இது தெரிஞ்சா... அது ஒரு இல்லாத பொருள்ன்னு புரியும்.

ஜனகர் இந்த அகந்தையைத்தான் 'இதுவரை என்னை ஏமாத்திட்டு இருந்த திருடனைக் கண்டுபிடிச்சிட்டேன். இனி அவனை என்ன செய்யணுமோ செஞ்சுக்கறேன்'னு சொன்னார். 'இனி எனக்கு ஒரு துன்பமும் இல்லை'ன்னு சொன்னார்.

நாமும் அதேமாதிரி இருக்கலாமே!

**கே: நான்கறத எப்படி தெரிஞ்சுக்கறது?**

ப: 'நான் - நான்' ன்னு அதுதான் எப்பவும் இருக்கே!

அதை எப்படித் தெரிஞ்சுக்க முடியும்?

அதைப் புதுசா என்னமோ தெரிஞ்சுக்கறது அப்படியெல்லாம் இல்லை.

இப்போவே... இங்கேயே... இல்லாம புதுசா வர்றது உண்மையில்லே.

நான்கறது எப்பவும் இருக்கு.

அது மறைபட்ட மாதிரி தெரியறது.

அதைத்தான் அஞ்ஞானங்கறா.

அஞ்ஞானம் நீங்கினா போதும்... மறைபட்ட மாதிரி இருக்கறது தெளிவாயிடும்.

உண்மையிலேயே அஞ்ஞானமோ... ஞானமோ... இரண்டும் இல்லை.

அஞ்ஞானத்தை போக்கிக்கொண்டு... ஞானமும் போயிடும்.

அதனாலேதான்... அறிவு அறியாமை அற்றது அறிவுன்னு சொல்றா.

அறியாமையை அறிவு போக்கிக்கொண்டு... அறிவும் போயிடும்.

எப்பவும் இருக்கற அறிவே மிஞ்சறது.

அவ்வளவுதான்.

**கே: அஞ்ஞானத்தை எப்படிப் போக்கறது?**

ப: திருவண்ணாமலையிலே ஒரு ரூம்லே படுத்துத் தூங்கும்போது, உங்களுக்கு ஒரு கனவு வர்றது... நீங்க இன்னொரு ஊர்லே இருக்கற மாதிரி.

அந்த காட்சி உங்களுக்கு உண்மைதான்.

உங்க உடம்பு இங்கே ரூம்லே படுக்கையிலே இருக்கு.

ஒரு ஊர் ரூமுக்குள்ளே நுழைஞ்சுடுத்தா? இல்லே நீங்க இங்கே உடம்பைக் கிடத்திவிட்டு அந்த ஊருக்குப் போனேளா?

இரண்டும் நடக்கற சங்கதியில்லை.

நீங்க திருவண்ணாமலையிலே இருந்ததும்... அந்த ஊருக்குப் போனதும்... இரண்டும் பொய்.

மனசுக்கு... இதெல்லாம் அங்கங்கே உண்மையாத் தெரியறது.

கனவிலே இருந்த 'நான்' மறைஞ்ச உடனே... இன்னொரு 'நான்' அந்தக் கனவைப் பத்தி பேசறது.

கனவைப் பத்திப் பேசற 'நான்'... கனவிலே இல்லை.

இந்த இரண்டு 'நான்'னும் பொய்.

ஒவ்வொரு எண்ணத்தோடும் ஒரு 'நான்' கிளம்பறது.

அந்த எண்ணம் போயிடுத்துன்னா... அந்த 'நான்' போயிடும்...

இப்படி ஒவ்வொரு க்ஷணமும் ஏகப்பட்ட 'நான்' பிறக்கறது; இறக்கறது.

ஒவ்வொரு எண்ணத்தோடும் ஒரு 'நான்' கிளம்பறதில்லையா... இதை எல்லாம் கிளப்பிவிடற ஒண்ணுதான் அகந்தை...

ஜனகர் இவனைத்தான் திருடன்னு சொல்றார்.

இவனைக் கண்டுபிடிச்சு போக்கிட்டா, நீங்க ஆனந்தமா இருப்பேள்.

(52) *காக்கிநாடாவில் இருந்து வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: ஆத்ம விசாரணை பண்ணா இரண்டு மூணு நாளைக்கு உற்சாகமாகவும், அமைதியாகவும் இருக்கு. அப்புறம் சோர்வும் பழைய விஷயவாசனை வசமாயிடுது. எதனாலே இப்படி?**

ப: இது ஸஹஜம்தான். திரிகுணத்தோட ஸ்வபாவம்.
தமசுக்காக கவலைப்படக் கூடாது.
சத்வம் வரும்போது, கெட்டியா பிடிச்சுக்கணும்.
அதை நல்லா உபயோகப்படுத்திக்கணும்.

**கே: ஹிருதயம்ன்னா என்ன?**

ப: நம்மளோட யதாஸ்தானம்.

**கே: ஸ்தூல ஹிருதயமா?**

ப: இல்லை.
'நான்'கறது எங்கிருந்து உதிக்கறதோ அந்த ஸ்தானம்.

**கே: ஜீவன் இறந்தபிறகு என்ன ஆகும்?**

ப: இந்தக் கேள்வி உயிரோட இருக்கற ஜீவனுக்குப் பொருந்தாது.

ஒருவேளை இறந்த ஜீவன் வந்து கேக்கட்டும்... அப்போ பாப்போம்.

அதுக்குப் பதிலா... இப்போ நாம யார்?

நாம பிறந்திருக்கோமா?

அப்படின்னு பாக்கலாம்.

அது தெரிஞ்சா... இந்தச் சந்தேகம் எல்லாம் வராது.

**கே: தியானம்னா என்ன?**

ப: தியானம் வழக்கமா ஒரு பொருளைக் கருதுவதைக் குறிக்கும்.

நிதித்யாசனம்... ஆத்ம விசாரத்தைக் குறிக்கும்.

ஞானம் அடையற வரைக்கும்.... திரிபுடி தோற்றம் அனுபவமாகும்.

ஒரு சாதகனைப் பொறுத்தவரைக்கும்... தியானம், நிதித்தியாசனம், பக்தி எல்லாம் ஒண்ணுதான். ஏன்னா... அங்கே திரிபுடி இருக்கு.

**கே: தியானம் எப்படிப் பண்றது?**

ப: தியானம் ஏகாக்கிரத்துக்கு உதவும்.

ஏகசிந்தனை மத்த சிந்தனையை வரவிடாது.

ஒவ்வொரு ஆளைப் பொறுத்து தியானம் மாறும். கடவுளையோ, மந்திரத்தையோ, இல்லே... ஆத்மாவையோ, தியானம் பண்ணுவா.

(53) *நோல்ஸ்ன்னு ஒரு அயல்நாட்டு இளைஞர் கேட்டார்.*

**கே: பௌத்தர்கள் 'நான்'கறது பொய்ங்கறாங்க! பால் பிரண்டன் தன்னோட 'A Search in Secret India'ங்கற நூலில் 'போலி நானை' தாண்டி 'உண்மை நானை' அடையணும்னு சொல்றார். எது உண்மை?**

ப: இரண்டு 'நான்' இருக்குன்னு வச்சுப்போம்.

ஒண்ணு போலி 'நான்' பொய்யானது: கீழான ஸ்வபாவமுடையது. எல்லோருக்கும் தெரிஞ்சதுதான்.

இன்னொரு உண்மை 'நான்' மேலானது:

அதைத்தான் எல்லோரும் உணரணும்னு விரும்பறோம்.

தூங்கும்போது... உனக்கு உன்னைப் பத்தின நினைப்பு இல்லே.

விழிப்பு வந்த உடனே... 'நான்'கற எண்ணம் வந்துடுத்து.

'நான் தூங்கிட்டேன்' அப்படிங்கறே! தூங்கிக்கொண்டு இருக்கும்போது அப்படிச் சொல்லலே.

அதுக்காக தூங்கும்போதும் நீ இல்லையா ?

அப்போ... இந்த 'நான்'கற எண்ணம் உதிச்சவுடனே உடம்பு உலகம் எல்லாம் வந்துடறது.

இந்த 'நான்'கற எண்ணம் எங்கே இருந்து உதிக்கறது ?

உண்மையிலேயே 'நான்' யார்ன்னு பாக்கணும்.

இது தெரியறதுதான்... உண்மையான 'நான்'கறதைத் தெரிஞ்சுக்கறது.

**கே: நான் யார்? உலகத்துல இருந்து, இடைவிடாமல் கிடைக்கற புலன் நுகர்வுகளை அனுபவிக்கறனாலதான், 'நான்' என்னை உணர்றேன். பௌத்தர்களும் அவ்வாறே சொல்றாங்க ?**

ப: உலகம் வெளியே இல்லை.

புலன் நுகர்வுகளும், வெளிப்பொருள்கள்லே இருந்து இல்லை.

'உலகம் இருக்கு'ன்னு நாமதான் சொல்றோம்.

இருக்கேன்னு உலகம் சொல்லலே. அது உங்களுடைய கருத்து.

சரி, உங்களோட கருத்துப்படியும், உலகம் இடைவிடாமலும், மாறாமலும் இருக்கா ?

தூங்கும்போது உலகம் இல்லை.

காணோம்.

ஒரு 'நான்'கற எண்ணத்துக்குத்தான் இந்த உலகம் தோற்றமாறது.

இந்த 'நான்' கறது எங்கிருந்து வர்றதுன்னு பாரு!

அதோட மூலம் தெரிஞ்சா... அதுதான் சேர வேண்டிய கடைசி லக்ஷியம்.

**கே: உலகம் என்னை எழுப்பிவிடுது. உலக சமிக்ஞையாலதான், நான் விழிக்கறேன். சரியா?**

ப: பாக்கறவன் ஒருத்தன் இல்லாம... உலகம் இருக்கா?

எது முன்னாடி; 'இருக்கற அறிவா'... 'பாக்கற அறிவா'...?

இருக்கற அறிவு எப்பவும் இருக்கு. பரிசுத்தமா இருக்கு.

பாக்கற அறிவு தோன்றி மறையறது. அது பொய்.

நிலையற்றது.

**கே: நான் தூங்கும்போது மத்தவங்க உலகத்தைப் பாத்துட்டுதான இருக்காங்க?**

ப: இந்த உலகம் உன்னைப் பாத்து சிரிக்கும்.

ஏன்னா... தூங்கும்போது உன்னைத் தெரியாமலேயே, அதைக் தெரியும்ன்னு சொல்றதுக்கு.

உலகம் உங்களோட கற்பனை.

முதல்லே நீ யார்ன்னு பாரு!

அப்புறம் உலகத்தைப் பாரு!

அப்போ உனக்கு உலகம் உன்னிடமிருந்து வேறேயா... இல்லையான்னு தெரியும்.

**கே: எனக்கு தெரியற மாதிரியேதான, பகவானே, உங்களுக்கும் உலகம் தெரியும்?**

ப: யாருக்கு இந்தச் சந்தேகம்?

ஞானிக்கு இல்லை.

அஞ்ஞானிக்குத்தான் சந்தேகம்.



## (54) *ஆந்திரப் பண்டிதர் ஒருத்தர்*

**காவ்யகண்ட முனிவர் விளக்கியிருந்த அத்வைதத்துல சில சந்தேகங்கள் இருந்து அதை அவர் படிச்ச சாஸ்திரங்களுக்கு**

முரணா இருக்கறதாகவும் பகவான்கிட்டே சொன்னார். பிரம்மம் சஜாதீய, விஜாதிய, ஸ்வகத பேதம் இந்த மூணுக்கும் கட்டுப்படாது. அந்த கட்டுப்படாத தன்மை விவர்த்த வாதத்துக்குத்தான் உண்டு. பரிணாம வாதத்துக்கு இல்லை. பரிணாம வாதத்தில ஸ்வகதபேதம் மட்டும்தான் அடங்கும் அப்படின்னு சொன்னார்.

*பகவான் அவரிடம்:*

ப: தட்சிணாமூர்த்தி இந்த மாதிரி எல்லாம் உபதேசிக்கலே.

பிரம்மத்துக்கு சக்தி சம்பந்தம் இருக்கா... இல்லையான்னு எல்லாம் சொல்லலே.

அவர் பாட்டுக்கு பேசாம மௌனமா இருந்தார்.

சிஷ்யர்கள் சந்தேகமெல்லாம் தீந்துடுத்து...

இதை ஏன் சொல்றேன்னா... இங்கே உண்மையிலேயே எதையும் படிக்கத் தேவையில்லை. ஆராய்ச்சி பண்ணத் தேவையில்லை. முடிவுக்கு வரத் தேவையில்லை.

'நான்'கறது எல்லோருக்கும் அனுபவந்தான்.

ஆனா குழப்பமே 'நான்' உடம்புதான்னு சொல்றதுதான்.

சத்யத்திலே இருந்து அஹம் ஏற்படறது. அஹம்கறதிலே இருந்துதான் புத்தி ஏற்படறது.

புத்தியிலே நான்கறது உடம்பளவா குறுகிக்கறது.

பிரம்மம் ⟹ அஹம் ⟹ புத்தி

இப்போ புத்தியாலே எப்படி அஹத்தைத் தாண்டி பிரும்மத்தை உணர முடியும்?

அது முடியவே முடியாது.

நான் உடம்புதாங்கற தப்பெண்ணம் போனாப் போதும்.

யாருக்கு இந்தக் கேள்வியெல்லாம் வர்றதுன்னு பாருங்கோ.

கேள்வி கேக்கற ஆள் மறைஞ்சிட்டா... தேடல் எல்லாம் முடிஞ்சுபோகும்.

என்ன மிஞ்சறதோ.... அது சுத்தாத்மா.

**கே: எண்ணங்கள் பலமா இருக்கறதனாலே அஹம் சொரூபமா நிக்க முடியலை?**

ப: பிரம்மாகார விருத்தியை பிடிச்சுக்கொண்டா... மனசை வேற சிந்தனைக்குப் போகவிடாது.

இல்லேன்னா... சாதுக்களோட சகவாசம் பண்ணணும்.

சாதுக்கள் மனசைக் கடந்தவா. அமைதியிலே இருக்கறவா.

அவாளோட ஸாந்நித்தியம், அதே ஸ்திதியை மத்தவாளுக்கும் கொண்டு வரும்.

சாதுக்கள் சகவாசத்தாலே வேற பிரயோஜனம் ஒண்ணும் இல்லை.

**கே: ஒரு கிருஹஸ்தன் மோட்சமடைய முடியுமா?**

ப: கிருஹஸ்தன்னு தன்னை ஏன் நினைக்கணும்?

நீங்க சன்யாசியானா... 'நான் சன்யாசி'ங்கற நினைப்பு பிடிச்சுக்கும்.

எங்கே போனாலும் உங்க நினைப்பு உங்களை விடாது.

நான்னு ஒண்ணு கிளம்பினவுடனே உடம்பும் உலகமும் வந்துடறது.

வந்து... உங்களை கிருஹஸ்தன்னு நினைக்க வைச்சுடறது.

உலகத்தைத் துறந்தா அந்த நினைப்புக்குப் பதிலா, சன்யாசின்னு நினைக்க வைக்கும். வீட்டுக்குப் பதிலா காடு. ஸம்ஸ்காரம் விடாது. புது சூழ்நிலையிலே மேலும் மோசமாகும். இடத்தை மாத்தறதாலே எந்தப் பிரயோஜனமும் இல்லை. மனம்தான் தடை. அந்தத் தடையை வீட்டிலேயோ காட்டிலேயோ நீக்கித்தான் ஆகணும்.

காட்டிலேயே நீக்க முடியும்ன்னா... வீட்டிலே இன்னும் எளிமையா நீக்கலாம்.

ஏன் இடத்தை மாத்தணும்?

உங்களோட முயற்சிகளை இப்போவே ஆரம்பிக்கலாம்.

எங்கேயிருந்தா என்ன?

சூழ்நிலை நம்மள என்ன செஞ்சுடும்?

என்னைப் பாருங்கோ...நான் வீட்டை விட்டுட்டுதான் வந்தேன். நீங்களும் வீட்டை விட்டுட்டுதான் வந்திருக்கேள்...

இங்கே என்ன பாக்கறேள்?

நீங்க விட்டுட்டு வந்த இடத்துக்கும், இதுக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை.

எவ்வளவு நாள் நிர்விகற்ப சமாதியிலே இருந்தாலும் வெளியே வந்தா பழைய குருடி கதவைத் திறடிதான்.

அதனாலேதான்... ஆசாரியார் விவேகசூடாமணியிலே சகஜத்தையே வலியுறுத்தறார்.

எந்த இடம்ன்னா என்ன?

ஆத்மசாதகன் சகஜ சமாதியிலேயே இருக்கணும்.



(56) இருபது வயது இளைஞன் கேட்டது.

**கே: ஆத்மாவை எப்படி அடையறது?**

ப: யாரோட ஆத்மாவை? கண்டுபிடி!

**கே: நான் யார்?**

ப: நீதான் கண்டுபிடிக்கணும்.

**கே: எனக்குத் தெரியாது.**

ப: நல்லாப் பாரு!
எனக்குத் தெரியலேன்னு சொல்றது யார்?
எது தெரியலே?
எனக்குத் தெரியலேங்கற வாக்கியத்திலே 'எனக்கு'ன்னா என்ன?

**கே: யாரோ எனக்குள்ள இருக்கறது.**

ப: யார் அந்த 'யாரோ'?
யாருக்குள்ளே இருக்கான்.

**கே: ஏதோ ஒரு சக்தி.**

ப: கண்டுபிடி!

**கே: பிரம்மத்தை உணர்றது எப்படி?**

ப: உன்னையே தெரியலே; பிரம்மத்தை எப்படித் தெரிஞ்சுப்பே?

**கே: சாஸ்திரங்கள் பிரம்மம் எங்கும் நிறைந்தது எல்லாருக்குள்ளேயும் இருக்கு. எனக்குள்ளேயும் இருக்குன்னு சொல்லுதே**

ப: 'எனக்குள்ளே' அப்படின்னு சொல்றேல்ல... அதிலே இருக்கற 'நான்'கறத கண்டுபிடி.

**கே: நான் ஏன் பிறந்தேன்?**

ப: யார் பிறந்தது?

**கே: அப்போ நான் யாருதான்?**

ப: என்னைச் சோதிக்க வந்தியா?
நீதான் கண்டுபிடிக்கணும்.

**கே: தூங்கும்போது ஆத்மா உடம்பை விட்டுட்டு எங்கேயோ போகுது. எங்கேயோ இருக்கு. முழிக்கறப்போ திரும்ப வந்துடுது.**

ப: உடம்பை விட்டு எது போறது?

**கே: ஒரு சக்தி.**

ப: அதைக் கண்டுபிடி.

**கே: உடம்பு பஞ்சபூதத்தால ஆனது. பஞ்சபூதம்ன்னா என்ன?**

ப: உன்னைத் தெரிஞ்சுக்காமே... பஞ்சபூதத்தைத் தெரிஞ்சுக்க ஆசைப்படறியே!

(சிறிது நேரம் கழித்து அந்த இளைஞன் வணங்கிச் சென்றான். பகவான் 'சரி வேலை பாக்கும்'ன்னு சொன்னார்).



(57) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: சில சமயம் தியானத்துல எண்ணங்கள் ஏற்படுது; அப்புறம் போயிடுது. இது ஞான நிலையா?**

ப: சிலர் ஞானத்திலே பல நிலைகள் இருக்கறதா நினைக்கறா.

ஆத்மா நித்யாபரோக்ஷம் அதாவது எப்போதும் அடையப் பட்டே இருப்பது.

ஆகையாலே... சிரவணம் பண்ணாலே அது அபரோக்ஷ ஞானந்தான் (அனுபவ ஞானம்).

அதாவது... அனுபவ ஞானந்தான், கேள்வி ஞானம் இல்லேங்கறா.

ஆனா... ஞானம் துக்க நிவிருத்தியைக் கொண்டு வரணுமில்லையா! சிரவண மாத்ரத்தாலேயே எல்லோருக்கும் துக்க நிவிருத்தி ஏற்படறது இல்லை.

அதனாலே... அவா என்ன சொல்றா, சிரவணம் அபரோக்ஷ ஞானந்தான் ஆனாலும் திடமாகலே.

வாசனைகள்தான் அதுக்குக் காரணம்.

வாசனைகளெல்லாம் போயிடுத்துன்னா... ஞானம் திடப்படும். பலன் தரும்.

மத்தவா சிரவணம் பரோக்ஷ ஞானந்தான் (கேள்வி ஞானம்), மனனத்தாலேயே காலக்கிரமத்திலே அபரோக்ஷமாகறதுங்கறா.

அகண்ட ஞானத்துக்கு வாசனையே தடையாயிருக்கு.

மனனத்துக்குப் பிறகுதான் வாசனைகள் முன்பைவிட பலமா எழும்பும்.

தவிராத பிரயத்தனத்தாலே தவிர்க்கணும்.

அப்படியான கண்காணிப்பு எதுன்னா... 'நான் உடம்பில்லே; நான் ஆத்மாதான்'கற திடநிச்சயம் ஏற்படறதுதான்.

அதாவது மனனத்திலே கிடைச்ச அறிவைக் கெட்டியா பிடிச்சுக்கணும்.

அதுக்குப் பெயர்தான் நிதித்தியாசனம்.

நிதித்தியாசனத்தாலேயே வாசனாட்சயம் ஏற்படறது.

அப்புறம் சகஜம் சித்திக்கும்.

இதுதான் உண்மையிலேயே ஞானம்.

மனன காலத்திலே இருக்கற அபரோக்ஷ ஞானம் துக்க நிவிருத்தி தராது. மோட்சமாகாது.

வாசனைகள் ஞானத்தை மறைச்சுடும்.

அது அதிட்டமில்லாதது.

நிதித்தியாசனத்தாலே வாசனைகள் நாசமானாத்தான் திடமாகும்.

*சக்கரங்கள் பற்றி டி.கே. சுந்தரேசய்யர் கேட்டார்.*

ப: ஆத்மாவை உணர்ந்தா போதும். அதிலேயே எல்லாம் வந்துடும்.

எல்லா சித்தியும் அடக்கம். எல்லா உபாசனையும் அடக்கம்.

சக்கரங்கள் பத்தி எல்லாம் பேசறவா உண்மையை உணரலே.

ஆத்மா ஹிருதயத்திலே இருக்கு. அது வெளிக்கிளம்பி வெளிப்படறது சஹஸ்ரத்திலே. ஹிருதயத்திலே இருந்து சஹஸ்ரத்துக்கு ஒரு நாடியிலே போறது. அதுதான் பரநாடி.

அந்த நாடியிலே எல்லா நாடியும் அடங்கிடும்.

யோகிகள்...சுழுமுனை நாடி சஹஸ்ராரத்திலே முடியறதுன்னு சொல்றா. அது முழுமையில்லே.

அது ஹிருதயத்துக்கு வரணும்.

ஹிருதயந்தான் முதலும் முடிவும்.

(58) *அரங்கநாதன் ஐ.சி.எஸ். வேலூர் கலெக்டர் கேட்டார்.*

**கே: பகவத் கீதையிலே 'ஸ்வதர்மமே சிறந்தது. பரதர்மம் துக்கம்'ன்னு சொல்லப்படுதே, ஸ்வதர்மத்தோட முக்யத் துவம் என்ன?**

ப: ஆத்மாவை நல்லா பிடிச்சுக்கணும்.

அதைவிட்டு விலகக்கூடாது, இதுதான் ஸ்வதர்மத்தோட முக்கியத்துவம்.

ஸ்வதர்மம்ன்னா சொந்த தர்மம். அது எது? ஆத்மாதான்.

பரதர்மம்ன்னா மத்தது. அது எது? அனாத்மாதான்.

ஆத்மாவிலே இருக்கறதுதான் ஆத்ம தர்மம். அங்கேயிருந்தா எந்த துக்கமும் இல்லை. பயமும் இல்லை.

அன்னியம் தோணறதுதான் துக்கம், பயம் எல்லாம். அன்னியமில்லாத ஏகமான ஆத்மாவிலே இரண்டு கிடையாது. அதனாலே பயமும் இல்லை.

நாம என்ன பண்றோம்... ஆத்மாவை அனாத்மாவோடு போட்டுக் குழப்பிக்கறோம். அதுதான் துக்கம்.

ஆத்மாவை நல்லா தெரிஞ்சு, அதிலேயே இருந்தா.... எந்தத் துக்கமும் இல்லை. எந்தப் பயமும் இல்லை.

வர்ணாசிரம தர்மமா எடுத்துக்கொண்டா.... அவரவருக்கு என்ன வேலை வாய்ச்சிருக்கோ அதைப் பலன் கருதாம செய்யணும்.

நாம வேலைகளை செய்யலேன்னு உணரணும்.

நாம ஈசனோட ஆள்னு எந்த வேலையையும் செய்யணும்.

ஈசனிஷ்டம் எப்படி இயக்கறதோ... அப்படியே இயங்கறேன்னு இயங்கணும்.

கார்யம் நம்மது இல்லே; பலனும் நமக்குக் கிடையாது.

இப்படி இருந்தா ஒரு துக்கமும் இல்லை.

**கே: 'எல்லா தர்மங்களையும் துறந்து, நீ என்னையே சரணடை'ன்னு பகவத்கீதையிலே சொல்லப்படுதே, அதுக்கு என்ன பொருள்?**

ப: எல்லாம்ன்னா அனாத்மா.

அதை விட்டுட்டு ஏகத்தையே சரணடைன்னு சொல்றது.

ஏகத்தை மட்டும் பிடிச்சுக்கொண்டா... எங்கேயிருக்கப் போறது தர்மம்!

அதுக்கு என்ன அர்த்தம்ன்னா... ஆத்ம நிஷ்டனாயிருன்னு அர்த்தம்.

**கே: கீதையோட தாத்பர்யம் கர்மம்தானே, ஆத்ம நிஷ்டையில்லையே!**

ப: கீதை என்ன சொல்றது... அர்ஜுனன் சண்டை போட மாட்டேன்னான்.

கிருஷ்ணர் சொன்னார். 'நீ மாட்டேன்னு சொல்ற வரைக்கும், உனக்கு நாமதான் செய்றோம்கற நினைப்பு இருக்கு.

இன்னதைச் செய்வேன், இன்னதைச் செய்யமாட்டேன்னு சொல்ல நீ யாரு?

ஒரு மஹாசக்திதானே இயக்கறது எல்லாத்தையும்!

நீ செய்ய மாட்டேன்னு சொல்றதிலே இருந்தே நீ எதுக்கோ அடங்கமாட்டேன்றேன்னு கண்டுபிடிச்சுடலாம்.

அதுக்குப் பதிலா அந்த சக்தியை உணர்ந்து அதோட கருவிதான் நாமன்னு அடங்கியிரு!

அடங்கலேன்னா.... வலுக்கட்டாயமா செய்ய வைக்கும்.

வேண்டாவெறுப்பா, செய்ய வேண்டியதை செய்வே.

வேண்டாவெறுப்பா வேலை பாக்கறதுக்கு பதிலா சம்மதிச்சு சந்தோஷமா வேலையைப் பாரு. நாம யாருன்னு தெரிஞ்சுகொண்டு.... நமக்கு என்ன வேலை விதிச்சிருக்கோ.... அதை நான்தான் செய்றேன்கற எண்ணம் இல்லாமே செய்யணும்.

அப்படி செஞ்சா கர்மபலன் பாதிக்காது.

அதுதான் பேராண்மை, தீரத்தனம், ஆத்மாவிலே நிலை பெறுவது எல்லாம்.

இப்படி ஆத்மாவிலே நிலைபெறுவதுதான் பகவத்கீதையோட தாத்பர்யமும், நோக்கமும்,

ஒருத்தன் ஆத்மாவிலே நிலைபெற்றுட்டா எந்தச் சந்தேகமும் வராது.

எல்லாச் சந்தேகமும் ஆத்மாவிலே நிலைபெறுகிற வரைக்கும்தான்.

**கே: அப்புறம் எதுக்கு நீங்க சந்தேகங்களுக்கெல்லாம் பதில் சொல்லணும்!**

ப: வார்த்தைக்கு ஒரு சக்தியிருக்கு.

அது வேலை பாக்கும்.



(59) *ஒரு முஸ்லிம் மௌல்வி கேட்டார்.*

**கே: தூக்கம் எப்படி வருது?**

ப: விழித்துக்கொண்டு இருக்கும்போது, யார் விழித்து இருக்கான்னு தெரிஞ்சா, எப்படித் தூக்கம் வர்றதுன்னு தெரியும்.

விழித்துக் கொண்டிருக்கறவன்தான் இந்தக் கேள்வியைக் கேக்கறான்.

தூக்கத்திலே இருக்கறவன் இல்லை.

தூக்கத்திலே இருக்கறவனைத் தெரிஞ்சிக்கறதைவிட இப்போ இருக்கறவனைத் தெரிஞ்சுக்கறது சுலபம்.

(60) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: மௌனம்னா என்ன?**

ப: தனிமையிலே மௌனமாயிருக்கறது வலுக்கட்டாயம். அதாவது காஷ்டமௌனம்.

சமூகத்திலே தேவைக்கு மட்டும் பேசினா... அதுவும் மௌனந்தான்.

மௌனவிரதம் இருக்கேன்னு ஒருத்தன் கிளம்பித்தான் மௌனவிரதம் இருக்க முடியும்.

பேசறவன்னு ஒருத்தன் கிளம்பித்தான் பேச்சு வர முடியும்.

ஏகாக்ரம் வந்தாலும் பேச்சு கட்டுப்படும்.

உண்முகமான மனசு தீவிரமா வேலை பாக்கறதாலே அதுவும் பேசாது.

பேச்சாலே ஏற்படற தொல்லைகளைப் போக்கறதுக்கு மௌனம் ஒரு கட்டுப்பாட்டு சாதனம்.

மனம் இயல்பாகவே அடங்கிடுத்துன்னா... காஷ்ட மௌனம் தேவையில்லை.

மௌனம் இயல்பாகவேயிருக்கும்.

வித்யாரண்யர் சொல்றார்... பன்னிரெண்டு வருஷம் காஷ்டமௌனத்திலே இருந்தா பரமௌனம் ஏற்படும்ன்னு.

இதைக்கேட்டுட்டு யாரும் செய்யப்போறோம்னு கிளம்பிடாதேள்! ஊமையாயிடுவோம்! மிருகங்கள் பேசலே. இதெல்லாம் மௌனமா!

மௌனங்கறது இடைவிடாத பேச்சு.

சும்மாயிருக்கறதுங்கறது இடைவிடாத வேலை.

(61-62) *ஏகநாதராவ் கேட்டார்.*

**கே: தியானம் எப்படிப் பண்ணணும்? கண்ணைத்திறந்தா மூடியா?**

ப: எப்படி வேணாலும் பண்ணலாம்.

விஷயம் மனசு உண்முகமா இருக்கணும்.

லயப்படாம தீவிர விசாரத்துவமாயிருக்கணும்.

சில சமயம் கண்ணை மூடினா... மறைஞ்சுருக்கறது எல்லாம் ரொம்ப வேகமா வெளியே வரும்.

சில சமயம் கண்ணைத் திறந்தே தியானம் பண்றது ரொம்ப சிரமமா இருக்கும்.

அதுக்கு மனோபலம் நிறைய வேணும்.

விஷயங்களைப் பாத்த உடனேயே மனசு கெட்டுடும். இல்லேன்னா... அது சுத்த சத்வமாத்தான் இருக்கும்.

தியானத்திலே முக்கியமே மனம் வெளிவிஷயங்களாலே பாதிக்கப்படாமலும் வேறு சிந்தனையிலே ஓடாமலும் விசாரத்திலே தீவிரமாயிருக்கறதுதான்.

**கே: ஸ்புரணம்னா என்ன?**

ப: ஸ்புரணம் நிறைய சந்தர்ப்பங்கள்லே உணரப்படுவது. திடீர் பய உணர்ச்சி, அதிக சந்தோஷம் ஆகிய காலங்கள்லே உணரப்படறது.

ஸ்புரணம் எப்பவும் உடம்பு முழுதும் இருந்தாலும், குறிப்பிட்ட இடத்திலே, குறிப்பிட்ட அனுபவங்களாலே உணரலாம்.

ஸ்புரணம்தான் அகிலத்துக்கும் காரணமாயிருந்தாலும், உடம்பளவாத்தான் உணரப்படறது.

மனம் ஸ்புரணத்திலே நிலைத்து... அதை இதை விடாமலும் முயற்சியில்லாமலும், அனுபவிச்சா அதுக்குப் பெயர்தான் ஞானம்.

அகம்ஸ்புரணம் ஞானத்தைக் கட்டியங்கூறும்.

கலப்பில்லாத தூய அனுபவம் அது. இதிலே இருந்துதான் காண்பான் காட்சி தோற்றம் அனுபவமாறது.

எல்லோரும், நம்மை நாமே, காண்பானாய் மயங்கி, காட்சியைக் கண்டு, இந்த அனுபவத்தை விட்டுடுவோம்.

மனசு அப்பப்போ இந்த உலகத்தையும் உடம்பையும் படமா போட்டு எடுக்கும். இப்போ......யாரோ ஒருத்தன் தன்னையே ஸ்கிரீனாகவும் தன் மேலேயேதான் உடலுலகப்படம் ஓடறதுன்னும் தெரிஞ்சுகொண்டா... அவனுக்கு எந்தக் குழப்பமும் இருக்காது.

அதோட தோற்றத்தையும் மறைவையும் தன்னோட சம்பந்தப்படுத்தாமே பாத்துக்கொண்டு இருப்பான்.

இதுவும் ஸ்புரணம்தான்.



(63) ஒரு *உயர் அதிகாரி* கேட்டார்.

**கே: நம்மள விட தகுதி குறைவானவங்களை உயர் பதவிக்கு உயர்த்துறப்ப மனசு ரொம்ப காயப்படுது. நான் யார்?ங்கற விசாரம் மனசை சாந்தப்படுத்த உதவுமா?**

ப: ஆத்ம விசாரம் சர்வ துக்க நிவாரணி.
விசாரம் ஆத்மிகத்துக்கும், லௌகீகத்துக்குந்தான்.
மனம் உண்முகமாகி அமைதிப்படும்.

**கே: நான் மூர்த்தி தியானம் பண்ணறேன். இது ஞானத்துலே கொண்டு சேர்க்குமா?**

ப: கண்டிப்பா சேர்க்கும்.

உபாசனை ஏகாக்கிரத்திலே சேர்க்கும். மனசு வேற சிந்தனை இல்லாமே உபாசனா வடிவமாயிடும். எதை உபாசனை பண்றோமோ அதாவே ஆயிடுவோம். மனசு சுத்தமாயிடும்.

இப்போ யாரு மிஞ்சறதுன்னு பாத்தா... நான்கறதாத்தான் முடியும்.

ஆத்மாவை அறிஞ்சதாத்தான் முடியும்.

இப்போதைக்கு என்ன குழப்பம்ன்னா... மனுஷன் அவன்தான் எல்லாத்தையும் செய்யறதா நினைக்கறான்.

அது தப்பு. நமக்கு மேலான சக்தி ஒண்ணுதான் எல்லாத்தையும் நடத்தறது.

நாம ஒரு கருவிதான்.

இதை ஏத்துக்கொண்டா எந்தத் தொல்லையும் இல்லை. இல்லேன்னா தொல்லைதான்.

கோபுரம் தாங்கற பொம்மை கதைதான்.

கோபுரத்திலேயே கோபுரத்தைத் தாங்கற மாதிரி ஒரு பொம்மையிருக்கும். அதுதான் கோபுரத்தைத் தோள்லே தாங்கற மாதிரி செஞ்சிருப்பா. உண்மை என்ன? கோபுரம் பூமியிலே நிக்கறது. அந்தப் பொம்மையும் கோபுரத்திலே சேந்ததுதான். ஆனா அதான் தாங்கற மாதிரி செஞ்சிருக்கா. கேலியாயிருக்கில்லையா...

அந்த மாதிரிதான்... ஒருத்தன், நான்தான் எல்லாத்தையும் செய்றேன்'னு நினைக்கறது.

**கே: 'சாதகத்திலே துவிதம் சாத்தியத்திலே அத்துவிதம்' அப்படின்னா என்ன?**

ப: சிலர் சாதனையை துவிதபாவத்தோடதான் ஆரம்பிக்கணும்னு நினைக்கறா.

அது அவாளைக் குறிக்கறது.

அவா என்ன சொல்றான்னா... கடவுள்ன்னு ஒருத்தர் இருக்கார். முதல்லே அவரை சேவிக்கணும். தியானம் பண்ணணும். கடைசியிலே ஜீவன் இறைவன்கிட்டே சேந்துடுவான்.

இன்னும் சிலர் பரமாத்மாவும், ஜீவாத்மாவும் தனித்தனிதான் சேரவே முடியாதுங்கறா.

என்னவோ எல்லாம் கடைசியிலேதானே!

அதைப்பத்தி இப்போவே சண்டை போட வேண்டாம்.

எல்லோரும் ஜீவன்னு ஒண்ணு இருக்கறதிலே சமமா ஒத்துக்கறாளே! முதல்லே இந்த ஜீவன் யாருன்னு தெரிஞ்சிக்கட்டும்!

அப்புறம் பாக்கலாம்!

பரமாத்மாவும், ஜீவாத்மாவும் ஒண்ணுதானா?

பரமாத்மாவிலே கரைஞ்சு அதிலே ஒரு பகுதியா ஜீவாத்மா இருக்கா, இல்லே... வேற வேறையா இருக்கான்னு, இப்போவே முடிவைப் பத்தி சச்சரவு தேவையில்லை.

பொதுப்படையா நமக்குள்ளே ஆழ்ந்து நாம யார்ன்னு தெரிஞ்சுக்கணும்.

உண்மை நல்லா பிடிபடட்டும்.

அதுக்கு முன்னாடி.... உண்மை இன்ன மாதிரிதான்னு சொல்றது அர்த்தம் இல்லை.

புத்திபூர்வமானது. புத்திக்கு வெளிச்சமே ஆத்மாவில் இருந்துதான் வர்றது.

அந்த புத்தி எப்படி தன் மூலத்தை எடை போட முடியும்?

புத்தியாலே ஆத்மாவை அடைய முடியாதுங்கறப்போ.... அது எப்படி ஆத்மாவோட தன்மையை எடை போடும்?

**கே: ஆரம்பத்தில ஆர்வத்தோடு படிக்கப்படும் சாஸ்திரங்கள் முடிவில உபயோகப்படுவது இல்லை. எந்த நிலையில அது உபயோகப்படாது?**

ப: சாரத்தை உணர்ந்துட்டா உபயோகப்படாது.

சாஸ்திரங்களோட உபயோகம் நமக்கு மேல ஒரு சக்தியிருக்குன்னு உணர்த்தறதும், அதுக்குப் போய் சேரணும்ங்கற சிரத்தையை தர்றதும்தான்.

அதை கிரஹிச்சுக்கொண்டா மத்தது வீண். பல பக்குவத்திலே இருக்கறவாளுக்காக பலவிதமா சொல்லி இருக்கு. லக்ஷியத்தை

அடையறவரைக்கும் ஒரு படிக்கு ஒரு படி பூர்வ பட்சமாயிடும். அடைஞ்சாயிடுத்துன்னா......லக்ஷியம் மட்டும்தான் மிஞ்சும். மத்தது எல்லாம் உபயோகமில்லாததாயிடும்.

சாஸ்திர சமாச்சாரமும் அப்படித்தான். நிறைய படிக்கறோம். படிக்கறது எல்லாம் ஞாபகம் இருக்கா? ஆனா சாரம் மனசுலே தங்கிடறதில்லையா! சக்கை போயிடறது!

நம்மள ஒரு உடலளவாக் கருதறதாலே ஏற்படறதுதான் எல்லாப் பிரச்னையும். அதுதான் தப்பெண்ணம்.

நாமளே அதைத் தெரிஞ்சுக்கலாம். தூங்கும்போது உடம்பு உலகம் எதுவும் இல்லை... சுகமாயிருக்கு. அந்த சுகநிலையிலேயிருந்து ஏதோ ஒண்ணு கிளம்பி 'நான்' ன்னு சொல்றது.

அந்த 'நான்'கறதுக்குத்தான் உலகம் அனுபவமாறது.

அந்த 'நான்'கற அகந்தை எழறதுக்கு முன்னாடியிருந்த ஆனந்தம் எங்கே...! இப்போ இருக்கற துன்பம் எங்கே...!

இந்த 'நான்' எங்கிருந்து எழறதுன்னு பாத்து... அந்த மூலத்தை உணர்ந்தா... எந்தத் துயரமுமில்லை. அதுதான் தூங்காமத் தூங்கறது.

ஆத்மா எப்பவும் மாறாம இருக்கு. இங்கேயே... இப்போவே... இருக்கு.

புதுசா எதையும் அடைய வேண்டியது இல்லை.

இல்லாத தடை எல்லாம் கற்பனை பண்ணிக்கொண்டு... அதைத் தாண்டறதுக்கு முயற்சியும் பண்றோம்.

பத்து முட்டாள் ஆற்றைக் கடந்த கதைதான். பத்து முட்டாள்கள் ஒண்ணு சேர்ந்து ஆற்றைக் கடந்தாளாம். ஆற்றைத் தாண்டின உடனேயே எண்ணிப்பாத்துருக்கா. ஒன்பது பேர்தான் இருந்திருக்கா. நீ சரியா எண்ண மாட்டேங்கறே....நான் எண்றேன்னு இப்படியே மாத்திமாத்தி எல்லாரும் எண்ணியும் ஒம்பது பேர்தான் இருந்தா. அப்போ அவாளோட துக்கத்தைப் பாத்துட்டு, வழிப்போக்கர் ஒருத்தர், எல்லோரையும் வரிசையா நிக்கச் சொல்லி, எண்ணி, பத்துபேர் இருக்கேள்ன்னு

கண்டுபிடிச்சுக் கொடுத்தாராம். பத்தாவது ஆள் தொலையவே இல்லை. புதுசா அடையப்படவும் இல்லை. அவன் எப்பவுமே அங்கேயேதான் இருந்தான். ஆனா... அறியாமையாலே தொலைஞ்சதா பதறித் தேடினா.

ஒரு பெண்மணி, கழுத்திலே இருந்த நகையை எங்கே வச்சேன்... எங்கே வச்சேன்...ன்னு தேடித்தேடி விசாரிச்சுகிட்டே இருந்தாளாம். அப்போ அவளோட சிநேகிதி, 'உன் நகை கழுத்திலேதான் இருக்கு'ன்னு காட்டிக்கொடுத்தா. நகைக்காரியும் கையிலே தொட்டுப்பாத்து, ரொம்ப சந்தோஷமாயிட்டா. உண்மையிலேயே அவள் நகையைப் புதுசா அடைஞ்சாளா? அஞ்ஞானத்தாலே துக்கப்பட்டா! இருக்குங்கற ஞானத்தாலே சந்தோஷமாயிட்டா!

அது மாதிரிதான் நாமளும், ஆத்மாவும்.

நாம புதுசா எதையும் தெரிஞ்சுக்கப் போறதும் இல்லை, அடையப் போறதும் இல்லை.

ஆத்மான்னா என்னன்னு தெரியலே. நாம யாருன்னு தெரியலே. அதுதான் துக்கம். எல்லா துக்கத்துக்கும் மூலம்.

நாம யாருன்னு தெரியறதுதான் துக்க நிவிருத்தி.

ஆத்மானுபவம் புதுசா வந்ததுன்னா...அது ஏற்கனவே இல்லைன்னுதான் அர்த்தம். இல்லாமப் போகும். மோட்சமும் நிரந்தரமாயிருக்காது.

ஆனா மோட்சம் நிரந்தரமானது. ஏன்னா... அது இங்கேயே... இப்போவே....இருக்கு. எப்பவும் இருக்கு.

அது இங்கேயே... இப்போவே... இருந்தாலும், அஞ்ஞானம் நீங்கும்போதுதான் ஞானம் ஏற்படறதாத் தெரியறது. அவ்வளவுதான்.



(64) ***யாரோ ஒருத்தரோட மரணம் சந்நிதியில் வந்து சொல்லப் பட்டது.***

**ப:** இறந்தவா உண்மையிலே நிம்மதியா இருக்கா.

உடம்புங்கற தொல்லை போச்சு.

இறந்தவன் துக்கப்படறதில்லே. உயிரோடு இருக்கறவா தான் துக்கப்படறா.

யாராவது தூங்கறதுக்கு பயப்படறோமா! எல்லோரும் விரும்பறோம்.

சுகமா தூங்கினேன்னு விழிச்சவுடனே சொல்றோம். படுக்கையை அவ்வளவு பாந்தமா தயார் பண்றோம்.

தூக்கம் சின்ன மரணம்! மரணம் பெரிய தூக்கம்!

உயிரோடு இருக்கறப்போவே நாம செத்துடணும்.

அப்படிச் செத்தா... வேற யாரோட சாவுக்கும் வருத்தப்படத் தேவையிருக்காது.

உடம்பு இருந்தாலும், இல்லேன்னாலும் நாம ஒரு குறையும் இல்லாம சுகமா இருக்கோம். இது நம்மளோட தினப்படி விழிப்பு, கனவு, தூக்கம்ங்கற மூணு நிலையிலேயிருந்தே தெரியறது.

அப்புறம் என்னத்துக்கு இந்த உடம்புங்கற தொல்லையை ரொம்ப நாள் வஹிக்கணும்?

நாம யார்ன்னு தெரிஞ்சு, இப்போவே செத்துட்டா... எப்பவும் சாகாம ஆனந்தமாயிருக்கலாம்.



(65) **தரிசனம் பண்ண வந்தவர் கேட்டார்.**

**கே: உலகம் ஞானமடைஞ்ச பிறகும் உணரப்படுமா?**

ப: யாருக்கு இந்தக் கேள்வி?
ஞானிக்கா?
அஞ்ஞானிக்கா?

**கே: அஞ்ஞானிக்குத்தான்.**

ப: யாருக்கு இந்தக் கேள்வி ஏற்படறதுன்னு பாருங்கோ!

சந்தேகிக்கறவன் யார்ன்னு தெரிஞ்ச பிறகு இதுக்குப் பதில் சொல்லலாம்.

உலகமோ உடம்போ உன்கிட்டே வந்து சொல்லித்தா 'நான் இருக்கேன்னு', இல்லே... பாக்கற நீ சொல்றியா?

எதைப் பாக்கணும்னாலும்... பாக்கறவன் ஒருத்தன் இருக்கணும். அந்தப் பாக்கறவன் யாருன்னு முதல்லே தெரிஞ்சுக்கோ!

இப்பவே எதுக்கு கடைசியப் பத்திக் குழப்பிக்கறே!

சரி, உலகம் உணரப்பட்டா என்ன? உலகம் உணரப் படாட்டாதான் என்ன?

இப்போ நீ உலகத்தப் பாக்கறே... அதனாலே ஏதாவது குறைஞ்சிடுத்தா? இல்லே... தூக்கத்திலே உலகத்தைப் பாக்கலே... அதனாலே ஏதாவது கூடிடுத்தா? உலகம் தெரிஞ்சா என்ன? தெரியலேனா என்ன? அதுக்கும் ஞானத்துக்கும் சம்பந்தம் இல்லே.

ஒரு அஞ்ஞானி, ஞானியையும் தன்னை மாதிரியே உலக காரியங்கள்லே ஈடுபடறதைப் பாக்கறதாலே, இந்தக் குழப்பம் வர்றது.

ஞானி, அஞ்ஞானி இரண்டு பேருக்கும் உலகம் தெரியும். ஆனா பார்வை மாறுபடும்.

சினிமாக் காட்சியை எடுத்துக்கோ... படம் ஸ்கிரீன்லே தெரியறது, பாடறது, ஆடறது, சிரிக்கறது, பேசறது. போய் தொட்டுப் பாத்தா ஸ்கிரீன்தான் இருக்கும். அதைத்தான் தொடுவோம். யாரையும் தொடமுடியாது. இப்போ படம் மறைஞ்சிடுத்து. இப்போ என்ன இருக்கு. மறுபடியும் ஸ்கிரீன்தான் இருக்கும். அப்படித்தான் இங்கேயும்.

உலகம் தெரியறப்போ யாருக்கு இதெல்லாம் தெரியறதுன்னு பார்!

நமக்குத்தான்.

அந்த நான்கறதை பிடிச்சுக்கொண்டா உலகம் தெரிஞ்சா என்ன? மறைஞ்சா என்ன?

அஞ்ஞானி உலகத்தை உண்மையா பாக்கறான். ஞானிக்கு தன் உண்மைதான் இப்படி தோற்றமாறதுன்னு தெரியும்.

தன் உண்மைத் தோற்றமானாலும், தோற்றமாகாமே இருந்தாலும், அவனுக்கு ஒண்ணுதான் அனுபவம்.

(66) ரொம்ப பாண்டித்தியமான கேள்விகள் நிரம்பிய ஒரு கடிதம் பகவானிடம் காண்பிக்கப்பட்டது. நினைவு, தூக்கம், மரணம் இவற்றை பற்றியிருந்தது. யாருக்கும் சரியா புரியலை. பகவான் அதை எளிமையா கையாண்டார்.

ப: இந்தக் குழப்பம் எல்லாம் எது உண்மையான 'நான்',...எது வேஷம் போடற 'நான்'...ன்னு சரியா தெரியாததாலேதான்.

குணங்களும் விசேஷங்களும் எப்பவுமே போலி நான்கறதுக்குத்தான். உண்மைக்கு இல்லே. நம்மளோட முயற்சி எல்லாம் அஞ்ஞான நீக்கத்துக்குத்தான். நீங்கிடுத்துன்னா... உண்மை 'நான்' எப்பவுமே இருந்ததேன்னு தெரியும்.

அப்போ... ஆத்மாவாயிருக்கறதுக்கு எந்த முயற்சியும் தேவைப்படாது. முடியாது.

(67) கே.எஸ் நாராயண ஐயர், இரயில்வே ஆபிஸர் கேட்டார்.

**கே: நான் விசாரத்துலே ஒரு மாதிரியான இடத்துக்கு வந்து நின்னுடறேன். நான் யார்ன்னு விசாரிச்சா எனக்கு இப்படித்தான் தோண்றது. நான் என் கையைப்பாக்கறேன். யார் பாக்கறா? என் கண். என் கண்ணை எப்படிப் பாக்கறது? கண்ணாடியிலே. அதே மாதிரி என்னைப் பாக்க ஒரு கண்ணாடி வேணும். யாராவது எனக்கு அப்படி ஒரு கண்ணாடி தரணும். தந்தாத்தான் பாக்க முடியும். இல்லேன்னா முடியாது. சரியா?**

ப: முடியாதுன்னுட்டேளே!

அப்புறம் ஏன் திரும்பி நான் யார்ன்னு கேக்கறேள்!

ஏதோ குழப்பமான இடத்திலே வந்து நிக்கறேன், அது இதுன்னு சொல்றேள், பேசாம அப்படியே சும்மாயிருக்க வேண்டியதுதானே...!

உலகமோ உடம்போ உன்கிட்டே வந்து சொல்லித்தா 'நான் இருக்கேன்னு', இல்லே... பாக்கற நீ சொல்றியா?

எதைப் பாக்கணும்னாலும்... பாக்கறவன் ஒருத்தன் இருக்கணும். அந்தப் பாக்கறவன் யாருன்னு முதல்லே தெரிஞ்சுக்கோ!

இப்பவே எதுக்கு கடைசியப் பத்திக் குழப்பிக்கறே!

சரி, உலகம் உணரப்பட்டா என்ன? உலகம் உணரப் படாட்டாதான் என்ன?

இப்போ நீ உலகத்தப் பாக்கறே... அதனாலே ஏதாவது குறைஞ்சிடுத்தா? இல்லே... தூக்கத்திலே உலகத்தைப் பாக்கலே... அதனாலே ஏதாவது கூடிடுத்தா? உலகம் தெரிஞ்சா என்ன? தெரியலேனா என்ன? அதுக்கும் ஞானத்துக்கும் சம்பந்தம் இல்லே.

ஒரு அஞ்ஞானி, ஞானியையும் தன்னை மாதிரியே உலக காரியங்கள்லே ஈடுபடறதைப் பாக்கறதாலே, இந்தக் குழப்பம் வர்றது.

ஞானி, அஞ்ஞானி இரண்டு பேருக்கும் உலகம் தெரியும். ஆனா பார்வை மாறுபடும்.

சினிமாக் காட்சியை எடுத்துக்கோ... படம் ஸ்கிரீன்லே தெரியறது, பாடறது, ஆடறது, சிரிக்கறது, பேசறது. போய் தொட்டுப் பாத்தா ஸ்கிரீன்தான் இருக்கும். அதைத்தான் தொடுவோம். யாரையும் தொடமுடியாது. இப்போ படம் மறைஞ்சிடுத்து. இப்போ என்ன இருக்கு. மறுபடியும் ஸ்கிரீன்தான் இருக்கும். அப்படித்தான் இங்கேயும்.

உலகம் தெரியறப்போ யாருக்கு இதெல்லாம் தெரியறதுன்னு பார்!

நமக்குத்தான்.

அந்த நான்கறதை பிடிச்சுக்கொண்டா உலகம் தெரிஞ்சா என்ன? மறைஞ்சா என்ன?

அஞ்ஞானி உலகத்தை உண்மையா பாக்கறான். ஞானிக்கு தன் உண்மைதான் இப்படி தோற்றமாறதுன்னு தெரியும்.

தன் உண்மைத் தோற்றமானாலும், தோற்றமாகாமே இருந்தாலும், அவனுக்கு ஒண்ணுதான் அனுபவம்.

(66) **ரொம்ப பாண்டித்தியமான கேள்விகள் நிரம்பிய ஒரு கடிதம் பகவானிடம் காண்பிக்கப்பட்டது. நினைவு, தூக்கம், மரணம் இவற்றை பற்றியிருந்தது. யாருக்கும் சரியா புரியலை. பகவான் அதை எளிமையா கையாண்டார்.**

ப: இந்தக் குழப்பம் எல்லாம் எது உண்மையான 'நான்',...எது வேஷம் போடற 'நான்'...ன்னு சரியா தெரியாததாலேதான்.

குணங்களும் விசேஷங்களும் எப்பவுமே போலி நான்கறதுக்குத்தான். உண்மைக்கு இல்லே. நம்மளோட முயற்சி எல்லாம் அஞ்ஞான நீக்கத்துக்குத்தான். நீங்கிடுத்துன்னா... உண்மை 'நான்' எப்பவுமே இருந்ததேன்னு தெரியும்.

அப்போ... ஆத்மாவாயிருக்கறதுக்கு எந்த முயற்சியும் தேவைப்படாது. முடியாது.

(67) **கே.எஸ் நாராயண ஐயர், இரயில்வே ஆபிஸர் கேட்டார்.**

**கே: நான் விசாரத்துலே ஒரு மாதிரியான இடத்துக்கு வந்து நின்னுடறேன். நான் யார்ன்னு விசாரிச்சா எனக்கு இப்படித்தான் தோண்றது. நான் என் கையைப்பாக்கறேன். யார் பாக்கறா? என் கண். என் கண்ணை எப்படிப் பாக்கறது? கண்ணாடியிலே. அதே மாதிரி என்னைப் பாக்க ஒரு கண்ணாடி வேணும். யாராவது எனக்கு அப்படி ஒரு கண்ணாடி தரணும். தந்தாத்தான் பாக்க முடியும். இல்லேன்னா முடியாது. சரியா?**

ப: முடியாதுன்னுட்டேளே!

அப்புறம் ஏன் திரும்பி நான் யார்ன்னு கேக்கறேள்!

ஏதோ குழப்பமான இடத்திலே வந்து நிக்கறேன், அது இதுன்னு சொல்றேள், பேசாம அப்படியே சும்மாயிருக்க வேண்டியதுதானே...!

முடியலேங்கற இடத்திலே இருந்து ஏன் திரும்பி வர்றேள்?

**கே: விசாரத்தாலே ஏகாக்கிரம் ஏற்படறது. அதுதான் ஒரே பலனா?**

ப: வேறென்ன வேணும்?
ஏகாக்கிரம்தான் உள்ள பொருள்.
அதிலே இருந்து எது உன்னை வெளியே தள்றது?

**கே: தெரியலே. வெளியே வந்துடறேன்.**

ப: நான் யார்? விசாரம்ன்னா... நான்கறது எங்கேயிருந்து கிளம்பறதுன்னு பாக்கணும்.

அதைக் கண்டுபிடிச்சா...நீ தேடறது கிடைச்சுடுத்துன்னு அர்த்தம்.



(68) *டாக்டர் இராதா கமல்முகர்ஜி, பிரபல சரித்திரப் பேராசிரியர் கேட்டார்.*

**கே: உபநிஷத் காலத்து தியானம் எல்லாம் மறைஞ்சு போச்சு. அதை எனக்கு ஒருத்தர் சொல்லிக்கொடுத்தார். அதுல சில அனுபவங்கள் உண்டு. சில சமயம் எனக்கு 'பூமா' அளவற்றது; 'நான்'கறது அளவுக்கு உட்பட்டதுன்னு புரியுது. இதுசரியா?**

ப: இங்கே பூமா மட்டும்தான் இருக்கு.
அதை எந்த அளவுகளாலேயும் அளக்க முடியாது.
அதிலே இருந்துதான் உபாதி வழியே அகந்தை வர்றது.
இந்த அகந்தை ஆபாசப் பிரகாசந்தான்.
இந்த உடலளவாயிருக்கற உணர்வை, பூமாவிலே கரைச்சிடணும். அதுதான் செய்ய வேண்டியது.

**கே: 'பூமா' ங்கறது பிரம்மத்தோட விசேஷமா?**

ப: பூமாதான் பிரம்மம்.

"எந்நிலையில் எதிரிட்டுக் காண்பதற்கு எதுவும் இல்லையோ; காண்பவனும் இல்லையோ; எதிரிட்டுக் கேட்பதற்கு எதுவும் இல்லையோ; கேட்பவனும் இல்லையோ; எதிரிட்டு அறிவதற்கு ஒண்றும் இல்லையோ; அறிபவனும் இல்லையோ; அந்நிலையே மாட்சிமை பொருந்திய பூமா காண்"

அதை யாரும் விளக்க முடியாது.

வரையறுக்க முடியாது.

அது உள்ளபடியே இருக்கு.

**கே: எனக்குப் பரந்து விரிஞ்ச தன்மை ஏற்படுகிறது. அது பூமாவுக்கு கொஞ்சம் கீழ்நிலையா, இல்லே... பூமாவுக்கு ரொம்பப் பக்கத்துலேயா?**

ப: பூமா மட்டும்தான் இருக்கு.

வேற எதுவும் இல்லே.

இதெல்லாம் மனச்சேஷ்டை.

**கே: தியானத்துக்கும், மனசு குழப்பமா அதையும் இதையும் சிந்திச்சுக்கொண்டு இருக்கறதுக்கும் என்ன வித்தியாசம்?**

ப: ஒரு வித்தியாசமும் இல்லை.

நினைப்பு வந்தும் போயுமா இருந்தா, அதைக் குழப்பம்ன்னு சொல்றோம்.

நினைப்பு வரலேன்னா... அதைத் தியானம்னு சொல்றோம்.

தியானங்கறதும் பயிற்சி நிலைதான்.

நினைப்பு வந்தாலும், போனாலும், வரலேன்னாலும் ஒரே மாதிரியா இருக்கறதுதான் முடிந்தநிலை. ஆரூடன் நிலை.

**கே: தியானம் எப்படிப் பண்றது?**

ப: நினைப்பு இல்லாம இருக்கணும்.

**கே: வேலையையும் செய்துகொண்டு தியானத்தையும் செய்ய முடியலை. வேலையையும் தியானத்தையும் ஒண்ணா செய்ய முடியுமா?**

ப: வேலையை செய்யறது யார்? நாம எப்பவும் ஆத்மாதான். நாம மனசு கிடையாது. மனசுதான் இந்தக் கேள்வி எல்லாம் கேக்கறது.

ஆத்ம சந்நிதியிலே வேலை அது பாட்டுக்கு நடக்கும். ஞானத்துக்கும் வேலைக்கும் சம்பந்தமே இல்லை. 'நான்தான் வேலை செய்றேன்'கற தப்பான எண்ணந்தான் தடை.

பொய்யான நினைப்பு போனாப் போதும்.

**கே: உங்களோட மௌனம் ரொம்ப சக்தி வாய்ந்ததா இருக்கு. அது ஒண்ணே அமைதியைக் கொடுத்துவிடுகிறது.**

ப: மௌனம் இடைவிடாத பேச்சு.

இந்த இடைவிடாத பேச்சை, வாய்ப் பேச்சு குறுக்கிடும்.

மௌனத்திலே எல்லாவற்றிடமும் ஒண்ணா இருப்போம்.

தட்சிணாமூர்த்தி சனகாதி நால்வரோட சந்தேகங்களை மௌனத்தாலேயே போக்கினார்.

"மௌன வியாக்ய பிரகடித தத்துவம்"ங்கறா. அதாவது 'உண்மை...மௌனத்தாலேயே விளக்கப்படற தத்துவம்'ன்னு பொருள்.

மௌனத்தை லெக்சர் (lecture)ன்னே சொல்றா.

வாய்ப் பேச்சுக்கு கருவிகரணங்கள் தேவை. பேசறதுக்கு முன்னாடி கருவிகரணங்கள் தொழில் படணும்.

மௌனமோ நினைப்புக்கெல்லாம் முன்னாடி. உரைகடந்த மௌனம், பேசாத பேச்சு, பராவாக்கு எல்லாம் இதுதான்.

**கே: முக்தி நிலையில அறிவு இருக்குமா?**

ப: அறிவு இல்லைன்னா...அதுக்குப் பேர் தூக்கம்.

அறிவு இருந்தாத்தான்...முக்தி நிலை.

ஆனா...இந்த அறிவு காண்பான் காட்சி தோற்றத்தாலே ஏற்படற அறிவு இல்லை.

இது பூரண அறிவு.

அறிவுக்கு இரண்டு அர்த்தம் இருக்கு

வாச்சியார்த்தம் (Literal Meaning) ⇨ விருத்திஞானம்

லட்சியார்த்தம் (Implied Meaning) ⇨ ஞானம்.

**கே: பிரம்மாகார விருத்தியிலேயே இருக்கணும்னு ஒரே பிரேரேபணையா இருக்கு.**

ப: நல்லது.

சகஜம் சித்திக்கற வரைக்கும் பிரேரேபணையை விட்டுடக் கூடாது.

பிறகு சொரூபமாவே ஆயிடும்.

பொதுவா அகம்விருத்தியையே ('நான்'கற எண்ணம்) எல்லோரும் உணர்வுன்னு நினைச்சுக்கறா.

அது தோற்றந்தான்.

ஆபாஸ பிரகாசத்திலேதான் இயங்கும்.

உண்மையிலேயே அறிவுங்கறது...காண்பான், காட்சி, அறிவு, அறியாமைக்கு ஆதாரமா இருக்கறது.

'எனக்குப் புரியறது'...'எனக்குத் தெரிஞ்சுடுத்து'... 'எனக்குப் புரியலே'.... 'எனக்குத் தெரியலே'......ன்னு சொல்றதுக்கு நாம இருக்கணுமே... அந்த நாம இருக்கோம்ங்கறதுதான் அறிவு.

அது விருத்தி வடிவத்துக்கே வராது. அதிலே காண்பான் காட்சியிருக்காது.

விருத்தி ரஜஸ மனசு. அறிவுதான் சாத்வீக மனசு. சாத்வீகம் ரஜஸத்துக்கு சாட்சி.

அது சந்தேகமே இல்லாம பூரண அறிவுதான்.

ஆனாலும் அதை சாத்வீக மனம்ன்னுதான் சொல்றா. ஏன்னா... அது சாட்சி மாத்ரமா இருக்கறதாலே. அதுக்கு தர்மம் அதுதான்.

இதுதான் ஜீவன் முக்தனுடைய நிலை.

அவனுடைய மனம் நசித்த மனம். 'ம்ருத்த மனம்'ங்கறா. மனம் இறந்து விட்டது அப்படிங்கறா.

ஜீவன் முக்தனுக்கு மனசு இருக்கு. ஆனா இறந்துடுத்துன்னா முரண்பாடா இருக்கில்லையா!

உண்மை புரியாதவாளுக்காக அப்படி சொல்லப்படறது.

மேலும் ஜீவன் முக்தனுடைய மனமேதான் ப்ரம்மம்ன்னு சொல்றா.

அவனை 'பிரம்மவித்' அதாவது பிரம்மத்தை அறிந்தவன்னும் சொல்றா.

ப்ரம்மத்தை யாராலும் அறிய முடியாது. இருந்தாலும் உலக வழக்கிலே அப்படிச் சொல்றா.

ஈஸ்வரனுக்கும்... முக்தர்களுக்கும்... சுத்த மனம் சகஜமாயிருக்கும்.

இல்லைன்னா... முக்தன் உலகத்திலே எப்படி வாழறான்... செயல்படறான்னு கேப்பா.

அதுக்கான பதில்தான் இந்த சுத்தமனசு கதையெல்லாம்.

சுத்த மனசுங்கறது உண்மையிலேயே அறிவுதான்.

காண்பானும் காட்சியும் மறைஞ்சு பூரண அறிவே மிஞ்சறது.

அது சூன்யமில்லை.

அது அஞ்ஞானமும் இல்லை.

அது சொரூபம்தான்.



(72) **கே.எஸ். நாராயண ஐயர், இரயில்வே ஆபிஸர் கேட்டார்.**

**கே: ஜபிப்பது எப்படி?**

**ப:** வாய்விட்டு ஜபிக்கறது, வாய்க்குள்ளேயே உச்சரிக்கறது, மனசையே வாயாக்கி ஜபிக்கறது, அதுதான் தியானம், இப்படி மூணுவிதம் இருக்கு.

ஒண்ணை விட ஒண்ணு உசந்தது.

இதுஎல்லாத்தோடமுடிவு...இடைவிடாமமுயற்சியில்லாமே ஜபம் நடந்துகொண்டே இருக்கறதாயிடும்.

அந்த ஜபகர்த்தாதான் ஆத்மா.

நான் யார்ங்கற விசாரம்தான் மிகச் சிறந்த ஜபம்.



(73) ஏகநாதராவ் கேட்டார்.

கே: சாதனையில ஒரு முன்னேற்றமும் இல்லை. குரு கடாட்சம் எனக்கு இல்லையோன்னு தோன்றது. குருகிட்டேயிருந்து உபசரணையா நாலு வார்த்தை வந்தா ஆத்ம சாதனைக்கு ஒரு ஊக்கமா இருக்கும்.

ப: இதெல்லாம் சேஷ்டை.

குரு அருள் இல்லே... அது இல்லே... இது இல்லேன்னு யாரு கதைவிடறதுன்னு பாருங்கோ!

போலியா ஒரு 'நான்' கிளம்பி இவ்வளவு சேஷ்டை பண்றது.

தூங்கும்போது இந்த நினைப்பெல்லாம் இருக்கா?

எந்தப் பாதிப்பும் இல்லை.

விழிப்பிலே இப்போ யாரோ பாதிக்கப்படறதா தோண்றது. அவன் யார்ன்னு பாருங்கோ! கண்டுபிடிங்கோ!

தியானத்திலே கொஞ்சம் அமைதியும், தெளிவும் கிடைக்கிறதில்லையா... அதுதான் முன்னேற்றத்தோட அறிகுறி.

அந்த அமைதி போகப்போக ஆழமாவும் நீண்டும் இருக்கும். அதே சேர்க்க வேண்டிய இடம் சேர்க்கும்.

பகவத்கீதையிலே இதை குணாதீத நிலைன்னு சொல்றா.

இதுவே முடிவு நிலை.

முதல் மூன்று நிலை

1. அசுத்த ஸத்வம்
2. மிஸ்ர ஸத்வம்
3. சுத்த ஸத்வம்

**அசுத்த ஸத்வம்:-**

இது ரஜஸாலேயும், தமஸாலேயும் நிறைஞ்சு இருக்கும்.

உலகம் உண்மை; நாம உண்மை; அப்படின்னு நம்பி நிறைய காரியம் செஞ்சு அவதிப்படும்.

**மிஸ்ர ஸத்வம்:-**

முதல் நிலைக்குள்ளே அப்பப்போ ஸத்வம் தலைப்படறது.

அதாவது உலகம் உண்மையில்லே; நாம உண்மையில்லே; உண்மையிலேயே நாம யார்? இப்படிங்கற சமாச்சாரமெல்லாம் அப்பப்போ காதிலே விழறது.

சுத்த ஸத்வம்:-

ரஜஸத்தையும், தமஸத்தையும் ஸத்வம் காலி பண்ணிடும்.
நாம யார்ன்னு நல்லா தெரிஞ்சு நிலை பெறுவது.
இதெல்லாம் தாண்டி குணாதீத நிலை வரும்.

(76) *கே.எஸ். நாராயண ஐயர் கேட்டார்.*

**கே: மனசை ஈடுபடுத்தாம, எந்த ஒரு கார்யத்தையும் சரியா செய்ய முடியாது. அப்படியிருக்கும்போது... மனசைக் கார்யங்கள்லே ஈடுபடுத்தாம... ஆத்மாவிலேயே வச்சுக்கொண்டிருந்தா எப்படி வேலையெல்லாம் ஒழுங்கா நடக்கும்.**

ப: மனம்ங்கறது ஆத்மாவிலே ஏற்படற ஒரு தோற்றம்.
அதுவும் விழிப்பு நிலையிலே மட்டுந்தான் இருக்கு.
தூங்கும்போது நான் இன்னார்ன்னோ... இன்னது செய்றேன்னோ.... எதுவும் இல்லை.
விழிப்பு வந்த உடனே.... நான் இன்னார்ன்னும் இன்னது செய்றேன்னும் உலகத்தையும் பாக்க ஆரம்பிச்சுடறோம்.
'லோகம்' அப்படின்னாலே பார்க்கப்படுவதுன்னு பொருள்.
உலகத்தை எது பாக்கறது?
எந்தக் கண்?
'நான்'கற அகந்தைதான் பாக்கறது.
அப்புறம் ஒடுங்கிடறது.
ஆனா உலகத்தைப் பாக்கறபோதும் பாக்காதபோதும் நாம இருக்கோம்.
அதாவது தூங்கும்போதும், விழிப்பிலேயும், கனவிலேயும் நாம மாறாம, இடைவிடாம இருக்கோம்...
இந்த உதிச்சு ஒடுங்கற 'நான்'கற தன்மைக்கு ஆதாரமா இருக்கறதுதான் ஆத்மா.
அதாவது மூணு நிலையிலேயும் மாறாம இருக்கற.... நான்கற தன்மை.

தூக்கத்திலே மனம் ஒடுங்கி இருக்கு. நாசமாகலே. ஒடுங்கினது மறுபடியும் உதிச்சுடறது. தியானத்திலேயும் அதே கதைதான்.

நாசமான மனம் உதிக்காது. ஒரு யோகியோட நோக்கம் மனத்தை நாசம் பண்றதா இருக்கணும். லயம் இல்லே. தியானத்திலே ஏற்படற சுகத்திலே மனம் லயப்படும். ஆனா அது போறாது. லயப்பட்ட மனசை வேறு பயிற்சியாலேதான் நாசமாக்க முடியும்.

சிலர் நிறைய நாள் சமாதியிலே இருப்பா... ஆனா சமாதி ஏற்படறதுக்கு முன்னாடி எந்த எண்ணம் கடைசியா இருந்ததோ, அது சமாதி முடியும்போது முதல் எண்ணமா கிளம்பும்.

தூக்கத்திலேயும் இதே கதைதான்.

அப்படிப்பட்ட ஒரு யோகி மனோநாசம் பெற்றவனாக மாட்டான்.

சரி மனோநாசம்னா என்ன?

மனம்னு ஒண்ணு ஆத்மாவுக்கு அன்னியமா இல்லேன்னு நேரே உணர்றதுதான்.

இப்போவே மனம்னு ஒண்ணு கிடையாது.

மனம்னு ஒண்ணு கிடையாதுங்கறதை... தினசரி வேலைகளாலேதான் தெரிஞ்சுக்க முடியும்.

வேலை தானா நடக்கும்.

நான் செஞ்சாத்தான் நடக்கும்னு ஒரு போலி நான் நினைக்கறது.

இந்தப் போலி 'நான்'... எது உண்மையிலேயே எல்லாத்தையும் செய்யறதோ...அதிலே இருந்தே கிளம்பி அதோட விசேஷத்தை எடுத்துக்கறது.

எடுத்துக்காம வச்சுக்கறதுதான்...மனோநாசம்.



(78) **மசுல்லா என்கிற இடத்திலே இருந்து வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: ஆத்மாவை எப்படி உணர்றது?**

ப: எல்லோரும் எந்த நேரமும் ஆத்மானுபவத்திலேயேதான் இருக்கா.

**கே: ஆனா எங்களுக்குத் தெரியலையே?**

ப: தற்போதைய அனுபவத்தை விபரீதம்னு சொல்றா. அதாவது ஒண்ண வேற ஒண்ணாப் பாக்கறது.

**கே: ஆத்மாவை எப்படித் தெரிஞ்சுக்கறது?**

ப: ஆத்மாவை விசாரம் பண்ண முடியாது.

அனாத்மாவைத்தான் விசாரம் பண்ண முடியும். அனாத்மாவைத் தள்ளலாம். அது போதும்.

ஆத்மா தானா துலங்கும். ஏன்னா... அது எப்பவும் துலங்கிக்கொண்டே இருக்கு.

ஆத்மாவைத்தான் வேறு வேறு பெயர்களாலே குறிக்கறோம். ஆத்மா, கடவுள், குண்டலினி, மந்திரம் எல்லாம். இதிலே ஏதாவது ஒண்ணை பிடிச்சுக்கொண்டாலும் ஆத்மா வெளிப்படும்.

கடவுளும் ஆத்மாவும் வேற வேற இல்லை.

மனம்தான் குண்டலினி. மந்திரஜபம் பிற நினைப்பு இல்லாம வச்சுக் கொண்டிருக்கும். ஜபம் மந்திரத்திலே லயிக்கும். மந்திரம் ஆத்மாவிலே லீனமாயிடும்.

ஆத்மா துலங்கும்.

**கே: குரு எது வரைக்கும் அவசியம்? ஆத்மாவை அடைய முயற்சி அவசியம் பண்ணணுமா?**

ப: லகு (சிறியது) இருக்கற வரைக்கும் குரு (பெரியது) அவசியம்.

அஞ்ஞானத்தாலேயே லகு ஏற்படறது.

கடவுளை ஒருத்தன் கும்பிட்டுக்கிட்டே வந்தா....அவர் ஆழ்ந்த பக்தியை அவனுக்குக் கொடுத்து சரணடையச் செய்யறார்.

நல்லா சரணடைஞ்ச பக்தனுக்கு கடவுளே குருவா வர்றார்.

குருவா வர்ற கடவுளே... அவனுக்கு உண்மைக்கு வழி காட்டி அவனும்... கடவுளும்... பிறரும்... ஆத்மாவைத் தவிர வேற இல்லைங்கற உண்மையைப் புரிய வைக்கறார்.

இது புரிஞ்ச மனசு முடிவிலே ஞானமடையறது.

ஞானம் அடையற வரைக்கும் முயற்சி அவசியம். முயற்சியாலேதான் சகஜ ஸ்திதி சித்திக்கும். துக்க நிவிர்த்தியும், சுகப்பிராப்தியும் அப்போதான் முழுமையாகும்.

அதுவரை.... அதாவது சகஜம் சித்திக்கற வரைக்கும்... ஏதோ ஒரு வகையிலே முயற்சி இருந்துகொண்டேதான் இருக்கும்.

**கே: தினசரி வேலைகளுக்கு நடுவுல ஆத்மாவை அடைய முயற்சி செய்ய முடியுமா?**

ப: நாமதான் எல்லா வேலையையும் செய்றோம்னு ஏன் நினைக்கறேள்?

நீங்க இங்கே வந்ததையே எடுத்துப்போம். வீட்டிலே இருந்து மாட்டு வண்டிலே ஏறினேள். ரயில்லே ஏறினேள். திருவண்ணாமலை ரயில்வே ஸ்டேசன்லே இறங்கினேள். மாட்டு வண்டிலே ஏறினேள். இப்போ ஆஸ்ரமத்திலே இருக்கேள். கேட்டா... ஊர்லே இருந்து திருவண்ணாமலைக்கு வந்தேன்னு சொல்றேள்.

உண்மையிலேயே... நீங்க சும்மாதான் இருந்தேள். மாட்டு வண்டியும் ரயில் வண்டியும்தான் வந்தது.

ஆனா அதை உங்க மேலே ஏத்தி நானே வந்தேங்கறேள்.

அது மாதிரிதான் எல்லா வேலைகளையும்... நாம செஞ்சதா நம்ம மேலே ஏத்திக்கறோம்.

எந்த வேலையும் நம்மளோட வேலை இல்லை. எல்லாம் இறைவன் வேலை.

**கே: இப்படியெல்லாம் யோசிச்சா சூன்யமாயிடும். மனம் சிந்திக்காது. வேலையும் சரிவர நடக்காது.**

ப: முதல்லே சூன்யத்துக்குப் போங்கோ. அப்புறம் பாக்கலாம்.

**கே: ஞானிகள், மகான்கள் தரிசனம், ஞானத்துக்கு உதவும்னு சொல்றாங்களே! அது உண்மையா?**

ப: ஆமாம். உதவும்.

**கே: இப்போ நான் இங்கே வந்துருக்கறது ஞானத்தைத் தருமா?**

ப: எதைத் தர்றது? யாருக்கு? விசாரி.

யாருக்கு இந்த சந்தேகம்?

இதோட மூலம் தெரிஞ்சுடுத்துன்னா... எல்லா சந்தேகமும் போயிடும்.



(80) ***மிகவும் அடைக்கலம் பூண்ட எளிய சீடர் ஒருவர் தன்னுடைய ஒரே மகனான மூன்று வயதுக் குழந்தையை இழந்தார். மறுநாள் குடும்பத்துடன் பகவான் சந்நிதியை சரணடைந்தார். அவர் பொருட்டு பகவான் அருளியது.***

ப: மனதை நல்லாப் பழக்கப்படுத்தினா... எவ்வளவு துயரம், இழப்பு ஏற்பட்டாலும் தீரமா எதிர் கொள்ளலாம்.

புத்ர சோகம் எல்லாத்தையும் விடக் கொடியது.

எந்த சோகமா இருந்தாலும் ஒரு தனித்தன்மைக்குதான் அனுபவமாறது.

தனித்தன்மையை இழந்துட்டோம்னா... நாம எப்பவும் இருக்கற பொருள்... உண்மையிலே 'யாரும் பிறக்கலே'; 'இறக்கலே'ங்கற பெரிய உண்மை புலப்பட்டுடும்.

அப்படியே பிறந்ததுன்னு வச்சாக்கூட எது பிறந்தது?

உடம்புதான் பிறந்தது.

உடம்பு அகந்தையிலே ஏற்படற தோற்றந்தான். உடம்பு இல்லாம அகந்தை இருக்காது. உடம்பை எடுத்துக்கொண்டுதான் அது தோன்றும்.

உண்மையிலே உடம்பு வெறும் நினைப்புத்தான். சூட்சும புத்திக்காரனுக்கு இது பிடிபடும்.

தூங்கும்போது உடம்பைக் காணோம். ஆனா நாம இல்லாமப் போனோமா?

நாம தூங்கும்போது எப்படி இருக்கோம்? எப்படி விழிப்பு வர்றது? இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?

நான்னு ஒரு அகந்தை கிளம்பிடறது. அதுதான் விழிப்பு. நினைப்புகள் பின் தொடர்ந்துடறது.

யாருக்கு இந்த நினைப்பெல்லாம் வர்றதுன்னு பாக்கணும்.

எங்கே இருந்து வர்றது?

ஒரு அறிவுலே இருந்துதான் வரணும்.

இப்படி விசாரணை பண்ணாக்கூடப் போதும். அகந்தை உரு அழிஞ்சிடும்.

அப்புறம் ஏகமாயிருக்கற பரமார்த்த இருப்பு தெரிய வரும்.

அந்த இருப்பிலே ஏகமான நம்மளத் தவிர யாரும் இருக்க மாட்டா... அங்கே யாருடைய சாவைப் பத்திய எண்ணமும் இல்லை. துக்கமும் இல்லை.

நாம பிறந்திருக்கோம்கற நினைப்புதான் எல்லாத் துக்கத்துக்கும் காரணம்.

இது இருக்கற வரைக்கும் மரணபயம் போகாது.

நமக்கு உடம்பு இருக்கா?

இந்தக் கேள்வியைக் கேக்கணும்.

நான்கறது எப்பவும் இருக்கற வஸ்து.

'உடம்புதான் நான்'ன்னு ஒரு படம் போடறமாதிரி போடறது. அதுதான் எல்லா சிக்கலுக்கும் காரணம். இந்த நினைப்பு எங்கிருந்து வர்றதுன்னு கண்டுபிடிச்சுட்டா... அங்கேயே நின்னுக்கலாம்.

அந்த இடம்தான் அந்தராத்மா. ஜனன மரணபயமற்ற இடம்.

**கே: இன்னும் இதை எப்படி செய்யறதுன்னு சொல்லுங்க.**

ப: நினைப்புதான் பல ஜன்ம வாசனை... அதைப் போக்கணும். அதுதான் லக்ஷியம்.

வாசனையற்ற இடந்தான் ஆதி நிலை. எப்பவும் உள்ள சுத்தநிலை.

**கே: சரியாப் புரியலை.**

**ப:** எப்பவும்... இருக்கற பொருளை... எல்லோரும் உணர்ந்து கொண்டேதான் இருக்கா.

எத்தனை சாவைப் பாத்தும் நாம சாகமாட்டோம்னு நம்பறோமில்லையா! ஏன்னா... அதுதான் உண்மை.

தெரிஞ்சோ தெரியாமலோ உண்மை வெளிப்படறது.

என்ன... இந்த உண்மையை உடம்போடு சேர்த்து மயங்கறோம்.

இந்த மயக்கமே தெளிய வேண்டும்.

**கே: தெளிவு எப்படி ஏற்படும்? எப்போ மயக்கம் நீங்கும்?**

**ப:** பிறந்தது இறந்தே தீரும்.

எல்லா மயக்கமும் போலியான ஒரு அகந்தைக்குத்தான்.

எப்பவும் இருக்கற 'நான்' உதியாது; ஒடுங்காது.

எப்பவும் அப்படியே இருக்கும்.

குரு இந்த உண்மையைச் சொன்ன உடனேயே... சிஷ்யன் அதைக் கிரஹிச்சு, நல்லாத் திரும்பத் திரும்ப அதை சிந்திச்சு உண்மையை உணர்றான்.

இரண்டு விதமா சொல்லலாம்... எப்பவும் இருக்கற ஆத்மாவை உணர எந்த முயற்சியும் தேவையில்லை.

ஞானம் ஏற்கனவே இருக்கு.

அஞ்ஞானந்தான் நீங்கணும்.

சத்குருவோட ஒரு வார்த்தை போதும்னு சொல்றா. நொடியிலே சிஷ்யன் உணர்ந்துடுவானாம்.

வேறு சிலர்... இல்லே... தியானம் கீனம் எல்லாம் பண்ணினாத்தான் ஞானம் ஏற்படும்னு சொல்றா...

இரண்டும் உண்மைதான்... வெவ்வேறு நிலையிலே இருந்து சொல்றது.

**கே: தியானம் அத்தியாவசியமா?**

**ப:** கல்லு, மண்ணு, மலை, சமுத்திரம் எல்லாம் எப்பவும் தியானத்திலேயே இருக்குன்னு உபநிஷத் சொல்றது.

**கே: கர்மம் எப்படி உதவும்? மேலும், மேலும் இருக்கற சுமையை கூட்டாதா?**

ப: பலனில்லாமல் செய்ற கர்மம் சித்த சுத்தியைக் கொடுத்து மனசைத் தியானத்திலே கூட்டி வைக்கும்.

**கே: எந்த வேலையும் பாக்காம எந்த நேரமும் தியானத்திலேயே இருக்க முடியுமா?**

ப: செஞ்சு பாருங்கோ!
வாசனை விடாது. தியானம் படிப்படியாத்தான் வரும்.
குரு அருளாலே...தியானத்திலே முதிர்ச்சி ஏற்படும்.



(81) **டாக்டர் பெர்ண்ஹண்டு பென் எனும் அமெரிக்கர் கடந்த இருபது வருடமா வேதாந்தத்தில் ஈடுபட்டு வருபவர். பகவான் தரிசனத்திற்காக வந்து கேட்டார்.**

**கே: நாசி நுனியிலே கவனம் வைத்து தியானம் செஞ்சாலும் மனசு அலைபாயுதே?**

ப: மனசுன்னு ஒண்ணு இருக்கா?
மனம்னா என்ன?

**கே: மனம்ங்கறது எண்ணங்களின் குவியல்.**

ப: நினைப்பு எல்லாம் யாருக்கு?
மனம்ன்னு ஒண்ண தேடினா...அது மறைஞ்சிடும்.
ஆத்மாதானே சுடரும்.
அது மட்டுமே இருக்கறதாலே... அது குவியாது. விரியாது.

**கே: இதெல்லாம் எனக்குப் புரியலை. எனக்குப் புரியற மாதிரி ஏதாவது ஜபம், தியானம்ன்னு ஸ்பஷ்டமா ஏதாவது சொல்லுங்களேன்.**

ப: 'நான் யார்' விசாரந்தான் சிறந்த ஜபம்.
நம்மள விட ரொம்ப ஸ்பஷ்டமானது எது?

நம்மள விட்டுட்டு வெளியே ஏதோ ஒண்ணைப் பிடிக்க ஏன் முயற்சி பண்ணணும்?

நாம யார்ன்னு ஒருத்தன் தெரிஞ்சுக்க முயற்சி செய்யலாம். மத்தது எல்லாம் அனர்த்தம்தான்.

**கே: ஆத்மாவை உடம்புல எந்தப் பகுதியிலே தியானம் பண்ணணும்?**

ப: ஆத்மா தானே துலங்கணும். அதுதான் நமக்கு வேண்டியது.

**கே: மனதை உலகத்தில் இருந்து திருப்பறது எப்படி?**

ப: உலகம் உண்மையிலேயே இருக்கா?

அதாவது உங்களை விட்டு உலகம்ன்னு ஒண்ணு தனியா இருக்கா?

உலகம் வந்து சொல்லித்தா 'நான் இருக்கேன்'னு.

உலகம் இருந்ததுன்னு சொல்றது யாருன்னு கண்டுபிடிங்கோ!



(82) **தூக்கம் சமாதி பற்றிய பேச்சுக்கு ஒருவாறு பகவான் அருளியது.**

ப: மனம் இருள்லே ஆழ்ந்து இருந்தா... அதுக்குப் பேர் தூக்கம்.

ஒளியிலே ஆழ்ந்தா.... சமாதி.

மாட்டுவண்டியிலே தூங்கிக்கொண்டு போற ஒருத்தன்... வண்டி நகருவதையோ, நிக்கறதையோ, இல்லே மாடுகளை அவிழ்த்துக் கட்டினதையோ தெரியாம எப்படி இருக்கானோ அப்படித்தான் ஞானியோட சமாதி.

இந்த மூணும் ஞானிக்கு ஒண்ணுதான்.

இங்கே தூக்கம்கறது நுகத்தடியிலே இருந்து மாடுகளை அவிழ்த்து விட்டுடறது.

வண்டி நகர்றதுதான் விழிப்பு. இந்திரியங்கள் இயங்கும்.

கயிறை இழுத்து வண்டியை நிறுத்திவச்சு இருக்கறது சமாதி. இந்திரியங்கள் இருக்கும். ஆனா இயங்காது.

தூக்கம் வர்றப்போ தலை கவிழறது. மனம் இருளிலே ஆழ்ந்துடறது.

சமாதியிலே தலை கவிழாது. மனம் இருக்கு. ஆனா தொழில் படலே.

கேவல சமாதியிலே இந்திரிய இயக்கத்தைத் தாற்காலிகமா நிறுத்தி வச்சுருக்கு.

அதாவது கனவு, நனவு துயில்ங்கற மூணு நிலையும் தாற்காலிகமா இல்லை.

வெளியே வந்தவுடனே மூணுல ஒண்ணு ஆரம்பமாயிடும்.

சகஜ சமாதியில் இயக்கம்... மூணு நிலைகள்... எல்லாம் நாசமாயிடும்.

திரும்ப வராது.

ஆனா... ஒரு சகஜ ஞானி எல்லோரையும் போலவே இயங்கறானேன்னு கேட்டா... அவனுக்கு அதெல்லாம் கவனத்துக்கு இருக்காது.

பாக்கறவா அவன் செயல்புரியறதா நினைக்கறா. எல்லாக் கார்யங்களும் அவன் உடம்புக்குத்தான். அவனுக்கு ஒண்ணும் இல்லை.

அவனைப் பொறுத்தவரைக்கும் வண்டியிலே தூங்கிக் கொண்டு போறவன்தான்.

ஒரு தூங்கற குழந்தைக்குப் பால் ஊட்டினா... அது, அடுத்த நாள், பால் குடிக்கலே, குடிக்காமலே தூங்கிட்டேன்னு சொல்லும். இல்லை, குடிச்சே... அப்படின்னா சமாதானப்படாது.

அப்படித்தான் சகஜ சமாதி.

ஞானி உயிரோட இருக்கும்போதே விடுபட்டுட்டான்.

அதனாலே அவன் எப்படி, எங்கே, எப்போ உடலை விட்டாலும் ஒண்ணுமில்லை.

சில ஞானிகளோட உடல் துன்பம் அனுபவிக்கற மாதிரி தெரியும்.

சில ஞானிகளோட உடல் சமாதியிலே இருக்கற மாதிரி தெரியும்.

சிலர் உடல் மறைஞ்சிடும்.

இதெல்லாத்துக்கும் ஞானத்துக்கும் சம்பந்தம் இல்லை.

உடல் துன்பப்படறதா பாக்கறவாளுக்குத்தான் தெரியுமே தவிர அவனுக்கு இல்லை. ஏன்னா... தேகாத்ம புத்தியைத் தாண்டினவன்தான் ஞானி.

(91) *வங்காளத்திலிருந்து வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: மனத்தை எப்படிக் கட்டுப்படுத்தறது?**

ப: மனம்னா என்ன?

**கே: இறைவனை நினைக்க உக்காந்தா நினைப்பு எங்கெங்கையோ கொண்டு போகுது. இதை எப்படிக் கட்டுப்படுத்தறது?**

ப: இப்படி அலையறதுதான் மனத்தோட ஸ்வபாவம்.

அலையறதை திரும்பத் திரும்ப இறைவன் மேலே வைக்கணும்.

நீண்ட கால பயிற்சியிலேதான் மனம் வசப்படும்.

நினைவுகளா, விரியற மனம் பலமிழந்த மனம்னு சொல்லப் படறது.

ஏகாக்கிரம் பொருந்திய மனம்தான் பலமானது.

**கே: மனோபலம்னா என்ன?**

ப: ஒரே நினைப்பிலே சிதறாம நிக்கறது.

**கே: அதை எப்படி அடையறது?**

ப: பயிற்சியாலேதான்.

ஒரு பக்தன்... இறைவனிடம் ஏகாக்கிரப்படறான்.

ஒரு விசாரி... ஆத்மாவிலே ஏகாக்கிரப்படறான்.

இரண்டும் ஒண்ணுதான்.

**கே: மனத்தை ஆத்ம விசாரத்துலே கஷ்டப்பட்டு ஈடுபடுத்தி னாலும் ஏமாத்திடுது. ஓடிடுதுன்னே கொஞ்ச நேரம் கழிச்சுதான் தெரியுது.**

ப: அப்படித்தான் செய்யும்.

ஆரம்பத்திலே மனது நீண்ட நேரம் கழிச்சுத்தான் குறிக்குத் திரும்பும்.

பழகப்பழக சீக்கிரமே திரும்பிடும். அனுபவ முதிர்ச்சிலே சிதறவே சிதறாது. அப்போதான் மறைஞ்சு இருக்கற மஹா சக்தி வெளிப்படும்.

சாத்வீக மனம் நினைப்புகள் அற்றது. ரஜஸ, தமஸ மனமே நினைப்புகள் நிறைஞ்சது. சுத்த மனமே ஆத்மா.

**கே: நினைப்புகளை, சுத்தமா விலக்கினதுக்குப் பிறகுதான், அஹம் ஸ்புரணம் அனுபவமாகுமா?**

ப: ஆமாம்.

ஆனா ஸ்புரணம் எப்பவுமிருக்கு.

நினைப்பு வர்றதுக்கு முன்னாடியும், நினைப்பு இருக்கறப்போதும், நினைப்பு நீங்கினபோதும் ஸ்புரணம் இருந்துகொண்டே இருக்கும்.

(92) ***பகவானைத் தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.***

**கே: சிலர் மூர்த்தி ஜபம், தியானம்தான் சிறந்தது. நான்கறது எங்கேயிருந்து வருது அப்படின்னு பாக்கறது எல்லாம் ஆபத்துன்னு சொல்றாங்களே?**

ப: யாருக்கு ஆபத்து?

ஆத்மாவுக்கு அன்னியமா ஆபத்து இருக்கா?

இடைவிடாத 'நான் - நான்'கறது அளவில்லா சமுத்திரம்.

அதிலே அகந்தை 'நான்'கறது நுரை.

ஜீவன் நுரையிலே இருக்கற நீர்க்குமிழி மாதிரி.

நீர்க்குமிழியும் நீரே!

உடைஞ்சுடுத்துன்னா சமுத்திரம்.

உடையலேன்னாலும் சமுத்திரம்தான்.

இந்த எளிமையான உண்மையைப் புரியவைக்கறதுக்குத்தான் பக்தி, ஞானம்... யோகம்... கர்மம்ன்னு பல வழி.

அதிலேயும் ஒவ்வொண்ணுலேயும் ஆயிரம் பிரிவு, ஆயிரத்தெட்டு பயிற்சி.

இதிலே ரகசியம் வேற.

பாவம் அப்பாவிகளைக் குழப்பி அவாளை வதைக்கறா.

இப்படியேதான் மதங்களும் அதிலே இருக்கற பிரிவுகளும் கொள்கைகளும்.

எல்லாம் நம்மளத் தெரிஞ்சுக்கத்தானாம்!

இதுக்குத்தான் இத்தனை சாதனங்களும் அப்பியாசங்களுமாம்.

இதெல்லாம் சொல்லித்தர நூறு பேர் இருந்தா... கேட்டு அப்படியே நடக்கறேன்னு நூறாயிரம் பேர் இருக்கான்.

நாம புலன்களாலே நேரடியா அனுபவிக்கறதத்தான் பிரத்யக்ஷம்ன்னு சொல்றோம்.

நம்மள விட பிரத்யக்ஷம் வேற என்ன இருக்கு?

நம்மள புலன்களாலேயா அனுபவிக்கறோம்?

புலன்களாலே அனுபவப்படறது பரோக்ஷ ஞானந்தான்.

அபரோக்ஷமாகாது.

நாம இருக்கோம்கறதுதான் அபரோக்ஷ ஞானம்.

பிரத்தியக்ஷம் இதைவிட வேற என்ன இருக்கு?

தெரிஞ்சுக்க வேற என்ன வேணும்?

இது சாமான்யமா எல்லாருக்கும் இருக்கற அனுபவம்.

நம்மளத் தெரிஞ்சுக்கறதுக்கோ, நம்மளா இருக்கறதுக்கோ எந்த சாதனமும் இல்லை, கிடையாது.

பிரிக்க முடியாத எல்லையற்ற ஒரு ஏகம் தன்னையே நான்ன்னு சொல்லிக்கறது.

அதுதான் அதோட முதல் பெயர்.

ஓங்காரம், ஹ்ரீங்காரம் எல்லாம் அப்புறம்தான்.

மோக்ஷம்னா... நம்மளத் தெரிஞ்சுக்கறதுதான்.

மஹா வாக்கியம் 'அஹம் பிரம்மாஸ்மி'தான் இதுக்குப் பிரமாணம்.

இந்த 'நான்'கறது.... எல்லோராலேயும் எப்பவும் அனுபவிக்கப்பட்டே இருந்தாலும், அது என்னன்னு கவனிக்கணும். அதிலேயே கவனமாயிருக்கணும். அப்போதான் ஞானம் ஏற்படறது.

எல்லோரும் ஆத்மாவை உணர்ந்துகொண்டேதான் இருக்கோம்.

ஆச்சர்யத்திலேயும் ஆச்சர்யம் அது சரியா தெரியலேங்கறோம்.

இல்லாதத... இருக்கறதா பாக்கறதனாலேதான்... இத்தனைக் குழப்பமும்.

ஆதாரம்தான் தோற்றமாத் தெரியறது.

இது புரியாம தோற்றம் தெரியறது, ஆதாரம் தெரியலேங்கறோம்.

காண்பான் இருக்கற வரைக்கும் காட்சி இருக்கும்.

காண்பானோட சத்தியமே...காட்சியோட ஸத்யம்.

காண்பானோட உண்மையைக் கண்டுபிடிச்சா...எல்லாம் சரியாயிடும்.

(94) *யாரோ ஒருத்தர் கேட்டார்.*

**கே: பகவானே... என் பாவங்கள் எல்லாத்தையும் மன்னிக்கணும்.**

ப: உங்க மனசு உறுத்தாம பாத்துக்கோங்கோ. அதுபோறும்.

(95) *மேஜர் சாட்விக் கேட்டார்.*

**கே: ஞானம் அடைஞ்ச பிறகும் அது நழுவுமா?**

ப: கைவல்ய நவநீதத்துலே உண்மையை உணர்ந்த சீடன் அவனோட நன்றியை இப்படி வெளிப்படுத்தறான்.

**'ஐயனே, எனதுள்ளே நின்று**
**அநந்த ஜன்மங்கள் ஆண்ட**
**மெய்யனே, உபதேசிக்க**
**வெளிவந்த குருவே போற்றி**
**உய்யவே முக்தி நல்கும்**
**உதவிக்கு ஓர்உதவி நாயேன்**
**செய்யுமாறு ஒன்றும் காணேன்**
**திருவடி போற்றி போற்றி'**

இப்போ குரு சொல்றார்:

**'சிட்டன் இவ்வாறு கூறத்**
**தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்**
**கிட்ட வா என இருத்தி**
**கிருபையோடு அருளிச் சொல்வார்**
**துட்டமாம் தடை மூன்றுந்**
**தொடராமல் சொரூப ஞான**
**நிஷ்டனாய்யிருக்கின் ஈதே**
**நீ செய்யும் உதவியாமே'**

பரமானந்தத்தை அனுபவிச்ச பிறகு அதிலே இருந்து எப்படி நழுவுவா?

நடக்கும். வாசனை வெளியே இழுத்துக்கொண்டு வந்துடும். அஞ்ஞானம் மூடிடும்.

நழுவாம இருக்க என்ன செய்யணும்?

மூணு தடையும் வராம பாத்துக்கணும். மூணு தடை என்னன்னா...

1.சந்தேகம்:-

நம்மளோட உண்மை இவ்வளவு சாதாரணமாயிருக்கேன்னு உண்மையை சந்தேகப்படறது.

அதாவது குரு வார்த்தையை சந்தேகப்படறது.

2.விபரீதம்:-

உடம்புதான் நான்... உலகம் உண்மை....ன்னு நினைக்கறது.

3. அஞ்ஞானம்:-

நாம யாருங்கற உண்மையை அடிக்கடி மறந்துடறது.

அனுபவம் இரண்டு வகை...

- தாற்காலிகம்
- நிரந்தரம்

தாற்காலிகம் நாளடைவில் நிரந்தரமாகும்.

தாற்காலிகத்திலே வாசனைகள் முற்றும் நாசமாகலே.

பந்தம் இருக்கும். சூட்சுமமா வாசனைகள் இருக்கும். நாளடைவில் சந்தர்ப்பத்திலே வெளியே வரும்.

நிரந்தரத்திலே வாசனைகள் ஸமூலம் நாசம்.

பகவத்கீதையிலே யோகப்பிரஷ்டன்னு சொல்றது முதல் அனுபவத்திலே இருக்கறவாளத்தான்.

**கே: சிரவணம் எல்லாருக்கும் வாய்க்காதுபோலவே?**

ப: சிரவணம் இரண்டு வகை:

1. சாமான்ய வகை:-

வெளியிலே குருவாலே விளக்கப்பட, காதாலே கேக்கறது.

2. விசேஷ வகை:-

கேள்வியை உள்ளேயே கேட்டு, பதிலை அஹம் ஸ்புரணமாய் பெறுவது.

உயர்ந்த வகை. சரியான சிரவணம்.

இந்த அனுபவத்தை திரும்பத்திரும்பக் கொண்டுவந்து, கொண்டுவந்து தெளியறது மனனம்.

அதிலேயே நிலைபெறுவது, நிலைபெற முயற்சி செய்யறது நிதித்தியாசனம்.

**கே: தாற்காலிக அனுபவத்தை சமாதின்னு சொல்லலாமா?**

ப: இல்லை.

நிதித்தியாசனம்னு சொல்லலாம்.

**கே: சிரவணமே சிலருக்குத்தான் பொருந்தும்போல?**

ப: சாதகர்கள் இரண்டு வகை:

- கிருதோவுபாசகன்
- அக்ருதோவுபாசகன்

கிருதோவுபாசகன் ஏறக்குறைய எல்லா வாசனைகளையும் தீவிர பக்தி வைராக்கியங்களாலே முன் ஜென்மங்கள்லேயே காலி பண்ணிருப்பான்.

ஏதாவது ஒரு அனுபவத்திலே நிலை பெற்றிருப்பான். என்னன்னுதான் சரியா புரியாமலிருப்பான். சத்குருவைப் பாத்தவுடனேயே ஓரிரு வார்த்தையிலேயே புரிஞ்சுடும். நிரந்தர அனுபவம் சித்திச்சுடும்.

அக்கிருதோவுபாசகன் ரொம்ப முயற்சி பண்ணணும். சிரவண மனன நிதித்தியாசனம் எல்லாம் அவனுக்கு எப்படி உதவும்?

அவா உபாசனை பண்ணணும். உபாசனை முதிர்ச்சியாகி ஞானம் சித்திக்கும்.

சிரவண மனன நிதித்தியாசனம் எல்லாம் முடிஞ்ச நாலாவது நிலைதான் மோட்சம். கடைசி நிலை.

அதிலேயும் வகையிருக்கு.

- பிரம்மவித்
- பிரம்ம வரன்
- பிரம்ம வர்யன்
- பிரம்ம வரிஷ்டன்

சில லக்ஷணத்தை வச்சு இப்படிப் பிரிக்கறா. ஆனாலும் இவா நாலு வகையும் ஜீவன் முக்தர்கள்தான். அதிலே சந்தேகமில்லை.

(96) **கே: வெள்ளைக்காரங்க சிலர் திடீர்ன்னு ஞானம் வந்துடுச்சு அப்படிங்கறாங்களே! அது என்ன?**

ப: திடீர்ன்னு வந்தா திடீர்ன்னு போயிடும்.

ஆரம்பம் இருந்தா முடிவும் இருக்கும்.

எப்பவும் இருக்கறதை உணர்ந்தாத்தான் எப்பவும் இருக்கும். உணர்வு எப்பவும் இருக்கு. எல்லோருக்கும் 'நான்'கறது தெரியும். யாரும் நான் இல்லைன்னு மறுக்க முடியாது.

தூங்கும்போது ஒண்ணும் தெரியலேங்கறான்.....விழிப்பிலே எல்லாம் தெரியறதுங்கறான். தூங்கும்போது இருந்தவன்தானே இப்போ விழிப்பிலேயும் இருக்கான். மாறலையே!

தூங்கும்போது உடம்பு இல்லை... அதனாலே உடலுணர்வு இல்லை. விழிப்பிலே உடம்பு இருக்கு... அதனாலே உடலுணர்வு இருக்கு. இரண்டுக்கும் என்ன வித்தியாசம்னா... உடல் உணர்வு உதிச்சிடறதுதான்.

இருக்கற உணர்விலே எந்த வித்தியாசமும் இல்லை. உடலும் உடலுணர்வும் ஒண்ணாத் தோன்றி ஒண்ணா மறையும். அதனாலேதான் தூக்கத்திலே வரையற்று இருக்கோம். விழிப்பிலே வரைக்கு உட்பட்டு இருக்கோம்.

நான் உண்மையிலேயே இந்த உடம்பு மட்டும்தான்கற நினைப்பே பந்தம். அஞ்ஞானம்.

இந்த அஞ்ஞானமே நீங்கணும். உண்மையான 'நான்' எப்பவும் இருக்கு. இங்கேயே... இப்போவே.... இருக்கு.

புதுசா தோணுறதும் இல்லை... மறையறதும் இல்லை... எப்பவும் இருக்கறது மாறாமயும் இருக்கணும். புதுசா வர்றது போயிடும்.

தூக்கத்தையும் விழிப்பையும் பொருத்திப் பாரு! உடல் இருக்கு ஒண்ணுலே.... இன்னொன்னுலே இல்லை. அதனாலே அது போயிடும். உணர்வு எப்பவும் இருக்கு. அதனாலே உடல் போனாலும் உணர்வு போகாது.

'நான்'கறது இல்லாம யாரும் இல்லை. நான் இந்த உடம்புங்கறதுதான் எல்லாத் தொல்லைக்கும் காரணம். இந்த அஞ்ஞானங்கல்லாம் தொலையணும். இதுதான் ஞானம்.

எனக்குத் தெரிஞ்ச ஞானமெல்லாம்... புதுசா எதையோ தெரிஞ்சுக்கறதும் இல்லை... புதுசா எதுவாவோ ஆகறதும் இல்லை...

அஞ்ஞான நீக்கந்தான்... எல்லாத் தப்பெண்ணமும் தொலையறதுதான்... எப்பவும் இருக்கற ஞானத்தை அடைஞ்சதா சொல்றா.

**கே: நான் உடலையே களைய விரும்புறேன்.**

**ப:** உடம்பிலே இருக்கற துணியையெல்லாம் களைஞ்சு போட்டுட்டு ஒருத்தன் நிர்வாணமாத் திரியலாம்.

உடம்பை எப்படிக் களைவேள்? 'நான்'கறது எல்லையற்ற உடலளவா குறுகாத உணர்வு. ஏதோ ஒரு உடம்பைக் களைஞ்சாலும் எங்கே போடுவேள்?

எங்கே போட்டாலும்... அது உங்களோடதுதானே.

முடிவான உண்மை, அதாவது பரமார்த்த ஸத்யம் ரொம்ப ரொம்ப எளிமை. நீங்க இப்போ இருக்கற மாதிரியே இருக்க வேண்டியதுதான்.

அவ்வளவுதான் சொல்ல முடியும்.

இந்த எளிமையான உண்மையைப் போதிக்க எத்தனை மதம்... கொள்கை மார்க்கம், இவாளுக்குள்ளே எத்தனை வாதப் பிரதிவாதம் அம்மம்மா... ரொம்பப் பரிதாபம்.

எளிமையான உண்மையை யாரு விரும்பறா?

எல்லோரும் சிக்கலையும் கவர்ச்சியையும்தான் விரும்பறா.

அதனாலேதான் இத்தனை மதங்கள் இருக்கு. எல்லாம் அவ்வளவு சிக்கலாவும் இருக்கு.

எல்லா மதத்திலேயும் அதோட விசுவாசிகளும் அதை எதிர்க்கறவாளும் இருக்கா.

கடவுள் எங்கேயோ ரொம்பத் தூரத்திலே சொர்க்கத்திலே இருக்கார். இயேசுவோட உதவியில்லாம யாரும் பரலோகம் போக முடியாது. இயேசுவுக்கு மட்டும்தான் பரலோகம் தெரியும். அவர்தான் கூட்டிக்கொண்டு போவார். இயேசுவைக் கும்பிடறவாளை மட்டும்தான் உள்ளே விடுவா. இப்படி யெல்லாம் சொன்னாத்தான்... ஒரு சாதாரண கிருஸ்துவனுக்கு சந்தோஷம். அதை விட்டுட்டு, பரலோக சாம்ராஜ்யம் இங்கேயே இப்போவே இருக்கு, உனக்குள்ளேயே இருக்குன்னு சொன்னா திருப்திப்பட மாட்டா.

தப்பாப் புரிஞ்சுப்பா. வேற அர்த்தங்களைக் கொடுப்பான்.

பக்குவமான மனம்தான் உண்மையைக் கிரஹிக்க முடியும்.

அதுவும்...ரொம்ப எளிய உண்மை...ரொம்பப் பக்குவமான மனசுக்குத்தான் பிடிபடும்.

**கே: தியானம் பண்ணும்போது சூட்சுமம் பிரியுது. அப்போ பயம் வந்துடுது. என்ன செய்யறது?**

ப: யாருக்குப் பயம்?

ஸ்தூலத்தையே நாமன்னு நினைக்கற பழக்கந்தான் பயத்துக்குக் காரணம்.

அடிக்கடி இப்படிப் பிரிஞ்சா...பழக்கமாயிடும். பயம் போயிடும்.

(97) *இராமசந்தர் (அம்பாலா) கேட்டார்.*

**கே: ஹிருதயம்னா என்ன? முக்தின்னா என்ன?**

ப: ஹிருதயம்ன்னா...உடம்பிலே ஸ்தூலமாத் துடிக்கறது இல்லை.

அது ஆத்மாவேதான்.

ஹிருத் + அயம் = ஹிருதயம் 'இதுதான் மையம்'

**'எதன்கண்ணே நிலையாகி இருந்திடும்இவ் உலகமெலாம்**
**எதனது எல்லாம்**
**எதனின்றுஇவ் அனைத்துஉலகும் எழுமோமற் றிவையாவும்**
**எதன் பொருட்டாம்**
**எதனால்இவ் வையமெலாம் எழுந்திடும்இவ் எல்லாமும்**
**எதுவே ஆகும்...'**

அதுதான் ஹிருதயம்.

நினைப்பே மனம்... மனமே ஜகம்...இதுக்கெல்லாம் மூலம்தான் ஹிருதயம்.

இதையெல்லாம் எது கொண்டுவர்றதோ அதுவே பிரம்மம்ன்னு உபநிஷத் சொல்றது.

அதுதான் ஹிருதயம்.

பிரம்மம்தான் ஹிருதயம்.

**கே: ஹிருதயத்தை எப்படித் தெரிஞ்சுக்கறது?**

ப: 'நான்' இல்லாமே யாராவது இருக்காளா?

நான் இல்லேன்னு யாராவது சொல்ல முடியுமா?

நான்கறதுதான் ஆத்மா.

ஆத்மாதான் ஹிருதயம்.

நான்கறதுதான் ஹிருதயம்.

**கே: எனக்கு புரியலை.**

ப: ஆழ்ந்த தூக்கத்திலே நீங்க இருக்கேள்... விழிப்பிலேயும் இருக்கேள்... ஒரே ஆள்தானே இரண்டிலேயும் இருக்கறது. அதே 'நான்'தானே இரண்டிலேயும் இருக்கு. என்ன வித்தியாசம்?

தூக்கத்திலே உடலுலகம் இருக்காது. விழிப்பிலே உடலுலகம் இருக்கும். மனம் எழுந்தா... உலகம் தோன்றும். மனம் அடங்கினா... உலகம் தோன்றாது.

போலியா உதித்து ஒடுங்கறது உண்மை 'நான்' இல்லை. இந்த உதித்து ஒடுங்கறதுக்கு ஆதாரமா... உதிக்காம ஒடுங்காம எது இருக்கோ அதுதான் உண்மை 'நான்'.

இது மூணு நிலையிலேயும் மாறாம இருக்கும். உதித்து ஒடுங்கற போலி 'நான்' விழிப்பிலே மாத்ரம் இருக்கும்.

'நான்'ன்னு நம்மளக் குறிக்க கையை மார்போட வலப் பக்கத்தைத்தான் காட்டறோம். நம்மையறியாமலே ஆத்மாவைத்தான் சுட்டிக் காட்டறோம். ஆத்மா நமக்கு எப்பவும் நேரடியான அனுபவத்திலேயே இருக்கு. ஏன்னா...அது நாமதான்.

துன்பமெல்லாம் இந்த உடலுலகங்களை உண்மைன்னு நினைக்கறதாலேதான். இந்தக் குழப்பத்துக்குக் காரணம் அஞ்ஞானம். அஞ்ஞான நீக்கமே ஞானத்தோட அடைவு.

**கே: மனத்தை எப்படிக் கட்டுப்படுத்தறது?**

ப: மனம்னா என்ன? யாரோடது?

**கே: மனம் சஞ்சலமாவேயிருக்கு. ஒரு நிலையில இல்லை.**

ப: அலையறதுதான் அதோட சுபாவம். மனம்கறது மாறிக்கொண்டேயிருக்கறது. ஆனா நாம மாறாமயிருக்கோம். அதுதான் ஸத்யம். நம்மளத் தவிர உண்மையிலேயே வேற ஒண்ணும் இல்லை.

இந்த உண்மை நல்லா பதியணும். அதுதான் முக்யம். மனசைப் பத்தி கவலைப்படாதேள். அதோட மூலம் தெரிஞ்சா அது ஓடிடும். நம்மள ஒண்ணும் செய்யாது.

**கே: அப்போ மனசைக் கட்டுப்படுத்தத் தேவையில்லையா?**

ப: நாம யாருன்னு தெரிஞ்சுகொண்டா கட்டுப்படுத்த மனசுன்னு... ஒண்ணு இருக்காது.

ஒரு ஞானிக்கு மனசு தொழில்பட்டாலும், படாட்டாலும் இருக்கறது அவனுக்கு ஆத்மா மட்டுமே.

'மனம்' அதாவது உடலுலகங்கள் எல்லாம் நாமளேதான். நான்கறதிலே இருந்துதான் உடலும் உலகமும் தோணறது. அதிலேயேதான் ஒடுங்கறது. இருக்கும்போதும் நம்மளாவேதான் இருக்கு.

நம்மள்லே இருந்து உடல் உலகம் வேறா? நாம யார்ன்னு தெரிஞ்சாப் போதும். எல்லாம் சரியாயிருக்கும். உடலுலக நிழல்களாலே ஏன் கவலைப்படணும்?

அதனாலே நமக்கு எந்தப் பாதிப்பும் இல்லை.

நான்கறதுதான் ஹிருதயம்.

ஹிருதயம் சுயம் பிரகாசம்.

ஹிருதயத்திலே இருந்து பிரகாசம் சஹஸ்ராரத்தை அடையறப்போதான் மனம் தொழிற்படும். ஏன்னா... மனதுக்கு சஹஸ்ராரந்தான் தொழில் ஸ்தானம்.

ஹிருதயத்திலே இருந்து பிரகாசம்... சஹஸ்ராரத்திலே ஆபாஸப் பிரகாசமாகி, அதிலேதான் உடலுலகங்களைப் பாக்கறோம்.

மனம் ஒளிவயப்படும்போதுதான் உடலுலகங்களைப் பாக்கறோம்.

மனம் ஒளிவயப்படாதபோது அது பாக்கறது இல்லை. உடலுலகங்களும் தோன்றுவது இல்லை.

அதே மனம், தன் ஒளி மூலத்தை நோக்கித் திரும்பித்துன்னா... பாக்கற அறிவு போய்... ஹிருதயமே ஒளிரும்.

அந்தப் பிரகாசத்திலே மனம் ததாகாரமாயிடும்.

சூரியனோட ஒளியே சந்திரனோட ஒளி. சூரிய ஒளியை வாங்கியே சந்திரன் பிரகாசிக்கறது. சூரியன் உதிச்ச உடனே சந்திர ஒளி தேவையில்லை. ஆனாலும் சந்திரன் வானத்திலே லேசாத் தெரியும். அப்படித்தான் மனமும் ஹிருதயமும்.

மனத்தோட ஆபாஸப் பிரகாசத்தாலேயே உலகத்தை உருவாக்கிப் பாக்கறோம்.

மனம் உண்முகப்படும்போது மனத்தோட மூலமே ஒளிர ஆரம்பிக்கறது.

அப்போ... மனம் பகல் நேரத்து சந்திரன் மாதிரி சுத்தமாயிருக்கும்.

(99) *ஒரு சன்யாசி கேட்டார்.*

**கே: உபநிஷத்கள்லே மனத்தாலே ஆத்மாவை உணர முடியாது. மனதுக்கு எட்டாத அதீத உண்மைன்னு சில இடங்கள்லையும், மனத்தாலேதான் அதனை உணரணும் னும் சில இடங்கள்லே சொல்லப்படுது. எப்படிப் பொருந்தும்?**

ப: ஆத்மாவை ம்ருத மனத்தாலேதான் (நசிந்த மனம்) உணர முடியும். ம்ருத மனம்...எண்ணங்கள் இல்லாத உண்முகமான மனம்.

இப்படிப்பட்ட மனம், தன் மூலத்தை அறியப்போய் அதாகவே மாறிடும். அதைத்தான் ததாகாரமாயிடுத்துன்னு சொல்றது.

உலகத்திலே ஒரு பொருளைப் பாக்கற மாதிரி ஆத்மா மனசுக்கு விஷயமாகாது.

ஒரு அறை இருட்டாயிருக்கும்போது, வெளிச்சத்துக்கு விளக்கு வேணும்... பாக்கறதுக்குக் கண்ணு வேணும்... சூரியன் உதிச்சுடுத்துன்னா விளக்கு வேணாம்.

சூரியனைப் பாக்கணும்னா விளக்கு தேவையில்லை. கண்ணை சூரியனை நோக்கித் திருப்பினா போதும். அதுமாதிரி உலகத்தைப் பாக்கறதுக்கு மனத்தோட ஆபாஸப் பிரகாசம் தேவை.

ஹிருதயத்தைப் பாக்கறதுக்கு மனம் உண்முகப்பட்டா போதும். மனம் உரு இழந்துடும்.

ஹிருதயம் பிரகாசிக்க ஆரம்பிச்சுடும்.



அ

பிரம்மம்

(சுத்த அறிவு, சர்வசாட்சி, சுயம் பிரகாசம், ஹிருதயம், ஆத்மஸ்வரூபம்)



ஜீவன்

(தனித்தன்மை, ஆபாஸ பிரகாசத்தோடு கூடிய விருத்தி)



அந்தக்கரணம்

(புத்தி மனம் ஆபாஸ பிரகாசத்தோடு சேர்ந்து முளைவடிவில் இருக்கும்)



வெளிமுகமான விஷய விருத்தி — சாமான்ய ஞானம்

இது இரண்டும் சேந்ததுதான் நாம இப்போ பாக்கற உலகம்.






மனத்தோட விஷய விருத்திதான் வெளியிலே உலகமாத் தெரியறது.

இது மேலே விழற அதாவது பிரதிபலிக்கற சாமான்ய ஞானம்தான் உலகத்தை ஒளிர்விக்கறது.

விஷயத்தை நோக்கிப் போற விருத்தியைப் புறக்கணிச்சு, இதை எது ஒளிர்விக்கறதோ, அதை நாடணும்.

இப்போ மனம் சும்மா இருக்கும்.

ஆத்மா பிரகாசிக்கும்.

ரஜஸத்தோடும், தமஸத்தோடும் மலினமான மனத்தையே பொதுவா மனம்ன்னு சொல்றோம்.

சுத்த ஸத்வ மனம் சொரூபமாவே பிரகாசிக்கும்.

இதுவே ஆத்மஞானம்.

அதனாலே சுத்த மனத்தாலேயே ஆத்மா அடையப்படறது.



இ

சுத்த பிரஞ்ஞை. அறிவு

(எப்பவும் இருக்கற எல்லாராலையும் நேரடியா அனுபவத்திலேயே இருக்கற சாட்சி)



அந்தகரணம் + ஆபாச பிரகாசமும் = ஜீவன்



விருத்தியும் + அதை விளக்கற ஒளியும் சேர்ந்து விஷயமாறது

இதிலே விஷயம்  ஸ்தூலம்

ஒளி ⟶ பல சைதன்யம், சாமான்ய ஞானம்.

ஈ

வியஷ்டி (தனித்தன்மை)
ஜீவன்லே அந்தக்கரணம்

- ஸத்வம்
  அறிவு
  ஒளி
- ரஜஸம்
  விருத்தி
  மனம்
  புத்தி
- தமஸம்
  உலகம்
  பொருட்கள்

சமஷ்டி அந்தக்கரணம்

- ஸத்வம்
  ஈஸ்வரன்
- ரஜஸம்
  ஜீவன்
- தமஸம்
  பிரபஞ்சம்

ஜகத்தை நடத்துகிற நாயகன்









மாயை ஸத் இயல்பை மறைக்கறது இல்லை.

சித்தையும், ஆனந்தத்தையும் மறைச்சு, அதைத் தனிப்பட்ட விஷயமாக்கிடும்.



ஏ

| | | |
|---|---|---|
| கயிறு | மங்கிய ஒளி → | பாம்பாத் தெரியறது |
| (எப்பவும் இருக்கற சாமான்ய இருப்பு) | மாயை | (உலகமும், ஜீவனும்) |



ஐ

ஸத் = இருப்பு = ஆதாரம்



ஜீவன்

(அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டு உடம்பே நான்னு நினைக்கறவன்)

ஜீவன் உண்மையிலேயே இருப்புதான். அறிவுதான்.

ஆனா அஞ்ஞானத்தாலே உடம்பு நான்னு போலி அறிவு ஏற்படறது.

இங்கே அஞ்ஞானம்கறது உண்மையை விசாரிக்காததுதான்.



ஒ

இரும்பு குண்டு + நெருப்பு= நெருப்பு குண்டு

உலகமும் + சித் (சுத்த அறிவு) = ஜீவன்



(101) *ராமசந்தர் (அம்பாலா) கேட்டார்.*

**கே: ஹிருதயத்தை எப்படி அடையறது?**

ப: ஹிருதயத்தை விட்டு இப்போ நாம எங்கே இருக்கோம்? உங்களை விட்டு எவ்வளவு தூரத்துலே நீங்க இருக்கேள்?

**கே: நான் என் உடம்புலே இருக்கேன்.**

ப: ஏதாவது ஒரு இடத்திலேயா... இல்லே உடம்பு பூராவுமா?

**கே: உடம்பு முழுசுலேயும் இருக்கேன். எங்கிருந்து ஆரம்பிச்சு உடம்பு முழுசும் பரவுதுன்னு தெரியலை.**

ப: நாம எப்பவும் ஹிருதயத்திலேதான் இருக்கோம்.
அதிலே இருந்து கொஞ்சமும் வெளியே போகலே.
அதனாலே அதை அடையமுடியாது.
தூங்கும்போது எப்படி இருந்தேள்?
விழிப்பிலே எப்படி இருக்கேள்?
இந்த இரண்டு நிலையும் நாம இல்லை... நமக்கும் இல்லை.
அகந்தைக்குத்தான் இரண்டும்...
நாம எப்பவும் மாறாம ஒரே மாதிரியா இருக்கோம்.

**கே: புரியுது. ஆனா அனுபவமாகலை.**

ப: அனுபவமாகலேன்னு சொல்றது யாரு? கண்டுபிடிங்கோ!

**கே: இதெல்லாம் ரொம்பக் கஷ்டமாயிருக்கு.**

ப: இது எல்லாம் ரொம்பக் கஷ்டம்கறது ஒரு நினைப்பு.
அந்த நினைப்புதான் தடை.
அந்த நினைப்போட சேராதேள்!
யாருக்கு இந்தக் கஷ்டம்ன்னு விசாரம் பண்ணுங்கோ.

**கே: விசாரம் பண்ணினா நான்கறதிலேயே வந்து முடியுது.**

ப: ஏன்னா... அதுதான் எப்பவும் நாம, அதிலே இருந்து வெளியே போகவே இல்லை.

நாமளா இருக்கறதை விட எளிமையானது வேற எதுவும் இல்லை.

அதை எளிமைன்னு சொல்றதேகூட ரொம்பத் தப்பு.

அதுக்கு எந்த முயற்சியும் தேவையில்லை. சாதனமும் இல்லை.

செய்ய வேண்டியது எல்லாம் தவறான பார்வையாலே ஏற்படற தப்பான சேர்க்கையை விடணும். விட்டா போதும். தான் தானாகவே துலங்கும்.

**கே: வெறும் புத்தகப் படிப்பு உதவாது. நான் நிறைய புத்தகம் படிச்சுட்டேன். அதுல இருந்து அனுபவமா ஒண்ணும் கிடைக்கல. குரு உபதேசம்தான் முக்யமா வேணும். தயவு செய்து எனக்கு, நான் என்ன பண்ணணும்... எப்போ பண்ணணும்... எப்படி பண்ணணும்னு உபதேசம் கொடுங்க.**

பகவான் பதிலாக சும்மாயிருந்தார்.



(103) ***மறுநாள் பகவான்:-***

**ப:** இங்கே வர்றவா ஏதாவது ஜபம், தியானம், யோகம், உபாசனை இப்படி ஏதாவது ஒண்ணு உபதேசமா சொல்லணும்னு நினைக்கறா. இதுக்கு முன்னாடி இன்னது பயிற்சி செஞ்சோம்ன்னு சொல்லாமே, நாம என்ன சொல்லமுடியும்?

ஏன் ஜபத்தையும், அதுக்கு பலஸ்ருதி கேக்கறதுக்கு முன்னாடி, யார் ஜபம் பண்றது? யாருக்குப் பலன்? நாம யாருன்னு பாக்கக்கூடாது?

சரி, வேற யாராவது சொல்லி ஜபமோ, தியானமோ செஞ்சாக்கூட கொஞ்ச நாள்தான் செய்றா... பலனையேதான் எதிர்பாக்கறா. கனவு, காட்சி... இல்லை ஸித்தி ஏதாவது வரணும். இதெல்லாம் வரலேன்னா... ஒண்ணும் முன்னேற்றம் இல்லை... தியானம் சரியில்லேன்னு புலம்பறது.

சிரத்தையா செய்யறதுதான் விஷயம். மந்திரத்திலேயோ, வித்தையிலேயோ, பகவானிடமோ நம்பிக்கை வரணும்.

அதோட அருள் வரும்போது வரட்டும்ன்னு இருக்கணும்.

இதெல்லாம் செய்யறது இல்லை.

ஒருமுறை பகவான் பெயரைச் சொன்னாக்கூட வீண் போகாது.

பலன் இருக்கும். பலன்தெரியும்... தெரியாது. ஆனா இருக்கும்.

(104) **டெல்லியிலிருந்து வந்த கிஷோரிலால், இரயில்வே அதிகாரி கேட்டார்.**

**கே: குரு தீட்சை தரணும்.**

ப: நான்கறதுதான் ஆத்மா, ஆத்மாதான் குரு. ஆத்மாதான் அருள். யாரும் ஆத்மா இல்லாமே இல்லை. எல்லோரும் குருவோட தீட்சையிலேதான் இருக்கோம். புறத்திலே தீட்சை எல்லாம் தேவையில்லை.

**கே: புரியுது. புறதீட்சையை நான் சொல்லலை.**

ப: நம்மள விட நெருக்கமா நமக்கு வேறென்ன இருக்கு?

**கே: மூணு மாசத்துக்கு முன்னாடி, கிருஷ்ணர் கனவுல வந்து, 'ஏன் நிராகார உபாசனையை என்கிட்டே கேக்கறே, எல்லாம் ஆத்மாவுலதான் இருக்கு. ஆத்மாதான் எல்லாமா இருக்கு'ன்னு சொன்னார்.**

ப: இது போதுமே! இதிலேயே முழு உண்மை இருக்கே! இது கூட உபசாரமா சொல்றதுதான்.

உண்மையிலேயே இங்கே ஆத்மா மட்டும்தான் இருக்கு. அதைத் தவிர வேற எதுவும் இல்லை.

'எல்லாம்' எங்கே இருக்கு? 'எல்லாம்' கறதே பொய். உலகம் மனசு போடற படம்.

மனசு ஆத்மாவிலே இருந்து வர்றது. அதனாலே ஆத்மாதான் ஏகமாயிருக்கு.

**கே: ஆனாலும் உணர்றதுக்கு கஷ்டமாயிருக்கு.**

ப: உணர்றதுக்கு ஒண்ணும் இல்லை.

அது நித்ய சுத்த, புத்த, முக்த நிலை. நம்மளோட இயல்பாவே எப்பவும் இருக்கு. புதுசா உணர்றதுக்கு ஒண்ணும் இல்லை. அஞ்ஞானம் தொலையணும். தப்பான எண்ணத்தைத்தான் விடணும். அவ்வளவுதான்.

இந்த அஞ்ஞானம் எங்கிருந்து வர்றதுன்னு பாக்கணும். யாருக்கு இந்த அஞ்ஞானம்?

எதைப் பத்தி அஞ்ஞானம்?

இரட்டையைப் பிடிச்சுதான் எல்லாம் வர்றது. இரட்டை மனத்தோட ஸ்வபாவம்.

மனம் ஆத்மாவிலே இருந்து வர்றது.

(106) ***சி.ஆர். ரைட், பரமஹம்ஸ யோகானந்தரின் செகரட்டரி கேட்டார்.***

**கே: கடவுளை எப்படி உணர்றது?**

ப: கடவுள் நமக்குத் தெரியாத ஆள். மேலும் அவர் எங்கேயோ வெளியே இருக்கார். ஆனா ஆத்மா நம்மகிட்டேயே இருக்கு.

நாமங்கறதாத்தான் இருக்கு.

உள்ளங்கை நெல்லிக்கனியா இருக்கறத விட்டுட்டு ஏன் வெளியே தேடணும்.

**கே: ஆத்மாங்கறது என்ன?**

ப: ஆத்மா எல்லோருக்கும் அனுபவமா இருந்தாலும் சரியா யாருக்கும் தெரியலே.

நீங்க எப்பவும் இருக்கேளே... அந்த ‘இருக்கேன்’கறதுதான் ஆத்மா.

நான்கறதுதான் கடவுளோட முதல் பெயர்.

இறைவனைப் பத்தி சொன்ன எல்லாத்தையும் விட பைபிள்லேதான் ரொம்ப சரியா சொல்லியிருக்கா.

'நான்... நானாயிருக்கேன்'. (I Am that I Am)ன்னு பைபிள்லே இருக்கு.

வேற வாக்கியங்களும் இருக்கு. 'பிரம்மைவாஹம்'... 'அஹம் பிரம்மாஸ்மி'... 'ஸோஹம்'... ஆனா ஜெஹோவா மாதிரி இவ்வளவு நேரா சொல்லலை. ஜெஹோவான்னா...... நான் இருக்கேன். 'இருக்கறது'தான் பரமார்த்த சொரூபம். அதுதான் ஆத்மா. அதுதான் கடவுள் எல்லாம்.

நம்மளத் தெரிஞ்சா... கடவுளைத் தெரிஞ்ச மாதிரி. கடவுள் வேற எதுவும் இல்லே. நம்மகிட்டே 'இருக்கறதா' இருக்கறதுதான்.

**கே: உலகத்துல ஏன் இவ்வளவு தீமையிருக்கு?**

ப: நன்மையிருக்கு தீமையிருக்குன்னு யாரோ ஒருத்தனுக்குத் தானே தெரியணும்.

அந்த யாரோ ஒருத்தன் எங்கிருந்து வர்றான்? அவன்தான் அகந்தை. இந்த அகந்தை எங்கிருந்து வர்றதோ அதுதான் கடவுள்.

உங்களுக்கு கடவுளுக்கான இந்த விளக்கம் நல்லாப் புரியும்.

**கே: ஆனந்தத்தை பெறுவது எப்படி?**

ப: ஆனந்தம் பெறுவது இல்லை. நாமளேதான் ஆனந்தம். ஒரு குறையுணர்ச்சி (imperfection) காரணமாத்தான் ஆனந்தத்தை அடையணும்னு நினைக்கறோம்.

அந்தக் குறை உணர்ச்சி யாருக்கு?

விசாரிங்கோ!

தூங்கும்போது ஆனந்தமாயிருக்கோம். இப்போ இல்லை. குறுக்கே எது வந்து கெடுத்தது? அகந்தைதான்.

எங்கேயிருந்து இந்த அகந்தை வர்றதுன்னு பாருங்கோ!

நீங்களே ஆனந்தம்னு தெரிஞ்சுப்பேள்.

ஆனந்தம் புதுசா அடையறது இல்லை.

நம்மளோட ஆனந்தத்தை அடையறதுக்கு அதைத் தவிர வேறயா இருக்கோம்கற அஞ்ஞானமே தொலையணும்.

யாருக்கு இந்த அஞ்ஞானம்?

எனக்குத்தான்.

நான் எங்கேயிருந்து வந்தேன்?ன்னு பாத்தா... நான்கறது போயி... ஆனந்தமே மிஞ்சும்.

அது எப்பவும் இருக்கு.

இங்கேயே இப்போவே நீங்க அதுதான்.

எல்லா சந்தேகத்துக்கும் இதுதான் சூட்சுமம்.

சந்தேகம் யாருக்கு வர்றது?

நமக்குத்தான் வர்றது.

நாம யாருன்னு பாத்தா...உள்ளது துலங்கும்.

உள்ளது மட்டும்தான் இங்கே இருக்கு. அதுதான் மிஞ்சும்.

உலகம்கறது நம்மளோட விரிவுதான். நம்மள்லே இருந்து வேற இல்லை.

**கே: சிறந்த வாழ்க்கை எது?**

ப: அவன் அஞ்ஞானியா ஞானியாங்கறதப் பொறுத்து மாறும்.

ஒரு ஞானி தன்னில் இருந்து வேறாவோ, ஒரு பகுதியாவோ எதையும் பாக்கமாட்டான். அவன்தான் எல்லாம்.

உலகம்ன்னு ஒண்ணு இருக்கு... அதிலே உடம்புன்னு ஒண்ணு இருக்கு... உடம்புக்குள்ளே நாம இருக்கோம்ன்னு பாக்கறது; இப்படி கற்பிச்சுக்கறதுதான் தவறு. பார்வை எப்படியோ காட்சி அப்படி.

ஸ்தூலக் கண்ணாலே பாத்தா... ஸ்தூலந்தான் தெரியும். எல்லோரையும் ஸ்தூலமாத்தான் பாப்போம்.

சூட்சுமக் கண்ணாலே பாத்தா... எல்லாம் சூட்சுமமாத் தெரியும்.

அந்தமில்லாக் கண் கொண்டு பாத்தா... அதாவது கண்ணே ஆத்மாவாயிடுத்துன்னா... கண் அந்தமில்லாமல் ஆயிடும். ஏன்னா... ஆத்மா அந்தமில்லாதது.

அங்கே ஆத்மாவைத் தவிர வேற ஒண்ணும் இல்லை... பாக்கறதுக்கு.



*பரமஹம்ஸ யோகானந்தர் கேட்டார்.*

**கே: என்கிட்டே வர்றவங்களை நல்ல முறையில ஆன்மீகத்துல எப்படி உயர்த்துறது? அவங்களுக்கு என்ன உபதேசம் கொடுக்கறது?**

ப: ஒவ்வொருத்தர் பக்குவத்தையும், பூர்வ ஸம்ஸ்காரத்தையும் பொறுத்து உபதேசம் மாறும்.

எல்லோருக்கும் ஒரே உபதேசம் கிடையாது.

**கே: ஏன் உலகத்துல இவ்வளவு துயரம் இருக்கு? இறைவன் அவனுடைய சர்வவல்லமையால ஒரே நொடியில எல்லாத்தையும் போக்கி எல்லாரையும் இறைவனை உணர்ந்தவங்களா செய்ய முடியாதா?**

ப: துன்பம்தான் இறைவனை உணர்றதுக்கான வழி.

**கே: வேற மாதிரி எதுவும் பண்ணக்கூடாதா?**

ப: அது அவரிஷ்டம்.

**கே: மதம், யோகம் இதெல்லாம் துன்பத்துக்கு மருந்தாகுமா?**

ப: விடுபட உதவும்.

**கே: ஏன் துன்பம் இருக்கணும்?**

ப: யார் துன்பப்படறா? துன்பம்ன்னா என்ன?



(109) *பஞ்சாபில் இருந்து வந்த இரண்டு பேர் கேட்டனர்.*

**கே: என்னுடைய நண்பர்கள் உண்மையை உணராமல் மயக்கத்துல இருக்காங்க அதை எப்படி நீக்கறது? பொதுவா எல்லாரையும் மயக்கத்துல இருந்து தெளிவிக்கறது எப்படி?**

ப: நீங்க மயக்கத்துலே இருந்து தெளிஞ்சுட்டேளா?

எந்த சக்தி உங்களை மயக்கத்துலே இருந்து தெளிவிக்குமோ அதே எல்லோரிடமும் தெளிவிக்கும்.

**கே: என்னோட மயக்கத்தை எப்படிப் போக்கிக்கறது?**

ப: யாருக்கு மயக்கம்ன்னு விசாரிங்கோ.

உண்முகப்படுங்கோ...எல்லா விசாரணையும் உங்களை நோக்கித் திருப்புங்கோ...! அப்போ... உங்களிடம் வேலை பாக்கற சக்தி, எல்லோரிடமும் வேலை பாக்கும்.

(111) **ஆந்திராகாரர் ஒருவர் கேட்டார்.**

**கே: பிரம்மபாவத்துல இருக்கறதுதான் முக்தியா?**

ப: 'நான் பிரம்மம்', 'எல்லாம் பிரம்மம்' இப்படியெல்லாம் நினைக்காம சும்மாயிருக்கறதுதான் முக்தி.

**கே: அருட் செயல்ன்னா என்ன?**

ப: நாம சும்மாயிருக்க, வேலை தானா நடக்கறதுதான்.

**கே: கர்ம யோகம்னா என்ன?**

ப: ஒரு ஆண், பெண் வேஷங் கட்டி ஆடினா... அவனுக்கு, தான் ஆண்ங்கற நினைப்பு எப்படி இருக்குமோ, அப்படி எந்த வேலை பாத்தாலும்... 'ஸத்தை' விடாம வேலை பாக்கணும்.

அதாவது நாம இருக்கோம்ங்கற உணர்வை விடாம வேலை பாக்கணும்... அதான் கர்மயோகம்.

**கே: சித்த சுத்தின்னா என்ன?**

ப: வேற நினைப்புக்கு இடம் கொடுக்காம ஒரே நினைப்பிலே இருக்கறது. இதை ஏகாக்கிரம்ன்னும் சொல்வா.

(114) **ஃபான் வான் வெல்திம், கிழக்கு ஜெர்மானிய முதலாளி கேட்டார்.**

**கே: நாம யார்ன்னு தெரியத் தெரிய உலகத்துக்கும் நமக்கும் ஒரு இசைவு (harmony) கூடிக்கொண்டே போகும். சரிதானா?**

ப: ஆமா.

(115) *மாரீஸ் பிரைடு்மேன் கேட்டார்.*

**கே: நாம ஆசைப்படாமயே சில வித்தியாசமான அனுபவம் ஏற்படுது. அது எப்படி வருது?**

ப: இப்போ ஆசைப்பட்டதா இல்லேன்னாலும் எப்பவோ ஆசைப்பட்டதா இருக்கும்... மறந்திருப்போம். இப்போ பலன் தரும்.

அதனாலேதான் ஞானிக்கு பிராப்தம் மட்டும் இருக்குன்னு சொல்றா.

அதுவும்கூட பிறர் பார்வையிலேயேதானே தவிர ஞானிக்கு இல்லை.

**கே: ஜீவன் கர்மத்துக்கு கட்டுப்பட்டவன்தானே?**

ப: கர்மம் அதுபாட்டுக்கு நடக்கட்டும்.

நாமதான் செய்றோம்கற நினைப்பு இருக்கற வரைக்கும் பலனையும் அனுபவிப்போம்.

**கே: கர்மத்துல இருந்து எப்படி விடுபடறது?**

ப: யார் கர்மம்ன்னு பாருங்கோ!

நாம எதையும் செய்யலேன்னு தெரியும்.... அப்படித்தான் விடுபடணும்.

அதுக்கு ஈசனருள் வேணும்.

தானா நம்மளோட முயற்சியில்லாமே வர்ற கர்மம் நம்மள ஒண்ணும் பண்ணாது.

ஒரு ஞானியும் கர்மங்கள் செய்யற மாதிரி தெரியும்.

எந்த ஒரு கர்மமும் முயற்சியோ, சங்கல்பமோ இல்லாம வராது.

எல்லாருக்கும் சங்கல்பம் இருக்கும்.

சங்கல்பம் இரண்டு வகை:

பந்த ஹேது — பாதிக்கும், பந்தப்படுத்தும்,
போக ஹேது — பாதிக்காது, பந்தப்படுத்தாது.
முன்னதை விலக்கணும். பின்னதை அனுபவிச்சுக்கணும்.
கர்மம் இல்லாம... பலன் ஏற்படறது இல்லை.
சங்கல்பம் இல்லாம... கர்மம் ஏற்படறது இல்லை.

கர்த்துருத்துவம் இருக்கற வரைக்கும் முக்தியே பூர்வ கர்ம விளைவுதான்.

(117) *சிலோன்காரர் ஒருத்தர் கேட்டார்.*

**கே: ஞானம் அடைய முதல்படி என்ன? புஸ்தகத்துல பிரயோஜனப்படலை. நீங்கதான் உதவணும்.**

ப: நாம புஸ்தகத்திலே இருந்தா புஸ்தகத்திலே கிடைப்போம்.
பெரிய ஆச்சர்யம் நம்மைப் புஸ்தகத்திலே தேடறதுதான்.
அங்கேயா இருக்கு?
ஆனா புஸ்தகந்தான் இந்த கேள்வியைக் கேக்க வச்சுருக்கு.

(121) *இரண்டு முகமதியர்களின் கேள்வி.*

**கே: இறைவனுக்கு உருவம் இருக்கா?**

ப: யார் சொன்னா?

**கே: அப்படின்னா ஏன் விக்கிரகங்களைக் கும்பிடறாங்க? தப்பில்லையா?**

ப: இறைவனை விட்டுடுங்கோ, நமக்கு அவரைத் தெரியாது.
உங்களைக் கேப்போம்... உங்களுக்கு உருவம் இருக்கா?

**கே: இருக்கு. இதோ உங்க முன்னாடி இருக்கோமில்லையா இதுதான்.**

ப: அப்போ தாடியோட அஞ்சடி உயரத்திலே கை காலோட இருக்கற... இதுதான் உங்களோட உருவமா?

**கே: கண்டிப்பா.**

ப: தூங்கும்போது எப்படி இருந்தீங்க?

**கே: நான் முழிச்ச பிறகு, நான் இப்படியேதான் இருக்கேன்னு தெரியுது. அப்படித்தான் தூங்கும்போதும் இருந்துருக்கணும்.**

ப: இந்த உடம்புதான் நீங்கன்னா... ஏன் செத்துட்டா புதைக்கணும்?

உடம்புதான் இருக்கே! உடம்பு, 'புதைக்காதீங்கோ'ன்னு கத்தணுமில்லையா!

**கே: ஆமா. நான் இந்த உடம்புல இருக்கற ஜீவன்.**

ப: பாத்தேளா!

உங்களுக்கு உண்மையிலேயே உருவம் இல்லை.

ஆனா... இந்த உருவத்தோட இருக்கேள்.

நம்மள நாம உருவமா பாக்கற வரைக்கும், இறைவனை ஏதோ ஒரு விதத்திலே உருவமாத்தான் கும்பிடுவோம்.

அதிலே என்ன தப்பு?



(122) **கிருஸ்துமஸ் பண்டிகை விடுமுறைக்கு வந்திருந்தவர்கள் கேட்டார்.**

**கே: ஏகமான உணர்வைப் பெறுவது எப்படி?**

ப: உங்க கேள்வியிலேயே பதில் இருக்கே!

ஏகமான உணர்வை எப்படிப் பெற முடியும்?

**கே: ஆத்மா, அனாத்மா, பரமாத்மா அப்படின்னா என்ன?**

ப: ஆத்மான்னா ஜீவாத்மா. மற்றது நேரடியா அதே பொருள்தான்.

ஆத்மா நித்ய ஸித்தம், அதாவது எப்பவும் இருக்கறது.

எல்லோரும் ஆத்ம ஞானம் அடையணும்னு விரும்பறா.

தன்னைத்தானே தெரிஞ்சுக்கறதுக்கு என்ன உதவி வேணும்?

நாம இருக்கோம்ன்னு தெரியறதுக்கு நமக்கு முன்னாடி கண்ணாடியைக் காட்டணுமா? இந்த நாம இருக்கோம்ன்னு இருக்கில்லையா... அதுதான் ஆத்மா.

எல்லாரும் என்ன நினைக்கறோம்... ஆத்மான்னா... ஏதோ புதுசா பாக்கப் போறோம்ன்னு... அது எப்பவும் இருக்கறது. மாறாம இருக்கறது.

அது ஜோதி மயமா, ஒளி வடிவா இருக்கும்ன்னு நினைக்கறோம்.

அது ஒளியில்லை; இருளில்லை; 'இருக்கறது'தான் அது.

அதைச் சொல்ல முடியாது.

அதிகபட்சமா சரியா சொல்லணும்னா 'நான் இருக்கேன்னு நான் இருக்கேன்' (I Am that I Am).

சாஸ்திரங்கள்லே ஆத்மா, மயிர் நுனி, ஜோதி, கட்டை விரல் அளவு, ஆகாயத்தை காட்டிலும் பரந்தது, நுண்ணியதை விட நுண்ணியது, அப்படி இப்படின்னு என்னன்னமோ சொல்லியிருக்கு.

சாரம் இல்லை. உபசாரம்தான்.

உண்மையிலேயே ஆத்மா வெறும் 'இருப்பு' மாத்ரம்தான். இருக்கறதுக்கும் இல்லாததுக்கும் ஆதாரமான இருப்பு.

வெறும்'அறிவு' மாத்ரம்தான். அறிவுக்கும் அறியாமைக்கும் ஆதாரமான அறிவு.

அதை எப்படிச் சொல்ல முடியும்?

ரொம்ப ரொம்ப சாமான்யமான இருப்பு.

இதைத்தான் தாயுமானவர்,

**'நான் என்று ஒரு முதல் உண்டு என்ற**
**நான் தலை நாண என்னுள்**
**தான் என்று ஒரு முதல் பூரணம்**
**ஆகத் தலைப்பட்டு ஒப்பில்**
**ஆனந்தம் தந்து என் அறிவை எல்**
**லாம் உண்டு அவசம் நல்கி**
**மோனம் தனை விளைத் தால்இனி**
**யாது மொழிகுவதே'** ... ன்னு பாடறார்.

மொத்தத் தாயுமானவர் பாடல்களோட இதயம்ன்னே இந்தப் பாட்டைச் சொல்லலாம்.



(123) *டாக்டர் ஸையது, முஸ்லிம் பேராசிரியர், அலஹாபாத் கேட்டார்.*

**கே: இந்தப் படைப்போட நோக்கம் என்ன?**

ப: இப்படிக் கேள்வி கேக்க வைக்கறதுக்குத்தான்.

**கே: சரி, நான் மாயையால மறைக்கப்பட்டு இருக்கேன். அதுல இருந்து எப்படி விடுபடறது?**

ப: யார் மாயையாலே மூடப்பட்டிருக்கறது?
யார் விடுபடணும்னு விரும்பறது?

**கே: நீங்க யாருன்னு கேக்கறதால சொல்றேன். இதை கேக்கறது, மனம், புத்தி, அகங்காரம், உடம்புங்கறதா அறியாமையில உருபெற்று இருக்கற ஒரு 'போலி நான்'தான். பால்பிரண்டன் புத்தகத்தை படிச்சுட்டு இந்த விசாரத்தை நான் முயற்சி பண்ணுனேன். மூணு நாலு தடவை, 'நான்'கறது பிரகாசமா இருந்துச்சு! படிப்படியா அந்த பிரகாசம் குறைஞ்சுடுச்சு! இந்த 'உண்மை நான்'லயே எப்படி நிலை பெறுவது? உபாயம் ஏதும் சொல்லுங்க.**

ப: புதுசா எது வருதோ... அது காலத்திலே போயிடும்.

**கே: அப்போ நான் எப்படி எப்பவும் இருக்கற உண்மையை அடையறது?**

ப: இப்போவே நீங்க அதாத்தான் இருக்கேள்.
உங்களை விட்டு நீங்க எப்போவாவது இருக்க முடியுமா?
நீங்க நீங்களாயிருக்க என்ன முயற்சி வேணும்?

எந்த முயற்சியும் தேவையில்லே. ஏன்னா... நீங்க எப்பவும் அதாத்தான் இருக்கேள்.

**கே: நான் உங்க கூட இருக்கறப்ப மனசு ரொம்ப அமைதியா இருக்கு. உங்களை மறந்தா.... இப்படி திரும்புனா விஷயங்களால இழுக்கப்படுகிறேன்.**

ப: இந்த விஷயங்கள் எல்லாம் உங்களை விட்டு வேறாயிருக்கா? நீங்க இல்லாமே இந்த விஷயங்கள் இருக்கா? நீங்களேதான் எல்லாம்.

**கே: 'நான்தான் எல்லாம்'ன்னு எப்படித் தெரிஞ்சுக்கறது?**

ப: அதாவே இருந்துகொண்டு அதை எப்படித் தெரிஞ்சுப்பேள்? இல்லே... உங்களிடம் இரண்டு 'நான்' இருக்கா? ஒரு நான் இன்னொரு நானைத் தெரிஞ்சுக்கறதுக்கு.

**கே: ஐயா நான் மறுபடியும் கேக்கறேன். இந்த எல்லாத்தோட உண்மையை எப்படி தெரிஞ்சு அதை அனுபவிக்கறது?**

ப: புதுசா நீங்க எதையும் தெரிஞ்சுக்க வேண்டியது இல்லை. புதுசா நீங்க எதையும் அனுபவிக்க வேண்டியது இல்லை; எதாவும் ஆக வேண்டியதும் இல்லை.

போக்கவேண்டியது எல்லாம் "இன்னும் எனக்குத் தெரியலே", 'இன்னும் அனுபவமாகலே' அப்படிங்கற நினைப்பைத்தான்.

அப்படி ஒரு நினைப்பு கிளம்பறது. ஒவ்வொரு நினைப்பு கிளம்பறபோதும் ஒரு 'நான்' கிளம்பறது. அதோட சேந்துக்கறேள்.

அந்த நினைப்பைப் பாருங்கோ! யாருக்குன்னு பாருங்கோ!

அந்த நினைப்பைப் பாக்கறதுக்கு நீங்க இருக்கேளே... அதுதான் ஆத்மா.

நீங்க இருக்கேள் பாருங்கோ...! அதுதான் அனுபவம். 'இருக்கேன்'கறதேதான் ஆத்மானுபவம்.

**கே: ஆத்ம ஞானம் அடைய நினைக்கறவன் பாக்கற வேலையை விட்டுறலாமா இல்லை தொடர்ந்து பாக்கலாமா? கர்மயோகம் சிறந்ததா? சன்யாசம் சிறந்ததா?**

ப: நீங்க உங்களை விட்டு இருக்க முடியுமா?

விட்டுடறதுன்னா என்ன?

**கே: ஸத்சங்கம்னா என்ன?**

ப: ஸத் நம்மிடமேதான் இருக்கு.

**கே: 'நான் யார்'ங்கற புஸ்தகத்துல நீங்க மனம் ஹிருதயத்தில இருந்து கிளம்பறது. ஹிருதயம்தான் மனத்தோட இருப்பிடம்னு சொல்லியிருக்கீங்களே அப்படியா?**

ப: மனமேதான் ஹிருதயம்;
மனமேதான் ஆத்மா.

**கே: மனம் ஹிருதயத்துல இருந்து வெளிப்படுதா? இல்லை ஹிருதயமேவா?**

ப: மனம்.... ஹிருதயமேதான். மனம்... ஆத்மாவேதான்.

**கே: அருளுக்கு தூரத்துல இருந்தா அருளுக்கு ஆட்பட முடியாதா?**

ப: காலம் தேசம் எல்லாம் நமக்குள்ளே இருக்கறது.
நீங்க எப்பவும் உங்களிடமேதானே இருக்கேள்!
எப்படி காலமும் தேசமும் உங்களை உங்ககிட்டேயிருந்தே பிரிக்கும்?

**கே: தூங்கும்போது நான் இல்லையே!**

ப: அதை இப்போதானே சொல்றேள்!
இப்போ கிளம்பினவன் அப்படிச் சொல்றான்.
நாம தூங்கும்போதும்.... விழிப்பின்போதும்... கனவு காணும்போதும்... எப்பவும் இருக்கோம்.



(128) *பிரெஞ்சுப் பெண்மணி கேட்டார்.*

**கே: நான்கறதை எப்படி கண்டுபிடிக்கறது?**

ப: இப்போ நீங்க இருக்கேள்ன்னு எப்படிச் சொல்றேள்?

யாராவது உங்க முன்னாடி கண்ணாடியைக் காட்டறாளா?

நல்ல இருட்டுலே நீங்க இருக்கேள்...ன்னு எப்படித் தெரியறது?

யாராவது உங்க முன்னாடி விளக்கு காட்டறாளா?

இல்லே நீங்க இருக்கறதை புஸ்தகத்திலே படிச்சுத் தெரிஞ்சு கொண்டேளா?

நீங்க இருக்கறது உங்களுக்கு எப்படித் தெரியும்?

**கே: நான் இருக்கறது என் அனுபவம்.**

ப: பேஷ்! அனுபவங்கறதுதான் சரியான வார்த்தை.

தெரியறதுன்னு சொன்னாக்கூட... தெரியறது, தெரிஞ்சுக்கற வன்னு தன்மை முன்னிலை வந்துடும்.

அனுபவம்தான் சரியான வார்த்தை.

அங்கே இரட்டை இல்லை. அது எப்பவும் இருக்கறது.



(129) ***பி.வி. நரசிம்ம சுவாமியின் நண்பர் கேட்டதற்கு பகவான் சொன்னது.***

ப: தெளிவில்லாத அப்பியாசத்தைவிட தெளிவு சிறந்தது;

வெறும் தெளிவை விட தெளிவோடு கூடிய அப்பியாசம் சிறந்தது;

தெளிவோடு கூடிய அப்பியாசத்தை விட கர்ம பல பரித்தியாகம் சிறந்தது;

ஞானி செய்யற எல்லாக் கார்யமும் எல்லா அப்பியாசத்தை விடவும் சிறந்தது.

**கே: யோகத்துக்கும், சரணடையறதுக்கும் என்ன வித்தியாசம்?**

ப: சரணடையறது பக்தி யோகம்.

நான் எழும் மூலத்தை நாடி நான்கறது இல்லாம போறதுதான் ப்ரபத்தி, சரணடையறது, ஞானம் எல்லாம்.



(130) *இராமகிருஷ்ணா மிஷன் லட்சுமணா பிரம்மச்சாரி கேட்டார்.*

**கே: நான் யார்ன்னு கேக்கறதே ஒரு நினைப்புத்தானே! அது எப்படி மனத்தை நாசம் பண்ணும்?**

ப: ரிஷி கூட்டத்திலே இராமனும் ஒரு ரிஷியா தன்னோட வேஷத்தை மறைச்சு நின்னான். ரிஷி பத்தினி சிலர், சீதையோட கற்பைச் சோதிக்க...அந்த ரிஷிகூட்டத்திலே இராமன் யார்ன்னு காட்டச் சொன்னப்போ... சீதையும் ஒவ்வொரு ரிஷியையா இல்லை இல்லைன்னு சொல்லிண்டே வந்து, இராமன்கிட்டே வந்தப்போ... மௌனமா தலையைக் குனிஞ்சு நின்னாளாம். அவளோட மௌனமே பேசித்து.

அதே மாதிரி வேதங்கள் உள்ள பொருளை விளக்க முயற்சி பண்ணி, 'நேதி நேதி' ன்னு புறக்கணிச்சுக்கொண்டே வந்து, கடைசிலே மௌனமாயிடுத்து.

நான்கற எண்ணத்தோட மூலத்தை அடைஞ்ச உடனே அது மறைஞ்சுடும்.

மிஞ்சினது ஆத்மா.

நானார் எனும் நினைவு பிற நினைவுகளை எல்லாம் நீக்கி, பிணஞ்சுடு தடிபோலே தானும் நீங்கிடும்.

**கே: பதஞ்சலி யோக சூத்திரம் ஸம்யமத்தைதானே சொல்லுது?**

ப: பரவஸ்துவோட ஏற்படற ஸம்யமம்தான், மனோ நாசத்துக்கு... இன்னொரு பெயர்.



(131) *சுப்பாராவ் கேட்டார்.*

**கே: முக்ய பிராணன்னா என்ன?**

ப: மனமும் பிராணனும் எங்கேயிருந்து உதிக்கறதோ அதுதான் முக்ய பிராணன். சிலர் குண்டலினின்னு சொல்றா.

உணர்வு எங்கேயிருந்தும் பிறக்கலே.

அது எப்பவும் இருக்கு.

அகந்தை பிறக்கறது. மற்ற எண்ணங்களும் அப்படியே.

உணர்வு இருக்கறதாலேதான் இதெல்லாம் விளங்கறது இல்லேன்னா இல்லை.

**கே: மோட்சம்னா என்ன?**

ப: நாம உண்மையிலேயே பிறக்கலேன்னு தெரிஞ்சுக்கறதுக்குப் பெயர்தான் மோட்சம்.

**கே: ஹிருதயத்துக்கு உருவமில்லை. அப்போ எப்படி ஹிருதயத்த தியானம் பண்ண முடியும்? ஹிருதயத்தை ஒரு உருவத்தோட இருக்கறதா பாவிக்கணுமா?**

ப: இல்லை. 'நான் யார்'ங்கற விசாரமே முக்யம்.

தூங்கும்போதும், விழிப்பிலேயும் 'நாம'ங்கறது ஒரே மாதிரியாதான் இருக்கு.

ஆனா விழிப்பிலே தூக்கம் இருக்கு.

யாரு தூக்கத்திலே இருந்து விழிச்சதுன்னு கேட்டா, நான்தான்னு சொல்றோமில்லையா... அந்த 'நான்'கறத பிடிச்சுக்கணும்.

அதைப் பிடிச்சா...எப்பவும் இருக்கற 'நான்' தெரிஞ்சுடும்.

'நான் யார்'ன்னு விசாரிக்கறதுதான் முக்யம்... ஹிருதயத்திலே தியானம் இல்லை.

உள்ளே வெளியே அப்படின்னெல்லாம் கிடையாது. உள்ளேயும் ஒண்ணுதான். வெளியேயும் ஒண்ணுதான்.

ஹிருதயத்திலே தியானம் பண்றதுன்னு ஒண்ணு இருக்கு.

அது யோக பரமானது. அது விசாரம் இல்லை. அது அப்பியாசம்தான்.

மனம் லயமாகும்போது ஹிருதயத்திலே தியானம் பண்றவாளுக்கு உணர்வு இருக்கும்.

மத்த ஸ்தானங்கள்லே தியானம் பண்றவாளுக்கு உணர்வு இருக்காது.

லயமாயிடுத்துன்னும் தெரியாது.

லயத்திலே இருந்து செயல்பட ஆரம்பிக்கும்போதுதான் இவ்வளவு நேரம் லயமாயிருந்ததுன்னே தெரியும்.

(132) *மெத்தப் படித்த ஒருவர் கேட்டார்.*

**கே: பரமாத்மான்னு ஒண்ணு உண்மையிலையே இருக்கா? அதுக்கும் இந்த உலகத்துக்கும் என்ன சம்பந்தம்?**

ப: பரமாத்மாவும் உலகமும் வேற வேறயாவாயிருக்கு?
மனம்தான் கேள்விகளை எல்லாம் கேக்கறது.
விழிக்கும்போது மனம் வந்துடறது.
தூங்கும்போது மனம் ஒடுங்கிடறது.
மனம் இருக்கற வரைக்கும், இந்த மாதிரி கேள்விகளும், சந்தேகங்களும் இருந்துகொண்டேதான் இருக்கும்.

**கே: பரமாத்மாவை அடையறதுக்குப் பல படிகள் இருக்கா? உண்மையில் பல நிலைகள் இருக்கா?**

ப: உள்ள பொருள்லே எந்த நிலையும் இல்லே.
ஜீவனுக்குப் பல அனுபவ நிலைகள் இருக்கு.
ஸத்யத்துக்கு இல்லே.
எது புதுசா வந்தாலும் போயிடும்.
ஆனா இருக்கறது இங்கேயே இப்போவே எப்பவும் மாறாம இருக்கும்.

**கே: அப்படின்னா எனக்கு ஏன் தெரியலை? அஞ்ஞானம் மறைக்குதே?**

ப: யாருக்கு அஞ்ஞானம்?
பரமாத்மா வந்து சொல்லித்தா, 'என்னை மறைச்சி வைத்திருக்கு'ன்னு?
ஜீவன்தான் சொல்றான், 'பரமாத்மாவை மறைச்சிடுத்து'ன்னு.
யாருக்கு இந்த அஞ்ஞானம், மறைப்புன்னு பாரு!

**கே: ஏன் பூரணத்துல இவ்வளவு குறை. பூரணம் ஏன் குறையுணர்ச்சியாச்சு? (Imperfect)**

ப: யாருக்குக் குறையுணர்ச்சி?

யாருக்கு இந்தக் குறைபாடு?

பூரணம் குறைபாடா இல்லை. அதனாலே அது கேள்வி கேக்காது.

உடம்பு ஜடம். அதுவும் கேள்வி எதுவும் கேக்காது.

இரண்டுக்கும் இடையிலே ஏதோ ஒண்ணு கிளம்பிதான் இந்தக்கேள்வி எல்லாம் கேட்டுக்கொண்டிருக்கு. சந்தேகப்படறது.

யார் அது?

கிளம்பின ஒருத்தனா? இல்லே எப்பவும் இருக்கறவனா?

பூரணப் பொருளாகவே நாம இருந்தும்... ஏன் குறைபாடுடையவனா நம்மளக் கருதணும்.

இதுதான் எல்லா மதத்தோட சாராம்சமும்.

அனுபவங்கள் வேறு வேறா இருந்தாலும் அனுபவிக்கறவன் ஒருத்தன்தானே.

'நான்' கறதுதான் பூரணம்.

தூக்கத்திலே எந்த வேறுபாடும் இல்லை. அது பூரணத்தைக் குறிக்கறதே!

**கே: பூரணப் பொருளாகவேயிருந்தும் அதை ஏன் நான் உணரலை?**

ப: தூங்கும்போது எந்தக் குறையுணர்ச்சியும் இல்லை.

தூங்கும்போது இருக்கற 'நான்' பூரணமாயிருக்கு.

விழிப்புலே இருக்கற 'நான்'தான்... குறையுணர்ச்சியோட இருக்கறதா... தன்னை நினைக்கறது. ஏன்னா... அது போலி 'நான்' உண்மையிலேயே நான்கறதிலே இருந்து வேற.

**கே: தூக்கம், கனவு, நனவு மூணு நிலையிலும் நான் ஒரே மாதிரிதான் இருக்கேன்னா.... அகந்தை என்னை மறைச்சுடுச்சா? இல்லை நானே என்னை மறைச்சுக் கொண்டேனா?**

ப: நீங்க இல்லாமே ஏதாவது உதிக்குமோ?

**கே: நான் எப்பவும் ஒரே மாதிரிதான் இருக்கேன்.**

ப: நீங்க அதைப் பாக்கறதாலேதான், அது கிளம்பி வந்ததா தெரியறது.

தூக்கத்திலே இந்தப் பிரச்சனை இருக்கா?

புதுசு இப்போ எது?

**கே: புலன்களும் மனசும்தான்.**

ப: யார் இதைச் சொல்றது?

தூக்கத்திலே இருந்தவனா சொல்றான்?

புதுசா ஏதோ ஒருத்தன் போலியா நான்னு கிளம்பி இப்போ பேசறான்.

தூக்கத்துலே இருந்தவன்னா... தூக்கத்திலேயே இந்தக் கேள்வியை எழுப்பியிருப்பான்.

எப்பவும் இருக்கறதுன்னு ஒண்ணு இல்லாமே... புதுசா ஏதோ ஒண்ணு எப்படிக் கிளம்ப முடியும்?

உண்முகப்பட்டு இதுக்கெல்லாம் ஒரு முடிவு கட்டு!

பேசிக்கொண்டேயிருக்கறதிலே ஒரு பிரயோஜனமும் இல்லை.

**கே: உங்க அருளில்லாம இதுக்கெல்லாம் முடிவுகட்ட முடியாது. நான் படிக்கறதுக்குத்தான் வந்துருக்கேன். விவாதம் பண்ண வரலை.**

ப: முதல்லே நீங்க யார்ன்னு தெரிஞ்சுக்கோங்கோ...!

அதுக்கு எந்த சாஸ்திரமும் தேவையில்லே... எந்தப் பாண்டித்தியமும் தேவையில்லே.

நாம இருக்கறது மிகவும் எளிமையான அனுபவம்.

நாம இருக்கோங்கற அந்த அனுபவம்... இங்கேயே இப்போவே இருக்கு.

நீங்க உங்களையே தொலைச்சுட்டதாவும் எல்லோரிடமும் போய் என்னைப் பாத்தேளா? என்னைப் பாத்தேளா? யாராவது பாத்தா கண்டுபிடிச்சுக் கொடுங்கோன்னு கேக்கறேள்.

'உன்னை நீ அறிந்தாயாகில்
உனக்கு ஒரு கேடும் இல்லை
என்னை நீ கேட்டதாலே ஈதுரைத்தேனே'

- கைவல்ய நவநீதம்

நம்மள பிடிச்சுக்கொண்டுதான் இந்த அகந்தை ஆடறது. நம்மள ஒண்ணும் ஆட்டலை.

உங்களை விடாம இருந்தா அது விட்டுடும். ஓடிடும்.

அதுவரைக்கும் ஞானி 'இதோ இங்கேயே இருக்குன்னுவான்'!

அஞ்ஞானி 'எங்கேன்னுவான்'!

**கே: பிரச்சனையோட முடிச்சே நம்மள அறியாததுலதான் இருக்கு.**

ப: ஆமா. அப்படித்தான்.

(133) ***பகவான் பொதுவாகச் சொன்னது.***

ப: அத்வைதத்துலே இரண்டு கட்சி இருக்கு.

ஒண்ணு திருஷ்டி சிருஷ்டி கட்சி

இன்னொன்னு சிருஷ்டி திருஷ்டி கட்சி

• இது இரண்டும் தெரிஞ்சதுதான்

தாந்திரீக அத்வைதம்னு ஒண்ணு இருக்கு, அதுலே மூணுமுதல்... அதாவது உயிர் (ஜீவன்), கடவுள் (ஈஸ்வரன்), உலகம் (ஜகம்) மூணையும் ஒத்துப்பா.

அவாளோட பிரகாரம் இந்த மூணு முதலும் உண்மை. அது மட்டும் இல்லை, இந்த மூணு முதலுக்கு அதீதமாவும் உண்மை இருக்கும்பா.

இதுதான் தாந்திரீகர்களின் அத்வைதம்.

உண்மையிலேயே உண்மையை வரையறுக்க முடியாது.

இந்த மூணு முதலும் பர உண்மைக்கு வேறா இல்லை.

எல்லோரும் கடவுள் (ஸத்யம்) எங்கும் நிறைந்த பொருள்னு ஒத்துக்கறா.

அப்போ ஈஸ்வரன், ஜீவனுக்கு உள்ளேயும் இருக்கணுமே...! அதனாலே ஜீவனும் அழிவில்லா எப்பவும் இருக்கற பொருள்தான்.

உண்மையிலேயே ஜீவன்... கிஞ்சிக்கிய ஞானம் உடையவன் இல்லை. கிஞ்சிக்கியத்துவம் அவனாலே கற்பிக்கப்படறதுதான்.

ஜீவன் சர்வக்ஞத்துவம் வாய்ந்தவன்தான். அவனுடைய ஞானத்தின் வரம்பு எதுன்னா... மௌனம்தான்.

இந்த உண்மையையே தட்சிணாமூர்த்தி வெளிப்படுத்தறார்.

மும்முதலை உண்மைன்னு சொல்றவா அதை இன்னும் அனுபவிக்கறான்னுதான் அர்த்தம். அகந்தையோட தன்மையது.

இறைவனின் உருவங்கள் நுணுக்கமா சொல்லப்பட்டுருக்கு. அந்த நுணுக்கங்கள் பர உண்மையையே குறிக்கும். இல்லேன்னா... ஏன் அதுக்கு இத்தனை விசேஷம் கொடுக்கணும்.

யோசிங்கோ!

உருவம் வந்து ஒரு குறியீடுதான். இந்த நாம ரூபத்துக்குப் பின்னாலே இருக்கறதுதான் ஸத்யம்.

சைவ சித்தாந்தம், வேதாந்தம் எல்லாம் பொதுவிலே ஒண்ணுதான். இல்லைன்னா ஆசாரியார் அத்வைதத்திலே பெரிய வித்து... ஏன் இத்தனை ஸ்தோத்திரம் பண்ணணும்? தெரியாமலா பண்ணுவா. தெரிஞ்சுதான் எல்லாம்.



(134) **யாரோ கேட்டார்.**

**கே: ஹிருதயம்னா என்ன?**

ப: அனுபவமாவே விசாரிச்சு தெரிஞ்சுக்கோங்கோ!

நாம யார்ன்னு விசாரிக்கணும். விசாரணை ஞானத்திலே முடியும்.

ஹிருதயம் தன்னோட வேலையைத் தானா செய்யும்.

ஹிருதயம்தான் ஞான ஸ்தானம். அது உள்ளே, வெளியே, அப்படி, இப்படி எல்லாம் இல்லை.



(135) *மூன்று ஐரோப்பிய பெண்மணிகள், தியாசபிக்கல் கான்பிரன்ஸ்க்கு வந்தவர்கள் கேட்டது.*

**கே: மொத்த உலகமும் சரியாத்தான் இருக்கா? இல்லை தவறாயிருக்கா? நாமதான் சரி பண்ணணுமா?**

ப: எல்லாம் சரியாத்தான் இருக்கு.

நாமதான் தவறியிருக்கோம்.

நம்மள சரி பண்ணிக்கொண்டா எல்லாம் சரியாத்தான் இருக்குன்னு தெரியும்.

**கே: தூங்கும்போது நாம எப்படியிருக்கறோம்கறத அனுபவிச்சு பாக்கறதுக்கு ஏதும் விசேஷ பயிற்சியிருக்கா?**

ப: எந்தப் பயிற்சியும் இல்லே.

எல்லோரும் 'சுகமாத் தூங்கினோம்' 'ஒண்ணும் தெரியலே'ங்கறோம்.

'ஒண்ணும் தெரியலே'ங்கறதுதான் தூக்கத்தோட அனுபவம்.

**கே: உலகத்துல இருக்கற துன்பத்துக்கெல்லாம் காரணம் என்ன? அதை எப்படி சரி பண்றது?**

ப: உன்னை யாருன்னு தெரிஞ்சுகொண்டா போதும். உண்மையை உணர்ந்தா போதும்.

**கே: சீக்கிரம் ஞானமடைஞ்சா சீக்கிரமா உலகத்துக்கு உதவலாம்ல.... அதுக்கு என்ன பண்ணணும்?**

ப: நாம நினைக்கறத நம்மளாலே செய்ய முடியலேன்னா... மேல இருக்கற பரம்பொருள்கிட்டே நம்மள ஒப்படைச்சிடணும்.

அவர் நம்மளையும் உலகத்தையும் பாத்துப்பார்.

**கே: எது மனிதனின் லக்ஷியம்?**

ப: தன்னை அறிதல்.



(136) *டாக்டர் ஜி.ஹச்.மீஸ், ஒரு டச்சு இளைஞர் கேட்டார்.*

**கே: எனக்கு ஆழ்ந்த தூக்கத்துலே... சமாதியனுபவத்துலே இருக்கற மாதிரி தோணுது. அப்படியா?**

ப: விழிப்பிலே இருக்கற 'நான்'தான் இந்த கேள்வியைக் கேக்கறது, தூங்கும்போது இருக்கற நான் இல்லை.

விழிப்பு நிலையிலே தூக்கத்திலே எப்படி இருக்கோமோ அப்படி இருக்கறதுக்குப் பெயர்தான் 'தூங்காமத் தூங்கறது', சமாதி.

அப்படி சமாதியிலே இருந்தா சந்தேகமெல்லாம் வராது.

சமாதி நம்முடைய ஸ்வபாவம்.

நாம இருக்கோம்ன்னு மூணு நிலைமையிலேயும் மாறாமயிருக்கில்லையா... அதுதான் சமாதி.

சமாதி மூணு நிலைமைக்குள்ளேயும் வர்றது இல்லை.

சமாதி மேலதான் மூணு நிலைமையும் இருக்கு.

விழிப்பிலே இடைவிடாம சமாதியிலே இருந்தா... தூங்கும் போதும் சமாதியிருக்கும்.

இதுக்கு அர்த்தம்... விழிப்பிலே நாம யார்ன்னு தெரிஞ்சா... தூக்கத்திலேயும் நாம எப்பவும் மாறாமயிருக்கறோம்கற உண்மை பிடிபடும்.

சமாதி எல்லாம் புதுசா இனி வர்றது இல்லே.

உணர்வுதான் சமாதி... அதாவது விழிப்பிலேயும், தூக்கத்திலேயும், கனவிலேயும் மாறாம இருக்கற 'நான்'கற உணர்வுதான் சமாதி.



(137) ***இராமகிருஷ்ண மிஷன் லட்சுமண பிரம்மச்சாரி கேட்டார்.***

**கே: நம்மளோட நினைப்புக்கெல்லாம் நம்மள சாட்சியா பாவிக்கலாமா?**

ப: சாட்சித்துவம் நம்மளோட ஸ்வபாவம் இல்லே.

அது ஒரு பாவனை.

ஒரு உபாயம் மனதை அடக்கறதுக்கு நாம பாவிச்சாலும் பாவிக்கலேன்னாலும் ஆத்மா சர்வ சாட்சி.

சாட்சிபாவம் மனம் அடங்கறதுக்கான உபாயமே தவிர நாம அப்படிப் பாவிக்க வேண்டியது இல்லை.

நாம எப்பவும் இருக்கற மாதிரி இருக்க வேண்டியதுதானே! அதுதான் சிறந்தது.

(138) *மைசூர் அரசின் நிதிச் செயலர் கேட்டார்.*

**கே: சமாதி அனுபவம் எப்படி இருக்கும்?**

ப: இருக்கறபடியே இருக்கும்.
பாக்கறவாளுக்குத் தூங்கற மாதிரி இருக்கும்.
ஆரம்பத்திலே அப்பியாசிக்கும்போது... தூங்கறோம்கற மாதிரி தெரியும். பழக, பழக நாம இருக்கறது தெரியும்.

(139) *எல்லப்ப செட்டியார்,* **MLC** *கேட்டார்.*

**கே: மனதை உண்முகமாக்குனா போதுமா... இல்லை நான் பிரம்மம்னு தியானிக்கணுமா?**

ப: உண்முகப்பட்டாலே போதும்.
நான் பிரம்மம்னு எதுக்குத் தியானிக்கணும்?
'நான்' போறதுதான் மோட்சம்.
'நான்'கறத பிடிச்சுக்கொண்டா... அது போயிடும்.
அதனாலேதான் நான் யார்ன்னு விசாரிக்கணும்னு சொல்றது.
எப்பவும் ஒரே நான்தான் இருக்கு.
அப்பப்போ ஒவ்வொரு நினைப்போடையும் ஒரு போலி நான் எழுந்துக்கும். அதை நாமன்னு நினைச்சுத்தான் துன்பப்படறோம்.
எப்பவும் இருக்கற நான் சுயம்பிரகாசமா இருக்கும்.
மோட்சம்கறது புதுசா அடையறது இல்லே. அது எப்பவும் இருக்கறது. மாறாம ஆதியிலேயிருந்து இருக்கு.



(140) *தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: ஸத்யம்; உள்ளபொருள் அப்படின்னா என்ன?**

ப: ஸத்யம்னா... எப்பவும் இருக்கறது.

அது எந்த நாம ரூபத்தோடும் இருக்காது. ஆனா எல்லா நாம ரூபத்துக்கும் ஆதாரமா இருக்கறது.

அது எல்லைக்குட்பட்டதுக்கு எல்லாம் ஆதாரம். ஆனா எல்லைக்குட்படாதது.

அது அசத்தியத்துக்கும் ஆதாரம் ஆனா ஸத்யம்.

அது வரையறைக்கு உட்பட்டது அல்ல.

எது இருக்கோ அது.

மாறாம அப்படியேயிருக்கறது.

வாக்கைக் கடந்தது.

இருக்கறது இல்லாததுக்கெல்லாம் ஆதாரமாயிருக்கற இருப்பு.



(141) *எல்லப்ப செட்டியார், MLC கேட்டார்.*

**கே: ஞானம் ஒரு முறை அடையப்பட்டால் நழுவுமா?**

ப: ஞானம் வந்துடுத்துன்னா அது திடப்படறதுக்கு கொஞ்ச காலம் எடுத்துக்கும்.

உண்மையிலேயே ஞானம் எல்லாருக்கும் நேர் அனுபவம். ஆனா... நாம நினைக்கற மாதிரியில்லே. அது அப்படியேயிருக்கு.

அந்த அனுபவம்தான் சமாதி.

நீறு பூத்த நெருப்பு எப்படியோ... அப்படியிருக்கு. உள்ளே நெருப்பு இருக்கும்... தெரியாது. சாம்பலை ஊதினோம்னா... நெருப்பு ஜொலிக்கும்.

அந்த மாதிரிதான் ஆத்மா.

வாசனைகளாலே மறைக்கப்பட்டது மாதிரி இருக்கு. வாசனை சுத்தமாயிடுத்துன்னா... துலங்க ஆரம்பிச்சுடும்.

இந்த வாசனைகளால்தான் ஞானம் திடப்பட நாளாறது.

திடமில்லாத ஞானம் பிறப்பிறப்பைக் கடக்காது.

வாசனை போகாமே... ஞானம் திடமாகாது.

பெரியவா சாந்நித்தியத்திலே வாசனை வேலை பாக்காது.

சமாதி சித்திக்கும்.

சாதகன் ஞானியோட சாந்நித்தியத்திலே தெளிவான ஞானமும் சரியான அனுபவமும் பெறுகிறான்.

இதை விடாமே வச்சுக்கறதுக்குத்தான் எல்லா முயற்சியும் தேவை.

ஞானம் திடப்பட்ட சாதகன் சொந்த ஸ்வரூபம், நல்லா துலங்கி இப்போவே ஜீவன் முக்தனா இருப்பான்.

கண்ணை மூடி சமாதியிலேயிருக்கறது நல்லதுதான்... ஆனாலும் இன்னும் ஆழமா போய் வேலை செஞ்சாலும், சமாதி பண்ணினாலும் ஒண்ணாத் தோணணும்.

வேலை பாத்தா சமாதி கெட்டுடும்... சமாதி சுகம் வேலையிலே இல்லை...ன்னு நினைக்கறது, அறியாமை.

சமாதி சகஜமாயிடணும். முயற்சி, முயற்சியற்றது இதுக்கெல்லாம் தாண்டி ஒரு நிலையிருக்கு. அது வரைக்கும் முயற்சி வேணும்.

ஆன்மசுகத்தை ஒரு தடவை அனுபவிச்சாகூட திரும்பத் திரும்ப அனுபவிக்கப் பிரியம் வரும்.

அமைதியான ஆனந்தத்தை அனுபவிச்ச ஒருத்தன், அதை விட்டு நீங்கறது இல்லை.

அஞ்ஞானிக்கு நினைக்காம இருக்கறது சிரமம், ஞானிக்கு நினைக்கறது சிரமம்.

சாதாரணமான ஆள் அவனைத் தெரியலேங்கறான், ஏகப்பட்ட நினைப்புகளை நினைப்பான். நினைக்காமே அவனாலே இருக்க முடியாது.

எந்தச் செயலும் ஒரு ஞானியைப் பாதிக்கறது இல்லை. அவனோட மனம் எப்போதும் பரஅமைதியிலேயே இருக்கும்.



(142) *பிரகாசராவ் பெசவாட ா கேட்டார்.*

**கே: பிரம்மாகார விருத்தி ஏற்பட்ட பிறகு மாயை செயல் இழந்துடுமா, இல்லை பிறகும் இருக்குமா?**

ப: வாசனாக்ஷயம் ஏற்பட்ட உடனேயே மாயை நீங்கிடும்.

பிரம்மாகார விருத்திக்கும் வாசனாக்ஷயத்துக்கும் இடையிலே மாயையிருக்கும்.

**கே: பிரம்மாகார விருத்தி ஏற்பட்ட உடனேயும் இந்த உலகத் தோற்றம் இருக்குமா? நம்மள பாதிக்குமா?**

ப: முதல்லே பிரம்மாகார விருத்தி ஏற்படட்டும். அப்புறம் தேவைப்பட்டா பாக்கலாம்.

**கே: நம்மள இப்போ தெரிஞ்சுக்கற மாதிரியே பிரம்மத்தை தெரிஞ்சுக்கலாமா?**

ப: நாமளும், நம்மளத் தெரிஞ்சுக்கறோம்ன்னு சொல்ற அறிவும் வேற வேறயா?

அதை எப்படித் தெரிஞ்சுக்க முடியும்?

**கே: சித்த விலாசத்தை தெரிஞ்சுக்கலாமா?**

ப: ஓஹோ! இதுதான் உங்களோட பிரம்மாகார விருத்தியா?

அஞ்ஞானம் நீங்கினா மிஞ்சினது விளங்கும்.

அந்த அனுபவம் நீங்க எதிர்பாக்கற மாதிரியான காண்பான் காட்சி அனுபவமாயிருக்காது.



(143) *மேஜர் சாட்விக் கேட்டார்.*

**கே: எப்பவும் இருக்கற 'நான்'கறது, அகந்தையிலயிருந்து வேறாத் தெரியலையே!**

ப: தூங்கும்போது எப்படியிருந்தேள்?

**கே: எனக்குத் தெரியலை.**

ப: யார் தெரியலேங்கறது?

விழிப்பிலே இருக்கறவன்தானே!

நீங்க இல்லேன்னு தூங்கும்போது தோணித்தா?

**கே: நான் தூங்கும்போது நானாத்தான் இருந்தேன். ஆனா யார் தூக்கத்துல இருந்ததுன்னு தெரியலை!**

ப: அதேதான்.

தூங்கி விழிச்சவுடன் ஒருத்தன் 'எனக்குத் தூங்கும்போது ஒண்ணும் தெரியலே'ன்னு சொல்றான். இப்போ விஷயங்களைப் பாக்கறான். அதனாலே அவன் இருக்கேன்னு நினைக்கறான்.

தூங்கும்போது விஷயங்கள் இல்லை. விஷயியும் இல்லை.

இப்போ யார் பேசிக்கொண்டு இருக்கானோ, அவனேதான் தூங்கும்போதும் இருக்கான்.

இந்த இரண்டு நிலைமைக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

இப்போ விஷயங்களும் புலன் இயக்கங்களும் இருக்கு. தூங்கும்போது அது இல்லை. இப்போ ஒரு புதுப் பேர்வழி கிளம்பி புலன்கள் வழியா விஷயங்களைப் பாக்கறான்.

உடம்பளவா பிடிச்சுக்கொண்டு விஷயங்களைப் பாத்து அனுபவிச்சு எப்பவும் இருக்கறது நான்தான்கறான்.

உண்மையிலே தூங்கும்போது இருந்தவன், இப்பவும் இருக்கான். அவன் மாறலே. விழிப்பிலே புதுசா கிளம்பினவன்... உதித்து ஒடுங்குவான். இவன் இடையிலே வந்தவன். இவனுக்கு ஆதாரமாயிருக்கறதுதான் ஆத்மா.



(144) *பிரகாசராவ் கேட்டார்.*

**கே: மாயைக்கு அடிப்படைக் காரணம் என்ன?**

ப: மாயைன்னா என்ன?

**கே: மாயைன்னா அஞ்ஞானம், பொய் தோற்றம்.**

ப: யாருக்கு இந்தப் பொய்த் தோற்றம்?

யாரோ இந்த பொய்த் தோற்றத்தைக் கண்டு மயங்கறதுக்கு இருக்கணுமே!

சரி உங்க கூற்றுப்படி மயங்கற யாரோ ஒருத்தன்தான்... விஷயங்களைப் பாக்கறான்.

விஷயங்கள் இல்லேன்னா... மாயை எப்படி வேலையைக் காட்டும். இல்லாததை இருக்கறதா காட்டறதுதானே மாயை.

விஷயங்கள் இல்லாதது, இருக்கறது நாம மட்டும்தான். நம்மளத் தவிர வேற எதுவும் இல்லை.

விஷயங்கள் தெரியறது... ஆனா எனக்கு என்னைத் தெரியலேன்னு சொன்னேள்ன்னா... அப்போ இரண்டு நான் இருக்கணும், தெரியாத நான்ன்னு ஒண்ணு, எனக்குத் தெரியலேன்னு சொல்ற நான்ன்னு இன்னொன்னு.

உண்மையிலேயே இரண்டு நான் ஒருத்தனிடம் இருக்கா?

தூங்கி விழித்த ஒருத்தன் தான் தூங்கும்போதும் இருந்தேன்னும், ஆனா எதையும் தெரியாம இருந்தேன்னும் சொல்றான்.

ஆனாலும் தூங்கும்போது இருந்தவனும் இப்போ இருக்கறவனும் வேற வேறன்னு சொல்லமாட்டான்.

அதனாலே ஒரே 'நான்'தான் இருக்கு.

அதுக்கு... அது இருக்கறது எப்பவும் அனுபவம்.

அது மாறாமயிருக்கு. அதைத் தவிர வேற எதுவும் இல்லை.

**கே: சூட்சும சரீரம்னா என்ன?**

ப: கனவிலே உங்களுக்கு உடம்பு இருக்கா?

இந்த உடம்பிலே இருந்து அது வேறதானே?

அதுதான் சூட்சும சரீரம்.

**கே: இறந்த பிறகு சூட்சும சரீரம் இருக்குமா? செத்த பிறகு என்ன ஆவோம்?**

ப: கனவிலே பல அனுபவங்களை அனுபவிச்சு விழிச்சுக்கற மாதிரிதான், பிறப்பு இறப்பு எல்லாம்.

**கே: இறந்த பிறகு சூட்சும சரீரம் நாப்பது வருஷம் இருக்குங்கறாங்களே?**

ப: இந்த நனவுடல்லே இருந்து கனவு உடலை சூட்சுமம்கறோம். கனவு உடல்லே இருக்கும்போது அப்படிச் சொல்லலே.

இப்போ சூட்சுமம்ன்னு சொல்றது அப்போ ஸ்தூலமா இருந்தது.

அங்கேயிருந்து பாக்கும்போது இது சூட்சுமம்.

இரண்டுக்கும் வித்தியாசம் ஒண்ணும் இல்லை. இரண்டும் பொய்.

அங்கங்கே அது அது உண்மைன்னா... தூங்கும்போது இந்த இரண்டு உடம்பும் இல்லை.

எப்பவும் மாறாம மூணு நிலையிலேயும் இருக்கறது ஒண்ணுதான்.

நாமதான் அது.

(145) ***பால்பிரண்டன் கேட்டார்.***

**கே: மதங்கள் ஏன் கடவுள், சொர்க்கம், நரகம் இதப்பத்தியே பேசுது?**

ப: உலகத்தைமாதிரி நாமும் பொய்த் தோற்றம்தான்... இருக்கறது உள்ள பொருள் ஒண்ணுதான்னு ஜனங்களுக்குப் புரியவைக்கறதுக்குத்தான்.

மதங்கள் கேக்கறவனோட பக்குவத்துக்கு ஏத்த மாதிரிதான்.

பகவத் கீதையையே எடுத்துப்போமே... அர்ஜூனன் சண்டை போட மறுக்கறான். என்னோட சொந்த சகோதராளையும்... வித்தை சொல்லிக்கொடுத்த குருவையுமா கொஞ்சம் இடத்துக்காக கொல்லச் சொல்றே... முடியாதுங்கறான்.

அப்போ கிருஷ்ணர் சொன்னார். “நீ பாக்கற எல்லாமே... நீயோ, நானோ முன்னாடியும் இல்லை. இப்பவும் இல்லை. அப்புறமும் இல்லை. யாரும் பிறக்கலே, யாரும் இறக்கலே. இந்த

உலகமும் இல்லை. நான் இதே உண்மையைத்தான் முதல்லே சூரியனுக்கு சொன்னேன். அவன் மூலமா இட்சுவாகுக்கு சொன்னேன்."

அப்போ அர்ஜுனன் ஒரு சந்தேகத்தைக் கிளப்பினான். 'இரு, நீ இப்போ கொஞ்ச வருஷத்துக்கு முன்னாடிதானே பிறந்தே, நீ சொல்ற ஆளுகளெல்லாம் எப்பவோ இருந்தவா. என்ன கதை விடறே'ன்னான்.

கிருஷ்ணர் அர்ஜுனனாலே, புரிஞ்சுக்க முடியலேன்னு நிலைமையை உணர்ந்து "ஆமா, உனக்கும் எனக்கும் இதுக்கு முன்னாடி ஏகப்பட்ட பிறப்பு இருந்தது. அதெல்லாம் எனக்குத் தெரியும். உனக்குத் தெரியாது"ன்னார்.

இப்போ இந்த இரண்டு செய்தியும், அதாவது முதல்லே, 'யாரும் பிறக்கலே இறக்கலே'ன்னார். அடுத்து, 'ஏகப்பட்ட தடவை பிறந்தோம்'கறார். எது உண்மை? இரண்டும் சரிதான். வேறு வேறு பக்குவத்துக்கு.

இப்படி ஏன் சொல்றா? நாம யாருங்கற உண்மையிலே நிலை பெறுவதற்குதான்.

**கே: எப்பவும் நீங்க கீழ இறங்கவே மாட்டேங்கறீங்க. மேலான உண்மைய மட்டுமே பேசறீங்க!**

ப: (சிரித்துக்கொண்டே) எல்லோருக்கும் எப்பவும் தினசரி நடைமுறையிலே இருக்கற சர்வசாதாரணமான எளிய உண்மையை உடைச்சுப் பேசினா... இப்படிச் சொல்றேள்.

நம்மளப் பத்தின உண்மையைத்தானே பேசறோம்.

'நான் இருக்கேன்'கற உணர்வு இல்லாத ஆள் யாராவது இருக்காளா?

அதைப்பத்தி கேக்கவே யாரும் பிரியப்பட மாட்டேங்கறா. அதை விட்டுட்டு சொர்க்கம், நரகம், செத்த பிறகு எப்படி இருப்போம், இதிலேதான் ஆர்வம் இருக்கு. அவா விரும்பறது எல்லாம் வித்தியாசமா, புரியாததா ஏதாவது வேணும்.

சர்வசாதாரணமான எந்த மறைப்பும் இல்லாத உண்மையை விரும்பறது இல்லை.

இதுக்காகத்தான் மதங்கள் கதைவிடறது. வழிக்குக் கொண்டு வரணுமில்லையா!

அங்கேயும் இங்கேயும் அலைஞ்சு திரும்பவும் எப்பவும் இருக்கற... இந்த 'நான்'கற எளிய உண்மைக்குத்தான் வரணும்.

அத இப்போவே! இங்கேயே! ஏன் இந்த எளிய உண்மையிலே நிலைபெறக் கூடாது?

கைலாசம், வைகுண்டம், சொர்க்கம், நரகம் எந்த லோகமாயிருந்தாலும் அதைப் பாக்கறதுக்கு ஒருத்தன் வேணும். பாக்கறவனோட உண்மைதான்.... அந்தந்த லோகங்களோட உண்மை.

பாக்கறவன் இல்லாம எந்த லோகமும் இல்லே.

எந்த லோகமும் நம்மளத் தவிர வேறயா இருக்காது.

உண்மை தெரியாத ஒருத்தன் கூட உலகத்தைப் பாக்கும்போது அவனையேதான் பாக்கறான்.

காண்பான் காட்சியா பிரிஞ்சு நடக்கற இந்தக் கூத்தே நாமதான்.

இங்கே ஏகப்பட்ட ஜீவர்கள் இல்லை. இருக்கறது நாம மட்டும்தான்.

எல்லோரும்கறதே பெரிய பொய்.

இருக்கறதுதான் ஒரே உண்மை.



(146) ***மிஸ் வீனா சாராபாய், பெரியகுடும்பத்து பண்பாடான பெண்மணி கேட்டார்.***

**கே: ஒரு லக்ஷியத்தோட சாதனையைச் செய்யறது தவறு. சரிதானே?**

**ப:** இங்கே ஏதோ ஒரு லக்ஷியம் அடையப்படணும்னா... அது நிரந்தரமாயிருக்காது.

நாம தேடற லக்ஷியம்... எப்பவும் இருக்கற பொருளா யிருக்கணும்.

எப்பவும் இருக்கறதுன்னா... ஏற்கனவே நம்மளிடம் இருக்கணும்.

பொய்யான அகந்தை ஒண்ணு கிளம்பித்தான் லக்ஷியத்தை அடையணும்னு தேடறது.

ஆனா இவன் கிளம்பறதுக்கு முன்னாடியே லக்ஷியம் இருக்கு. இவன் லக்ஷியம் மேலேயேதான் பிறக்கறான். அங்கேயே நின்னுண்டு, 'அதைத் தேடறேன், அதை நான் இன்னும் அடையலே', 'எப்படியும் அடையணும்'னு கதைவிடறான்.

ஜலத்துலே விழற ஒரு நிழல் ஆடிக்கொண்டு இருக்கு. அந்த நிழலோட ஆட்டத்தை யாராவது நிறுத்த முடியுமா? நிழலோட ஆட்டம் நின்னுட்டா... ஜலமே தெரியாது. ஒளிதான் தெரியும்.

அதாவது ஜலத்துக்கு முன்னாடி நிக்கறவனோட நிழல் ஆட்டத்தை நிறுத்துறது எப்படின்னா... நிழல் விழணும்னா... நிக்கறவன் பின்னாடி ஒரு ஒளி இருக்கணுமே!

இப்போ, இவன் அந்த ஒளியை நோக்கித் திரும்பிட்டா நிழலே தெரியாது. ஜலமும் தெரியாது. ஒளிதான் தெரியும். இதுதான் நிழலோட ஆட்டத்தை நிறுத்துறது... மனோநாசம்.

உண்மையை உணரணும்னு ஒரு லக்ஷியம் வச்சுக்கொண்டு அதுக்குச் செய்யற முயற்சியெல்லாம், ஒரு போலியான 'நான்' கிளம்பி சேஷ்டை பண்றதுதான்.

அது எப்படின்னா ஜலத்திலே விழற தன்னோட நிழல் ஆட்டத்தை நிறுத்த ஒருத்தன் ஆடாம அசையாம நிக்கற மாதிரிதான்.

இவன் எவ்வளவுதான் அசையாம கல்லுமாதிரி நின்னு... நிழலும் அசையாம நின்னாக்கூட எங்கேயோ ஒரு சின்னப் பையன் ஜலத்திலே கல்லை விட்டு எறிஞ்சிடுவான். நிழல் ஆடிடும்.

நிழலோட ஆட்டத்தை இப்படியெல்லாம் நிறுத்த முடியாதுன்னு புத்தி வரும். அப்போ தன்னோட ஒளி மூலத்தை நோக்கித் திரும்பறதுதான்... நிழல் ஆட்டம் நிக்கறதுன்னு புரிஞ்சு, ஒளியை நோக்கித் திரும்புவான்.

நான் யார்ன்னு பாக்கறதுதான். ஒளி மூலத்தை நோக்கி திரும்பறது.

பாத்தா... 'நான்'கறது எப்பவும் மாறாம மூணு நிலைமையிலேயும் ஏற்கனவேயிருக்குன்னு தெரியும்.

நாம தேடற பொருளாத்தான் எப்பவுமே இருந்தோம்ன்னும், இப்பவும், எப்பவும் இருக்கோம்கறதும் புரியும்.

அதுதான் ஞானம்.

**கே: ஒரே எட்டுல ஞானமடையறதாயிருக்கே நீங்க சொல்றது!**

**ப:** எங்கே ஒரே எட்டுலே ஞானம்!

ஞானம் ஏற்கனவேயிருக்கு.

ஞானம் அடையறதுன்னு ஒண்ணு உண்மையிலேயே இல்லை. இல்லவே இல்லை.

தான் இல்லேன்னு யாராவது சொல்ல முடியுமா?

ஞானமில்லாமே யாருமேயில்லை.

ஞானம் அடையறதுன்னு சொன்னாலே அங்கே இரண்டு வந்துடும். உண்மையைத் தெரியாம இருக்கற ஒண்ணும்... உண்மையா இருக்கற ஒண்ணும்...னும் இரண்டு கிடையாது.

இருக்கறது ஒண்ணுதான்.

அது நாமதான்.

அது நாமதான்கறப்ப அதை அறியாத காலமே நமக்கு இல்லை.

**கே: நினைவுகளாலே இந்த உண்மை மறைக்கப்படுதா?**

**ப:** ஆமா, நினைவுகள்தான் ஆனந்தத்துக்குத் தடை. அதுதான் மறைக்கறது.

நாம இருக்கோம்கறது எப்படித் தெரியறது?

உலகம் இருக்கறதாலே... நினைக்கறதாலே தெரியறதுன்னு சொன்னா...தூங்கும்போது நாமயிருக்கோமே எப்படி?

**கே: மனத்தை எப்படி ஒழிக்கறது?**

**ப:** மனமே மனத்தை ஒழிக்க விரும்பறதா?

மனத்தாலே மனதை நாசம் பண்ண முடியாது.

மனம்னா... என்னன்னு பாக்கணும்.

பாத்தா மனம்னு ஒண்ணும் இல்லைன்னு தெரியும்.

நம்மளத் தெரிஞ்சா மனசு இருக்காது. நம்மளாயிருந்தா மனசைப் பத்திக் கவலையில்லே.

**கே: பயத்தை போக்குவது எப்படி?**

ப: பயம்ன்னா என்ன?

அது நினைப்புதான்.

இங்கே நம்மளத் தவிர வேற ஏதாவது இருந்தா பயப்படலாம்.

யார் துவைதத்தைப் பாக்கறது?

'நான்'ன்னு ஒண்ணு கிளம்பி விஷயங்களைத் தனக்கு அன்னியமா பாக்கறது. 'நான்'ன்னு ஒண்ணு கிளம்பலேன்னா... இருக்கறது மட்டும் இருக்கும். அங்கே துவிதம் வராது.

துவிதத் தோற்றம் அனுபவமாச்சுன்னாலே... பாக்கறவன் ஒருத்தன் கிளம்பிட்டான்னு அர்த்தம்.

யார் அதுன்னு தேடினா... ஒரு சந்தேகமும் இல்லை. ஒரு பயமும் இல்லை. பயம் மட்டும் இல்லை... எல்லா எண்ணங்களும் போயிடும்.

**கே: சாதனாசதுஷ்டாயத்தை விட நேரே சீக்கிரமா இருக்கே!**

ப: ஆமாம், எல்லாத் துர் ஸ்வபாவமும் இந்தப் போலி 'நான்'கறத சுத்தியே இருக்கும்.

அது போயிடுத்துன்னா... மோட்சம் கரதலகனி.

ஆத்மாவிலே நல்லது, கெட்டது, எதுவும் இல்லை. அது குணமற்றது. குணங்கள் எல்லாம் மனசுக்குத்தான்.

ஒண்ணு கிளம்பினா ரெண்டு வந்துடும்.

உண்மை ஒண்ணும் கிடையாது. ரெண்டும் கிடையாது.

அது அப்படியே இருக்கு.

**கே: மனமற்ற நிலையில இருக்கறதுதான் சிரமமாயிருக்கு!**

ப: மனமற்ற நிலையை மனசுகிட்டேயே விட்டுத் தள்ளுங்கோ.

மனம் நம்மளோடதுன்னு நினைக்காதேள்.

நடந்து போகும்போது எப்படி எந்த ஆலோசனையும் இல்லாமே அடி எடுத்து வைக்கறோமோ, அப்படியே எல்லா வேலையும் தானாவே நடக்கும்.

'நான்'ங்கற மனமற்ற நிலை அப்படியே இருக்கும்.

வேலை பாக்கறதாலே ஒண்ணும் ஆகாது.

**கே: சிந்தனை பண்ற மாதிரியான வேலையாயிருந்தா?**

ப: அதுவும் தானே நடக்கற இயக்கத்துக்குள்ளேதான்.

**கே: நான்கறதா இருக்கறதுதான் அப்போ விஷயம்.**

ப: ஆமாம். அதுவும் பழக, பழக மூச்சு விடற மாதிரி முயற்சியற்றதா மாறிடும்.

அகந்தைங்கறது நம்மளோட நிழல் மாதிரி. அதை ஒழிக்க நினைச்சு அடக்கறது, நிழலைக் குழிவெட்டிப் புதைச்ச கதை.

நிழலைப் புதைக்கணும்னா... நான்கற ஒளியை நோக்கித் திரும்பணும். அதுதான் நிழல் புதைக்கறது.

நான் இன்னார்ன்னு நினைச்சா... 'அகந்தை',

நினைக்காம இருந்தா... 'ஆத்மா'

குமிழிகள் பல இருந்தாலும், சமுத்திரம் ஒண்ணுதான். அதுமாதிரிதான் எத்தனை நான் கிளம்பினாலும் 'நான்'கறது ஒண்ணுதான்.

'நான்'ன்னு கிளம்பற அகந்தை, உண்மையிலேயே நாம இல்லை.

எப்பவும் இருக்கறதுதான் உண்மையிலேயே நான்கற ரகசியத்தைச் சொன்னதுக்கப்புறமும், நான்ன்னு கிளம்பற அகந்தையே நாமன்னு ஏன் நினைக்கணும்?

குரங்கை நினைக்காம மருந்தைக் குடின்னா, குரங்கையே தியானம் பண்ற மாதிரிதான். நான்ன்னு கிளம்பறது உண்மையிலேயே நீ இல்லேன்னு சொன்ன உடனேயே பேசாம சும்மாயிருந்துடணும்.

அதை விட்டுட்டு திரும்பவும் அதோடயே சேந்துகொண்டு 'நான் பிரம்மம்' 'சிவோஹம்' அப்படியெல்லாம் எதுக்கு நினைக்கணும்?

மஹாவாக்கியத்தோட ஸாரத்தைப் புரிஞ்சுக்கணும். அதை விட்டுட்டு அதைத் தியானமோ, ஜபமோ பண்ணக் கூடாது.

'நானற்றநிலை'ங்கறது 'நான்'ன்னு கிளம்பிடற அகந்தையோட சேராமயிருக்கறதுதான்.

இப்படிச் சேராம நிக்கறதுக்காகத்தான்... 'நான் யார்'ன்னு பாக்கச் சொல்றது.

இப்படி விசாரத்துவமாயிருந்தா அகந்தை 'நான்' மறைஞ்சுடும்.

இருக்கறது ஒளிரும். எப்பவும்போலே இருக்கும்.

இதுதான் நேர் வழி.

மத்தது எல்லாம் இந்தக் கிளம்பற 'நான்'கறத வச்சுக் கொண்டே, அது செய்யறதுதான்.

மத்த, மத்தப் பாதையிலே நிறைய சந்தேகமும், குழப்பமும் உண்டு. எந்தப் பாதையிலே போனாலும் கடைசியிலே 'நான் யார்?'ங்கற கேள்வியைக் கேட்டுத்தான் ஆகணும்.

கடைசியிலே கேக்கப்படறதை இங்கே முதல்லேயிருந்தே கேட்கப்படறது.

விசாரத்துக்கு எந்த சாதனமும் தேவையில்லை.

இதை விட ஆச்சர்யம் வேறு எதுவும் இல்லை... தேடப்படற உண்மையாவே எப்பவும் இருந்துகொண்டே... அதைத் தேடறது.

நாம உண்மையை ஏதோ மறைக்கறதாவும்... அந்த மறைப்பை நீக்கி உண்மையை உணர நிறைய சாதனை செய்யணும்னும் நினைக்கறோம்.

பைத்தியக்காரத்தனம்!

நம்மளோட உண்மையை உணர்றதுக்காக செஞ்ச சாதனை எல்லாம் நினைச்சு... ஒருநாள் சிரிப்போம்.

அப்போ எந்த உண்மையை உணர்வோமோ அதே உண்மையா இங்கேயே... இப்போவே... இருக்கோம்.

**கே: சின்னப் புள்ளைங்க கண்ணாமூச்சி விளையாடுற மாதிரில்லே இருக்கு. 'நான் ஒளிஞ்சுப்பேனாம். நீ தேடற மாதிரி தேடுவியாம். அப்புறம் கண்டுபிடிக்கற மாதிரி கண்டுபிடிச்சுடுவியாம்'கற மாதிரில்லே இருக்கு.**

ப: ஆமா அப்படித்தான்.

யோகவாசிஷ்டத்திலே நீங்க சொல்ற மாதிரிதான் வசிஷ்டர் சொல்றார். ஸத்யம் மறைஞ்ச மாதிரியிருக்கும். அஸத்யம் ஸத்யம் மாதிரி தோணும்.

உண்மையிலேயே நாம எந்த நேரமும் ஆத்மாவையேதான் உணர்றோம். ஆனாலும் தெரியலேங்கறோம். ஆச்சர்யத்திலும் ஆச்சர்யம்.

இப்படியான அகந்தையை வேரறுக்கற கோடாரிதான் நான் யார்ங்கற விசாரம்.

(147) ***கன்னட சன்யாசி ஒருவர் கேட்டார்.***

**கே: சர்வக்ஞத்துவம்ன்னா என்ன?**

ப: சர்வமா, எது இருக்கோ, அதாயிருக்கறதுதான் சர்வஞ்ஞத்துவம்.

சர்வம்கறது அறிஞ்சதும், அறியாததும் சேத்துதான். சர்வம்கறது மனசுக்குத்தான் அனுபவமாறது. மனத்தைக் கடந்த இடம்தான் நான்கறது.

இப்போ இருக்கற அறிவு கிஞ்சிஞ்ஞயத்துவம்.

எப்பவும் இருக்கற அறிவு சர்வஞ்ஞத்துவம்.

இப்போ இருக்கற அறிவாலே சர்வஞ்ஞத்துவத்தை உணர முடியாது. அறியறவன் ஒருத்தன் இல்லாமே போனா... மிஞ்சறது சர்வஞ்ஞத்துவம்.

**கே: பக்தியிலே உடம்பை மறக்கணுமா?**

ப: உடம்பைப் பத்தி இப்போ என்ன கவலை? முதல்லே பக்தி பண்ணுவோம். மத்ததை அப்புறம் பாப்போம்.

(151) *மிஸ்டர் கெல்லி கேட்டார்.*

**கே: என்னுடைய சுயமரியாதை பாதிக்கப்படறப்ப என்ன செய்யணும்?**

ப: இருக்கறது ஆத்மா ஒண்ணுதான்.

நம்மளோட தப்புக்காக நம்மள நாமே திட்டிக்கறப்போ கஷ்டமா இருக்கா?

நம்மளப் பிடிச்சுக்கொண்டா முன்னிலை ஏற்படாது.

உலகம் தோணித்துன்னா நம்மள விட்டுட்டோம்ன்னு அர்த்தம்.

நம்மள யார் வாழ்த்தினா என்ன? தாழ்த்தினா என்ன? தான் பிறர்ன்னு பாக்கக் கூடாது.

(153) *பெஷாவர்லயிருந்து வந்த நீதித்துறை கமிஷனர் கேட்டார்.*

**கே: ஜீவாத்மா பரமாத்மாவில இருந்து வேறானது தானே?**

ப: பரமாத்மா, ஜீவாத்மா, இந்த ரெண்டுலே இருந்து 'பரம்-ஜீவன்' கற உபாதியை எடுத்துட்டுப் பாருங்கோ!

அப்போ என்ன வித்தியாசம் இருக்குன்னு பாக்கலாம்.

அப்புறமும் சந்தேகம் வந்தா, யாருக்கு இந்தச் சந்தேகம்? யாரு இப்படி எல்லாம் சிந்திக்கறதுன்னு பாருங்கோ!

அவனைக் கண்டுபிடிங்கோ! எல்லாச் சந்தேகமும் ஓடிடும்.

**கே: விசாரிக்கு ஏதும் உணவு கட்டுப்பாடு இருக்கா?**

ப: மித சாத்விக ஆகாரம்.

**கே: சமாதின்னா என்ன? அதை எப்படி சாதிக்கறது?**

ப: இதைக் கேக்கறவன் இல்லாம போயிட்டா சமாதி சித்திக்கும்.

(155) *எஸ்.எஸ். கோஹன் கேட்டார்.*

**கே: நான் தியானிக்கும்போது ஒரு ஸ்திதி ஏற்படுது. அதை அமைதியான, உண்மையை மறக்காத ஸ்திதின்னு சொல்லலாம். அடுத்து என்ன செய்யணும்?**

ப: அமைதியேதான் ஆத்மானுபவம். அடுத்து, தியானத்துலே ஏற்படற அமைதி திடப்படணும். அமைதிக்கேதான் ஒருத்தன் ஆசைப்படணும்.

**கே: எனக்கு அந்த அமைதி திருப்தியாயில்லை.**

ப: ஏன்னா... உங்களுடைய அமைதி திடப்படலே. திடமாயிடுத்துன்னா அதுதான் ஆத்மஞானம்.

**கே: தனிமை ஆத்மசாதனைக்கு உதவுமா?**

ப: தனிமைன்னு எதைச் சொல்றேள்?

**கே: எல்லாரையும் விட்டு விலகியிருக்கறது.**

ப: ஏன் விலகணும்?

பயத்தாலேயே இந்த நினைப்பு வர்றது.

தனியா இருந்தாலும் யாராவது தொந்தரவு பண்ணிடுவாளோன்னு பயமாயிருக்கும்.

தனிமையிலே ஆட்களை ஒழிக்கலாம்.

நினைப்பை எப்படி ஒழிப்பேள்?

அதை இப்போ இருக்கற இடத்திலேயிருந்தே ஏன் பண்ணக்கூடாது?

**கே: என் மனசு ரொம்ப அலையுது.**

ப: ஏன் அலைய விடறேள்?

தனிமையிலே மனசு ஓயும். அதைக் கூட்டத்திலேயும் பண்ணலாம். தனிமை நினைப்பை ஒழிக்காது. விசாரமே நினைப்பை ஒழிக்கும். அதை இங்கேயே பண்ணலாம்.

**கே: அருளாலேயே ஆத்மானுபவம் வரும்ன்னு சொல்றாங்களே அருளுக்கும் விசாரத்துக்கும் என்ன சம்பந்தம்? விசாரம் அருளை வரவைக்குமா?**

ப: ஆத்மா எப்பவும் இருக்கு. அது புதுசா வர்றதும் இல்லை. அடையப்படறதும் இல்லை.

அருளில்லாமலா இந்தக் கேள்வி கேக்கறேள்?

அருளேதான் அடி, முடி, நடு.

அருளேதான் ஆத்மா.

நாம... நம்மள உடம்பாப் பாக்கறதாலே... குருவையும் உடம்பாப் பாக்கறோம். குருவோட பார்வையிலே... குரு... ஆத்மாவேதான்.

ஆத்மா ஒண்ணுதான் இருக்கு. குருவும் இதைத்தான் சொல்றார். அதாவது ஆத்மா மட்டும்தான் இருக்குன்னு சொல்றார்.

அப்போ ஆத்மாவேதான் குரு.

அருள் வேற எங்கிருந்து வரும்? அது ஆத்மாவிலே இருந்துதான் வரும்.

ஆத்மா நல்லாத் துலங்கறதுதான் அருள்.

அருள் நல்லா வெளிப்படறதுதான்... ஆத்மா நல்லாத் துலங்கறது.

இந்த எல்லா சந்தேகங்களும் நமக்கு வெளியே இருந்து எதையோ எதிர்பாக்கறதாலேதான்.

நமக்கு அன்னியமா எதுவும் இல்லே.



(158) *எம். பிரைட்மேன் கேட்டார்.*

**கே: ஜனகர் பெரிய ஞானி. ஆனாலும் அரசாட்சி பண்ணினார். அதுக்கு மனசு செயல்பட வேணுமில்லையா? ஞானியின் மனசு எப்படி செயல்படுது?**

ப: ஜனகரா கேக்கறார் இந்தக் கேள்வியை?

உங்க மனசுலேதான் இந்தக் கேள்வி.

ஞானிக்கு ஆத்மாவைத் தவிர வேறு எதுவும் இல்லை. அவனுக்கு சந்தேகங்கள் எல்லாம் இல்லை.

**கே: கனவு மாதிரியிருக்குமா? கனவிலே செய்யற வேலை மாதிரியா?**

ப: இதுவும் உங்களோட மனசுலேதான் இருக்கு. எல்லா விளக்கமும் உங்களோட மனசுலேதான்.

**கே: எல்லாத்தையும் நான் ரமணமயமா பாக்கறேன். எல்லாம் ஆத்மாதான்.**

ப: அப்போ எந்தப் பேச்சும் இல்லை.

**கே: தன்னை உணர்ந்தா உலகத்துக்கு நல்லா உதவ முடியுமா?**

ப: உங்களுக்கு அன்னியமா உலகம் இருந்தா...

(159) **எஸ்.எஸ். கோஹன் கேட்டார்.**

**கே: சமாதி ஆத்மானுபவத்துக்கு ரொம்ப அவசியமா? சமாதி ஏற்படறதுதான் ஆத்மானுபவமா?**

ப: நீங்க எப்பவும் ஆத்மாவிலேயேதான் இருக்கேள்.

இப்பவும்... சமாதியிலேயும்... தூக்கத்திலேயும்... ஆத்மாவிலேயேதான் இருக்கோம்.

நீங்க உங்களை மறந்து உடல், மனசுதான் நம்மன்னு நினைக்கறப்போ... இதெல்லாம் நம்மளப் பிடிச்சுக்கறது.

அதிலேயும் சமாதியிலே 'நான் இல்லை', காணோம்னு வேற சொல்றேள்.

உண்மையிலேயே நீங்க எப்பவும் இருக்கற ஆத்மா.

**கே: அரவிந்தர் தலைலே இருக்கற ஜோதியை ஹிருதயத்துக்கு இறக்கணும்னு சொல்றாரே?**

ப: ஆத்மா ஏற்கனவே ஹிருதயத்திலே இல்லையா?

எங்கும் நிறைஞ்சதை ஒரு இடத்திலே இருந்து, இன்னொரு இடத்துக்கு எப்படிக் கொண்டுபோறது?



**பெஷாவரிலிருந்து வந்த நீதித்துறை கமிஷனர் கேட்டார்.**

**கே: பக்தி மார்க்கத்தையும், விசார மார்க்கத்தையும் பத்தி சொல்லுங்க.**

ப: விபக்தி (பிரிவு) உள்ள வரைக்கும் பக்தி அவசியம்.

வியோகம் (பிரிவு) உள்ள வரை யோகம் அவசியம்.

துவைத புத்தி உள்ள வரைக்கும் பகவான், பக்தன் இருக்கும்.

விசாரத்திலேயும் துவைத புத்தி இருக்கறவரைக்கும் விசாரம் இருக்கும்.

மூலத்திலே ஒடுங்கி மனம் உருவிழந்தா அத்வைதம் ஸித்திக்கும்.

பக்தியிலேயும் அப்படித்தான்.

தன்னிடமே இறைவனை உணர்றப்போ, இறைவன் நம்மளாலேயே, நம்மகிட்டேயே, நம்மளாவே உணர்றதனாலே, நமக்கு அன்னியம் ஆகாது.

அதனாலே இறைவன் ஆத்மாவேதான்.

இங்கே இறைவன்தான் எல்லாத்தையும் நடத்தறார், நம்மளோட இஷ்டத்திலே ஒண்ணும் இல்லைங்கற சாமான்யமான உண்மையை... சாமான்யமானவாகிட்டே சொன்னாப் போதும். இதைப் புரிஞ்சுக்க சாமான்யமான அறிவு போதும். இதை ஏத்துக்கொண்டு ரொம்ப அமைதியா அவா இருந்துடுவா, அதுதான் ஆத்மஞானத்துக்கு நேர்வழி. மேலானது.

மத்தவா இதை ஒத்துக்கறது இல்லை.

இதை ஒத்துக்கறதுக்குத்தான் எல்லா சாதனங்களும்.

மத்தவா இறைவன் எனக்குத் தெரியலேங்கறா! எங்கே இருக்கார்ன்னு கேக்கறா!.

அவாளுக்குத்தான் நீங்க இருக்கேளே... அதைத் தெரிஞ்சுக்கோன்னு சொல்ல வேண்டியதா இருக்கு. விசார மார்க்கம் அங்கேதான் ஆரம்பமாறது.

உண்மையிலேயே இறைவன்தான் இங்கே எல்லாத்தையும் நடத்துறான்னு அடங்கறதே மேலானது. அந்தப் பக்குவம் இல்லாதவாளுக்குத்தான் விசாரம்.

விசாரம்கறது சிறந்த பக்திக்குக் கிடைக்கற ஒரு ஊக்கத்தொகை (small incentive). அவ்வளவுதான். மத்தபடி பக்திக்கும், விசாரணைக்கும் பெரிய வித்தியாசம் ஒண்ணும் இல்லை.



எஸ்.எஸ். கோஹன் கேட்டார்.

**கே: கர்மயோகி, பக்தன், இவங்களுக்கும் சமாதி ஏற்படுமா?**

ப: மனம் ஏதோ ஒரு புள்ளியிலே ஏகாக்கிரமாகி ததாகாரமா நிக்கறதுக்குப் பேர்தான் சமாதி. மற்றது எல்லாம் போய் ஆத்மா மாத்ரம் மிஞ்சும். கர்மியோ, பக்தனோ இதுக்கு விதிவிலக்கில்லே.

**கே: ஹிருதயம்ன்னா என்ன? ஸ்புரணம்ன்னா என்ன? ஸ்புரணம் எப்படி ஏற்படுது?**

ப: ஹிருதயம், ஆத்மா, ஸ்புரணம் எல்லாம் ஒண்ணுதான்.

ஸ்புரிக்கறதுக்கு ஒரு மூலம் இருக்கணுமே... அதைக் கவனிங்கோ!

மத்தது அனாவசியம்.

விசார சங்கிரகத்திலே விளக்கம் இருக்கு.

**கே: ஸ்புரணம் எப்படி இருக்கும்? ஜோதி மாதிரியா? அசைவு மாதிரியா?**

ப: அதை வார்த்தையாலே எப்படி விளக்கறது?

இது எல்லாம் ஒண்ணு சேர்ந்த மாதிரியிருக்கும். அது ஆத்மாவேதான்.

ஆத்மாவைக் கவனிங்கோ! அது போதும்.

ஸ்புரணத்தைப்பத்திக் கவலைப்படாதேள்!



(161) வேதபாராயணம் முடிந்தவுடனேயே ஒருத்தர் எழுந்து கேட்டார்.

**கே: பிராமணரல்லாதவங்க வேத பாராயணம் கேக்கக் கூடாதுன்னு சொல்லப்படுதே!**

ப: உங்க வேலையை மட்டும் பாருங்கோ!

நீங்க எதுக்கு இங்கே வந்தேளோ, வந்த வேலையை மட்டும் பாருங்கோ!.

இதிலேயெல்லாம் காலத்தை விரயம் பண்ணாதேள்! நான் கேட்டேன்னு சொல்றேள் இல்லையா... யார் இந்த 'நான்'? அதை என்னன்னு தெரியாமலே, அதை உபயோகிக்கற உங்களை, யார் கண்டிக்கறது? முதல்லே நீங்க யார்ன்னு கண்டுபிடிங்கோ! அப்புறம் மத்த விஷயத்தைப் பத்திப் பேசலாம்.

சாஸ்திரங்கள்லே சொன்னது இந்தக் காலத்துக்குப் பொருந்தாது. அதனாலே சாஸ்திரத்தைத் திருத்தணும்... உலகத்தைத் திருத்தணும்னு ரொம்பப் பேர் திரியறா. அவா போயிடுவா. சாஸ்திரம் அப்படியே இருக்கும். போகாது. காலத்தை வீணாக்காம அவரவர் வேலையைப் பாக்கணும். எல்லாம் சரியாயிருக்கும்.

(162) *மஹாராஷ்ட்ரா பெண்மணி கேட்டார்.*

**கே: புருவ மத்தியில தியானம் பண்றேன். இப்பல்லாம் உடல் நடுங்குது. பயம் வருது. ஒரு முன்னேற்றமும் இல்லை. என்ன செய்யறது?**

**ப:** புருவ மத்தியிலே பார்வையை வைக்கறேளே தவிர பாக்கறவனை விட்டுடறேள்.

பாக்கறவனை மறக்காம இருந்தா போதும்.

(164) *ஒரு அமெரிக்கர் கேட்டார்.*

**கே: நினைவுகளின் மூலத்துக்கு எப்படிப் போறது?**

**ப:** நமக்கு வெளியே அது இருந்தா, இப்படிப் போங்கோ, அப்படிப் போங்கோன்னு சொல்லலாம்.

அது நமக்குள்ளேயே இருக்கு.

உண்முகமா தேடுங்கோ.

ஆத்மா எப்பவும் அனுபவமாயிருக்கு.

நமக்கு அனுபவமில்லாததைத் தேடலாம், புதுசா கண்டு பிடிக்கலாம். ஆனா ஆத்மா எப்பவும் நம்மளோட அனுபவத்திலேயே இருக்கு.

**கே: ஆமா, நான் என்னை உணர்றேன்.**

ப: நான், என்னைன்னு ரெண்டு இருக்கா?

**கே: மனிதன் ஏன் உடனடியா ஞானம் அடைய மாட்டேங்கறான்?**

ப: ஏன்னா...அவனே ஞானம்தான். எப்பவும் ஞானத்திலேயேதான் இருக்கான்.

**கே: துறவுன்னா என்ன?**

ப: 'நான்'கற எண்ணத்தைப் போக்கறது.

**கே: உடமைகளைப் போக்கறது இல்லையா?**

ப: உடையவரைப் போக்கறது.

**கே: உடனடியா ஞானம் அடைய முடியாதா?**

ப: ஞானம்கறது புதுசா ஏதோ அடையறதும் இல்லை; ஏற்படறதும் இல்லை. அநாதியா எப்பவும் இருக்கு.
அதனாலே இந்தக் கேள்விக்கே இடம் இல்லை.
ஞானம் கொஞ்சம் கொஞ்சமாகவும் வராது.
உடனடியாகவும் வராது.
ஏன்...யாருக்கும் ஞானம் வரவே வராது.

**கே: மறுபிறப்பு இருக்கா?**

ப: இப்போ பிறந்திருந்தா மறுபிறப்பு வரும்.
இப்போவே நீங்க பிறக்கலே.
உண்மையிலேயே இங்கே யாரும் பிறக்கலே.

**கே: மௌனம்னா என்ன?**

ப: எப்பவும் இடைவிடாம பேசறது.

**கே: தேள் கொட்டுனா... வலிக்குதே ஏன்?**

ப: உடம்பு உலகம் தோன்ற எது காரணம்?

**கே: ஒரு பிரபஞ்ச அறிவு.**

ப: அப்போ ஏன் வலிக்கறதுன்னு அது கவலைப்படட்டும். நீங்க தெரிஞ்சுக்கணும்னா நீங்க யார்ன்னு பாருங்கோ!

(164 & 165) *என். சுப்பாராவ் கேட்டார்.*

**கே: ராமானுஜர் சொல்ற விசிஷ்டாத்வைதம்னா என்ன?**

ப: அத்வைதம், விசிஷ்டாத்வைதம் எல்லாம் ஒண்ணுதான். நாம சொல்றதுதான்.

**கே: அவர் மாயையை ஒத்துக்க மாட்டேங்கறாரே?**

ப: நாம எல்லாம் பிரம்மம்ங்கறோம்.

அவர் பிரம்மம் எல்லாத்திலேயும் விசிஷ்டமா அதாவது விசேஷமா இருக்குங்கறார்.

**கே: அவர் உலகம் உண்மைங்கறாரே?**

ப: நாமளும் அதத்தான் சொல்றோம். சங்கரர் உலகத்துக்கு ஆதாரமாயிருக்கற உண்மையைத் தெரிஞ்சுக்கோங்கறார்.

ஒருத்தர் மாயைன்னு சொல்றதை இன்னொருத்தர் மாறும் தன்மைங்கறார்.

முடிவிலே எல்லாம் ஒண்ணுதான்.

**கே: நாம சமாதி ஸ்திதிக்குப் போகணுமா?**

ப: ஏன் இப்போ சமாதி இல்லையா?

**கே: அப்ப, நாம சமாதி ஸ்திதியிலேதான் இப்பவே இருக்கோமா?**

ப: எப்பவும் சமாதி ஸ்திதியிலேதான் இருக்கோம். எப்பவுமே நம்மளிடம் இருந்தாத்தான் அது சமாதி.

**கே: அப்புறம்?**

ப: அப்பறமுமில்லே இப்பறமுமில்லே.

(166) ஒருவர் கேட்டார்.

**கே: வயோதிகத்தையும், நோயையும் தெய்வீக சக்தியால போக்கிக்கலாமா?**

ப: உடம்பையே போக்கிக்கலாம்.

**கே: தெய்வீக சக்தியை எப்படி ஆகர்ஷிக்கறது?**

ப: தெய்வீக சக்தி ஏற்கெனவே இருக்கு.
அதை ஆகர்ஷனம் பண்ணத் தேவையில்லை.
அதை விட்டுட்டு வேறா நாம இல்லை.
நாமதான் அது.
அதை எடுக்கவும் முடியாது, கொடுக்கவும் முடியாது.



(167) யாரோ ஒருவர் கேட்டார்.

**கே: மனத்தை ஒரு நிலைப்படுத்த முடியலை!**

ப: இப்போவே ஒரு ஸ்திதியிலே இல்லையா?
ஒரு ஸ்திதிதான் எப்பவும் இருக்கு.
எல்லாம் நம்மளோட நினைப்புத்தான்.
ஏதோ ஒருஸ்திதி அடைய வேண்டிய அவசியம் இல்லை.



(168) யாரோ ஒருவர் கேட்டார்.

**கே: ஞானிகள் சாப்பிடமாட்டாங்கன்னு சொல்றாங்களே?**

ப: உன் பக்குவத்துக்கு ஏத்த மாதிரிதான் நீ புரிஞ்சுக்கறதும்.

(169) யாரோ ஒருவர் கேட்டார்.

**கே: மனசை எப்படி அடக்கறது?**

ப: மனசை முதல்லே பிடிங்கோ!

**கே: எப்படி?**

ப: மனம்னா என்ன? கண்டுபிடிங்கோ!

(170) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: ஒரு யோகி தன்னுடைய பூர்வ ஜன்மங்களைப் பத்தி தெரிஞ்சுக்கலாமா?**

ப: இப்போ இந்த ஜன்மத்தைப் பத்தி நல்லா தெரிஞ்சாச்சா? ஏன் பூர்வ ஜன்மங்களைத் தெரிஞ்சுக்கணும்?

இப்போ உள்ளது தெரிஞ்சா எல்லாம் தெரிஞ்சுடும், இந்த ஜன்மங்கறதத் தெரிஞ்சதே தலைவலியாயிருக்கு.

இதிலே பூர்வ ஜன்மம் இன்னும் தலைவலி.

***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: விரதம் ஞானம் அடைய உதவுமா?**

ப: கொஞ்சம். மனசு எதையும் சாப்பிடாம விரதம் பண்ணனும்.
சாப்பிடாம இருந்தா சோர்வு வரும்.
விசாரத்துக்குத் தேவையான சக்தி இருக்காது.
மிதமா சாத்விகமா சாப்பிடுங்கோ! விசாரம் பண்ணுங்கோ!

**கே: குருவோட வழிகாட்டுதல் அவசியம் இல்லையா?**

ப: குரு உங்களை விட்டுத் தனியா எங்கே இருக்கார்?

(172) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: தியானத்துக்கும், விசாரத்துக்கும் என்ன பேதம்?**

ப: இரண்டும் ஒண்ணுதான்.

விசாரத்துக்குப் பக்குவம் இல்லேன்னா... தியானம் பண்ணணும். தியானத்திலே தன்னை மறந்து தியானிக்கப்படு பொருளாவே ஆயிடுவான்.

அந்தப் பொருள் தன்னோட சொந்தப் பொருள்ன்னு உணர்வான்.

அதாவது ஆத்மான்னு உணர்வான்.

விசாரிக்கறவனுக்கு தன்னையே பிடிச்சுக்கறதுனாலே... ஆத்மா ரொம்ப எளிமையா விளங்கும்.

(173) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: அகந்தையோட பிடியை எப்படித் தளர்த்தறது?**

ப: மேலும் புதுசா அகந்தைக்கு பிடிக்கக் கொடுக்கக் கூடாது.
புதுசா வாசனை சேராம பாத்துக்கணும்.

**கே: எவ்வளவு ஜபம் பண்ணினாலும் அகந்தைப் பிடி தளர மாட்டேங்குதே?**

ப: காலக்கிரமத்திலே தளரும். பிடி விட்டுடும்.

(174) **டாக்டர் ஹண்டு கேட்டார்.**

**கே: ‘நான்’கற எண்ணத்தோட மூலம் கண்டறிய இரண்டு வழியிருக்கா?**

ப: இரண்டு மூலமும் இரண்டு வழியும் இல்லை.
ஒரே மூலம் ஒரே வழி.

**கே: தியானத்துக்கும், விசாரத்துக்கும் என்ன வித்தியாசம்?**

ப: நான்கறத வச்சுக்கொண்டு பண்றதுதான் தியானம்.
நான் தியானிக்கறேன்னு இருக்கும், தியானம் பண்ணப்படற பொருள் இருக்கும், தியானிக்கறவன் இருப்பான்.
நேர் வழியில்லே.

ஆத்மா ஒண்ணுதான்.

நான் யார்ன்னு பாத்தா, நான்கறது மறைஞ்சு ஆத்மாவே மிஞ்சும்.

நேர் வழி.

**கே: நான் எதைப் பண்றது?**

ப: உம்மைப் பிடிச்சுக்கும்.

**கே: எப்படி?**

ப: இப்போவே நீரிருக்கீறே. அதுதான்.

நாம என்ன செய்றோம், இந்த நாம இருக்கறதை அகந்தையோட இருப்பா மாத்திப் பாக்கறோம்.

இது அஞ்ஞானத்தாலே ஏற்படறது.

'நான்'கற எண்ணம் போயிடுத்துன்னா...அஞ்ஞானம் தொலைஞ்சுடும்.

ஞானம் ஏற்கனவேயிருக்கு.

அதை அடையறதுக்கு எந்த முயற்சியும் தேவையில்லை.

முயற்சி எல்லாம் 'நான்' இன்னார்ங்கறதை ஒழிக்கத்தான்.

ஞானம் ஒண்ணும் வெளியே இல்லை... வர்றதுக்கு.

புதுசும் இல்லை. எப்பவும் இருக்கு. இங்கேயே இப்போவே இருக்கு.

(175) ***என். சுப்பாராவ் கேட்டார்.***

**கே: விசிஷ்டாத்துவைதிகள் முதல்ல ஆத்ம சாட்சாத்காரம், பிறகு பரமாத்ம சாட்சாத்காரம்னு சொல்றாங்க. புரிஞ்சுக்கறதுக்கு ரொம்ப கஷ்டமாயிருக்கு.**

ப: ஆத்ம சாட்சாத்காரம்கறதே தப்பு.

இரண்டு ஆத்மாவா இருக்கு? ஒண்ணு இன்னொன்ன சாட்சாத்கரிக்க? இரண்டு இல்லை. முதல்லே ஆத்மான்னா என்னன்னு பாப்போம்.

பிறகு மத்தது இருந்தா பாக்கலாம்.

**கே: பகவத்கீதையில கூட எல்லா ஜீவன்களையும் உடம்பாக் கொண்டது பரமாத்மான்னு சொல்லப்படுதே!**

ப: எல்லோரும் அகந்தையை ஒழிக்கணும்னு சொல்றால்லியா, அந்தப் பொதுவான விஷயத்தை முதல்லே செய்வோம்.

**கே: நானா ஜீவத்துவம் அத்வைதிகளும் சொல்றாங்களே?**

ப: அதெல்லாம் அப்புறம் பாப்போம்.

(180) *எம். பிரைடுமேன் கேட்டார்.*

**கே: தூக்கம் ஒரு மயங்கிய மங்கின ஸ்திதி. விழிப்பு அப்படியில்லை. சரியா?**

ப: தூங்கும்போது நீங்க இல்லையா?

**கே: நான் இருந்தேன், ஆனா ஒரு மங்கிய இடத்துல மயக்கத்துல இருந்த மாதிரி. அப்போ அதுக்கு சாட்சியா என் மனசு இரண்டு விதை வடிவுல இருந்தது. அதுதான் 'நான்'... இரண்டு ஸ்திதியிலும் இருந்தேன்னு சொல்லுது. யார் இந்த சாட்சி?**

ப: சாட்சின்னா அங்கே ஒரு விஷயமும், அதை அறியற ஒருத்தனும் இருக்கணும்.

இதை சாட்சி பாக்கணும். சாட்சி, அது, இதுங்கறது எல்லாம் மனச்சேஷ்டை. இதெல்லாம் மனசுலேதான் இருக்கு.

நான் ஒரு மங்கிய இடத்திலே, மயக்கத்திலே இருந்தேன்னு தூங்கும் போதா சொல்றேள்?

இப்போ... நீ...ன்னு ஒண்ணு கிளம்பி...அங்கே ஒரு சாட்சியிருக்கு அது இதுன்னு கதை சொல்றேள்.

உண்மையிலேயே அங்கே சாட்சியா இருக்கறதுக்கு எதுவும் இல்லே.

சாமான்யமான இருப்பு மாத்ரம்தான் இருக்கு.

(177) **கே: மஹத் தத்துவம் என்ன?**

ப: சுத்த சித்திலே இருந்து வெளிப்படும் ஒளிதான் மஹத்தத்துவம்.

ஒரு விதை முளைக்கறதுக்கு முன்னாடி பருக்கற மாதிரிதான் சுத்த சித்திலே இருந்து முதல்லே மஹத்தத்வம் ஏற்படறது.

அதிலே இருந்தே அகந்தையும், அதிலே இருந்து உடல் உலகமும் தோணறது.




**கே: பிரபஞ்ச உணர்வுன்னு இதைத்தான் சொல்றாங்களா?**

ப: ஆமாம். அகந்தையும், உலகமும் உருவாகறதுக்கு முன்னாடி அப்படி இருக்கு.

அது எல்லாத்தையும் உள்ளே அடக்கிக்கொண்டு இருக்கு.

எப்படி ஒரு சிறிய துளைவழியா வர்ற ஒளி ஸ்கிரீன்லே சினிமாவா தெரியறதோ, அப்படியே உடல் உலகங்களும் இந்த ஆபாஸப் பிரகாசத்திலே தெரியறது.

அதனாலே அந்த ஆபாஸப் பிரகாசத்தையே பிரபஞ்ச உணர்வுன்னு சொல்லலாம்.

**கே: அப்போ இந்தப் பிரபஞ்ச உணர்வை உணர்றதுதான் ஞானமா?**

ப: இல்லை, பிரபஞ்ச உணர்வு அகந்தைக்கு முந்தியஸ்திதி.

அதை ஈஸ்வரன்னும் சொல்லலாம்.
அகந்தைதான் ஜீவன்.
ஈஸ்வரனையும் வியாபிக்கற உணர்வுதான் சுத்தசித்.
அதையேதான் ஞானம்ன்னு சொல்றோம்.

பரம் (சுத்த சித்)



ஈஸ்வரன் (மஹத்) (பிரபஞ்ச உணர்வு)



ஜீவன் (தனியிருப்பு) ஜகம் (உலகத்தோற்றம்)

**கே: 'எதை அடைந்தவர் மீண்டும் திரும்பமாட்டாரோ அதுவே என் பரந்தாமம்' ன்னு கீதையில சொல்றது இந்த பிரபஞ்ச உணர்வை கடந்த சுத்த சித்தைத்தானே?**

ப: ஆமாம். அதுதான் பரந்தாமம் (உயர் இருப்பிடம்).

**கே: மீண்டும் திரும்பமாட்டார்ன்னா அஞ்ஞானம் ஏற்படாதுன்னு தானே பொருள்?**

ப: ஆமாம்.

**கே: அப்போ இந்தப் பிரபஞ்ச உணர்வை உடையவர்கள் அஞ்ஞானத்தைக் கடந்தவர்ன்னு சொல்ல முடியாது; சரிதானே?**

ப: ஆமாம். அதனாலேதான் எந்த உலகமாயிருந்தாலும், பிரம்மலோகமாயிருந்தாலும் ஒருத்தனைப் பிறவியிலே இருந்து விடுவிக்காது.

நாம நம்மளா இருந்தாப் போதும்.
நீங்க யார்ன்னு பாருங்கோ! அதா இருங்கோ!
அது எப்பவும் பிறப்பு இறப்பு போக்குவரத்து இல்லாத இடம்.
தேவையில்லாமே பிரபஞ்ச உணர்வு... அது இதுன்னு போட்டுக் குழப்பிக்க வேண்டாம்!

நாம இருக்கறது இங்கேயே இப்போவே ரொம்ப சாமான்யமா இருக்கு.

பேசாம அதிலே இருங்கோ!

**கே: உண்மைதான். இதை எத்தனை தடவை கேட்டாலும் மறந்து மறந்து ஏதோயிருக்கு அடையறதுக்குன்னே புத்தி போயிடுது. உண்மை மறந்திடுது.**

ப: ஆமா. மறுபடியும், மறுபடியும் ஞாபகப் படுத்திக்கணும்.

(182) *பகவான் ஒரு போட்டோவைக் காணோம்ன்னு தேடிக் கொண்டு இருந்தார். அப்போ ஒருத்தர் கேட்டார்.*

**கே: பகவானே.... நீங்க போட்டோவைத் தேடறீங்களே நீங்க ஞானிதானே... உங்களுக்கு அந்தப் போட்டோ எங்கே இருக்கும்ன்னு தெரியாதா?**

ப: நீங்க உங்க நாட்டுக்கு என்னைக் கூட்டிக்கொண்டு போனதா கனவு காண்றேள்.

காலையிலே விழிச்சுக்கொண்ட உடனே, என்கிட்டே வந்து, எனக்கு இப்படிக் கனவு வந்தது.... என்னோட ஊருக்குப் போன மாதிரி உங்களுக்கும் கனவு வந்ததான்னு கேட்டா, எப்படி இருக்கும்?

அப்படித்தான் இப்போ உங்க முன்னாடி நடக்கறது எல்லாம்.

**கே: அப்போ உங்க முன்னாடி நடக்கறது எல்லாம் உங்களுக்குத் தெரியாதா?**

ப: இதெல்லாம் மனச்சேஷ்டை. இந்தக் கேள்வியும்தான்.

இராமன் சீதையைத் தொலைச்சிட்டு காடெல்லாம் 'சீதா சீதா'ன்னு கத்திக்கொண்டே தேடிப் போறான்.

இதை அந்தப் பக்கமா வந்த பார்வதி-பரமேஸ்வராள் பாக்கறா.

பரமேஸ்வரன் இராமனை வணங்கினார்.

இராமன் கவனிக்காததுபோல் 'சீதா.... சீதா...'ன்னு சொல்லிக் கொண்டே போயிட்டான்.

இதைப் பாத்து பார்வதி பரமேஸ்வரன்கிட்டே, "நீங்க எதுக்கு இராமனைக் கும்பிடறேள்? நீங்க பரமசிவன்.

நீங்க என்னமோ இராமனைப் பெரிய ஞானின்னு சொன்னேள், ஆனா அவனைப் பாருங்கோ எல்லோரையும் விட ரொம்பத் துக்கமா அழுது, அழுது கத்திக்கொண்டே போறான்.

பாக்கறதுக்கு மனசு கஷ்டமாயிருக்கு.

ஏதாவது பண்ணுங்கோ" அப்படின்னு சொன்னா.

அதுக்கு பரமேஸ்வரன், "உனக்கு ஒண்ணும் தெரியாது. எல்லாம் சரியாத்தான் இருக்கு.

அவன் பெரிய ஞானி. எடுத்துருக்கற வேஷத்துக்கு நல்லா நடிக்கறான். வேணும்னா... நீயே சோதிச்சுப்பாரு"ன்னார்.

பார்வதியும் சீதையோட உருவிலே இராமன் தேடிக்கொண்டே போற வழியிலே இருக்கற ஒரு மரத்தடியிலே நின்னா... இராமன் கண்டுக்காமப் போயிட்டான்.

மறுபடியும் ஒரு பத்து மரம் தள்ளி சீதையாய் நின்னா... அப்பவும் பாக்கலே.

மறுபடியும் இதுதான் கடைசி தடவை... அப்படி...ன்னு அடுத்த பத்தாவது மரத்தடியிலே போய் நின்னா.... இப்போ இராமன் பாத்தான்.

பாத்துட்டு "பார்வதி... எங்கே சம்பு?

நீ மட்டும் இங்கே நிக்கறியே?

ஏன் சீதையோட உருவத்துலே இருக்கே?" ன்னு கேட்டான்.

பார்வதி நடந்ததைச் சொன்னா.

அதைக் கேட்டுட்டு இராமன் சொன்னான், "பார்வதி, உன் வீட்டுக்காரர் மட்டும்தான் சிவன் இல்லை.

நாங்க, இங்கே இருக்கற எல்லாமே சிவம்தான்.

நேர்லே பாக்கறப்போ கும்பிட்டுப்போம்... பாக்காதப்போ நினைச்சுப்போம்'... அப்படின்னான்.



(183) *பம்பாயில் இருந்து வந்த ஒரு கனவான் கேட்டார்.*

**கே: அரவிந்த ஆசிரமம் அன்னையிடம் நான் இந்தக் கேள்வியை கேட்டேன்.**

**'கடவுள் தன்னோட சொந்த சொரூபத்தை எனக்கு வெளிப்படுத்துவார்ன்னு என் மனசை எந்த நினைப்பும் வராம சூன்யமா வச்சுருக்கேன்.**

**ஆனாலும் ஒண்ணும் தெரியலை.'**

**அதுக்கு அந்த அம்மா...**

**'சரியான மனநிலைதான். மேலேயிருந்து கடவுளோட சக்தி கீழே இறங்கும். அது நேரடியான அனுபவமாயிருக்கும்ன்னு சொன்னாங்க.'**

**நான் என்ன பண்றது இப்போ?**

ப: ஒண்ணும் மேலேயிருந்து எல்லாம் இறங்காது. அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லே. எதுவும் வெளிப்படாது.

எது உள்ள பொருளோ அது எப்பவும் இருக்கு. இங்கேயே இப்போவே நீங்க அதுதான். நீங்க அதிலே இருந்து வேற இல்லே.

மனசைச் சூன்யமா வச்சுருக்கேன்னு சொல்றேள்... அங்கே ஒண்ணும் இல்லேங்கறேள்...அதை ஒண்ணும் இல்லேன்னு சொல்றதுக்கு அங்கே நீங்க இருக்கேள்! நீங்கயிருந்துதான் ஒண்ணும் இல்லேங்கறதப் பாக்கறேள்!

இன்னும் எதுக்காகக் காத்துக்கொண்டு இருக்கேள்?

நான் இன்னும் அனுபவப்படலேங்கற நினைப்பு, அதைப் பாக்கறதுக்கான எதிர்பார்ப்பு, ஏதாவது கிடைக்கும்ங்கற ஆசை, இதெல்லாம் பெரிய தடை.

இதெல்லாம் அகந்தையோட சேஷ்டை.

அது பிடியிலே மாட்டிக்கொண்டிருக்கேள். இதையெல்லாம் விழிப்பிலே ஒரு 'நான்' கிளம்பி நினைக்கறது.

நீங்க எதையும் நினைக்கறது கிடையாது.

நீங்க இருக்கற வஸ்து.

நீங்க எப்பவும் மௌனமாத்தான் இருக்கேள்.

நீங்க நீங்களாயிருங்கோ! அப்படின்னா சும்மா இருங்கோன்னு அர்த்தம்.

(184) *யாரோ ஒருத்தர் கேட்டார்.*

**கே: உடம்புலே ஆறு சக்கரங்கள் இருக்குங்கறாங்களே; அது எப்படி?**

ப: மூலாதாரம் கீழே இருக்கு, ஹிருதயம் நடுவிலே இருக்கு, சகஸ்ராரம் மேலே இருக்குங்கறது எல்லாம் கற்பனை. இப்படியெல்லாம் கற்பனை பண்றது தப்பு.

ஒரு வார்த்தையிலே சொன்னா 'நினைக்கறது நம்மளோட ஸ்வபாவம் இல்லே'.

(185) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: சாஸ்திரங்கள்லே 'ஒரு வார்த்தை', 'சொல்லாமல் சொல்லி', 'நினைக்காம நினைத்து', 'இருந்ததை இருந்தபடியே இருந்து காட்டி', அப்படி எல்லாம் சொல்றாங்களே அது என்ன?**

ப: மௌனம்தான்.



(186) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: நான் யார்ன்னு என்னால கண்டுபிடிக்க முடியலை.**

ப: படிக்கும்போது எழுத்தெல்லாம் தெரியறது. காகிதம் தெரியலேங்கறான்.

**கே: ஏக ஸத்யம்ங்கறாங்களே அந்த ஏகம் என்ன?**

ப: ஏகம்தான் ஸத்.

இருக்கறதுதான் ஸத்.

எது இந்தப் பாக்கப்படற பதார்த்தங்களா தோன்றுகிறதோ, அதுதான் ஸத்.

அதுதான் இருக்கறது. அதாவது நீங்க, நான், இந்த உலகம் எல்லாம் சேத்துதான் ஸத்.

**கே: ஆத்மான்னு சொல்றாங்களே அது அழியாதா?**

ப: முதல்லே ஆத்மான்னா என்னன்னு தெரிஞ்சுக்கோங்கோ. அப்புறம் அழியாதா இல்லையான்னு பாக்கலாம். எதை நீங்க ஆத்மாங்கறேள்?

**கே: ஜீவன்தான் ஆத்மா.**

ப: ஜீவன்னா என்னன்னு தெரிஞ்சுக்கோங்கோ.

ஜீவனுக்கும் ஆத்மாவுக்கும் என்ன வித்தியாசம்? ஜீவனே ஆத்மாவா? இல்லை, ஆத்மா ஜீவன்லே இருந்து வேறா தனியாயிருக்கா?

நீங்க பாக்கற எல்லாத்துக்கும் முடிவு இருக்கு. எது தோன்றுகிறதோ அது மறையும். எது தோன்றலையோ அது மறையாது.

இப்படித் தோன்றாம மறையாம எது இருக்கோ அதைப் பாக்க முடியாது. காண்பான் காட்சி கடந்தது அது.

எது தோன்றுகிறதுன்னு பாக்கணும். பாத்தா அது மறைஞ்சுடும். எப்பவும் இருக்கறது அது பாட்டுக்கு இருக்கும். புதுசா தோன்றுவது எல்லாம் மறைஞ்சிடும்.

**கே: மனிதப் பிறவிக்கு அடுத்து என்ன பிறவி ஏற்படும்? ஜீவன் என்ன ஆகும்?**

ப: முதல்லே நாம பிறந்திருக்கோமா, நாம யார்ன்னு தெரிஞ்சுப்போம்.

நாம யார்ன்னு தெரியாத வரைக்கும் இந்தக் கேள்விக்கு இடமில்லே.

எது பிறந்திருக்கு? எதை மனிதப் பிறப்புன்னு சொல்றேள்?

பிறப்பு, இறப்பு, மறுபிறப்பு இதைப்பத்திக் கேள்வி கேக்கறதுக்குப் பதிலா

நான் யார்?

நான் எங்கிருந்து வந்தேன்? இப்படி விசாரம் பண்ணலாம்.

தூங்கும்போதும், விழிப்பிலேயும், கனவிலேயும் நீயேதான் மாறாம இருக்கே.

நான்கற எண்ணம்தான் ஜீவனா? இல்லே இந்த உடம்பு ஜீவனா?

இது ஸ்வபாவமா? இல்லே நினைப்பா?

இல்லே நினைக்கறதுதான் நம்மளோட ஸ்வபாவமா?

**கே: எதுக்காக ஆத்மவிசாரம் பண்ணனும்?**

ப: ஆத்ம விசாரம் பண்ணலேன்னா லோக விசாரம் பிடிச்சுக்கும்.

இல்லாததப் பிடிச்சுக்கொண்டு, இருக்கறதத் தெரியலேன்னு தேடறோம்.

இல்லாதத விடமாட்டேங்கறோம். இருக்கறத விட்டுடறோம்.

நம்மள உடம்புதான்னு நினைக்கற வரைக்கும் ஆத்மா தெரியாது. தேடிக்கொண்டே இருக்கணும்.

ஆனா உண்மையிலேயே அது இங்கேயே இப்போவே இருக்கு.

தொலைக்கவே முடியாது. எப்பவும் இருக்கு.



(187) ***பகவானின் பக்தர்கள் இருவர் கேட்டனர்.***

**கே: சமாதி நிலையில உடம்பு மனசு பிராணன் எதுவும் அசையாதுங்கறார் இவர். நான் உடம்பு, பிராணன், மனசு எல்லாம் அசையலாம். ஒண்ணும் ஆகாதுங்கிறேன். எதுசரி?**

ப: இரண்டு பேரும் சரி.

ஒருத்தர் கேவல நிர்விகல்ப சமாதியைச் சொல்றேள். இன்னொருத்தர் சகஜ சமாதியைச் சொல்றேள்.

கேவல நிர்விகல்ப சமாதியிலே மனம் ஆத்ம ஒளியிலே மூழ்கியிருக்கும்.

கேவல நிர்விகல்ப சமாதியிலே சமாதியும், சமாதி கலையறதும்...இந்த வித்தியாசம் இருக்கும்.

அதாவது வேலை தடையா தெரியும், ஏன்னா வேலையிலே மனம், புத்தி, இந்திரியம்... உடம்பு அசைய ஆரம்பிச்சுடும்.

சகஜத்துலே மனம் ஆத்மாவிலே கரைஞ்சிடும். மேலே சொன்ன வித்தியாசம் இருக்காது. சகஜ ஞானிகளின் வேலை, பாக்கறவாளுக்குத் தானே தவிர அவனுக்கு இல்லை.

உதாரணம்: தூங்கற குழந்தை பால் குடிக்கறது, வண்டி துயில்வான் கதை.

(188) ***தரிசிக்க வந்தவர் கேட்டார்.***

**கே: குருன்னா யாரு?**

ப: மனத்தோட ஸ்வபாவமேஉணர்வுதான்.

நான்'கற எண்ணம் தலைதூக்கும்போதே மனம் தொழில் படறது.

எப்பவும் இருக்கற நான்கற உணர்வு இந்த மாதிரி மனத்தாலே பாதிக்கப்படாம (cut ஆகாமே), அதிலே இருந்து வேற எதையும் தனியா பாக்காம, வெறும் உணர்வு மாத்ரமாயிருக்கு.

இதைத்தான் பைபிள்லே 'நான் நானாயிருக்கேன்' (I Am that I Am)ன்னு சொல்றா.

'நான்'கற எண்ணம் எழுந்ததாலே பாதிக்கப்படற மனம் அதோட பலமெல்லாம், எண்ணங்களா சிதறி, பலஹீனமாயிடும்.

தூங்கும்போது நான்கற எண்ணம் இல்லாததாலே தூக்கம் சுகமாயிருக்கு.

மனம் வேலை பாத்தா துக்கம். பலஹீனம்.

மனம் வேலை பாக்கலேன்னா சுகம். பலம்.

எப்பவும் இருக்கற நான்கற உணர்வு... யாரோ ஒருத்தர் கிட்டே... நல்லா வெளிப்பட்டு தனக்குப் பக்கத்துலே இருக்கற

பலஹீனமான மனங்களை அங்கங்கேயே இருக்கற...அதாவது அவாவாளுக்கு உள்ளேயே இருக்கற நான்கற உணர்வோட சேத்துடும்.

இப்படிச் சேக்கறதுக்குப் பேர்தான் சமாதி. இப்படித் தன்னை அண்டியவாளை சாதனையின்றி சமாதியிலே சேக்கறவன்தான் குரு.



(189) *ஒலிவியெ லாகோம்ப், பிரஞ்சுக்காரர் கேட்டார்.*

**கே: உங்களுடைய உபதேசம் சங்கரரை ஒத்து அவரை மாதிரியே இருக்கே?**

ப: என்னோட அனுபவத்திலே இருந்து சொல்றதுதான். மத்தவா அது ஆசாரியார் சொல்ற மாதிரியேயிருக்குன்னு சொல்றா.

**கே: உண்மைதான். தான் உணர்ந்தத வேற விதமா சொல்ல முடியாதா?**

ப: உண்மையை உணர்ந்தவன் தன்னோட அனுபவத்தை சுதந்தரமாகவே கூறுவான்.

மௌனம்தான் உண்மையிலேயே சிறந்த லெக்சர் (lecture).

**கே: ஹடயோகம் தாந்திரீக பயிற்சி பற்றி பகவான் கருத்து என்ன?**

ப: நான் எந்த முறையையும் விமர்சனம் பண்றது இல்லை. எல்லாம் சித்த சுத்திக்காகத்தான்.

ரொம்பப் பக்குவமான மனம்தான் விசாரத்துக்குத் தகுதியாகும்.

**கே: கர்மம், பக்தி, ஞானம், யோகம் இந்த நாலுல எது சிறந்தது?**

ப: **உதித்த இடத்தில் ஒடுங்கி இருத்தல்**
**அதுகர்மம் பக்தியும் உந்தீபற**
**அதுயோகம் ஞானமும் உந்தீபற,**

சும்மாயிருக்கறதுதான் கர்மம், பக்தி, ஞானம், யோகம்.

தூங்கும்போது உலகம் இல்லை. அகந்தை இல்லை. துக்கம் இல்லை. ஆனா நாம இருக்கோம்.

விழிப்பிலே உலகம், அகந்தை எல்லாம் இருந்தாலும், எப்பவும் இருக்கற நான்கற உணர்வும் இருக்கு.

தோன்றி மறையறது எது? எப்பவும் தோன்றாம மறையாம எது இருக்குன்னு உணரணும்.

**கே: ஒரு ஆத்மவிசாரி உலகத்துலே வேலைகளை எப்படிச் செய்யணும்?**

ப: சங்கல்பம் இல்லாமே!

**கே: சங்கல்பம் இல்லாம செய்யறதுன்னா எப்படி?**

ப: நீங்க பாரிஸ்லே இருக்கும்போது இங்கே வருவோம்ன்னு நினைச்சீங்களா?

**கே: இல்லை.**

ப: இப்போ இங்கே உக்காந்து கேள்வி கேட்டுக்கொண்டு இருக்கேள். இதுதான் சங்கல்பம் இல்லாமே செயல்படறது.

யாரும் வேலை செய்யாம இருக்க முடியாது. நாம என்ன வேலைக்காகப் பிறந்தோமோ, அந்த வேலையை வாங்காம விடாது. வந்த வேலை தானா நடக்கும்.



(192) ***எஸ்.எஸ். கோஹன் கேட்டார்.***

**கே: மோட்சத்துக்கான மார்க்கம் என்ன? அதுக்கு என்ன தகுதி?**

ப: இப்போல்லாம் யாரும் மோட்சத்தை விரும்பறதில்லை. எல்லோரும் சந்தோஷமாயிருக்கணும்னுதான் விரும்பறா.

அதுவும் புலனின்பத்தையேதான் விரும்பறா. சரி, புலனின்பந் தான் என்ன? அதுவும் ஆத்மானந்தந்தான்.

மோட்ச ஆனந்தந்தான்.

அப்படியான மோட்ச ஆனந்தத்தை அடைய, சாஸ்திரங்கள்லே சொல்லியிருக்கற நான்கு தகுதிகள்லே இதுவும் ஒண்ணு.

இந்தத்தகுதி, அதாவது இன்பத்தை விரும்பற தகுதி, எல்லோருக்கும் இருக்கு. அதனாலே எல்லோரும் ஆத்மஞானத்துக்குத் தகுதியானவாதான்.

இந்த நான்கு தகுதியையும் முழுமையாப் பெற்றவாளை உலகத்திலே பாக்கறது அரிது. இந்தத் தகுதியில்லாததாலே ஆத்ம ஞானத்தைத் தேடாம இருக்கக் கூடாது.

எல்லோருக்கும் ஆத்மா சொந்த அனுபவம். ஆனாலும் அதைச் சரியா தெரிஞ்சுக்காம ஆத்மாவை உடம்போட சேத்துத் துன்பப்படறா.

இதுதான் உலகத்திலேயே மிகப் பெரிய அதிசயம். உணர்ந்துகொண்டேயிருந்தும் அது தெரியாம துன்பப்படறது தான்.

ஆரம்பத்திலே சாதகன்கிட்டே 'நீ உடம்பு இல்லே'ன்னு சொல்ல வேண்டியதா இருக்கு.

ஏன்னா... அவன், 'நான் உடம்பு'ன்னு நினைச்சுக்கொண்டு இருக்கான். உண்மையிலேயே உடம்பும் மத்த எல்லாமும் நாமதான்.

எல்லாம் நாமதான்கற உண்மை புரியும்போது, உடம்பும் அதிலே ஒரு பகுதிதானே? அதையெல்லாம் கடைசிலே தெரிஞ்சுக்கட்டும்.

முதல்லே சித்தை ஜடத்துலே இருந்து பிரிச்சு, வெறும் சித்தா நிக்கணும்.

பின்னாடி அவனுக்கே தெரியும் ஜடம்ன்னு ஒண்ணும் கிடையாது. எல்லாம் சித்துதான்னு. இதுதான் விவேகம்.

எப்பவும் இந்த ஆரம்ப விவேகம் கடைசி வரைக்கும் இருக்கணும், அதோட பலன்தான் மோட்சம்.



(193) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: விரும்பாத சில சேர்க்கைகள் உடம்புக்கு வரும்போது வருத்தமாயிருக்கு. விதின்னு பேசாம அனுபவிச்சுக்கணுமா? இல்லை மதியால விலக்கணுமா?**

ப: விதி, மதி இரண்டும் இரட்டைப் பிறவி. சேந்துதான் இருக்கும். அது உடம்பு சம்பந்தம். உடம்பு எப்படி செயல்படறதோ செயல்படட்டும்.

அதைப் பத்தி நீங்க ஏன் கவலைப்படறேள்? விதி மதி இரண்டும் உடம்பு இருக்கற வரைக்கும் இருக்கும்.

ஆனா, ஞானம் இதெல்லாம் தாண்டினது. ஆத்மா, அறிவு அறியாமை தாண்டினது.

இங்கே உடம்பு அனுபவிக்கறது எல்லாம் முன்வினைப் பயனாலேயோ, தெய்வ கதியாலேயோ, வேறு சில காரணங்களாலேயோ மட்டுமே ஏற்படறது.

(196) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: நான் யார்ன்னு தேடினா ஒண்ணும் தெரிய மாட்டேங்குது.**

ப: உங்களை உடம்புன்னு நினைச்ச நினைப்பு கெட்டியா இருக்கறதாலே... பாக்கறதுனா ஏதோ காட்சியாயிருக்கும்னு நினைக்கறதுனாலேயே ஒண்ணும் தெரியலேங்கறேள்.

என்ன இருக்கு அங்கே பாக்கறதுக்கு?

யார் பாக்கறது?

எப்படிப் பாக்கறது?

ஒரே அறிவுதான் 'இருக்கேன்'கறதா இருக்கு. அதுவேதான் உபாதிவழியா நான்கற எண்ணமா வர்றது, வந்து உடம்போட தன்னை இணைச்சுக்கொண்டு கண் வழியா பாக்கறது.

இந்த அகந்தை புலன்களாலே அறியறதையே, இருக்கறதுக்கான ஆதாரம்ன்னு நம்பும்.

காண்பான், காட்சி, காணப்படுபொருள் பாக்கற உடம்பையும் சேத்து, இந்த மூணும் ஏகமான நான்கற ஒரு அறிவோட வெளிப்பாடுங்கறதை ஒத்துக்காது.

நிதித்தியாசனமே இந்த மயக்கத்திலே இருந்து வெளியே எடுக்கும். அதாவது 'நான்'கறது ஏதோ பாக்கக்கூடிய பொருள்ங்கற மயக்கம்.

உண்மையிலே நான்னு எதையும் பாக்க முடியாது. நாம இருக்கோம்னு தெரியறதுக்கு நம்ம முன்னாடி கண்ணாடி வேணுமா?

அந்த சாமான்யமான இருப்புதான் அறிவு. எப்பவும் இருக்கற 'நான்'. அதுவே பரமார்த்த உண்மை. நீங்களே உணருங்கோ!

**கே: எண்ணங்கள் எங்கிருந்து வருதுன்னு பாத்தா... நான்னு அனுபவமாகுது. ஆனா திருப்தியா இல்லை.**

ப: சரியாச் சொன்னேள்.

நீங்க அனுபவமாறதுன்னு சொல்ற 'நான்' உடம்பை பிடிச்சுக்கொண்டு இருக்கு. அது உடம்பு பிடியை விடணும்.

அப்போ அனுபவமாறதுதான் சுத்த நான். எல்லா எண்ணங்களும் நீங்கினா சுத்த நான் ஸ்புரிக்கும்.

தூக்கத்திலே இருந்து விழிக்கறப்போதும், உலகத்தை அனுபவிக்கறதுக்கு முன்னாடியும் சுத்த 'நான்' இருக்கும்.

அதைக் கெட்டியா பிடிச்சுக்கணும்.

உலகம் அனுபவமானாலும் பரவாயில்லை, அதை பிடிச்சுக்கொண்டா போதும். நாம எதனாலேயும் பாதிக்கப்பட மாட்டோம்.



**(197) *குல்பாய், சிரீன்பாய் பிரியாம்ஜி என்னும் இரண்டு பார்சி பெண்மணிகள் கேட்டது.***

**கே: குரு அருள்ன்னா என்ன? அது எப்படி செயல்படும்?**

ப: குருதான் ஆத்மா.

**கே: அது எப்படி ஞானத்தை கூட்டுவிக்கும்?**

ப: 'ஈஸ்வரோ குருரத்மேதி'.

ஒருத்தனுக்கு முதல்லே அதிருப்தி ஏற்படும்.

உலகத்திலே திருப்தி இல்லாமே இறைவன்கிட்டே போனா ஆசைப்பட்டது கிடைக்கும்ன்னு கடவுள்கிட்டே பிரார்த்திப்பான்.

மனசு மெதுமெதுவா சுத்தமாகும்.

இப்போ உலக ஆசையைவிட இறைவன் மேலே பிரியம் ஜாஸ்தியாகும்.

இறைவனை அறிய விரும்புவான். உடனே இறையருள் வேலை செய்ய ஆரம்பிக்கும். கடவுள் குரு ரூபம் எடுத்து அவனுக்குத் தோன்றுவார்.

உண்மையைச் சொல்லிக் கொடுப்பார். அவருடைய சகவாசத்தாலேயும், போதனையாலேயும் மேலும் அவன் சித்தத்தைச் சுத்தம் பண்ணுவார்.

இப்போ மனசுக்குப் பலம் கிடைக்கும். உண்முகமா நிக்கப் பழகும். தியானத்தாலே மேலும் மனம் சுத்தப்பட்டு கடைசிலே சின்ன சலனமும் இல்லாமே சும்மாயிருக்கும்.

அந்தச் சும்மாயிருக்கும் ஸ்திதிதான் ஆத்மா.

குரு உள்ளேயும் வெளியேயும் இரண்டிலேயும் இருப்பார்.

வெளியேயிருந்து மனத்தை உண்முகமா தள்ளுவார்.

உள்ளேயிருந்து ஆன்மாவை நோக்கி இழுப்பார்.

மனதை அமைதி அடையச் செய்வார்.

குரு அருள் இதுதான்.

குரு, கடவுள், ஆத்மா மூணும் வேறு, வேறு இல்லை.

**கே: எங்களுக்கு எப்படி உண்மையை உணர்றதுன்னு தெரியலை. எங்களுக்கு ஞானம் ஏற்பட கருணை புரியணும்.**

ப: எப்படித் தியானிப்பேள்?

**கே: நான் யார்ன்னு கேப்பேன். நான் உடம்பு இல்லை; நான் பிராணன் இல்லை; மனம் நான் இல்லை; அதுக்கு மேல போக முடியலை.**

ப: நல்லது. அவ்வளவுதான் புத்தியாலே முடியும்.

புத்திபூர்வமா செய்றேள். எல்லா சாஸ்திரங்களும் வழி காட்டத்தான் முடியும். நேரடியாகக் காட்ட முடியாது.

நான் இது இல்லைன்னு எல்லாத்தையும் தள்ளிவிடறவனாலே அவனைத் தள்ள முடியாது. 'நான் இது இல்லை'; 'நான் இது இல்லை'; சொல்றதுக்கு ஒரு நான் வேணும்.

அந்த 'நான்'தான் அகந்தை அல்லது அஹம் விருத்தி. நான்கற எண்ணம் வந்த பிறகுதான் எல்லா எண்ணமும் வரும். அதனாலே இதுக்குப் பெயர் அஹம்விருத்தி. முதல் எண்ணம்.

இந்த முதல் எண்ணத்தை வேரறுத்தா எல்லாத்தையும் வேரறுத்த மாதிரி.

அதனாலே இந்த நான்கற எண்ணம் எங்கிருந்து வர்றது? நான் யார்?ன்னு அதோட மூலத்தைத் தேடணும். இப்படித் தேடினா அந்த எண்ணம் மறைஞ்சு ஆத்மா ஒளிரும். அதாவது எப்பவும் இருக்கறது விளங்கும்.

**கே: அதை எப்படிச் செய்யறது?**

ப: நான்கறது தூங்கும்போதும், கனவிலேயும், விழிப்பிலேயும் எப்பவும் இருக்கு.

தூங்கும்போது இருந்த அதே நான்தான் இப்போ பேசறது. நான்கற உணர்வு எப்பவும் இருக்கு.

நாம இருக்கறதை நம்மளாலே மறுக்க முடியுமா? யாரும் நான் இல்லேன்னு சொல்ல முடியாது. நான்னு சொல்றேள் இல்லையா... அது யார்?

**கே: எனக்கு புரியலை. நான்கறது போலின்னு சொல்றீங்க. அதை எப்படி நீக்கறது?**

ப: போலி 'நான்'கறதையெல்லாம் நீக்க வேண்டாம்.

போலி எப்படிப் போலியை நீக்கும்?

நீங்க செய்ய வேண்டியது எல்லாம் நான்கறது எங்கிருந்து வர்றதுன்னு பாக்கணும்.

அங்கேயே இருங்கோ. உங்க முயற்சி இது வரைக்கும்தான் முடியும், அப்புறம் அது பாத்துக்கும்.

அங்கே ஒண்ணும் செய்ய முடியாது. எந்த முயற்சியும் அந்த இடத்தை அடையாது.

**கே: இங்கேயே இப்போவே நான் இருக்கேன்னா அது ஏன் எனக்கு தெரிய மாட்டேங்குது?**

ப: தெரியலேன்னு சொல்றது யாரு?

எப்பவும் இருக்கற நான் சொல்றதா?

இல்லை போலியா?

விசாரிங்கோ!

அது போலியா ஒருத்தன் கிளம்பி எனக்குத் தெரியலேங்கறான்.

அதுவே தடை.

அதை நீக்கினாத்தான் எப்பவும் இருக்கறது துலங்கும்.

'நான் இன்னும் உணரலே'ங்கற நினைப்புதான் பெரிய தடை... உண்மையை உணர்றதுக்கு.

உண்மை எப்பவும் உணரப்பட்டே இருக்கு.

புதுசா எதையும் உணரத்தேவையில்லை. இல்லேன்னா... ஞானம்ங்கறது புதுசா எதையோ அடையறதுன்னு ஆயிடும்.

எது புதுசா வருதோ அது போயிடும். ஞானம் எப்பவும் இருக்கறதாயிருக்கணும். இல்லேன்னா அதுக்கு முயற்சி பண்றதுலே பிரயோஜனமில்லே.

நாம தேடறது இனிமே புதுசா நமக்குத் தெரியப்போற விஷயம் இல்லை. ஏதோ நடக்கப்போறதும் இல்லை.

எப்பவும் இருக்கறது... அஞ்ஞானத்தாலே மறைக்கப்பட்ட மாதிரி இருக்கு. அந்த அஞ்ஞானமே தடை. அஞ்ஞானம் நீங்கினா எல்லாம் சரியா வரும்.

அஞ்ஞானமும் நான்கற எண்ணமும் ஒண்ணுதான். அதோட மூலத்தைக் கண்டுபிடிங்கோ...! அது மறைஞ்சிடும்.

நான்கற எண்ணம் பேய் மாதிரி. உடம்பு வர்றப்போவே பிடிச்சுக்கொண்டு கூடவே வரும். நல்லா வளரும், உடம்பு மறையறப்போ மறைஞ்சுடும்.

உடம்பை நான்னு நினைக்கறதுதான் போலி நான், தேகாத்ம புத்தின்னு சொல்றது.

தேகாத்ம புத்தியை விடுங்கோ! மூலத்தைத் தேடறதாலேதான் இது நடக்கும்.

உடம்பு நான்னு சொல்றது இல்லை. நாமதான் உடம்ப நான்னு சொல்றோம். இந்த நான் யார்ன்னு கண்டுபிடிங்கோ! அது எங்கிருந்து வர்றதுன்னு பாத்தா மறைஞ்சுடும்.

**கே: பிறகு ஆனந்தம் ஏற்படுமா?**

ப: எப்பவும் இருக்கற நான்கற உணர்வு ஆனந்தமேதான்.

இருப்பு, உணர்வு, ஆனந்தம் இந்த மூணும் எப்பவும் இருக்கற நான்கறதோட அம்சம்தான். அப்போ ஆனந்தந்தான் நம்மளோட இயல்பே. அஞ்ஞானத்தாலே ஆனந்தம் மறைபட்ட மாதிரி தெரியறது.

அஞ்ஞானம் நீங்கினா ஆனந்தம் தானே தெரியும்.

**கே: இந்த நிலையை அடையறதுக்கு ஜீவன், ஈஸ்வரன், உலகம் இந்த மூணோட உண்மையை கண்டுபிடிக்க வேண்டாமா?**

ப: இந்த மூணும் நான்கறதோட கற்பனை.

நான் உதிச்ச பிறகுதான் எல்லாம் உதிக்கும். தூங்கறபோது இந்த மூணையும் யோசிச்சேளா? ஆனா நீங்க இருந்தேள்... அப்போ இருந்த நீங்கதானே இப்போ பேசிக்கொண்டு இருக்கறது.

ஜீவேசுவரஜகம் உண்மைன்னா... நீங்க தூங்கும்போதும் இருந்திருக்கணுமே! இதெல்லாம் நான்கற எண்ணத்தைப் பிடிச்சுக்கொண்டு வர்றது.

'நான்தான் உலகம்'ன்னு உலகம் வந்து உங்ககிட்டே சொல்லித்தா? இந்த உடம்பு 'நான்தான் உடம்பு'ன்னு உங்ககிட்டே

சொல்லித்தா? நாமதான் இது உலகம், இது உடம்புன்னு சொல்றோம்.

இதெல்லாம் நம்மளோட கற்பனை. நீங்க யார்ன்னு கண்டுபிடிங்கோ! உங்க சந்தேகமெல்லாம் போயிடும்.

**கே: நாம சத் சித் ஆனந்தமாவே இருந்தும் கடவுள் ஏன் ரொம்ப சோதிக்கறான்? ஏன் நம்மளப் படைச்சான்?**

ப: கடவுள் வந்து சொன்னாரா 'உங்களைச் சோதிக்கறேன்'னு? நீங்கதான் சொல்றேள்.

இப்படிச் சொல்றதில்லையா அதுதான் போலி நான். அது மறைஞ்சா... கடவுள் ஏன் படைச்சார், அது, இதுன்னு சொல்றதுக்கு யாரும் இருக்கமாட்டா.

'இருக்கறது', நான்ன்னு கூட சொல்லிக்கறது இல்லை.

நான் மனுஷன், நான் மனுஷன்ன்னு சொல்லிக்கறோமா! ஒருத்தனுக்கு நான் ஆடா? மாடான்னு? சந்தேகம் வந்தா... நான் ஆடல்ல, மாடல்ல ஆனா நான் மனுஷன்னு சொல்லலாம். இப்படி யாரும் சொல்றது இல்லெங்கற மாதிரிதான் நாம இருக்கறதும்... ஞானமும்.

**கே: எப்பவும் எல்லோரும் ஞானம் அடைஞ்சுதான் இருக்கோம்ன்னு நீங்க சொல்றீங்க. ஆனா ஞானமடைஞ்சா... ஆனந்தம் உணர்வாவே இருக்கணுமே... அது எங்ககிட்டே இல்லையே?**

ப: இருக்கறது ஒரே உணர்வுதான். ஆனா நாம பல வகையான உணர்வுகளா அதைச் சொல்றோம். அதாவது உடல் உணர்வு. நான்கற உணர்வு, பிரபஞ்ச உணர்வு, ஆழ்மன உணர்வு அப்படி இப்படின்னு சொல்றோம். எல்லாம் ஒரே உணர்வுதான். வேறு வேறு ஸ்திதிகள்லே அப்படி தெரியும். உணர்வு இல்லாமே காலம், தேசம் இல்லை. உணர்விலேயே அது தோற்றமாகறது.

ஸ்கிரீன்லே எப்படி சினிமா படம் ஓடறதோ, அப்படியே உணர்விலேயே உடல் உலகம் தோற்றமாகறது.

எப்பவும் நாம உணர்வாவேதான் இருக்கோம்.

**கே: இந்தப் பொருள்களெல்லாம் எங்கிருந்து வந்தது?**

ப: நீங்க எங்கிருந்து வந்தேளோ அங்கேயிருந்துதான். உங்களை முதல்லே தெரிஞ்சுக்கப் பாருங்கோ! அதைப் பத்திக் கேளுங்கோ!

**கே: நான் திருப்தியாகலே.**

ப: மூலத்தை அடைஞ்சாத்தான் திருப்தி. இல்லேன்னா அலையவேண்டியதுதான்.

**கே: பரம்பொருள் குணம்குறிகளற்றதா? உடையதா?**

ப: முதல்லே நீங்க குணங்குறிகள் இல்லாதவனா? இருக்கறவனா?

**கே: சமாதின்னா என்ன?**

ப: நம்மளோட ஸ்வபாவம்.

**கே: அப்போ ஏன் அதுக்கு முயற்சி பண்ணனும்?**

ப: யாரோட முயற்சி?

**கே: நான் ஒரு அஞ்ஞானின்னு உங்களுக்கு தெரியும்.**

ப: உனக்குத் தெரியுமா?

நான் அஞ்ஞானின்னு தெரிஞ்சுக்கற அறிவு அஞ்ஞானமா?

எல்லா சாஸ்திரங்களும் இருக்கற ஒண்ணை தெரிஞ்சுக்கறதுக்குத்தான் ஏற்பட்டிருக்கு. எல்லாரோட அனுபவமும் நாம ஒண்ணுங்கறதுதானே?

ஒண்ணு இரண்டாயிடுத்தா?

இரண்டு நான் இருக்கா?

தூங்கி எழுந்ததும் நான் இரண்டாயிடுத்தா?

இல்லை. நான்கறது தூங்கும்போதும், தூங்கி எழுந்ததும் ஒரே மாதிரிதான் இருக்கு. இது எல்லோருடைய அனுபவம்.

கோளாறு பார்வையிலேதான் இருக்கு. உலகத்திலே இருந்து நீங்க வேறன்னு கற்பனை பண்ணிக்கறேள். ஆனா உலகமும் நீங்களும் ஒண்ணாவே தோன்றி ஒண்ணாவே மறையறது.

இப்படி விழிப்பிலே தோன்றி, தூக்கத்திலே மறையறதுக்கு ஆதாரமாத் தோன்றாம மறையாம எப்பவும் இருக்கற அறிவு அதாவது இருப்புதான் உண்மை நான். உண்மையிலேயே நீங்க அதுதான்.

**கே: அப்போ எங்கே இருந்து அஞ்ஞானம் வந்தது?**

ப: அஞ்ஞானம்ன்னு ஒண்ணு இல்லவே இல்லை. அது வரவேயில்லை.

மனுஷனே ஞானம்தான்.

உலகமே ஞானம்தான்.

ஞானமேதான்.

அஞ்ஞானம்ன்னு ஒண்ணு எந்தக் காலத்திலேயும் இங்கே இல்லவே இல்லைன்னு தெரிஞ்சுக்கறதத்தான் எப்பவும் இருக்கற ஞானத்தை அடைஞ்சதா உபச்சாரமா சொல்றா.

இதுக்கு உதாரணம்

கழுத்திலேயே நகை வச்சுக்கொண்டு அதைத் தேடினவ கதை.

ஆற்றைக் கடந்த பத்து முட்டாள்கள் கதை.

ஞானமடையறதுங்கறது இந்தக் கதை மாதிரிதான்.

**கே: நான் என்னுடைய விசாரத்தை வெளியில இருந்து ஆரம்பிச்சு அப்புறம் உள்ளே போகவா?**

ப: வெளியே உள்ளே அப்படின்னெல்லாம் இருக்கா? தூங்கும்போது உள்ளே வெளியே எல்லாம் எங்கே?

உடம்பு வந்த உடனேதான் உள்ளே வெளியே எல்லாம். இந்த விழிப்பு நிலையே பொய்... உண்மையை உணர்ந்தா உலகம் முழுக்கப் பரம்பொருளேதான். உலகத்தைப் பொய்ன்னு சொல்றா... ஆனா உண்மையிலேயே அது பரம்பொருள்.

**கே: இவ்வளவு எளிமையான உண்மை ஏன் உணரப்படாம இருக்கு? இதுக்கு ஏதாவது உதாரணம் சொல்லுங்க?**

ப: கழுத்துலே இருக்கற நகையைக் காணோம்ன்னு தேடினவ கதை.

பத்து முட்டாள்கள் ஆற்றைக் கடந்த கதை.

சிங்கக் குட்டி ஆட்டு குட்டிகளோட வளர்ந்த கதை.

கர்ணன் சொந்த தாய் தந்தையரைத் தெரியாமே தேரோட்டியா இருந்த கதை.

அரசகுமாரன் வேடுவர்களிடம் வளர்ந்த கதை.

(202) **பஞ்ஜாப் கனவான் ஒருவரை காஞ்சிப்பெரியவர் பகவானிடம் அனுப்பியிருந்தார். அவர் கேட்டார்.**

**கே: அஹம் பிரம்மாஸ்மின்னு நான் தியானிக்கறேன். அது சரியா?**

ப: நான் பிரம்மம்கறது ஒரு நினைப்புத்தான்.

அஹம் பிரம்மாஸ்மின்னு சொல்றது யார்? பிரம்மம் சொல்றதா?

அப்படிச் சொல்றதுக்கு பிரம்மத்துக்கு என்ன அவசியம்? உண்மை 'நான்' சொல்லாது. ஏன்னா அது எப்பவும் பிரம்மமாவேயிருக்கு.

நான் பிரம்மம்ன்னு சொல்றது ஒரு நினைப்பு.

எல்லா நினைப்பும் ஒரு போலி நான் கிளப்பி விடறதுதான்.

நினைக்காம சும்மாயிருங்கோ!.

**கே: இந்த உண்மையை நான் மறந்துடறேன்.**

ப: நான்கற எண்ணம் இருக்கற வரை மறதியிருக்கும்.

நான் பிரம்மம்ன்னு நினைச்சா மறந்துடுவேள்! நான்கறத என்னன்னு பாத்தா அது மறைஞ்சிடும். என்ன மிஞ்சறதோ அதுதான் உண்மை நான். அதுதான் ஆத்மா.

'நான் பிரம்மம்'ன்னு நினைக்கறது மத்த நினைப்பைப் போக்கறதுக்கான உபாயமே தவிர அது உண்மை கிடையாது.

'நான் பிரம்மம்'ன்னு நினைக்கறது யார்ன்னு பாருங்கோ!

நினைக்கறத நான்ன்னு சொல்லுவேளா?

அந்த நான் எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ!

நான் மறைஞ்சிடும். மிஞ்சினது ஆத்மா.

அப்புறம் எந்த முயற்சியும் வேண்டாம். உண்மை நான் மட்டும் மிஞ்சினா... அது நான் பிரம்மம்ன்னு சொல்லாது. யாராவது நான் மனுஷன், மனுஷன்னு சொல்லுவானா?



(203) ***மனைவியை இழந்து மிகுந்த துக்கத்தில் பகவான் ஸந்நிதிக்கு மனஅமைதிக்காக வந்த அன்பர் ஒருவரிடம் பகவான் கூறியது.***

ப: மனைவியை உடம்பிலே பாதின்னு சொல்றா. அப்போ மனைவியோட மரணம் ரொம்ப துக்கமாத்தான் இருக்கும். ஸ்தூலமா எல்லாத்தையும் பாக்கறதாலேதான் இந்தத் துக்கம். ஆத்மாவா எல்லாத்தையும் பாத்தா அது மறைஞ்சிடும்.

பிருஹத்தாரண்ய உபநிஷத் 'ஆத்மா மேலே இருக்கற பிரியத்தாலேயே மனைவி ரொம்பப் பிரியமா இருக்கு'ன்னு சொல்றது. மனைவியையும் மற்றவாளையும் ஆத்மாவா பாத்தா எப்படித் துக்கம் வரும்?

ரொம்பப் பக்குவப்பட்டவாளைக்கூட இந்த மாதிரி சம்பவம் பாதிக்கும்.

தூங்கும்போது எல்லோரும் சுகமாத்தான் இருக்கோம். நாம சுத்த உணர்வாயிருக்கோம். அதே நாமதான் இப்பவும் இருக்கோம். தூக்கத்திலே மனைவியோ மத்தவாளோ நம்மளோ இல்லை. இப்போ அவாள்லாம் வந்துடறா, வந்து அவாளாலே இன்பமோ, துன்பமோ ஏற்படறது.

தூங்கும்போது சுகசொரூபமாவேயிருக்கற நாம ஏன் இப்போ சுகமாயிருக்க முடியலே? என்ன காரணம்? தேகாத்மா புத்திதான், நம்மள உடம்பா நினைக்கறதுதான்.

பகவத்கீதை 'இல்லாததுக்கு இருப்பு இல்லை, இருக்கறதுக்கு இல்லாமை இல்லை'ன்னு சொல்றது.

உண்மையை உணர்ந்தவா எல்லோரும் 'இல்லாதது எப்பவும் இல்லாததுதான். இருக்கறது எப்பவும் இருக்கறதே'ங்கறா.

ஆத்மா பிறக்கறது இல்லை. இறக்கறது இல்லை. எப்பவும் இருக்கறது. இந்த உடம்பு அழியறதாலே ஆத்மா அழியாது. அதனாலே பிறப்புமில்லை. இறப்புமில்லை.

விழிக்கறதுதான் பிறப்பு, தூங்கறதுதான் சாவு.

உங்களோட மனைவி நீங்க உத்தியோகத்திலே இருக்கறப்போ கூட இருந்தாளா? இல்லே, தூங்கும்போது கூட இருந்தாளா? கூட இல்லை. எங்கேயோ இருந்தா! நீங்க அவ பத்திரமா எங்கேயோ இருக்கான்னு நிம்மதியா இருந்தேள்! இப்போ அவ இல்லைன்னு நினைக்கறேள்! தவறான எண்ணத்தினாலேயே இந்த வேற்றுமை. மனைவியில்லேங்கறதுதான் துக்கம். இதெல்லாம் மனச்சேஷ்டை. இந்த படவா...எல்லாம் இருந்தாலும் அவனுக்கு அவனே துக்கத்தைக் கொடுத்துப்பான். இன்ப துன்பம் மனோ தர்மம்.

சரி, செத்தவாளுக்காக ஏன் வருத்தப்படணும்? அவா உடல்பந்தத்திலே இருந்து விடுபட்டாச்சு. இப்படி வருத்தப்படறது இறப்போட நம்மளக் கட்டிப்போட மனசு பண்ற சங்கிலி. யாரு செத்தா என்ன? யாரு நாசமாப் போனா என்ன? நாம செத்துப் போகணும். நாம நாசமாப் போகணும். இப்படிச் செத்தா... துக்கம் இருக்காது. அப்படின்னா... உயிரோடு இருக்கும்போதே அகந்தை செத்துடணும்.

அகந்தையிருந்தா சாவுக்குப் பயப்படுவான். ஒரு மனுஷன் இன்னொருத்தன் சாவுக்கு வருத்தப்படறான். யாரும் சாகறதுக்கு முன்னாடி நாம செத்துடணும். அப்படி செத்துட்டா வருத்தம் கிடையாது.

தூக்கத்தோட அனுபவமே, நாம உடம்பு இல்லாமே இருக்கறதுதான், சுகம்ன்னு தெளிவாச் சொல்றது. உண்மை உணர்ந்தவா எல்லாம், இதையே, நம்மளோட உடம்புங்கற நினைப்பு போசசுன்னா, மோட்சம்ன்னு ஒத்துக்கறா.

உண்மையை உணர்ந்தவன், எப்படா உடம்பு கழலும்ன்னு இருப்பான். கூலி தலைசுமையை இறக்கி வைக்கற மாதிரி, ஞானியும் உடம்பைப் பொறுத்துக்கொண்டு... எப்போ இடம் வரும், இறக்கி விட்டுடலாம்ன்னு காத்துக்கொண்டு இருப்பான்.

உனக்கு இப்போ பாதி சுமை போச்சு! ஏன்னா மனைவி உடம்பிலே பாதிதான். உன் சுமையைக் குறைச்சதுக்கு உன் மனைவிக்கு நன்றியாயிருக்கணும். அதுக்கு சந்தோஷப்படணும்.

உன் சூழ்நிலையிலே நீ அப்படி இருக்க முடியாது.

துக்கம் உண்மையான அன்போட அடையாளமாகாது. உருவத்தையே அன்பு செலுத்தறது அன்பை ஏமாத்தறது. அது அன்பில்லே. உண்மையான அன்பு, நாம பிரியப்படறபொருள், எப்பவும் நம்மள விட்டுப் பிரியாத ஆத்மா. அதுதான் நம்மளோட மனைவியா வந்தது. இப்பவும் என்கிட்டே நானாவே இருக்குன்னு பாக்கணும்.

ஆனாலும் இப்படியெல்லாம் துக்கம் எளிதாப் போகாது. சாதுக்களோட சகவாசத்தாலே துக்கம் குறைஞ்சு காலக்கிரமத்திலே நீங்கிடும்.

(204) ***பகவான் அஹம் ஸ்புரணத்தைப் பற்றி பின்வருமாறு அருளினார்.***

ப: நான் இன்னார்ங்கற கற்பனைதான் அகந்தை.

நான் உணர்வுங்கறதுதான் ஆத்மஞானம்.

விஞ்ஞானமய கோசத்திலே ஆத்மா எந்த நேரமும் 'நான்'-'நான்'ன்னு ஸ்புரிச்சுக்கொண்டேயிருக்கு. அது சுத்த ஞானம். காண்பான் காட்சி ஞானம் கற்பனையே.

ஆனந்தமய கோசத்தோட ஆனந்தம் கற்பனையே.

தூங்கும்போது சுகம்ன்னு ஒரு அனுபவம் சூட்சுமமா இருக்கு, அந்த சுகத்தை ஒரு தனித்தன்மை சூட்சுமமாயிருந்து அனுபவிக்கறது.

சமாதியிலேயும் இவ்வாறே சமாதி சுகத்தை சூட்சுமமான தனித்தன்மை அனுபவிக்கறது.

அனுபவிக்கறவன் இல்லாம அனுபவம் இருக்காது.

அதனாலேதான்.... ஒரு ஞானி இந்த சூட்சும மனத்தோட சொரூபானந்தத்தை அனுபவிக்கறான்னு சொல்ல வேண்டி

இருக்கு. சூட்சும மனத்தாலேயே சொரூபத்தை உணர்றான். இந்த சுத்த மனமே பிரம்மம். அதனாலே ஞானியின் மனமே பிரம்மம்னு சொல்லப்படறது.

'பிரம்மத்தை உணர்ந்தவன் பிரம்மமே ஆகறான்'னு முண்டக உபநிஷத் சொல்றது. முரணாயில்லையா? பிரம்மத்தை உணர்றதாம், அப்புறம் பிரம்மமா ஆகறான்கறது. இது எல்லாம் வார்த்தை.

ஞானியே பிரம்மம் அவ்வளவுதான்.

அவனோட அனுபவத்தைச் சொல்ல மனம் தேவைப்படறது. அவன் எப்பவும் இடைவிடாத சமாதியிலே இருக்கறதா சொல்றா. அகண்டாகார விருத்தின்னு அதுக்குப் பெயர். அதாவது எந்த நேரமும் பிரம்மத்தையே உணர்ந்துகொண்டேயிருக்கான். இதுவும் பொருந்தாது ஏன்னா... முதல்லே பிரியணும் அப்புறம்தான் அதை உணரணும். சரி பிரியலே! அப்படின்னா எப்படி உணர்றது?

ஒரு நதி சமுத்திரத்திலே கலந்தபிறகு... அதை சமுத்திரமா மாறின நதின்னு சொல்லுவோமா? அப்படித்தான் எந்த நேரமும் அதை உணர்ந்தவாறேயிருக்கான்னு சொல்றதும். அதே மாதிரிதான் ஆத்ம சாட்சாத்காரம், ஆத்ம ஞானம்ங்கறதும்.

நான்கறது அநாதியாயிருக்கு.

இப்போ... நான்கறது அனுபவமாறதுன்னு சொன்னாலே... சூட்சுமமா மனம் இருக்குன்னுதான் அர்த்தம்.

ஈஸ்வரனுக்கும் முக்தர்களுக்கும் பரிச்சின்னபாவ அபாவம் (தனித்தன்மை அற்ற ஸ்திதி) சகஜமாயிருக்கும். அவா பிறத்தியா பார்வைக்குத்தான் தனித்தன்மையோட இருக்கற மாதிரி தெரியறாளே தவிர அவாளுக்கு இல்லை. தனித்தன்மை போகாத மத்தவா பார்வை அது.

(205) **கே: அஹம் ஸ்புரணத்தை எப்படி உணர்றது?**

**ப:** நான்-நான்கற அகண்ட உணர்வா விஞ்ஞானமய கோசத்திலே உணரப்படறது.

அது சாமான்ய உணர்வு மாத்திரமே.

**கே: அது ஏற்படும்போது நமக்கே தெரியுமா?**

ப: தெரியும். உணர்வாத் தெரியும்.
இப்போவே அது நடந்துகொண்டுதான் இருக்கு.
மனோவிருத்தி சுத்தமாயிருக்கும்போது சந்தேகம் வராது.

**கே: ஹிருதயம்னு ஒரு இடத்தை ஏன் தியானம் பண்ணனும்?**

ப: ஏன்னா, நாம இருக்கறது அங்கேதான்.

தொலைச்ச இடத்திலேதானே தேடணும்! நீங்க வெளிலே இல்லையே!

ஹிருதயம்கறது உணர்வின் ஸ்தானம் அல்லது உணர்வேதான்.

எதைத் தியானம் பண்ணனும்?
யார் இந்தத் தியானம் பண்றவன்?
முதல்லே இந்தக் கேள்வியைக் கேளுங்கோ.
தியானம் பண்றவனா இருங்கோ! தியானம் தேவையில்லே.

(206) ***பி.சி. தாஸ், பிசிக்ஸ் லெக்சரர் அலஹாபாத் யுனிவர்சிட்டி கேட்டார்.***

**கே: அத்வைதம்னா என்ன?**

ப: தூங்கறதுதான் அத்துவிதம்.

ஜீவாத்மா, பரமாத்மா எல்லாம் தூக்கத்திலே இருக்கா?

தூக்கத்திலே இந்தத் துவைதத்தை எல்லாம் மறந்துடுவோம். அதுதான் சுகம், எவ்வளவு கவனமா மெத்தையை விரிக்கறான், தலையணை போட்டுக்கறான். எதுக்கு? இந்த துவைதத்தையெல்லாம் ஒழிக்கறதுக்குத்தான். தூங்கியாச்சுன்னா இது எதுவும் தேவையில்லை. தெரியாது.

அதே மாதிரிதான்... அஞ்ஞானத்தை நீக்கறதுக்குதான், இந்த முயற்சி, ஞானம் எல்லாம். அஞ்ஞானம் நீங்கிடுத்துன்னா... அதுக்கு எந்தப் பிரயோஜனமும் இல்லே.

(208) *பி.சி. தாஸ் கோட்டார்.*

**கே: சரணாகதி எப்படிப் பண்றது? சரணாகதின்னா என்ன?**

ப: அவனுக்கு அவனே சரணடைஞ்சாப் போதும்.

சரணாகதிங்கறது நம்மள, நாம எங்கிருந்து வந்தோமோ, அந்த நான்கற உணர்வுகிட்டேயே ஒப்படைச்சுடறதுதான்.

நாம வந்த இடம் ஏதோ நமக்கு வெளியே இருக்கறதாவோ, கடவுள்னு யாரோ இருக்கார்ன்னோ ஏமாறக்கூடாது. நம்மளோட மூலம் நம்மகிட்டேயே இருக்கு. அதுகிட்டே ஒப்படைங்கோ!

அப்படின்னா அது என்னன்னு தேடி அதிலே கரைஞ்சுடணும். நீங்க அதிலே இருந்து வேறயா, அதைக் கற்பனை பண்றதாலே, நீங்க, 'என் மூலம் எங்கே இருக்கு?'ன்னு கேக்கறேள்.

சிலர், சக்கரையே சக்கரை சுவையை அறியாது, அனுபவிக்காது. எறும்புக்குத்தான் தெரியும். அனுபவிக்கும். அந்த மாதிரி, ஜீவன் பரமாத்மாவாகி அதோட ஆனந்தத்தை அனுபவிக்க முடியாது. அதனாலே இரண்டும் இருக்கணும். ஒண்ணு இருந்து இன்னொன்னை அனுபவிக்கணும்னு சொல்றா.

சக்கரை மாதிரி இறைவன் ஜடமா?

எப்படி ஒருத்தன் சரணடைஞ்ச பிறகு தனித்தன்மையோட பரம்பொருளை அனுபவிக்க இருக்கறது? அத்தோட விட்டாளான்னா இல்லே. ஆத்மா (ஜீவன்) வைகுண்டமோ, கைலாசத்துக்கோ போய் அங்கே இருந்து சேவை பண்ணுமாம். கோவிந்தா போடுமாம். சேவை பண்றேன்னா கடவுள் ஏமாந்துடுவாரா? அவருக்குத் தெரியாதா? இவாளோட சேவையை எதிர்பாத்துக்கொண்டுதான் இருக்காரா?

பூரணப்பொருளான சுவாமி கேக்க மாட்டாரா 'நீ யாரப்பா எனக்கு வேறாயிருந்து எனக்குச் சேவை பண்ண?'ன்னு.

இதோட விட்டாளா, ஆத்மா (ஜீவன்) ஒழுங்கா சேவை பண்ணினா பரமாத்மா உடம்பிலே அங்கமாகறதுக்கு, தகுதி பெறுதாம்.

பரமாத்மா உயிராம்! இந்தப் பிரஹஸ்பதியெல்லாம் பரமாத்மாவோட உடம்பாம்!

ஆத்மா(ஜீவன்)வுக்கெல்லாம் ஆத்மா (ஜீவன்) பரமாத்மாவாம்!

இப்படி எத்தனை ஆத்மா (ஜீவன்) இருக்கு!

அவாளோட மக்கள் தொகை எவ்வளவு? அதுக்கு என்ன பதில் சொல்றா... ஆத்மா (ஜீவர்கள்) நிறைய இருக்கு. பரமாத்மா ஒண்ணுதான் இருக்குங்கறா.

இவா சொல்ற ஆத்மான்னா என்ன?

உடம்பா இருக்க முடியாது.

எல்லாத்தையும் தள்ளிட்டு என்ன மிஞ்சறதோ... அதுதான் ஆத்மா. இப்படி ஆத்மாவை ஒருத்தன் உணர்ந்தபிறகு, பரமாத்மான்னு ஒண்ணு இருக்குன்னு சொன்னா... ஏற்கனவே தனக்கு அன்னியமான எல்லாத்தையும் தள்ளிட்டு உணர்ந்தது ஆத்மான்னு எப்படி சொல்ல முடியும்?

அப்போ இவா முதல்லே சொன்ன ஆத்மா உண்மையான ஆத்மா இல்லை.

இவ்வளவு குழப்பமும் இவா மனசைப் போய் ஆத்மான்னு சொல்றதாலே ஏற்படறது.

சாஸ்திரங்கள்லேயும் பல இடங்கள்லே உடம்பு, மனசு, இந்திரியங்கள், பிராணன், ஜீவன், பரமாத்மா எல்லாத்தையும் ஆத்மாங்கறா. எல்லாக் குழப்பமும் இதனாலேதான்.

பகவத்கீதையிலே கிருஷ்ணர் 'நான் ஆத்மாவா எல்லாரோட ஹிருதயத்திலும் இருக்கேன்'கறார். அப்படின்னா நாம சொல்றதுதான். அவர் ஒண்ணும் ஆத்மாவுக்கெல்லாம் ஆத்மாவாயிருக்கேன்னு சொல்லலே.

ஆத்மாவிலே ஒண்ணாயிட்டா நாமன்னு ஒரு தனித்தன்மையிருக்காது. நாம, நம்மளோட மூலமாவே ஆயிடுவோம். அப்போ சரணாகதின்னா என்ன? யார் எதை ஒப்படைக்கறா?

இதுதான் பக்தி; ஞானம்; விசாரம்; எல்லாம்.

நம்மாழ்வார் சொல்றார்: 'மயக்கத்திலே... நான், எனதுன்னு இருந்தேன். என்னை உணர்ந்த பிறகு, நானும் நீயே. எனதும் நீயே'.

அப்போ பக்தின்னா...... சரணாகதின்னா.... தன்னை உணர்றதுதான்.

விசிஷ்டாத்வைதமும்... இதையேதான் சொல்றது. ஆனாலும் பழைய பஞ்சாயத்தை விடாம ஆத்மா எல்லாம் பரமாத்மாவோட அங்கம்ன்னே சொல்லுவா.

நாம நம்மளோட மூலப்பொருள்லே இருந்து அன்னியமா இருக்கோம்கறதே நம்மை ஏமாத்திக்கறது. இதோட இல்லாம, அகந்தையைப் போக்கி, சுத்தமாக்கி, ஆனாலும் தனித்தன்மையோட பரம்பொருளுக்கு சேவை பண்ணுவோம்ங்கறது என்ன ஒரு ஏமாத்து வித்தை!

உன்னோடதை என்னுதுன்னு இவ்வளவு நாள் தப்பா நினைச்சுட்டேன். நான் ஒண்ணும் என்னோடதை ஒப்படைக்கலே. உன் பொருளை உன்னுதுன்னு உணர்ந்து உன்கிட்டேயே கொடுத்துட்டேன்னு சொன்னா நியாயம். அதை விட்டுட்டு பரமாத்மாவுக்கு சேவை செய்யுமாம். இதெல்லாம் சுவாமிக்குத் தெரியாதா? அவரா ஏமாறுவார்!

(209) ***பி.சி. தாஸ் கேட்டார்.***

**கே: விதி மதிங்கறாங்களே அது எப்படி செயல்படுது?**

**ப:** யாருடைய மதின்னு கேட்டாலோ, யாருடைய விதின்னு கேட்டாலோ, என்ன சொல்லுவோம்? என்னோடதுன்னு சொல்லுவோம்.

ஆனா நாம உண்மையிலேயே இந்த இரண்டையும் கடந்து இருக்கோம்.

அதாவேயிருந்துட்டா அதைக் கடந்துடலாம்.

அதுதான் விதியை மதியாலே வெல்லலாம்கறதுக்கு அர்த்தம். விதியை வெல்லலாம்... ஏன்னா... விதி பூர்வ கர்ம விளைவு.

சாதுக்களோட சகவாசம் பூர்வ வாசனைகளைப் போக்கும். அப்போ நடக்கறதை வேற மாதிரி பார்ப்போம்.

நான் இப்போ இருக்கேன். நான் போக்தா. நான் முன்னாடியும் இருந்தேன். இதுக்கு அப்புறமும் இருப்பேன்.

யார் இந்த நான்?

இந்த நான் யார்ன்னு பாத்தா வெறும் உணர்வு மாத்திரமா எல்லாச் செயல்கள், போகங்கள் எல்லாத்துக்கும் ஆதாரமாயிருக்கறதுன்னு தெரிஞ்சுடும்.

அப்புறம் எந்த முயற்சியும் இல்லே. ஏன்னா... அடையறதுக்கு ஒண்ணும் இல்லே. நான்கற தனித்தன்மை இருக்கற வரைக்கும் அவன் தன்னை கர்த்தா போக்தான்னு நினைச்சுப்பான்.

அது நீங்கிடுத்துன்னா... இறைநியதி, அருள் நிரம்பிடும். அது செயல் கூட்டும்.

ஆனா அவன்தான் செய்றான்னு மத்தவா... அருள் தெரியாதவா நினைப்பா. இயம நியமம் எல்லாம் மத்தவாளுக்குத்தான். விடுபட்டவாளுக்கு இல்லை.

முடவன் தன்னை எழுப்பி விட்டா, எதிரிகள் எல்லாத்தையும் ஒழிச்சுக்கட்டுவேன்னு சொல்ற மாதிரிதான். கர்மம் ஆசையாலே ஏற்படறது. ஆசை அகந்தை வந்த பிறகு வர்றது.

அகந்தை அருளிலே இருந்து வர்றது. அருள் இல்லாம அகந்தையாலே இருக்க முடியாது. அப்புறம் ஏன் நாம செஞ்சோம்ன்னு கவலைப்படணும்?



(211) *பி.சி. தாஸ் கேட்டார்.*

**கே: யோகம்னா சேர்றது, எனக்கு ஆச்சர்யமாயிருக்கு! எது எதோட சேரப்போகுது?**

ப: சரியா சொன்னேள்.

முதல்லே பிரிஞ்சுதானே பிறகு சேரணும், யார் யாரோடு சேர்றது?

எதோடையோ சேரணும்ன்னு தேடறான். அது எங்கேயோ இவனுக்கு அன்னியமாயிருக்குன்னு நினைக்கறான்.

ஆனா வாஸ்தவத்திலே நம்மளோட சொந்த ஸ்வரூபம் ரொம்ப நெருக்கமாயிருக்கு. அதை எந்த நேரமும் உணர்ந்து கொண்டே வேறாயிருக்கோம்.

அது என்னன்னு பாத்து அதுவாவே ஆயிடணும். அது எல்லையற்று விளங்கும்.

யாருக்கு வியோகம்னு கண்டுபிடிங்கோ!

(213)**கே: எவ்வளவு முயன்றாலும் மனம் உண்முகப் பட மாட்டேங்குது!**

**ப:** பயிற்சியாலும், வைராக்கியத்தாலும் மெதுமெதுவாத்தான் வரும்.

வெளியேயே திரிஞ்சுகொண்டு இருந்ததை ஒரே நாளிலேயே வழிக்குக் கொண்டுவர முடியாது.

உள்ளேயிருக்கற சுகம் அனுபவமாயிடுத்துன்னா வெளியே அலையாது.

(217) **கே: பகவான் எங்களுக்காக மனமிரங்கி அருளை காட்டக் கூடாதா?**

**ப:** கழுத்தளவு ஜலத்துலேயே ஒருத்தன் நின்னுகொண்டே ‘தாகம், தாகம், ஜலத்தைக் காட்டக்கூடாதா’ன்னு கேட்ட மாதிரி கேக்கறேள்.

அதை அப்படிக் கூடச் சொல்லக்கூடாது. ஜலமே, ‘தாகம், தாகம், ஜலத்தைக் காட்டுங்கோ’ன்னு கேக்கற மாதிரின்னுதான் சொல்லணும்.

**கே: உடலுணர்வு ஆத்ம ஞானத்துக்கு தடையா?**

**ப:** நாம எப்பவுமே உடல் மனங்களைக் கடந்தே இருக்கோம். நாம உடம்புதான்னு நினைச்சா தடைதான்.

**கே: உடல் மனங்களால் ஆத்மாவுக்கு ஏதும் பிரயோஜனம் உண்டா?**

**ப:** உண்டு: அதை உணர்றதுக்கு உதவினா...

(219) *ஆசிரமவாசியான இராமகிருஷ்ண சுவாமி கேட்டார்.*

**கே: வாசனைகளற்று எப்படி இருக்கறது?**

ப: நீ இப்போவே வாசனைகளற்றுதான் இருக்கே.

நீ எப்பவும் இருக்கற மாதிரியே இருந்தா வாசனைகள் அதுவாவே போயிடும்.

(220) *பி.சி.தாஸ். கேட்டார்.*

**கே: மனம் அடங்கினாத்தான் தியானம் கூடும். தியானம் கூடுனாத்தான் மனம் அடங்கும். இது திரும்பத்திரும்ப மாத்தி மாத்தி சொல்ற மாதிரி இருக்கே?**

ப: ஆமா. ரெண்டும் ஒண்ணை ஒண்ணு ஆசிரயிச்சது. ஒண்ணா வளரணும்.

அப்பியாசமும் வைராக்கியமும்தான் மெதுமெதுவா தியானத்தைக் கொண்டு வரும். வெளி விஷயங்கள்லே மனசு போகாம இருக்கறது வைராக்கியம்.

தன்னிடமே இருக்கறது அப்பியாசம். காலக்கிரமத்திலே எல்லாம் சரியா வரும்.

**கே: இதை எப்படி ஆரம்பிக்கறது? உங்க அருளே வேணும்.**

ப: அருள் எப்பவும் உண்டு.

குரு அருளில்லாமே வைராக்கியமும், உண்மையை உணர்றதும், அதிலேயே நிலைபெறுவதும் வராது.

(222) *டாக்டர் பொப்பட்லால் கேட்டார்.*

**கே: உங்க உபதேசம் என்ன? எனக்குச் சொல்லணும்**

ப: உதித்த இடத்தில் ஒடுங்கியிருத்தல்.

அது கர்மம் பக்தியும் உந்தீபற

அது யோகம் ஞானமும் உந்தீபற

இதுதான் மொத்த உண்மை. சுருக்கமா மௌனம்.

**கே: மனம் ஒடுங்க மாட்டேங்குதே?**

ப: மனத்தின் உருவை மறவாது உசாவ
மனமென ஒன்றில்லை உந்தீபற
மார்க்கம் நேர் ஆர்க்கும் இது உந்தீபற

**கே: மனத்தின் உருவை மறவாது உசாவுறது அப்படின்னா என்ன?**

ப: நினைப்புக் கூட்டம்தான் மனம்.

நான்கற நினைப்புதான் வேர்.

நான் யார்ன்னு அதாவது இந்த நான்கற நினைப்பு எப்படி வந்ததுன்னு பாத்தா, அது மறைஞ்சிடும். இதுவே விசாரம். அங்கே ஆத்மா ஒளிரும்.

**கே: நான்கற எண்ணம் என்கிட்டே இருந்து வருது. ஆனா ஆத்மா தெரியலை.**

ப: இதெல்லாம் மனக்கற்பனை.

நீங்க உங்களை போலி 'நான்' கூட சம்பந்தப்படுத்திக்கறேள்.

இது உதிக்கும். ஒடுங்கும். ஆனா உண்மை 'நான்' இதுக்கு ஆதாரமா இருக்கு. நீங்க இடைவிடாம மூணு ஸ்திதியிலும் இருக்கேள். தூங்கின அதே ஆள்தானே இப்போ நீங்க?

தூங்கும்போது எந்தக் கவலையும் இல்லே. ஆனா இப்போ விழிப்பு துக்கமயமா இருக்கு. ஏன் இந்த வித்தியாசம்?

போலி நான்கற எண்ணம் தூங்கும்போது இல்லை. இப்போ இருக்கு.

போலி 'நான்'...... உண்மைன்னு கிளம்பிடுத்து.

இந்தப் போலி நானே தடை. இந்தப் போலி எங்கிருந்து வர்றான்னு பாக்கணும். பாத்தா மறைஞ்சிடுவான்.

இப்போ நீங்க எதுவோ அதுவே நீ. இதுவே பரமார்த்தம்.

**கே: அதை எப்படி பண்றது? இது வரை பலனாகலை?**

ப: நான்கறது எங்கேயிருந்து வர்றதுன்னு பாருங்கோ!

அதுதான் செய்ய முடியும். செய்யணும்.

இந்தப் பிரபஞ்சமே நான்கற எண்ணத்தாலேயே இருக்கு.

அது தொலைஞ்சா எல்லாத் துன்பமும் ஒழிஞ்சிடும். அதோட மூலத்தை நாடறதாலேயே அது ஒழியும்.

ஆசிரம சேவகர் கேட்டார்.

**கே: ஜாக்ர சுஷுப்தின்னா என்ன?**

ப: தூங்கும்போது எப்படி இருக்கோம்? கவலையில்லாமே இருக்கோம்.

விழிப்பிலே கவலையில்லாம இருக்கணும்.

அதைக் கொண்டு வரணும்.

அதுக்கு முயற்சி வேணும்.

அதுதான் தூங்காம தூங்கறது. ஜாக்ர சுஷுப்தி.

(224) **கே: ஸ்வபாவ ஸ்திதியை எப்படி நினைக்கறது?**

ப: சுத்தமா நினைப்பே இல்லாம இருந்தா ஸ்வபாவ ஸ்திதியை நினைவுறலாம்.

(225) **கே: இங்கே மேலான சுகம் எது?**

ப: கவலையில்லாமே இருக்கறது.

என்னோடதுன்னு ஒரு பொருளும் இல்லேன்னா ஒரு கவலையும் இல்லே.

(227) **கே: மோட்சம்ன்னா என்ன?**

ப: சுகசொரூபமாகவேயிருந்தும் ஏன் உலக இன்பங்களுக்காக ஒருத்தன் தவிக்கறான்?

இந்தத் தவிப்பு போறதுதான் மோட்சம்.

**கே: நமஸ்காரம் பண்றது எதுக்காக?**

ப: நம்மளோட வேலையை ஒழுங்காப் பாத்தா அதுதான் உண்மையான நமஸ்காரம்.

(231) **கே: மௌனம்னா என்ன?**

ப: சும்மா வாயை மூடிக்கொண்டு இருக்கறதா மௌனம்! அது இடைவிடாத பேச்சு.

**கே: எனக்கு புரியலை.**

ப: வாக்கு மனம் கடந்தது மௌனம். புரியாது.

**கே: எப்படி மௌனமாறது?**

ப: ஏதாவது ஒண்ணைப் பிடிச்சுக்கோ. அது எங்கிருந்து வர்றதுன்னு பாரு!

மௌனத்திலே முடியும். இந்தப் பயிற்சியாலே இயல்பான சகஜமான மௌனம் வந்துடும். நினைப்பு இல்லாமே தியானம் பண்ணா அது மௌனம்.

மனம் அடங்கறதுதான் தியானம். ஆழ்ந்த தியானம்தான் இடைவிடாத பேச்சு.

ஒரு ஞானியே உண்மையான பக்தன்.

மௌனமே சிறந்த பேச்சு.

**கே: ஒருத்தர் மௌனமா இருந்தா வேலை எப்படிப் பாக்கறது?**

ப: தலையிலே ஜலக்குடம் கொண்டு போகும் பெண்கள் பேசிக்கொண்டே போவா... ஆனா கவனம் குடத்திலேயே இருக்கும்.

அதே மாதிரி எத்தொழில் புரிந்தாலும் ஏதவஸ்த்தைப் பட்டாலும் முத்தர் மனம் இருக்கும் மோனத்தே.



(240) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: உலகம் ரொம்ப லௌகீகமா மாறிக்கொண்டே வருதே... இதுக்குத் தீர்வுதான் என்ன?**

ப: உலகம் லௌகீகமாவோ, ஆத்மிகமாவோ இருக்கறது உன் பார்வையைப் பொறுத்ததுதான்.

'திருஷ்டிம் ஞானமயீம் க்ருத்வா பச்யேத் பிரம்மமயம் ஜகத்'
உன் பார்வைதான் மாறணும்.

படைச்சதை எப்படிப் பாத்துக்கறதுன்னு படைச்சவனுக்குத் தெரியும். நமக்கென்ன கவலை.

**கே: என்னுடைய எதிர்காலம் சிறப்பா இருக்க எது சிறந்தது?**

ப: நிகழ்காலத்தை நல்லாப் பிடிச்சுக்கோ. எதிர்காலத்தை அதே பாத்துக்கும்.

**கே: நிகழ்காலத்தோட விளைவுதான் எதிர்காலம். எதிர்காலம் சிறப்பா இருக்க நான் என்ன செய்யணும்? இல்லை சும்மா இருக்கவா?**

ப: இந்தச் சந்தேகமெல்லாம் யாருடையது?
யாருக்கு இந்த ப்ளான் தேவைப்படறது?
சந்தேகிக்கறவன் யார்? கண்டுபிடி!

சந்தேகியைக் கண்டுபிடிச்சுட்டா... சந்தேகமெல்லாம் போயிடும்.

ஆத்ம சிந்தனையை விட்டுட்டதாலே... மத்த சிந்தனை படுத்தறது.

உலகம்னு ஒண்ணு ஏதோ உண்மையாத் தெரியறதாலே சந்தேகம் எல்லாம் வர்றது.

எதிர்காலத்தைப் பத்திய பயம் வர்றது.

ஆத்மாவைப் பிடிச்சுக்கோ. இதெல்லாம் மறைஞ்சிடும்.

**கே: அதை எப்படி செய்யறது? ஆத்மாவை எப்படி பிடிச்சுக்கறது?**

ப: அனாத்மாவை வேணா பிடிச்சுக்கலாம். ஆத்மாவைப் பிடிக்க முடியாது.

நீ 'இருக்கேன்'கறத நீ சந்தேகப்படறியா?

**கே: இல்லை. ஆனாலும் ஆத்மாவை உணர்றதுக்கு ஏதேனும் வழியிருக்கா? எப்படின்னு தெரிஞ்சுக்க ஆசைப்படறேன்.**

ப: முயற்சி செய்! கிணறு தோண்டறதாலே... ஜலம் எப்படி கிடைக்கறதோ... அப்படி விசாரத்தாலே ஆத்ம ஞானம் அடையலாம்.

**கே: ஆமாம். சிலருக்கு ஜலம் உடனே கிடைச்சுடுது. ஆனா எல்லோருக்கும் இல்லையே?**

ப: தரை மட்டத்திலேயே ஜலக்கசிவு தெரியறதே!
தன்னை உணராம யார் இருக்கா!
முயற்சி எல்லாம் ஓயும்போது ஆத்மா தான் தானா ஒளிரும்.

**கே: மனத்தை எப்படி உண்முகமா பழக்கறது?**

ப: அப்பியாசத்தாலே... மனம் தன்னுடைய உரு அழியறதனாலே... ஆத்மா ஒளிர வழிவகுக்கறது.

**கே: மனத்தை எப்படி நாசம் பண்றது?**

ப: ஈரத்தை உலர வைக்க முடியாது. மலடி மகனைக் கொல்ல முடியாது.
நீ யார்ன்னு பார். மனம்ன்னு ஒண்ணு இருக்காது.

**கே: துக்கத்தை எப்படி நீக்கறது?**

ப: துக்கத்துக்கு ஏதாவது ஒரு உருவம் இருக்கா?
நீக்க முடியாத, தேவையற்ற நினைப்புதான் துக்கம்.
மனம் பலஹீனமா இருக்கறதாலே... தேவையற்ற நினைப்பை நீக்க முடியலே.

**கே: மனோபலம் எதனால வரும்?**

ப: கடவுளைக் கும்பிடறதாலே. கடவுளிடம் சரணடையறதாலே.

**கே: கடவுளை என்னாலே தியானிக்க முடியலை?**

ப: கடவுளை விட்டுடு. உன்னைப் பிடிச்சுக்கோ.

**கே: ஜபம் எப்படி பண்றது?**

ப: இரண்டு வகையிருக்கு. ஜபத்திலே ஸ்தூலம், சூட்சுமம்ன்னு. இரண்டாவது வகை அதைத் தியானிக்கறது. அது மனோபலம் தரும்.

**கே: ஆனா, மனம் தியானத்துல உக்கார மாட்டேங்குதே!**

ப: பலமில்லாததாலேதான்.

(242) *குஜராத்திகாரர் ஒருத்தர் கேட்டார்.*

**கே: நாம செஞ்ச புண்ய பாவங்களை அனுபவிக்கறதுக்கான தேர்வை, நாம இறந்த பிறகு நமக்கே கொடுப்பாங்கன்னு சொல்றாங்களே, அது உண்மையா?**

ப: இறந்ததுக்கு அப்புறம் இருக்கறதை, இப்போவே ஏன் கேள்வி கேட்டுக் குழப்பிக்கணும்? அதுக்குப் பதிலா நான் உண்மையிலேயே பிறந்திருக்கேனா?

இப்போவே என்னுடைய கர்ம வினையை நான் அனுபவிக்கிறேனா? இப்படிக் கேக்கலாம்.

தூங்கும்போது உங்களுக்கு இந்தக் கேள்வி எல்லாம் இல்லையே... ஏன்?

தூங்கிக்கொண்டு இருந்த ஆளும்... இப்போ இருக்கற ஆளும் வேற வேறையா?

இல்லை. ஒரே ஆள்தானே.

அப்போ...ஏன் தூங்கும்போது கேக்காம இப்போ கேக்கறோம்?

கண்டுபிடிங்கோ!



(244) *பகவானைத் தரிசிக்க வந்த மகாராணி மெதுவாகக் கேட்கும்படியான குரலில் பேசினார்.*

நீ 'இருக்கேன்'கறத நீ சந்தேகப்படறியா?

**கே: இல்லை. ஆனாலும் ஆத்மாவை உணர்றதுக்கு ஏதேனும் வழியிருக்கா? எப்படின்னு தெரிஞ்சுக்க ஆசைப்படறேன்.**

ப: முயற்சி செய்! கிணறு தோண்டறதாலே... ஜலம் எப்படி கிடைக்கறதோ... அப்படி விசாரத்தாலே ஆத்ம ஞானம் அடையலாம்.

**கே: ஆமாம். சிலருக்கு ஜலம் உடனே கிடைச்சுடுது. ஆனா எல்லோருக்கும் இல்லையே?**

ப: தரை மட்டத்திலேயே ஜலக்கசிவு தெரியறதே!
தன்னை உணராம யார் இருக்கா!
முயற்சி எல்லாம் ஓயும்போது ஆத்மா தான் தானா ஒளிரும்.

**கே: மனத்தை எப்படி உண்முகமா பழக்கறது?**

ப: அப்பியாசத்தாலே... மனம் தன்னுடைய உரு அழியறதனாலே... ஆத்மா ஒளிர வழிவகுக்கறது.

**கே: மனத்தை எப்படி நாசம் பண்றது?**

ப: ஈரத்தை உலர வைக்க முடியாது. மலடி மகனைக் கொல்ல முடியாது.
நீ யார்ன்னு பார். மனம்ன்னு ஒண்ணு இருக்காது.

**கே: துக்கத்தை எப்படி நீக்கறது?**

ப: துக்கத்துக்கு ஏதாவது ஒரு உருவம் இருக்கா?
நீக்க முடியாத, தேவையற்ற நினைப்புதான் துக்கம்.
மனம் பலஹீனமா இருக்கறதாலே... தேவையற்ற நினைப்பை நீக்க முடியலே.

**கே: மனோபலம் எதனால வரும்?**

ப: கடவுளைக் கும்பிடறதாலே. கடவுளிடம் சரணடையறதாலே.

**கே: கடவுளை என்னாலே தியானிக்க முடியலை?**

ப: கடவுளை விட்டுடு. உன்னைப் பிடிச்சுக்கோ.

**கே: ஜபம் எப்படி பண்றது?**

ப: இரண்டு வகையிருக்கு. ஜபத்திலே ஸ்தூலம், சூட்சுமம்ன்னு. இரண்டாவது வகை அதைத் தியானிக்கறது. அது மனோபலம் தரும்.

**கே: ஆனா, மனம் தியானத்துல உக்கார மாட்டேங்குதே!**

ப: பலமில்லாததாலேதான்.



(242) ***குஜராத்திகாரர் ஒருத்தர் கேட்டார்.***

**கே: நாம செஞ்ச புண்ய பாவங்களை அனுபவிக்கறதுக்கான தேர்வை, நாம இறந்த பிறகு நமக்கே கொடுப்பாங்கன்னு சொல்றாங்களே, அது உண்மையா?**

ப: இறந்ததுக்கு அப்புறம் இருக்கறதை, இப்போவே ஏன் கேள்வி கேட்டுக் குழப்பிக்கணும்? அதுக்குப் பதிலா நான் உண்மையிலேயே பிறந்திருக்கேனா?

இப்போவே என்னுடைய கர்ம வினையை நான் அனுபவிக்கிறேனா? இப்படிக் கேக்கலாம்.

தூங்கும்போது உங்களுக்கு இந்தக் கேள்வி எல்லாம் இல்லையே... ஏன்?

தூங்கிக்கொண்டு இருந்த ஆளும்... இப்போ இருக்கற ஆளும் வேற வேறையா?

இல்லை. ஒரே ஆள்தானே.

அப்போ...ஏன் தூங்கும்போது கேக்காம இப்போ கேக்கறோம்?

கண்டுபிடிங்கோ!



(244) ***பகவானைத் தரிசிக்க வந்த மகாராணி மெதுவாகக் கேட்கும்படியான குரலில் பேசினார்.***

**கே: மகராஜ், உங்களைத் தரிசிக்க ரொம்ப புண்ணியம் பண்ணியிருக்கணும். என் கண், காது எல்லாம் உங்களைப் பாத்ததுல, நீங்க பேசறதக் கேட்டதனாலேயே ஆனந்தம் பெற்றுடுச்சு. எனக்கு மனித ஜன்மாவிலே என்ன என்ன வேணுமோ எல்லாம் இருக்கு. ஆனா மனநிம்மதி இல்லை. ஏதோ தடுக்குது. ஒரு வேளை என் தலையெழுத்தா...**

ப: சரி, சொல்லவேண்டியதைச் சொல்லிட்டேளா! நல்லது. தலையெழுத்துன்னா என்ன?

உண்மையிலேயே தலையெழுத்துன்னு ஒண்ணு கிடையாது. சரணடைங்கோ. எல்லாம் சரியா இருக்கும்.

பாரம் எல்லாம் இறைவனுக்குத்தான். நமக்கு ஒண்ணும் கிடையாது. நீங்க பாரத்தை வகிக்காதீங்கோ. இப்போ தலையெழுத்து என்ன பண்றதுன்னு பாப்போம்!

**கே: சரணடைய முடியலை.**

ப: ஆமா. சம்பூர்ண சரணாகதி ஆரம்பத்திலேயே செய்ய முடியாது. முதல்லே முடிஞ்சதை ஒப்புக் கொடுங்கோ. அது எல்லாராலேயும் முடியும். காலக்கிரமத்திலே சரணாகதி பரிபூரணமாகும்.

சரி....சரணடைய முடியலேன்னா என்ன பண்ண முடியும்? மனஅமைதி இருக்காது. நீங்களாகவே மனஅமைதி பெற முடியாது. சரணடையறதாலேயே மனஅமைதி ஏற்படும்.

**கே: முடிஞ்சதை சரணடைஞ்சா அது தலையெழுத்தை மாத்திடுமா?**

ப: ஏன் முடியாது? அதுபோதும். மாத்திடும்.

**கே: முன் வினையால்தான தலையெழுத்து ஏற்படுது?**

ப: இறைவன்கிட்டே சரணடைஞ்சுட்டா... தலையெழுத்தை அவர் பாத்துப்பார்.

**கே: இதே கடவுளோட உத்தரவுதானே, அவர் எப்படி மாத்துவார்?**

ப: எல்லா அதிகாரமும் அவருக்கு இருக்கு.

**கே: கடவுளை எப்படிப் பாக்கறது?**

ப: மனம் உண்முகமாச்சுன்னா...கடவுள் அந்தராத்மாவா ஒளிர்வார்.

**கே: கடவுள், எல்லாத்துலேயும் இருக்கார். நாம பாக்கற பொருள் எல்லாத்துலேயும் கடவுளைப் பாக்கணும்னு சொல்றாங்களே, அது எப்படி?**

ப: கடவுள்... பாக்கற எல்லாத்திலேயும்விட பாக்கறவன் கிட்டேதான் இருக்கார். வேற எப்படிக் கடவுளைப் பாக்க முடியும்?

எல்லாத்தையும் பாக்கறதுக்கு மனசு வேணும். கடவுளை எல்லாத்திலேயும் பாக்கறேன்றது மனோமயம். அது உண்மையில்லே.

மனச் சேஷ்டையில்லாத 'இருக்கோம்'கற உணர்வுதான் கடவுள். அப்படியா இருக்கறதுதான் கடவுளைப் பாக்கறது.

**கே: அழகான நிறங்கள், இயற்கை காட்சிகள் இதையெல்லாம் பாக்கறதுக்கு ரம்மியமா இருக்கு. இதுலை எல்லாம் கடவுளை பாக்கலாம்னு சொல்றாங்களே?**

ப: அதெல்லாம் மனோமயம்.

**கே: நான் நிறங்கள்ன்னு ஒரு உதாரணத்துக்குத்தான் சொன்னேன். இன்னும் நிறங்களைவிட நிறைய இருக்கு.**

ப: அதுவும் மனோமயம்தான்.

**கே: உடம்பு, மனம், புலன்கள் இது வழியா ஆத்மாதான் எல்லாத்தையும் பாக்குது, அனுபவிக்குது... அப்படின்னு சொல்றாங்களே!**

ப: உலகத்துலே இருக்கற பொருட்களோ, உணர்ச்சிகளோ, நினைப்புகளோ எல்லாம் மனோமயம்தான். மனம், நான்கற எண்ணம் உதிச்ச பிறகுதான் தொழில் படறது. இந்த அகந்தை எங்கிருந்து வர்றது?

மூளையிலே இருக்கற அறிவிலே இருந்தா?

சுத்த அறிவிலே இருந்தா?

**கே: ஆத்மாவில இருந்து வருதா?**

ப: அகந்தை சுத்த அறிவிலேர்ந்தே வர்றது.

**கே: அதுதான் ஆத்மாவா?**

ப: ஆத்மா, மனம், அகந்தை எல்லாம் வெறும் வார்த்தைதான். அப்படியெல்லாம் ஒண்ணும் கிடையாது. 'இருக்கறது'தான் ஒரே உண்மை.

**கே: அப்போ அது ஆனந்தமா இருக்காதே?**

ப: அதோட இயல்பே ஆனந்தந்தான். ஆனந்தம் மட்டுந்தான் இருக்கு. அதை அனுபவிக்கறதுக்குக் கூட அங்கே ஆள் இல்லை. அனுபவிக்கறவன் அதிலேயே மூழ்கி ஒண்ணாயிடுவான்.

**கே: சாதாரண வாழ்க்கையில சுகம், துக்கம் ரெண்டும் இருக்கு. சுகம் மட்டுமே இருக்காதா?**

ப: மனம் உண்முகப்படறதே சுகம்; வெளிப்படுவதே துக்கம். இங்கே சுகம் மட்டுந்தான் இருக்கு. சுகமில்லைங்கறதத்தான் துக்கம்கறோம். துக்கம்ன்னு ஒண்ணு உண்மையிலேயே இல்லே. நம்மளோட இயல்பே சுகம்தான்.

**கே: அதுதான் ஆத்மாவா?**

ப: ஆத்மா, கடவுள் எல்லாம் நாம கொடுத்துக்கற பேர்தான். நம்மளோட மனக்கற்பனைதான்.

**கே: என்னது! கடவுள் மனக்கற்பனையா?**

ப: ஆமாம். தூங்கும்போது கடவுள் என்ன ஆனார்?
நீங்க அப்போ அவரை வணங்கறது இல்லையே!

**கே: தூக்கம்... ஒரு தெளிவில்லாத ஸ்திதி ஒரு மயங்கிய நிலை.**

ப: கடவுள் உண்மைன்னா... அவர் எப்பவும் இருக்கணுமே! ஆனா நீங்க எப்பவும் இருக்கேளே...! தூங்கும்போதும், விழிப்பிலேயும் ஒரே மாதிரி இருக்கேளே...! உங்களை

மாதிரியே உங்களோட கடவுளும் உண்மைன்னா... அவரும் தூங்கும்போதும் இருக்கணுமே! இந்தக் கடவுள் சிந்தனை எல்லாம் விழிப்பிலேதான் இருக்கு.

யார் கடவுளைப் பத்தி சிந்திக்கறது?

**கே: நான்தான்.**

ப: யார் இந்த நான்?
நான்னு யார் சொல்றது?
உடம்பு சொல்றதா?

**கே: உடம்புதான் சொல்லுது.**

ப: உடம்பு சொல்லலே. உடம்பு சொன்னா... தூங்கும்போதும், உடம்பு பேசணுமே! யார் இந்த நான்?

**கே: நான் உடம்புக்குள்ள இருக்கேன்.**

ப: நீங்க உடம்புக்குள்ளே இருக்கேளா... இல்லை உடம்புக்கு வெளிலே இருக்கேளா....

**கே: நிச்சயமா உடம்புக்குள்ளதான்.**

ப: தூங்கும்போதும் அப்படியேதான் இருக்கேளா?

**கே: நிச்சயமா, தூங்கும்போதும் உடம்புக்குள்ளதான் இருக்கேன்.**

ப: தூங்கும்போதே அப்படி தெரியறதா?

**கே: தூக்கம் ஒரு மயங்கின நிலை. தெளிவில்லாத நிலை.**

ப: உண்மையிலேயே நீங்க உள்ளேயும் இல்லை; வெளிலேயும் இல்லை. தூக்கம்தான் நம்மளோட ஸ்வபாவமான ஸ்திதி.

**கே: அப்போ தூக்கம் விழிப்பை விடச் சிறந்த நிலையா? மேலான நிலையா?**

ப: மேலான நிலையும் இல்லை... கீழான நிலையும் இல்லை...
கனவு, நனவு, தூக்கம் இந்த மூணுலேயும் நீங்க இருக்கேள். தூக்கம் சுகமான நிலை. அதிலே துக்கம் இல்லை. அது வேணும்,

இது வேணும், துக்கம் எல்லாம் விழிப்பு நிலையிலேதான் இருக்கு. என்ன மாற்றம் நடந்தது?

நீங்க இரண்டு நிலையிலேயும் ஒரே மாதிரிதான் இருக்கேள்! ஏன் இந்த மாற்றம்?

ஏன்னா... இப்போ மனசு கிளம்பிடுத்து. நான்கற எண்ணம் உதிச்ச உடனேதான், மனம் கிளம்பும். இந்த 'நான் இருக்கேன்'கற உணர்வு மூணு நிலையிலேயும் மாறாம, இடைவிடாம இருக்குல்ல... அதிலே இருந்துதான் கிளம்பறது. இந்த எப்பவும் இருக்கற இருப்பா இருந்துட்டா... எப்பவும் சுகம்தான்.

**கே: தூங்கும்போது மனம் ஒடுங்கியிருக்கு. அதை நான் கீழான நிலையா நினைக்கறேன்.**

ப: அப்படின்னா... எல்லோரும் ஏன் தூங்க ஆசைப்படறோம்?

**கே: உடம்பு சோர்வடைஞ்சா தூங்குது. அவ்வளவுதான்.**

ப: உடம்பா தூங்கறது?

**கே: ஆமாம். இதிலேதான் உடல்சோர்வு நீங்கி புத்துணர்வு பெறுது.**

ப: சரி. அப்படியே இருக்கட்டும். உடம்பு தானாகவே தூங்கி தானாகவே எழுந்துடறதா? நீங்களே கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி சொன்னேளே... மனம் ஒடுங்கறதுன்னு! இந்த மூணுநிலையும் மனசுக்குத்தான்.

**கே: ஆத்மா இந்த மூணு நிலையிலும் இயங்கலையா?**

ப: இந்த மூணு நிலையும் ஆத்மாவோடது இல்லை. உடம்போடதும் இல்லை. ஆத்மா எப்பவும் நிர்மலமா, அஸங்கமாயிருக்கு. இந்த மூணுநிலைக்கும் ஆத்மா ஆதாரமா இருக்கு.

விழிப்பு வர்றது - போயிடறது - நான் இருக்கேன்.
கனவு வர்றது - முடிஞ்சுடறது - நான் இருக்கேன்.
தூக்கம் வர்றது - முடிஞ்சுடறது - நான் இருக்கேன்.

இந்த மூணுநிலையும் மாறி மாறி ஏற்பட்டுக் கொண்டேயிருக்கு - நான் மாறாம இடைவிடாம அப்படியே இருக்கேன்.

சினிமாவிலே காட்சிகள் மாறிமாறி வர்ற மாதிரி வந்தாலும், ஸ்கிரீன் அப்படியே இருக்கு. ஸ்கிரீன் எதுவும் பாதிக்கப்படலே.

அதேமாதிரி இந்த மூணு நிலை மாறிமாறி வந்தாலும், நான்கறது மாறாம இடைவிடாம அப்படியே இருக்கு.

இந்த மூணு நிலையும் உடம்போடதுன்னா... தூங்கும்போது இந்த உடம்பு எங்கே? உடம்பு தெரிஞ்சுதா?

**கே: இல்லை.**

ப: உடம்பு இருந்ததுன்னு தெரியலேன்னா... உடம்புதான் தூங்கித்துன்னு எப்படிச் சொல்ல முடியும்?

**கே: ஏன்னா... தூங்கி முழிச்ச பிறகு உடம்பு அங்கேயே இருக்குதே!**

ப: உடம்புங்கறதே ஒரு நினைப்புதான்.

நினைப்பு மனசுலே இருந்து வர்றது. மனம் 'நான்'கற என்ணத்திலே இருந்து வர்றது. இந்த 'நான்'கற எண்ணம்தான் எல்லாத்துக்கும் மூலம்.

இதைப் பிடிங்கோ! எல்லாம் போயிடும்.

உடம்பு இருக்காது. மனம் இருக்காது. நான்கற எண்ணமே போயிடும். இருக்காது.

**கே: அப்புறம் என்னதான் இருக்கும்?**

ப: நாம பரிபூரணமா இருப்போம். சுத்த 'நான்'கறதா இருக்கும்.

**கே: எப்படி மனத்தை இல்லாம பண்றது?**

ப: எந்த முயற்சியும் அதை அழிக்காது. அதை அழிக்கணும்ன்னு நினைக்கறதே அதோட நினைப்புதான்.

இப்படி எல்லாம் நினைக்கறது யாருன்னு பாத்தா... நினைப்பெல்லாம் இல்லாமே போயிடும்.

**கே: அதுவே இல்லாம போயிடுமா? ரொம்ப கஷ்டம்ன்னு தோணுது.**

ப: எல்லாம் இல்லாமப் போயிடும். ஏன்னா... அது உண்மையிலேயே இல்லே.

ரொம்பக் கஷ்டங்கற நினைப்புதான் ஆத்ம ஞானத்துக்குத் தடை.

அதைத் தாண்டணும்.

ஆத்மாவாயிருக்கறது...உண்மையிலேயே ரொம்ப கஷ்டம் கிடையாது.

**கே: உலகத்துலே கடவுள் மேல பக்தியா இருந்துடலாம். அது எளிமையாத் தெரியுது. நீங்க சொல்ற மாதிரி மனமற்று இருக்கறதுங்கறது ரொம்பக் கஷ்டம்.**

ப: பைத்தியக்காரத்தனம்!

நமக்கு அன்னியமா இருக்கறதை பிடிச்சுக்கறது எளிமையாம்!

நம்மள யார்ன்னு பாக்கறது ரொம்பக் கஷ்டமாம்!

உண்மை அப்படி இல்லே.

**கே: எனக்கு புரியலை. நீங்க சொல்றது கஷ்டந்தான்.**

ப: கஷ்டம்கற நினைப்புதான் பெரிய தடை.

கொஞ்சம் அப்பியாசத்திலேயே நீங்க வேற மாதிரி நினைப்பேள்.

**கே: அது என்ன அப்பியாசம்?**

ப: நான்கறது எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ!

**கே: அது நான் பிறக்கறதுக்கு முன்னாடியிருக்கற நிலையாச்சே!**

ப: ஏன் பிறப்பு இறப்பு பத்தி இப்போ யோசிக்கறேள்?

உண்மையிலேயே நீங்க பிறந்திருக்கேளா?

மனம் கிளம்பறதில்லையா... அதுதான் பிறப்பு.

மனம் கிளம்பின உடனே... உடம்பு நினைப்பு வரும். அப்புறம் உடம்பு தெரியும். அப்புறம் நான் இன்னார், இன்னாருக்கு இன்ன தேதி பிறந்தேன்னு நினைப்பு வந்துடும்.

அப்புறம்தான் பிறக்கறதுக்கு முன்னாடி எப்படியிருந்தேன், இறந்ததுக்கு அப்புறம் எப்படியிருப்பேன்கற சிந்தனையெல்லாம் வரும். இதெல்லாம் மனசோட சேஷ்டை.

யாருக்கு இங்கே பிறப்பு?

யாரு பிறந்தது?

**கே: நான் இப்போ பிறந்துதானே இருக்கேன்!**

ப: உடம்பாப் பாத்தா பிறப்பு உண்மைதான்.

ஆனா, உடம்பு, 'நான்' இல்லையே! 'நான்' பிறக்கறதும் இல்லை; இறக்கறதும் இல்லை.

புதுசா எதுவும் வரவே இல்லை.

ரிஷிகள் எல்லாம் இந்த 'நான்'கறதத்தான் இங்கே எல்லாமுமாப் பாத்தா... 'நான்'கறதிலேதான் எல்லாத்தையும் பாத்தா...

அதிலே எந்த ஏற்றத்தாழ்வு பேதம் இல்லை.

உண்மையிலேயே இங்கே பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை.

**கே: தூக்கம் மேலான நிலைன்னா... ஏன் எல்லோரும் அதிலேயே இருக்க வேண்டியதுதானே?**

ப: எல்லாரும் எப்பவும் தூங்கிக்கொண்டேதான் இருக்கோம்.

இப்போ விழிப்பு நிலைன்னு சொல்றது ஒரு கனவு மாதிரிதான். ஒரு கனவு வரணும்னா தூக்கம் இருக்கணுமே...

அப்படி இந்த மூணு நிலையும் ஒரு தூக்கத்தையே ஆதாரமா கொண்டது. அந்த தூக்கத்திலே ஏற்படற கனவு மாதிரிதான் இந்த மூணு நிலைகளும்.

இந்த மூணு நிலைகள் எப்படிக் கனவு மாதிரியோ... அப்படித்தான் பிறப்பும், இறப்பும்.

உண்மையிலேயே இங்கே பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை.



(245) குல்பாய் சிரின்பாய், இரண்டு பார்சி பெண்மணிகள் கேட்டது.

**கே: எனக்கு ஆத்மா, அகந்தைக்கு ஆதாரமா இருக்குதுன்னு புரியுது. என்னுடைய புரிதல், புத்திபூர்வமாத்தான் இருக்கு. அனுபவமா இல்லை. நான் ஆத்மாவை எப்படி அனுபவமா உணர்றது?**

ப: ஆத்ம ஞானம் புதுசா வரப்போறது இல்லை.

அது ஏற்கனவே இருக்கு.

தேவையெல்லாம் அதை 'நான் இன்னும் உணரலே'ங்கற நினைப்பை போக்கணும். அவ்வளவுதான்.

**கே: அப்போ ஆத்மாவை உணர்றதுக்கு முயற்சி செய்ய வேண்டாமா? அதை அடையத் தேவையில்லையா?**

ப: தேவையில்லை.

மனசு சும்மாயிருந்தா... அதாவது கவலையில்லாமே, அமைதியா இருந்தா அதுதான் ஞானம். ஆத்மா இல்லாத காலமே இல்லை.

எது வரைக்கும் அதை அடையலேங்கற நினைப்பு இருக்கோ, அது வரைக்கும் இந்த மாதிரி நினைப்புகளை போக்கற முயற்சி வேணும்.

இந்த மாதிரி நினைப்புகள் எல்லாம், ஆத்மாவை அனாத்மாவோட சம்பந்தப் படுத்திக்கறதாலேதான் ஏற்படறது. அனாத்மா மறைஞ்சுடுத்துன்னா... ஆத்மாவே ஒளிரும். ஒரு ரூம்லே இடத்தை ஏற்படுத்த... அங்கே இருக்கற பொருட்களை அப்புறப்படுத்தினா போறும். இடம் புதுசா வர்றதில்லை. மேலும் பொருட்கள் இருக்கும் போதும்... இடம் அப்படியேதான் இருந்தது.

நினைப்புகள் அற்ற இடம்ன்னா... சூன்யம் இல்லை.

சூன்யத்தை உணர்றதுக்கு ஒருத்தன் இருக்கணும். அறிவும், அறியாமையும் மனசுக்குத்தான். மனசுக்குத்தான் இரட்டை.

அறிவு அறியாமைக்கு ஆதாரமாயிருக்கறது ஆத்மா. அதுதான் உண்மையிலேயே அறிவு. அந்த அறிவை அறியறதுக்கு இன்னொரு அறிவு தேவையில்லை.

இங்கே இரண்டு அறிவு இல்லை. இரண்டு ஆத்மா இல்லை. இரண்டு நான் இல்லை. ஆத்மாவை அறிய முடியாது. ஆத்மா பாக்காது, கேக்காது. அதெல்லாம் தாண்டி தனியா சுத்த அறிவாவே இருக்கு.

ஒருத்தி தன் கழுத்திலேயே நகையிருக்கறதை மறந்துட்டு அது தொலைஞ்சிடுத்துன்னு நினைச்சு... அதைத் தேடுதேடுன்னு தேடினாளாம், எது வரைக்கும்... அவ தோழி கழுத்திலேதான் இருக்குன்னுகாட்டறவரைக்கும். அவளேதொலைஞ்சிடுத்துன்னு துக்கத்தை ஏற்படுத்திக்கொண்டு... தேடறேன்னு அலைஞ்சு... கிடைச்சுடுத்துன்னு சந்தோஷப்பட்டாளாம்.

அதே மாதிரிதான் ஆத்மா. அதைத் தேடினாலும் தேடாட்டாலும் இங்கேயே இப்போவே எப்பவும் இருக்கு.

தொலைஞ்ச நகையைத் தேடி அவ கண்டுபிடிச்ச மாதிரிதான் அஞ்ஞான நீக்கமும், அனாத்மாவை நாமன்னு நினைச்சது போறதும், ஆத்மா இங்கேயே இப்போவே எப்பவும் இருக்குன்னு தெரிஞ்சுக்கறதும். இதைத்தான் ஞானம்ங்கறா.

அது புதுசா எதையோ தெரிஞ்சுக்கறதும் இல்லை. புதுசா எதுவாவோ ஆகறதும் இல்லை. அஞ்ஞானம் நீங்கும். தப்பான பார்வை போகும். இதைத் தவிர வேற ஒண்ணும் இல்லை.

சூன்ய ஸ்திதி... நாம யாருன்னு தெரியாம, மனதை அடக்கறதனாலேயே ஏற்படறது. மனம் வேரோட ஸமூலம் நாசமாகணும். நினைக்கறவன் யார்ன்னு பாக்கணும், ஆத்மாவைத் தேடறவன் யார்ன்னு பாக்கணும். நினைக்கறவனா... தேடறவனா... நில்லுங்கோ. எல்லா நினைப்பும் போயிடும்.

**கே: அப்போ நினைக்கறவனா... தேடுறவனா... அகந்தைமட்டும் மிஞ்சுமா?**

ப: அந்த அகந்தை நினைப்பற்ற சுத்த அகந்தை. அது ஆத்மாவேதான்.

தவறான அபிப்பிராயம் அதாவது அனாத்மசேர்க்கை இருக்கறவரைக்கும் சந்தேகம் வந்துட்டே இருக்கும். அனாத்ம சேர்க்கை முடிவுக்கு வரையிலேதான், சந்தேகம் எல்லாம் தீரும். அது ஆத்ம ஞானமா முடியும்.

அப்போ யாரிடமும், கேள்வி கேட்கவோ, சந்தேகப் படவோ யாரும் இருக்க மாட்டா. எவ்வளவு பதில் சொன்னாலும் திருப்தியாகாது. நினைக்கறவாளைப் பிடிங்கோ! அவாளை விட்டுட்டா எல்லாம் தோன்றிடும். மனசுலே சந்தேகம் வந்துடும்.

(246) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: பேச்சுக்கும் மௌனத்துக்கும் என்ன தொடர்பு?**

**ப:** பேச்சு ஒருத்தரோட நினைப்பை இன்னொருத்தருக்கு தெரியப்படுத்தற ஒரு சாதனம்தான். நினைப்பு வந்ததுக்குப் பிறகுதான் பேச்சு வரும். நினைப்புகள் எல்லாம் நான்கற நினைப்பு வந்ததுக்குப் பிறகுதான் வரும். நான்கற நினைப்புதான் பேச்சுக்கெல்லாம் மூலம். 'நான்'கற நினைப்பு இல்லாம இருந்தா மத்தவாளை மௌனத்தாலேயே புரிஞ்சுக்கலாம்.

மௌனம் இடைவிடா பேச்சு. வற்றாத பேச்சுப்பிரவாகம். பேசறதாலே அது தடைபடறது. மௌன மொழியை வார்த்தை தடை செய்யறது. எப்படித் தடைபடற மின்சாரமே... பல்பா எரியறதோ, பேன்னா (fan) சுத்தறதோ, அப்படித் தடைபடற மௌனந்தான் பேச்சு. கம்பியிலே அது மின்சாரமாத்தான் இருக்கு. அது மாதிரிதான் மௌனம்.

பல வருஷம் வார்த்தையாலே புரியாததை ஒரு நிமிஷ மௌனம் புரியவைத்துடும். மௌனத்தின் சந்நிதிக்கு அவ்வளவு சிறப்பு, தட்சிணாமூர்த்தியோட மௌனம் நால்வரைத் தெளிவிச்ச மாதிரி.

மௌனம்தான் உயரிய மொழி. பலிதத்திலே சிறந்தது அதுதான்.



(247) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: அஹம் ஸ்புரணம்தான் நிர்விகல்ப சமாதியா? இல்லை அதுக்கு முந்திய நிலையா?**

ப: ஹிருதயத்திலே ஒரு சிறு துளை மூடியேயிருக்கு. விசாரத்தால அது திறக்கும்போது அஹம் ஸ்புரணம் ஏற்படறது. அதுதான் நிர்விகல்பசமாதி.

**கே: மயக்கத்துக்கும் தூக்கத்துக்கும் என்ன வித்தியாசம்?**

ப: தூக்கம் விரைவா ஆளைக் கவ்விடும். மயக்கம் மெதுவா வரும். சிறு எதிர்ப்பு இருக்கும். மயக்கத்திலே உண்மையை உணர்றதுக்கு வாய்ப்பு இருக்கு. தூக்கத்திலே இல்லை.

**கே: மரணத்துக்கு முந்திய நிலை எவ்வாறு இருக்கும்?**

ப: மரணத்தறுவாயில் மேல மூச்சு காணும். அது அவன் இந்த உடம்பை விட்டுட்டு அடுத்த உடம்பை எடுத்துட்டான்னு அர்த்தம். இரண்டு உடம்புக்கு இடையிலே ஆடறதுதான் மேல் மூச்சு. இப்படி மேல்மூச்சு காணும்போது திடீர் திடீர்ன்னு தீவிரமா மூச்சு இழுபறியா இருக்கும். அது பழைய உடம்பை அபிமானத்தாலே விடாம உயிர் போராடறதுன்னு அர்த்தம். இதை அம்மாவிடமும் பழனிஸ்வாமியிடமும் பாத்தேன்.

**கே: புது உடம்பு அவனோட அடுத்த ஜன்மாவை குறிக்குமா?**

ப: ஆமாம், மேல் மூச்சு காணும்போது கனவிலே இருக்கற மாதிரி இருக்கும். தற்போதைய சூழ்நிலை தெரியாது.

**கே: ஞானியும் உடம்பு நானேங்கறான்... அஞ்ஞானியும் உடம்பு நானேங்கறான்... என்ன வித்தியாசம்?**

ப: 'நான்'கறதுதான் ஏகமான உண்மை. அதை உடம்பு வரையறுக்கறது. தன்னளவாக் குறுக்கிக்கறது.

அஞ்ஞானி 'நான்'கறத உடலளவாக் குறுக்கிக்கறான். ஆனா 'நான்'கறது தூங்கும்போது உடம்பளவா இல்லை.

அதே நான்தான் விழிப்பிலேயும் இருக்கு. 'நான்'கறது உடம்பளவா இருக்கறதா ஒரு கற்பிதம் இருந்தாலும், உண்மையிலேயே உடம்பளவா இல்லை. உடம்பு நானேங்கறது தப்பு இல்லை. ஏன்னா... நான்கறது எல்லாமுமாத்தான் இருக்கு.

உடம்பு ஜடம், அது நான்னு சொல்லாது. தவறான எண்ணத்தாலேதான் இப்படி நினைக்கறோம்.

தவறான எண்ணம் எதுன்னா, நான் எதுவோ அதை விட்டுட்டு எது இல்லையோ அதை நான்கறதுதான்.

நான்கறது ஜடம் இல்லை. ஜட உடம்பும் இல்லை.

பொதுவா உடலோட தொழிலை நான்கறது மேல ஏத்திக்கறோம். உடல் ஒரு இடத்துக்கு போனதையும், வந்ததையும் 'நான் போனேன்'னும், 'நான் வந்தேன்'னும் நான்கறதின் மேலே ஏத்திக்கறோம்.

உடல் தொழில் பட்டாலும் தொழிற் படாட்டாலும் நான் கறது எதுனாலேயும் பாதிக்காம சுகமாவேயிருக்கு.

அஞ்ஞானியோட 'நான்' உடம்பு அளவுதான். அதுதான் மொத்தத் தவறும். ஒரு ஞானியோட 'நான்' உடம்பும், அவனோட மத்த எல்லாமும் சேர்த்துத்தான். ஜட உடலுக்கும் எப்பவும் இருக்கற 'சித்'க்கும் இடையிலேயா... ஒண்ணு கிளம்பித்தான் இந்த உபத்திரவம் பண்ணும்.

**கே: ஒரு ஞானியும் நான் உடல்தாங்கறான். அவனுக்கு சாகும்போது என்ன ஏற்படும்?**

ப: அவன் இப்போவே உடம்போட தன்னை சம்பந்தப் படுத்திக்கறதில்லை.

**கே: இப்போதானே சொன்னீங்க, அவனுக்கும் உடல் 'நான்'... தான்னு இருக்கும்ன்னு!**

ப: ஆமாம். அவனுடைய நான் உடம்பையும் சேத்து இருக்கும்.

அவனுக்கு 'நான்'கறதுக்கு அன்னியமா இங்கே எதுவும் இல்லை. உடம்பு இறக்கறதாலே அவனுடைய 'நான்'க்கு எந்த பாதிப்பும் இல்லை. எப்பவும் போலவே இருக்கும்.

உடம்பு சாகப் போறதுன்னா... அது கேட்கட்டும். அது ஜடம். அது கேக்காது. நான்கறது சாகறது இல்லை. அதனாலே அதுவும் கேக்காது.

அப்போ யாருதான் சாகறா?

யார் இந்தக் கேள்வியைக் கேக்கறது?

**கே: இப்போ இவ்வளவு சாஸ்திரங்களும் யாருக்கு? உண்மையான 'நான்'க்கு தேவையில்லை. போலி 'நான்'க்குதான் எல்லாம். ஒரு போலி 'நான்'கறதுக்கு இவ்வளவு சாஸ்திரங்களா?**

ப: ஆமாம் உண்மைதான்.

சாவுங்கறது ஒரு எண்ணம்தான். நினைப்பு. அவ்வளவுதான்.

நினைக்கறவன்தான் எல்லாத் தொல்லையும். அவனுக்கு சாகும்போது என்ன ஆகறதுன்னு அவனே நமக்கெல்லாம் சொல்லட்டும். உண்மை நான் மௌனமாத்தான் இருக்கு.

நான் இது, நான் அது-ன்னுனெல்லாம் நினைக்கக்கூடாது. அது இதுன்னு சொல்றது தப்பு. அதுவும் தடைதான். நான்கறது மட்டுந்தான் உண்மை. மௌனந்தான் நான். நான் இதுன்னு ஒரு ஆள் சொல்லும்போதுதான், இன்னொருத்தன் நான் அதுங்கறான். அதனாலே கருத்து வேற்றுமை. ஏகப்பட்ட மதங்கள். ஆனா உண்மையிலேயே உண்மை எப்பவும் இருக்கறபடியே இந்தச் சச்சரவுகளாலே பாதிக்கப்படாம இருக்கு.

**கே: சாவுன்னா என்ன? உடம்பை விட்டுடறதுதானே?**

ப: தூங்கும்போது உடம்பை விட்டுடறோமே! அப்போ என்ன பயமாவாயிருக்கு!

**கே: ஆனா எனக்கு முழிப்போம்ன்னு தெரியும்ல!**

ப: ஆமா மறுபடியும் நினைப்பு. 'நான் காலையிலே விழிச்சுப்பேன்' அப்படின்னு ஒரு நினைப்பு. நினைப்பிலேயே தான் வாழ்க்கை ஓடறது. நினைப்பிலே இருந்து விடுதலைதான் நம்மளோட யதார்த்த ஸ்திதி - ஆனந்தம்.

(249) ***பகவான் பொதுவாகச் சொன்னது.***

அஞ்ஞானம் இருவகையா இருக்கு.

1. தன்னை மறந்துடறது

2. தன்னைப் பத்திய உண்மையை, எவ்வளவு கேட்டாலும், திடப்படறது இல்லை.

சாதனங்கள் எல்லாம் நினைப்பைப் போக்கறதுக்குத்தான். இந்த நினைப்பெல்லாம் விதையா இருக்கற பூர்வ ஸம்ஸ்காரங்களாலேயே ஏற்படறது. அதுதான் பேதம் கற்பிச்சு, எல்லாத் தொல்லையும் கொடுக்கறது. இதைப் போக்கறதுக்கான சாதனம் குருகிட்டே இருந்து உண்மையைக் கேக்கறது 'சிரவணம்'. அதைச் சிந்திக்கறது 'மனனம்'. அதிலேயே நிக்கறது 'தெளிதல்' நிதித்தியாசனம்'.

சிரவணத்தோட பலன் உடனடியாவும் இருக்கும். சிஷ்யன் உடனே உண்மையை உணர்ந்துடுவான். இது ரொம்பப் பக்குவிக்குத்தான். மத்த எல்லாருக்கும் எவ்வளவு தடவை கேட்டாலும் உண்மையிலே நிக்க முடியாது. எதனாலே இது? மனசுலே மலம் நீங்கலே. சந்தேகம், விபரீதம், அஞ்ஞானம் இந்த மூணுதான் நீக்க வேண்டிய தடை.

அஞ்ஞானம்...... திரும்பத் திரும்ப குருவினிடத்து இதுதான் விஷயம்ன்னு தெளிவாகறவரைக்கும் உண்மையைக் கேக்கறதாலே நீங்கும்.

சந்தேகம்...... குருவினிடத்து கேட்ட உண்மையை திரும்பத் திரும்ப மனனம் பண்றதாலே சந்தேகம் எல்லாம் தீரும்.

விபரீதம்...... அனாத்மாவை ஆத்மான்னு எடுத்துக்கறதுதான் விபரீதம். இது உண்மையிலே நிலைபெறுவதாலேயே நீங்கும். அதாவது நிதித்தியாசனத்தாலேயே நீங்கும்.

இந்த மூணும் ஸித்திச்சா தடையெல்லாம் நீங்கி சமாதி சித்திக்கும். அமைதி திடப்படும்.

சிலர் சிரவண மனன நிதித்தியாசனத்தோட முடியறது இல்லை. புத்தகத்தைப் படிச்சு எவ்வளவு தெளிஞ்சாலும் பிரயோஜனமில்லை. இடைவிடா பிரம்மத்தியானத்தாலேயே மனம் நாசமாகும்கறா.

சாதகன் இரண்டு வகை:

1. கிருதோபாசகன்
2. அகிருதோபாசகன்

கிருதோபாசகனுக்குக் கொஞ்சம் சொன்னாப்போதும். ஏன்னா... சில சந்தேகம்தான் அவனுக்கு இருக்கும். அது குருவார்த்தையைக் கேட்டாலே நீங்கிடும். உடனடியா சமாதி சித்திச்சுடும். அதிலேயிருந்தே தெரிஞ்சுக்கலாம் அவன் ஏற்கனவே சிரவண மனன நிதித்தியாசனம் எல்லாம் முற்பிறப்புகள்லேயே முடிச்சுட்டான்னு. இப்போ தேவையில்லை.

மத்தவா எல்லாருக்கும் சாதனை அவசியம். எத்தனை தடவை கேட்டாலும் சந்தேகம் வந்துகொண்டேயிருக்கும். அதனாலே அவன் சகஜ சமாதி சித்திக்கற வரைக்கும் சாதனையை விடக்கூடாது.

சிரவணம் — உடம்புதான் நான்கற தப்பெண்ணத்தைப் போக்கும்.

மனனம் — அறிவுதான் 'நான்'கறதைத் தெளிவாக்கும்.

நிதித்தியாசனம் — ஆத்மானுபவமாகும்.

(251) *லக்னோவில் இருந்து வந்த ரொம்பவும் நாகரீகமான பெண்மணி பகவானிடம் கேட்டார்.*

**கே: நான் சந்தோஷமாயிருக்கேன். எனக்கு தேவையானது எல்லாம் இருக்கு. ஆனா மன நிம்மதியில்லை. முழுமை இல்லை. அதை வேண்டியே உங்க அனுக்கிரத்துக்காக வந்துருக்கேன்.**

ப: பக்தி உன் குறையைத் தீர்க்கும்.

**கே: எனக்கு மனநிம்மதி வேணும்- எப்படி ஏற்படும்? அதுக்கு வழி என்ன?**

ப: பக்தியும் சரணாகதியுமே வழி.

**கே: அதுக்கு தகுதியானவளா நான்?**

ப: எல்லோரும் அதுக்குத் தகுதிதான். ஆன்மிகம் எல்லோருக்கும் பொது. யாருக்கும் மறுக்கப்பட்டது இல்லை. வயதானவரோ, இளையவரோ, ஆணோ, பெண்ணோ ஒரு பேதமும் இல்லை.

**கே: உண்மையிலையே நான் அதைத்தான் கேக்க நினைச்சேன். நான் இளம் மனைவி. கணவனுக்கு ஆற்ற வேண்டிய கடமைகள் இருக்கு. இப்படி இருக்கும்போது நான் ஆத்மீகத்துல முன்னேற முடியுமா?**

ப: கண்டிப்பா முடியும். நீங்க யார்?

நீங்க உடம்பு கிடையாது. சுத்தமான அறிவு. இந்தக் கிருஹஸ்த தர்மம், உலகம், எல்லாம் நான்கற சுத்த அறிவிலே ஏற்படற தோற்றம்தான். கணவனுக்கு ஆற்ற வேண்டிய கடமையை உடம்பும் மனசும் செய்யட்டும். அதனாலே 'நீங்க இருக்கேள்'ங்கற அறிவுக்கு எந்தப் பாதிப்பும் இல்லை. நீங்க நீங்களாயிருக்கறதுக்கு எது உங்களைத் தடுக்கும்?

**கே: குடும்ப வாழ்க்கையிலே ஈடுபட்டுக்கொண்டே ஆத்ம விசாரம் பண்ணலாமா? பொருந்துமா?**

ப: ஆத்மா எப்பவும் இருக்கு. நீங்கதான் அது. உண்மையைத் தவிர வேற எதுவும் இங்கே இல்லை. பொருத்தமா இல்லையாங்கற கேள்விக்கே இடம் இல்லை.

**கே: நான் என் நிலைமையை இன்னும் தெளிவாச் சொல்றேன். எனக்குக் குழந்தைகள் இருக்கு. ஒரு பையன் சமீபத்துல இறந்துட்டான். எனக்கு இந்த வாழ்க்கையே பிடிக்கலை. முழு மூச்சா ஆத்மிகத்துலே ஈடுபடணும்னு விரும்புறேன். ஆனா ஒரு குடும்பத்தலைவியா என்னுடைய கடமைகள் தடுக்குது. ஆத்மிகத்துலே முழுமையா ஈடுபட முடியலை. அதுதான் என் சந்தேகம்.**

ப: 'விடுபடறது' அப்படின்னாலே... ஆத்மாவிலே ஸ்திதி பெறுறதுதான். அதைத்தவிர வேற ஒண்ணும் இல்லை.

நம்மளோட சூழ்நிலையை விடறதும் இல்லை; வேற சூழ்நிலைக்குப் போறதும் இல்லை. அதுக்காக விடுபடறதுன்னா... ஸ்தூல உலகத்தை விட்டுட்டு ஏதோ தியானம், இறைவன்னு வேற உலகத்திலே இருக்கறதும் இல்லை. உங்க மகனோட பிறப்பு இறப்பு எல்லாம் ஆத்மாங்கற ஸ்கிரீன்லே தோன்றுற ஒரு தோற்றம்தான்.

தூங்கும்போது எப்படி இருந்தேள்ன்னு நினைச்சுப் பாருங்கோ. எதைப் பத்தியாவது கவலையிருந்ததா ?

உங்க மகனோ, உலகமோ உண்மையன்னா... தூங்கும்போது அங்கே இருக்கணுமே! தூங்கும்போது நீங்க இருந்ததை மறுக்க முடியாது. கவலையில்லாமே இருந்ததையும் மறுக்க முடியாது. தூங்கும்போது இருந்த அதே ஆள்தான் இப்போ பேசிக்கொண்டு சந்தேகங்களைக் கேட்டுக்கொண்டு இருக்கறதும்! நீங்க உங்க பேச்சுப்படி சந்தோஷமாயில்லே. ஆனா தூங்கும்போது கவலையில்லாமே இருக்கேளே ?

என்ன மாற்றத்தாலே இப்போ கவலை வந்துடுத்து ? அகந்தை எழுந்துடுத்து. விழிப்பிலே புதுசா வந்தது அதுதான். தூங்கும் போது அகந்தை இல்லை. இந்த அகந்தை பிறக்கறதுதான் ஒரு ஆளோட பிறப்பு. வேற பிறப்பெல்லாம் இல்லை. பிறந்தது இறந்தே தீரும். அகந்தைய நாசம் பண்ணினா... அது செத்துட்டா... சாவைப் பத்தி எந்தக் கவலையும் இல்லை... அகந்தை இறந்ததுக்கு அப்புறமும் ஆத்மா இருக்கும்... நாம இருப்போம்... அதுதான் ஆனந்தம்... அமரத்துவம்... சாகாவரம்.

**கே: அதை எப்படிச் செய்யறது ?**

ப: இந்தச் சந்தேகம் எல்லாம் யாருக்கு வர்றதுன்னு பாருங்கோ! யார் இந்தச் சந்தேகி ? நினைக்கறது யாரு ? அதுதான் அகந்தை. அதைப் பிடிச்சுக்கோங்கோ. மத்த நினைப்பெல்லாம் தானா போயிடும். நான்கற எண்ணம் சுத்தமாயிருக்கும். இது எங்கே இருந்து வர்றதுன்னு பாருங்கோ. அதுதான் சுத்த அறிவு.

**கே: இது ரொம்பக் கஷ்டம். பக்தி மார்க்கத்துலே போலாமா ?**

ப: அது அவரவர் பக்குவத்தையும் பூர்வ ஸம்ஸ்காரத்தையும் பொறுத்தது. பக்தியும் விசாரமும் ஒண்ணுதான்.

**கே: தியானம் பண்ணலாமா ?**

ப: ஆமாம். ஒரு உருவைத் தியானம் பண்ணணும். அது மத்த நினைப்பைப் போக்கும். இறைவனோட நினைப்பு மத்ததை

நீக்கிடும். அதுதான் ஏகாக்கிரம். தியானத்தோட லட்சியமும் விசாரமும் ஒண்ணுதான்.

**கே: கடவுளை நேர்ல பாக்க முடியுமா?**

**ப:** பாக்கலாம். கடவுளை மனசுலேதான் பாக்க முடியும். நேர்லயே பாத்தாலும் அது பக்தனோட மனசுலதான். கடவுளோட உருவத்தையும், தோற்றத்தையும் பக்தனோட மனம்தான் தீர்மானிக்கறது. அது முடிவானது இல்லே. அதிலே துவைதம் இருக்கு. அது கனவிலே இறைவனை பாக்கற மாதிரிதான். இப்படிக் கடவுளை எல்லாம் தரிசிச்சதுக்குப் பிறகுதான் விசாரமே ஆரம்பமாகும். அது ஞானத்திலே முடியும். விசாரம்தான் முடிவான வழி. ஆனா சிலருக்குத்தான் விசாரம் அனுபவமாறது. பலருக்கு பக்திதான் எளிமையாயிருக்கு.

**கே: பால் பிரண்டன் உங்களை இலண்டன்லே பாத்ததா சொல்றாரே! அது கனவா?**

**ப:** ஆமாம். காட்சியிலே பாத்துருக்கார். அவர் மனசுலேதான் அதுவும்.

**கே: நான் எப்படி ஆத்மாவை அடையறது?**

**ப:** ஆத்மாவை அடையறதுன்னு ஒண்ணு உண்மையிலேயே இல்லவே இல்லை.

அப்படி அடையறதுன்னா... ஆத்மா இங்கேயே இப்போவே இல்லேன்னு ஆயிடும்.

அது புதுசா இருக்கணும். புதுசா வர்றது போயிடும். அது நிரந்தரம் இல்லே. அதனாலேதான் சொல்றேன். 'ஆத்மா அடையப்படறது இல்லே'.

நீங்கதான் ஆத்மா. நீங்க ஏற்கனவே அதாத்தான் இருக்கேள்.

உண்மை என்னன்னா... ஆத்மாவோட சுக சொரூபம் உங்களுக்குத் தெரியலே. அஞ்ஞானம் ஆத்மசுகத்தை மறைச்சுடறது.

நம்மளோட முயற்சியெல்லாம் அஞ்ஞானத்தை நீக்கறதுக்குத்தான். அஞ்ஞானம்ன்னா தவறான கருத்து.

இந்தத் தவறான கருத்து ஆத்மாவை உடம்போட, மனசோட சம்பந்தப்படுத்திடறது.

இந்தத் தவறான சம்பந்தந்தான் போகணும். அப்போ ஆத்மாவே சுடரும்.

**கே: அதை எப்படிச் செய்யறது?**

ப: ஆத்ம விசாரத்தாலே.

**கே: அது ரொம்பக் கஷ்டம். வேற வழியில்லையா? நான் ஆத்மாவை உணரமுடியாதா? மகராஜ் தயவுசெய்து சொல்லுங்க.**

ப: நீங்க ஏற்கனவே ஆத்மாவாத்தான் இருக்கேள்.

அதனாலே ஆத்ம ஞானம் எல்லோருக்கும் பொதுதான். ஆத்மாவுக்கு அதிகாரி பேதம் இல்லை.

'நான் ஞானமடைய முடியுமா?'ங்கற சந்தேகம் அல்லது 'நான் இன்னும் ஞானம் அடையலே'ங்கற நினைப்புதான் தடை.

அதிலே இருந்து விடுபட்டு இருங்கோ! அதுபோதும்.

**கே: ஆனா அதுக்கு ஆத்மானுபவம் ஏற்படணுமில்லையா. அது இல்லாம எப்படி இந்த நினைப்புல இருந்து விடுபட முடியும்?**

ப: இதுவும் உங்களோட நினைப்புதான், இதெல்லாம் உங்களை உடம்போட சம்பந்தப்படுத்திக் கொண்டதாலேயே ஏற்படறது. இந்தப் பொய் சம்பந்தமே நீங்கணும். அஞ்ஞான நீக்கமே ஞானத்தின் அடைவு.

**கே: உண்மைதான். ஆனா ரொம்ப கஷ்டமாயிருக்கு. பகவானோட சிஷ்யர்கள் கூடவே இருக்கறதாலே, ரொம்ப எளிமையா, உங்க அருளால அதை உணர்ந்துருக்காங்க. ஒரு பெண்ணா இருக்கறதாலையும், என்னால உங்க கூடவேயிருந்து அதை உணர்ற பாக்கியம் இல்லை. இப்போ ஊருக்கு போனா.... திரும்ப வருவேனான்னு தெரியலை. பகவானோட அருளையே வேண்டுறேன். என்னோட இடத்துக்கு போனாலும், உங்களை நான் மறக்கக் கூடாது. இந்த பிரார்த்தனையை பகவான் செவிசாய்க்கணும்.**

ப: எங்கே போறேள் நீங்க? எங்கேயும் போகலே.

சரி, நீங்க உடம்புன்னே வச்சுக்கொண்டாலும், உங்க உடம்பேவா லக்னோலே இருந்து திருவண்ணாமலை வரைக்கும் வந்தது? நீங்க கார்லே ஏறி உக்காந்தேள், கார்தான் வந்தது. ரயில் வந்தது. கடைசியிலே, நீங்க என்ன சொல்றேள் 'நான் வந்தேன்'கறேள்.

உண்மையிலேயே நீங்க உடம்பு இல்லே. ஆத்மா எங்கேயும் நகர்றது இல்லை. உலகந்தான் ஆத்மாவிலே நகர்றது, நீங்க எதுவோ... அதுவாவேதான் எப்பவும் இருக்கேள். எந்த மாற்றமும் இல்லே.

நீங்க இங்கே இருந்து கிளம்பறேள்ன்னு சொல்றதும்கூட அதே மாதிரிதான். நீங்க எப்பவும் இங்கேயேதான் இருக்கேள். காட்சிதான் மாறும்.

அருளைப் பொறுத்த வரைக்கும் அது உங்களுக்குள்ளேயே தான் இருக்கு. அது வெளியே எங்கேயோ இருந்தா பிரயோஜனமில்லை. அருள்தான் ஆத்மா. அதை விட்டு வேறா நீங்க இல்லை. அருள் எப்பவும் இருக்கு.

**கே: நான் உங்க உருவத்தை நினைக்கும் போதெல்லாம் மனம் அமைதி அடையுது. நீங்களும் எனக்கு அருளணும். என்னோட முயற்சிதான்னு என்னை கைவிட்டுடாதீங்க. என் முயற்சி ரொம்ப பலஹீனமானது. உங்க அருளே பலம்.**

ப: அருளேதான் ஆத்மா. நீங்க பகவானை நினைச்சா... பகவான் உங்களை நினைக்கும். அருள் ஏற்கனவே இல்லையா? அருள் இல்லாத ஒரு நிமிஷமாவது உண்டா? உங்களோட பிரியந்தான் அருளுக்கு முன்னோடி. அதுதான் பலன். அதுதான் உத்வேகம். அதுதான் ஆத்மா. அதேதான் அருளும்.

**கே: சம்சாரத்துல இருந்துகிட்டே ஆத்மசாதனை பண்ணலாமா?**

ப: ஆமாம். கண்டிப்பா அப்படித்தான் பண்ணணும்.

**கே: சம்சாரம் தடையில்லையா? சாஸ்திரங்கள் துறவை வலியுறுத்துதே?**

ப: சம்சாரம் நம்மளோட மனசிலேதான் இருக்கு. உலகம் வந்து உங்ககிட்டே சொல்லித்தா 'நான்தான் உலகம்ன்னு'. இல்லேன்னா... அது எப்பவும் இருக்கணும். தூங்கும்போதும் கூட. தூங்கும்போது உலகம் இல்லாததாலே அது அநித்தியம். அநித்தியமா இருக்கறதாலே... அதிலே சாரம் இல்லை. சாரம் இல்லாததாலே... ஆத்மாவாலே சம்ஹாரம் செய்யப்படும். ஆத்மா மட்டுமே நித்தியம்.

துறவுன்னா... அனாத்மாவோட சேராமயிருக்கறதுதான். அஞ்ஞானம் நீங்கினா... துறக்கறதுக்கு எதுவும் இருக்காது. இதுதான் உண்மையான துறவு.

**கே: அப்போ ஏன் நீங்க சின்ன வயசிலேயே வீட்டை விட்டு ஓடி வந்தீங்க?**

ப: அது என் பிராப்தம். ஒவ்வொருத்தரோட வாழ்க்கையும் அவரவர் பிராரப்தத்தை பொறுத்தது. என் பிராப்தம் இப்படி. உங்களோட பிராப்தம் அப்படி.

**கே: அப்போ நான் ஏன் வீட்டை விட்டு ஓடி வரக்கூடாது?**

ப: உங்க பிராப்தம் அப்படின்னா இந்தக் கேள்வியே கேக்க மாட்டேள்.

**கே: அப்போ நான் குடும்பத்துல இருந்தேதான் ஆத்ம சாதனை பண்ணணுமா? சரி, இந்தப் பிறப்பிலேயே எனக்கு ஞானம் ஏற்படுமா?**

ப: இதுக்கு ஏற்கனவே பதில் சொல்லிட்டேன். நீங்க எப்பவுமே ஆத்மாதான். சிரத்தையா செய்யற முயற்சி வீண் போகாது. பலன் நிச்சயம் கிடைக்கும்.

**கே: பகவான் எனக்கும் அருள் புரியணும். செய்வீங்களா?**

ப: ம். ம்.

(252) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: இராமகிருஷ்ணர் விவேகானந்தரைத் தொட்ட உடனேயே அவர் உண்மையை உணர்ந்துட்டார். பரவசநிலையை அடைஞ்சுட்டார். அது முடியுமா?**

ப: இராமகிருஷ்ணர் எல்லாத்தையும் அதுக்காகத் தொடலியே? அவர் என்ன ஆத்மாவைப் புதுசாவா கொண்டு வந்தார்?

விவேகானந்தர் பக்குவமா இருந்தார். முன்பிறப்புகள்லேயே சாதனம் எல்லாம் முடிச்சிருப்பார். பக்குவிகளுக்குதான் அது நிகழும்.

**கே: எல்லாருக்கும் அந்த அதிசயத்தைச் செய்ய முடியாதா?**

ப: அவா பக்குவமா இருந்தா செய்யலாம். பக்குவந்தான் முக்கியம், பலசாலி தீனனை அடக்கிடுவான். அப்படியே பலமான மனசு தீனமான மனசை அடக்கிடும். அதுதான் இந்த விஷயத்துலே நடக்கறது. ஆனா அது தாற்காலிகந்தான். அந்த நிகழ்ச்சிக்கு அப்புறம் விவேகானந்தர் ஏன் சும்மா இருக்கலே. ஏன் அலையறார்? ஏன்னா அது தாற்காலிகந்தான்.

**கே: மனத்தை எப்படி ஹிருதயத்துலே இருத்துறது?**

ப: மனம் வெளிப்படும்போது, தன்னையேதான் பரந்த உலகமா பாக்கறது. வெளிப்படாம இருந்தா... தன்னுடைய ஸ்வபாவ ஸ்திதியிலேயே இருக்கும். அதுக்குப் பெயர்தான் ஹிருதயம். ஹிருதயத்திலே இருக்கறதுன்னா... எந்த சலனமும் இல்லாம இருக்கறது.

ஹிருதயந்தான் உள்ள பொருள்; ஸத்யம். மனம் அதிலே ஏற்படற தோற்றம். இந்தத் தோற்றத்து மேலே விருப்பு வெறுப்பு இல்லாம இருக்கறதுதான் ஹிருதயத்திலே இருக்கறது.

ஆனா மனுஷன்... தன்னை உடம்போட சம்பந்தப் படுத்திக்கறதாலே அவன் உலகத்தைத் தன்னிலே இருந்து அன்னியமா பாக்கறான். இந்தத் தப்பான பார்வை... தன்னை யார்ன்னு மறந்ததாலேயே ஏற்படறது. அதனாலே அவனை தப்பான கருத்தையெல்லாம் விடச்சொல்ல வேண்டியதா இருக்கு. அவனை நீ யார்ன்னு பாருன்னு சொல்ல வேண்டியதா இருக்கு.

என்ன மிஞ்சறதோ அதாகவே எப்பவும் இருன்னு சொல்றோம். அந்த நிலையிலே எந்தப் பேதமும் இல்லே. எந்தக் கேள்வியும் இல்லே.

எல்லா சாஸ்திரங்களும் மனுஷனைத் தன் மூலத்தை நோக்கி திருப்பறதுக்குத்தான் ஏற்பட்டிருக்கு. அவன் புதுசா எதையும் அடையறது இல்லே. தவறான கருத்து நீங்கணும். தேவையில்லாத நினைப்பை விடணும். ஆனா இதைச் செய்யறதுக்குப் பதிலா, எதையாவது வித்தியாசமா நடக்கணும்னு நினைக்கறான். அதிசயம் நிகழ்த்துவேளான்னு கேக்கறான்.

ஏன்னா... ஆனந்தம் எங்கேயிருந்தோ வரப்போறதுன்னு நினைக்கறான். அதுதான் தவறு. பேசாம சும்மா இருந்தாலே ஆனந்தந்தான். ஒரு வேளை சும்மாயிருந்தா ஆனந்தம் வராதுன்னு நினைக்கறாளோ என்னமோ! அஞ்ஞானந்தான் இதுக்குக் காரணம். இதுக்கு ஒரே சாதனை, யாருக்கு இந்தக் கேள்வியெல்லாம் வர்றதுன்னு பாக்கறதுதான்.

**கே: காமத்தை எப்படிக் கட்டுப்படுத்தறது?**

**ப:** உங்ககிட்டே ஏற்படற காமம் யாரோடது? கண்டுபிடிங்கோ! அது தெரிஞ்சா நீங்களும், பாக்கற எல்லாமும் அதுதான்னு தெரியும். அப்போ அங்கே எதையும் கட்டுப்படுத்தறதுக்குத் தேவையில்லை.

**கே: நாம ரொம்ப அன்பு செலுத்துறவங்க இறந்துட்டா ரொம்ப துக்கமாயிருக்கு இதை எப்படி தவிர்க்கறது? யார் மேலயும் அன்பு செலுத்தக் கூடாதா?**

**ப:** யாரோட சாவும் உயிரோட இருக்கறவாளைத்தான் பாதிக்கறது. துக்கம் இல்லாமே இருக்கணும்னா... நாம உயிரோட இருக்கக் கூடாது. செத்துடணும். துக்கப்படறவனைக் கொன்னுடுங்கோ. அப்புறம் துக்கப்பட ஒருத்தனும் இருக்க மாட்டான். இதுதான் ஒரே வழி. வேற வழியில்லே.

எல்லாரும் ஒரே ஆத்மான்னு தெரிஞ்சுடுத்துன்னா... எதை வெறுக்கறது! எதை விரும்பறது!

கே: ரவிமார்க்கம்னா என்ன? சந்திர மார்க்கம்னா என்ன? எது சுலபம்?

ப: ரவிமார்க்கம்ன்னா ஞானம். சந்திர மார்க்கம்ன்னா யோகம். யோகிகள் உடம்பிலே 72,000 நாடியிருக்கறதாகவும் அதையெல்லாம் சுத்தி பண்ணி சுழுமுனை நாடி திறந்து குண்டலினி, சகஸ்ராரத்துக்குப் போனா அமிர்தம் சொட்டும்னு சொல்றா. அதெல்லாம் மனக்கற்பனை. ஏற்கனவே மனுஷன் நொந்து உலகத்திலே குழம்பித் திரியறான். இதிலே இந்த யோகக் குழப்பம் வேறே!

எல்லாம் எதுக்கு? ஒருத்தனை கற்பனைகளை எல்லாம் நீக்கி நினைப்பில்லாமல் சுத்த ஆத்மாவா இருக்க வைக்கறதுக்குத்தானே! நேரே அதுக்குப் போயிட வேண்டியதுதானே! அதை விட்டுட்டு இருக்கறது போறாதுன்னு, எதையாவது புதுப்புது குழப்பங்களை ஏத்திக்கணுமா?

(254) *டங்கன் கிரீன்லீஸ் என்பவர் ஸ்ரீமத் பாகவதத்தில் இருந்து சில ஸ்லோகங்களை சொன்னார்.*

1. ஆத்மாவை சுத்த ஆகாசம் எங்கும் இருப்பதுபோல் உனக்குள்ளயும் எல்லா வஸ்துக்கள் கிட்டேயும் பார்.
2. வெட்கப்படாம ஒரு சண்டாளனையும், பசுவையும், கழுதையையும் ஒண்ணுதான்னு வீழ்ந்து நமஸ்காரம் பண்ணு.
3. நான்கறது சரியா துலங்காத வரைக்கும் எல்லாத்தையும் உடம்பாலயும், மனதாலயும் வணங்கு.
4. சரியான ஞானத்தோட எல்லாத்தையும் பிரம்மமா பார். இது வந்துடுச்சுன்னா எல்லா சந்தேகமும் போயிடும். நீ ஆத்மாவா நிலைச்சுடுவ.

என்னுடைய கேள்வி, ஆத்மஞானமடைய இதுதான் சரியான வழியா? இது எளிமையா இருக்கே! அதாவது எல்லாத்தையும் பிரம்மம்ன்னு பாக்கறது எளிமையா இருக்கு. அதைவிட்டுட்டு நான் யார்ன்னு விசாரம் எதுக்கு?

ப: எல்லாத்திலேயும் கடவுளைப் பாக்கறதுக்கு... நீங்க கடவுளை நினைக்கணுமா இல்லே வேண்டாமா?

கண்டிப்பா நீங்க எல்லாத்திலேயும் கடவுளைப் பாக்கணும்னா.... கடவுள் நினைப்பு மனத்திலே எந்த நேரமும் இருக்கணும்.

கடவுளை எந்த நேரமும் நினைக்கறது தியானமாயிடும். தியானம் ஞானத்துக்கு முந்தினநிலை. ஞானம் உங்ககிட்டேதான் ஏற்படும். அதுக்கு முன்னாடி உங்ககிட்டே தியானம் இருக்கணும். நீங்க கடவுளைத் தியானம் பண்ணினா என்ன? உங்களைத் தியானம் பண்ணினா என்ன? விஷயம் ஒண்ணுதான். முடிவும் ஒண்ணுதான்.

ஆனா உங்களை விட்டு எங்கேயும் போக முடியாது. எல்லாத்திலேயும் கடவுளைப் பாக்க விரும்பற நீங்க உங்ககிட்டே கடவுளை ஏன் பாக்க மாட்டேங்கறேள்?

எல்லோரும் கடவுள்ன்னா, அசிலே நீங்களும் சேத்துத்தானே? நீங்களே கடவுள்ங்கறப்போ... எல்லோரும் கடவுள்ங்கறதிலே என்ன ஆச்சர்யம் இருக்கு! ஆனா இந்தப் அப்பியாசத்திற்குப் பாக்கறவன் ஒருத்தன் இருக்கணும். நினைக்கறவன் ஒருத்தன் இருக்கணும். அவன் யார்?

**கே: சில சமயம் கவிதைகள், இசை, ஜபம், பஜன், அழகான நிலப்பரப்புகள், ஆத்மீகமா வாழ்ந்தவங்க வாழ்க்கைய படிக்கும்போது மனம் தானாகவே ஏகமான உணர்வுக்கு போயிடுது. பகவான் சொல்ற ஹிருதயத்துல ஒடுங்கறதுங்கறது இந்த ஆழ்ந்த அமைதியான நிலைதானா?**

**இதைத் தொடர்ந்து பயிற்சி பண்ணா சமாதி சித்திக்குமா? முழுமையான ஞானம் ஏற்படுமா?**

ப: மனதுக்கு இசைந்த விஷயங்கள்லே ஆனந்தம் இருக்கறது உண்மைதான்.

அது ஆத்மானந்தந்தான். அது புதுசு ஒண்ணும் இல்லை. நீங்க ஆத்மாவிலே சில சந்தர்ப்பங்கள்லே ஒடுங்கறேள். அந்த

ஒடுக்கம் அமைதியையும் ஆனந்தத்தையும் தர்றது. ஆனா அந்த ஆனந்தம் அந்த விஷயங்களோட அனுகூலமான சூழ்நிலையிலேதான் ஏற்படறதுன்னு தவறா நினைக்கறேள். உண்மையிலேயே சுகம் நம்மளோட ஸ்வபாவம். உங்களை அறியாமலேயே நீங்க அந்தச் சந்தர்பங்கள்லே ஆத்மசுகத்தை அனுபவிக்கறேள்.

நல்ல அறிவோட இந்த சுகத்தை அனுபவிச்சா அதுதான் ஞானம். நான் முழு அறிவோட ஹிருதயத்திலே ஒடுங்கறதைத்தான் உங்களுக்குச் சொல்றேன். இப்படி இல்லை.

(255) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: ஆத்மா ஏற்கனவே அடையப்பட்டே இருக்குதுன்னா... சும்மாயிருந்துட வேண்டியதுதானே? முயற்சி எதுக்கு பண்ணணும், சரிதானா?**

ப: எந்த முயற்சியும் பண்ணாம சும்மாயிருக்க முடியும்ன்னா ரொம்ப நல்லது. அப்படியிருக்க முடியலேன்னா, 'சும்மாயிருக்கேன்', 'ஆத்மா ஏற்கெனவே அடையப்பட்டேயிருக்கு'ங்கறதிலே அர்த்தம் இல்லே. மத்தத எல்லாம் முயற்சி பண்ணும்போது ஏன் ஆத்ம விஷயத்திலே முயற்சியை விடணும்?

(257) **திண்டுக்கல்லில் இருந்து வந்த இளைஞன் ஒருவன் கேட்டது.**

**கே: ஆத்ம விசாரணையை எங்கே செய்யணும்? குரு ஸந்நிதியிலேதான் செய்யணுமா?**

ப: 'நான்' எங்கே இருக்கோ அங்கே செய்யணும்.

**கே: மக்கள் புருஷார்த்தத்த அடையறதுக்காக படாதபாடு படறாங்க. அவங்க சரியான வழியில போகலேன்னு**

**நினைக்கறேன். பகவான், அபார தபஸ் பண்ணி மேலான ஸ்திதியை அடைஞ்சிருக்கீங்க. பகவானும் எல்லோரும் அந்த ஸ்திதியை அடையணும்ன்னு விரும்பறீங்க. அதுக்கு உதவறீங்க. உங்களோட அபார தபஸ் எல்லோரையும் முக்திக்கு கூட்டிக்கொண்டு போயிடும். பகவான் பண்ணின மாதிரி எல்லாம் தபஸ் பண்ணத் தேவையில்லை. பகவானாலே எல்லோருடைய பாதையும் சுலபமாயிடுச்சு. சரிதானே?**

ப: (சிரித்துக்கொண்டே) அப்படின்னா எல்லோரும் எளிமையா அடைஞ்சுடுவாளே! அவாவாதான் உழைக்கணும்.

(258) **மைசூரில் இருந்து வந்திருந்த இளைஞன் ஒருவன் ஒரு துண்டுக் காகிதத்தை பகவானிடம் கொடுத்தான். பதிலுக்காகக் காத்திருந்தான்.**

**பகவான் காகிதத்தைத் திருப்பிக் கொடுத்தார்.**

ப: 'எல்லோரும் கேக்கற கேள்விக்கெல்லாம் பதில் சொல்லணும், இல்லேன்னா நான் பெரிய ஆள் இல்லை'.

**மீண்டும் ஒரு துண்டுச் சீட்டு கொடுக்கப்பட்டது. அதில் 'நீங்க அணில் முயல் எல்லாத்துக்கும் கருணையாயிருக்கீங்க. அதைக் கொஞ்சறீங்க. உங்களை விட்டு ஓடிவிடாம பாத்துக்கறீங்க. நான் வீட்டை விட்டு ஓடி வந்து பதினைஞ்சு நாளா இருக்கேன். சிலநாள் சாப்பிட்டது கூடக் கிடையாது. நான் கஷ்டப்படறேன். நீங்க என்னைக் கவனிக்கவே மாட்டேங்கறீங்க.**

ப: இங்கே பாரு... எனக்கு எல்லாத்தையும் தெரிஞ்சுக்கற சக்தி கிடையாது. இறைவன் எனக்கு அதைக் கொடுக்கலே. நான் என்ன செய்ய? எப்படி உன் கேள்விக்குப் பதில் சொல்ல முடியும்? ஜனங்களா என்னை மகரிஷின்னு கூப்பிடறா. அப்படி நடத்தறா. ஆனா நான் என்னை மகரிஷியா பாக்கறது இல்லை. எனக்கு எல்லாரும் மகரிஷிதான். சின்ன வயசுலேயே

இறைவனைத் தேடி வந்திருக்கே. நல்லது. அவனையே பிடிச்சுக்கோ. கடமையைப் பலன் எதிர்பாக்காமே செய்! அதுதான் நீ செய்ய வேண்டியது எல்லாம்.

(262) *டாக்டர் ஸையது கேட்டார்.*

**கே: அவித்தை எப்படி ஏற்படுது?**

ப: அவித்தைன்னா மாயைதான். இல்லாததுதான் அவித்தை, அஞ்ஞானம். இல்லேங்கறப்போ கேள்வியே இல்லை. கேக்கணும்னா இப்படிக் கேக்கலாம். யாருடையது மாயை? யாருக்கு மாயை?

**கே: அவித்தைன்னா என்ன?**

ப: ஆத்மாவை அறியாமை. யார் ஆத்மாவை அறியாமே இருக்கா? ஆத்மாவே ஆத்மாவை அறியலியா? இரண்டு ஆத்மா இருக்கா?

**கே: பகவான் உலகத்தை எப்படிப் பாக்கறீங்க? உங்கள்லே ஒரு பகுதியாகவா?**

ப: ஆத்மா மட்டும்தான் இருக்கு. வேற எதுவும் இல்லை. அறியாமையாலே வேறு வேறாத் தெரியறது. இரண்டு பொருளுக்கு உள்ள சம்பந்தம், மூணு விதமாயிருக்கலாம்.

சஜாதீயம் (ஒரே ஜாதி) — உலகம் ஆத்மா மாதிரி இன்னொரு ஆத்மா; அப்படி இல்லை

விஜாதீயம் (வேற வேற ஜாதி) — உலகம் ஆத்மாவை விட வேறு: அப்படியும் இல்லை.

ஸ்வகதபேதம் (உள்ளடக்கியது) — ஆத்மாவிலே உலகம் ஒரு பகுதி; அப்படியும் இல்லை.

**கே: உலகம் ஆத்மாவுல ஏற்படற பிரதிபலிப்பா?**

ப: பிரதிபலிக்கணும்னா ஒரு பொருள் இருக்கணும். அதை பிம்பிக்கறதுக்கு அதை விட வேறா ஒரு வஸ்து இருக்கணும். ஆத்மாவிலே இந்தப் பேதமெல்லாம் இல்லை.

**கே: பகவான் உலகத்தைப் பாப்பீங்களா.... மாட்டீங்களா?**

ப: பகவான்னு எதைச் சொல்றேள்?

**கே: என்னை விட உயர்ந்த ஆத்மா.**

ப: உங்களோட ஆத்மாவை உணர்ந்தா எல்லா ஆத்மாவையும் உணர்ந்த மாதிரி.

**கே: நான் இதைப்பத்தி அறிவுபூர்வமா தெரிஞ்சுக்கறதுக்காக வரலை. உண்மையிலையே அனுபவமா ஆத்மான்னா என்னன்னு தெரியணும். அதுக்கு உபதேசம் வேண்டியே வந்தேன்.**

ப: தெரிஞ்சுக்கணும்ன்னுதானே வந்தேள்... அப்போ பேசித்தான் ஆகணும். எல்லாத்தையும் விட்டுடுங்கோ! உங்க தூக்கத்தை எடுத்துக்கோங்க, தூங்கும்போது பந்தப்பட்டிருக்கறதா ஏதாவது நினைப்பு இருக்கா?

அப்போ முக்தியடையணும்னு நீங்க நினைக்கறேளா? அப்போ உடம்பு இருந்ததா? பந்தம்கறது உடம்பு சம்பந்தத்தோடயேதான் ஏற்படறது. உடம்பு இல்லேன்னா பந்தம் இல்லையே! எதிலே யாரை பந்தப்படுத்தறது! அப்போ... இதெல்லாம் உங்களுடைய விழிப்பு நிலையிலேயேதான் ஏற்படறது. யாருக்கு இந்த பந்த சிந்தனை வந்ததுன்னு பாருங்கோ!

**கே: என் மனசுக்குத்தான்.**

ப: மனம்னா என்னன்னு பாருங்கோ!
அதிலே இருந்து நீங்க வேறே. நீங்க மனசு இல்லே.
இப்போ இருக்கே.... அதுதான் ஆத்மா

**கே: பகவான் பரிணாமக் கொள்கையை ஒத்துக்கறீங்களா?**

ப: பரிணாமம்னா.... ஏதோ ஒண்ணு வேற ஏதோவா ஆகணுமே! பேதமே இல்லைங்கறப்போ எங்கே பரிணாமம்!

**கே: அப்போ ஏன் கிருஷ்ணர் சொல்றார், 'பல பிறவிகளுக்கு பிறகு சாதகன் ஞானம் பெற்று என்னைத் தெரிந்து கொள்கிறான்'. அப்போ பரிணாமம் இருக்குதே.**

ப: கீதை எப்படி ஆரம்பிக்கறது "நீயும் இல்லை. நானும் இல்லை. யாரும் இல்லை'. 'எதுவும் பிறக்கலே. எதுவும் இறக்கலே. அப்போ உண்மையிலேயே இங்கே பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை. நீ பாக்கற எதுவும் இல்லை. உள்ள பொருள் உள்ளபடியே இருக்கு. நான் இதை முதல்லே ஆதித்யனுக்கு சொன்னேன்"கறார்.

அதுக்கு அர்ஜுனன் கேக்கறான்: 'நீ ஆதித்யனுக்கு முன்னாடி எப்படி இருந்துருக்க முடியும்?' அப்போ கிருஷ்ணர் அர்ஜுனன் தன்னை உடம்பாத்தான் பாக்கறான்னு புரிஞ்சுகொண்டு அவன் பக்குவத்துக்கு ஏத்த மாதிரி பேச ஆரம்பிக்கறார். நீங்க சொல்றது அந்தப் பக்குவத்திலே இருக்கறவாளிடம் சொல்றது. உண்மையிலேயே இங்கே பந்தமே இல்லை; யாரும் பந்தப்படலே, யாரும் முக்தி அடையலே. ஒரு ஞானிக்கு, தானும்... இங்கு முக்தியடையலே... யாரும் இது வரைக்கும் அடையவும் இல்லேன்னு தெரியும்.

**கே: அப்போ எல்லோரும் முக்தியடைஞ்சுதான் இருக்கோமா?**

ப: எல்லோருங்கறதே பொய். அப்புறம் எங்கே முக்தியடையறது. பந்தம்னு ஒண்ணு உண்மையிலேயே இருந்தாத்தான் முக்தின்னு ஒண்ணு உண்மை. பந்தம்னு ஒண்ணு இல்லேன்னா முக்தியும் இல்லை. முழுப்பொய்.

**கே: ஆனா ஜன்ம ஜன்மாந்திரங்களை கடக்கறதுக்கு பல வருஷமா அப்பியாசம் பண்ணணும்ல!**

ப: அப்பியாசம் எல்லாம், எப்பவும் இருக்கற அமைதியைக் கெடுக்கற, தடைகளை நீக்கறதுக்குத்தான். அதுக்குப் பல வருஷம் எல்லாம் தேவையில்லே. இப்போவே இங்கேயே ஒரேடியாத் தடுத்துடலாம். நீங்க எப்பவும்... அப்பியாசம் பண்ணினாலும் பண்ணலேன்னாலும் உங்களுடைய ஸ்வபாவமான நிலையிலேதான் இருக்கேள். இதுவே ஸத்யம்.

*அப்போது வேறு ஒருவர்*

**கே: அப்படின்னா ஏன் எல்லோரும் ஞானியாக மாட்டேங்கறாங்க?**

ப: அதே கேள்வியை நீங்க வேற வடிவத்திலே கேக்கறேள்! ஏன் இந்தக் கேள்வி வர்றது. நான் சொல்றதைக் கேட்டுட்டு அடங்கிட வேண்டியதுதானே. இப்படி அப்பியாசத்தைப் பத்திக் கேள்வி எழறதாலே... அதே உங்களுக்கு அப்பியாசம் வேணும்னு காட்டறது. நீங்க அப்பியாசம் பண்ணுங்கோ.

எந்தக் கேள்வியும் சந்தேகமும் இல்லாம அடங்கியிருக்கறதுதான்... நம்மளோட யதார்த்த நிலை.

இறைவன் மனுஷனைப் படைச்சான்

மனுஷன் இறைவனைப் படைச்சான்

இறைவனும் மனுஷனும் நாம ரூபத்தோற்றத்தோட சமாச்சாரம்தான். உண்மையிலேயே இறைவனும் சரி, மனுஷனும் சரி, யாரும் படைக்கப்படலே.



(265) *அந்த லக்னோ பெண்மணி மீண்டும் வந்திருந்தார். அவர் கேட்டார்.*

**கே: என் மனசு இறைவனுக்காக ஏங்குது. இந்த ஏக்கம் எனக்கு நிறைய வேணும். ஞானம் கூட தேவையில்லை. என்னுடைய ஏக்கம் உறுதி பெறட்டும்.**

ப: ஏக்கம் இருந்தா... வேண்டாம்னாலும் ஞானம் திணிக்கப்படும். சுபேச்சைதான் ஞானத்துக்கு முதல்படி.

**கே: உங்க அருள் ஒண்ணே போதும்.**

ப: நீங்க இங்கே திரும்பத் திரும்ப வர்றதே அருளுக்கு அடையாளம். எல்லாத்தையும் ஒரு சக்தி நடத்தறது. அதாலேயே எப்போதும் நடத்தப்படறது!

**கே: அது எனக்கு தெரியல. அதை தெரிய வைங்க.**

ப: அதுக்குத் தெரியும் என்ன செய்யணும், எப்படிச் செய்யணும்னு. அதை நம்புங்கோ.



(266) டாக்டர் சையத் கேட்டார்.

கே: ஆசையைத் துறக்கணும்னு சொல்றாங்களே உடம்போட தேவைகள் இருக்கே! அதை அடக்க முடியறது இல்லையே? என்ன செய்யறது?

ப: சாதகனுக்கு மூணு குணம் இருக்கணும்னு சொல்றா.

1. இச்சை: உடலோட தேவையை, உடல் அபிமானமில்லாம நிறைவேத்தறது. இது இல்லேன்னா தியானம் முன்னேறாது.

2. பக்தி
3. சிரத்தை

(2, 3) இரண்டும் ஏற்கெனவே தெரிஞ்சது தான்.

கே: இரண்டு விதமான ஆசையிருக்கு கீழானது மேலானதுன்னு. கீழானதை மேலானதா மாத்த வேண்டியது நம்ம கடமையில்லையா?

ப: ஆமாம்.

கே: நீங்க சொன்னீங்க, சாதகனுக்கு மூணு குணம் இருக்கணும்னு... அதுல ஒண்ணு இச்சை, அதாவது இயற்கையா ஏற்படற உடல் தேவையை உடம்போட அபிமானம் இல்லாம நிறைவேத்திக்கறதுன்னு. நான் ஒரு நாளைக்கு மூணு அல்லது நாலு வேளை சாப்பிடுவேன். உடல் தேவைக்காக ரொம்பப் பிரியப்பட்டு இருக்கேன். எனக்கு உடம்பு மேல வெறுப்பா இருக்கு. இதுல இருந்து எல்லாம் விடுபடற மாதிரியான ஒரு நிலை இருக்கா?

ப: விருப்பு வெறுப்புதான் கூடாது. செய்கை தப்பு இல்லை. ஒரு நாளைக்கு மூணு அல்லது நாலு வேளை சாப்பிடலாம். ஆனா இந்த சாப்பாடுதான் வேணும், இது வேணாம்கறதுதான் கூடாது.

விழிப்பு நிலையிலேதான் உடல் தேவையை அனுபவிக்கறேள். ஆனா தூங்கும்போது எதையும் அனுபவிக்கலையே!

அது உங்களை முக்தனா ஆக்கிடுத்தா? ஏதோ ஒண்ணைச் செய்யறதனாலேயோ......செய்யாம இருக்கறதனாலேயோ.... முக்திங்கறது தவறு.

**கே: சதேக முக்தன், விதேக முக்தன்கறாங்களே அப்படின்னா என்ன?**

ப: முக்தியே இல்லை... எங்கே முக்தன் வந்தான்!

**கே: ஹிந்து சாஸ்திரங்கள் முக்தியை சொல்லுதே?**

ப: ஆத்மாவுக்கு இன்னொரு பெயர்தான் முக்தி. ஜீவன் முக்தி, விதேக முக்தி எல்லாம் விவரம் தெரியாதவாளிடம் சொல்றது. உண்மை தெரிஞ்சவா முக்தியையோ பந்தத்தையோ ஒத்துக்கறது இல்லை. பந்தம், முக்தி, ஜீவன் முக்தி, விதேக முக்தி இதெல்லாம் அஞ்ஞானிகளுக்குத்தான். அறியாமை நீங்கறதுக்காக சொல்றா. இங்கே இருக்கறது முக்தி மட்டும்தான். வேற எதுவும் இல்லை.

**கே: பகவானுக்கு இதெல்லாம் சரி. எங்களுக்கு பொருந்துமா?**

ப: நீ வேற; நான் வேறங்கறதுதான் ஞானத்துக்குத் தடை.

**கே: ஆனாலும் பகவானோட ஸ்திதி எங்கே! எங்களோட நிலை எங்கே! பகவான் என்னைத் தன்னோட ஐக்கியப்படுத்திப்பாரா?**

ப: தூங்கும்போது இந்தப் பேதமெல்லாம் இருக்கா!

**கே: அந்த நிலையை இப்போ கொண்டு வந்து பேசக் கூடாது. அந்த நிலையிலே இப்போ நான் இல்லையே!**

ப: தேவையில்லே. மூணு நிலைமையும் மாறாத 'நான்' மேலே தோன்றி மறையறது. தூக்கத்திலே எப்படி இருந்தோம்னு நினைச்சுப் பார்த்தாலே போதும். அதுதான் நம்மளோட உண்மையான நிலை. அப்போ எந்த பந்தமும் இல்லை. அளவுக்குட்பட்டும் இல்லை. 'நான்'ன்னு ஒண்ணு வந்த பிறகு எல்லாம் வந்துடறது.

**கே: ஆத்மாவை அடையறது எப்படி?**

ப: ஆத்மாவை அடைய முடியாது. ஏன்னா அது நீங்களே.

**கே: ஆமாம். மாறிக்கிட்டே இருக்கற நான்னு ஒண்ணு இருக்கு. மாறாம இருக்கற நான்னு ஒண்ணும் என்கிட்டே இருக்கு. இரண்டு நான் இருக்கு.**

ப: மாறிக்கிட்டே இருக்கற நான்ன்னு ஒண்ணைச் சொல்றேள்... அது வெறும் நினைப்புதான். இருப்பு இல்லை. அது வந்ததுக்கு அப்புறந்தான் மத்த நினைப்பெல்லாம் வர்றது.

யாருக்கு நினைப்பெல்லாம் வர்றதுன்னு பாருங்கோ!

பாத்தா... அந்த மாறிக் கொண்டேயிருக்கற நான்கறதக் கடந்துடுவேள். அது அடங்கிடும். இதுதான் 'நான்கறது எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ'ன்னு சொல்றதுக்கு அர்த்தம்.

சுத்த அஹம் ஸ்புரணமா நிப்போம்.

சாமான்ய 'நான்'கறதுதான் ஆத்மா.

**கே: அஹம் பிரம்மாஸ்மின்னு தியானம் பண்ணலாமா?**

ப: அந்த மஹா வாக்கியம் தியானம் பண்றதுக்காக இல்லை.

அஹம் எல்லோருக்கும் அனுபவம்.

பிரம்மம் இந்த அஹமாத்தான் எல்லோரிடத்தும் இருக்கு.

இந்த அஹம் எதுன்னு பாருங்கோ! அஹம் ஏற்கனவே பிரம்மாஸ்மிதான்! நாம அதைத் தியானம் பண்ண வேண்டியது இல்லை.

அஹம்ன்னா என்னன்னு பாருங்கோ!

**கே: பஞ்ச கோசங்களை எல்லாம் விலக்கணும்ன்னு சாஸ்திரங்களை சொல்றாங்களே?**

ப: நான்ன்னு ஒண்ணு எழுந்த உடனேதான்... உடம்பு, மனம், புத்தி இவற்றோட ஒரு பொய்யான சம்பந்தம் ஏற்படறது.

போலியான நான் இதைப் பிடிச்சுக்கொண்ட உடனே... உண்மையிலேயே இருக்கற 'நான்' மறைபட்ட மாதிரி தெரியறது.

போலி நான்லே இருந்து விடுபட்டு, எப்பவும் இருக்கற 'நான்'தான்... நான்கற அறிவு ஏற்படறதுக்காக, பஞ்ச கோச விலக்கம் சொல்றா.

ஆனா உண்மையிலேயே ஏதோ பஞ்ச கோசத்தையெல்லாம் விலக்கறது இல்லை.

நாம யாருன்னு விசாரிக்கறதுதான் பஞ்சகோச விலக்கம்.

எப்பவும் இருக்கற 'நான்' பூரணம்; சாஸ்வதம், ஆரம்பம் முடிவற்றது; தோன்றி மறையாது. போலி நான் தோன்றி மறையும், அநித்தியம், சத் இல்லாதது.

மாறி, மாறி நினைவுகள் வருதே, இது யாருக்குன்னு பாருங்கோ! ஒரு நான்கற ஆசாமிக்குத்தான் வரும். அதைப் பிடிச்சுக்கோங்கோ. நினைவுகள் எல்லாம் அடங்கிடும். இப்போ இந்த நான் எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ! ஆத்மாவே மிஞ்சும்.

**கே: செய்யறது கஷ்டம். பாடம் தியரியா புரியுது. அப்பியாசம்தான் எப்படிப் பண்றது?**

ப: ஆத்ம விசாரத்துக்கு முடியலேன்னா மத்த வழிகள் இருக்கு. அஹம் பிரம்மாஸ்மின்னு சொல்றதுக்கோ, தியானம் பண்றதுக்கோ ஒருத்தன் இருக்கணுமே... யார் அது? அதுதான் நான். அந்த நான்கறதா இருங்கோ. இதுதான் நேர்வழி. பிற வழிகளும் கடைசியிலே இதுக்குத்தான் வரும்.

**கே: நான்கறதை நல்லா உணர முடியுது. ஆனா என் துக்கம் தீர மாட்டேங்குதே?**

ப: நான்கறது அவ்வளவு சுத்தமாயில்லை. உடம்பு மனச் சேர்க்கையாலே மலினப்பட்டுக்கிடக்கறது. யாருக்குத் துக்கம்ன்னு பாருங்கோ! நான்கற நினைப்புக்குத்தான். அதைப் பிடிச்சுக்கோங்கோ! எல்லா நினைப்பும் போயிடும்.

**கே: சரி அதை எப்படி செய்யறது? அதுதான் என் பிரச்சனையே!**

ப: 'நான்' 'நான்' ன்னு நினைச்சுக்கொண்டே இருங்கோ. வேற எந்த சிந்தனைக்கும் இடம் கொடுக்காதேள்! அது போதும்.

(268) டாக்டர் ஸையது மறுநாள் கேட்டார்.

**கே: விடுதலைன்னா என்ன? இயேசு விடுதலைன்னு எதைச் சொல்றார்?**

ப: யாரிடமிருந்து விடுதலை?
யாருக்கு விடுதலை?

**கே: உலகத்தோட துயரம் துன்பங்கள்ல இருந்து எனக்குதான் விடுதலை.**

ப: யாருடைய துயரம்?

**கே: மனசோடது.**

ப: நீங்க மனசா?
நீங்க ஏன் விடுதலையை விரும்பறேள்?
துக்க நிவிருத்தி ஏன் கேக்கறேள்?
எவன் இதையெல்லாம் கேக்கறானோ அவனே அதையும் பாத்துக்கட்டும், அவனைக் கண்டுக்காதேள்!

**கே: 'நான் யார்?'ங்கற நூல்ல ஸ்வரூப திருஷ்டின்னு சொல்றீங்களே, இருக்கறது ஏகம்ன்னா ஸ்வரூப திருஷ்டின்னா பாக்கறவன் பாக்கப்படும் பொருள்னு இரண்டு வந்துருமே? அது எப்படி பொருந்தும்?**

ப: திருஷ்டிதான் திருஷ்டா, பாக்கறவன் இல்லாமே பார்வை இருக்குமா?
ஆத்மாவேதான் பாக்கறவன், பார்வை எல்லாம்.

**கே: போலி நான்ல இருந்து உண்மையான நான்கறதை எப்படி பிரிச்சு அறியறது?**

ப: தோன்றி மறையறது போலி.
தோன்றாம, மறையாம, எப்பவும் மாறாம, மூணு நிலைமைலேயும் தொடர்ந்து இருக்கறதுதான் உண்மை.

**கே: எப்பவும் ஆத்மாவைப் பத்திய சிந்தனையிலையே இருந்தா மனம் மேலும் மேலும் தூய்மையாகி ஆத்மாவை தவிர வேற எதையும் சிந்திக்காதா?**

ப: இருக்கறது ஆத்மா மட்டும்தான். அதுவே ஸ்பந்தனத்தால் மனமாறது. மனம்கறது ஆத்மாவோட அதிசய சக்தி.

**கே: பஞ்சகோசம் எல்லாம் ஜடம்தானே! ஆத்மாவுல இருந்து வேறதான!**

ப: ஜடம் சித்துன்னுல்லாம் வேற வேற இல்லே. இப்போ சயின்டிஸ்டு எல்லாம் ஜடம் சித்துதான்கறா. எல்லாம் சிவசக்தியிலே அடங்கிடும். ஆத்மாவேதான் மனம்ன்னு சொல்லலாம். பஞ்ச கோசம் தோற்றம்தான். இருப்பு இல்லை.

**கே: ஒரு நாளைக்கு எவ்வளவு நேரம் தியானம் பண்ணனும்?**

ப: உங்களோட இயல்பே தியானம்தானே.

**கே: பக்குவப்படும்போது அப்படி. இப்போ இல்லைல்ல!**

ப: பக்குவப்படும்போது தெரிஞ்சுப்பேள். அதுக்காக இப்போ உங்களோட ஸ்வபாவம் வேறேயாகாது.

**கே: தியானம் பண்ண வேண்டாமா?**

ப: தியானம் எந்த நேரமும் பண்ணனும்.

**கே: பாரசீக சூஃபி ஞானி ஒருத்தர் சொல்றார் 'இறைவனைத் தவிர இங்கே ஒண்ணும் இல்லை'.**

**குரான் 'இறைவன் எல்லாத்திலேயும் நிறைஞ்சு இருக்கார்'ன்னு சொல்றது.**

**எது உண்மை?**

ப: கடவுளை விட்டுத் தனியா அவர் நிறைஞ்சு இருக்கறதுக்கு எல்லாம்ன்னு ஒண்ணும் இல்லே. அவர் மட்டுந்தான் இருக்கார்.

**கே: ஆத்ம சிந்தனையே உண்மையான கடமைன்னு புரிஞ்சா, ஒரு மனிதன் தன்னுடைய குடும்பக் கடமைகளை துறந்துர்றது நியாயந்தானே?**

ப: துறவு எண்ணம் பெரிய தடை.
ஏற்கனவே நீங்க துறவியாத்தான் இருக்கேள்!

(268) டாக்டர் ஸையது மறுநாள் கேட்டார்.

**கே: விடுதலைன்னா என்ன? இயேசு விடுதலைன்னு எதைச் சொல்றார்?**

ப: யாரிடமிருந்து விடுதலை?
யாருக்கு விடுதலை?

**கே: உலகத்தோட துயரம் துன்பங்கள்ல இருந்து எனக்குதான் விடுதலை.**

ப: யாருடைய துயரம்?

**கே: மனசோடது.**

ப: நீங்க மனசா?
நீங்க ஏன் விடுதலையை விரும்பறேள்?
துக்க நிவிருத்தி ஏன் கேக்கறேள்?
எவன் இதையெல்லாம் கேக்கறானோ அவனே அதையும் பாத்துக்கட்டும், அவனைக் கண்டுக்காதேள்!

**கே: 'நான் யார்?'ங்கற நூல்ல ஸ்வரூப திருஷ்டின்னு சொல்றீங்களே, இருக்கறது ஏகம்ன்னா ஸ்வரூப திருஷ்டின்னா பாக்கறவன் பாக்கப்படும் பொருள்னு இரண்டு வந்துருமே? அது எப்படி பொருந்தும்?**

ப: திருஷ்டிதான் திருஷ்டா, பாக்கறவன் இல்லாமே பார்வை இருக்குமா?
ஆத்மாவேதான் பாக்கறவன், பார்வை எல்லாம்.

**கே: போலி நான்ல இருந்து உண்மையான நான்கறதை எப்படி பிரிச்சு அறியறது?**

ப: தோன்றி மறையறது போலி.
தோன்றாம, மறையாம, எப்பவும் மாறாம, மூணு நிலைமைலேயும் தொடர்ந்து இருக்கறதுதான் உண்மை.

**கே: எப்பவும் ஆத்மாவைப் பத்திய சிந்தனையிலையே இருந்தா மனம் மேலும் மேலும் தூய்மையாகி ஆத்மாவை தவிர வேற எதையும் சிந்திக்காதா?**

ப: இருக்கறது ஆத்மா மட்டும்தான். அதுவே ஸ்பந்தனத்தால் மனமாறது. மனம்கறது ஆத்மாவோட அதிசய சக்தி.

**கே: பஞ்சகோசம் எல்லாம் ஜடம்தானே! ஆத்மாவுல இருந்து வேறதான!**

ப: ஜடம் சித்துன்னுல்லாம் வேற வேற இல்லே. இப்போ சயின்டிஸ்டு எல்லாம் ஜடம் சித்துதான்கறா. எல்லாம் சிவசக்தியிலே அடங்கிடும். ஆத்மாவேதான் மனம்ன்னு சொல்லலாம். பஞ்ச கோசம் தோற்றம்தான். இருப்பு இல்லை.

**கே: ஒரு நாளைக்கு எவ்வளவு நேரம் தியானம் பண்ணணும்?**

ப: உங்களோட இயல்பே தியானம்தானே.

**கே: பக்குவப்படும்போது அப்படி. இப்போ இல்லைல்ல!**

ப: பக்குவப்படும்போது தெரிஞ்சுப்பேள். அதுக்காக இப்போ உங்களோட ஸ்வபாவம் வேறேயாகாது.

**கே: தியானம் பண்ண வேண்டாமா?**

ப: தியானம் எந்த நேரமும் பண்ணணும்.

**கே: பாரசீக சூஃபி ஞானி ஒருத்தர் சொல்றார் 'இறைவனைத் தவிர இங்கே ஒண்ணும் இல்லை'.**

**குரான் 'இறைவன் எல்லாத்திலேயும் நிறைஞ்சு இருக்கார்'ன்னு சொல்றது.**

**எது உண்மை?**

ப: கடவுளை விட்டுத் தனியா அவர் நிறைஞ்சு இருக்கறதுக்கு எல்லாம்ன்னு ஒண்ணும் இல்லே. அவர் மட்டுந்தான் இருக்கார்.

**கே: ஆத்ம சிந்தனையே உண்மையான கடமைன்னு புரிஞ்சா, ஒரு மனிதன் தன்னுடைய குடும்பக் கடமைகளை துறந்துர்றது நியாயந்தானே?**

ப: துறவு எண்ணம் பெரிய தடை.
ஏற்கனவே நீங்க துறவியாத்தான் இருக்கேள்!

அதைத் தெரிஞ்சுக்கோங்கோ!

ஆத்மா எல்லாத்தையும் துறந்துதான் இருக்கு.

**கே: பகவானுக்கு இது சரி. ஆனா எனக்கு என்வேலை என்னுடைய நேரத்தையும் கவனத்தையும் முழுசா வாங்கிடுது. ரொம்ப சோர்வாயிடறேன். ஆத்ம விசாரணை பண்ண முடியலை.**

ப: 'நான் வேலை பாக்கறேன்'கற நினைப்புதான் தடை.

யார் வேலை பாக்கறது? விசாரிங்கோ!

நீங்க யார்? அடிக்கடி ஞாபகப்படுத்திக்கோங்க!

வேலைதடையாயிருக்காது. அது பாட்டுக்கு அது நடக்கட்டும். வேலையைச் செய்யவோ விட்டுடவோ முயற்சி பண்ணாதேள்! உங்களோட முயற்சிதான் தடை, விதிச்சது நடக்கும்.

வேலை விதிக்கலேன்னா... எவ்வளவு தேடினாலும் கிடைக்காது. வேலை விதிச்சுருந்துதுன்னா... அதை விட்டுட்டு ஓட முடியாது. உங்களை வேலை வாங்கும். அதெல்லாம் ஈஸ்வர நியதி. ஒப்படைச்சுடணும். துறவோ குடும்பமோ நம்மளோட இஷ்டத்திலே இல்லை. பரமேசுவர சித்தம்.

வேலையைப் பாக்கறதுதான் ஆத்மாவைப் பாக்கறது.

**கே: எங்கும் நிறைந்த இறைவன் தகராகாசத்திலே வசிக்கறார்ன்னு சொல்றது சரியா?**

ப: நீங்க ஒரு இடத்திலே இல்லையா!

நீங்க உடம்பிலே இருக்கேன்னு சொல்றேள்!

அந்த மாதிரிதான் இறைவன் ஹிருத்புண்டரீகத்திலே இருக்கறதா சொல்றா. ஹிருதயம்கறது ஒரு இடம் இல்லை. நம்மள உடம்பிலே இருக்கோம்ன்னு சொல்றதாலே இறைவனை அங்கே குறிக்கறா. எங்கும் நிறைந்த பரம்பொருளை ஒரு இடத்திலே குறிக்க முடியாது. நம்மள நாம பிறந்ததாகவும், இந்த உடம்பிலேதான் நாமயிருக்கறதாகவும் நினைக்கறோம். தூங்கும்போது இது எதுவும் இல்லை. ஆனா விழிப்பு நிலையிலே உடம்பைப் பிடிச்சுக்கறோம். அதிலேதான் நாம இருக்கோம்கறோம்.

உண்மையிலேயே பரம்பொருளில் இருந்தே இந்த உடம்பு வர்றது. அதிலேயேதான் உடம்பு வாழறது. அதிலேயே அடங்கிடறது. ஆனா நாம... உடம்பிலே உயிர் வாழறதா நினைக்கறதாலே பரம்பொருளை உடம்பிலேயே குறிக்க வேண்டியதா இருக்கு. உண்மையிலேயே பரம்பொருள் ஹிருதயத்திலே இருக்குன்னு சொல்றதுக்கு அர்த்தம்... வெளியே தேடாதே; உள்ளே பாருங்கறதுதான்.

(271) ***டாக்டர் ஸையது கேட்டார்.***

**கே: அருளை எப்படிப் பெறுவது?**

ப: ஆத்மாவை எப்படிப் பெற்றோமோ அப்படித்தான்.

**கே: எங்க பக்குவத்துல சொல்லுங்க!**

ப: ஆத்ம சமர்ப்பணத்தாலே.... சரணடையறதாலே.

**கே: அருள்ங்கறது ஆத்மாவேதான்னா நான் எனக்கே சரணடையணுமா?**

ப: ஆமா. அருள் எங்கிருந்து வருதோ அந்த இடத்துக்கு. கடவுள், குரு, ஆத்மா எல்லாம் ஒரே பொருளே... வேறு வேறு வடிவம்.

**கே: இதைக் கொஞ்சம் விளக்கமா சொல்லுங்களேன் நல்லா புரிஞ்சுக்குவேன்.**

ப: நீங்க உங்களை ஒரு தனித்தன்மையோட உள்ள ஆள்ன்னு நினைக்கற வரைக்கும், தலைவன் இருப்பான்... அதாவது இறைவனை ஒப்பித்தான் ஆகணும். இந்தப் பக்குவத்திலே நீங்க இறைவனை வழிபடுவேள். அப்போ தக்க பக்குவத்திலே இறைவனே குருவா வருவார். குருவுக்கு அடிமை பூணும்போது... குரு ஆத்மாவா ஒளிர்வார். இதுதான் கிரமம்.

(272) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: உலகெங்கும் பஞ்சம், பேரழிவுன்னு இருக்கே இதுக்கு என்ன காரணம்?**

ப: இதெல்லாம் யாருக்குத் தோணறது?

**கே: இதெல்லாம் ஒத்துவராது. நான் கண்ணால என்னைச் சுத்தி துயரம் துன்பத்தைப் பாக்கறேன்.**

ப: உலகமும் அதோட துயரமும் தூங்கும்போது என்ன ஆச்சு? விழிப்பிலேதான் உலகம் இருக்கு. தூங்கும்போது எப்படி இருந்தேளோ... அப்படியே இருங்கோ! அதாவது உலகத்தைப் பாக்காம இருந்தப்போ அது பாதிக்கலேல்லியா... இப்பவும் பாக்காதேள்! தூங்கும்போது இருந்த மாதிரி உள்ளே பாருங்கோ! ஆத்மாவைப் பாருங்கோ! உலகமும் துயரமும் முடிவுக்கு வந்துடும்.

**கே: அது சுயநலம்.**

ப: உலகம்ன்னு ஒண்ணு வெளியே உண்மையிலேயே இல்லை. உலகம்கறது உங்களுக்கு ஏற்படற ஒரு நிலை. நீங்க உங்களை உடம்போட சம்பந்தப் படுத்திக்கறதாலே... உலகம் உங்களுக்கு வெளியே இருக்கறதாத் தெரியறது. அதோட துயரம் தாக்கறது. ஆனா அது உண்மையில்லே. உண்மையை உணருங்கோ! பொய்யிலே மயங்காதேள்!

**கே: எவ்வளவோ பெரியவங்க சமூகசேவகர்கள் யாராலயும் உலகத்தோட பிரச்சனையை தீர்க்க முடியலையே?**

ப: அகந்தை வசப்பட்டு உலகத்தை ஒண்ணும் செஞ்சுட முடியாது.

(273) *டாக்டர் சையத் கேட்டார்.*

**கே: நீங்க எழுதிய ஸ்துதி பஞ்சகம் படிச்சேன். அதிலே நீங்க அருணாசலத்தைப் பாடியிருக்கீங்க. நீங்க ஒரு அத்வைதி.**

**எப்படி கடவுள்ன்னு ஒருத்தரைத் தனியா வச்சு பாட முடிஞ்சது?**

ப: பக்தன், கடவுள், ஸ்துதி எல்லாம் ஆத்மாதான்.

**கே: இல்லை... நீங்க இந்த மலையைக் கடவுள்ன்னு பாடியிருக்கீங்களே!**

ப: நீங்க ஆத்மாவை உடம்போடு சம்பந்தப் படுத்திக்கும் போது... நான் ஆத்மாவை இந்த மலையோட சம்பந்தப்படுத்தக் கூடாதா?

**கே: மத்த மலையெல்லாம் விட்டுட்டு இந்த மலையை ஏன் சம்பந்தப்படுத்தறீங்க? இறைவன் எல்லா இடத்துலேயும்தானே இருக்கார்! ஏன் இந்த மலையைத் துதிக்கிறீங்க?**

ப: அலஹாபாத்திலேயிருந்து இந்த இடத்துக்கு எது உங்களை இழுத்தது?

இங்கே இருக்கற எல்லாத்தையும் எது இழுத்தது?

இந்த மலைதான்.

**கே: இல்லை. பகவான்தான் இழுத்தது.**

ப: சரி. பகவானை இங்கே இழுத்தது எது? அருணாசலம்தான். அதோட சக்தியை யாரும் மறுக்க முடியாது. உண்மையிலேயே இந்த மலை உள் வெளியற்றது. ஆத்மாவேதான். பிரம்ம சொரூபம் இந்த மலை.

(273) *டாக்டர் ஸையது கேட்டார்.*

**கே: ஹிருதயத்தை தியானம் பண்ணணும்னா மார்போட வலப்பக்கம் கவனம் இருக்கணுமா?**

ப: இல்லை. ஹிருதயம் ஸ்தூலமா மார்புலேல்லாம் இல்லை. இடது வலதும் இல்லை. தியானம் நாம இருக்கோம்கறதிலே பண்ணணும். 'நான் இருக்கேன்'கறது எல்லாருக்கும் அனுபவம்.

அது உள்ளே, வெளியே, இடது, வலது எதிலேயும் இல்லை. 'நான் இருக்கேன்'கறதாதான் இருக்கு. நீங்க பாக்கற உடம்பு உலகம் எல்லாத்துக்கும் ஒரு ஆதாரம் இருக்கு. அதாவது ஒரு மையம். எதிலே இருந்து இதெல்லாம் வந்ததோ, எதிலே இருந்து இதெல்லாம் இயங்கறதோ, எதிலே இதெல்லாம் நிக்கறதோ, அந்த மையத்தைத்தான் ஹிருதயம்ன்னு சொல்றோம்.

மையம்ன்னு சொன்னாலும், ஹிருதயத்திலே நின்னா... ஹிருதயம்கறது மையமும் இல்லே, ஓரமும் இல்லேன்னு தெரியும். எதுக்கு அது மையம்?

**கே: ஆத்மாவையும் அனாத்மாவையும் ஒரு பொருளும் அதோட நிழலுமா எடுத்துக்கலாமா?**

**ப:** நிழலை மட்டுமே பாத்து, அதைப் பொருள்ன்னு நினைச்சு, அதோட நிழலையும் பாக்கறவாளுக்குத்தான் பொருளும் அதோட நிழலும்ங்கறது பொருந்தும். ஆனா உண்மையை உணர்ந்தவாளுக்குப் பொருளும் இல்லை; நிழலும் இல்லை.

(276) ஒரு உத்திரப்பிரதேச பெண்மணி கேட்டார்.

**கே: இறந்தவங்களோட நிலையைப் பத்தி தெரிஞ்சுக்கலாமா?**

**ப:** சிலர் உடனேயே பிறந்திடுவா, மத்தவா சில காலம் கழிச்சுப் பிறப்பா. ஒரு சிலர் பூலோகத்திலே பிறக்காம மேல் உலகத்திலேயே இருந்து முக்தியடைவா. யாரோ வெகுசிலர் இங்கேயே இப்போவே முக்தி அடைஞ்சுடுவா.

**கே: நான் அதை கேக்கலை. குறிப்பிட்ட ஒருத்தரோட நிலையை இறந்த பிறகு தெரிஞ்சுக்க முடியுமா?**

**ப:** ம்... முடியும். அதைத் தெரிஞ்சுகொண்டு என்ன பண்ணப் போறோம்? எல்லாம் நம்மளோட உண்மை எந்த அளவுக்கோ அந்த அளவுக்குத்தான்.

**கே: ஒருத்தரோட பிறப்பு வளர்ந்தது இறந்தது எல்லாம் எங்களுக்கு உண்மையா இருக்கே!**

ப: ஏன்னா... உங்களை உடம்போட சம்பந்தப்படுத்திக்கறேள். மத்தவாளையும் உங்களை மாதிரியே பிறந்து வளர்ந்துருக்கான்னு பாக்கறேள். நீங்களும் மத்தவாளும் உண்மையிலேயே உடம்பு கிடையாது.

**கே: என்னுடைய பக்குவத்துக்கு என்னையும் என் பையனையும் உண்மையாத்தான் பாக்கறேன்.**

ப: நான்கற எண்ணம்தான் பிறக்கறது. அதுதான் பிறப்பு, அதோட சாவுதான் ஒருத்தரோட சாவு.

நான்கற எண்ணம் வந்தவுடனேயே உடம்பைப் பிடிச்சுக்கும். நான் இந்த உடம்புதான்னு நீங்க நினைச்சு... மத்தவாளுக்கும் அதே பொய்யான அந்தஸ்தைக் கொடுக்கறேள்.

நீங்க உங்களை உடம்புதான்னு நம்பி... அது யாரோ ஒருத்தருக்குப் பிறந்ததாகவும், அது வருஷகாலமா வளர்ந்து வந்ததாகவும், ஒரு கற்பனை சட்டுனு பிடிச்சுக்கும். அதே அந்தஸ்தை மத்த உடம்புகளுக்கும் கொடுக்கும். நீங்கன்னு கருதற உடம்பும் மத்த உடம்புகளும் ஏககாலத்திலே தோன்றி ஏக காலத்திலே மறைஞ்சுடும்.

சரி... வேற மாதிரி இதைச் சொல்றேன். உங்க பையன் பிறக்கறதுக்கு முன்னாடி அவனை நினைச்சேளா? அவன் நினைப்பு அவன் பிறந்த பிறகுதான் வந்தது. அவன் இறந்த பிறகும் தொடர்றது. அவனைப் பத்திய நினைப்பு இருக்கற வரைக்கும் அவன் இருக்கான். எங்கேயும் போகலே. அப்படியே போய்ட்டான்னா... எங்கே போய்ட்டான்? எங்கிருந்து வந்தானோ அங்கேயேதான் போயிருக்கான்.

நீங்க உங்களை உடம்போட சம்பந்தப் படுத்திக்காமே யார்ன்னு பாருங்கோ. ஆத்மாவே மிஞ்சும். இந்தக் குழப்பம் எல்லாம் போயிடும். நீங்க எப்பவும் சாஸ்வதமா உள்ள பொருள். இங்கே எல்லோரும் எப்பவும் உள்ள பொருள்தான்.

இந்த உண்மையை உணர்ற வரைக்கும் துக்கம் இருக்கும். ஏன்னா... தவறான அபிப்பிராயத்தாலே தவறான பார்வையிருக்கு.

**கே: பகவான் அருளாலே எனக்கு ஞானம் ஏற்படட்டும்.**

**ப:** நான்கற எண்ணத்தை எப்படியாவது போக்குங்கோ. நான்கற எண்ணம் இருக்கற வரைக்கும் துக்கந்தான்.

நான்கறது செத்துடுத்துன்னா... எந்தத் துன்பமும் இல்லே. தூக்கத்திலே எப்படி இருந்தோம்ன்னு யோசிச்சுப் பாருங்கோ.

**கே: நான்கற எண்ணத்தில நிக்க முடியலே! மத்த நினைப்பு வந்து தொந்தரவு பண்ணுது.**

**ப:** மத்த நினைப்பு வர்றப்போ யாரோட நினைப்புன்னு பாருங்கோ. மத்த நினைப்பு போயிடும். எல்லா நினைப்பும் நான்கற ஒத்த நினைப்புலேதான் நிக்கறது. அதைப் பிடிங்கோ. எல்லாம் மறைஞ்சுடும்.



(277) *எஸ்.எஸ். கோஹன் கேட்டார்.*

**கே: இச்சா சுதந்திரம் (Freewill) அப்படின்னா என்ன? அது பஞ்ச கோசத்துல எதுல இருக்கு?**

**ப:** நான்கற எண்ணம்தான் முதல்லே வர்றது. அப்புறம் மத்த எல்லா நினைப்பும்... இது எல்லாம் சேத்துத்தான் மனம். நான்கறதுதான் தன்னிலை. மனம் முன்னிலைதான். நான்கறது இல்லாமே இச்சை ஏற்படுமா?

நான்கறதிலேயே எல்லாம் அடங்கிடும்
நான்கற எண்ணம்தான் விஞ்ஞான மயகோசம்
இச்சை அதுக்குள்ளேயே அடங்கிடும்.
அன்னமய ஸ்தூலதேகம்----------அன்னமயகோசம்
பிராணனும் கர்மேந்திரியமும்---------- பிராணமயகோசம்
மனமும் ஞானேந்திரியமும் ---------மனோமய கோசம்

அஹம் (I) தன்னிலை (நான்) } விஞ்ஞான மயகோசம்
இதம் (This) முன்னிலை (உலகம்)

மனம்ங்கறது அஹத்தைத் தன்னிலையாவும் இதத்தை முன்னிலையாவும் வச்சுக்கொண்டு தோணற எண்ணங்கள்தான்.

(278) *மிஸ் உமாதேவி, போலந்து பெண்மணி கேட்டார்.*

**கே: கைலாசத்தைத் தரிசிக்க ஆசையாயிருக்கு.**

ப: பிராப்தம் இருந்தா கைலாசத்தைத் தரிசிக்கலாம். இல்லேன்னா முடியாது. எல்லாத்தையும் பாத்ததுக்கு அப்புறம் வேற ஏதோ ஒண்ணு இருக்கும் பாக்கணும்னு. இந்த உலகத்திலே இல்லேன்னா... வேற உலகத்திலே.

எப்பவும் அறிவு அறியாமையோட சேந்தே இருக்கும். அறிவு வரையுற்றதுதான்.

அப்பர், மிகவும் தளர்ந்த வயோதிகத்திலே, கைலாச யாத்திரை கிளம்பினார். அப்போ இறைவன், இன்னொரு வயசானவரா தோன்றி, "கைலாசம் போறது எல்லாம் ரொம்பக் கஷ்டம், பேசாமே ஊருக்குப் போங்கோ..." அப்படின்னார். ஆனா அப்பர், பிடிவாதமா போயே தீருவேன், 'இடரினும் தளரினும் எனதுரு நோய் தொடரினும்'ன்னு செத்தாலும் போயே தீருவேன்னார். அப்போ அந்தப் பெரியவர் பக்கத்திலே இருந்த குளத்திலே மூழ்கி எழுந்துக்கச் சொன்னார். அப்பரும் அப்படியே செஞ்சார். பாத்தா அவர் கைலாசத்திலே இருக்கார்!

இதெல்லாம் எங்கே நடந்தது! திருவாரூர்லே, தஞ்சாவூர்லே இருந்து ஒன்பது மைல் தூரத்துலேயே! அப்போ கைலாசம் எங்கே இருக்கு? நம்மளோட மனசுலேயா! இல்லே வெளியேயா! உண்மையிலேயே திருவாரூர்தான் கைலாசம்னா... எல்லாருக்கும் அப்படித் தெரியணுமில்லையா! ஆனா அப்பர்க்குதான்

தெரிஞ்சது. அவாளுக்கு அது உண்மை. எல்லாம் உள்ளேதான் இருக்கு. வெளியே எதுவும் இல்லே.

(279) *தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: இறந்த உடனேயே மறுபடியும் பிறந்திடுவோமா? இல்லே, சில காலம் ஆகுமா? எவ்வளவு காலம் ஆகும்?**

**ப:** பிறக்கறதுக்கு முன்னாடி எப்படி இருந்தோம்ன்னு தெரியாது. ஆனா இறந்தபிறகு என்ன ஆவோம்ன்னு ஆலோசனை பண்றோம். இப்போ என்னவா இருக்கோம்ன்னு தெரியுமா? பிறப்பு இறப்பு, உடம்புக்குத்தானே! உங்களை ஏன் உடம்போட சம்பந்தப்படுத்திக்கறேள்? அது தப்பான சம்பந்தம். நீங்க உடம்புதான், அது பிறந்திருக்கு, வளர்றது, இறக்கறதுன்னு கற்பிதம் பண்ணிக்கறேள்! ஆத்மாவோட இயல்பை அனாத்மா மேலே ஏத்திக்கறேள். உங்களைத் தெரிஞ்சுக்கோங்கோ! இந்தக் கேள்வி இருக்காது.

மறுபிறப்புங்கற கதை ஏன் சொல்றான்னா நீங்க பிறந்திருக்கேளான்னு விசாரம் உங்களிடம் வர்றதுக்காகத்தான். இங்கே பிறப்பே இல்லேங்கறா மறுபிறப்பாம்!

(280) *தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: மாயையிலேயிருந்து விடுபட நீங்க அருளணும்.**

**ப:** மாயைன்னா என்ன?

**கே: உலகப் பற்று.**

**ப:** உலகம் தூங்கும்போது இருந்ததா? அப்போ உலகப்பற்று என்ன ஆச்சு?

**கே: இல்லே.**

**ப:** தூங்கும்போது நீங்க இருந்தேள் இல்லையா...

**கே: தெரியல.**

ப: தூங்கும்போது நீங்க இருக்கறதை மறுக்கறேளா!

**கே: இல்லே மறுக்கலே.**

ப: அப்போ இருந்த அதே ஆள்தானே இப்பவும் இருக்கறது!

**கே: ஆமாம்!**

ப: இப்போ எது மாயை பத்தி கேள்வி கேக்கறது?

**கே: தூங்கும்போது மனம் இல்லே. உலகமும் உலகப் பற்றும் மனசுக்குத்தான்.**

ப: சரியாச் சொன்னேள்! உலகமும் உலகப்பற்றும் மனசுக்குத்தான். ஆத்மாவுக்கு இல்லே.

**கே: தூக்கத்துல அறியாமையில இருந்தேன்.**

ப: அறியாமையிலே இருந்தேன்னு சொல்றது யார்?
இப்போ அறியாமைலே இல்லையா?
அப்போ அவன் ஞானியா?

**கே: அப்போ தூக்கத்துல நான் பரிசுத்தமான இருப்பா இருந்தேனா?**

ப: தூங்கும்போது இருந்த 'நான்' அல்லது அந்த நிலை எந்தச் சந்தேகமும் கேக்கலியே? அது குறை உணர்ச்சி படலே. அசுத்தமாயிருந்தேன்னு குறைபடலியே!

**கே: அப்படிப்பட்ட இருப்பு எல்லாத்துலேயும்தான் இருக்கு. பிணத்திலே கூட இருக்கு!**

ப: தூங்கறவனோ, பிணமோ, கேள்வி கேக்க மாட்டேங்கறதே! யார் கேள்வி கேக்கறதுன்னு பார்? நீங்கதான். நீங்க தூங்கும்போது இல்லையா?

அங்கே எந்தக் குறையும் இல்லையே. பரிசுத்தமான ஆத்மான்னா... சாதாரண இருப்புதான். எந்தப் பொருளோடேயும் அது சேரலே; எதையும் அறியலே; விழிப்பிலேயே அது

அறியறது. இப்போ நீங்க எதை அறிவுங்கறேளோ, அது ஆபாஸம்தான். உபாதி எல்லாம் இருந்தாத்தான் ஆபாஸம் இருக்கும். தூங்கும்போது இருக்கற அறிவோ... உபாதி கலப்பில்லாதது. பரிபூரண அறிவு.

**கே: தூங்கும்போது எனக்கு பிரக்ஞை தெரியலே.**

ப: யார் தெரியலேங்கறது?

இப்போ நீங்க இருக்கேள்...ங்கறதை ஒத்துக்கறேள் இல்லையா!

தூங்கும்போதும்... இதே நீங்கதானே இருந்தேள்! அதையும் ஒத்துக்கறேள்!

இப்போ நீங்க இருக்கேளோல்யோ... அதுதான் அப்போ அந்தப் பிரக்ஞை; ஆத்மா; தூங்கும்போது இருந்தது.

**கே: அப்போ தூக்கம் ஆத்மானுபவம்ன்னு சொல்றீங்களா?**

ப: அதுதான் ஆத்மா. ஏன் அதை அனுபவமாக்கறேள்?

ஆத்மா அனுபவமாகாத ஒரு கணம் இருக்கா? அப்படி ஒரு கணமாவது இருந்ததுன்னா... மத்த நேரத்தை ஆத்மாவை அனுபவிச்சோம்... ஆத்மானுபவம்ன்னு சொல்லலாம்.

ஆத்மா இல்லாத ஒரு கணமும் இல்லை. உண்மை இப்படி இருக்கும்போது ஏன் தூக்கத்தை மட்டும் ஆத்மானுபவம்ன்னு சொல்றேள்? இப்போவே நீங்க ஆத்மானுபவத்துலேதான் இருக்கேள்.

**கே: எனக்குப் புரியலை.**

ப: ஏன்னா... ஆத்மாவை உடம்போடு சேத்துக் குழப்பிக்கறேள். அந்தத் தவறான சம்பந்தம் போயிடுத்துன்னா... ஆத்மா இப்போவே உணரப்பட்டதா ஆயிடும்.

**கே: மாயையிலேயிருந்து எப்படி விடுபடறதுங்கற கேள்விக்குப் பதில் சொல்லலையே?**

ப: பற்று தூங்கும்போது இல்லை. இப்போதான் எல்லாப் பற்றும் இருக்கு. பற்றோட இருக்கறது உங்களுடைய

உண்மையான ஸ்வபாவம் இல்லே. அப்போ யாரு பற்றோட இருக்கான்னு பாருங்கோ!

யாரைப் பற்றறது?

உண்மையான சொரூபம் தெரிஞ்சா பற்று இருக்காது. ஆத்மாவை உணர்ந்தா அனாத்மா இருக்காது. அதுதான் மாயை நீங்கறது. மத்தபடி மாயை உண்மையிலேயே இல்லை... அதிலே இருந்து விடுபடறதுக்கு.

(281) ***பகவானோட பிரதம சிஷ்யன்னு தன்னை சொல்லிக் கொண்டு, ஆசிரம உரிமை கோரி ஒருத்தர் வழக்குத் தொடுத்தார். அதற்காக ஒரு கமிஷன், ஆசிரமத்துக்கு வந்து பகவானை விசாரித்தது. அவை:***

**கே: பகவான் எந்த ஆசிரமத்தை சேர்ந்தவர்?**

ப: அதியாஸ்ரமம்.

**கே: அது என்ன?**

ப: நான்கு ஆஸ்ரமத்தையும் கடந்தது.

**கே: சாஸ்திர சம்மதமானதா?**

ப: ஆமாம், சாஸ்திரங்கள்லே இருக்கு.

**கே: உங்களை மாதிரி யாராவது இருக்காங்களா?**

ப: இருக்கலாம்.

**கே: இதுக்கு முன்னாடி இருந்திருக்காங்களா?**

ப: சுகப்பரம்மம், ரிஷபதேவர், ஜடபரதர் இன்னும் சிலர்.

**கே: சின்ன வயசுலேயே வீட்டை விட்டுட்டு வந்துட்டீங்க. உங்களுக்கு வீட்டுலேயோ சொத்திலேயோ எந்தப் பற்றும் இல்லை. ஆனா ஆசிரமத்துலே சொத்து இருக்கே, எப்படி?**

ப: நான் தேடலே! சொத்து திணிக்கப்பட்டது! அதிலே விருப்புமில்லே! வெறுப்பும் இல்லே!

**கே: உங்களுக்குத்தானே கொடுத்தாங்க?**

ப: சுவாமிக்குக் கொடுத்தா! அவர் யார்ன்னு தெரியலே! ஆனா இந்த உடம்பைத்தான் உலகத்திலே சுவாமிங்கறா! இதுதான் அந்த உடம்பு! இந்த உடம்பு நான்கறதா முடிஞ்சுடறது!

**கே: அப்போ சொத்துரிமை பற்று திரும்ப வந்தாச்சா!**

ப: நான் வெறுக்கலே! - ஏற்கனவே சொன்னேனே!

**கே: உலகவழக்குலே அதை நான் சொல்ற மாதிரித்தான் பாப்பாங்க!**

ப: ஆமா! உலகத்திலேதானே இயங்கறோம்!

**கே: உபதேசம் கொடுப்பீங்களா? எப்போதாவது கொடுத்துருக்கீங்களா?**

ப: வர்றவா கேள்வி கேப்பா! எனக்குத் தெரிஞ்சதைச் சொல்லுவேன்! ஏத்துக்கறது அவாளோட இஷ்டம்!

**கே: அது உபதேசமா?**

ப: அவா எப்படி எடுத்துக்கறான்னு நான் எப்படிச் சொல்ல முடியும்!

**கே: உங்களுக்கு சிஷ்யர்கள் உண்டா?**

ப: நான் சாஸ்திரோக்தமா உபதேசம் கொடுக்கறது இல்லை. கும்பம் வச்சோ, பூஜை பண்ணியோ, காதிலே ஏதும் சொல்றது இல்லை! யார் வேணாலும் என்னுடைய சிஷ்யாள்னோ... அடியார்கள்னோ... சொல்லிக்கலாம். நான் யாரையும் என் சிஷ்யான்னு பாக்கறதும் இல்லே. நான் யார்கிட்டேயும் உபதேசம் வாங்கினதும் இல்லே, கொடுத்ததும் இல்லே. யாராவது என்னுடைய சிஷ்யர்ன்னு சொல்லிக்கொண்டா அதை அங்கீகரிக்கறதும் இல்லை. மறுக்கறதும் இல்லை. என் பார்வையிலே எல்லோரும் ஒண்ணுதான். என்னுடைய சிஷ்யான்னு சொல்லிக்கற தகுதியிலே இருக்கறதா நினைக்கறா.

அவாளுக்கு நான் என்ன சொல்றது? என்னை நான், யாருக்கும் சிஷ்யன்னு சொல்லிக்கறது இல்லை. குருன்னும் சொல்லிக்கறது இல்லை.

**கே: கோவிலுக்கு சொந்தமான மலைமேல அதிகாரிகள் உத்தரவு இல்லாம ஸ்கந்தாஸ்ரமம் கட்ட எப்படி ஒத்துக்கிட்டீங்க?**

ப: எந்த சக்தி என்னை இங்கே கூட்டிக்கொண்டு வந்து மலைமேலே இருக்க வெச்சதோ அதோட உத்தரவிலேதான்!

**கே: உங்ககிட்டே இருந்த பணத்தை இங்கே வந்த ஒரு மணிநேரத்திலேயே தூக்கி எறிஞ்சுட்டீங்க, ஏன்னா பொருள் வேண்டாம்ன்னு. நீங்க பணத்தைத் தொடறதுகூட கிடையாது. உங்க பொருள்ன்னு இங்கே வந்ததுலே இருந்து பல வருஷங்களுக்கு உங்ககிட்டே ஒண்ணும் இல்லை. இப்போ எப்படி நன்கொடைகள் ஆசிரமத்துலே வாங்கறாங்க?**

ப: இந்தப் பழக்கம், பிற்காலத்திலே என் கூட இருந்த சிலர், என் பேரைச் சொல்லி பணம் வசூல் பண்ணினா. அதை நான் ஒத்துக்கலே... தடுக்கவும் இல்லே. அது இப்போ வரைக்கும் நடந்துகொண்டு வர்றது. ஒரு ஆள் போனா அடுத்த ஆள் வந்துடறா. பழக்கம் தொடர்ந்துகொண்டே இருக்கு. எனக்கு உண்மையிலேயே நன்கொடைகள் வாங்கறது சம்மதம் இல்லை. ஆனா என் சொல்லை யாரும் கேக்கறது இல்லை. எனக்கும் கேக்காதப்போ அறிவுரை சொல்றதுக்கு இஷ்டமில்லே. அதனாலே அதைத் தடுக்கறதும் இல்லை. பணம் வரும்போது சொத்தும் சேந்து வளர்றது.

**கே: ஏன் நீங்க கையெழுத்து போட மாட்டேங்கறீங்க?**

ப: இந்தக் கேள்விக்கு Self Realisation புத்தகம் எழுதியவர் பதிலைச் சொல்லியிருக்கார். எந்தப் பெயர்லே என்னைக் கூப்பிடறது? அறியறது? எனக்குத் தெரியாது. இங்கே வந்ததுலே இருந்து ஜனங்க பல பேர் கொடுத்திருக்கா

என்னிடம் கையெழுத்து கேக்கறவாகிட்டே என் பெயரைச் சொல்லுங்கோன்னு கேட்டிருக்கேன். அதை உண்மைன்னு அவா நம்பறது இல்லை.

**கே: நீங்க பணத்தையோ, காணிக்கைகளையோ கையாலே தொடுவதில்லைன்னு நான் நம்புறேன்!**

ப: சில சமயம் பழங்களைக் கையிலே கொடுப்பா, அதைத் தொடுவேன்.

**கே: ஒரு விதமான காணிக்கையை ஏத்துக்கும்போது... ஏன் பணத்தையும் ஏத்துக்கக் கூடாது?**

ப: பணத்தை என்னாலே சாப்பிட முடியாதே! அதை வச்சுக்கொண்டு நான் என்ன செய்யறது? அதை வச்சு என்ன செய்யறதுன்னே தெரியாதபோது அதை ஏன் வாங்கணும்?

**கே: ஏன் ஆசிரமத்துக்கு ஆட்கள் வர்றாங்க?**

ப: அதை அவாகிட்டேதான் கேக்கணும்!

**கே: இங்கே யாராவது வரதிலேயோ, தங்கறதிலேயோ உங்களுக்கு ஆட்சேபணை ஏதும் உண்டா?**

ப: இல்லை!

**கே: எவ்வளவு நாள் தங்கியிருந்தாலும் ஆட்சேபணை இல்லையா?**

ப: இல்லே! எனக்குச் சம்மதமில்லேன்னா நான் வெளியே போயிடுவேன். அவ்வளவுதான்!

(282) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: தாந்திரீக சாதனை ஆத்ம ஞானத்துலே சேர்க்குமா?**

ப: ஆமாம்.

**கே: எந்தத் தந்திரம் சிறந்தது?**

ப: அது அவரவர் பக்குவத்தைப் பொறுத்து.

**கே: ஆத்ம ஞானமடைய சமாதி சித்திக்கணுமா?**

ப: இரண்டும் ஒண்ணுதான்.

**கே: குரு சிஷ்யனைத் தன் சக்தியாலேயே ஆத்மஞானமடைய வைப்பார்ன்னு சொல்றாங்களே! அது உண்மையா?**

ப: ஆமாம், குரு புதுசா ஆத்மானுபவத்தைக் கொண்டு வர்றதில்லே. தடைகளை நீக்கறார். ஆத்மா எப்பவுமே அடையப் பட்டே இருக்கு.

**கே: ஆத்ம ஞானமடைய கண்டிப்பா குரு அவசியம் வேணுமா?**

ப: ஆத்ம ஞானம் வேணும்னா குரு அவசியம். ஏன்னா... குருதான் ஆத்மா.

குருவை உண்மையான 'நான்'ன்னு வச்சுக்கோங்கோ. உங்களைப் போலி 'நான்'ன்னு வச்சுக்கோங்கோ. நீங்க வேற குரு வேறங்கற இந்தப் பேதம் நீங்கற வரைக்கும் குரு அவசியம். நீங்க உங்களை உடம்பாக் கருதறதாலே... குருவையும் உடம்பாத்தான் பாப்பேள்! உண்மையிலேயே நீங்களும் உடம்பில்லே; குருவும் உடம்பில்லே. நீங்க ஆத்மாவேதான். குருவும் ஆத்மாவேதான். இந்த அறிவு ஏற்படறதுதான் ஆத்ம ஞானம்.

**கே: ஒருத்தர் உண்மையான குருதான்னு எப்படி தெரிஞ்சுக்கறது?**

ப: அவரோட ஸந்நிதியிலே ஏற்படற மன நிம்மதியாலும், அவர் மேல ஏற்படற மரியாதையாலும் தெரிஞ்சுக்கலாம்.

**கே: போலியை அசல்ன்னு நம்பின சிஷ்யனோட தலையெழுத்து என்ன?**

ப: அவரவர் பூர்வ புண்ணியத்தைப் பொறுத்தது.

(283) **தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: கெட்ட சகவாசத்துலே இருந்து விடுபடறது எப்படி?**

ப: நல்ல சகவாசத்தாலே.

**ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்**
**நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்**
**நிர்மோஹத்வே நிஸ்சல தத்வம்**
**நிஸ்சலதத்வே ஜீவன் முக்தி**

ஸத்சங்கம்னா... 'ஸத்'தோட சேர்றது. ஆத்மாதான் ஒரே ஸத். ஆத்மான்னா... என்னன்னு தெரியலேன்னா... ஆத்மாவை நல்லா உணர்ந்த சாதுவோட சேரணும். அதுதான் ஸத்சங்கம், கூட்டம் போட்டு பேசறது இல்லை. சாது உறவாலே உண்முகம் ஏற்படும். ஸத் வெளிப்படும்.

**கே: ஒரு சன்யாசி சம்சாரத்துக்கு நடுவுல இருக்கலாமா?**

ப: ஒருத்தன் தன்னை சன்யாசின்னு நினைக்கற வரைக்கும் அவன் சன்யாசி இல்லை. ஒருத்தன் சம்சாரத்தை நினைக்காத வரைக்கும், சம்சாரி இல்லை. அதுக்குப் பதிலா அவன்தான் உண்மையான சன்யாசி.

(284) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: பகவத் கீதையில, ஆத்மாவை சுத்தமான புத்தியாலும் குரு சேவையாலும் குருவினிடத்து கேள்வி கேட்பதாலும் சொல்லப்பட்டுருக்கே; அதை எப்படி உணரணும்னு எடுத்துக்கறது?**

ப: 'ஈஸ்வரோ குருரத்மேதி'.

ஈஸ்வரன், குரு, ஆத்மா எல்லாம் ஒண்ணுதான். உங்ககிட்டே பேதம் இருக்கற வரைக்கும் நீங்க குருவை எங்கேயோ இருக்கார்ன்னு தேடுவேள். பக்குவமான காலத்திலே குரு தோன்றுவார். உண்மையை உபதேசிப்பார். உங்களுக்கு உண்மை பிடிபடும்.

(285) தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.

**கே: ஆத்மா எப்பவும் இருக்குன்னா... எனக்கு இப்போ ஏன் தெரியலை?**

ப: இரண்டு இல்லை. இருக்கற அறிவு, தெரிஞ்சுக்கற அறிவுன்னு இரண்டு கிடையாது. இப்போ உன்னோட அறிவு அகந்தையோடது... போலி அறிவு. போலி அறிவிலேதான் அறிவான் அறிபடு பொருள் எல்லாம் இருக்கும். உண்மையான அறிவு எதையும் அறியத் தேவையில்லே. அதுக்கு அறியறதுக்கு ஒண்ணும் இல்லே. அப்படியேதான் நினைக்கறதுக்கும், நினைக்கறவன் நினைக்கப்படு பொருள்ன்னு இரண்டு இருக்கணும். இருக்கறது ஒண்ணுதான்னா... எதை, யார் நினைக்கறது?

**கே: சாகும்போது அகந்தை என்ன ஆகும்?**

ப: நான்கற எண்ணம்தான் அகந்தை. சூட்சுமமா அது விருத்தி வடிவிலே இருக்கும். ஸ்தூலமா உபாதிகளை அதாவது மனம், புத்தி, சித்தம், உடம்புகளைப் பிடிச்சுக்கும். உபாதிகள்... அகந்தையோட சேர்ந்து ஆத்மாவிலே ஒடுங்கிடும். ஆனாலும் ஆத்மா அப்படியேதான் இருக்கும். சாகும்போதும் இப்படித்தான் நடக்கும்.

அகந்தைங்கறது... ஆத்மாவை விட்டுட்டு ஏதோ தனியிருப்புடைய வஸ்து இல்லை. அதை உருவாக்கவும் முடியாது; அழிக்கவும் முடியாது.

அது ஆத்மாவோட கருவியா செயல்படும், அப்புறம் செயல்படாது. மறுபடியும் செயல்படும். இப்படி அனாதியா நடக்கும். அதைத்தான் அது தோன்றுகிறது மறையறதுன்னு சொல்றோம். அதுதான் ஜனன, மரணம் (பிறப்பு, இறப்பு).

போலி அறிவு மனசுக்குத்தான். ஆத்மாவுக்கு இல்லை. அது ஒரு பொய் தோற்றம்தான். நித்தியம் இல்லை. ஒரு விஞ்ஞானியை எடுத்துக்கோங்கோ.... ரொம்பக் கஷ்டப்பட்டு ஆராய்ச்சி பண்ணி பூமி உருண்டைங்கறான். மறுக்க முடியாதபடி

நிரூபிக்கறான். அவன் தூங்கும்போது பூமி என்ன **ஆச்சு?** மொத்தமும் போச்சு. காணோம். அவன் அறிவு **மொத்தமும்,** தூங்கும்போது இல்லை. இந்தப் போலி அறிவோட **சங்கதி** இதுதான்.

இந்தப் போலி அறிவைத் தாண்டி அதுக்கு ஆதாரமா இருக்கற உண்மையிலே நிலைபெறணும். அதுதான் உண்மையான அறிவு. அதை மனம் கிரஹிக்காது.

**கே: பகவான் ஏன் இந்த உண்மையை எல்லோருக்கும் போய் உபதேசிக்கக் கூடாது?**

ப: நான் செய்யலேன்னு உனக்கு எப்படித் தெரியும்? உபதேசம் பண்றதுன்னா மேடை போட்டு பிரசங்கம் பண்றதா?

உபதேசம்னா...எளிமையா உண்மையை உணர்த்தறது. அதை மௌனத்தாலேயே பண்ணலாம்.

ஒருத்தனுக்கு ஒரு மணிநேரம் உபன்யாசம் கேட்டதிலே வாழ்க்கையிலே எந்த மாற்றமும் இல்லை. இன்னொருத்தன் சில மணித்துளி அமைதியா மௌனத்துக்கு முன்னாடி உக்காந்ததிலே வாழ்க்கையைப் பத்தின பார்வையே மாறிடுத்து. எது விசேஷம்? தொண்டத்தண்ணி வத்தக் கத்தறதா? இல்லே, மௌனமா அதைச் சொல்றதா?

சரி... பேச்சு எப்படி வர்றது? பூரண அறிவிலே இருந்து அகந்தை வர்றது. அகந்தையிலே இருந்து எண்ணம் வர்றது. எண்ணம் பேச்சாறது. அப்போ பேச்சு மூலத்தோட கொள்ளுப் பேரன். கொள்ளுப் பேரனுக்கே ரொம்ப பலம்னா... மூல மௌனத்தோட உபதேச சக்தியை எடை போட முடியாது.

**கே: ஏன் ரொம்ப நேரம் தூக்கத்துலே இருக்க முடியலை. நினைச்ச நேரமெல்லாம் அந்த நிலைக்கு நம்ம இஷ்டத்துலே ஏன் போக முடியலே?**

ப: தூக்கம் இப்பவும் தொடர்ந்து இருக்கு.

எப்பவும் நாம அந்த நிலையிலேயேதான் இருக்கோம். அதை விழிப்பிலே முழு அறிவோட உணரணும். ஏதோ நாம

தூக்கத்துக்குப் போறதும் இல்லை. அதிலே இருந்து வர்றதுதும் இல்லை. அதுதான் எப்பவும் இருக்குன்னு தெரியறதுக்குப் பெயர்தான் சமாதி.

அஞ்ஞானியாலே ரொம்ப நேரம் தூக்கத்திலே இருக்க முடியாது. ஏன்னா... அவனோட மனம் அதாவது அகந்தை நாசமாகலே. அது திரும்பவும் வந்துடும். ஒரு ஞானி அதை மூலத்திலேயே நாசம் பண்ணிட்டான். ஞானிக்கும் மனம் திரும்பவும் பிராப்தத்தாலே வந்துடும். அதாவது ஞானி அஞ்ஞானி இரண்டு பேருக்கும் வெளியே வந்துடும்.... ஒரு வித்தியாசத்தோட.

அஞ்ஞானிக்கு மூலத்திலே இருந்து மனம் வெளியே வந்தாலும்... மூலம் தெரியாது, அல்லது தூக்கநிலை... விழிப்பிலேயும் சொப்பனத்திலேயும் பிடிபடாது. ஆனா ஞானிக்கு அவன் மனம் வெளிவரும்போது மூலத்தையே அது லட்சியமாகவும், அதீதப்பட்டு நிக்கும். அந்த மனம் ஸம்ஸ்காரங்கள் அற்றது. எரிஞ்ச கயிறு மாதிரி. நாம யார்ன்னு மூலத்திலேயே லக்ஷியம் வச்சா... மனம் அதிலே கரைஞ்சு உரு இழந்துடும். உப்பு பொம்மை சமுத்திரத்திலே கரையற மாதிரி.

**கே: இராமகிருஷ்ணர் இருபத்தியோரு நாளைக்கு மேல தொடர்ந்து நிர்விகல்ப சமாதியிலே இருக்க முடியாது, இருந்தா, செத்துடுவோம்னு சொல்றாரே! அப்படியா?**

**ப:** பிராப்தம் முடிஞ்சா மனம் மூலத்துக்குப் போயிடும். திரும்ப வராது. அதுதான் முடிவு. விதேக முக்தி. ஒருவேளை பிராப்தம் இருந்தா... மனம் மூலத்திலே இருந்து சுத்த வடிவத்திலே வந்துடும். ஜீவன் முக்தர்கள் இப்படித்தான்.

**கே: எப்படி ஞானம் அடையறது?**

**ப:** நெருப்பிலே இருந்து, ஒரு நெருப்புப்பொறி எப்படி வெளியே வர்றதோ... அப்படி ஆத்மாவிலே இருந்து அகந்தை வெளியே வர்றது. அஞ்ஞானிகிட்டே அது ஒரு உருவத்தைப் பிடிச்சுக்கும். பிடி இல்லாமே அதாலே இருக்க முடியாது.

உருவத்தைப் பிடிச்சுக்கறதுக்குப் பேர்தான் அஞ்ஞானம். அதைப் போக்கறதுக்குத்தான் நம்மளோட முயற்சியெல்லாம். உருவத்தைப் பிடிக்க விடாமே வச்சிருந்தா மூலத்தைப் பிடிச்சுக்கும். அதிலேயே கரைஞ்சுடும். அதுதான் ஞானம். 'உடம்புதான் நான்'கற நினைப்புதான் தேகாத்ம புத்தின்னு சொல்றது. அது போகணும். இதெல்லாம் அப்புறம்தான் நடக்கும்.

**கே: தேகாத்ம புத்தியை எப்படி போக்கிக்கறது?**

**ப:** தூங்கும்போது உடம்பு, மனசு இல்லாம இருக்கோம். மத்த இரண்டு நிலையிலேயும் உடம்பும் மனசும் இருக்கு. நாம உடம்புதான்னா... எப்படித் தூங்கும்போது இருக்க முடியறது? நாம இல்லாததிலே இருந்துதான் எப்பவுமே நம்மளப் பிரிச்சுக்க முடியும். நம்மள்லே இருந்தே நம்மளப் பிரிக்க முடியாது. அப்போ... நாம உடம்பு கிடையாதுன்னு தூக்க நிலையிலே இருந்து தெரியறது. இதை விழிப்பு நிலையிலே உணரணும். மூணு நிலையைப் பத்தி நல்லா தெரிஞ்சுக்கறது இதுக்குத்தான்.

நம்மளோட உண்மையான ஸ்வபாவத்தை, இரண்டு நிலைகளுக்கு இடையிலே... இரண்டு நினைப்புக்கு இடையிலே நல்லாத் தெரிஞ்சுக்கலாம். அகந்தை எதையும் பிடிக்காதப்போ... நம்மளோட ஸ்வபாவம் நல்லாத் தெரியும். இந்த இடைவெளியிலே நிக்கணும். இதைத்தான் தியானம், சமாதி, அது, இதுன்னு சொல்றா. இப்படி மூணு நிலையைப் பத்தி நல்லா விசாரிச்சு தெளிஞ்சு அந்த இடைவெளியிலே நின்னு பழகணும். பழக்கம் தெளிவை மேலும் மேலும் கூட்டும். தெளிவு பழக்கத்தைக் கூட்டும். இப்படித்தான் தேகாத்ம புத்தியைப் போக்கணும்.

**கே: எப்படி தூக்கத்துக்குப் போறோம்? எப்படி விழிக்கறோம்?**

**ப:** பொழுது சாஞ்சவுடனே எப்படி கோழி தன் குஞ்சுகளை தன் இறக்கைக்குள்ளே வச்சுக்கொண்டு பஞ்சாரத்துலே இருக்கோ... அப்படித்தான் அகந்தை; அப்படித்தான் தூக்கம். பொழுது

விடிஞ்சவுடனே குஞ்சுகளெல்லாம் வெளியே வந்துடும்; கோழியும் வெளியே வந்துடும். அப்படித்தான் விழிப்பு. கோழிதான் அகந்தை. நினைப்பு எல்லாம் குஞ்சுகள்.

**கே: தூக்கம் எப்படி இருக்கும்?**

ப: நல்ல கும்மிருட்டுலே எந்தப் பொருளையும், பாக்க முடியாது. கண்ணை நல்லா திறந்து இருந்தாலும் எதையும் பாக்க முடியாது. அதே மாதிரிதான் தூக்கம். அறியாமையைப் பாத்துக்கொண்டு இருப்போம்.

(286) ***பக்தர் ஒருவர்***

**பகவானைப் பத்தி பொய்யா யாரோ ஒருவர் எழுதியதைப் பத்திக் கேட்டுட்டு வந்த பக்தர் ஒருவர்.**

**கே: பகவானே இப்படி பொய்யா எழுதியிருக்கானே?**

ப: ஆமா! இதெல்லாம் பெரிய உண்மை! அது மட்டும் பொய்யாம்! பெரிய பொய்யைக் கண்டுட்டாரு! வந்த வேலையைப் பாருங்கோ!

(287) ***பஞ்சாபி மருத்துவர் கேட்டார்.***

**கே: எனக்கு அமைதி இல்லை. எப்படித் தியானம் பண்றதுன்னு சொல்லுங்க?**

ப: அமைதிதான் நம்மளோட ஸ்வபாவம். அதை அடையறதுன்னு ஒண்ணு கிடையாது. நினைப்புதான் போகணும்.

**கே: என்னால் நினைப்புகளைப் போக்க முடியலே.**

ப: தியானத்திலே நினைப்பு கிளம்பினா... அதை மறுபடியும் தியானத்துக்குக் கொண்டு வாங்கோ.

**கே: கொண்டு வர முடியலை.**

ப: ஸம்ஸ்காரங்கள் பலமாயிருந்தா ஏகாக்கிரம் கைகூடாது. பக்திக்கும் அப்படித்தான்.

**கே: ஏகாக்கிரத்துக்கு நான் என்ன செய்யணும்?**

ப: வைராக்கியமும் அப்பியாமும் ஏகாக்கிரத்தைக் கொடுக்கும்.

**கே: வைராக்கியம் சரி... அப்பியாசம்...**

ப: இரண்டும் வேணும். பிற நினைப்புக்கு இடம் கொடுக்காமே இருக்கறது வைராக்கியம். ஒரே நினைப்பிலே இருக்கறது அப்பியாசம். ரெண்டும் தியானத்தோட ரெண்டு பக்கம்.

**கே: என்னால சுயமா இதைச் செய்ய முடியல ஏதோ ஒரு சக்தி உதவணும். அதைத்தான் தேடறேன்.**

ப: ம்... அதுக்குப் பேர்தான் அருள்! சுயமா நம்மளாலே ஒண்ணும் செய்ய முடியாது. அருள் வேணும். சாது சேவை அதுக்குத்தான். புதுசா எதுவும் வரப்போறது இல்லை.

எப்படி பலஹீனமானவன், பலசாலிகிட்டே அடங்கறானோ அப்படி பலம் வாய்ந்த மனசுகிட்டே பலஹீனமான மனசு அடங்கிடும். அதுதான் சாது சங்கம். அதுதான் அருள். அதைத்தவிர வேற எதுவும் இங்கே இல்லை.



(288) ***வேதாந்தத்துலே மாயைங்கறதையும், காஷ்மீர சைவத்துலே சொல்ற பிரத்யபிஞ்ஞாவோட சுவதந்திரத்தைப் பத்தியும் பகவான் விளக்கினார்.***

ப: வேதாந்திகள் என்ன சொல்றா.

மாயைங்கறது சிவத்திலே இருக்கற அதிசயசக்தி. மாயைக்குத் தனியா இருப்பு இல்லே. சிவம்தான் இருப்பு. மாயை, அதிசயமா இந்த உலகத்தைப் படைச்சு அதை மறைச்சு, இந்த உலகம் எப்பவும் இருக்கற உண்மைன்னு நம்ப வச்சு,

ஜீவர்களோட அறியாமையாலே அவ விளையாடிக்கொண்டே இருக்கா! அவ உண்மையிலேயே இல்லாத பொருள்ன்னு தெரிஞ்சா அவ மறைஞ்சுடுவா.

பிரத்தியபிஞ்ஞாகாரா என்ன சொல்றா?

சிவமும், சக்தியும் இணைபிரியா ஜோடி. ஒருத்தரை விட்டு ஒருத்தர் இருக்க மாட்டா. சிவம் தோன்றாது. ஆனா சக்தி அவளோட ஸ்வதந்திரத்திலே தோன்றுவா. அவ தோன்றுவதுதான் இந்தப் பிரபஞ்ச விளையாட்டு. எப்படின்னா கண்ணாடியிலே பிம்பம் மாதிரி. பிம்பம் கண்ணாடியை விட்டு இருக்காது. அது மாதிரி இந்த உலகமும் தனியா இருக்காது.

இவா சொல்ற சுதந்திரம் எப்படிப் பாத்தாலும் சிவத்தோட அம்சமாத்தான் முடியும்.

சங்கரர் என்ன சொல்றார்... சிவம் நிர்குணம், மாயை இல்லாதது. இருப்பு இல்லை.

இவா ரெண்டு பேர் சொல்றதிலேயும் என்ன வித்தியாசம் இருக்கு!

ரெண்டு பேரும் உலகம் தோற்றம் உண்மையில்லேங்கறா. கண்ணாடி பிம்பம் உண்மையாக இருக்க முடியாது. வாஸ்தவத்திலே உலகம் இல்லை. இரண்டு தரப்பும் ஒரே விஷயத்தைத்தான் சொல்றா. நோக்கமும் ஒண்ணுதான்... சிவத்தை உணரணும்.

பிரத்தியபிஞ்ஞையிலே உலகத்தோற்றம் பொய்ங்கறது லக்ஷ்யார்த்தமா இருக்கு.

வேதாந்தத்திலே வாச்சியார்த்தமா இருக்கு.

உலகத்தை சித்தா பாத்தா... அது உண்மை.

வேதாந்தம் நானா இல்லேங்கறது. அதுக்கு அர்த்தம் ஒரே பொருள்தான் எல்லாம்.

இரண்டிலேயும் எல்லா விஷயமும் ஒண்ணுதான். வார்த்தையும் சொல்ற விதமும்தான் வேற வேற.



(289) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: கர்ம பலன்னா என்ன?**

ப: காரணம் (Cause) காரியம் (Effect) மாதிரி. இந்தக் காரணகாரியம் ஒரு சக்தியாலேயே செயல்படறது. அதைத்தான் கடவுள்ங்கறோம்.

கடவுள்தான் 'கர்மபலதாதா' கர்ம பலனைக் கொடுக்கறவர்.

*தரிசிக்க வந்த ஒருவர்.*

**கே: ஆத்மா தன் உண்மையை அஞ்ஞானத்தாலே மறந்துடுதா?**

ப: நினைப்பு மறப்பு இதெல்லாம் மனத்திலேதான். மனம் இருக்கற வரைக்கும் நினைப்பும் மறப்பும் இருக்கும். ஆனா ஆத்மா இதெல்லாத்துக்கும் ஆதாரமா இருக்கு. எதையோ மறக்கறோம்... நினைக்கறோம்னா... நமக்கு அன்னியமா ஏதோ இருக்கணும். இல்லேன்னா மறக்க முடியாது.

யார் மறந்தது? யார் நினைக்கறது? நாம எல்லாரும் நான்னு சொல்றோமில்லையா... அதுதான் மறக்கும்; நினைக்கும். அது எதுன்னு பாத்தா அது இருக்காது. ஏன்னா... அது உண்மை இல்லை. இந்த நான்கற எண்ணம்தான் அஞ்ஞானம்; மாயை; அவித்தை.

அஞ்ஞானம்ன்னு ஒண்ணு எந்தக் காலத்திலேயும், இல்லைன்னு தெரிஞ்சுக்கறதுதான் எல்லா ஆத்மீக உபதேசமும்.

'எனக்கு அஞ்ஞானம் இருக்கு'ன்னு ஒரு அறிவுக்குத் தெரியறதில்லையா... அதுதான் ஞானம்.

'நான் இன்னும் ஞானம் அடையலே... அஞ்ஞானத்திலே இருக்கேன்'ன்னு சொல்றதுக்கு ஒருத்தன் இருக்கணுமே... அதுதான் அறிவு.

அதுதான் ஆத்மா. அது நம்மளோட ஸ்வபாவம்.

**கே: இப்படிப் பட்டவர்த்தனமா உண்மையைக் கேட்ட பிறகும் ஏன் திருப்தியா இருக்க முடியலே?**

ப: ஏன்னா... ஸம்ஸ்காரங்கள் இன்னும் அழியலே.

ஸம்ஸ்காரங்கள் சுத்தமா அழியற வரைக்கும் சந்தேகம் விபரீதம் இருக்கும். நம்மளோட எல்லா முயற்சியும் சந்தேக, விபரீதத்தைப் போக்கறதுக்குத்தான். சந்தேக விபரீதங்களோட மூலம் அழிஞ்சாத்தான் சந்தேக விபரீதம் போகும். அதோட மூலம்தான் ஸம்ஸ்காரங்கள்.

அது குரு தர்ற அப்பியாசத்தாலேயே நீங்கும். குரு சாதகன்கிட்டேயே இதை மட்டும் செஞ்சுகொண்டு வான்னு விட்டுடறார். ஏன்னா... அஞ்ஞானம்னு ஒண்ணு இல்லவே இல்லேன்னு சுயமே தெரிஞ்சுக்கறதுக்காகத்தான்.

சிரவண காலத்திலேயே உண்மையை சொல்லிக் கொடுத்துடுவா. அது திடமாக மனனம், நிதித்யாசனம். இந்த இரண்டும் வாசனைகளை பீஜத்தோட பொசுக்கிடும். வறுத்த விதை மாதிரி ஆக்கிடும். முளைக்காது.

வெகு சிலருக்கு சிரவணகாலத்திலேயே உண்மையை ஒரு முறை கேட்ட உடனேயே திடஞானம் வந்துடும். ஏற்கனவே எல்லாம் முடிச்சிருப்பா. அவன் கிருதோவுபாசகன். புதுஆள் அகிருதோவுபாசகன். திடமாகறதுக்கு ரொம்ப நாளாகும்.

அஞ்ஞானம் எப்படி வந்ததுன்னு கேக்கறா... வரவேயில்லேங்கறேன். ஏன்னா... அப்படின்னு ஒண்ணு இல்லை.

இருக்கறது ஞானம் மட்டும்தான். இருக்கறது இருப்பு மட்டும்தான்.

**கே: நான் ஏன் அதை உணரலே?**

ப: ஸம்ஸ்காரங்களாலே.

யார் உணரலேன்னு பாருங்கோ! எதை உணரலேன்னு பாருங்கோ! அப்புறம் எல்லாம் புரிஞ்சிடும், அஞ்ஞானம்ன்னு ஒண்ணு எந்தக் காலத்திலேயும் இல்லேன்னு தெரிஞ்சுப்பேள்!

(290) *சாகர்மல் பம்பாய் மார்வாடி வியாபாரி கேட்டார்.*

**கே: கொண்டு வர முடியலை.**

ப: ஸம்ஸ்காரங்கள் பலமாயிருந்தா ஏகாக்கிரம் கைகூடாது. பக்திக்கும் அப்படித்தான்.

**கே: ஏகாக்கிரத்துக்கு நான் என்ன செய்யணும்?**

ப: வைராக்கியமும் அப்பியாமும் ஏகாக்கிரத்தைக் கொடுக்கும்.

**கே: வைராக்கியம் சரி... அப்பியாசம்...**

ப: இரண்டும் வேணும். பிற நினைப்புக்கு இடம் கொடுக்காமே இருக்கறது வைராக்கியம். ஒரே நினைப்பிலே இருக்கறது அப்பியாசம். ரெண்டும் தியானத்தோட ரெண்டு பக்கம்.

**கே: என்னால சுயமா இதைச் செய்ய முடியல ஏதோ ஒரு சக்தி உதவணும். அதைத்தான் தேடறேன்.**

ப: ம்... அதுக்குப் பேர்தான் அருள்! சுயமா நம்மளாலே ஒண்ணும் செய்ய முடியாது. அருள் வேணும். சாது சேவை அதுக்குத்தான். புதுசா எதுவும் வரப்போறது இல்லை.

எப்படி பலஹீனமானவன், பலசாலிகிட்டே அடங்கறானோ அப்படி பலம் வாய்ந்த மனசுகிட்டே பலஹீனமான மனசு அடங்கிடும். அதுதான் சாது சங்கம். அதுதான் அருள். அதைத்தவிர வேற எதுவும் இங்கே இல்லை.



(288) ***வேதாந்தத்துலே மாயையங்கறதையும், காஷ்மீர சைவத்துலே சொல்ற பிரத்யபிஞ்ஞாவோட சுவதந்திரத்தைப் பத்தியும் பகவான் விளக்கினார்.***

ப: வேதாந்திகள் என்ன சொல்றா.

மாயையங்கறது சிவத்திலே இருக்கற அதிசயசக்தி. மாயைக்குத் தனியா இருப்பு இல்லே. சிவம்தான் இருப்பு. மாயை, அதிசயமா இந்த உலகத்தைப் படைச்சு அதை மறைச்சு, இந்த உலகம் எப்பவும் இருக்கற உண்மைன்னு நம்ப வச்சு,

ஜீவர்களோட அறியாமையாலே அவ விளையாடிக்கொண்டே இருக்கா! அவ உண்மையிலேயே இல்லாத பொருள்ன்னு தெரிஞ்சா அவ மறைஞ்சுடுவா.

பிரத்தியபிஞ்ஞாகாரா என்ன சொல்றா?

சிவமும், சக்தியும் இணைபிரியா ஜோடி. ஒருத்தரை விட்டு ஒருத்தர் இருக்க மாட்டா. சிவம் தோன்றாது. ஆனா சக்தி அவளோட ஸ்வதந்திரத்திலே தோன்றுவா. அவ தோன்றுவதுதான் இந்தப் பிரபஞ்ச விளையாட்டு. எப்படின்னா கண்ணாடியிலே பிம்பம் மாதிரி. பிம்பம் கண்ணாடியை விட்டு இருக்காது. அது மாதிரி இந்த உலகமும் தனியா இருக்காது.

இவா சொல்ற சுதந்திரம் எப்படிப் பாத்தாலும் சிவத்தோட அம்சமாத்தான் முடியும்.

சங்கரர் என்ன சொல்றார்... சிவம் நிர்குணம், மாயை இல்லாதது. இருப்பு இல்லை.

இவா ரெண்டு பேர் சொல்றதிலேயும் என்ன வித்தியாசம் இருக்கு!

ரெண்டு பேரும் உலகம் தோற்றம் உண்மையில்லேங்கறா. கண்ணாடி பிம்பம் உண்மையாக இருக்க முடியாது. வாஸ்தவத்திலே உலகம் இல்லை. இரண்டு தரப்பும் ஒரே விஷயத்தைத்தான் சொல்றா. நோக்கமும் ஒண்ணுதான்... சிவத்தை உணரணும்.

பிரத்தியபிஞ்ஞையிலே உலகத்தோற்றம் பொய்ங்கறது லக்ஷ்யார்த்தமா இருக்கு.

வேதாந்தத்திலே வாச்சியார்த்தமா இருக்கு.

உலகத்தை சித்தா பாத்தா... அது உண்மை.

வேதாந்தம் நானா இல்லேங்கறது. அதுக்கு அர்த்தம் ஒரே பொருள்தான் எல்லாம்.

இரண்டிலேயும் எல்லா விஷயமும் ஒண்ணுதான். வார்த்தையும் சொல்ற விதமும்தான் வேற வேற.

(289) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: கர்ம பலன்னா என்ன?**

ப: காரணம் (Cause) காரியம் (Effect) மாதிரி. இந்தக் காரணகாரியம் ஒரு சக்தியாலேயே செயல்படறது. அதைத்தான் கடவுள்ங்கறோம்.

கடவுள்தான் 'கர்மபலதாதா' கர்மபலனைக் கொடுக்கறவர்.

*தரிசிக்க வந்த ஒருவர்.*

**கே: ஆத்மா தன் உண்மையை அஞ்ஞானத்தாலே மறந்துடுதா?**

ப: நினைப்பு மறப்பு இதெல்லாம் மனத்திலேதான். மனம் இருக்கற வரைக்கும் நினைப்பும் மறப்பும் இருக்கும். ஆனா ஆத்மா இதெல்லாத்துக்கும் ஆதாரமா இருக்கு. எதையோ மறக்கறோம்... நினைக்கறோம்னா... நமக்கு அன்னியமா ஏதோ இருக்கணும். இல்லேன்னா மறக்க முடியாது.

யார் மறந்தது? யார் நினைக்கறது? நாம எல்லாரும் நான்னு சொல்றோமில்லையா... அதுதான் மறக்கும்; நினைக்கும். அது எதுன்னு பாத்தா அது இருக்காது. ஏன்னா... அது உண்மை இல்லை. இந்த நான்கற எண்ணம்தான் அஞ்ஞானம்; மாயை; அவித்தை.

அஞ்ஞானம்ன்னு ஒண்ணு எந்தக் காலத்திலேயும், இல்லைன்னு தெரிஞ்சுக்கறதுதான் எல்லா ஆத்மீக உபதேசமும்.

'எனக்கு அஞ்ஞானம் இருக்கு'ன்னு ஒரு அறிவுக்குத் தெரியறதில்லையா... அதுதான் ஞானம்.

'நான் இன்னும் ஞானம் அடையலே... அஞ்ஞானத்திலே இருக்கேன்'ன்னு சொல்றதுக்கு ஒருத்தன் இருக்கணுமே... அதுதான் அறிவு.

அதுதான் ஆத்மா. அது நம்மளோட ஸ்வபாவம்.

**கே: இப்படிப் பட்டவர்த்தனமா உண்மையைக் கேட்ட பிறகும் ஏன் திருப்தியா இருக்க முடியலே?**

ப: ஏன்னா... ஸம்ஸ்காரங்கள் இன்னும் அழியலே.

ஸம்ஸ்காரங்கள் சுத்தமா அழியற வரைக்கும் சந்தேகம் விபரீதம் இருக்கும். நம்மளோட எல்லா முயற்சியும் சந்தேக, விபரீதத்தைப் போக்கறதுக்குத்தான். சந்தேக விபரீதங்களோட மூலம் அழிஞ்சாத்தான் சந்தேக விபரீதம் போகும். அதோட மூலம்தான் ஸம்ஸ்காரங்கள்.

அது குரு தர்ற அப்பியாசத்தாலேயே நீங்கும். குரு சாதகன்கிட்டேயே இதை மட்டும் செஞ்சுகொண்டு வான்னு விட்டுடறார். ஏன்னா... அஞ்ஞானம்னு ஒண்ணு இல்லவே இல்லேன்னு சுயமே தெரிஞ்சுக்கறதுக்காகத்தான்.

சிரவண காலத்திலேயே உண்மையை சொல்லிக் கொடுத்துடுவா. அது திடமாக மனனம், நிதித்யாசனம். இந்த இரண்டும் வாசனைகளை பீஜத்தோட பொசுக்கிடும். வறுத்த விதை மாதிரி ஆக்கிடும். முளைக்காது.

வெகு சிலருக்கு சிரவணகாலத்திலேயே உண்மையை ஒரு முறை கேட்ட உடனேயே திடஞானம் வந்துடும். ஏற்கனவே எல்லாம் முடிச்சிருப்பா. அவன் கிருதோவுபாசகன். புதுஆள் அகிருதோவுபாசகன். திடமாகறதுக்கு ரொம்ப நாளாகும்.

அஞ்ஞானம் எப்படி வந்ததுன்னு கேக்கறா... வரவேயில்லேங்கறேன். ஏன்னா... அப்படின்னு ஒண்ணு இல்லை.

இருக்கறது ஞானம் மட்டும்தான். இருக்கறது இருப்பு மட்டும்தான்.

**கே: நான் ஏன் அதை உணரலே?**

ப: ஸம்ஸ்காரங்களாலே.

யார் உணரலேன்னு பாருங்கோ! எதை உணரலேன்னு பாருங்கோ! அப்புறம் எல்லாம் புரிஞ்சிடும், அஞ்ஞானம்னு ஒண்ணு எந்தக் காலத்திலேயும் இல்லேன்னு தெரிஞ்சுப்பேள்!

(290) *சாகர்மல் பம்பாய் மார்வாடி வியாபாரி கேட்டார்.*

**கே: பகவத்கீதையிலே கிருஷ்ணர், எனக்கு அன்னியமா எதுவும் இல்லேன்னு சொல்றார். பிறகு சரடுல மணிகள் மாதிரி உலகம்கறார். இங்கே எல்லாம் கிருஷ்ணர்தான்னா... எப்படி உலகம் சரடுல மணிகள் மாதிரின்னு சொல்ல முடியும்?**

ப: அதுக்கு மணி, சரடு எல்லாம்... எனக்கு அன்னியமா இல்லேன்னு அர்த்தம். மணிகள் சரடை விட்டு இருக்காது. சரடு என்னைவிட்டு இருக்காது. அந்த ஸ்லோகம் ஏகத்துவத்தை சொல்றது. நானாத்துவத்தை இல்லை. நானாத்துவம் மேலோட்டம்.

**கே: ஏகத்துவம் பகவான்லே ஐக்கியமான பிறகுதான் ஏற்படும். உண்மைதான். ஆனா இன்னும் பேதம் இருக்கே! அதுதான் சம்சாரம்.**

ப: இப்போ நாம எங்கே இருக்கோம்? பகவானை விட்டு வேறா இருக்கோமா?

நாம... சம்சாரம்... எல்லாம் பகவான்லேதான் இருக்கு.

**கே: அது ஞானிகளோட அனுபவம். ஞானம் ஏற்படற வரைக்கும் பேதம் இருக்கும். அதனால எனக்கு சம்சாரம் இருக்கு.**

ப: ஸம்ஸ்காரந்தான் சம்சாரம்.

**கே: சரி. 'எல்லாம் வாசுதேவ மயம்' இந்த உண்மையை நாம மறந்துவிட்டோம். அதனாலே பகவானோட ஐக்கியமாக முடியலே.**

ப: மறதி எங்கேயிருக்கு? எப்படியிருக்கும் மறதி?

**கே: கனவு காண்றது மாதிரி.**

ப: யாருடைய கனவு?

**கே: ஜீவனோடது.**

ப: யார் ஜீவன்? ஜீவன் யாரோடது?

**கே: பரமாத்மாவோடது.**

ப: அப்போ பரமாத்மாவே கேள்வி கேக்கட்டும்.

**கே: என்னோட சந்தேகத்தைத் தெளிவா வேற மாதிரி விளக்கறேன்.**

ப: யார் சந்தேகத்தை விளக்கறது? தெளிவாக்கறது?

நீ இருக்கறதுக்கு விளக்கம் வேணுமா?

அது பிரத்யட்சம். பிரத்யட்சத்துக்கு விளக்கம், தெளிவு, எல்லாம் தேவையில்லே.

**கே: நான் இருக்கறது பிரத்தியட்சமாவும் இருக்கு. அதை பத்திய மறதியும் இருக்கு.**

ப: யார் யாரை மறந்தது?

**கே: கனவு காண்கிறோம் விழிச்சவுடனே கனவு போயிடுதுல்ல....**

ப: அப்போ இந்தக் கனவிலே இருந்து விழிச்சுக்கோங்கோ!

**கே: பிரகிருதி பலமாயிருக்கு. விடமாட்டேங்குதே!**

ப: புருஷனைப் பாருங்கோ! அப்புறம் பிரகிருதி என்ன பண்ணிடும்?

**கே: ஒரு கிரந்தி இருக்கு பாக்கவிடாம!**

ப: யாரோட கிரந்தி?

புருஷனோடதா... பிரகிருதியோடதா... இல்லே இரண்டோடதுமா?

**கே: பிரம்மத்தால இருக்கு.**

ப: அப்போ பிரம்மம் கேள்வி கேக்கட்டும். இல்லை பிரம்மத்தைப் போய்க் கேளுங்கோ!

யாருக்குக் கனவு? அல்லது கிரந்தி?

அடிக்கடி பேசும்போது 'நான்' 'எனக்கு'ன்னு சொல்றேளே, அந்த நான் யார்?

நான்கறதுதான் நித்யப்பொருள். அநித்தியம்னா அது மறைஞ்சிடும். அது பூரணம். அதனாலே அதைப் பாக்க முடியாது.

**கே: ஆனா நான் பூரணனா இல்லையே?**

ப: தூங்கும்போது இந்தக் குறை இருந்ததா?

அதே மாதிரி இப்பவும் இருக்க வேண்டியதுதானே. தூக்க நிலையை விழிப்புக்குக் கொண்டு வாங்கோ, அதுதான் ஜாக்ரசுஷுப்தி. எல்லாம் சரியாயிடும்.

எல்லோரும் எதிலே விழிச்சு இருக்காளோ... அங்கே தூங்குங்கோ!

**கே: அது முனிவர்களாலேதான் முடியும்.**

ப: முனிவர்ன்னா யார்?

அவர் மனுஷா இல்லையா?

**கே: யாராவது என்னை அறைஞ்சா எனக்கு உணர முடியும், அப்படி உணராம இருக்கணுமா? தூக்கத்துல இருக்கற மாதிரின்னா அப்படித்தான். அதுதான் ஞானமா?**

ப: மயக்க மருந்து கொடுத்தவனுக்கோ... குடிகாரனுக்கோ... அடிச்சா தெரியாது. அப்போ அவன் ஞானியா? உணர்ச்சி இல்லாமே இருக்கறதுதான் ஞானமா?

**கே: காண்பான் காட்சி காணப்படு பொருள். இந்த மூணும் இல்லைன்னாத்தான் ஞானம்.**

ப: தூங்கும்போதும், சமாதியிலேயும், எங்கேயோ நினைப்பு இருக்கறப்போவும், இந்த மூணும் இல்லே. அப்போ அது ஞானமா? இந்த நிலைகள்லே என்ன நடக்கறது? அங்கே என்ன இல்லாம இருந்தது... இப்போ இருக்கு?

எது எப்பவுமே இருக்கு?

இந்த வித்தியாசத்துக்குக் காரணம் மனம்தான். மனம் சில சமயம் இருக்கு. சில சமயம் இல்லை. ஆனா உண்மை எப்பவும் இருக்கு. அது ஆனந்தமா இருக்கு.

**கே: ஆனந்தம் சாதனையாலேயே ஏற்படும். அந்த சாதனை எது?**

ப: இந்த சந்தேகமெல்லாம் கேட்டுக்கொண்டு இருக்கறது யார்ன்னு விசாரிச்சு தெரிஞ்சுக்கறதுதான் அந்த சாதனை.

**கே: அகந்தைக்குத்தான் சந்தேகம்.**

ப: அகந்தை எங்கேயிருந்து வர்றது?

**கே: யாராவது காட்டினாத்தான் தெரியும். எனக்குக் காட்டுங்க.**

ப: உள்ளே போங்கோ. வழி தானாத் தெரியும். வெளியே கண்டுபிடிக்க முடியாது. வெளியே தேடவும் முடியாது.

**கே: அகந்தையோட மூலத்தை என்னாலே கண்டுபிடிக்க முடியலேன்னு நான் நின்னுக்கறேன்.**

ப: அதை எப்படி நீங்க கண்டுபிடிக்க முடியும்?
அதை விட்டு நீங்க வேறாயிருந்தாத்தான் முடியும். கண்டுபிடிக்க முடியலேங்கறத விட்டுடுங்கோ. இப்போ நீங்க எங்கே இருக்கேள்? நீங்க இப்போ இல்லையா?

**கே: நான் யார்? உண்மையிலையே நான் எப்படி இருக்கேன்?**

ப: அதைக் குழப்பிக்காதேள். அது எப்படி இருக்கோ, அப்படியே இருக்கட்டும். ஏன் கவலைப்படறேள்? சமஷ்டி வியஷ்டி பத்தி எல்லாம் தூங்கும்போது கவலைப்பட்டேளா? அதே ஆள்தான் இப்பவும் இருக்கான்.
நீங்க தூங்கும்போதும் விழிப்பிலேயும் ஒரே மாதிரிதான் இருக்கேள்.

**கே: இரண்டும் வேறுவேறுநிலை; வேறுவேறு அனுபவம்.**

ப: என்னவா இருந்தா என்ன?
இரண்டிலேயும் நீங்க ஒண்ணுதானே.

**கே: மனம் தியானத்துல நிலையா இருக்கமாட்டேங்குது.**

ப: எப்போல்லாம் அலையறதோ அப்போல்லாம் உண்முகமாக்குங்கோ! திரும்பத்திரும்ப உண்முகமாக்குங்கோ!

**கே: துக்கம் ஏற்படும்போது விசாரம் பண்ண முடியலை.**

ப: மனம் பலஹீனமாயிருக்கு. அதைப் பலமாக்குங்கோ.

**கே: எப்படி ஆக்கறது?**

ப: சத்சங்கம், ஈஸ்வர ஆராதனை, பிராணயாமம்.

**கே: அப்புறம் என்ன ஆகும்?**

ப: துக்கம் போயிடும். நம்மளோட நோக்கமே துக்க நிவிருத்திதான். சுகத்தைத் தேட வேண்டாம். நம்மளோட ஸ்வபாவமே சுகம்தான். துக்கம் போனாப்போதும். இந்த ஸாதனைகள் அதைச் செய்யும்.

**கே: சாதுசகவாசம் மனோபலம் கொடுக்கும். ஆனாலும் ஏதாவது சாதனம் இருக்கணும். எந்த சாதனம் பண்ணணும்?**

ப: ஆமாம். சாதனை அவசியம். சாதனை எல்லாம் ஸம்ஸ்காரங்களைப் போக்கறதுக்குத்தான். எதையோ புதுசா அடையறதுக்கு இல்லை. வாசனைகள் அழியறதுக்குதான்.

**கே: அப்பியாசம்தான் எனக்கு வாசனைகளை அழிக்கற சக்தியை கொடுக்கணும்.**

ப: அப்பியாசம்தான் சக்தி. எல்லா நினைவுகளும் நீங்கி ஏகசிந்தனம் வந்துடுத்துன்னா... மனசுக்குப் பலம் வாய்ச்சுடுத்துன்னு அர்த்தம். அப்பியாசம் திடமாயிடுத்துன்னா... அதுதான் ஸஹஜம்.

**கே: அந்த அப்பியாசம் என்ன?**

ப: ஆத்ம விசாரம். அவ்வளவுதான்.

மனசை எந்த நேரமும் ஆத்மாவிலே வச்சுருக்கறதுக்குப் பேர்தான் ஆத்ம விசாரம்.

**கே: ஆத்ம விசாரத்துக்கு லட்சியம் என்ன?**

ப: ஆத்மாதான் லட்சியம். வேற என்னவா இருக்க முடியும்?

ஆத்ம லட்சியம் இல்லாதவாளுக்குத்தான் மற்ற லட்சியம். மத்ததும் கடைசியிலே ஆத்ம விசாரத்திலேதான் முடியும். ஏகாக்கிரம்தான் எல்லாப் பயிற்சியோட பலனும். சிலருக்கு உடனே வாய்ச்சுடும். மத்தவாளுக்கு ரொம்ப நாள் ஆகும். எல்லாம் அப்பியாசத்தைப் பொறுத்து.

**கே: அமைதியையே வெகுசிறப்பா சொல்றாங்களே அதை எப்படி அடையறது?**

ப: அது உங்களுடைய ஸ்வபாவம்.

**கே: இந்த உண்மை அப்பப்போ மறந்திடுது.**

ப: மறதி ஆத்மாவை மறைக்காது. உங்களை அனாத்மாவோட சேத்துக் குழப்பிக்கறதாலே இப்படிச் சொல்றேள். உண்மையை மறந்திடறேங்கறேள்!

குழப்பம் தெளிஞ்சுடுத்துன்னா... மறதி தலைதூக்காது.

**கே: அதை எப்படிச் செய்யறது?**

ப: ஆத்ம விசாரம் பண்ணுங்கோ.

ஏகாக்கிரம்னா.... மனச்சேஷ்டை இல்லாமே இருக்கறது.

மறந்துடறேன்னு சொல்றேளே... ஒரு 'நான்' இன்னொரு நானை மறந்துடுத்தா?

இரண்டு நான் இருக்கா? யார் யாரை மறக்கறது?

அப்பியாசம்தான் ஸம்ஸ்காரங்களைப் போக்கும்.

**கே: ஸம்ஸ்காரங்கள் முடிவில்லாதது; கணக்கற்றது; அனாதியா இருக்கறது. இதையெல்லாம் போக்க முடியுமா?**

ப: இதுவே ஸம்ஸ்காரம்தான்.

இந்த நினைப்பை விடுங்கோ! எல்லா ஸம்ஸ்காரமும் ஒண்ணாத் தொலைஞ்சிடும். அதுதான் விஷ்ராந்தி... அமைதி.

அமைதி எப்பவும் இருக்கு. அதைக் கீழே தள்ளிட்டு, நீங்க மேலே ஏறி உக்காந்து, அதை இல்லே... இல்லேங்கறேள். எனக்கு அமைதி வேணும்... வேணுங்கறேள்.

**கே: அமைதி மெதுவா வந்துடுமா?**

ப: ஆமாம். மனசை மெல்ல, மெல்ல சும்மாயிருந்துங்கோ.



(291) *விசாரணைக் கமிஷன் தொடர்ச்சி....*

**கே: நீங்க அதிஆஸ்ரமம்னு அன்னைக்குச் சொன்னீங்க... அதுக்குப் பிரமாணம் இருக்கா? சாஸ்திரங்கள் எதுலேயாவது சொல்லியிருக்காங்களா?**

ப: ஆமாம். உபநிஷத்திலே இருக்கு. ஸூதசம்ஹிதை, பாகவதம், பாரதம் இன்னும் நிறைய இருக்கு.

**கே: அதிஆஸ்ரமத்துக்கு ஏதும் நியமம் உண்டா?**

ப: உண்டு... சாஸ்திரங்கள்லேயே சொல்லப்பட்டிருக்கு.

**கே: எல்லா ஆசிரமத்துக்கும் குரு உண்டு. அதிஆஸ்ரமத்துக்கு குரு உண்டா?**

ப: ஆமாம்.

**கே: ஆனா நீங்க குரு யாரும் இல்லைன்னு சொன்னீங்களே!**

ப: எல்லாருக்கும் குரு உண்டு. எனக்கும் உண்டு.

**கே: யாரு உங்க குரு?**

ப: ஆத்மாதான் குரு.

**கே: யாருக்கு?**

ப: எனக்கு. குரு உள்ளேயோ, வெளியேயோ இருக்கலாம். அவர் உள்ளேயோ, வெளியேயோ தன்னை வெளிப்படுத்தலாம்.

**கே: அதிஆஸ்ரமிகள் சொத்து வச்சுக்கலாமா?**

ப: எந்தக் கட்டுப்பாடும் இல்லே. என்ன விருப்பமோ அதைச் செய்யலாம். சுகர் கல்யாணம் பண்ணிக் குழந்தை பெத்துருக்கார்.

**கே: அப்போ அதியாஸ்ரமி கிருஹஸ்தர் மாதிரிதானே?**

ப: நான் ஏற்கனவே சொல்லியிருக்கேன். நான்கு ஆஸ்ரமங்களையும் கடந்தது.

**கே: கல்யாணம் பண்ணிக்கலாம்... சொத்து வச்சுக்கலாம்னா... அப்போ அவங்க கிருஹஸ்தர்கள்தான்.**

ப: அது உங்களோட அபிப்பிராயம்.

**கே: சொத்து வச்சுக்கலாமா? அதை வேறு யாருக்காவது தரலாமா?**

ப: தரலாம், தராமலும் இருக்கலாம். எல்லாம் பிராப்தத்தைப் பொறுத்து.

**கே: அவங்களுக்கு ஏதாவது கர்மம் இருக்கா?**

ப: அவாளோட செயல் எந்த விதியாலும், நியமத்தாலும் கட்டுப்படாது.

**கே: இங்கே வந்து தங்கறவங்க உங்க அனுமதி பெற்றுதான் தங்கணுமா?**

ப: நிர்வாகத்தோட அனுமதி என்னோட அனுமதிதான். எனக்காகத்தான் வர்றா. நிர்வாகமும் எனக்காகத்தான். இரண்டு தரப்பும் சம்மதிச்சு நடக்கற காரியத்திலே நான் தலையிடறது இல்லே. பரஸ்பர சம்மதத்தோட இங்கே நடக்கற காரியங்களுக்கு என்னுடைய ஒப்புதல் உண்டு.

***பகவானது கையெழுத்தில் பகவானை சுப்பிரமணியராகத் துதிக்கும் ஒரு பாடல் பகவானிடம் காட்டப்பட்டது.***

ப: இந்தக் கையெழுத்து என்னுடையதுதான். கருத்து என்னுடையது அல்ல.

**கே: அதை ஒத்துக்கறீங்களா?**

ப: ஒரு விக்ரகத்தை சுப்பிரமணியர்ன்னு ஒத்துக்கற மாதிரிதான்.

(293) ***கே.கே.வி. ஐயர் கேட்டார்.***

**கே: தியானத்திலே உண்முகப்பட முடியலே. எந்த வழியிலேயும் முடியலே.**

ப: நாம எல்லாரும் இப்போ வேற எதிலே இருக்கோம்?

**கே: இருந்தாலும் தெரியலே. அறியாமையிலே இருக்கோம்.**

ப: எதை அறியாம?

யாருக்கு இந்த அறியாமை?

என்னை நான் இன்னும் அறியலேன்னா... இரண்டு நான் இருக்கா?

**கே: இரண்டு நான் இல்லே. ஆனாலும் ஒரு வரையறைக்கு உட்பட்டுதான் இருக்கோம்.**

ப: எல்லாம் உம்ம மனசுலேதான்.

தூக்கத்திலே அப்படி உணர்றீரா? ஆனா தூங்கும்போது நீர் இருக்கீரே! அப்போ உம்ம இருப்பை மறுக்கலியே! அதே நான்தான் இங்கேயே, இப்போவே விழிப்பிலே இருக்கு. ஆனா நீர் என்ன சொல்றீர்... குறுகிடுத்துங்கறீர்.

நீர் சொல்றது இரண்டு நிலைக்கும் இருக்கற வித்தியாசம். இந்த வித்தியாசம் மனஸாலேயே ஏற்படறது. தூங்கும்போது மனசு இல்லை. மனசு இப்போ இயங்கறது. மனசு இயங்கினாலும்... இயங்கலேன்னாலும்... நாம மாறாம இருக்கோம்.

**கே: எனக்கு நீங்க சொல்றது புரிஞ்சாலும், அனுபவமாகலே.**

ப: மெதுமெதுவா ஆகும். தியானம் பண்ணிக்கொண்டே வாரும்.

**கே: தியானம் மனத்தை வைச்சுத்தானே பண்றோம். அதுவே எப்படி மனத்தை நாசமாக்கும்?**

ப: தியானம்னா... ஏகசிந்தனையிலே இருக்கறது. அந்த ஏக நினைவு மத்த நினைவுகளை வரவிடாது. மனம் அலைஞ்சா பலஹீனமாயிருக்குன்னு அர்த்தம். இடைவிடா தியானத்தாலே மனம் பலம் பெறும்.

அதாவது மனம் சிந்தனையற்று நின்னுடுத்துன்னா... மனமற்ற தன்னிலை அனுபவமாகும். இந்த மனமற்ற தன்னிலைதான் ஆத்மா.

சுத்த மனசுதான் ஆத்மா.

**கே: ஞானிக்கு உடம்பு தெரியாதா?**

ப: எல்லோருக்கும் நான் உடம்புன்னுதான் அனுபவமாகும். ஞானி, அஞ்ஞானி இரண்டு பேருக்கும் உடம்பு நான்தான். அஞ்ஞானி தன்னை உடம்புக்குள்ளே இருக்கற வஸ்துவா கருதுவான். ஆனா ஞானி, உடம்பு தன்னை விட்டு வேறா இல்லேன்னுவான். அவனுடைய நான் எல்லையற்றது. அதிலே உடம்பும் அடங்கும்.

**கே: ஹிருதயம்ன்னா என்ன? மனம்னா என்ன?**

ப: ஹிருதயம்ன்னா ஆத்மா. அது உள்ளேயும் இல்லை. வெளியேயும் இல்லை.

மனசுதான் அதோட சக்தி.

மனசு ஹிருதயத்திலே இருந்து வெளிப்பட்ட உடனே உலகம் தோன்றிடறது. உடம்பு அதிலே இருக்கறதாத் தெரியறது. உண்மையிலேயே எல்லாம் ஆத்மாவிலேயே இருக்கு. ஆத்மாவுக்கு அந்நியம் இல்லை.

**கே: உங்ககூட இருக்கும்போது இருக்கற அமைதி கொஞ்ச நேரத்திலேயே போயிடறது. ஏன் நீடிச்சு இருக்க மாட்டேங்கறது?**

ப: அமைதிதான் நம்மளோட ஸ்வபாவம் மத்தது நம்மளோட கற்பனை.

அமைதிதான் உண்மையிலேயே ஞானம்!

அமைதிதான் உண்மையிலேயே பக்தி!

அமைதிதான் உண்மையிலேயே யோகம்!

அப்பியாசத்தாலேயேதான் அமைதி ஏற்படும்ன்னு நீங்க சொல்லலாம். ஆனா உண்மை அப்படி இல்லை. தப்பான எண்ணம் அப்பியாசத்தாலே நீங்கும். நம்மளோட ஸ்வபாவம் மாறாம எப்பவும் அப்படியே இருக்கும். அவ்வளவுதான்.

(294) *மிஸ்டர். பர்கி கேட்டார்.*

**கே: தியானம் எப்படிப் பண்றது?**

ப: உண்மையிலேயே தியானம்னா... ஆத்மநிஷ்டைதான்.

பிற எண்ணங்கள் எழுந்தா அதைப் போக்கறதுக்கு ஒரு முயற்சி தேவைப்படறது. அந்த முயற்சியைத்தான் தியானம்கறோம்.

ஆத்ம நிஷ்டை நம்மளோட ஸ்வபாவம். நீங்க எப்பவும் இருக்கற மாதிரியிருங்கோ! அதுபோதும்.

**கே: ஆனா எண்ணங்கள் வருது. எண்ணங்களை வரவிடாம வச்சுக்கறதுதான் நம்ம வேலையா?**

ப: ஆமாம். தியானம் ஏகசிந்தனம்தான். பிற சிந்தனை வரவிடாது.

**கே: 'மனதை ஆத்மாவில் நிலை நிறுத்து'ன்னு பகவத் கீதையிலே சொல்லப்படுது. ஆனா ஆத்மா எதுன்னு தெரியலையே?**

ப: ஏன் தியானம் பண்ணணும்னு நினைக்கறேள்?

ஏன்னா... மனதை ஆத்மாவிலே நிலைபெறச் செய்ன்னு பகவத்கீதையிலே சொல்லிருக்கு.

ஏன் தியானம், கீனம் பண்ணாம நீங்க எப்பவும் இருக்கற படியே இருக்கக் கூடாது?

நீங்க மனதை ஆத்மாவிலே நிலைபெறச் செய்யணுங்கறேள்.

ஆனா மனம்னா என்ன?

எல்லா நினைப்பும் போயிடுத்துன்னா... மனமேதான் ஆத்மா. மனம் ஆத்மாதான்னு தெரிஞ்சுக்குவோம்.

**கே: ஏதாவது உருவத்தைப் பிடிச்சு தியானம் பண்ணச் சொன்னா என்னாலே பண்ண முடியும். எந்த நினைப்பும் வர்றது இல்லை. ஆனா ஆத்மாவுக்கு உருவமில்லையே!**

ப: உருவத்திலே பண்ணினா தியானம்.

ஆத்மாவிலே பண்ணினா ஆத்ம விசாரம் அல்லது நிதித்தியாசனம்.

தியானம்....... உலகத்திலே இருந்து ஆத்மாவுக்குக் கூட்டிக்கொண்டு போகும்.

ஆத்ம விசாரம்...... உலகமும் ஆத்மாதான்னு திரும்ப கூட்டிக்கொண்டு வந்துடும்.

**கே: ஆத்மா பரமாத்மா, சத்சித்தானந்தம் இதை எல்லாம் விளக்கணும்.**

ப: மூணும் ஒண்ணுதான்.

ஆத்மா அனாதியா எப்பவுமே அடையப்பட்டே இருக்கு. ஆத்மாவை ஏதோ ஒரு காலத்திலே அடையறதா இருந்தா அதுக்கு ஒரு ஆரம்பம் வந்துடும். அதனாலே அது அநித்தியம். அநித்தியத்துக்கு முயற்சி பண்றதாலே ஒரு பிரயோஜனமும் இல்லை. உண்மையிலேயே அது முயற்சி அற்ற நிலை. முயற்சி இல்லாம பூரண அறிவோட இருக்கறதுதான் ஆனந்தம். அதுதான் ஞானம்.

**கே: எனக்கு புத்திபூர்வமான விடைகள் வேணாம். அனுபவமா வேணும்?**

ப: ஆமாம். பிரத்யட்ச ஞானத்துக்கு புத்திபூர்வமான விடை தேவையில்லே. ஆத்மா எல்லோராலேயும் பிரத்யக்ஷமா அனுபவிக்கப்பட்டுக்கொண்டே இருக்கு. அதனாலே அது தேவையில்லே. நான்னு எல்லாரும் சொல்றோமே...! அதைவிட அனுபவம் என்ன வேணும்?

என்ன இருக்கு உணர்றதுக்கு!

**கே: எனக்குப் புரியலே.**

ப: நீங்க இருக்கேள் இல்லையா... நீங்க நான்னு சொல்றேள் இல்லையா... அதுதான் இருப்பு.

**கே: ஆனா என் இருப்பு எனக்கு சரியா தெரியல.**

ப: அப்போ பேசறது யாரு?

**கே: நான்தான். ஆனா நான் இருக்கேன்னு என்னாலே சொல்ல முடியலை. மேலும் நான் இருக்கறதாலே என்னை அது எங்கே கொண்டு போகப் போகுது?**

ப: நான் இல்லைன்னு சொல்றதுக்கு ஒருத்தன் இருக்கணும். நீங்க இல்லேன்னா... கேள்வியில்லை; கேள்வி கேக்கறவா இல்லை.

**கே: சரி நான் இருக்கேன்னு வச்சுக்குவோம்.**

ப: நீங்க இருக்கறது உங்களுக்கு எப்படித் தெரியும்?

**கே: ஏன்னா நான் சிந்திக்கறேன்; பாக்கறேன்.**

ப: இதை வச்சுதான் நீங்க இருக்கறதை ஒத்துக்கறேளா? இதெல்லாம் தூங்கும்போது இல்லை. ஆனா நீங்க இருக்கேளே!

**கே: இல்லை தூக்கத்துலே நான் இருந்தேன்னு சொல்ல முடியாது.**

ப: தூக்கத்திலே நீங்க இல்லையா!

**கே: இருந்தேனோ, இல்லையோ கடவுளுக்குத்தான் தெரியும்!**

ப: விழிச்சவுடன் தூங்கறதுக்கு முன்னாடி என்ன செஞ்சோம்ன்னு ஞாபகம் இருக்கில்லையா.

**கே: தூக்கத்துக்கு முன்னாடியும், தூங்கி எழுந்த பின்னும் நான் இருக்கேன். ஆனா தூக்கத்துலே இருந்தேன்னு சொல்ல முடியாது.**

ப: முன்னாடி நீங்க தூங்கினேள்னு இப்போ விழிப்புலே ஒத்துக்கறேளா?

**கே: ஆமா!**

ப: தூங்கும்போது... நீங்க இருந்ததாலேதானே... அதை இப்போ ஞாபகப்படுத்த முடியறது.

**கே: அதுக்காக தூக்கத்துலே நான் இருந்தேன்னு ஒத்துக்க முடியாது. அதை ஒத்துக்கறதனாலே எந்தப் பிரயோஜனமும் இல்லை.**

ப: அப்போ ஒவ்வொரு தடவை தூங்கும்போதும் செத்துப் போயிடறோமா? அப்புறம் விழிக்கும்போது உயிர் பிழைக்கறோமா?

**கே: இருக்கலாம். கடவுளுக்குத்தான் தெரியும்!**

ப: அப்போ கடவுளே வந்து இதுக்கு எல்லாம் விடையளிக்கட்டும். தீர்வு காணட்டும். தூக்கம் மரணம்னா... எல்லோரும் எப்படி மரணத்துக்குப் பயப்படறோமோ, அப்படித் தூங்க பயப்படுவா. ஆனா எல்லோரும் தூங்க ஆசைப்படறோம். ஏன் ஆசைப்படணும்? ஏன்னா... அங்கே சுகம் இருக்கு.

**கே: அதை மேலான சுகமா சொல்ல முடியாது. உடல் அயற்சி போகுது. அவ்வளவுதான்.**

ப: சரிதான். ஆமாம்... சோர்விலே இருந்து விடுபடறதுக்கு தூங்கும்போதும், ஒருத்தன் இருக்கணுமே!

**கே: ஆமாம்.**

ப: அப்போ தூங்கும்போது நீங்க இருக்கேள். இப்பவும் நீங்க இருக்கேள். தூங்கும்போது எந்த சிந்தனையும் இல்லாம சுகமாயிருந்த அவனேதான், இப்பவும் இருக்கான், ஆனா... அவன் இப்போ ஏன் சுகமா இல்லை?

**கே: தூங்கறதை சுகம்னு ஏன் சொல்றீங்க?**

ப: எல்லோரும் சொல்றோமே! 'சுகமா தூங்கினேன்' 'ஆனந்தமான தூக்கம்' ன்னு

**கே: நான் அவங்க சொல்றது சரின்னு நினைக்கலை. அங்கே சுகம் இல்லை. துக்கம் கிடையாது அவ்வளவுதான்.**

ப: உங்களுடைய ஸ்வபாவமே ஆனந்தம்தான். அதனாலேதான் எல்லோரும் சுகமா தூங்கினேன்னு சொல்றோம். அப்படின்னா... தூங்கும்போது கலப்பற்ற ஆதிநிலையிலே இருக்கோம்.

துக்கம்னு ஒண்ணு உண்மையிலேயே இல்லை. அதை ஏன் தூங்கும்போது மட்டும் இல்லேன்னு சொல்லணும்? இந்த எல்லாத் தொந்தரவும் உடம்பை ஆத்மான்னு கருதறதாலேதான்.

**கே: எனக்கு ஞானம்தான் வேணும். என்னுடைய ஆனந்த ஸ்வபாவம் தெரியலை.**

ப: ஏன்னா... அனாத்மாவை ஆத்மான்னு நினைச்சுக்கொண்டு இருக்கேள். அனாத்மாவும் ஆத்மாவை விட்டுத் தனியா இல்லே. ஆனாலும் உடம்பு வேறே. ஆத்மா உடம்புக்குள்ளே இருக்குன்னு தவறான கருத்து இருக்கு. இந்த அஞ்ஞானம்தான் தொலையணும். அப்போதான் ஆனந்த ஸ்வபாவம் வெளிப்படும்.

**கே: என்னால முடியலை.**

ப: அப்போ சரணடைஞ்சிடுங்கோ.

**கே: சரி.**

ப: உங்களுடைய ஸ்வபாவமே ஆனந்தம்தான். ஆனா எனக்கு அது இல்லேங்கறேள். எது உங்களுடைய சொரூபத்தை உணர விடாம தடுக்கறதுன்னு பாருங்கோ! உங்களுடைய தப்பான பார்வைதான்னு உங்களுக்கு சுட்டிக்காட்டியாச்சு. அந்தத் தவறான பார்வையை மாத்திக்கோங்கோ! நோயாளி டாக்டர் தர்ற மருந்தை ஒழுங்கா சாப்பிட்டா நோய் குணம் ஆகும்.

**கே: நோயாளி ரொம்ப பலஹீனமா இருக்கறதால டாக்டர் கிட்டேயே தன்னை முழுசா ஒப்படைச்சுட்டார்.**

ப: அப்போ நோயாளி எதுவும் குறைபடக்கூடாது. பேசாம சும்மா டாக்டர்கிட்டே 'என்னை என்ன வேணாலும் செஞ்சுக்கோங்கோ'ன்னு அவருக்கு சர்வ சுதந்திரம் கொடுத்துடணும். அது மாதிரி இனிமே சும்மாயிருங்கோ! டாக்டர் பாத்துப்பார். இதுக்குக் கவலையில்லாமே இருங்கோ! டாக்டர் பாத்துப்பார். இதுக்குப் பேர்தான் முயற்சியற்ற நிலை.

**கே: எனக்கு இதுதான் மிகச் சரியான மருந்து.**

(295) *ஒருவர் துண்டுச்சீட்டில் எழுதிக்கொடுத்த கேள்வி.*

**கே: கடவுள் இருக்கார்ன்னு எனக்கு நம்பிக்கை குடுங்க. அவரை எனக்குக் காட்டுங்க.**

ப: நீங்க யார்ன்னு தெரிஞ்சுக்கோங்கோ...! கடவுள் இருக்கார்ன்னு அப்போ தெரியும்.

**கே: ப்ராப்தமும் புருஷாகாரமும் எப்படி சம்பந்தப்படுது?**

ப: பிராப்தம்கறது கர்மம். கர்மம் செய்ய கர்த்தா ஒருத்தன் வேணும். யார் கர்த்தான்னு பாரு!

புருஷாகாரம்கறது முயற்சி. முயற்சி செய்ய ஒருத்தன் வேணுமில்லையா! யார் முயற்சி பண்றதுன்னு பாருங்கோ!

ரெண்டு பேரும் ஒண்ணுதான். இந்த ரெண்டுக்கும் உள்ள சம்பந்தத்தைத் தேடறவன்தான்... இந்த ரெண்டுக்கும் உள்ள சம்பந்தம்.

**கே: கர்மம்னா என்ன? மறுபிறப்புன்னா என்ன?**

ப: கர்த்தா யார்ன்னு பாருங்கோ! கர்மம்ன்னா... அப்போ என்னன்னு தெரியும்.

இப்போ பிறந்திருந்தோம்னா... மறுபிறப்பு வரும். இப்போ பிறந்திருக்கேளான்னு பாருங்கோ!

**கே: ஜோதி தர்சனம் பெற வழி சொல்லுங்க.**

ப: தரிசனம்னாலே தரிசிக்க ஒருத்தன் இருக்கணுமே... அவன் யார்ன்னு பாருங்கோ! அதிலேயே தரிசனமும் அடங்கும்.

(297) *தியானம் பண்ணிக்கொண்டு இருந்த எஸ்.எஸ். கோஹன் கேட்டார்.*

**கே: விழிப்பு நிலையிலே மனசை வச்சுத்தான் தியானம் பண்றோம். ஏன் கனவிலே தியானம் பண்ண மாட்டேங்கிறோம்? அப்பவும் மனசு இருக்குல்லே! கனவிலே தியானம் பண்ண முடியாதா?**

ப: கனவிலேயே கேளுங்கோ.

இப்போ உங்களைத் தியானம் பண்ணுங்கோ, நீங்க யார்ன்னு பாருங்கோ...ன்னு சொன்னா... அதை விட்டுட்டு ஏன் தூங்கும்போது தியானம் பண்ண முடியாதா... கனவிலே பண்ண முடியாதா...ன்னு கேள்வி கேக்கறேள்.

சரி யாருக்கு விழிப்பு நிலைன்னு பாருங்கோ! அவனுக்கேதான் தூக்கமும் கனவும் ஏற்படறது. நீங்கதான் இந்த மூணு நிலைக்கு சாட்சி. உங்க மேலேதான் இந்த மூணு நிலையும் நடந்துகொண்டு இருக்கு.

இப்போ தியானத்தை விட்டுட்டதாலேதான் இந்தக் கேள்வி வர்றது. தியானத்தைப் பிடிச்சுக்கோங்கோ. இந்தக் கேள்வி வராது.

(298) *தரிசனம் பண்ணவந்த ஒருவர்.*

**கே: தியானம் விசாரத்தைவிட நேர்வழின்னு எனக்குத் தோணுது. ஏன்னா தியானத்துலே நேரே உண்மையைத் தியானிக்கறோம். விசாரத்திலேயோ பொய்யைத்தான் விசாரிக்கறோம். பொய்யில் இருந்துதான் உண்மைக்குப் போறோம். சரிதானா?**

ப: ஆரம்பத்திலே சாதகனுக்கு உருவத்திலே தியானம் எளிமையா இருக்கும். சம்மதமாகவும் இருக்கும். பயிற்சியோட முதிர்ச்சியிலே ஆத்ம விசாரத்துக்குத்தான் வரணும், பொய்யிலே இருந்து உண்மைக்குப் போறது.

நீங்களே பொய்யாயிருக்கும்போது உண்மையைத் தியானிச்சு என்ன செய்யப் போறேள்?

ஆத்ம விசாரம் நேரே உண்மைக்கு... அதாவது நான் இன்னும் அடையலேங்கற தடையெல்லாம் நீக்கி ஞானத்திலே சேத்துடும்.

(301) தரிசிக்க வந்த ஒருவர்.

**கே: பகவானே! நம்ம ரெண்டு பேருக்கும் பெரிய ஒற்றுமை இருக்கு. ஒரே கிழமையிலே பிறந்திருக்கறோம்; ஒரே பெயர்.**

ப: ஒரே ஆத்மாதான் ஓய் ரெண்டு பேரும்!

(302) திருச்சியில் இருந்து வந்த இளைஞர் கேட்டார்.

**கே: வைராக்கியம்னா என்ன? உலகவிவகாரங்கள்லே பற்றற்று இருக்கறதும் உண்மையை உணர்றதுக்கான தீவிரமும்தானே?**

ப: எல்லோரும் சுகத்தைத்தான் தேடறோம். ஆனா துக்கக் கலப்புள்ள சுகத்தையே சுகம்னு தவறா நினைச்சுக்கறோம். நம்மளோட தவறான செயல்பாடு அற்பசுகத்தையே கொடுக்கறது. சுகம், துக்கம் கலந்தேதான் உலகத்திலே இருக்கு. எது சுகம்? எது துக்கம்னு பிரிச்சுப் பாத்து, சுகத்தைக் கொடுக்கறதிலேயே நின்னுக்கறதுதான் வைராக்கியம்.

எந்த சுகம் துக்கத்தைத் தர்றதில்லையோ அதைத் தேடணும்; அதிலேயே ஈடுபடணும். இல்லேன்னா... ஆத்திலே ஒரு கால் சேத்திலே ஒரு கால்தான்.

**கே: குருவோட வேலை என்ன?**

ப: ஒருத்தன் சுயமாவே கரையேற முடியாதப்போதான் பலஹீனமா இருக்கோம்னு உணர்றான். அப்போ குருவோட அருளை வேண்டறான். பலம் பெறுறான்.

(303) கே.ஆர்.வி. ஐயர் கேட்டார்.

**கே: மனம் சில நேரம் அமைதியாயிருக்கு. மறுபடியும் கிளம்பிடறது. என்ன செய்யறது?**

ப: கொஞ்ச நேரம் கிடைச்ச அமைதியை மத்த நேரம் அடிக்கடி நினைவுபடுத்தணும். எப்படின்னா... அமைதிதான் நம்மளோட ஸ்வபாவம்; நிரந்தர ஸ்திதி. இப்படி விடாம அப்பியாசிச்சா... அது சகஜமாயிடும். அதத்தான் அகண்டாகார விருத்திங்கறா. அதுதான் நம்மளோட நிஜ ஸ்வபாவம்.

(304) ***சுவிஸ் பெண்மணி கேட்டார்.***

பகவான் குழந்தை வடிவா காட்சி கொடுத்ததா ஒரு சுவிஸ் பெண்மணி பகவான்கிட்டே சொன்னார்.

ப: காட்சி உன் மனசுலேதான் இருக்கு. பிரியம்தான் அதுக்குக் காரணம். பால்பிரண்டன் பெரிய உருவமா பாத்ததா சொன்னார். நீங்க குழந்தையாப் பாத்ததா சொல்றேள், இரண்டுமே காட்சிதான். காட்சிகளாலே ஏமாற வேண்டாம்.

**கே: பல மைல்கள் தொலைவுலே ஐரோப்பாவுல இருந்து உங்களை நினைச்சா.........**

ப: எங்கே இருக்கு ஐரோப்பா.... உங்ககிட்டேதான் இருக்கு.

**கே: நாங்க இங்கே வந்திருக்கோம். நீங்க ஐரோப்பாவுக்கு வாங்க...**

ப: நீங்க ஸ்தூலமா உடம்பைப் பாக்கறேள். அதனாலேதான் இந்தத்தடை. கால தேசம் இந்த நிலையிலேதான். நீங்க ஸ்தூல உடம்பை பாக்கற வரைக்கும் வித்தியாசம் இருக்கும். உண்மையிலேயே பகவான் யார்ன்னு தெரிஞ்சா இந்தத் தடை இருக்காது.

நீங்க இந்தியாவிலே இருக்கேளா? இல்லை இந்தியா உங்களுக்கு உள்ளே இருக்கா? இப்போ இந்தியாவிலே இருக்கேன்கற நினைப்பு போகணும். இந்தியா உங்களுக்குள்ளேதான் இருக்கு. வேணும்னா... தூக்கத்திலே பாருங்கோ. தூங்கும்போது இந்தியாவிலே இருக்கேளா? ஐரோப்பாவிலே இருக்கேளா? ஆனா இப்போ இருக்கற

மாதிரியேதான் இருந்தேள். அப்போ தேசம் நம்மள்லேதான் இருக்கு. உடம்புதான் தேசத்திலே இருக்கு. நாம இல்லை.

**கே: இந்தமாதிரி காட்சி கிடைக்கறது நல்லதா?**

ப: ம்.... நல்லது. சிறப்புதான்.

**கே: சிவன்னா என்ன? யார்?**

ப: இன்னும் கொஞ்ச நேரத்திலே தூங்கப் போயிடுவேள். காலையிலே விழிச்சவுடனே, 'நான் சுகமா நல்லாத் தூங்கினேன்'னு சொல்லுவேள். தூக்கத்திலே என்ன நடந்ததோ... அதுதான் நம்மளோட ஸ்வபாவம். அது இப்பவும் இருக்கு. இல்லேன்னா.... அதை ஸ்வபாவம்னு சொல்ல முடியாது. அந்த தூங்கும்போது இருந்த நிலையை இப்போவே கொண்டு வந்தா அதுதான் சிவம்.

**கே: அவருக்கு உருவம் இல்லையா?**

ப: நமக்கு உருவம் இருக்கா?

அதை முதல்லே கண்டுபிடிப்போம். தூங்கும்போது நீங்க இல்லாமலா போனேள்? அப்போ ஏதாவது உருவம் உங்களுக்கோ, உலகத்துக்கோ இருந்துதா? ஆனா நீங்க இருந்தேள். அப்போ இருந்த 'நான்'தான் இப்பவும் இருக்கு. தூக்கத்தோட அனுபவத்தை வெச்சுப் பாக்கும்போது... நீங்க உடம்பு இல்லை. இப்பவும் அதே நான்கற அனுபவம்தான் இருக்கு. எது இடைவிடாமலும், மாறாமலும் இருக்கோ...அதுதான் ஸத்யம். நான்கறதுதான் இடைவிடாமலும், மாறாமலும் இருக்கு. அது ஆனந்தமாவும் இருக்கு. தூக்கம் சுகம்னுதான் சொல்றோம். தூக்கத்திலே நான்கறதுக்கு உடம்பு இல்லை. உருவம் கிடையாது. நமக்கே உருவம் இல்லைங்கறப்போ அவருக்கு மட்டும் எப்படி? நமக்கு உருவம் இருந்தா... அவருக்கும் இருக்கும். நமக்கு இல்லேன்னா... அவருக்கும் இல்லை.

**கே: அப்போ ஏன் அவரை சிவன்னு சொல்றோம்?**

ப: சிவம்ன்னா ஆனந்தத் திரள் உருன்னு அர்த்தம். மேன்மையானது.

(309) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: 'அஹம் பிரஹ்மாஸ்மி' 'பிரம்மைவாஹம்' இந்த இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?**

ப: 'அஹம் பிரஹ்மாஸ்மி' பிரத்யக்ஷ விருத்தி. அதாவது நேர் அனுபவம். நான்கறதோட அனுபவத்தோட ஆரம்பமாறது.

'பிரம்மைவாஹம்' பரோக்ஷ ஞானம். தெரியாத பிரம்மத்துலேர்ந்து ஆரம்பமாறது.

(310) *டங்கன் கிரீன்லீஸ் கேட்டார்.*

**கே: வேலை காரணமா தியானம்ன்னு பண்றதுக்கு முடியலை. வேலை செய்யும்போது நான்கற உணர்வை ஞாபகம் வச்சுக்கொண்டா போதுமா?**

ப: மனம் பலப்பட்டா நான்கற உணர்வு எப்பவும் இருக்கும். திரும்பத்திரும்ப அப்பியாசிக்கறதனாலேயே மனம் பலம் பெறும். அப்படிப்பட்ட மனம் 'நான்'கற தாரையை விடாது. வேலையோ... இல்லே சும்மாயிருந்தாலும்... அந்தத் தாரை தடைபடாமலும் பாதிக்கப்படாமலும் இருக்கும்.

**கே: அப்போ தனியா தியானம்ன்னு ஒண்ணு தேவை இல்லையா?**

ப: இப்போவே தியானந்தான் நம்மளோட ஸ்வபாவம். பிற நினைப்பு குறுக்கிடறதாலே அதைத் தெரிஞ்சுக்க முடியலே. நினைப்பு இல்லேன்னா... நாம மட்டுந்தான் இருப்போம். நினைப்பு நம்மளோட ஸ்வபாவம் அது. அதை இப்போ நினைப்புகளை விலக்கி அனுபவிக்கறோம்... தியானம்ங்கற பேர்லே.

அப்பியாசம் திடமாயிடுத்துன்னா... தியானம் இயல்பா வெளிப்படும். தியானத்துக்குன்னு முயற்சி பண்ணினா... மத்த நினைப்புகள் பலமா வெளியே வரலாம். வெளியே வர்றது நல்லது. உள்ளே இருக்கறது எல்லாம் வெளியே வராம எப்படி

நாசமாகும்? வெளியே வர்றது நாசமாகறதுக்குத்தான். மனதை பலமாக்கறதுக்குத்தான்.

**கே: எல்லாம் பிரம்மம்ன்னு சொல்றாங்களே!**

ப: ஆமாம் எல்லாம் பிரம்மம்தான். ஆனா உங்களை விட்டு எல்லாம் தனியா இருக்குங்கற பக்குவத்திலே அதைச் சொல்லக்கூடாது; விலக்கணும். அதாவது எல்லாம் நாமதான்கற அனுபவமில்லாமே சொல்லக்கூடாது. அந்த அனுபவத்திலே உன்னை விட்டு எதுவும் தனியா இல்லேங்கறப்போ... எல்லாம்ன்னு சொல்லத் தேவையில்லை. ஏன்னா... இங்கே பிரம்மம் மட்டும்தான் இருக்கு. அதைத்தவிர வேற ஒண்ணும் இல்லை.

**கே: ரிபு கீதையிலே முதல்லே எல்லாம் பொய்ன்னு சொல்லிட்டு கடைசியிலே எல்லாம் பிரம்மம்ன்னு சொல்லிடறாங்களே எப்படி?**

ப: பலவாப் பாக்கும்போது பொய். ஏன்னா... அசத்து. இருப்பு இல்லை. அதையே பிரம்மமா பாக்கும்போது... ஸத்யம். ஏன்னா... அது பிரம்மத்தோட இருப்பை வச்சிருக்கு.

**கே: அப்போ ஏன் நீங்க உபதேசசாரத்துலே உடம்பை ஜடம்ன்னு சொல்றீங்க?**

ப: நீங்க உங்களை எது வரைக்கும் உடம்புன்னு கருதறேளோ... அது வரைக்கும் அதை ஜடம்ன்னு சொல்லணும். நீங்க ஆத்மாவைத் தெரிஞ்சுகொண்டா... உடம்பும் ஆத்மாதான்னு தெரிஞ்சுப்பேள். அப்புறம் யாரும் கேள்வி கேக்கமாட்டோம். என்னை மாதிரி யாரும் அதை ஜடம்ன்னு சொல்ல மாட்டா.

**கே: விவேகம்கறது ஆத்மா.... அனாத்மாவைப் பிரிச்சு தெரிஞ்சுக்கறதுதானே? அனாத்மான்னா என்ன?**

ப: உண்மையிலேயே அனாத்மான்னு ஒண்ணு கிடையாது. அனாத்மாவும் ஆத்மாவிலேயேதான் இருக்கு. அனாத்மாதான் ஆத்மாவைப் பத்திப் பேசறது. ஏன்னா... தன்னை

மறந்ததனாலேயே அனாத்மாவையே நான்னு நினைக்கறது. ஆனா அதுவும் ஆத்மாதான்.

(306) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: தியானம் பண்ணணும்னா ஸ்தூலமா ஏதாவது அவசியம். நான்கறதுலே எப்படி தியானம் பண்றது.**

ப: நாம ஸ்தூல நாம ரூபத்திலேயே நல்லா ஊறிட்டோம். அதனாலே தியானத்துக்கு ஸ்தூலமான ரூபம் தேவப்படறது. விசாரத்திலே நாம எதை விசாரிக்கறோமோ அதே கடைசியிலே மிஞ்சும். விசாரம் பண்ணா மத்த நினைவுகள் மறைஞ்சுடும். விசாரம் பண்றதுக்கான அவசியம் மத்த நினைவுகள் இருக்கற வரைக்கும்தான்.

நீங்க உண்மையிலேயே எங்கே இருக்கேள்? நீங்க இருக்கறதாலே தானே விசாரமே பண்றேள்! விசாரம் பண்றதுக்கு விசாரி ஒருத்தன் இருக்கணுமே!

விசாரம் மத்த நினைவுகளைப் போக்கி, விசாரிக்கறவன்லே நிக்க வைக்கும். அவன் விசாரத்தாலே மூலத்திலே ஐக்கியமாகணும். மூலத்திலே சில சமயம் மயக்கத்தாலும், தினம், தினம் தூக்கத்திலேயும், மரணசமயத்திலேயும் பிரஞ்ஞையில்லாம ஐக்கியமாவோம்.

உண்மையிலேயே விசாரம்னா என்ன? மரணத்தை பிரஞ்ஞையோட அனுபவிக்கறது. அதைத்தான் மூலத்திலே பிரஞ்ஞையோட ஐக்கியமாறதுன்னு சொல்றேன். அப்புறம் மரணபயமோ, மயக்கத்திலேயோ, தூக்கத்திலேயோ பிரஞ்ஞையில்லாம மூலத்திலே ஒடுங்கறது மறைஞ்சிடும். ஏன்னா.... உன்னாலே இப்போ பிரைஞ்ஞையோட மூலத்திலே ஒடுங்க முடியும்.

ஏன் மரணத்துக்குப் பயப்படணும்? மரணம்னா... நாம இல்லாம போயிடமாட்டோம்.

தூக்கத்தை விரும்பறோம்; மரணத்துக்குப் பயப்படறோம்.

இப்போ எதையாவது சிந்திச்சுக்கொண்டா இருக்கேள்! இப்பவும் நீங்க இருக்கேள்லியா.... தூக்கத்திலே நீங்க இல்லாமையா போயிட்டேள்! குழந்தைகூட தூக்கத்தைப் பத்திச் சொல்லும்போது 'சுகமாத் தூங்கினேன்'னு சொல்றது. தூங்கும்போது நாம இருக்கோம். நல்லா புலப்படலேன்னாலும் அதை நினைவுகூர்றோம்.

எப்பவும் 'இருக்கறது'தான் நம்மளோட ஸ்வபாவம். பிரஞ்ஞைதான் நம்மளோட ஸ்வபாவம். தூக்கத்திலே பிரஞ்ஞை இல்லேங்கறது, விழிப்புநிலையிலே இருக்கற போலி அறிவையே நம்மளோட இருப்பா நினைக்கற நினைப்பு வேகத்தாலேதான்.

இந்த உலகம், உடம்பு எல்லாம் உண்மைன்னு ஊறியிருக்கறதாலே... இந்தப் போலி அறிவையே நம்மளோட இருப்பா நினைக்கறோம். தூங்கும்போது யாராவது நான் இல்லேன்னு சொல்றோமா? இப்போ விழிப்பு வந்த உடனே... அதாவது இந்தப் போலி அறிவு வந்தவுடனேதான் சொல்றோம். அப்போ தூக்கத்திலே நான் இல்லேன்னு எல்லோரும் சொல்றது இந்தப் போலி அறிவு அங்கே இல்லேங்கற உண்மையைத்தான் சொல்றோமே தவிர இருப்பறிவை இல்லே.

(306) **திருவாசகத்தைப் பற்றிய பேச்சில் பகவான் குறிப்பிட்டது.**

சமயக் குரவர்கள் நால்வருமே முதல் வரியிலேயே அவா அவா அனுபவத்தையே சொல்லியிருக்கா

1. அனன்ய பக்தி.

சுந்தரர்... '**எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை**'ங்கறார்.

2. ஒரு சிறிதும் மறவாமை.

திருநாவுக்கரசர்... '**ஏற்றாய் உனக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்**'ங்கறார்.

3. மனமற்ற நிலை.

மாணிக்கவாசகர்... **'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க'**ங்கறார்.

4. நான்கறது இல்லை; நீயே இங்கே இருக்கே.

ஞானசம்பந்தர்... **'என் உள்ளங்கவர் கள்வன்'**ங்கறார்.

இந்த நாலும் ஒரே பொருள்தான்.

**கே: 'இமைப்பொழுதும் என் நெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க'! ஆனா இந்த உண்மை அனுபவமா எங்களால உணரப்படலையே!**

**ப:** காலக்கிரமத்திலே அனுபவத்துக்கு வரும். அதுவரைக்கும் பக்திதான் இருக்கே! நல்லாப் பிடிச்சுக்கோங்கோ.

'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்'னு சொல்றதே ஒரு விதத்திலே ஆச்சர்யம்தான். இறைவன் நம்மளை விட்டு எப்போவாவது நீங்கியிருக்கானா? நாமதான் நம்மளோட மனசை அலையவிட்டு அவனை விட்டு நீங்கிட்டோம். அவன் எப்பவும் ஒரே மாதிரிதான் இருக்கான். நம்மளோட மனசு அலையலேன்னா... அப்போதான் 'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்'னு சொல்ல ஆரம்பிச்சுடறோம்.

(307) **மைசூர் சாமாஅண்ணா கேட்டார்.**

**கே: அஹம் ஸ்புரணம்னா என்னன்னு தயவுசெஞ்சு சொல்லுங்க.**

**ப:** 'நான்'கறது தூக்கத்திலே தெளிவா விளங்க மாட்டேங்கறது. விழிச்சவுடனே உடம்பு தொடர்பிலேதான் நல்லா அனுபவமாறது. அதாவது அனாத்மாவோட சேர்க்கையாலேதான் அனுபவம் ஏற்படறது. இந்த அனாத்ம சேர்க்கையாலே அனுபவமாகற நான்கறதுக்கு பெயர் 'அஹம் விருத்தி'. அதுவே அஹம் அனாத்மாவை விட்டுடுத்துன்னா... ஆத்மாவைப் பிடிச்சுக்கும்.

இப்படி அஹம் ஆத்மாவையே குறிச்சு நின்னா அதுதான் அஹம்ஸ்புரணம். இது ஞானிகளுக்கு இயல்பா முயற்சி இல்லாம இருக்கும். இதைத்தான் ஞானிகள் ஞானம்ன்னும், பக்தி மார்க்கத்திலே ப்ரபத்தி — முழுமையான சரணாகதின்னும் இறைபணி நிற்றல்னும் சொல்றா.

இந்த அஹம் ஸ்புரணம் எல்லோருக்கும் எப்பவும் தூக்கத்திலேயும், இடைவிடாம இருக்கு. ஆனா தெளிவா விளங்கறது இல்லை. இதை எடுத்தவுடன் தூக்கத்திலே அனுபவிச்சுட முடியாது. முதல்லே விழிப்பு நிலையிலேதான் அனுபவமாகும். மூணு நிலையிலேயும் ஆதாரமாயிருக்கற நம்மளோட ஸ்வபாவம் அது.

விழிப்பு நிலையிலே, நம்மளோட முயற்சியாலேயே அது அனுபவிக்கப்படறது. ஆத்மா உணரப்படறது. அனுபவ முதிர்ச்சியிலே அது இடைவிடாம எப்பவும் இருக்குன்னு புரியும். அனுபவிக்கப்படும். இதை இப்போ அகண்டாகார விருத்தின்னு சொல்றா.

வேற வார்த்தை சரியா விளக்க முடியாததாலே இதையும் விருத்தின்னு சொல்றா. அதுக்காக அது விருத்தி இல்லை. அதாவது சமுத்திரத்திலே கலந்த நதியை சமுத்திராகார நதின்னு சொல்றமாதிரிதான்... இந்த விருத்தி சமாச்சாரமும். பொதுவா விருத்தின்னா... குறுகிய காலத்திலேயே இருக்கும் போலி அறிவு. அதாவது.... நினைப்புகளாலேயும், புலன்களாலையும் மலினமான இருப்பறிவு. விருத்தி மனசோட தொழில். ஆனா அஹம்ஸ்புரணம் இடைவிடாத இருப்பறிவு. மனம் கடந்தது. இது ஞானிகளுக்கு சகஜமாயிருக்கும். அது இடைவிடாத அனுபவம். சுட்டறிவு அதாவது போலி அறிவு அடங்கும்போதுதான் அஹம் ஸ்புரணம் ஆரம்பிக்கும். அஹம் விருத்தி கண்டம். அஹம்ஸ்புரணமோ அகண்டம்... இடைவிடாத இருப்பு. எல்லா நினைவுகளும் ஒடுங்கும்போது அஹம் ஸ்புரிக்கும்.

(311) *சுவிஸ் பெண்மணி கேட்டார்.*

**கே: தியானம் பண்ணினா தலைவலிக்குது? ஏன்?**

ப: தியானம்... தியானிக்கறவன் இந்த இரண்டும் நல்லாப் புரிஞ்சா... வேற வேற இல்லே. ஒண்ணுதான்னு தெரியும். எந்தத் தலைவலியும் இருக்காது.

**கே: இரண்டும் வேற வேறதானே, எப்படி ஒண்ணுன்னு சொல்றீங்க?**

ப: அது உங்களோட தவறான பார்வையாலே ரெண்டாத் தெரியறது. அங்கே ஒண்ணுதான் இருக்கு. பேதம் இல்லை. தியானத்திலே போலி அறிவு மறைஞ்சுடறது. இருக்கேன்கற உண்மையான அறிவு மாத்திரம் இருக்கு.

'பரலோக சாம்ராஜ்யம் உனக்குள்ளே இருக்கு'ன்னு பைபிள்லே சொல்றாள்லியா... நீ உங்களை உடம்புன்னு நினைச்சா அந்த வாக்கியம் பொருந்தாது. உண்மையிலேயே நீங்க யார்ன்னு தெரிஞ்சுகொண்டா... பரலோகசாம்ராஜ்யம் மட்டும் இல்லை, எல்லாம் உங்ககிட்டேதான் இருக்குன்னு தெரிஞ்சுப்பேள். நான்கற அகந்தை வந்த உடனே எல்லாக் கற்பனையும் வந்துடறது 'திருஷ்டிம் ஞானமயம் கிருத்வா பஸ்யேத் பிரம்மயம் ஜகத்'. பார்வை சரியாயிடுத்துன்னா... உலகம் உங்கள்லே இருந்து வேறா இருக்காது.

இப்போஉங்களோடபார்வைவெளிமுகமாஇருக்கறதாலே... நீங்க வெளியேன்னு ஒண்ண சொல்றேள். அதனாலே உங்களை உள்ளே பாருங்கோன்னு சொல்ல வேண்டியதா இருக்கு. உள்ளேங்கறது, வெளியே ஒண்ண நீங்க பாக்கறதாலேதான். உண்மையிலேயே நீங்க உள்ளேயும் இல்லை; வெளியேயும் இல்லை. பரலோக சாம்ராஜ்யம்ன்னு ஒண்ணு உண்மையிலேயே இல்லை. அது உண்மைன்னா... தூங்கும்போதும் இருக்கணுமே. ஏன்னா... ஸத்யம் எப்பவும் மாறாம இருக்கணும். தூங்கும்போது உள்ளே வெளியேன்னெல்லாம் இருக்கா? கிடையாது.

**கே: எனக்கு ஞாபகம் இல்லை.**

**ப:** தூங்கும்போது அங்கே எதுவும் இல்லே. இருந்தா ஞாபகம் இருக்கும். ஆனா நீங்க இருக்கேள்னு ஒத்துக்கறேளோல்யோ... அதே நீங்கதான் இப்போ பேசிக்கொண்டு இருக்கேள். ஏகமாயிருந்த நீங்கதான் இப்போ பேதத்தைப் பாக்கறேள். அந்த இருப்புதான் பூரண அறிவு. அதுதான் சுகம். தூக்கத்திலே எல்லாரும் அதை அனுபவிக்கறோம். அந்த நிலையை விழிப்பிலேயே கொண்டு வரணும். அதுதான் ஜாக்ர ஸுஷுப்தி. அதுதான் முக்தி.

**கே: அகந்தைதான் மறுபிறப்பு எடுக்குதா?**

**ப:** ஆமாம். மறுபிறப்புன்னா என்ன?

நான்கற நினைப்பு ஒண்ணுதான். புது உடம்பு தோன்றும். அதை அகந்தை பிடிச்சுக்கும். அகந்தை மாறாது. அது ஒரு உடம்பை விட்டுட்டுத் தேடி இன்னொன்னை எடுத்துக்கறது.

இந்த ஸ்தூல உடம்பையே எடுத்துக்கோங்கோ... நீங்க லண்டன் போறேன்னு வச்சுக்கோங்கோ... எப்படிப் போவேள்?

ஒரு வாகனத்திலே துறைமுகம் போவேள்! கப்பல்லே ஏறுவேள்! லண்டன்லே கொஞ்ச நாள்லே இறங்கிடுவேள்! என்ன நடந்தது? வாகனம் நகர்ந்தது. உடம்பு நகரலே. ஆனா உலகத்தோட ஒரு மூலையிலே இருந்து இன்னொரு மூலைக்குப் போனேன்னு சொல்லுவேள்! வாகனத்தோட போக்குவரத்தை உங்க மேலே ஏத்திக்கொண்டேள்!

அப்படித்தான் அகந்தையும்.... மறுபிறப்பும் இப்படித்தான். கனவிலே எடுத்துக்கோங்கோ... கனவுலகத்துக்கு நீங்க போறேளா? இல்லே... கனவுலகம் உங்க மேலே ஏற்படறதா? நம்ம மேலே ஏற்படறது அப்படித்தான் மறுபிறப்பும். அகந்தையும்... இது எல்லாத்திலேயும் மாறாம இருக்கும்.

தூங்கும்போது காலம், தேசம் கிடையாது. அது நான்கற எண்ணம் வந்தவுடனே வர்ற கற்பனை. நான்கற எண்ணம் வர்றதுக்கு முன்னாடி அந்தக் கற்பனை இல்லே. அதனாலே...

நாம காலம், தேசம் கடந்து இருக்கோம். நான்கற எண்ணத்துக்கு ஆரம்பம், முடிவு உண்டு. ஆனா உண்மையிலேயே நான்கறதுக்கு ஆரம்பமும் இல்லை. முடிவும் இல்லை. காலமில்லை. தேசமில்லை.

தூக்கத்திலே இருந்து விழிச்சவுடனே, உலகத்தைப் பாக்கறதுக்கு முன்னாடி நாம இருப்போமில்லையா... அதுதான் சுத்த 'நான்'. அதை நல்லா தெரிஞ்சுக்கணும்.

**கே: அது எனக்கு நல்லாத் தெரியலையே!**

ப: தெரிஞ்சுக்கறதுக்கு அது ஒரு பொருள் கிடையாது. நாமதான் அது.

யார் அதைத் தெரிஞ்சுக்க முடியும்?

எதைத் தெரிஞ்சுக்கறது?

எப்படித் தெரிஞ்சுக்கறது?

(312) *வி.கே.சோல்கர் கேட்டார்.*

**கே: உன்னைத் தெரிஞ்சுக்க! அல்லது உன்கிட்டே இருக்கற 'நான்'கறதைத் தெரிஞ்சுக்கன்னு சொல்றீங்க. அதை எப்படிச் செய்யறது? மந்திரம் மாதிரி நான் நான்னு சொல்லிக்கொண்டே இருக்கணுமா? இல்லே.... நான்கற ஞாபகத்தோட இருக்கணுமா?**

ப: அந்த மந்திரத்தைத் தானாகவே எந்த நேரமும் சொல்லிக் கொண்டேதான் இருக்கேள். முயற்சி இல்லாமலும் இடைவிடாமலும் இருக்கற இந்த அஜபை தெரியலேன்னா... ஜபம் பண்ணனும். ஜபம் முயற்சியுடையது. முயற்சி மத்த நினைப்பு வராம இருக்கறதுக்குத்தான். ஜபம் மானசீகமா மாறும்... தியானமாகும். கடைசியிலே அஜபை உணரப்படும். அது முயற்சி இல்லாம நடந்துகொண்டு இருக்கறதைத் தெரிஞ்சுப்பேள். அந்த முயற்சியற்ற நிலைதான் முக்தி நிலை... ஞானநிலை.

'நான்'கறது வெளியே இல்லை... எங்கேயும் தேடத் தேவையில்லை. அது உண்முகம். எப்பவும் இருக்கு. அதைத் தெரிஞ்சேதான் இருக்கேள். ஆனாலும் தெரியலேன்னு நீங்க சொல்றதாலே இடைவிடா கவனம் அது மேலே வேணும். வேற எதையும் செய்யத் தேவையில்லே. உங்க முயற்சி எல்லாமே பிற நினைப்புகளாலே, உங்களை மறக்காம இருக்கறதுதான்.

(313) கிரீன்லீஸ் கேட்டார்.

**கே: பகவான் நேத்து விசாரபரமா ஒருத்தர் இருந்தாலே... வெளி வேலைகள் தானாகவே நடக்கும்ன்னு சொன்னீங்க. சைதன்யரோட வாழ்க்கையிலே அவர் கிருஷ்ணரைப் பத்திப் பேச ஆரம்பிச்ச உடனேயே, உடம்பை மறந்து பேசிக்கொண்டேயிருப்பார்ன்னு சொல்றாங்க. எனக்கு ஒரு சந்தேகம். 'வேலையை அது பாட்டுக்கு நடக்கட்டும் விட்டுடறதா? அல்லது கொஞ்சம் அதுலேயும் கவனம் வச்சுக்கணுமா?**

ப: ஆத்மாதான் எல்லாம். ஆத்மாவுக்கு அன்னியமா நீங்க இருக்கேளா? ஆத்மா இல்லாமே வேலை நடக்கறதா? ஆத்மாவுக்கு வேறா உடம்பு இருக்கா? இங்கே எதுவும் ஆத்மாவுக்கு அன்னியமா இல்லை. ஆத்மா எங்கும் நிறைந்தது. அதனாலே நீங்க வேலையைக் கவனிச்சாலும் கவனிக்காவிட்டாலும் வேலை தானா நடக்கும். ஆத்மாவைக் கவனிக்கறதிலேயே.... வேலையை கவனிக்கறது அடங்கிடறது.

**கே: நான் கவனிக்கலைன்னா வேலை நடக்காது.**

ப: நீங்க உங்களை உடம்போட சம்பந்தப் படுத்திக்கற தாலேயே, [illegible] வேலை [illegible] நடக்கறதுன்னு [illegible] நினைக்கறேள்! ஆனா உடம்பும் அதோட செயல்களும், வேலையும் ஆத்மாவுக்கு அன்னியமா இல்லை. வேலையைக் கவனிச்சா என்ன? கவனிக்கலேன்னா என்ன? ஒரு இடத்திலே

நாம காலம், தேசம் கடந்து இருக்கோம். நான்கற எண்ணத்துக்கு ஆரம்பம், முடிவு உண்டு. ஆனா உண்மையிலேயே நான்கறதுக்கு ஆரம்பமும் இல்லை. முடிவும் இல்லை. காலமில்லை. தேசமில்லை.

தூக்கத்திலே இருந்து விழிச்சவுடனே, உலகத்தைப் பாக்கறதுக்கு முன்னாடி நாம இருப்போமில்லையா... அதுதான் சுத்த 'நான்'. அதை நல்லா தெரிஞ்சுக்கணும்.

**கே: அது எனக்கு நல்லாத் தெரியலையே!**

ப: தெரிஞ்சுக்கறதுக்கு அது ஒரு பொருள் கிடையாது. நாமதான் அது.

யார் அதைத் தெரிஞ்சுக்க முடியும்?

எதைத் தெரிஞ்சுக்கறது?

எப்படித் தெரிஞ்சுக்கறது?

(312) *வி.கே.சோல்கர் கேட்டார்.*

**கே: உன்னைத் தெரிஞ்சுக்க! அல்லது உன்கிட்டே இருக்கற 'நான்'கறதைத் தெரிஞ்சுக்கன்னு சொல்றீங்க. அதை எப்படிச் செய்யறது? மந்திரம் மாதிரி நான் நான்னு சொல்லிக்கொண்டே இருக்கணுமா? இல்லே.... நான்கற ஞாபகத்தோட இருக்கணுமா?**

ப: அந்த மந்திரத்தைத் தானாகவே எந்த நேரமும் சொல்லிக் கொண்டேதான் இருக்கேள். முயற்சி இல்லாமலும் இடைவிடாமலும் இருக்கற இந்த அஜபை தெரியலேன்னா... ஜபம் பண்ணனும். ஜபம் முயற்சியுடையது. முயற்சி மத்த நினைப்பு வராம இருக்கறதுக்குத்தான். ஜபம் மானசீகமா மாறும்... தியானமாகும். கடைசியிலே அஜபை உணரப்படும். அது முயற்சி இல்லாம நடந்துகொண்டு இருக்கறதைத் தெரிஞ்சுப்பேள். அந்த முயற்சியற்ற நிலைதான் முக்தி நிலை... ஞானநிலை.

'நான்'கறது வெளியே இல்லை... எங்கேயும் தேடத் தேவையில்லை. அது உண்முகம். எப்பவும் இருக்கு. அதைத் தெரிஞ்சேதான் இருக்கேள். ஆனாலும் தெரியலேன்னு நீங்க சொல்றதாலே இடைவிடா கவனம் அது மேலே வேணும். வேற எதையும் செய்யத் தேவையில்லே. உங்க முயற்சி எல்லாமே பிற நினைப்புகளாலே, உங்களை மறக்காம இருக்கறதுதான்.

(313) கிரீன்லீஸ் கேட்டார்.

**கே: பகவான் நேத்து விசாரபரமா ஒருத்தர் இருந்தாலே... வெளி வேலைகள் தானாகவே நடக்கும்ன்னு சொன்னீங்க. சைதன்யரோட வாழ்க்கையிலே அவர் கிருஷ்ணரைப் பத்திப் பேச ஆரம்பிச்ச உடனேயே, உடம்பை மறந்து பேசிக்கொண்டேயிருப்பார்ன்னு சொல்றாங்க. எனக்கு ஒரு சந்தேகம். 'வேலையை அது பாட்டுக்கு நடக்கட்டும் விட்டுடறதா? அல்லது கொஞ்சம் அதுலேயும் கவனம் வச்சுக்கணுமா?**

ப: ஆத்மாதான் எல்லாம். ஆத்மாவுக்கு அன்னியமா நீங்க இருக்கேளா? ஆத்மா இல்லாமே வேலை நடக்கறதா? ஆத்மாவுக்கு வேறா உடம்பு இருக்கா? இங்கே எதுவும் ஆத்மாவுக்கு அன்னியமா இல்லை. ஆத்மா எங்கும் நிறைந்தது. அதனாலே நீங்க வேலையைக் கவனிச்சாலும் கவனிக்காவிட்டாலும் வேலை தானா நடக்கும். ஆத்மாவைக் கவனிக்கறதிலேயே.... வேலையை கவனிக்கறது அடங்கிடறது.

**கே: நான் கவனிக்கலைன்னா வேலை நடக்காது.**

ப: நீங்க உங்களை உடம்போட சம்பந்தப் படுத்திக்கற தாலேயே, உங்களாலேயே வேலை நடக்கறதுன்னு நினைக்கறேள்! ஆனா உடம்பும் அதோட செயல்களும், வேலையும் ஆத்மாவுக்கு அன்னியமா இல்லை. வேலையைக் கவனிச்சா என்ன? கவனிக்கலேன்னா என்ன? ஒரு இடத்திலே

இருந்து இன்னொரு இடத்துக்கு நடந்து போறேள். ஒவ்வொரு அடியையும் கவனிச்சுக்கொண்டேவா இருக்கேள்! கொஞ்ச நேரத்திலே சேர வேண்டிய இடத்துக்குப் போயிடறோம். நடக்கற வேலை எப்படி நடக்கறதுன்னு பாருங்கோ! மத்தவேலையும் அப்படித்தான்.

**கே: அப்போ தூக்கத்திலேயே நடக்கற வியாதி மாதிரிதான்.**

**ப:** ஆமாம் அப்படித்தான்.

ஒரு குழந்தை நல்லா தூங்கிடுத்து... அதோட அம்மா தூக்கத்திலேயே அந்தக் குழந்தைக்கு சாப்பாடு ஊட்டறா. விழிச்சு இருக்கும்போது எப்படி சாப்பிடுமோ அப்படியே தூங்கிக்கொண்டே சாப்பிடறது. ஆனா அடுத்தநாள், 'அம்மா, நேத்து ராத்திரி நான் சாப்பிடலே'ங்கறது. ஊட்டின அம்மா, அதைப் பாத்தவா எல்லோருக்கும் தெரியும், குழந்தை சாப்பிட்டுத்துன்னு. ஆனா குழந்தை, 'எனக்குத் தெரியலே'ன்னு சொல்றது. ஆனாலும் சாப்பிடலேன்னு சொல்றது. அதுக்குத் தெரியலே. ஆனா காரியம் நடந்திருக்கு. தூக்கத்திலே நடக்கற வியாதி நல்ல உதாரணம் இதுக்கு.

இன்னொரு உதாரணம்.

மாட்டுவண்டி பிரயாணி ஒருத்தன் நல்லா தூங்கறான். வண்டி நகர்றது, போய்க்கொண்டே இருக்கு. அப்பப்போ நிக்கறது. சில சமயம் மாட்டை அவிழ்த்து ஜலம் காட்றா. இந்த மூணும் அதாவது நிக்கறது, நகர்றது, மாட்டை அவிழ்த்தது எதுவும் வண்டியிலே தூங்கறவனுக்குத் தெரியாது. தூங்கி முழிச்சா வேற இடத்திலே இருக்கான். நடந்தது எதுவும் தெரியாமே ஆனந்தமா தூங்கி அவன் பிரயாணம் முடிஞ்சுடறது.

அப்படித்தான் ஆத்மா ஒவ்வொருத்தரிடமும் இருக்கு. ஆத்மா உடம்பிலே தூங்கிக்கொண்டு இருக்குன்னு வச்சுப்போம்... விழிப்பு நிலை ஏற்படறதுதான் மாடு நகர்றது. வண்டி நகர்றது. இந்திரிய வியாபாரம் நடக்கறது. சமாதி நிலைதான் வண்டி நிக்கறது. மாடு நகராமே கயிறைப் பிடிச்சு

நிறுத்தி இருக்கு. இந்திரியங்கள் உடம்பிலே இருக்கு. ஆனா தொழிற்படலை. மாடு வண்டியிலேதான் இருக்கு. ஆனா நகரலே. இப்போ தூக்கநிலைதான் மாட்டை அவிழ்த்து ஓய்வு கொடுக்கறது. வண்டி நகரலே. இந்திரியங்கள் ஓய்ஞ்சுடுத்து.

இன்னொரு உதாரணம்.

சினிமாவிலே காட்சிகள் ஸ்கிரீன்லே தோன்றுகிறது. காட்சி ஸ்கீரினைப் பாதிக்காது. பாக்கறவா ஸ்கிரீனை விட்டுட்டு காட்சியைத்தான் கவனிக்கறா. ஆனா... காட்சி ஸ்கிரீனை விட்டுத் தனியா இருக்காது. ஆனாலும்... ஸ்கிரீனை யாரும் கவனிக்கறது இல்லே. இப்படித்தான் ஆத்மாவும் வேலையும். மனுஷன் வேலையைத்தான் கவனிக்கறான். ஆத்மாவை கவனிக்கறது இல்லை. ஆனா அவனும் ஆத்மாவை விட்டு அன்னியமா இல்லை. கவனிச்சாலும் கவனிக்கா விட்டாலும் வேலை தானா நடக்கும்.

**கே: சினிமாவை இயக்கறதுக்கு ஒருத்தர் இருக்கார்.**

ப: சினிமா ஜடம். ஜடப்பொருள்களாலே ஆனது. ஸ்கிரீன், விளக்கு எல்லாம் ஜடம். அதனாலே அதை இயக்கறதுக்கு ஒருத்தர் தேவைப்படறது, அறிவு தேவைப்படறது. ஆனா ஆத்மா அதுவே அறிவுதான். அதுக்கு அன்னிய அறிவு தேவையில்லை.

உடம்பு ஜடம். அதைச் செலுத்த ஒரு கர்த்தா வேணும். பொதுவாவே ஜனங்கள் தங்களை உயிருள்ள... அறிவுள்ள... தனிப்பட்ட ஒரு ஜீவன்னு நினைச்சுக்கறாள். தானாகவே இயங்கக்கூடியவர்களா நினைச்சுக்கறாள். அதனாலேதான் பகவத் கீதையிலே கிருஷ்ணர் 'எல்லா ஜீவன்களின் ஹிருதயத்திலே இருந்து நானே இயக்கறேன்'னு சொல்றார். உண்மையிலேயே இங்கே ஜீவர்களும் இல்லை. அதை இயக்கறதுக்குக் கர்த்தாவும் இல்லை. ஆத்மாவிலே எல்லாம் அடங்கிடும். சினிமா, பாக்கறவன், நடிகர்கள், சினிமா காட்டினவா, ஒளி எல்லாம் ஆத்மாதான்.

உங்களை உடம்புதான்னு நினைச்சுக்கொண்டு... 'நான்தான் எல்லாம் செய்றேன்'னு நினைக்கறது... ஸ்கிரீன்லே வர்ற நடிகன் 'நான் ஸ்கிரீன்லே இல்லாம நடிக்கறேன்'னு சொல்ற மாதிரிதான். அப்படித்தான் இங்கே... ஆத்மாவுக்கு அன்னியமா நான் தனியா வேலை பாக்கறேன்னு நினைக்கறது.

**'சித்து நான் நிறைந்தோன் என்ற**
**திடம் மறவாதிருந்தால் எத்தனை**
**எண்ணினாலும் எது செய்தாலும்**
**என்ன நித்திரை உணர்ந்த பின்பு**
**நிற்கின்ற கனாவே போல**
**அத்தனையும் பொய் தானே**
**ஆநந்த வடிவு நானே'** ....ன்னு கைவல்ய நவநீதம் சொல்றது.

காக்கைக்கு ஒரு விழிதான் இரண்டு கண் இந்தப் பக்கமும் அதே விழியை வச்சுப் பாக்கும். அந்தப் பக்கமும் அதே விழியை வச்சுப் பாக்கும்.

யானைக்குத் துதிக்கை ஒண்ணுதான். அதை வச்சே அது சுவாசிக்கும். ஜலமும் குடிக்கும், வேலையும் பாக்கும்.

பாம்புக்குக் கண்ணு ஒண்ணுதான் அதை வச்சே அது பாக்கும். கேக்கும்.

அந்த மாதிரிதான் ஆத்மாவைக் கவனிக்கறதும்; வேலை பாக்கறதும். அவாவாளோட பக்குவத்தைப் பொறுத்தது.

**கே: ஸ்தூலமான உலகத்துலே, ஸ்தூலமான உடம்பை வச்சுதான் நடமாட வேண்டியது இருக்கு. தூக்கம் வரும்போது வேலை பாத்தாலோ, வேலை பாக்கும்போது தூங்கினாலோ, வேலை கெட்டுடும்.**

ப: தூக்கம் அறியாமை இல்லை. அது சுத்த விழிப்பு நிலை. விழிப்பிலே அறிவு இல்லை. அறியாமையே இருக்கு. தூக்கத்திலே பூரண அறிவு இருக்கு. விழிப்பிலே முழுமையான அறியாமையிருக்கு. உன்னுடைய உண்மை நிலை இது

இரண்டும் உடையதுதான். அதைத் தாண்டியும் இருக்கு. ஆத்மா அறிவு, அறியாமை அற்ற அறிவு.

தூக்கம், விழிப்பு, கனவு, இந்த மூணும் ஆத்மாவிலே ஏற்படற நிலைகள். அது பாட்டுக்கு நடந்துகொண்டு இருக்கும். இதுதான் ஒரு ஞானியோட நிலை. அவன் விழிச்சு இருந்தாலும், தூங்கினாலும், கனவு கண்டாலும், சமாதியிலே இருந்தாலும் அவனுக்கு ஒண்ணும் இல்லை. இந்தக் கேள்வியெல்லாம் அஞ்ஞானிக்குத்தான். இல்லேன்னா... கேள்வியே வராது.

**கே: ஆமாம் ஆத்மாவுக்கு இந்த கேள்வி இல்லை. யார் இருக்கா அங்கே கேள்வி கேக்கறதுக்கு? ஆனா நான் ஆத்மாவை இன்னும் உணரலை.**

ப: இதுதான் தடை. அந்தத் தடை போகணும். 'நான் இன்னும் ஆத்மாவை உணரலே', 'நான் அஞ்ஞானி' இந்த நினைப்புதான் பெரியதடை. இதைப் போக்கணும். நீங்க ஆத்மாவேதான். ஆத்மாவை விட்டு எப்பவாவது வேறயா இருந்திருக்கேளா?

(314) **பகவான் முன்னிலையில் இருந்த ஒருவர் கேட்டார்.**

**கே: நேத்து பகவான் ஆத்மா தூக்கத்துலே சுத்த அறிவாயிருக்குன்னும் தூக்கத்துலே இருந்து விழிக்கற இடைவெளியிலே ஆத்மாவை நல்லா உணரலாம்ன்னும் சொன்னீங்க, அதை மறுபடியும் விளக்கமா சொல்லணும்.**

ப: ஆத்மா தூங்கும்போது சுத்த அறிவாயிருக்கு, அது முதல்லே 'அஹமா' (நான்) மாறறது... இதம் (உலகம்) இல்லாமே. அதுதான் இடைவெளி... இரண்டு நிலைக்கும். அடுத்து முழு விழிப்பா மாறும்போது... அஹமாவும் (நான்) இதமாவும் (உலகம்) வெளிப்படறது.

இந்த அஹத்தை வச்சுத்தான் இதத்தை அனுபவிக்கறோம். விசாரத்திலே 'நான் யார்? ன்னு உண்முகமாகும்போது... இதம்

மறைஞ்சு வெறும் அஹம் மாத்ரமா இருக்கும். அந்த இடைவெளி அனுபவமாகும். அந்த அஹம்மாத்ர நிலையைத்தான் 'நான் — நான்'ங்கற ஸ்புரணம்னு சொல்றா. அந்த நிலையிலே நல்லா நின்னா... இந்த அஹம் விருத்திக்கு ஆதாரமா இருக்கற ஆத்மா நல்லா அனுபவமாகும். அதாவது தூக்கத்திலே ஆத்மா எப்படி அனுபவமாகுமோ... அப்படியே அனுபவமாகும். பிறகு அதுவும் ஆத்மாவிலே கரைஞ்சுடும்.

தூக்கத்தைப் பொதுவா உலக வழக்குலே அஞ்ஞானம்னு சொல்றா. அது விழிப்பிலே இருக்கற போலி அறிவு... அங்கே இல்லாததாலே அப்படிச் சொல்றா. உண்மையிலேயே விழிப்பிலே இருக்கற போலி அறிவுதான் அஞ்ஞானம். தூக்கத்திலே இருக்கறது பூரண அறிவு 'பிரஞ்ஞானம்'. ஸ்ருதி 'பிரஞ்ஞானம் பிரம்மம்'ன்னு சொல்றது. தூக்கத்தை அனுபவிக்கறவனுக்குப் பெயர் பிராஞ்ஞன். மூணு நிலையிலும் பிரஞ்ஞானம் இருந்தாலும், தூக்கத்திலே இருக்கறவனைத்தான் பிராஞ்ஞன்னு ஏன் சொல்றான்னா... அங்கேதான் பிரஞ்ஞான கனமா இருக்கான்.

அது என்ன பிரஞ்ஞானகனம்?

விஞ்ஞானம் ஞானம்ன்னு இரண்டு சொல்றா. இந்த இரண்டும் சேந்துதான் இயங்கும். அதாவது மூணு நிலையிலேயும் நாம மாறாம நிர்விசேஷமா இருக்கோமில்லையா... அதை 'ஞானம்ன்னு சொல்றா. விழிப்பிலே நான்னு ஒண்ணு கிளம்பறதில்லையா, அதை 'விஞ்ஞானம்'ன்னு சொல்றா. இந்த விஞ்ஞானம் அனாத்மாவை அதாவது உடலுலகங்களைப் பிடிச்சுக்கொண்டா அது அஞ்ஞானம். அதைத்தான் போலி அறிவுங்கறோம். அது ஆத்மாவைப் பிடிச்சுக்கொண்டா விஷ்பஷ்ட ஞானம், மெய்ஞானம், பிரம்மாகார விருத்தி ஞானம். அதுதான் அகண்டாகார விருத்தி ஞானம். இந்த போலி அறிவு அதாவது விஞ்ஞானம் சுத்தமா இல்லேன்னா... அது சுத்த பிரஞ்ஞானமா இருக்கும். தூக்கத்திலே இப்படித்தான் இருக்கு.

பிரஞ்ஞானமே திரண்டு மொத்தமா உருப் பெற்று இருக்கற மாதிரி தூக்கத்திலே இருக்கறதாலே அதுக்குப் பெயர் பிரஞ்ஞானகனம்.

ஐத்திரேய உபநிஷத் இந்தப் பிரஞ்ஞானம், விஞ்ஞானம், அஞ்ஞானம், சம்ஞானம் எல்லாம் பிரம்மம்தான். இதெல்லாம் பிரம்மத்தோட வேறு வேறு பெயர்ன்னு சொல்றது.

வெறும் அறிவை எப்படி அனுபவிக்க முடியும். அனுபவம் விஞ்ஞானம் இருந்தாத்தான் முடியும். அதாவது இதம் தோன்றாத அஹத்தைப் பிடிக்கணும். அதுக்குத்தான் பிரஞ்ஞான கனம் அனுபவமாகும். விழிப்பிலே இருக்கற அஹம் இதத்தோட சேர்ந்து மலினமாயிடுத்து. அதுக்கு சுத்த அறிவு அனுபவமாகாது, அதுக்குத்தான் சுத்த நானை அதாவது இதம் இல்லாத நான்கறதை பிடிச்சுக்கணும்.

இந்த சுத்த நானை எப்படிப் பிடிக்கறது?

விவேகசூடாமணியிலே சுத்த 'நான்'. விஞ்ஞான மய கோசத்திலே அஹம் அஹம்னு ஸ்புரிச்சுகொண்டே இருக்கறதா சொல்லியிருக்கு. திரிபுர ரகஸ்யம் போன்ற நூல்கள்லே, இரண்டு நினைப்புக்கு இடையிலே நான் சுத்தமா இருக்குன்னு சொல்லப்படறது. இந்த சுத்த நான்கறதா நிக்கறதைத்தான் தியானம்ன்னு சொல்றோம். இப்படி சுத்த நானைப் பிடிச்சு, பிரஞ்ஞானகனத்தையே லட்சியமாக வச்சு நிக்கறதுதான் அப்பியாசம். இந்த முயற்சியிலே தனித்துவம் இருக்கும். அதாவது விருத்தி இருக்கும். இந்த விருத்தி மூலம் த்ருடமா அடையப்பட்ட ஸ்திதியே ஞானம்.

விவேக சூடாமணியிலே சுத்த ஆத்மா அசத் விலட்சணமானது - அதாவது அது அசத் மட்டுமல்லாது அதையும் தாண்டினதுன்னு சொல்லப்படறது. இங்கே அசத்ங்கறது போலி நான்... விழிப்பிலே இருக்கே அது.

அஸத் விலட்சணமானதுன்னா... ஸத் அதாவது தூக்கத்திலே இருக்கற நான். அதை ஸத் அஸத் அல்லாததுன்னு சொல்றா. எல்லாம் ஒண்ணுதான், அக்ஷேச சாட்சின்னு சொல்றா... எல்லாம் அறியும் சாட்சி.

பிரஞ்ஞான கனம்....ன்னா ரொம்ப சுத்தமான அதாவது தூக்கத்திலே இருக்கற 'நான்'. அதை விழிப்பிலே இருக்கற இந்த மலினமான 'நான்'கறதை வச்சு எப்படி உணர்றது?

சுகமாத் தூங்கினேன்னு சொல்றோம். அப்போ... அனுபவமா இல்லேன்னா எப்படி அனுபவிக்காததை சொல்ல முடியம். அது சுத்தமான பிரஞ்ஞான கனம்ன்னா... தூக்கத்திலே சுகத்தை எப்படி அனுபவிக்க முடியும்? இப்போ அந்த அனுபவத்தை நினைவு கூர்றது யார்?

அதை நினைவு கூர்றவன்தான் விஞ்ஞானாத்மா. அதாவது போலி 'நான்'. எதை நினைவு கூர்றான்... பிரஞ்ஞானாத்மாவை அதாவது சுத்த நானை.

அது எப்படிப் பொருந்தும்? இந்த விஞ்ஞானத்மா (போலி நான்) தூங்கும்போது இருந்தானா? ஆனா அவன் சுகமாத் தூங்கினேன்னு சொல்ற அனுபவத்திலே இருந்து அவன் அங்கே இருந்திருக்கணும்னு தெரியறது. அப்போ அவன் அங்கே எப்படி இருந்தான்?

கண்டிப்பா இப்போ இருக்கற மாதிரி இல்லை. அங்கே ரொம்ப சூட்சுமமா இருக்கான். அதி சூட்சுமமான விஞ்ஞானாத்மா (போலி நான் தனித்துவம்) ஆனந்தகனமான பிரஞ்ஞானாத்மாவை மாயா கரணத்து மூலமா அனுபவிக்கறது. இது சந்திர ஒளியை மரத்தோட கிளைகள் இலைகளுக்கு ஊடே பாக்கற மாதிரி.

இந்த சூட்சுமமான விஞ்ஞானாத்மா... ஸ்தூலமான விஞ்ஞானத்மாவுக்கு பரிச்சயமில்லை. சரி. ஏன் சூட்சுமமா தூக்கத்திலே இருக்கான்னு சொல்லணும்? நாம சுகமா தூங்கினோம்ங்கற அனுபவத்தை மறுத்தா அப்படி சொல்லலாம். ஆனா அப்படி சுகானுபவம் மறுக்க முடியலே. எல்லோரும் தூங்கப் பிரியப்படறோமே!

இது என்ன முடிவுக்குக் கொண்டு வர்றதுன்னா... அனுபவிக்கறவன், அனுபவிக்கும் பொருள், அனுபவம் மூணு நிலையிலேயும் இருக்கு. ஸ்தூல சூட்சும தரம் மாறுபடறது.

தூக்கத்திலே இருந்து விழிக்கும்போது அஹம் சுத்தமாயிருக்கு. ஏன்னா... 'இதம்' அடங்கியிருக்கு. 'அஹம்' மேலோங்கியிருக்கு.

ஏன் சுத்த நான் அனுபவமாகலேன்னா... அதோட பரிச்சயம் நமக்கு இல்லை. அது தெரியணும்னா... முழு விழிப்போட அது என்னன்னு பாக்கணும். அதனாலே அதுக்கு முயற்சி பண்ணி, அதை விழிப்பிலேயே அனுபவிங்கோ.

(315) ஆசிரம சேவகர்களில் ஒருவர் கேட்டார்.

**கே: சத்யமும் (ஆத்மா) மாயையும் (மனம்) ஒண்ணுதான்னு பகவான் சொன்னது. அது எப்படி?**

ப: தாந்திரீகர்களும் மத்தவாளும் சங்கரரோட மாயா வாதத்தை சரியா புரிஞ்சுக்காம சொல்றா. சங்கரர் என்ன சொல்றார்.

- பிரம்மம் ஸத்யம்.
- ஜகத் மித்யை.
- ஜகத் பிரம்மம்.

அவர் இரண்டாவது வாக்யத்தோட நிறுத்தலே. அதை விளக்கறதுக்கு மூணாவது வாக்யம் சொல்றார்.

அது எதைச் சொல்ல வர்றது? உலகத்தைப் பிரம்மத்திலே இருந்து வேறா பாக்கறோம். அது தப்பான பார்வை. அதை மறுக்கறவா அவரோட கயிறு பாம்பு உதாரணத்தைக் காட்டறா. இது முழுமையான ஆரோபம் (Unconditioned Superimposition). உண்மை தெரிஞ்ச உடனேயே, பாம்பு ஒரேடியா மறைஞ்சிடும். கயிறே இருக்கும். உண்மை தெரிஞ்சபிறகும் அப்படி உலகம் மறைய மாட்டேங்கறதேங்கறா. அதனாலே உலகம் சத்யமா? பகுதி ஆரோபத்தையும் (Conditioned Superimposition) கணக்குலே எடுத்துக்கணும். கானல் ஜலம்ன்னு உண்மை தெரிஞ்ச பிறகும், கானல் ஜலம் தெரியும். ஆனா ஜலங்கற மயக்கம் இருக்காது. இந்த இரண்டு விளக்கத்தையும் வச்சுத்தான் சங்கரரை புரிஞ்சுக்கணும்.

ஜகம் மித்யை. மித்யைன்னு தெரிஞ்ச பிறகும் கூட அதோட தோற்றம் இருக்கும். அதை பிரம்மமாத்தான் பாக்கணும். அதுக்கு வேறா பாக்கக் கூடாது.

உலகம் தோற்றமாறதுன்னா... யாருக்குத் தோற்றமாறது? எனக்குதான்னு சொல்லணும். எனக்கு இல்லேன்னு சொன்னா பாக்கறவன் இல்லாமே உலகம் இருக்கணுமே! அதனாலே பாக்கறவன்தான் ஸத்யம். பிரம்மம்தான் ஸத்யம். இதுதான் அவரோட முடிவு. தோற்றம் பிரம்ம ஸத்யம். பிரம்மத்திலே இருந்து வேறா தோற்றம் மித்யை.

தாந்திரிகர்களும் மத்தவாளும் என்ன சொல்றா... தோற்றம் உண்மை. ஏன்னா... அது எதிலே தோணறதோ அதாவது சக்தி... அது சத்தியத்தோட பிரிக்க முடியாத ஒரு பகுதிங்கறா. இந்த இரண்டு கூற்றும் ஒண்ணுதானே? அதுதான் சத்யமும், மாயையும் ஒண்ணுதான்னு நான் சொல்றதுக்கு அர்த்தம்.

சங்கரரை மறுக்கறவா இன்னும் என்ன சொல்றா... இந்த இரண்டு உதாரணமூலமாவும் தோற்றமாத் தெரியற ஜலத்தைக் குடிக்க முடியாது. ஆனா தோற்றமா தெரியற உலகத்துக்கு பிரயோஜனம் இருக்கு. எப்படி உலகத்தைக் கானல் ஜலம்ன்னு சொல்ல முடியும்ன்னு கேட்கறா.

ஒரு தோற்றம் பிரயோஜனமாயிருக்கறதனாலேயே ஸத்யம் ஆயிடாது. கனவை எடுத்துக்கோங்கோ... அதிலே அது பிரயோஜனமாத்தான் இருக்கு. கனவு நீர் கனவு தாகத்தைத் தீர்க்கறது. ஆனா விழிப்பிலே பொய்யாயிடறது. விழிப்பிலே இருக்கற பிரயோஜனம் மத்த இரண்டு நிலையிலே பொய்யாயிடறது. எது இடைவிடாம இல்லையோ அது ஸத்யமாகாது. ஸத்யம்னா... எப்பவும் ஸத்யமா இருக்கணும். கொஞ்ச காலத்துக்கு ஸத்யம்... மத்த நேரத்திலே அஸத்யம்னா அது பொருந்தாது.

ஜால வித்தைகாரன் செய்யற மாதிரிதான். உண்மை மாதிரி இருக்கும். ஆனா பொய். அப்படியேதான் உலகமும். அதுவாவே ஸத்யம் இல்லை. அது ஆதார ஸத்யத்தை விட்டுட்டு வேற இல்லை.

**கே: பிரம்மத்தை அசேத்யோயம்னு சொல்றாங்களே ஏன்?**

ப: சினிமாலே வீடு தீப்பிடிக்கறது. அது ஸ்கிரீனை எரிச்சுடறதா?

நீர்வீழ்ச்சி இருக்கு. ஸ்கிரீனை நனைக்கறதா? ஆயுதங்களை வச்சு சண்டை போடறா... ஸ்கிரீனைக் கிழிச்சுடறதா? நீர் நெருப்பு எதனாலேயும் ஸ்கிரீனை ஒண்ணும் செய்ய முடியாது. பிரம்மத்திலே ஏற்படற தோற்றம், பிரம்மத்தை ஒண்ணும் செய்யாது. அதனாலேதான் அதை அச்சேத்யோயம் ஆத்யோயம் அக்லேத்யோயம், அப்படின்னெல்லாம் சொல்றா.

(317) **பர்க்கி கேட்டார்.**

**கே: உங்க கிட்டே உள்ளவங்களுக்கு தெய்வீகக் காட்சி கிடைக்குது. ஸ்புரணம் ஏற்படுது. நான் ஒண்ணரை மாசமா இருக்கேன் ஒரு சின்ன அனுபவம் கூட இல்லை. நான் உங்க அருளுக்கு தகுதியில்லாதவனா? வெள்ளைக்காரங்கள்லாம் உங்க அருளுக்குப் பாத்திரமா இருக்கறப்போ... வசிஷ்டர் கோத்திரத்துலே வந்த நான் பாத்தியதை இல்லாம இருக்கறது, ரொம்பக் கஷ்டமா இருக்கு. இந்த நிலை மாற ஏதாவது பிராயச்சித்தம் இருக்கா?**

ப: காட்சியோ ஸ்புரணமோ அவாவாளோட மனநிலையைப் பொறுத்தது. அது தனிப்பட்டவாளைப் பொறுத்துத்தானே தவிர பொதுவானதைப் பொறுத்தது இல்லை. மேலும் இதெல்லாம் ஒரு விஷயம் இல்லை. மன அமைதிதான் விஷயம்.

**கே: மனஅமைதி சமாதியாலேதான் ஏற்படும். எப்படி சமாதி சித்திக்கறது?**

ப: சமாதிங்கறது நினைப்பு இல்லாமல் இருக்கறதுதான். அது தூக்கத்திலேயே இருக்கே! அதனாலே உங்களுக்கு மாறாத அமைதி கிடைச்சுடறதா?

**கே: ஆசிரமத்துலே இருந்து வர்ற ஒரு பத்திரிக்கையிலே சமாதி அவசியம்ன்னு சொல்லியிருக்கு.**

ப: சமாதி புதுசா அடையறது இல்லை. அது உங்களோட ஸ்வபாவம். உங்களோட ஸ்வபாவமே சமாதிதான்.

**கே: ஆனா எனக்கு தெரியலையே!**

ப: தெரியலேங்கறதுதான் தடை.

**கே: நான் ஆத்ம ஞானம் அடையாததுனாலே எனக்கு எப்பவுமே இருக்கற சமாதி தெரியலை.**

ப: திரும்பவும் அதையே சொல்றேளே! இதுதான் தடை. இந்த நினைப்பு...... உங்களை அனாத்மாவோட சம்பந்தப்படுத்திக்கறதாலேயே வர்றது. அதுதான் தவறு. அனாத்மாவை ஆத்மான்னு எடுத்துக்காதேள்! அப்போதான் ஆத்மா நல்லா அனுபவமாகும்.

**கே: புத்திபூர்வமா புரியுது. அனுபவமா இல்லை.**

ப: இரண்டு 'நான்' இங்கே இல்லை, ஒரு 'நான்' இன்னொரு 'நானை'த் தெரியலேங்கறதுக்கு.

**கே: இதுவும் புத்திபூர்வமாத்தான் இருக்கு. எப்படி சமாதி எனக்கு ஏற்படும்?**

ப: சமாதி அனுபவம் தாற்காலிகம்தான். சமாதி சுகம் சமாதி இருக்கற வரைக்கும்தான். சமாதி முடிஞ்சுடுத்துன்னா... பழைய வாசனை திரும்ப வந்துடும். எல்லா வாசனையும் சகஜ சமாதியாலே அழியலேன்னா... சமாதியாலே எந்தப் பிரயோஜனமும் இல்லே.

**கே: சகஜ சமாதி வர்றதுக்கு முன்னாடி சமாதி வரணும்தானே?**

ப: சமாதிதான் நம்மளோட ஸ்வபாவம். இந்தத் தோற்றங்களும், இந்திரிய வியாபாரமும் சமாதி மேலேயேதான் நடக்கறது. இப்படி நடந்துகொண்டே இருந்தாலும் சமாதியை ஒண்ணும் பாதிக்காது. இதெல்லாம் ஆத்மாவுக்கு அன்னியமாயில்லேன்னு தெரிஞ்சுக்கறதுதான் ஆத்ம ஞானம்.

எப்பவும் இருக்கற அமைதியைக் காட்டிக் கொடுக்கலேன்னா... அப்புறம் சமாதி எதுக்கு?

இப்போவே நீ சமாதியிலேதான் இருக்கே! என்ன வேலை பாத்துக்கொண்டு இருந்தாலும்! அவ்வளவுதான்.

**கே: சமாதிதான் என்னோட ஸ்வபாவம்ன்னா ஏன் ஞானம் அடையறதுக்கு முன்னாடி சமாதி வரணும்னு சொல்றாங்க.**

ப: அதுக்கு அர்த்தம்.... எப்பவும் இருக்கற சமாதி நிலையைத் தெரிஞ்சுக்கணும். அது தெரியாததுதான் அஞ்ஞானம். தெரிஞ்சாத்தான் ஞானம்.

**கே: எனக்கு சமாதி ஏற்படாம அது எப்பவும் இருக்குன்னு எப்படித் தெரிஞ்சுக்கறது?**

ப: ரொம்ப நல்லது. நீங்க இவ்வளவு சமாதிக்கு ஆர்வமா இருக்கேள்... ஏதாவது போதை வஸ்து உபயோகப்படுத்தினாலே வந்துடும். போதைப் பழக்கத்துக்கு அடிமையாவோம். அதுதான் விளைவு. மோட்சம் இல்லை. சமாதியிலும் வாசனைகள் சூட்சும வடிவத்திலே இருக்கும். வாசனைதான் அழியணும்.

**கே: வாசனைகள் அழியறதுக்கு முன்னாடி ஆத்மஞானம் ஏற்படுமா?**

ப: வாசனை இரண்டு விதம்

1. பந்த ஹேது: அஞ்ஞானிக்குப் பந்தத்தைக் கொடுக்கும்.
2. போக ஹேது: ஞானிக்குப் போகத்தைக் கொடுக்கும்.

இரண்டாவது வாசனை ஆத்மஞானத்துக்குத் தடையில்லே.

**கே: ஆத்மஞானம் அடைஞ்சவங்க திரும்பவும் பிறப்பாங்களா? வாமதேவர் ஜடபரதர் இவங்க எல்லாம் திரும்பவும் பிறந்ததா சொல்றாங்களே!**

ப: ஆத்மஞானம் அடைஞ்சவா மறுபடியும் பிறக்க முடியாது. மறுபிறப்பு பந்தப்படுத்தற வாசனைகளாலேயே ஏற்படறது. ஆனா ஆத்மஞானத்திலேயே அது நசிஞ்சுடறது.

**கே: அப்போ மறுபடியும் பிறக்கற முனிவர்களைக் கேவல நிர்விகல்ப நிலைக்குதான் போயிருக்காங்க. இன்னும் சகஜ நிலைக்கு வராதவங்கன்னு எடுத்துக்கலாமா? சரிதானே?**

ப: ஆமாம்.

**கே: போகஹேது (அனுபவிக்கறதுக்கான வாசனைகள்) ஆத்ம ஞானத்தைத் தடை பண்ணாதுன்னா... இந்த உலகத்துல நடக்கற விஷயங்களை பாத்தும், அனுபவிச்சும் ஞானியோட ஆனந்த ஸ்வபாவம் பாதிப்பு இல்லாம இருக்குதுன்னு தானே அர்த்தம். அப்போ விஷயம் பந்தம் இல்லை. பற்றுதல்தான் பந்தம். சரிதானே?**

ப: ரொம்ப சரி. பற்றே பந்தம். அகந்தை நாசத்தாலேயே பற்று நீங்கும்.

**கே: குரு அருளாலேயே ஞானம் வரும்னு சொல்றாங்களே!**

ப: ஆமாம். குருதான் ஆத்மா.

**கே: கிருஷ்ணருக்கு சாந்தீபனி முனிவர்தான் குரு. இராமனுக்கு வசிஷ்டர்தான் குரு. ஆத்மா இல்லையே!**

ப: ஆத்மசாதகனுக்கு முதல்லே குரு வெளியே இருப்பார். உண்முகஸ்திதி குருவருளாயே ஏற்படும். சிஷ்யாள் வெளிமுகமா இருக்கறதாலே... உண்முகஸ்திதியை குரு... கிட்டே இருந்து கத்துக்கறா. நாளடைவிலே சொல்லிக் கொடுத்த குரு, ஆத்மாவேதான்னு தெரிஞ்சுப்பா.

**கே: எனக்கு குருஅருள் உண்டா?**

ப: அருள் எப்பவும் இருக்கு.

**கே: ஆனா எனக்கு தெரியலையே!**

ப: சரணடைஞ்சாத் தெரியும்.

**கே: என் உடல், பொருள், ஆவி எல்லாத்தையும் ஒப்படைச் சுட்டேன். என் மனசுக்கு தெரியுமே! ஆனா அருள் இல்லை.**

ப: ஒப்படைச்சா இந்தக் கேள்வியே வராது.

**கே: இல்லை. ஒப்படைச்சுட்டேன். ஆனாலும் கேள்வி வருது.**

ப: அருள் எப்பவும் மாறாம இருக்கு. உங்களோட கருத்து மாறும், இப்போ சொல்லுங்கோ தப்பு எங்கே இருக்குன்னு!

**கே: சரணடையறதுக்கு தகுதிபெறணும்.**

ப: தாயுமானவர் சொல்றார்: 'உன் வார்த்தையைப் பின்பற்றவும், உன்னைப் பத்தி இவ்வளவு பேசற தகுதியையும் கொடுத்த உனக்குப் போற்றி ஜய ஜயங்கறார்.

(318) **ஹிந்திக்காரர் ஒருவர் கேட்டார்.**

**கே: மரண பயத்தை எப்படி எதிர்கொள்வது? எப்படிக் கடக்கறது?**

ப: மரணத்தைப் பத்தி சிந்திக்கறதுக்கு, துன்பப்படறதுக்கு நீங்க முதல்லே பிறந்திருக்கேளான்னு பாருங்கோ! பிறந்தாதான் மரணம். தூங்கும்போதே மரணத்திலே இருக்கற மாதிரிதான் இருக்கோம். அப்புறம் ஏன் மரணத்துக்குப் பயப்படணும்?

**கே: தூக்கத்துல எப்படி இருக்கோம்?**

ப: தூக்கத்திலே கேளுங்கோ. அந்த அனுபவத்தை விழிப்பிலே தான் நினைவுகூர்றோம். அதை ஆனந்தமாத் தூங்கினேன்னு நினைவு கூர்றோம்.

**கே: தூங்கும்போது எந்தக் கரணங்களாலே சுகத்தை அனுபவிக்கறோம்?**

ப: அதை மாயாகரணம்ன்னு சொல்றா. மத்த நிலைகள்லே... இப்போ இருக்கற கரணம், நமக்கு நல்லா பரிச்சயம். இருக்கறது ஒரே கரணம்தான்... அந்தந்த நிலைகள்லே வேறு வேறு பெயர் கொடுக்கறா. தூங்கும்போது இருக்கற ஆனந்தாத்மாதான் இப்போ விழிப்பிலே விஞ்ஞானாத்மா.

**கே: தூங்கும்போது எப்படி மாயா கரணத்தாலே ஆனந்தத்தை அனுபவிக்கறோம்ன்னு விளக்கமா சொல்லுங்க.**

ப: நான் சுகமாத் தூங்கினேன்னு எப்படிச் சொல்ல முடியும்? அந்தச் சுகானுபவம்தான் நீங்க அனுபவிச்சேள்ங்கறதுக்கு ஆதாரம். தூங்கும்போது நாம இல்லேன்னா... விழிப்பிலே நினைவு கூற முடியாது.

**கே: ஒத்துக்கறேன். இன்னும் விளக்கமா சொல்லுங்க....**

ப: அதை எப்படி விளக்கறது? ஜலத்துலே விழுந்த பொருளை எடுக்கறதுக்காக ஜலத்துலே முங்கினவன் வெளியே வந்துதான் பேச முடியும். ஜலத்துலே இருக்கறப்போ பேச முடியாது.

**கே: தூக்கத்துல எனக்குப் பயம் இல்லை. ஆனா இப்போ பயம் இருக்கு.**

ப: இரண்டாவது இருந்தாத்தான் பயம் இருக்கும். எதுக்கு பயம்?

**கே: என்னோட பயம் இந்த உலகம், மனசு, உடம்பு, ஈஸ்வரன், கர்த்தத்துவம், போகம் எல்லாத்துக்கும்தான்.**

ப: பயமா இருக்குன்னா... இதையெல்லாம் ஏன் பாக்கறே?

**கே: பாக்காமவும் இருக்க முடியலை. அதுல இருந்து தப்பிக்கவும் முடியலை.**

ப: ஆனா நீங்கதானே அதைப் பாக்கறேள்! யாருக்குப் பயம்? அதுக்கா பயம்!

**கே: இல்லை எனக்குத்தான்!**

ப: நீங்க அதைப் பாக்கறதாலே பயப்படறேள்! பாக்காதேள்! பயமிருக்காது.

**கே: அப்போ முழிச்சு இருக்கும்போது என்ன பண்றது?**

ப: ஆத்மாவாயிருங்கோ! நீங்க பயப்படறதுக்கு இன்னொன்னு இருக்காது.

**கே: ஆமா எனக்கு இப்போ புரியுது. ஆத்மாவா இருந்தா... அனாத்மாவை பிடிக்க மாட்டோம். சுகம் இருக்கும். ஆனாலும் மரணபயம் இருக்கே!**

ப: பிறந்தவன்தான் இறக்கணும். பிறந்திருக்கேளான்னு பாருங்கோ! மரணம் உங்களைப் பயமுறுத்தாது.

(319) ஸ்ரீதர் கோவா கேட்டார்.

**கே: 'யோகஃ கர்மசு கௌசலம்'கறதிலே (கர்மத்தை திறமையாகச் செய்வதே யோகம்) கௌசலம்ன்னா (திறமை) என்ன? அதை எப்படிப் பெறுவது?**

ப: பலன் எதிர்பாக்காம கர்மங்களைச் செய்ய 'நீ செய்றேன்'னு நினைக்காதே! ஒருவேளை, நீ செய்றதா கொஞ்சம் நினைப்பு இருந்தாலும்... நீ செய்யற வேலையை இறைவனுக்கு அர்ப்பணம் பண்ணிடு. இதுதான் திறமை (கௌசலம்), அதுதான் அதைப் பெறுகிற வழியும்.

**கே: 'ஸமத்துவம் யோக உச்யதே'ங்கறதுல (ஸமத்துவமே யோகம்) அந்த சமத்துவம் என்ன?**

ப: நானாத்துவத்திலே ஏகத்துவத்தைப் பாக்கறது. உலகம் பலவிதமா இருக்கு. அதிலே எது, ஸமமா இருக்குன்னு பார். பாத்தா... இரட்டைகள் இருக்காது. ஸமபாவம் ஸ்வபாவமா வரும். இந்த ஸ்வபாவமா வர்ற ஸமத்துவத்தைத்தான் இங்கே சொல்றா.

**கே: நானாத்துவத்துலே சமமான வஸ்துவை எப்படிப் பாக்கறது?**

ப: பாக்கறவன் ஏகம்தான். பாக்கறவன் இல்லாம பாக்கப்படுவது இல்லை. பாக்கற பொருள்கள்லே எந்த மாற்றம் வந்தாலும், பாக்கறவன் மாறுவது இல்லை.

'யோகஃ கர்மஸு கௌசலம்' — கர்மத்தைத் திறமையாகச் செய்வதே யோகம்.

'ஸமத்துவம் யோக உச்யதே' — சமத்துவமே யோகம்.

'மமேகம் சரணம் வ்ரஜ' — என்னையே சரணடை.

'ஏகமேஅத்விதீயம்' — இரண்டற்ற ஒன்று மட்டுமே.

இதெல்லாம் முறையே கர்மம், யோகம், பக்தி, ஞானம் இவற்றை குறிக்கும். ஒரே உண்மைதான் வேறுவேறு கோணங்கள்லே.

**கே: அதுக்கு அருள் தேவையா?**

ப: ஆமாம்.

**கே: எப்படி அருளைப் பெறுவது?**

ப: சரணடையறதாலே.

**கே: ஆனா அருள் இல்லையே!**

ப: சிரத்தை வேணும். சரணடையறது வாய் வார்த்தையா இருக்கக் கூடாது. எதுக்காகவும் இருக்கக் கூடாது.

**கே: மும் மலத்தால (ஆணவம், கன்மம், மாயை) தியானம் தடைபடுது. எப்படி மும்மலத்தை வெல்லுவது?**

ப: அதுக்கு அசையக்கூடாது.

**கே: அருள்தான் வேணும்.**

ப: ஆமாம். அருள்தான் ஆரம்பமும், நடுவும், முடிவும். அருளாலேயேதான் உண்முகம் ஏற்படறது. அதிலேயே நிலைக்கறதும் அருளாலையேதான். ஆத்மஞானமும் அருளாலேயேதான்.

அதனாலேதான் 'என்னையே சரணடை'ன்னு கிருஷ்ணர் சொல்றார். நம்மள மொத்தமா ஒப்புக் கொடுத்துட்டா யாரு அருளைக் கேக்கறது? அருள் அவனைச் சாப்பிட்டுடும்.

**கே: தடைகள் பலமாயிருக்கு. தியானத்துக்கு விடமாட்டேங்குது.**

ப: நமக்கு மேலே ஒரு சக்தியை உணர்ந்து, அதுகிட்டே ஒப்படைச்சுட்டா... எது தடுக்கும்? எப்படித் தடுக்கும்? தடைகள் பலமாயிருக்குன்னா... அதோட பலத்துக்கு மூலத்தை சரணடைஞ்சுடணும். அதையே நல்லா பிடிச்சுக்கணும். இப்போ உன்னைத் தடுக்காது.



(320) **பகவானிடம் இயல்பாக, அப்பாவித்தனமாக ஒருவர் கேட்டார்.**

**கே: பகவானே மறைக்காம சொல்லுங்க, ஆத்ம ஞானத்துக்கு என்ன வேணும்?**

ப: ஆத்ம ஞானமடைய ரொம்பப் பக்குவமா இருக்கணும். ஞானம் வர்றதுக்கு முன்னாடி வாசனைகள் எல்லாம் போகணும். ஜனகர் மாதிரி இருக்கணும். உண்மைக்காக எல்லாத்தையும் தியாகம் பண்ணத் தயாரா இருக்கணும். முழுமையான துறவுதான் பக்குவத்துக்கு அடையாளம்.



(321) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: இந்த ஜாக்ர தோற்றம் துயரமாயிருக்கே! இது ஏன் தோன்றணும்?**

ப: உன் சொரூபத்தைப் பாத்தா... ஜகம் தோன்றாது.

**கே: நான் யார்ன்னு உள்ளே பாத்தா... அங்கே ஒண்ணும் தெரியலை.**

ப: தூங்கும்போது எப்படி இருக்கே? அங்கே நான்கற எண்ணம் இல்லே. சுகமாயிருக்கே! விழிப்பிலே நான்கற எண்ணம் வந்த உடனே, எல்லா நினைப்பும் வந்துடறது. நம்மளோட சுகத்தை மறைச்சுடறது. நான்கற எண்ணத்தைப் போக்கு! அதுதான் சுகத்துக்குத் தடை. சுகம் நம்மளோட சொரூபம்; ஸ்வபாவம். தூக்கத்திலே சுகமாயிருக்கோமே! அதிலே இருந்தே தெரிஞ்சுக்கலாம்.

**கே: எனக்குத் தூக்க அனுபவம் பத்தி ஒண்ணும் தெரியாது.**

ப: அது சுகமாயிருக்குன்னாவது தெரியுமா? இல்லேன்னா... சுகமாத் தூங்கினேன்னு சொல்ல மாட்டோம். நான்கற எண்ணம் தூங்கும்போது இல்லே. எந்த நினைப்பும் இல்லே. எதுவும் இல்லே. ஆனா சுகமாயிருக்கோம். அதுதான் உண்மை.

இதத்தான் மகா வாக்கியம் 'தத்வமசி'ன்னு சொல்றது. 'அது நீ'. உன்னைத் தெரிஞ்சுக்கோ. 'அது' தெரியும்.

**கே: 'அது' (பிரம்மம்) எப்படி இருக்கும்?**

ப: உன்னைத் தெரிஞ்சுக்காமே... ஏன் அதைத் தெரிஞ்சுக்க நினைக்கறே? சாஸ்திரங்கள் நீ அதுன்னு சொல்றது.

'நீ'ங்கறதுதான் நமக்கு ரொம்பப் பரிச்சயம். நாம இல்லையா! இருக்கோமில்லையா! அதை நல்லாத் தெரிஞ்சுக்கோ. அதைத் தெரிஞ்சுக்கறதுதான் பிரம்மத்தைத் தெரிஞ்சுக்கறது.

**கே: என்னால முடியலே! என்னைத் தெரிஞ்சுக்கற சக்தி எனக்கு இல்லை.**

ப: அப்போ கேள்வியில்லாமே சரணடைஞ்சுடு! அதே தன்னை காட்டிக் கொடுக்கும்.

**கே: நிபந்தனையற்ற சரணாகதின்னா என்ன?**

ப: ஒருத்தர் சரணடைஞ்சா கேள்வி கேக்கவோ, நினைக்கவோ யாரும் இருக்க மாட்டா.

உண்மையை உணர்றதுக்கு இங்கே இரண்டே வழிதான் இருக்கு.

ஒண்ணு நான்கற எண்ணத்தைப் பிடிச்சுக்கணும். மத்த நினைப்பு எல்லாம் நீங்கிடும்.

இல்லே, நிபந்தனை இல்லாமே சரணடைஞ்சுடணும்.

(322) *பிரபல சென்னை வக்கீல் ஒருவரின் பண்பாடுமிக்க மகள் கேட்டார்.*

**கே: நீங்க சொல்ற மாதிரி நினைப்பற்ற நிலையில நிக்க என்ன செய்யணும்? அதுக்கு நான் யார் விசாரம் மட்டுந்தானா?**

ப: சும்மாயிருந்தா போதும். அதைச் செஞ்சு பார்!

**கே: அது முடியலை.**

ப: சரியாச் சொன்னே... அதுக்குத்தான் நான் யார்ன்னு விசாரம் பண்ணச் சொல்றது.

**கே: நான் யார்ன்னு கேள்வி கேட்டா உள்ளேயிருந்து ஒரு பதிலும் இல்லை.**

ப: என்ன பதில் எதிர்பார்க்கறே?
நீ இருக்கியே! வேற என்ன வேணும்!

**கே: நினைப்பு நிறைய வருது. வந்துகிட்டே இருக்கு.**

ப: அப்பப்போ இந்தக் கேள்வியை கேளு. நான் யார்?

**கே: ஒவ்வொரு நினைப்புக்கும் கேக்கணுமா? அது இருக்கட்டும். இந்த உலகம் நம்ம நினைப்புதானா?**

ப: உலகத்துக்கிட்டேயே விட்டுடு இந்தக் கேள்வியை. அது கேக்கட்டும் 'நான் எப்படி வந்தேன்'னு!

**கே: அது எனக்கு சம்பந்தம் இல்லைங்கறீங்களா?**

ப: தூக்கத்திலே எதுவும் தெரியலே, விழிச்ச பிறகுதான் எல்லாம் தெரியறது, நினைப்பு வந்ததுக்கு அப்புறம்தான் உலகம் இருக்கு. அப்புறம் அது நினைப்பு இல்லாம வேறென்ன!

**கே: மனதை ஒரே நிலையில நிக்க வைக்க என்ன செய்யணும்?**

ப: முதல்லே மனசைப் பிடி, அதை இங்கே கொண்டு வா. அதை எப்படி நிலை நிறுத்தறதுன்னு... அப்புறம் யோசிப்போம்.

**கே: இல்லே... நான் என்ன சொல்றேன்னா... மனசு அலைஞ்சுக்கிட்டே இருக்கு. ஜபம் பண்ணும்போது கூட அலையுது.**

ப: அதுக்குதானே ஜபம்.

**கே: என்ன ஜபம் இதுக்கு சிறந்தது?**

ப: பொருத்தமா ஒண்ணு. காயத்ரி மந்திரம்.

**கே: காயத்ரி போதுமா?**

ப: அதை மிஞ்ச என்ன இருக்கு? அதைச் சொல்ல முடியாதவா மத்ததச் சொல்லணும். மொத்த உண்மையை காயத்ரி உள்ளே வச்சுக்கொண்டு இருக்கு. ஜபம் தியானத்துக்குக் கொண்டு போகும். தியானம் ஞானமாகும்.

**கே: ஒரு நாளைக்கு அரை மணிநேரம் போதுமா?**

ப: எப்பவும் பண்ணணும்... அல்லது உன்னாலே எவ்வளவு நேரம் முடியுமோ... அவ்வளவு நேரம் பண்ணணும்.

(325) *குண்டூர் ராமசாஸ்திரி கேட்டார்.*

**கே: நான் ஒரு சம்சாரி. ஞான மார்க்கத்துக்கு தகுதியில்லாதவன். உலக விவகாரங்கள் என்னை நிலையில்லாம வச்சுருக்கு. நான் என்ன செய்யணும்?**

ப: பகவானை நினைச்சுக்கோங்கோ. அப்புறம் எப்படி உலகவிவகாரங்கள் பகவானை நிலையில்லாமே வைக்கறதுன்னு பாப்போம். நீங்களும் உலகமும் பகவான்லேயேதான் இருக்கேள்.

**கே: நாம ஸ்மரணம் பண்ணலாமா? எந்த நாமத்தை பண்ணலாம்?**

ப: நீங்க ராமசாஸ்திரி. பெயரை அர்த்தம் பண்ணுங்கோ. ராமனோட ஒண்ணாயிருங்கோ.

(326) *ரொம்ப நாளாக பகவானுக்குப் பணிவிடை செய்துவந்த ஆச்ரமவாசி ஒருத்தர் பகவானிடம் கேட்டார்.*

**கே: என் மனசு ஒரு நிலையா இருக்க மாட்டேங்குது.**

ப: எல்லாரும் மனசு ஒரு நிலையா இல்லைன்னு குறைபட்டுக்கறா. முதல்லே... மனசை, அது என்னன்னு கண்டுபிடிச்சா.... அவாளுக்கும் தெரியும்.

உண்மைதான். தியானத்துக்கு உக்காந்தா நினைப்பு டஜன்கணக்குலே வர்றது. மனசு நினைப்பு மூட்டைதானே!

நினைப்புகளை ஒழிச்சுக் கட்டறதுக்கான முயற்சி பலிக்க மாட்டேங்கறது.

ஒருத்தன் எந்த வழியிலேயோ, ஆத்மாவிலே ஓய்ஞ்சு இருந்தா சரிதான். ஆத்ம விசாரத்திலே முடியலேன்னா... ஜபமோ, தியானமோ பண்ணணும். யானை துதிக்கைக்கு சங்கிலியைப் பிடிச்சுக்கக் கொடுக்கறது மாதிரிதான். ஜபமோ தியானமோ பண்ணினா பிற நினைப்புகள் போகும். ஏகாக்கிரம் ஏற்படும். மனசு அமைதி அடையும். அதுக்காக, பெரிய போராட்டத்துக்கு அப்புறம்தான் அமைதி வரும்ன்னு அர்த்தம் இல்லை. அமைதி எப்பவும் இருக்கு. நினைப்பை போக்கறதுக்குதான் இந்தப் போராட்டம் எல்லாம்.

மாடு பிறர் கொல்லையிலே போய் மேயறது. மாட்டை இழுத்து வந்து கொட்டத்திலே கட்டினாலும்... அவிழ்த்துக் கொண்டு ஓடிடறது. இப்போ... நல்ல புல்லைக் கொட்டத்திலேயே கொடுத்தோம்ன்னா... முதல்லே ஒரு வாய் சாப்பிடும். பழைய பழக்கத்தினாலே, அடுத்த கொல்லைக்கு ஓடிடும். அடுத்த நாள் இரண்டு வாய் சாப்பிடும். பழகப் பழக நிறைய புல்லைச் சாப்பிடும். கடைசிலே பிறர் கொல்லைக்கு ஓடறதை விட்டுடும். அந்தப் பழக்கம் சுத்தமா போச்சுன்னா... அதைக் கட்டத் தேவை இல்லை. அவிழ்த்து விட்டுடலாம். பக்கத்துக் கொல்லைக்குப் போகாது. கொட்டத்திலே அதை அடிச்சாக்கூட கொட்டத்தை விட்டு போகாது.

இப்படித்தான் மனசும், வாசனைகள் இருக்கற வரைக்கும் ஒரு நிலையிலே இருக்காது. வாசனை எல்லாம் வெளியே வரணும். வந்துதான் அழியும்.

மனம்ன்னா என்னன்னு பாத்தா... நினைப்பு எல்லாம் போய் அது ஆத்மான்னே முடிஞ்சுடும். எண்ணங்களின் மொத்த தொகுதியைத்தான் மனம்கறோம்.

எண்ணங்கள் ஆத்மாவிலே இருந்துதான் வர்றதுன்னு தெரிஞ்சு... ஆத்மாவிலே இருந்தா மனம் மறைஞ்சுடும். அமைதி

நிலைச்சுடும். நினைக்கறது கஷ்டமாயிருக்கும். இப்போ நினைப்பு இல்லாம இருக்கறது எவ்வளவு கஷ்டமாயிருக்கோ... அப்படி அப்போ நினைக்கறது கஷ்டமாயிருக்கும். இங்கே மனம்தான் மாடு; நினைப்புக்கள்தான் அடுத்தவா கொல்லை; கொட்டம்தான் நம்மளோட சொரூபம்.

தூங்கறவனை வேலையைப் பாருன்னு எழுப்பினா எப்படி இருக்கும்? தூக்க சுகத்தை வேலைக்காக தியாகம் பண்ண சிரமமாயிருக்கு. அப்படித்தான் மனமற்ற நம்மளோட நிலை. சுகஸ்வரூபம். அதை விட்டுட்டு சிந்திச்சுக்கொண்டு துக்கப்படறது ரொம்ப கஷ்டம். நம்மளோட சொரூபத்தோட ஆனந்தத்தைத் தொந்தரவு பண்ணவே சம்மதிக்க மாட்டோம்.

மனமற்ற நிலையிலே நிக்கணும்ன்னா... பெரிய போராட்டந்தான். போராடித்தான் நம்மளோட சொரூபத்தைப் பெற வேண்டியதிருக்கு. போராட்டத்தை ஜெயிச்சு லக்ஷியத்தை அடைஞ்சா, எதிரி ஆத்மாவிலேயே அடங்கி இல்லாம போயிடுவான். மனந்தான் எதிரி. நினைப்புதான் எதிரி. நினைவுகள்தான் உலகம். நினைப்பு இல்லேன்னா... உலகமும் இல்லை. கடவுளும் இல்லை. ஆத்மா மட்டும் தனியிருப்பா விளங்கும்.

பிரகலாதன் ஸமாதியிலே இருந்தபோதும்... விஷ்ணு நினைச்சாராம். 'இந்த அசுரன் ஸமாதியிலேயே இருக்கான். எல்லா அசுராளும் அமைதியா இருக்கா. சண்டை சச்சரவு இல்லே. யாரும் சக்தி வேணும்ன்னு நினைக்க மாட்டேங்கறா. சக்தி வேணுங்கற நினைப்பு இல்லாததாலே... யாகம் யக்ஞம் எதுவும் பண்ண மாட்டேங்கறா... ஒரு வேலையும் நடக்கமாட்டேங்கறது... இவனை எழுப்பி விட்டுட்டா... எல்லாம் சரியாயிடும். அசுரர்கள் எல்லாம் எழுந்துடுவா. எல்லாம் அப்புறம் சண்டை கிண்டை போடுவா. சண்டைக்கு சக்திக்காக யாகம் யக்ஞம் எல்லாம் ஒழுங்கா பண்ணுவா. நிறைய புதுசு புதுசா படைப்பு ஏற்படும். நிறைய சண்டை நடக்கும். நமக்கும் வேலை இருக்கும்.'

அப்படி விஷ்ணு பிரகலாதனை எழுப்பி சாகாவரம் ஜீவன் முக்தி கொடுத்து ஆசீர்வாதம் பண்ணினார். தேவாசுர யுத்தம் ஆரம்பமாயிடுத்து. பழைய நிலைமை திரும்பிடுத்து.

**கே: இறைவனே எப்படி ஒரு அசுரனை எழுப்பி சண்டைய தொடங்கி வைக்கலாம்? இறைவனுடைய ஸ்வபாவம் ரொம்ப நல்லதுதானே?**

ப: நல்லதுங்கறதும் இரட்டைதான். இறைவன் கெட்டதுந்தான். இரண்டும் சேந்ததுதான்.

**(327) பகவான் சந்நிதியில் ஏற்பட்ட தன்னோட அனுபவத்தை ஒருத்தர் கூறியது.**

**கே: 'நான் ரொம்ப நாளா நான்கறது. எங்கிருந்து வருதுன்னு யோசிப்பேன். உடம்புக்குள்ள இருந்தா? இல்லை, எங்கிருந்தோவான்னு. அப்போ திடீர்ன்னு என் உடம்பு லேசா ஆகறது மாதிரி இருந்துச்சு. கொஞ்சம் கொஞ்சமா லேசாயிட்டே வந்து மறைஞ்சுடுச்சு. நான் யார்?ங்கற விசாரம் யாரோ பண்றது மாதிரியும் இருந்தது. நான்-நான்கற ஸ்புரணம் மட்டும் மிஞ்சுச்சு. அது ஒரு பெரிய வெளி. அங்கே ஒண்ணும் இல்லை. ஹால்ல நடக்கறது லேசா தெரிஞ்சது. வேத பாரயணத்தோட முடிவுல எல்லோரும் கும்பிட்டது தெரிஞ்சது. நானும் எழுந்துக்கணும்ன்னுதான் நினைச்சேன்... அந்த நினைவு போய் மறுபடியும், பகவான் குரல் கேக்கற வரைக்கும் அந்த அனுபவம் இருந்துச்சு. அப்புறம் நான் சுயநினைவுக்கு வந்து எழுந்து நமஸ்காரம் பண்ணுனேன், அரைமணிநேரம் அந்த அனுபவம் இருந்துச்சு. அதை என்னாலே மறக்க முடியலை. இன்னும் கூட விடாம இருக்கு.**

பகவான் அதைக் கேட்டுக் கொஞ்ச நேரம் மௌனமாயிருந்தார். பிறகு சில வார்த்தை சொன்னார்.

ப: ஒருத்தர் உடம்பை விட்டு வெளியே போற மாதிரி தெரியலாம். ஆனா உடம்பே நினைப்புத்தான். நினைப்பு இல்லேன்னா... உடம்பு இல்லை. உடம்பு இல்லாமே வெளியே போறது, உள்ளே வர்றது எல்லாம் கிடையாது. பழக்கத்தாலே அப்படித் தெரியறது. சமுத்திரத்திலே விழற பனிக்கட்டி கரைஞ்சு சமுத்திரம், அலை, நுரை குமிழியா மாறிடறது. அப்படியே சூட்சுமமான மனம் சிறு புள்ளியா நான்னு ஹ்ருதயத்திலே இருந்து கிளம்பறது. அப்புறம் விரிஞ்சு உடம்பு உலகமாறது. கடைசியிலே ஹிருதயத்திலே நுழைஞ்சு ஹிருதயமாவே ஆயிடறது.

கடல் அளவுக்குப் பால் இருந்தாலும் கடலளவுக்கா வாய்வச்சுக் குடிக்க முடியும்? காம்பிலே இருக்கற சிறு துளை வழியாத்தான் உறிஞ்சலாம்.

நம்மாழ்வார் சொல்றார்

**'யானே என்னை அறியகிலாதே**
**யானே என்று எனதே என்று இருந்தேன்**
**யானே நீ என்னுடையமையும் நீயே**
**வானோர் ஏத்தும் எம் வானோர் ஏறே'**

அதுக்கு என்ன அர்த்தம்... நான் என்னைத் தெரியாத காலத்திலே... உன்னைத் தேடி அலைஞ்சேன். என்னைத் தெரிஞ்சப்போ நீதானேய்யா நான். இது எப்படி விஷிஷ்டாத்வைதமாகும். ஆனா அவா இதுக்கு எப்படி விளக்கம் கொடுக்கறா 'எனக்குள்ளேயும் நீ அந்தர்யாமியா இருக்கறதாலே... நான் உன்னோட உடம்போட ஒரு பகுதி. நீதான் உடம்போட எஜமானன். சரீரீ' அப்படிங்கறா.

நம்மளோட உடம்பையே நாம இல்லேன்னு விட்டுட்டு ஏன் இன்னொரு உடம்போட பகுதியா ஆகணும்? நம்மளோட உடம்பு ஆத்மா இல்லேன்னா... வேற உடம்புகளும் ஆத்மா இல்லேதான். விசிஷ்டாத்வைதிகள் என்ன நினைக்கறா ஆனந்தம் அனுபவிக்க தனித்துவம் இருக்கணும். தனித்துவம் அதாவது 'நான்'கற எண்ணம் நாசமாகக்கூடாது. நீ உன் உடம்பு

இல்லையாம்! ஆனா கடவுளோட உடம்பு ஆகணுமாம்! என்ன பைத்தியக்காரத்தனம்!

கடவுளிடம் பரபத்தி செஞ்சுட்டா நீ உன்னையே அவர்கிட்டே கொடுத்தாச்சு, நீ அவரோடதுதான். உன்னோடது இல்லே. அவருக்கு உடம்பு வேணும்னா அவரே பாத்துக்கட்டும். நீ ஒண்ணும் சொல்லத் தேவையில்லே. 'அவர்தான் உடம்போட எஜமானர்'ன்னு.

(328) ஒரு ஐரோப்பிய கனவான் கேட்டார்.

**கே: ஏன் மக்கள் இந்த உலக விவகாரங்கள்ல மாட்டி துன்பத்தையே அனுபவிக்கறாங்க? விடுபட்டு இருக்கக் கூடாதா? ஆத்மீக உலகத்துல இருந்தா எவ்வளவு சுதந்திரமா இருப்பாங்க!**

ப: உலகம் ஆத்மிகம்தான்.

நீங்க உங்களை இந்த ஸ்தூல உடம்போட சம்பந்தப் படுத்திக்கொண்டு இந்த உலகம் ஸ்தூலம்கறேள், இன்னொரு உலகம் ஆன்மீகம்கறேள், உண்மையிலேயே இருக்கறது ஆத்மா மட்டும்தான்.

**கே: உடம்பு இல்லாத ஆன்மாக்களுக்கு (Spirits) (அதாவது ஆவிகள்) ஆழ்ந்த அறிவும் நிறைய சுதந்திரமும் இருக்குமா?**

ப: நீங்க உங்களை உடம்போட சம்பந்தப்படுத்திக்கறதாலே, அதை உடம்பில்லாத ஆத்மா, ஆவி...ங்கறேள். உங்களுக்கு இருக்கற சுதந்திரத்தை வச்சுக்கொண்டே அதுக்கு இருக்கற சுதந்திரம் என்ன? அதோட சக்தி என்னன்னு தெரிஞ்சுக்க முயற்சி பண்றேள். உடம்பில்லாத ஆத்மாக்களுக்கு சூட்சும உடம்பு இருக்கு. இல்லேன்னா நீங்க அதை ஆவின்னு சொல்லமாட்டேள். உடம்பற்ற ஆத்மானாலே... இந்த மாதிரி ஸ்தூல உடம்பு இல்லேன்னுதான் அர்த்தம். அதோட தனித்துவம் சூட்சும உடம்பைப் பிடிச்சு இருக்கும். அது

எந்த நிலையிலே இருக்கோ... அதைப்பொறுத்து அதோட சுதந்திரமும் இருக்கும். உங்களோட கட்டுப்பாடு உனக்கு எவ்வளவு தொந்தரவாயிருக்கோ, அதோட கட்டுப்பாடும் அதுகளுக்கு தொந்தரவாத்தான் இருக்கும். நான் 'ஆத்மா'ன்னு ஆத்மிகம்ன்னு சொல்றது பரம்பொருளைத்தான். இதுகளை இல்லை.

நீங்க உங்களை ஆத்மான்னு உணர்ந்தா இந்த உலகமும் ஆத்மிகமா இருக்கும். இப்படி ஸ்தூலமாயிருக்காது.

**கே: அதோட உடம்பும் நம்ம உடம்பு மாதிரி அநித்தியம் தானா? அது மறுபடியும் பிறக்குமா?**

**ப:** இந்தக் கேள்வி ஏன் எழறதுன்னா... நீங்க உங்களை உடம்புதான்னு நினைக்கறேள். இந்த உடம்பு பிறக்கும், இறக்கும், இந்த உடம்பு போச்சுன்னா இன்னொரு உடம்பு வரும். அதுதான் மறுபிறப்பு. ஆனா நீங்க உடம்பா? நீங்க உங்களை, நாம ஆத்மாதான்னும், உடம்பு இல்லைன்னும், தெரிஞ்சுகொண்டா எல்லா ஸ்தூல சூட்சும உடம்புகள்லே இருந்தும் விடுபட்டுடுவேள். உங்களுக்கு எந்தக் கட்டுப்பாடும் இருக்காது. எந்தக் கட்டுப்பாடும் இல்லாதப்போ... எங்கேயிருக்கு உலகம்? மறுபிறப்பு பத்திய கேள்வியும் இருக்காது.

இப்படி யோசிச்சுப் பாருங்கோ! கனவிலே ஒரு கனவு உடம்பு எடுத்துக்கொண்டு கனவு உலகத்திலே சஞ்சாரம் பண்றேள். அது விழிப்பிலே பொய்யாயிடும். இப்போ இந்த உடம்புதான் நான்ன்னு சொல்றேள். கனவு உடம்பை இல்லை. கனவிலே இந்த உடம்பு பொய்யாயிடறது. அந்த உடம்பு உண்மையாயிடும். அந்தந்த உடம்பு அந்தந்த நிலையிலே உண்மையாயிருக்கு. ஆனா மத்த நிலையிலே இல்லை.

ஸத்யம் எப்பவும் மாறாம இருக்கணும். நான்ன்னு சொல்றேளோல்லியோ... அந்த உணர்வுதான் மூணு நிலையிலேயும் மாறாம இருக்கு. அதுதான் ஸத்யம். இந்த மூணுநிலைமையும் பொய். மனசுதான் அது. மனந்தான் உங்களை

உண்மையை உணரவிடாமல் தடுக்கறது. உங்களுடைய உண்மையான ஸ்வபாவம் பரமார்த்தந்தான்.

தூங்கும்போது இப்படித்தான் இருக்கேள். ஏன் இந்த வித்தியாசம்? தூங்கும்போது மனம் இல்லை. மத்த இரண்டு நிலையிலேயுந்தான் மனம் இருக்கு. இப்படிக் கட்டுப்பட்டு இருக்கற மாதிரி தெரியறது. அதுதான் மனத்தோட சேஷ்டை.

**கே: சரி மனம்னா என்ன?**

ப: கண்டுபிடிங்கோ! அதைத் தேடினா அதுவே மறைஞ்சுடும். ஏன்னா... அதுக்கு இருப்பு இல்லை. நினைவுகளாலேயே கட்டப்பட்டு இருக்கு. நினைப்பு இல்லேன்னா... மனம் இல்லை.

**கே: நான் அப்போ இருப்பனா?**

ப: தூங்கும்போது உங்களோட அனுபவம் என்ன?

நினைப்பு இல்லை! மனசு இல்லை! ஆனாலும் நீங்க இருக்கேள்...

**கே: நான் தியானம் பண்ண முயற்சி பண்ணா என்னால முடியலை. மனசு அலையுது. என்ன செய்யணும்?**

ப: உங்க கேள்வியிலேயே பதில் இருக்கே!

முதல் கேள்வி நீங்க தியானம் பண்றேள் ஆனா முடியலே.

'நீங்கறது ஆத்மா. எதைத் தியானம் பண்றேள்?

எங்கே முடியலே?

இரண்டு ஆத்மா இருக்கா?

ஒரு ஆத்மா இன்னொரு ஆத்மாவை உணர்றதுக்கு... தியானம் பண்றதுக்கு?

எந்த ஆத்மா முடியலேன்னு சொல்றது?

இரண்டு ஆத்மா இருக்க முடியாது. ஒரே ஆத்மாதான் இருக்கு. அது தியானம் பண்ணத் தேவையில்லை.

நீங்க கேக்கலாம், 'அப்போ ஏன் எனக்கு ஆனந்தம் இல்லை'ன்னு?

தூங்கும்போது நீங்க சுகமாயிருக்கறதை எது தடுத்தது?

இப்போ நீங்களே ஒத்துக்கறேள். 'அலையற மனம்'ன்னு!

மனம்ன்னா என்னன்னு பாருங்கோ!

நான்கற தன்மைதான் பரம்பொருள். அறிவு அறியாமை கடந்தது.

**கே: நான் கடின உழைப்பாளி. தியானத்துக்கு நேரம் கிடைக்கறது கம்மி. வேற ஏதாவது உபாயம் இருக்கா? பிராணாயாமம் நல்லதா?**

ப: மனமும் பிராணனும் ஒரே மூலத்திலே இருந்துதான் கிளம்பறது. மூலத்தை, மூச்சைப் பிடிச்சோ, இல்லை மனம்னா என்னன்னு பாத்தோ அடையலாம். இரண்டாவது செய்ய முடியலேன்னா... முன்னது செய்யலாம். பலன் அளிக்கும். மூச்சைக் கவனிச்சாலே பிராணாயாமந்தான்.

மனசைக் கவனிச்சா நினைப்பு போயிடும். அமைதி ஏற்படும். அது உங்களோட ஸ்வபாவம்ன்னு தெரிஞ்சுப்பேள்.

ஜனகர் 'என்னை இவ்வளவு நாள் ஏமாத்திக்கொண்டு இருந்த திருடனைக் கண்டுபிடிச்சுட்டேன். அவனை உடனே கொல்வேன்' அப்படின்னார். நினைப்புகளாலேதான் ஆத்மானந்தம் தடைபடறது. அலையறது நின்னா... மனம்ன்னு ஒண்ணு இருக்காது. ஓட்டம் பிடிச்சுடும். ஆத்மா எதனாலேயும் பாதிக்கப்படாத ஆதாரமா விளங்கும்.

**கே: அப்போ மனசே மனசை கொல்லணும்... அப்படித்தானா?**

ப: ஆமாம். மனம்ன்னு ஒண்ணு இருந்தா...

அதைத் தேடினா அது இல்லேன்னு தெரியும். இல்லாததை எப்படிக் கொல்ல முடியும்?

**கே: வாய்விட்டு சொல்றதை விட மானசீக ஜபம் சிறந்ததா?**

ப: வாய்விட்டுச் சொல்றது சப்தத்தாலே ஆனது. சப்தம் நினைப்பிலே இருந்து வர்றது. முதல்லே ஒருத்தன் நினைக்கணும். அப்போதான் நினைப்பு சப்தமா வரும். நினைக்கறவன்தான் மனம். மானசீக ஜபம் அதனாலே சிறந்தது.

**கே: ஜபத்தை தியானிக்கலாமா? இல்லை திரும்ப, திரும்ப வாயாலே சொல்லணுமா?**

ப: மானசீக ஜபம் தியானமாயிடும். தியானம், ஏக சிந்தனம், மானசீக ஜபம் எல்லாம் ஒண்ணுதான்.

ஒரே சிந்தனையாலே மத்த சிந்தனை வரவிடாம பாத்துக்கொண்டா அதை நிதித்தியாசனம்னு சொல்றோம். ஜபத்துக்கும் தியானத்துக்கும் ஒரே நோக்கம்தான். ஒரே நினைப்பிலே நிக்கறது. அந்த ஒரே நினைப்பும் மூலத்திலே அடங்கிடும். ஜபத்திலே ஜபிக்கறவன் மூலத்திலே அடங்கிடுவான்.

**கே: மனசு மூளையிருந்து வரலையா?**

ப: மூளை எங்கே இருக்கு?

அது உடம்பிலே இருக்கு.

நான் என்ன சொல்றேன்னா... உடம்பே மனசு போடற ஒரு படம்தான். நீ உடம்பை நினைச்சாத்தான் மூளைன்னு சொல்ல முடியும். மனசுதான் உடம்பு, அதிலே இருக்கற மூளை, எல்லாத்தையும் கொண்டு வந்து, 'நான் மூளையிலேதான் இருக்கேன்'னு சொல்றது.

**கே: பகவான், ஜபம் எங்கிருந்து வருதுன்னு பாக்கணும்னு சொல்லிருக்கீங்க. மனசைதான அப்படி சொல்றீங்க.**

ப: அது எல்லாமே மனசுதான்.

ஜபம் மனசை ஒரு நினைப்பிலே இருக்க வைக்கறது. எல்லா நினைப்பும் மறையற வரைக்கும் ஜபம் அவசியம். ஜபம் மானசீகமா மாறித்துன்னா... அதைத் தியானம்னு சொல்றோம். தியானந்தான் நம்மளோட ஸ்வபாவம், ஆனாலும் அதை ஏன் தியானம்னு சொல்றோம்ன்னா... அது முயற்சியாலே பண்ணப்படறது. நினைப்பு இருக்கற வரைக்கும் முயற்சி வேணும். உங்ககிட்டே நினைப்புகள் இருக்கற வரைக்கும் ஒரே நினைப்போட இருக்கறதை தியானம்னு சொல்லுவேள். தியானம் சகஜமாயிச்சுன்னா... அது உங்களோட இயல்பாயிடும்.



(330) **பகவானுக்கு ஆஸ்துமா இருந்ததனால் தொண்டையிலே சிரமம் இருந்தது. அப்போ யாரோ ஆரஞ்சுகளைக் காணிக்கையா கொண்டு வந்தாங்க. எல்லாருக்கும் ஆரஞ்சு சுளைகள் பகிரப்பட்டது. பகவானுக்கு இருமல் வந்தது. ஆரஞ்சு வாயிலே இருந்தது. அப்போ ஒரு அன்பர், 'பகவானுக்கு ஆரஞ்சு ஒத்துக்கலை. பகவானே! அதைத் துப்பிடுங்க'ன்னார்.**

அதுக்கு பகவான்,

**ப:** 'யாரோ கொண்டு வந்ததாலே இப்படிச் சொல்றே. நீ கொண்டு வந்திருந்தா... இப்படிச் சொல்வியா!

(331) **திருமதி. ரூர்னா ஜென்கின்ஸ் கேட்டார்.**

**கே: உலகத்துலே அமைதியைப் பரப்புறதைப்பத்தி பகவான் கிட்டே கேட்டப்போ...**

**ப:** முதல்லே நீங்க அமைதியடைங்கோ! அது அப்புறம் எந்த முயற்சியும் இல்லாம தானா உலகத்திலே பரவும். நம்மளே அமைதியா இல்லாம உலகத்திலே எப்படி பரப்பறது?

**கே: இந்தியாவுலே ஆத்மஞானத்தை விஞ்ஞான ரீதியா உணர்றது இல்லைங்கறது உண்மையா?**

**ப:** நீங்கதான் எப்பவுமே ஆத்மா. அதுக்கு எந்த விஞ்ஞானமும் தேவையில்லை.

**கே: எனக்கு அந்தப் பேருண்மை புரியுது. அதுக்கு ஒரு நடைமுறை சாதனை இருக்கணுமே... அதைத்தான் விஞ்ஞானம்ன்னு சொல்றேன்.**

**ப:** இந்த மாதிரி நினைப்புகள் இல்லாமே இருக்கறதுதான் ஆத்மஞானம். கழுத்திலே இருக்கற நகையை காணோம்ன்னு தேடினவ கதைதான். அவளுக்கு அதைக் கண்டுபிடிக்க சாதனை வேணுமா?

யாரும் உலகத்தையோ, உடம்பையோ, ஆத்மாவை விட்டுட்டு எங்கேயோ இருந்து பாக்கலே. ஆத்மாவா இருந்துதான் உடம்பையும் உலகத்தையும் பாக்கறோம். உலகம், கடவுள் எல்லாம் அதிலேதான் இருக்கு. பாக்கறவனைப் பாத்தா, எல்லாம் ஆத்மாதான்னு தெரியும். உங்களோட பார்வையை மாத்துங்கோ. உங்களைப் பாருங்கோ! நீங்க யாருன்னு பாருங்கோ! உங்களுக்கும் இந்த உலகத்துக்கும் எது ஆதாரம்? கண்டுபிடிங்கோ! எல்லாப் பிரச்சனையும் தீந்துடும்.

(335) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: காம விகாரங்களை எப்படிப் போக்கறது?**

ப: பேதம் நீங்கும்போது.

**கே: அதை எப்படி கொண்டு வர்றது?**

ப: ஆண் பெண் அதோட தொடர்பு எல்லாம் மனக் கற்பனை. உபநிஷத்... இது எல்லாம் ஏன் பிரியமாயிருக்குன்னா நம்ம மேலே இருக்கற பிரியத்தாலேதான்னு சொல்றது. சுகம் நம்மகிட்டேதான் இருக்கு. பிரியத்துக்கு சுகமேதான் காரணம். சுகம் உண்மையிலேயே வெளியே இல்லேன்னு தெரிஞ்சா இந்தப் பேதம் நீங்கிடும்.



(333) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: பிரத்தியபிஞ்ஞான்னா என்ன?**

ப: 'அபிஞ்ஞா' அப்படின்னா... நேரடியா தெரிஞ்சுக்கறது அனுபவிக்கறது.

'பிரதி' அப்படின்னா ஏற்கெனவே நல்லாத் தெரிஞ்சதை நினைவூட்டறது.

'இது யானை'ன்னு ஒருத்தனுக்குக் காட்டினா... அபிஞ்ஞா. நேரடியா தெரிஞ்சுக்கறான்.

'இதுதான் அந்த யானை'ன்னு ஒருத்தனுக்கு ஏற்கனவே நல்லா தெரிஞ்சதைக் காட்டினா... அதுதான் பிரத்தியபிஞ்ஞா.

எப்பவும் இருக்கற உண்மையை மறுபடியும் தெரிஞ்சுக்கறதுதான் அந்தப் பேர்லே சாஸ்திரங்கள்லே சொல்றா.

சூன்யம், அதிசூன்யம், மகாசூன்யம் எல்லாம் இப்படித்தான்.

(336) *வியாபாரி ஒருவர் கேட்டார்.*

**கே: ஆத்மாவை எப்படி உணர்றது?**

ப: எப்பவுமே, எல்லோரும், ஆத்மாவைத்தான் நேரடியா உணர்ந்துகொண்டே இருக்கோம்.

அதை உணராத ஒரு கண நேரமும் இல்லே. இப்படியிருக்கும் போது மறுபடியும் புதுசா. ஆத்மாவை எப்படி உணர்றது?

நீங்க யார்ன்னு பாருங்கோ!

நீங்கதான் அது.

**கே: ஆனா ஹிருதயகிரந்தி அவிழணும்ன்னு சொல்லப் படுதே. எல்லா சந்தேகங்களும் பரமாத்மாவை உணர்ந்தா போயிடும்ன்னு சொல்றாங்களே!**

ப: நீங்களா இருக்கறதுதான் உங்களைத் தெரிஞ்சுக்கறது.

இரண்டு நான் இருக்கா, ஒண்ணு இன்னொன்ன தெரிஞ்சுகொள்ள.

**கே: புரியலை. ஆத்மாவை உணர்றது எப்படி?**

ப: நாம எல்லோரும் ஏற்கனவே ஆத்மாவை உணர்ந்தாச்சு. இந்த எளிமையான உண்மை புரிஞ்சாபோதும் அவ்வளவுதான்.

**கே: ஆனா எனக்கு தெரியலையே! நான் எப்படி தெரிஞ்சுக்கறது?**

ப: நீங்க இருக்கறது தெரியலியா!

நீங்க இருக்கறதை மறுக்கறேளா!

**கே: இல்லை. எப்படி மறுக்கமுடியும்?**

ப: அப்போ உண்மை தெரிஞ்சுடுத்து!

**கே: ஆனாலும் நான் அதை தெரிஞ்சுக்கலை. நான் எப்படி ஆத்மாவை தெரிஞ்சுக்கறது?**

ப: 'நான்'ன்னு சொல்றது யாருன்னு பாருங்கோ?

**கே: நான்தான் நான்னு சொல்றேன்!**

ப: யார் இந்த நான்?
இந்த உடம்பா?
இல்லை, உடம்பைத் தவிர வேறயா?

**கே: இந்த உடம்பு இல்லை. யாரோ! ஆனா உடம்புலதான் இருக்கு.**

ப: கண்டுபிடிங்கோ!

**கே: முடியலை. எப்படி கண்டுபிடிக்கறது?**

ப: உங்களோட உடம்பு இருக்கு, இப்போ தெரியறது.
தூங்கும்போது உடம்பு தெரியலே.

விழிச்ச உடனே... நீங்க உடம்பைப் பிடிச்சுக்கொண்டு 'எனக்கு ஆத்மா தெரியலே'ன்னு சொல்றேள். தூங்கும்போது சொன்னேளா?

அங்கே அகண்டமா இருந்ததாலே.... நீங்க சொல்லலே. இப்போ உங்களை உடம்போட குறுகிக்கொண்டு 'நான் இன்னும் உண்மையை உணரலே'ங்கறேள்.

ஏன் உங்களைக் குறுக்கிக்கொண்டு துன்பப்படணும்? சுகமா உங்களுடைய ஸ்வபாவத்திலேயே இருக்க வேண்டியதுதானே.

தூங்கும்போது 'நான்'ன்னு சொல்லலே. இப்போ நான்'னு சொல்றேள். ஏன்னா... உடம்பைப் பிடிச்சுட்டேள். இந்த நான் எங்கிருந்து வர்றதுன்னு கண்டுபிடிங்கோ! அப்போ ஆத்மாவை உணர்ந்துடுவேள்.

உடம்பு ஜடம். அது நான்னு சொல்லாது.

ஆத்மா எல்லையற்று விளங்கறதாலே, அதுவும் நான்னு சொல்லாது.

அப்போ எது நான்ன்னு சொல்றது ?

**கே: எனக்கு இன்னும் புரியலை. எப்படி 'நான்'கறத கண்டுபிடிக்கறது ?**

ப: நான்கறது எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ!

அப்போ இந்த நான் மறைஞ்சுடும். எல்லையற்ற ஆத்மாவே இருக்கும்.

இந்த 'நான்கறதுதான் முடிச்சு, சித்துக்கும் ஜடத்துக்கும்.

இந்த உடம்பும் 'நான்' கிடையாது. ஆத்மாவும் 'நான்' கிடையாது.

யார் இந்த 'நான்' ? எங்கிருந்து வர்றது ?

**கே: எங்கிருந்து வருது ?**

ப: கண்டுபிடிங்கோ!

**கே: எனக்குத் தெரியலை. தயவு செய்து விளக்குங்க.**

ப: வெளிலே இருந்து வரலே.

உள்ளேயிருந்துதான் வர்றது. எங்கிருந்து வர்றது ?.

வெளியே எங்கயோன்னா உங்களைக் கூட்டிக்கொண்டு போகலாம்.

உங்களுக்கு உள்ளேயேதான் இருந்து வர்றதுங்கறப்போ... நீங்கதான் கண்டுபிடிக்கணும்.

**கே: தலையிலே இருந்து வருது ?**

ப: நான்கறது வந்த பிறகு 'தலை'வர்றதா ?

இல்லை 'தலை' வந்த பிறகு நான் வர்றதா ?

நான்கறது தலையிலேதான் இருக்குன்னா... தூக்கம் வர்றப்போ ஏன் தலை கவிழணும் ?

நான்கறது எப்பவும் இருக்கு. தலைதான் அதோட ஸ்தானம்ன்னா... ஏன் சிலசமயம் தலைநிமிர்ந்தும், சில சமயம் தலை கவிழ்ந்தும் இருக்கு ?

ஸ்தானமும் எப்பவும் இருக்கணுமே. அது எப்படி நான்கறதோட ஸ்தானமாகும். தூங்கும்போது தலை மட்டமா இருக்கு. முழிச்சா நிமிர்றது.

அப்போ அதுவா 'நான்'கறதோட ஸ்தானம்?

**கே: அப்போ எது அதோட ஸ்தானம்?**

ப: 'நான்'கறது உள்ளே இருந்து வர்றது. தூங்கும்போது 'நான்' இல்லை. முழிக்கறதுக்குக் கொஞ்சம் முன்னாடி 'நான்'கற எண்ணம் கிளம்பறது.

**கே: ஹிருதயகிரந்தி புருவமத்தியிலே இருக்குன்னு சொல்றாங்களே?**

ப: சிலர் புருவமத்திங்கறா. சிலர் ஸஹஸ்ராரங்கறா. எல்லாம் உடம்பை வச்சுதான் சொல்றா. நான்கறது வந்த பிறகுதான் உடம்பு வர்றது.

**கே: ஆனாலும் உடம்புலேதான நான் இருக்கேன்!**

ப: அப்போ நீங்க உடம்பு இல்லேன்னு ஒத்துக்கறேள்.

**கே: உடம்புல வலி இருந்தா எனக்குத் தெரியுது. வேற உடம்போட வலி எனக்கு தெரியலை. இந்த உடம்பத் தாண்ட முடியலை.**

ப: இதுதான் என் உடம்புங்கற பிடிதான் இந்த உணர்ச்சிக்குக் காரணம்.

அதுதான் ஹிருதய கிரந்தி.

**கே: அந்த கிரந்தி எப்படி போகும்?**

ப: யாருக்கு இருக்கு கிரந்தி?
அது ஏன் போகணும்னு நினைக்கறேள்?
அது கேட்டுத்தா?
இல்லை நீங்க கேக்கறேளா?

**கே: அது கேக்கலை நான்தான் கேக்கறேன்.**

ப: யார் அந்த நான்? அதைக் கண்டுபிடிச்சா முடிச்சு இருக்காது.

**கே: முடிச்சு உடம்போடயே இருக்கு. உடம்பு பிறப்பால ஏற்படுது. எப்படி பிறக்காம இருக்கறது?**

ப: யார் பிறந்திருக்கறது?
ஆத்மாவா?
உடம்பா?

**கே: உடம்புதான்.**

ப: அப்போ திரும்ப பிறக்கக்கூடாதுன்னு உடம்பு கேக்கட்டும்.

**கே: அது கேக்காது. அதனால நான்தான் கேக்கறேன்.**

ப: யாரோட உடம்பு?
நீங்க தூங்கும்போது உடம்பு இல்லாமே இருக்கேள்.

நான்கற எண்ணம் வந்த பிறகுதான் உடம்பு வர்றது. 'நான்'கற எண்ணம்தான் பிறப்பு. அது பிறந்த பிறகுதான் உடம்பு பிறக்கறது. உடம்போட பிறப்பு இரண்டாவது கட்டந்தான்.

முதல் காரணத்தைப் போக்குங்கோ! இரண்டாவது கட்டம் தானாப் போயிடும்.

**கே: 'நான்'கற எண்ணம் பிறக்காம எப்படித் தடுக்கறது?**

ப: ஆத்ம விசாரத்தாலே.

**கே: புரிய முயற்சி பண்றேன். ஆனா முடியலை. ஜபம் பண்ணலாமா?**

**என்ன ஜபம் பண்ணலாம்?**

ப: ஜபம்ன்னா என்ன? ஏன் செயற்கையா ஜபம் பண்ணணும்?

உங்களுக்குள்ளேதான் இடைவிடாமே எப்பவும் இயல்பா ஜபம் நடந்துக்கொண்டேயிருக்கே!

**கே: எனக்கு ஏதாவது உபதேசம் உதவற மாதிரி குடுங்க.**

ப: உங்களை மாதிரி ரொம்ப சாஸ்திரங்கள் படிக்காத சாமான்யமான ஒருத்தன்கிட்டே... இப்போ, ராமா ராமா ன்னு சொல்லிக்கொண்டே இருங்கோன்னு சொல்றேன்னு

வைங்கோ... அவன் பாட்டுக்கு கேட்டுட்டு, அதைப் பேசாம செஞ்சுகொண்டே இருப்பான். அதுவே போதும். ஆனா நீங்க நிறைய உபநிஷத், பகவத்கீதைன்னு படிச்சதனாலே ரொம்ப நாள் ஜபம் பண்ண முடியாது. கேள்வி வரும். ஏன் இதைப் பண்ணணும்னு தோணும். நான் யார் இந்த மந்திரத்தையே சொல்லிக்கொண்டே இருக்கறதுக்குன்னு முதல்லே நான் யார்ன்னு பாக்கறேன். அப்புறம் வேணா ஜபம் பண்றேன்னு, ஜபத்தை நிறுத்திட்டு விசாரத்துக்கு வந்துடுவேள்.

**கே: ஆவிருத்த சக்ஷு (உண்முகப்பார்வை)ன்னா என்ன?**

ப: கண் பார்வையை எதிர்ப்பக்கமா திருப்பிக்கறது இல்லே. முதல்லே சக்ஷுன்னா என்ன?

**கே: கண்.**

ப: கண் பாக்கறதா?

இல்லை கண்ணுக்குப் பின்னாடி இருந்து வேற ஏதோ பாக்கறதா?

கண்ணுதான் பாக்கறதுன்னா... பிணம் பாக்கணும்லே. கண்ணுக்குப் பின்னாடி இருக்கறவன்தான் கண்ணு வழியா பாக்கறான். அவனைத்தான் சக்ஷுன்னு சொல்றா.

**கே: திவ்ய சக்ஷு வேணும் பகவானோட சொரூபத்தைப் பாக்க. இந்த உடம்புல இருக்கற கண் சாதாரண சக்ஷுதான்.**

ப: ஓ! அப்படியா! கோடி சூர்ய பிரகாசத்தைப் பாக்க நினைக்கற ஆளா நீங்க!

**கே: ஏன் என்னாலே கோடி சூர்ய பிரகாசத்தைப் பாக்க முடியாதா?**

ப: உங்களாலே ஒரு சூரியனைப் பாக்க முடியுமா? ஏன் கோடி சூர்யப் பிரகாசம் கேக்கறேள்.

**கே: திவ்ய சக்ஷு இருந்தாப் பாக்கலாம். 'எங்க சூரியன் உதிக்கலையோ, அதுதான் என்னுடைய பரந்தாமம்'ன்னு கிருஷ்ணர் சொல்றார். சூரியன் சக்தியில்லாம போற**

**இடம்... நிலை ஒண்ணு இருக்கு. அதுதான் இறைவனோட நிலை.**

ப: சரி அப்போ கிருஷ்ணரைக் கண்டுபிடிங்கோ. பிரச்சனை தீந்துடும்.

**கே: கிருஷ்ணர் உயிரோட இல்லை இப்போ.**

ப: இதுதான் நீங்க கீதையைப் படிச்ச லட்சணமா?

நான் எப்பவும் இருக்கேன்னு சொல்றாரே! அவரை யாருன்னு நினைச்சேள்! உடம்பா அவர்!

**கே: அவர் உயிரோடு இருந்தப்போ மத்தவங்களுக்கு போதிச்சார். அவர் கூட இருந்தவங்க ஞானம் அடைஞ்சாங்க. நானும் அதே மாதிரி உயிரோட இருக்கற ஒரு குருவை தேடுறேன்.**

ப: அப்போ கீதை கிருஷ்ணர் போனதுக்கப்புறம் பிரயோஜனம் இல்லாமே போச்சா?

அவர் அவரோட உடம்பையா கிருஷ்ணர்ன்னு சொன்னார்!

**கே: ஆனா எனக்கு உயிரோட இருக்கற ஒரு குரு நேரடியா உண்மைய சொல்லணும்.**

ப: கிருஷ்ணருக்கு ஏற்பட்ட கதிதான் அவருக்கும் ஏற்படும்.

**கேள்வி கேட்டவர் விடை பெற்றார்.**

அவர் போன உடன் பகவான் பொதுவாகச் சொன்னது:

ப: திவ்ய சக்ஷுன்னா... ஆத்ம பிரகாசம். 'திவ்ய'ங்கற வார்த்தை அதையே சொல்றது. அந்த வார்த்தைக்கு அர்த்தம்.... ஆத்மாதான்.

யார் திவ்ய திருஷ்டியைக் கொடுக்கறது?

யார் பாக்கறது?

இவா புஸ்தகங்கள்லே, சிரவணமனன நிதித்தியாசனம் எல்லாம் வேணும்ன்னு படிச்சுடறா. ஸவிகல்ப சமாதி, நிர்விகல்ப சமாதி இதெல்லாம் வந்த பிறகுதான் ஞானம் வரும்ன்னு நினைக்கறா. அதனாலேதான் இந்தக் கேள்வி எல்லாம். ஏன்

இந்த சிக்கல்? குழப்பத்துலேயே அலையறா! கடைசியிலே இவாளுக்கு என்னதான் கிடைக்கும்?

இந்தத் தேடற தொல்லை போகும். ஆத்மா எப்பவுமே எல்லாராலேயும் அனுபவிக்கப்பட்டுக்கொண்டேதான் இருக்குன்னு தெரியும். அப்போ ஓயறதை இப்போவே ஏன் ஓய்ஞ்சு இருக்க மாட்டேங்கறா?

இப்போவே ஓயலாம்.

சாமான்யமான படிக்காத ஒருத்தரிடம்.... இறைவன்தான் எல்லாத்தையும் நடத்தறார்ன்னும், நமக்கு எந்த அதிகாரமும் இல்லேங்கற சாமான்யமான உண்மையைச் சொல்லி, இறைவனுக்கு உன்னை விட்டுக்கொடுத்துடுன்னு சொன்னாலே... திருப்தியாயிடுவான். ஞானியும் அப்படித்தான் திருப்தியாயிருக்கான். சாஸ்திர கோஷ்டிக்குத்தான் எல்லாப் பிரச்சனையும். சரி! சரி! அவாளும் காலக்கிரமத்துலே சரியாயிடுவா.



(337) கே.ஆர்.வி. ஐயர் கேட்டார்.

**கே: எப்படி சித்த சுத்தி ஏற்படுத்திக்கறது.**

ப: சாஸ்திரங்கள்... கர்மம், பக்தியாலேன்னு சொல்றது.

இதே கேள்வியை முன்னாடி ஒருதரம் இங்கேயே ஆச்ரமத்திலே இருக்கற ஒருத்தர் கேட்டார். இறைவனுக்கு அர்பணிக்கற கர்மத்தாலேன்னு சொன்னேன்.

கர்மம் புரியறப்போ மட்டும் இறைவனை நினைச்சாப் போறாது. எந்த நேரமும் இடைவிடாம நினைக்கணும் அப்போதான் மனசு சுத்தமாகும்.

அந்த சேவகர் பகவான் அவரைக் குறிச்சுத்தான் சொல்றார்ன்னு புரிஞ்சுகொண்டு 'நான் பகவானுக்கு சேவை பண்றது மட்டும் பத்தாதா? அவரையே எந்த நேரமும் நினைக்கணுமா! சரி'ன்னார்.

கேள்வி கேட்ட பக்தரிடம் பகவான்,

ஆத்ம விசாரத்தாலே வெகு ஸுலபமாச் சித்த சுத்தி ஏற்பட்டுடும். ஆத்ம விசாரத்தாலே தேகாத்ம புத்தி போறதுதான் சித்த சுத்திக்கு அர்த்தம்.

(338) திருமதி. ஜென்னீங்ஸ் அமெரிக்க பெண்மணி கேட்டார்.

**கே: கடவுளை, அவர் இருக்கார்ன்னு கும்பிட்டுட்டு போயிடலாமே! எதுக்காக இந்த 'நான் யார்'? கடவுள் இருக்கார்ங்கறது... நேர் மறையா நல்லதனமா இருக்கு. இந்த நான் யார் எதிர் மறையா.... இது நானல்ல நானல்லன்னு இருக்கே? இது பிரிவையே குறிக்கறது.**

ப: எப்படி ஞானம் அடையறதுன்னு தேடுதல் இருக்கற வரைக்கும் நீங்க யார்ன்னு பாருங்கோன்னு சொல்றோம். நீங்க தேடறதே பிரிவைத்தான் குறிக்கறது.

**கே: நான் யார்ன்னு தேடறதை விட 'அஹம் பிரம்மாஸ்மி'ன்னு தியானிக்கறது சிறப்பில்லையா?**

ப: யார் சொல்றது?

அஹம் பிரம்மாஸ்மின்னு சொல்றதுக்கு ஒருத்தன் இருக்கணுமே... அவனைக் கண்டுபிடிங்கோ!

விசாரத்தை விட தியானம் சிறந்தது இல்லை.

தியானம் மனசாலே பண்ணப்படறது -- முன்னிலை

விசாரம் உண்மையைத் தேடறது --- தன்னிலை.

**கே: இந்த விஷயத்தை ஏன் விஞ்ஞானபூர்வமா அணுகக் கூடாது?**

ப: அனாத்மாவை விலக்கி ஆத்மாவைத் தேடறதுதான் விஞ்ஞானம்.

**கே: விஞ்ஞானபூர்வமான்னு நான் சொல்றது கிரமமா கொஞ்சம் கொஞ்சமா முறையா விலக்கறது.**

**முதல்லே மனம்... அப்புறம் புத்தி... அப்புறம் அகந்தை...**

ப: ஆத்மா மட்டுமே இருக்கு. வேற எதுவும் இல்லை.

மனம், புத்தி, அகந்தை இது எதுவுமே ஆத்மாவுக்கு அன்னியமா இல்லை. பைபிள்லே "Be Still and Know that I Am God" சும்மாயிரு! 'நான்'கறதே கடவுள்ன்னு தெரிஞ்சுக்கோன்னு சொல்றதே! நம்மளக் கடவுள்ன்னு தெரிஞ்சுக்கத் தேவை எல்லாம் சும்மாயிருக்கறது மட்டும்தான்.

**கே: இந்த உபதேசத்தை மேற்கே புரிஞ்சுக்குவாங்களா?**

ப: காலம், தேசம் பத்திய கேள்விக்கே இடம் இல்லை. புரியறது அவாளோட பக்குவத்தைப் பொறுத்தது. இதிலே கிழக்கிலே இருந்தா என்ன... மேற்கிலே இருந்தா என்ன?

மொத்த வேதாந்தமும் இந்த இரண்டு வாக்கியத்திலே அடங்கிடும்.

I Am that I Am.

Be Still and Know that I Am God.



(338) *கே.எஸ்.என். ஐயர், இரயில்வே ஆபிசர் கேட்டார்.*

**கே: Cosmic Consciousness-ன்னு (காஸ்மிக் கான்ஷியஸ்னெஸ்) ஒரு நூல்லே, ஆத்ம ஞானம் குறிப்பிட்ட வயசுக்குள்ளதான் அடைய முடியும்ன்னு சொல்றாங்களே! அது உண்மையா?**

ப: யாராவது குறிப்பிட்ட வயசுக்குள்ளேதான் நானா இருக்க முடியும்ன்னு சொல்ல முடியுமா! நான்கறது இங்கேயே இப்போவே இருக்கு.

இந்த மாதிரி புஸ்தகங்கள்லே சொல்றதாலே ஜனங்களும் என்ன நம்பறா... நம்மளாலே இந்தப் பிறப்பிலே ஞானம் அடையமுடியாது. இன்னும் ஒண்ணு இரண்டாவது தேவைங்கறா! சுத்தப் பைத்தியக்காரத்தனம்!

(339) *சைவசித்தாந்த்தைப் பத்தி கேட்டப்ப பகவான் சொன்னது.*

ப: நான் கருடன் (கருடோஹம்)ங்கற ஜபம் ஒரு மனுஷனை கருடனாக்காது.

பாம்பு கடிச்சா ஒருவேளை விஷம் முறியலாம். அப்படித்தான் சிவோஹம் பாவனை (நான் சிவன்). அது நினைப்புதான். அது ஒருத்தனை சிவமா மாத்திடாது. ஆனா அகந்தையோட பிடிபோகும். அவன் தனித்தன்மையை இழக்காம சுத்தமாயிருப்பான்... சிவனோட உடம்பிலே ஒரு பகுதியாகறதுக்கு தகுதி ஆவான். அவன் சிவத்தோட உடம்பிலே ஒரு பகுதியாகி சிவத்தை அனுபவிப்பான்.

சிவானந்தத்தை அனுபவிப்பான். இதுவே சைவ சித்தாந்தப்படி முக்தி. அவாளோட தனித்தன்மைமேலே இருக்கற மரியாதையை அப்படி மறைச்சு சொல்றா. அது முக்தி ஆகாது.

(340) *போஸ் கேட்டார்.*

**கே: உடல் உணர்வு வந்த உடனே........... (என்று பக்தர் கேட்பதற்கு முன்பாக பகவான்)**

**ப:** உடல் உணர்வு, அப்படின்னா... என்னன்னு முதல்லே சொல்லுங்கோ.

உணர்வுக்கு அப்பாற்பட்டு நீங்க யார்? உடம்பு... உடலுணர்வு இருக்கறதனாலே தெரியறது. உடலுணர்வு... நான்கறதனாலே இருக்கு.

நான்கற உணர்வு... வெறும் உணர்விலே இருந்து வர்றது.

உணர்வு எப்பவும் இருக்கு. அதைத் தவிர வேற எதுவும் இல்லை.

நீங்க இப்போ உடல் உணர்வுன்னு சொல்றது ஆரோபம்தான்.

'இங்கே இருக்கற எல்லாம் பிரியமாயிருப்பது ஆத்ம பிரியத்தாலே'யேங்கற உபநிஷத் வார்த்தை புரிஞ்சா... உணர்வு மட்டுமேதான் இங்கே இருக்கு அதைத் தவிர வேற எதுவும் இல்லேங்கறது நல்லாப்புரியும்.

**கே: அப்போ ஏன் ஒருத்தன் தற்கொலை பண்ணிக்கறான்?**

ப: அவன் துக்கமாயிருக்கான். துக்கத்தைத் தொலைக்க நினைக்கறான். உடம்போட இருக்கற பந்தத்தை முடிச்சுக்கறான். ஏன்னா... உடம்புதான் துக்கம்.

உடம்பைக் கொல்றதுக்கு ஒரு கொலைகாரன் இருக்கணுமே... அவன் தற்கொலைக்கு அப்புறமும் இருப்பான். அவன்தான் ஆத்மா.

(341) ஜென்னீங்ஸ் கேட்டார்.

**கே: ஆத்மஞானம்கறது நினைவுகளோட பிடியிலே இருந்து விடுதலைன்னு பகவான் சொல்றீங்க. சாதாரணமான விஷயங்கள்ல நினைவுகளுக்கு ஒரு முக்கியமான இடம் இருக்குதே?**

ப: நினைவுகள் நான்கற நினைப்பிலே இருந்து வர்றது. நான்கற நினைப்பு ஆத்மாவிலே இருந்து வர்றது.

ஆத்மாதான் நான்கற நினைப்பாவும், மத்த நினைப்புகளாவும் வர்றது.

அதனாலே நினைப்பு இருந்தா என்ன? இல்லேன்னா என்ன?

**கே: நல்ல நினைப்பு ஆத்ம ஞானத்துக்கு உதவுமா? அது மூலமாக ஞானமடைய முடியுமா?**

ப: முடியும். ஆனா இந்த மாதிரிதான்.

நல்ல நினைப்பு கெட்ட நினைப்பைப் போக்கும். நல்ல நினைப்பும் ஆத்ம ஞானத்திலே போயிடும்.

**கே: கற்பனையான நினைவுகள் அதாவது கவிதை எழுதறமாதிரி இது ஆத்ம ஞானத்தோட ஒரு அம்சமா? அதனால அது உதவிதானா?**

ப: உதவிதான். முதல்லே சொன்ன மாதிரிதான்.

எல்லாம் ஆத்மாவிலே அடங்கணும். நினைப்போ (நல்லதோ, கெட்டதோ) உங்களை ஆத்மாவிலே இருந்து தூரமாத்தான் கூட்டிக்கொண்டு போகும். பக்கத்திலே கூட்டிக்கொண்டு போகாது.

ஏன்னா.... நீங்கதான் ஆத்மாவுக்கு நினைப்பை விட நெருக்கம்.

நீங்களேதான் ஆத்மா.

நினைப்பு நீங்க இல்லை.

**கே: ஆத்மா அதோட படைப்பை அதே உள்ளே இழுத்துட்டு ஞானமடையுது.**
**ஆனா நாகரீகம் படைப்பைத் தவறாப் பயன்படுத்தறது. படைப்பு தன்னோட முன்னேற்றத்துக்காகவே படைக்கப் பட்டதுங்கறதை மறந்து தன்னையே நாகரீகம் அழிச்சுக்கறது.**

ப: நீங்க உங்களுடைய எண்ணங்கள்லே இருந்து வேறதானே? நீங்க உங்களோட எண்ணங்கள் இல்லாமே இருக்க முடியும். ஆனா எண்ணங்கள் நீங்க இல்லாம இருக்க முடியாது.

**கே: இந்த நாகரீகம் ஆத்ம ஞானத்தை நோக்கி முன்னேறுதா?**

ப: நாம ஆத்ம ஞானம் அடைஞ்சா... எல்லாம் அதிலேயே அடங்கிடும்.

**கே: ஒரு ஆதிவாசி ஞானத்துக்கு அருகில இருக்கானா? இல்லை ஒரு நாகரீகமான புத்திசாலி அருகில இருக்கானா?**

ப: ஒரு ஞானி ஆதிவாசி மாதிரி கௌபீனம் கட்டி இருக்கலாம். ஆனா கௌபீனம் கட்டினவா எல்லாம் ஞானி இல்லை.

**கே: நடக்கறது எல்லாம் இறைவனோட இஷ்டம்தான்னும், நடக்கறது நல்லதுக்குத்தான்னு இருக்கறது சரியா.**

ப: ஆமா சரி. ஆனா எல்லாங்கறதும்... இறைவன்கறதும்.... ஆத்மாவுக்கு அன்னியமா இல்லை. நீங்க ஆத்மாவா இருந்தா இந்த நினைப்பெல்லாம் வராது.

**கே: சரணடையறதுன்னா எல்லாத்தையும் ஏத்துக்கணுமா? எறும்பு, கொசு, பாம்பு அது கடிச்சா கடிச்சுட்டு போகட்டும்ன்னு விட்டுடணுமா?**

ப: பாக்கறவனும் பாக்கறதும் உண்மையிலே இருந்து வேறா இருக்கா?

**கே: வேறா இல்லைன்னா எறும்பு கடிக்கறது தெரியாதா?**

ப: யாரைக் கடிக்கறது? உடம்பைத்தான். நீங்க உடம்பு இல்லே. நீங்க உங்களை உடம்புன்னு நினைக்கற வரைக்கும் எறும்பு, செடி எல்லாத்தையும் பாப்பேள். நீங்க ஆத்மாவாயிருந்தா ஆத்மாவுக்கு அன்னியமா எதுவும் இருக்காது.

**கே: உடம்பு எறும்புக்கடியை உணருதே!**

ப: உடம்பு உணர்ந்தா அது கேக்கட்டும்.
உடம்பு அதைப் பாத்துக்கும். உங்களுக்கு என்ன?

**கே: முழுமையான சரணாகதின்னா நம்ம சூழ்நிலையில் உள்ள சப்தம், தொந்தரவு, தியானம் சமயத்துல கூட ஏத்துக்கணுமா? இல்லை, மலையிலே ஒரு குகையை ஏகாந்தத்துக்கு தேடிப் போகணுமா? பகவான் இதைத்தானே செஞ்சீங்க.**

ப: போறதும் இல்லை.... வர்றதும் இல்லை. எதனாலேயும் ஆத்மா பாதிக்கப்படாது. ஆத்மா போறதுக்கு இடம் இல்லை. அதனாலே எங்கேயும் போக முடியாது.

**கே: ஆத்ம ஞானமடைய இப்படி பண்றது தவறில்லையே?**

ப: தவறு எல்லாம் நம்மள உடம்போட சம்பந்தப்படுத்தறதிலே தான் இருக்கு.

பகவான் உடம்புன்னா... அந்த உடம்பைக் கேக்கலாம். எதை பகவான்னு சொல்றேன்னு முதல்லே புரிஞ்சுக்குங்கோ. அது உடம்பு இல்லை. அது ஆத்மா.

**கே: கையை வெட்டினாலும் நம்ம ஆத்மான்னா வலி தெரியக் கூடாதுல்லையா! ஏன்னா... பகவத்கீதையிலே ஆத்மா உடம்புலே இருந்து வேறன்னு சொல்லுதே!**

ப: வலி தெரியலேன்னா... அப்போ ஞானம்ன்னு சொல்லுங்கோ!

**கே: வலி தெரியாம இருக்க முடியாதா?**

ப: ஆபரேசன் பண்றப்ப மயக்கமருந்து கொடுத்துதான் பண்றா. வலி தெரியாது. அப்போ நோயாளி ஞானம் அடைஞ்சுடுவானா?

வலி தெரியாம இருக்கறதுதான் ஞானமா?

**கே: ஞானிக்கு வலிக்காதா?**

ப: உடல் உணர்வு இருந்தா வலிக்கும்.
உடல் உணர்வு இல்லேன்னா வலிக்காது.

*யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: ஜீவன் முக்தியே ஆனந்தமா இருக்கும்போது ...**

பகவான் குறுக்கிட்டார்.

ப: சாஸ்திரங்களைப் படிச்சுட்டு எதையாவது பேசக் கூடாது.
ஜீவன் முக்தின்னா என்ன?
ஆனந்தம்னா என்ன?
முக்தியே உண்மையான்னு தெரியலே!
நீங்க இல்லாம இதெல்லாம் இருக்குமா!

**கே: எனக்கு இதெல்லாம் அனுபவம் இல்லை.**

ப: எது இல்லையோ அது இல்லாததுதான்.
எது இருக்கோ அதுதான் எப்பவும் இருக்கும்.

ஆத்மா இங்கேயே இப்போவே இருக்கு. இதுதான் பரமார்த்த ஸத்யம். கழுத்திலே இருக்கற நகையைத் தேடினவ கதைதான்.

மனம்ன்னா என்னன்னு பாத்தா... மனம்ன்னு ஒண்ணு இருக்காது.

இல்லேன்னா... மனம் எங்கிருந்து வர்றதுன்னு பாக்கணும்.

இல்லேன்னா... ஜபம் தியானம்ன்னு ஒரு நினைப்பிலே நிக்கணும், நின்னா... மத்த நினைப்பெல்லாம் போயிடும். தியானத்திலே தூக்கம் மட்டும் வராம பாத்துக்கணும். விழிப்பா இருக்கணும்.

கே: மனதை எப்படித் தேடறது?

ப: பிராணாயாமம் சகாயம் பண்ணும். ஆனா அதே உண்மைக்குக் கூட்டிக்கொண்டு போயிடாது. பிராணாயாமம் பண்ணும்போது கவனம், நான்கறது மேலே இருக்கணும், அது எங்கிருந்து வர்றதுன்னு பாக்கணும். அப்போ பிராணன் ஒடுங்கும்போது நான்கறதும் ஒடுங்கிடும். இரண்டுக்கும் மூலம் ஒண்ணுதான். நான்கற எண்ணம் பிராணனோடு சேர்ந்து ஒடுங்கும்போது 'நான்-நான்'னு எல்லையற்று ஒரு ஸ்புரணம் தோன்றும். அது இடைவிடாமலும், அகண்டமாவும் இருக்கும். அதுதான் லக்ஷியம். அதைத்தான் வேற வேற பேர்லே கடவுள், ஆத்மா, குண்டலினி, சக்தி உணர்வுன்னு சொல்றா.



(348) யாரோ ஒருவர் கேட்டார்.

**கே: சில சமயங்கள்லே பாக்கற பொருள்கள், ஆட்கள் எல்லாம் தெளிவில்லாம கனவுல தெரியற மாதிரி தெரியுது. அதைப் பாக்கறதுக்கு முடியலை, ஆனாலும் இதெல்லாம் இருக்குதுன்னு தெரியுது. அப்போ ஏதோ நான் உண்முகமா இருக்கேன்...லாம் இல்லை. மனம் ஆழ்ந்த அமைதியில இருக்கு. இதுதான் ஆத்மாவுலே மூழ்குறதுக்கான சமயமா? இல்லை, என்னோட மன கற்பனையா? இதை ஊக்குவிக்கலாமா?**

ப: இதுவே நாம அடைய வேண்டிய நிலை. மன அமைதியோடு விழிப்பும் இருக்கு.

இந்தக் கேள்வி கேக்கறதாலே அதுதான் ஆத்மநிலைன்னு தெரியலே. அது திடமாகலே. சில சமயம் எப்பவோ ஏற்படறது.

ஆழ்ந்த அமைதியாயிருக்கும்போது ஏன் மூழ்கணும்? அந்த நிலையே ஆத்ம நிலைன்னு தெரியலேன்னா.... அதுதான் ஆத்மான்னு தெரிஞ்சுக்கறதுக்கு முயற்சி செய்யலாம்.

(350) ***மிகவும் சிரத்தையான அன்பர் G. சண்முகத்திடம் பகவான்.***

**ப:** ஆத்ம ஞானமடைய சாஸ்திரங்கள் 12 வருடம் குருவுக்கு ஒருத்தன் சேவை பண்ணணும்னு சொல்றது. குரு செய்யறது என்ன? ஆத்ம ஞானத்தைத் தூக்கிக் கொடுத்துடறதா? ஆத்மா எப்பவும் அடையப்பட்டே இருக்கு! அப்போ நடைமுறையிலே இப்படிச் சொல்றதுக்கு என்ன அர்த்தம்.

சிஷ்யனுக்கு அவன் ஆத்மாவேதான்னு தெரியலே. அஞ்ஞானத்தாலே உடம்போட ஆத்மாவை சம்பந்தப் படுத்தறதாலேதான் இந்தக் குழப்பம். அஞ்ஞானம் நீங்கிடுத்துன்னா... குழப்பம் தெளிஞ்சு உண்மை ஞானம் துலங்கும். சாது சகவாசத்தாலே அவனோட அஞ்ஞானம் கொஞ்சம் கொஞ்சமா நீங்கி கடைசிலே சுத்தமா போயிடும். எப்பவும் இருக்கற ஆத்மா தெரியவரும்.

சிஷ்யன் குருகிட்டே சரணடைஞ்சா அவனுக்கு தனித்தன்மை இருக்காது. சரணாகதி பூரணமாகலேன்னா... தனித்தன்மை போயிடும். துக்கத்துக்கு இடம் இல்லை. எப்பவும் இருக்கற ஆனந்தம் தானா வெளிப்படும். அஷ்டாவக்ரர் ஜனகர் கதை இதைத்தான் சொல்றது.

இதைச் சரியா புரிஞ்சுக்காம ஜனங்க என்ன நினைக்கறா, குரு ஏதோ காதிலே, மகா வாக்கியம் சொல்வாருன்னும் அப்புறம் சிஷ்யன் பிரம்மத்தை உணர்ந்துடுவான்னும் நினைக்கறா. அவாளோட அறியாமை காரணமா பிரம்மம்னா... என்னமோ ரொம்பப் பெரிய வஸ்து.... எல்லாத்தோடேயும் ரொம்பப் பெரிசுன்னு நினைக்கறா.

இருக்கற சின்ன நான்கறதை வச்சே ரொம்பத் திண்டாட்டமா இருக்கு. இதிலே 'நான்' பிரம்மாண்டமாச்சுன்னா என்ன கதியாகறது? அந்த அளவுக்கு முட்டாள்தனமும் அறியாமையும் பிரம்மாண்டமாகும்.

இந்தப் போலி நான் மறையணும். அதோட நீக்கந்தான் குரு சேவையோட பலன். ஆத்ம ஞானம் எப்பவும் இருக்கு. அது குரு ஏதோ புதுசா கொண்டு வர்றது இல்லே. அஞ்ஞான நீக்கத்துக்கு உதவுவார். அவ்வளவுதான்.

(351) சேலம் டாக்டர் சுப்பிரமணிய ஐயர் கேட்டார்.

**கே: சில உபதேசங்கள் அடங்கிய பகுதி ஒண்ணை படிச்சு காமிச்சார். அதுல 'உலகம் அநித்தியம். உலகபோகங்கள் தேவையில்லை. அதை வெறுத்து எதிர்க்கணும். புலன்களை கட்டுப்படுத்தணும். அதை உணர்றதுக்கு ஆத்மாவை தியானிக்கணும்ன்னு எழுதியிருந்தது.**

பகவான் அதுக்கு,

ப: ஒருத்தனுக்கு உலகம் அநித்தியம்னு எப்படித் தெரியும்? நித்தியமான ஏதோ ஒண்ணு அவனுக்குப் புரிஞ்சாத்தான் உலகம் அநித்தியம்ன்னு தெரியும். இல்லாத வரைக்கும் தெரியாது. ஏன்னா.... அவன் ஏற்கனவே ஆத்மாதான்.

ஆத்மா நித்தியம். அவனை ஆத்மாவை நோக்கித் திருப்பணும். அவ்வளவுதான்.

**கே: துரியம்ன்னா என்ன?**

ப: மூணு நிலைதான் இருக்கு. துரியம் நாலாவது நிலை இல்லை. அது மூணு நிலையிலேயும் இருக்கறது. அதை யாரும் சரியா புரிஞ்சுக்கறது இல்லை. அதனாலே அதை நாலாவது நிலை, துரியம், ஒரே ஸத்யம்ன்னு சொல்றா.

அது ஏதோ தனியா இல்ல. அதுதான் நடக்கற எல்லாத்துக்கும் ஆதாரம்.

'நீ இருக்கியே'.... அதுதான் துரியம்.

மூணுநிலையும் அதுமேலேயே ஏற்படறது. அதிலேயே அடங்கிடறது. மூணு நிலையும்தான் பொய்.

ஸ்கிரீன்லே படம் ஓடறது, படம்பொய். ஸ்கிரீன் மாறாம எப்பவும் இருக்கு. ஓவியங்கள் உருவங்கள் பொய். துணி உண்மை.

துரியம்கறது ஆத்மாவோட இன்னொரு பெயர். மூணுநிலையும் தெரியறது நம்மளத் தெரியலேங்கறோம். ஆனா துரியம் இங்கேயே இப்போவே இருக்கு. அது ஒண்ணுதான் இருக்கு. அதைத் தவிர வேற ஒண்ணும் இல்லை.

(354) ***தியாசபிகல் சொசைட்டியைச் சேர்ந்த அமெரிக்க பெண்மணி கேட்டார்.***

**கே: தூக்கத்துலே இப்போ இருக்கற மாதிரியே விழிப்போட இருக்க என்ன செய்யணும்?**

ப: தூங்கறது, விழிப்போட இருக்கறதுன்னு ஒண்ணும் உண்மையிலேயே கிடையாது.

இருக்கறதுதான் விழிப்பு, அறிவு. அதனாலே 'இருக்கறது' உன்னோட ஸ்வபாவம். தூங்கினாலும் விழிச்சாலும் நீ இருக்கறது அப்படியேதான் இருக்கு. அதை புதுசால்லாம் பெற முடியாது.

**கே: தூங்கும்போது எப்படி இருக்கோம்ன்னு தெரியலை; ஞாபகம் இல்லை.**

ப: யார் சொல்றது ஞாபகம் இல்லேன்னு....

**கே: நான்தான்.**

ப: அப்பவும் இதே நான்தான் இருந்தது.
ஏன் தூங்கும்போது இதைச் சொல்லமாட்டேன்கறே?

**கே: தூக்கத்துல நான் பேசறேன்னு எனக்கு ஞாபகம் இல்லை.**

ப: 'நான் வந்தேன்' 'நான் போனேன்'னு விழிப்பிலே யார் சொல்றது? அவன்தான் இப்போ எனக்கு ஞாபகம் இல்லேங்கறான்.

ஏன் தூங்கும்போது இந்தக் கேள்வியை கேக்க கூடாது?

**கே: தூக்கத்துல என்ன நடந்ததுன்னு எனக்கு தெரியலை. அதனாலதான் இப்போ கேக்கறேன்?**

ப: தூக்கத்திலே நடக்கறதைத் தூக்கத்திலேதான் கேக்கணும்.
விழிப்பிலே அதனாலே ஏதாவது பிரச்சனையா?
இந்தக் கேள்விக்கு விழிப்பிலே அர்த்தம் இல்லை.
தூக்கத்திலே உனக்குக் கட்டுப்பாடு இல்லை.

அதனாலே கேள்வியில்லை. விழிப்பிலே உன்னை உடம்போட கட்டுப்பட்டுக்கறே. அதனாலே இந்த மாதிரி கேள்வி எல்லாம் வர்றது.

**கே: எனக்குப் புரியுது. ஆனா எல்லாம் நான்கறது அனுபவமாகலை**

ப: எல்லாம்னு சொல்றதுக்குள்ளே ஒரு பொருளா உன்னையும் நீ நினைக்கறதாலே... நீ எல்லாம் ஒண்ணுன்னு புரியறதுன்னு சொல்றே.

நீ...இந்த எல்லாம்கறது உண்மைன்னு நினைக்கறே.... ஆனா ஒண்ணுங்கறதுதான் உண்மை. எல்லாம்ங்கறது பொய்.

இந்த எண்ணம் போகணும். போனாத்தான் ஒண்ணு தெரியும். எல்லாம்கறதுதான் அதை மறைக்கறது.



(354) **பகவான் வேறு யாரோ அது சம்பந்தமாகக் கேட்டதற்கு.**

ப: அஞ்ஞான நீக்கந்தான் அப்பியாசத்தோட லக்ஷியம்.
ஞானம் அடையறது இல்லே.
ஞானம் எப்பவும் இருக்கு. இங்கேயே இப்போவே இருக்கு.

புதுசா வந்ததுன்னா.... ஒரு காலத்திலே அது இல்லை. இன்னொரு காலத்திலே இருக்குன்னு ஆயிடும்.

அப்படின்னா அது நித்தியமானது இல்லை. அதை அடையறதிலே பிரயோஜனம் இல்லை.

ஞானம் நித்தியம். இங்கேயே இப்போவே இருக்கு.

**கே: அஞ்ஞான நீக்கத்துக்கு அருள்தான் வேணும்.**

**ப:** கண்டிப்பா வேணும்!

ஆனா அருள் எப்பவும் இருக்கு.

அருள்தான் ஆத்மா, அருள் ஏதோ அடையப்படறது இல்லை.

எப்பவும் இருக்குன்னு தெரிஞ்சுக்கணும்.

சூரியப்பிரகாசம் எப்பவுமே இருட்டைப் பாக்கறது இல்லே. ஆனா எல்லோரும் என்ன சொல்றோம், சூரியன் வந்த உடனே இருட்டு போயிடுத்து...

அப்படியேதான், அஞ்ஞானமும் உண்மையிலேயே இல்லை. இல்லேங்கறதைத் தெரிஞ்சுக்கறப்போ, அது நீங்கிடுத்துன்னு சொல்றோம்.

சூரியனும் இருக்கு. அதோட வெளிச்சமும் இருக்கு. நாம சூரிய ஒளியாலேயே சூழப்பட்டு இருக்கோம். இருந்தாலும் சூரியனைப் பாக்க, உன் கண்ணை அதை நோக்கித் திருப்பணும். அப்படித்தான் அருள்லேதான் நாம எப்பவும் இருக்கோம்னாலும்.... அதை நோக்கித் திரும்பணும்... அதாவது அப்பியாசிக்கணும்.

**கே: சரணடையணுங்கற ஆசை எப்பவும் இருந்தா நிறைய அருளைப் பெறலாம்ன்னு நினைக்கறேன்.**

**ப:** ஒரேடியா சரணடைஞ்சிடு. ஆசையெல்லாம் தூக்கிப் போட்டுடு. நீ செய்றேன்னு நினைக்கறவரைக்கும் ஆசையிருக்கும். தனித்தன்மை இருக்கும். அது போயிடுத்துன்னா... ஆத்மா சுடரும். நான் செய்றேன்ற நினைப்புதான் பந்தம்..... செய்யற வேலை இல்லை.

Be still and know that I Am God. இங்கே சும்மாயிருக்கற துன்னா... முழுமையான சரணாகதி. கொஞ்சமும் தனித்துவம்

இருக்கக் கூடாது. சும்மாயிருந்தா மனச்சலனம் இருக்காது. சலனம் இல்லேன்னா... ஆசை இருக்காது. நான் செய்றேங்கற நினைப்பு இருக்காது. தனித்துவம் இருக்காது. இதெல்லாம் இல்லேன்னா... அமைதியிருக்கும்.

Know that I Am God ங்கறதிலே... 'அறியறது'தான் 'இருக்கறது'.

இங்கே சொல்ற அறியறது போலிஅறிவாலே ஏற்படற அறிவான் அறிபடு பொருள் அறிவுங்கற திரிபுடி இல்லை.

'நான் கடவுள்', 'நான் பரமாத்மாங்கறது... நினைப்பு.

I Am that I Am (நான் நானாயிருக்கேன்)

நான்கறதுதான் கடவுள்.

நான் கடவுள்ன்னு நினைக்கறது இல்லே.

நான்கறதை உணர்! அதைச் சிந்திக்காதே. Be still and know that I Am God ன்னுதான் சொல்லியிருக்கு. Think that I Am Godன்னு சொல்லலே.

I Am that I Am (நான் நானாயிருக்கேன்) இதுக்கு அர்த்தம்... நான்கறதிலே ஒருத்தன் நிக்கணும்.

அவன் எப்பவும் அதுதான். வேற எதுவும் இல்லை.

ஆனா அவன் நான் யார்ன்னு? கேக்கறான்.

குடிகாரன்தான் நான் யார்ன்னு கேப்பான்.

தெளிவானவன் கேக்கமாட்டான்.

அனாத்மாவோட ஆத்மாவை சம்பந்தப்படுத்திக்கறதாலே நீ அப்படிக் கேக்கறே... 'நான் யார்'?ன்னு.

திருவண்ணாமலைக்கு ஏகப்பட்ட வழியிருக்கு. ஆனா திருவண்ணாமலை ஒண்ணுதான். எந்த வழியிலே வந்தாலும் அப்படித்தான். ஒருத்தர்க்கு ஒருத்தர் வழி மாறுபடும். ஆனா ஆத்மா ஒண்ணுதான்.

ஆனா திருவண்ணாமலையிலேயே இருந்துகொண்டு திருவண்ணாமலைக்கு எப்படிப் போறதுன்னு கேட்டா என்னத்தைச் சொல்றது....

நீ எங்கேயிருக்கேன்னு பாரு...ன்னு சொல்லணும்.

அப்படித்தான் ஆத்மாவிலேயே இருந்துகொண்டு ஆத்மாவை எப்படி அடையறதுன்னு கேட்டா என்ன சொல்றது.

நீதான் ஆத்மா!

நீ இருக்கற மாதிரியேயிரு!

சும்மாயிரு! போதும்...

தேகாத்ம புத்தியாலேயே அப்படிக் கேக்கறோம்.

தேகாத்ம புத்தியே அஞ்ஞானம்.

அது நீங்கணும். அது போயிடுத்துன்னா ஆத்மாவே மிஞ்சும்.

(359) ***பகவானோட நீண்ட நாள் அன்பர் ரமண பாதானந்தா பகவான் முன்னாடி வந்த நின்னு நமஸ்காரம் பண்ணி எழுந்தார்.***

'பகவான் தரிசனம் ஆயிடுத்து! நான் கிளம்பறேன்'! அப்படின்னு சொன்னார்.

அதுக்கு பகவான் ஹாஸ்யமா,

ப: "பகவானுக்குத் தரிசனம் கொடுத்தாச்சு! ஊருக்குக் கிளம்பறேன்னு ஏன் சொல்லக்கூடாது."

(359) ***பார்க்கி கேட்டார்.***

**கே: எனக்கு சீக்கிரம் முக்தி வேணும்ன்னு நான் வேண்டிக்கறேன்.**

ப: இனிமே எப்பவோ முக்தி வர்றது இல்லே. இங்கேயே இப்போவே இருக்கு.

**கே: ஒத்துக்கறேன். ஆனா அனுபவமாகலை.**

ப: அந்த அனுபவம் இங்கேயே இப்போவே இருக்கு.
நீங்க இருக்கறதை மறுக்கறேளா?

**கே: அது இருக்கு! ஆனா ஆனந்தம் இல்லை.**

ப: இருக்கறதுதான் ஆனந்தம்.

முக்திங்கற வார்த்தைதான் எல்லோருக்கும் பிடிச்சுருக்கு. அதை ஏன் தேடணும்? அவன் பந்தப்பட்டு இருக்கறதா நம்பறான். அதனாலே விடுபடணும்ன்னும், அதுக்கு முக்தியடையணும்னும் விரும்புறான். ஆனா உண்மையிலேயே யாரும் இங்கே பந்தப் படலே.

பந்தமே இல்லை... முக்தி மட்டும்தான் இருக்கு.
ஏன் அதை ஒரு பேர் வச்சுண்டு தேடணும்.

**கே: உண்மைதான். நாங்க அறியாமையில இருக்கோமே!**

ப: அதைப் போக்கிக்கங்கோ. அதுதான் செய்ய வேண்டியது.

**கே: சாஸ்திரங்கள் முக்திய பத்தி பேசுதே!**

ப: சாஸ்திரங்கள் ஞானிக்குக் கிடையாது. ஏன்னா... தேவையில்லே.

அஞ்ஞானிக்கும் தேவையில்லே.
முமுட்சுவுக்குத்தான் சாஸ்திரம்ல்லாம்.

**கே: வசிஷ்டர், ஜீவன்முக்தர்ன்னு சொல்றாங்க. ஜனகர் விதேக முக்தர்ன்னு சொல்றாங்களே!**

ப: எதுக்கு வசிஷ்டர் ஜனகர் எல்லாம். உங்களைப் பத்திப் பேசுங்கோ.

**கே: சிலர் உபாசனையும், ஞானமும் பறவைக்கு இரண்டு இறக்கை மாதிரி முக்திங்கற மாடிக்கு போறதுக்குன்னு ... சொல்றாங்களே! ஞானம்ன்னா என்ன? உபாசனைன்னா என்ன?**

ப: ஞானம் எப்பவும் இருக்கு, அதுதான் லக்ஷியம், அதுக்கு முயற்சி பண்ணா அந்த முயற்சியை உபாசனைன்னு சொல்றா. முயற்சி முடிஞ்சுட்டா ஞானம். அதுதான் முக்தி.



(363) திருமதி. ஜீஸ்ராஜதாசா கேட்டார்.

**கே: ஆத்ம ஞானம் கேக்க ரொம்ப எளிமையா இருக்கு. ஆனா அப்பியாசத்துல ரொம்ப கஷ்டமாயிருக்கு.**

ப: அதைவிட எளிமையானது என்ன இருக்க முடியும்! ஆத்மாதான் இங்கே எதைக் காட்டிலும் நெருக்கமானது. அது தெரியலேன்னா அதைவிட அன்னியமாவும் தூரமாவும் இருக்கறதை எப்படி உணர்றோம்?

**கே: ஆத்மஞானம் மித்யை மாதிரி இருக்கு. அதை எப்படி நிரந்தரமாக்கறது.**

ப: ஆத்மா எப்பவும் மித்யை இல்லே. அதுதான் ஒரே ஸத்யம். தோன்றது மறையும். அது மித்யை.
ஆத்மா தோன்றாது மறையாது. அது நித்யம்.

**கே: தியாசோபிகல் சொசைட்டியில வழிகாட்டறதுக்காக நாங்க குருவை தியானத்துல தேடுவோம்.**

ப: குரு உள்ளே இருக்கார். தியானம்... குரு வெளியே இருக்கார்ங்கற அஞ்ஞானத்தை நீங்கறதுக்காகத்தான்.

அவர் யாரோ வெளியாள், அவர் வரவுக்காக நீங்க காத்து இருக்கேள்ன்னா அவர் மறைஞ்சுடுவார். அப்படித் தோன்றி மறையற குருவை வச்சுண்டு என்ன செய்யப்போறேள்!

நீங்க உங்களை தனித்தன்மையோடு ஒரு ஆள்ன்னு நினைக்கற வரைக்கும், அல்லது உங்களை ஒரு உடம்புதான்னு நினைக்கற வரைக்கும், குரு அவசியம். அவர் உடம்போடு வருவார். இந்த அஞ்ஞானம் நீங்கிடுத்துன்னா... குரு ஆத்மாவாயிடுவார்.

**'ஐயனே யெனதுள்ளே நின்று**
**அநந்த சன்மங்கள் ஆண்ட**
**மெய்யனே உபதேசிக்க**
**வெளி வந்த குருவே போற்றி'-ன்னு**

கைவல்ய நவநீதப் பாடல் இந்த கருத்தையே சொல்றது.

தூங்கும்போது என்ன நடக்கறது... அகந்தை இல்லை. இந்தியா இல்லை. சாதகர் இல்லை. குரு இல்லை. ஆனாலும் நாம ஆனந்தமாயிருக்கோம். இது எல்லாம் இப்போதான்

தோற்றமாறது. இதெல்லாம் உங்களுக்கு அன்னியமும் இல்லை. நீங்க இல்லாமலும் இல்லை.

**கே: மறுபிறப்புன்னா என்ன? உண்மையா?**

ப: அஞ்ஞானம் இருக்கற வரைக்கும் மறுபிறப்பு இருக்கும். இப்பவும் யாரும் பிறக்கலே; இதுக்கு முன்னாடியும் யாரும் பிறக்கலே; இனியும் யாரும் பிறப்பதில்லே; இதுதான் உண்மை.

**கே: போலி நான்ன்னா என்ன?**

ப: நான்ன்னு ஒண்ணு தோன்றி மறையும். அது அநித்தியம். உண்மை நான் எப்பவும் இருக்கும். நாம உண்மையிலேயே அதுவாயிருந்தும், போலி நானோட சம்பந்தப்படுத்திக்கறோம்.

**கே: ஏன் இந்தப் போலி நான் வருது?**

ப: வந்துருக்கான்னு பாருங்கோ!

**கே: போலி நானை உண்மை நான்லே அழிச்சுடணுமா?**

ப: அது உண்மையிலேயே இல்லே.

**கே: ஏன் இவ்வளவு துயரத்தை கொடுக்குது?**

ப: யாருக்குத் துயரம்? உங்களோட கற்பனை.
துயரம், சுகம் எல்லாம் அகந்தைக்குத்தான்.

**கே: ஏன் உலகம் இவ்வளவு அறியாமையில இருக்கு?**

ப: உங்களை நீங்க பாத்துக்கோங்கோ. உலகம் அதே பாத்துக்கும் அதை.

நீங்க ஸ்தூல உடம்புன்னா உலகம் ஸ்தூலமாயிருக்கும்.
நீங்க ஆத்மான்னா அதுவும் ஆத்மாவாயிடும்.

**கே: எனக்கு சரி. மத்தவங்க இதை புரிஞ்சுக்குவாங்களா?**

ப: முதல்லே நீங்க செய்ங்கோ! அப்புறம் இந்தக் கேள்வி இருந்தா பாப்போம்.

**கே: அவித்தை இருக்கா?**

ப: யாருக்கு?

**கே: போலி நான் னுக்கு?**

ப: ஆமா, அவித்தை இருக்கு.

அந்த நானைப் போக்குங்கோ...! போயிடும்.

நீங்க யார்ன்னு பாருங்கோ....! போலி நான் மறைஞ்சுடும். உண்மை நான் மிஞ்சும். அவித்தைன்னு ஒண்ணு இல்லவே இல்லைன்னு அப்போ தெரிஞ்சுப்பேள்.

**கே: போலி நான் எப்படி கிளம்பறது.**

ப: அது இல்லை. இரண்டு நான் இருக்கா?

போலி நான் இல்லைன்னா அவித்தை எப்படி வரும். இப்படி விசாரம் பண்ணினா இல்லாத அவித்தை எப்பவும் இல்லைன்னு தெரியும். அப்போ நீங்க ஓடிடுத்துன்னு சொல்லுவேள்.

அஞ்ஞானம் போலி நான்...க்குதான். அதை ஏன் எடுத்துக்கொண்டு நீங்க துயரப்படறேள்?

அஞ்ஞானம்ன்னா என்ன?

எது இல்லையோ அது.

ஆனா உலகவழக்கிலே அஞ்ஞானம்ன்னா... எதாவது சொல்லணுமில்லையா!

அதுதான் தன்மறதி. நம்மள மறந்துட்டோம். நம்மளோட அஞ்ஞானம் வேற ஒண்ணும் இல்லே.

சூரியனுக்கு முன்னாடி இருட்டு இருக்குமா?

எப்பவும் அனுபவமா இருக்கற ஆத்மாவுக்கு முன்னாடி அஞ்ஞானம் நிக்குமா?

நீங்க உங்களைத் தெரிஞ்சுகொண்டா... இருளும் இல்லே; அறியாமையும் இல்லே. அஞ்ஞானமும் இல்லே. உங்களைப் பாருங்கோ! அவ்வளவுதான்.

**கே: இராமகிருஷ்ணரும், பிறரும் தியானம்தானே செஞ்சாங்க. ஆத்ம விசாரம் பண்ணலியே?**

ப: தியானமும் பிற சாதனங்களும் அஞ்ஞானம்ன்னு ஒண்ணு இல்லேன்னு தெரிஞ்சுக்கறதுக்காகத்தான்.

யாரும் தன் இருப்பை மறுக்க முடியாது.

இருக்கறதே அறிவு. அறிவுன்னு சொல்லும்போதே... அஞ்ஞானம் இல்லேன்னுதான் அர்த்தம். அதனாலே எல்லோரும் இயல்பாகவே அஞ்ஞானம் இல்லேன்னுதான் ஒத்துக்கறோம்.

ஆனாலும் ஏன் துன்பப்படணும்?

ஏன்னா... எல்லோரும் தங்களை அதுவாவோ, இதுவாவோ நினைக்கறா. நான் இன்னார், இன்னாருக்கு மகனா பிறந்தேன்னு சொல்றோம். உண்மை என்ன? கனவு எப்படி வருதோ அப்படியேதான் விழிப்பிலேயும் வர்றோம்.

இருப்பு பொதுவா பரத்தையே குறிச்சா அது சரி. அதே இருப்பு உடம்பையோ, உலகத்தையோ குறிச்சா அது தவறு. இதுதான் மொத்த உண்மை.

ஒவ்வொருவரும் நாம இருக்கோம்கறதுக்கு கண்ணாடியைப் பாக்கணுமா?

அவன் இருக்கறதுக்கு அவன் அறிவு (இருப்பு)தான் சாட்சி. ஆனா அதை உடம்போட குழப்பிக்கறான். ஏன் அப்படிப் பண்றான்? தூங்கும்போது அப்படிப் பண்ணினானா ?

இல்லே. ஆனாலும் அவன் இருக்கான். தூங்கும்போது உடம்பு இல்லாமலே அவனாலே இருக்க முடியறது. தூங்கும்போது அவன் இருந்தது அவனுக்கு எப்படித் தெரியறது?

அதே மாதிரிதான் இப்பவும், சும்மா இருந்தாலே போதும். நீயிருக்கறது நல்லா தெரியும். நாம இருக்கறதைத் தெரிஞ்சுக்க கண்ணாடி வேணுமா?

**கே: தன்னை உணர்வது எப்படி?**

**ப:** தானாய் இருத்தலே தன்னை உணர்தல். உங்களைத் தெரியலேன்னு சொல்வேளா?

உங்களோட கண்ணை உங்களாலே பாக்க முடியாது. அதுக்காகக் கண்ணு இல்லேன்னு சொல்வேளா?

நீங்க உங்களைத் தெரியலேன்னு சொல்றதுக்கு... நீங்கயிருந்துதான் சொல்லணும். அல்லது நீங்க உங்களைத் தெரியலேன்னு சொல்றதுக்கு நீங்க இல்லாமே போயிட்டேளா?

'நீங்க என்னைத் தெரியலே'ன்னு சொல்றது போலி அறிவாலேதான். நீங்க உங்களைப் போலி அறிவோடேயே சம்பந்தப் படுத்திக்கொண்ட பழக்கத்தாலேயே, உங்களைப் போலி அறிவாலே பாக்கறேள். அந்தத் தவறான பார்வையாலேதான், எப்பவும் இருக்கற உங்களைத் தெரியலேன்னு சொல்றேள். ஏன்னா... நீங்க அந்தப் போலி அறிவாலே தெரிஞ்சுக்கக்கூடிய பொருள் இல்லை. ஆனா என்ன கேக்கறேள்... எப்படித் தன்னை உணர்வது ?

உங்களோட கஷ்டம் எல்லாம் 'எப்படி'ங்கறதிலேதான் மையங் கொண்டு இருக்கு.

யார் தெரிஞ்சுக்கறது ?

உடம்பு தெரிஞ்சுக்குமா ?

உடம்பே சொல்லட்டும். உடம்பு இப்போ இருக்குன்னு யார் சொல்றது ?

இந்த மாதிரியான அறியாமைக்கு பதிலாத்தான் சாஸ்திரங்கள் கடவுள் லீலை கொள்கையைக் கொண்டு வர்றது. கடவுளே விளையாட்டுக்காக, கடவுளே... உடம்பா, மனசா, இந்திரியமா வர்றார்.

இந்த லீலை தொந்தரவா இருக்குன்னு சொல்ல நீங்க யார்?

அவரோட செயலைக் கேள்வி கேக்க நீங்க யார்?

உங்களுடைய கடமை எல்லாம் சும்மா இருக்கறதுதான்.

இதுவாவோ அதுவாவோ இல்லை... I Am that I Am (நான் நானாயிருக்கேன்) பைபிள்லே சொல்ற இந்த வாக்கியம்தான் மொத்த உண்மையைச் சொல்லிடறது. இதையே ஹிந்து சாஸ்திரங்கள் 'அஹமிதி ஸ்புரதி'ங்கறது (அது நான்னு ஒளிர்வது)

இதை எப்படிச் செய்யறதுங்கறத... Be still and know that I Am God ன்னு சொல்றா.

சும்மாயிரு. அப்படின்னா என்ன அர்த்தம் ?

உங்களை அழிச்சுடுங்கோன்னு அர்த்தம்.

ஏன்னா... எந்த உருவமும் தொல்லைதான்.

நான் இன்னார்ங்கறதை விட்டுடுங்கோ! சும்மாயிருங்கோ!



(363) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: ஸ்புரணம்ன்னா என்ன?**

ப: 'அஹம் அஹம்' (நான் நான்) கறது ஆத்மா.
'அஹம் இதம்' கறது அகந்தை.
ஸ்புரணம் எப்பவும் இருக்கு.
நான்கறது எதையும் பிடிக்கலேன்னா ஆத்மா.
எதையாவது பிடிச்சா அகந்தை.

(363) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: கடவுள் ஆத்மாவுல இருந்து வேறா?**

ப: ஆத்மாதான் கடவுள், நான்கறதுதான் கடவுள்.

இந்தக் கேள்வி ஏன் கேக்கறேள்? நீங்க உங்களைப் போலி நான்கூட சம்பந்தப் படுத்திக்கறேள். இல்லேன்னா... இந்தக் கேள்வி வராது. உண்மையான நான் எதையும் கேக்காது. நம்மளோட இருப்பை விட்டு அன்னியமா கடவுள் இருந்தா அது இருப்பில்லாத கடவுள். அது பைத்தியக்காரத்தனம்.



(363) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: நமஸ்காரம்ன்னா என்ன?**

ப: அகந்தை அடங்கறதே நமஸ்காரம். அடங்கறதுன்னா என்ன?

தன் மூலத்திலே உரு இழந்து விடறதுதான். பகவானை வெளிவேஷத்தாலோ கும்பிடறதாலோ ஏமாத்த முடியாது. அவர் அகந்தை இருக்கான்னுதான் பார்ப்பார்.



(363) **சாமா அண்ணா கேட்டார்.**

**கே: நான்கறதை உணர்றதுக்கு ஆறாவது அறிவு வேணுமா?**

ப: தூங்கும்போது ஆறாவது அறிவு இருக்கா? நான்கறதே அறிவுதான். ஒரே அறிவுதான் இருக்கு. அதுதான் ஐம்புலன்கள் வழியா தொழிற்படறது. ஒரு சக்திதான் இந்த ஐம்புலன்களையும் தொழில்படுத்தறது. அந்தச் சக்தியை ஒத்துக்கறேளா?

நீங்க இருக்கறதை ஒத்துக்கறேளா?

உடம்பும் உலகமும் இல்லேன்னாலும் தூங்கும்போது நீங்க இருந்தேளே! அதே நீங்கதானே இப்போவும் இருக்கேள். அதனாலே நம்மளோட இருப்பை உடம்பு இருந்தாலும் இல்லேன்னாலும் ஒத்துக்கறோம். புலன்கள் அந்தந்த நிலைமைகள்லே தொழிற்படறது. அதோட வேலை ஆரம்பிக்கும்... அப்புறம் முடியும். ஆனா அதோட வேலைகள் எல்லாம் ஒரு ஆதரத்திலேயே நடக்கும். இந்தப் புலன்கள் எல்லாம் எங்கே தோன்றறது? எங்கே ஒடுங்கறது?

ஒரே ஆதாரம்தான். அந்த ஆதாரம் தெரியலேன்னு நீங்க சொல்றேள். ஏன்னா ஆதாரம்கறதனாலே நீங்க நினைக்கறமாதிரி புலன்களாலே அறிய முடியாது. இந்த விளக்கம் எல்லாம் அஞ்ஞானம் நீங்கறதுக்குத்தான். அது போச்சுன்னா... எல்லாம் சரியாயிடும். போறது பக்குவத்தைப் பொறுத்தது.

**கே: அருள் பக்குவத்தைக் கூட்டாதா?**

ப: இறைவன்கிட்டே விட்டுடுங்கோ. கேள்வியில்லாமே சரணடைஞ்சுடுங்கோ. இரண்டு வழிதான் இருக்கு. உங்களோட இயலாமையை உணர்ந்து ஒரு மகாசக்தி நமக்கு உதவினாத்தான் உண்டுன்னு சரணடைஞ்சுடுங்கோ! இல்லேன்னா துன்பம் ஏன் வர்றதுன்னு பாருங்கோ! மூலத்திலே கரைஞ்சுடுங்கோ! இந்த இரண்டு வழியிலேயும் துன்பம் இருக்காது. கடவுள் சரணடைஞ்சவரைக் கைவிடறது இல்லை.

**கே: சரணடைஞ்ச பிறகு மனசோட நிலைமை என்ன?**

ப: சரணடைஞ்ச மனசா இப்படி கேள்வி கேக்கறது?

(367) மராத்தியப் பெண்மணி கேட்டார்.

பகவானைத் தரிசித்துவிட்டுப் போகும்போது ஒரு மராத்தியப் பெண்மணி கண்களில் நீர் ததும்பற மாதிரி இருந்தது. விட்டா அழுதுடுவாள்மாதிரி இருந்தது... மெதுவா பகவான்கிட்டே பிரார்த்திச்சுக் கொண்டாள்.

**கே: ஒரு பிறப்பிலேயே எனக்கு முக்தி இல்லைன்னு தெரியும். ஆனாலும் என் மனம் அமைதியா இல்லை. இந்தப் பிறப்பிலே...**

பகவான் ரொம்பக் கருணையோடு,

ப: இந்தப் பிறப்பும் எல்லாப் பிறப்பும் பிரம்மத்திலேதான் இருக்கு. பிரம்மம் இங்கேயே இப்போவே இருக்கு. நல்லாப் பாருங்கோ...!

**கே: ரொம்ப காலமா தியானம் பண்றேன். என் மனசு நிலையா இல்லை.**

ப: இப்போ என் முன்னாடி பண்ணுங்கோ. எல்லாம் சரியாயிடும்.



(366) ஆந்திராக்காரர் கேட்டார்.

**கே: நேதி நேதி...ங்கறாங்களே! அப்படின்னா என்ன?**

ப: இப்போ நம்மள உடம்போட, மனசோட, புலன்களோட தப்பா சம்பந்தப்படுத்திக்கொண்டு இருக்கோம். அதைப் போக்கறதுக்குத்தான் இது இல்லை... இது இல்லை... நேதி நேதின்னு தள்றோம். எதைத் தள்ள முடியாதோ அதைப் பிடிச்சுக்கொண்டா போதும். அதுதான் 'இதி'

**கே: நான் ஹடயோகம் பஸ்தி, தௌதி, நேதி எல்லாம் பண்றேன். என்னுடைய கனுக்கால்ல நரம்பு தடிச்சுடுச்சு. இது ஹடயோகத்தாலேயா?**

ப: நரம்பு வேற ஏதாவது காரணத்தாலே தடிச்சிருக்கு. அதனாலே ஒரு தொந்தரவும் இல்லை. ஹடயோகம் சுத்தப்படுத்தும் முறை. மன அமைதியும் கிடைக்கும். பிராணயாமத்துக்குக் கொண்டு போகும்.

**கே: பிராணாயாமம் பண்ணலாமா? அது உதவுமா?**

ப: பிராணாயாமம் மனசை கட்டுப்படுத்திற சாதனம். அதோட நின்னுடக் கூடாது. பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதின்னு முன்னேறணும். முழுபலன் கடைசிலே கிடைக்கும்.

**கே: காமம், கோபம், குழப்பம், தற்பெருமை, பொறாமை இதெல்லாம் எப்படி தாண்டறது?**

ப: தியானத்தாலே.

**கே: தியானம்ன்னா என்ன?**

ப: தியானம்ன்னா ஒரு நினைப்பைப் பிடிச்சுக்கறது. மத்த நினைப்பை வர விடாமே தடுக்கறது.

**கே: எதை தியானம் பண்ணணும்?**

ப: உமக்கு எது சம்மதமோ அதை.

**கே: சிவன், விஷ்ணு, காயத்திரி இதுல எதை தியானம் பண்றது.**

ப: எது உமக்குச் சிறப்பாத் தோன்றதோ அதைச் செய்யும். பலன் எல்லாம் ஒண்ணுதான். ஆனா ஒண்ணைத்தான் பண்ணணும்.

**கே: எப்படி தியானம் பண்றது?**

ப: எது ரொம்ப இஷ்டமாயிருக்கோ அதிலே ஏகாக்கிரமா இரும். ஒரு நினைப்பைப் பிடிச்சுக்கொண்டா மத்த நினைப்பு வராது. கடைசியிலே அதுவும் போயிடும். பேதம் இருக்கற வரைக்கும் நினைப்பு இருக்கும். பக்தி வந்துடுத்துன்னா எல்லாம் வந்துடும். தியானம்தான் முக்ய அப்பியாசம்.

தியானம்ன்னாலே... சண்டைதான். தியானத்துக்கு உக்காந்தாலே நினைப்பு எல்லாம் ஒண்ணு சேந்துக்கும், நீ பிடிச்சு

இருக்கற நினைப்பை மறக்க வச்சுடும். அந்த ஏக நினைவு மெல்ல மெல்ல பலம் பெறும். அது பலமாயிடுத்துன்னா... மத்த நினைப்பு ஓடிடும். இந்தப் போர்தான் தியானத்திலே நடக்கறது .

ஒருத்தன் துன்பத்திலே இருந்து விடுபட நினைக்கறான். அதுக்கு மனச்சலனம் நீங்கணும். அப்போதான் மனம் அமைதி பெறும். மனஅமைதி தியானத்தாலேயே வரும்.

**கே: அப்போ பிராணாயாமம் எதுக்கு ?**

ப: நேரடியா நினைப்புகளைக் கட்டுப்படுத்த முடியாதவாளுக்குத்தான், பிராணாயாமம். காரும் பிரேக்கும் மாதிரி. ஆனா அதோட நின்னுடக் கூடாது. ஏற்கனவே சொன்ன மாதிரி பிரத்தியாகாரம், தாரணம், தியானம் சமாதின்னு முன்னேறணும். தியானம் வந்துடுத்துன்னா பிராணாயாமம் தேவை இல்லை. ஆசனம் பிராணாயாமத்துக்கும், பிராணாயாமம் தியானத்துக்கும், தியானம் மன அமைதிக்கும் உதவும்.

தியானம் கெட்டிப்பட்டுட்டா விட முடியாது. வேலை பாத்துக்கொண்டு இருந்தாலும், விளையாடினாலும் இல்லை போகத்திலே இருந்தாலும் அது பாட்டுக்கு நடந்து கொண்டேயிருக்கும். தூக்கத்திலேயும் நடக்கும். தியானம் ரொம்ப ஆழமாகணும். அப்போதான் சகஜமாகும்.

**கே: தியானம் ஆழமாக என்ன செய்யணும்? ஏதாவது நியமம் கர்மம் இருக்கா ?**

ப: தியானமே கர்மம்தானே ஓய்! அதுவே நியமம். அதுவே முயற்சி. அதுதான் மிகத் தீவிரமான முயற்சியும் பலிதத்திலே சிறந்ததும். வேறு முயற்சி தேவையில்லே.

**கே: ஜபம் தேவையில்லையா?**

ப: தியானம்தான் சூட்சும ஜபம். பிறகு எதுக்கு ஜபம்? தியானம் வந்துடுத்துன்னா வேறே எதுவும் வேணாம்.

**கே: மௌனவிரதம் இருக்கலாமா?**

ப: விரதம் விரதம் (விலக்க வேண்டியது)தான். அது ஏதோ கொஞ்சம் தியானத்துக்கு உதவும். வாயை மட்டும் கட்டி மனசைக் கட்டலேன்னா என்ன பிரயோஜனம்?

மனம் தியானத்திலே இருந்தா பேச்சுக்கு என்ன வேலை? தியானத்தைவிடச் சிறந்தது எதுவும் இல்லை. மௌனவிரதம்னு கர்மம் சேக்கப் போறீரா? விரதத்திலே என்ன இருக்கு.

**கே: ஞான மார்க்கம்ன்னா என்ன?**

ப: ரொம்ப காலமா இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லிக் கொண்டேயிருக்கேன்.

ஞானம்ன்னா என்ன?

ஞானம்னா உண்மையை உணர்றது. தியானத்தாலேதான் அது முடியும்.

தியானம் உண்மையைப் பிடிச்சுக்கும். மத்த நினைப்பை வர விடாது.

**கே: ஏன் நிறைய கடவுள் இருக்காங்க?**

ப: உடம்பு ஒண்ணுதான். எத்தனை வேலை பாக்கறது. ஒரே மூலந்தான் இத்தனை வேலையும் பாக்கறது. அப்படித்தான் கடவுள் சமாச்சாரமும்.

**கே: ஏன் மனிதன் துன்பத்துக்கு ஆளாகிறான்?**

ப: துன்பம்ங்கறது போக்கிக்கமுடியாத, வேண்டாத நினைப்பு தான். நினைப்பு எல்லாத்தையும் ஒண்ணு சேத்து ஒரே நினைப்பிலே நின்னா துன்பம் இல்லை. சுகம்தான். அப்ப, நான் செய்றேன்ற நினைப்பும் இருக்காது. கர்ம பலனும் இருக்காது. ஆசையும் இருக்காது.

(372) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: உடல் நடுக்கம், ஆனந்தம், கண்ணீர், குரல்தழுதழுத்தல் அதெல்லாம் சமாதிக்கு முன்னாடியா இல்லை சமாதிக்கு அப்புறமா?**

ப: இதெல்லாம் அதிசூட்சும விருத்தியோட கூறுகள். துவைதம் இருக்கும்போதுதான் இந்த மாதிரி லக்ஷணம் எல்லாம் இருக்கும். சமாதி ஆழ்ந்த அமைதி. அதிலே இதெல்லாம் இருக்காது. சமாதி கலைஞ்சவுடன் அதை நினைச்சுப் பாக்கும்போது வேணா இந்தக் கூறுகள் தென்படலாம். பக்தியிலே இதெல்லாம் சமாதிக்கு முன்னாடி இருக்கும்.

**கே: அது ஞான மார்க்கத்தில இருக்காதா?**

ப: இருக்கலாம். கண்டிப்பா இருக்கணும்னு சொல்ல முடியாது. அவாவாளைப் பொறுத்தது. தனித்துவம் போயிடுத்துன்னா இது இருக்காது. கொஞ்சம் இருந்தாலும் இது இருக்கும்.

மாணிக்கவாசகரும் மத்தவாளும் இதைப்பத்தி நிறைய பாடியிருக்கா.

**கே: தூக்கமும் ஆனந்தம்தான். அதை நினைச்சு பாக்கும்போது ஏன் இந்த கூறுகள் வரமாட்டேங்குது. சமாதியில மட்டும் ஏன் ஏற்படுது.**

ப: சமாதின்னா விழிப்புலே தூங்கறதுதான். ஆனந்தம் அவிர்பவிக்கறது. ஸ்பஷ்டமாத் தெரியறது. தூக்கத்திலே அப்படி இல்லை.

**கே: தூக்கத்தை சுகமும் இல்லை. துக்கமும் இல்லைன்னு சொல்லலாமா?**

ப: சுகமாத் தூங்கினேன்னுதானே சொல்றோம். சுகானுபவம் இருக்கு.

**கே: அது துக்கம் இல்லைங்கறதுனாலையா? இல்லை. அதுல சுகமே இருக்கா?**

ப: சுகமே இருக்கு. துக்க நிவிருத்தியும், சுகபிராப்தியும் ஒண்ணுதான்.

(373) திருவாங்கூர் மகராஜாவும் அவர் துணைவியாரும் வந்துருந்தாங்க. மகாராணி நிறைய கேள்வி கேட்டாங்க.

**கே: இந்த உலகம், நாம, எல்லாம் படைக்கப் பட்டதோட நோக்கம் என்ன?**

ப: இந்தக் கேள்வி கேக்கறதுக்குத்தான். இந்தக் கேள்வியைக் கேட்டு பரம்பொருள்லேயே நிலைச்சுடறதுக்குத்தான். இந்தக் கேள்வி ஆத்ம விசாரமா மாறிடும், அனாத்மாவைப் போக்கிடும். ஆத்ம ஞானத்திலே முடிஞ்சுடும்.

**கே: விசாரத்தை எப்படி ஆரம்பிக்கறது?**

ஆத்மா எல்லாருக்கும் பொதுவா சர்வசாதாரணமா இருக்கறதாலே அதை சர்வசாதாரணமாவே ஆரம்பிக்கலாம்.

**கே: என் போலே இருக்கறவங்க எப்படி ஆரம்பிக்கணும்?**

ப: ஏதாவது உபாசனையோ ஜபமோ அதை ஒழுங்கா செஞ்சுகொண்டே வந்தா... அது ஆத்ம விசாரத்துக்குக் கொண்டு போயிடும்.

(375) கன்னடக்காரர் ஒருவர் கேட்டார்

**கே: அகர்மான்னா என்ன? (செயல் புரியாம செயல்புரிதல்)**

ப: அகந்தை நாசமான பிறகு என்ன செஞ்சாலும் அகர்மாதான் ஓய்!

**கே: உபதேசம் கொடுங்க......**

ப: உபதேசம் 'உபதேச உந்தியார்'லே இருக்கு.

**கே: உங்க வாயாலே ஏதாவது தனிப்பட்டு சொல்லுங்க**

ப: ஏதாவது புதுசுன்னா.... தெரியாததுன்னா... உபதேசம் பொருந்தும். இங்கே இருக்கறது ஒரே உபதேசம்தான் ஓய்!

அது சும்மாயிருக்கறதுதான் ஓய்.

**கே: அது முடியாது.**

ப: அதுதான் எல்லோரோட ஸ்வபாவமும், எப்பவும் இருக்கற ஸ்திதி.

**கே: அன்றாட வாழ்க்கையில தெரியலையே!**

ப: எப்பவும் இருக்கற ஸ்திதி அன்றாட வாழ்க்கைக்கு தடையில்லையே! எது வரைக்கும் உலக வாழ்க்கை ஆன்மிகம்ன்னு பிரிக்கறீரோ அது வரைக்கும் கஷ்டந்தான் ஓய். ஆத்மிகம்ன்னா என்னன்னு புரிஞ்சா... அன்றாட வாழ்க்கையும், ஆத்மிகமும் ஒண்ணுதான் ஓய்.

**கே: மனசை வச்சே மனசை பாக்க முடியுமா?**

ப: மனசோட மூலத்தை பாக்கணும். அதை அடைஞ்சா அதுதான் ஆத்மா. இது ஏன் தெரியலேன்னா... நினைப்புகளாலேதான். நினைப்பெல்லாம் ஓய்ஞ்சா ஆத்மா பிடிபடும்.

**கே: மனம் ஒரு உபாதியா?**

ப: ஆமாம்.

**கே: பாக்கற உலகம் ஸத்யமா?**

ப: பாக்கறவனைப் பொறுத்தது.
பாக்கறவன் தோன்றி மறையறான்.
தோன்றாம மறையாம உண்மையிருக்கு.

**கே: (காண்பான், காட்சி, காணப்படும் பொருள்) திரிபுடி உண்மையை உணர்ந்தா போயிடுமா?**

ப: ஆமாம். ஆத்மாவை உணர்ந்தா திரிபுடி இல்லாததுன்னு தெரியும். அல்லது ஆத்மாவுக்கு அன்னியம் இல்லேன்னு தெரியும். அப்புறம் ஆத்மா தெரியும்போதே, அதுவும் அது பாட்டுக்கு நடக்கும் ஓய்.



(376) ஆந்திராக்காரர் ஒருவர் கேட்டார்.

**கே: மனிதன் தெய்வீக ஸ்வபாவம் வாய்ந்தவன்னு சொல்றாங்க அப்போ ஏன் அவனுக்கு அய்யய்யோ... இதை செஞ்சுட்டோமே! அய்யய்யோ... இதை செய்யாம விட்டுட்டோமே!... ன்னு விசனம் இருக்கு?**

ப: தெய்வீகம் அவனோட ஸ்வபாவம். விசனம் மாயையோடது.

**கே: இதை எப்படிப் போக்கறது?**

ப: அவனிடம் இருக்கற தெய்வீகத்தை உணர்றதனாலே.

**கே: எப்படி?**

ப: அப்பியாசத்தாலே.

**கே: என்ன அப்பியாசம்?**

ப: தியானம்.

**கே: தியானத்துல மனம் உக்கார மாட்டேங்குதே!**

ப: போகப் போக சரியாயிடும்.

**கே: எப்படி சரி பண்றது?**

ப: மனசைப் பலப்படுத்தும்.

**கே: எப்படிப் பலப்படுத்தறது? சாது சங்கத்தால பண்ணலாமா?**

ப: பண்ணலாம்.

**கே: யாருக்குக் கவலை இருக்காது?**

ப: உண்மையை உணர்ந்தவனுக்கு. அவனைப் பத்தி கேள்வி இல்லை.

**கே: பூகம்பம் பஞ்சம் இதெல்லாம் கடவுள் இல்லைங்கறவங் களுக்கு சாதகமா இருக்கு. அவங்களுக்கு என்ன பதில்?**

ப: கடவுள் இல்லேங்கறவா, இது எல்லாம் எதனாலே ஏற்படறதுன்னு சொல்றா?

**கே: இயற்கைங்கறாங்க.**

ப: சிலர் இயற்கைங்கறா, மத்தவா அதைத்தான் கடவுள்ன்னு சொல்றா.

**கே: ஆன்மிக முன்னேற்றத்துக்கு இருக்கறதுல வாழணுமா? இல்லை வருங்காலத்துக்காக சேமிக்கணுமா?**

ப: கடவுள் எல்லாத்தையும் பாத்துப்பார்.

(379) **நீலாம்பூர் திருமலைபாடு கேட்டார்.**

**கே: தேகாத்ம புத்தி எப்படி வருது?**

ப: நினைப்பாலே. நினைப்புகள் எல்லாம் ஓய்ஞ்சா.... உண்மையான நான் தாரை ஒளிரும்.

**கே: நினைப்புகளை எப்படி ஒழிக்கறது?**

ப: அதோட ஆதாரத்தைப் பாருங்கோ! எல்லா நினைப்பும் நான்கற நினைப்பையே ஆதாரமா வச்சிருக்கும். அதை ஒழிச்சா... எல்லாம் ஒழிஞ்சுடும். நம்மளத் தெரியாமே... எதைத் தெரிஞ்சும் பிரயோஜனமில்லே. நம்மளத் தெரிஞ்சா... எல்லாம் தெரிஞ்ச மாதிரி. அதனாலே தன்னை உணர்தலே தலையாய கடமை. ஒரே கடமை.

**கே: எப்படி நான்கற எண்ணத்தைப் போக்கறது?**

ப: அதோட மூலத்தைப் பாருங்கோ! அது எழாது. அப்படித்தான் போக்கணும்.

**கே: மூலத்தை எப்படிப் பாக்கறது? அது எங்கயிருக்கு?**

ப: அதுதான் நீங்க இயங்கறதுக்கே காரணமா இருக்கு. நீங்க இருக்கேன்கற சுத்த பிரஞ்ஞைதான் ஆத்மா. அதை உணர்றதுக்குத் தேவையானது எல்லாம் சும்மாயிருக்கறதுதான்.

இதை விட எளிமையானது என்ன இருக்கு?

அதனாலேதான் ஆத்ம வித்தை அதி சுலபம்ன்னு சொல்றோம்.



(382) ஆந்திராக்காரர் ஒருவர் கேட்டார்.

**கே: மனோலயம்ன்னா என்ன?**

ப: உபதேச ஸாரத்திலே இருக்கு.

**கே: மனம்ன்னா என்ன?**

ப: என்னன்னு பாரும்!

**கே: சங்கல்பம் (விருப்பு) விகல்பம் (வெறுப்பு)தான்.**

ப: யாருடைய ஸங்கல்பம் (நினைப்பு)?

**கே: மனத்தோட ஸ்வபாவம் சங்கல்பம்.**

ப: எதைப்பத்திய ஸங்கல்பம்?

**கே: வெளியே உள்ளதை பத்தி.**

ப: சரி! அதுதான் உம்மோட ஸ்வபாவமா?

**கே: மனசோடது.**

ப: உம்மோட ஸ்வபாவம் என்ன?

**கே: சுத்த சைதன்யம்.**

ப: அப்போ ஏன் ஸங்கல்பத்தை பத்திய கவலே ஓய்?

**கே: மனம் சஞ்சலமாவும், அஸ்திரமாவும் இருக்கு.**

ப: மனசு உண்முகப்படணும். ஆத்மாவிலே அடங்கிடணும். அப்பியாசம் நீண்ட காலம் பண்ணணும். ரொம்ப மெதுவாத்தான் நடக்கும். அது முழுதும் அடங்கற வரைக்கும் பண்ணணும்.

**கே: அருள் வேணும். பிரசாதம் வேணும்**

ப: எப்பவும் இருக்கு. நீர் செய்ய வேண்டியது எல்லாம் உம்மை நினைப்போட சம்பந்தப்படுத்தக் கூடாது. ஆத்மாவாயிரும்! அதுதான் பிரசாதம் ஓய்.

பகவான் பொதுவாக சொன்னது.

ப: ஜீவனுக்கு ஐந்து நிலைகள் இருக்கு

1. நனவு (ஜாக்ரம்)
2. கனவு (சொப்னம்)
3. தூக்கம் (சுஷுப்தி)
4. துரியம்
5. துரியாதீதம்

நனவுங்கறது விழிப்பு நிலை. ஜீவனை விசுவனாகவும் இறைவனை விராட்டாவும் குறிக்கறா. 'அ'ங்கற எழுத்தாலே குறிக்கறா. சத்வமே குணம். தெய்வம் விஷ்ணு.

கனவிலே ஜீவன் தைஜசன். இறைவன் ஹிரண்யகர்பன். 'உ'ங்கற எழுத்தாலே குறிக்கறா. ரஜஸ்தான் குணம். தெய்வம் பிரம்மா.

சுஷுப்தியிலே ஜீவன் பிராஞ்ஞன். இறைவன் ஈஸ்வரன். 'ம'ங்கற எழுத்தாலே குறிக்கறா. தமஸ்தான் குணம். தெய்வம் ருத்ரன்.

விழிப்புநிலையிலே மனம் ஒடுங்கினா, ஹிருதயம் மலர்ந்தா... அது துரியம்.

ஜீவன் அடங்கினா... துரியாதீதம்.

மூணுநிலைமையும் மாறிமாறி வந்தாலும் துரியமும் துரியாதீதமும் அப்பியாசத்தாலேயே வரும். இதுவே முக்திக்கு வழியும்.



(383) **சுவாமி லோகேசானந்தா கேட்டார்.**

**கே: ஜீவன்முக்தனுக்குப் பிராப்தம் உண்டா?**

ப: கேள்வி கேக்கறது யார்?
ஜீவன்முக்தன்கிட்டே இருந்தா இந்தக் கேள்வி வர்றது?

**கே: இல்லை. நான் இன்னும் முக்தி அடையலை.**

ப: அப்போ அவனே கேக்கட்டும்.

**கே: இந்த சந்தேகம் எனக்குத்தான்.**

ப: தெரியுமே! ஞானிக்கு சந்தேகம் இல்லை. அஞ்ஞானிக்குத்தான் சந்தேகம்.

**கே: அஜாதவாதப்படி பகவானோட விளக்கம் சரி. ஆனா மத்த ஸ்கூல்ல (School) அதை ஒத்துக்கறாங்க.**

ப: அத்வைதம் மூணு வாதம் சொல்றது.

1.அஜாதவாதம்:-

உற்பத்தி இல்லை; நாசம் இல்லை; பத்தன் இல்லை; முக்தன் இல்லை; முக்திக்கு முயல்பவர்களும் இல்லை; இதுவே பரமார்த்தம். அதுபடி பேச்சுக்கே இடம் இல்லை. இருக்கறது ஒண்ணுதான்.

2. திருஷ்டி சிருஷ்டி வாதம்.

பாக்கறவன் வந்த உடனே... உலகம் வந்துடறது. இரண்டு நண்பர்கள் ஒண்ணா தூங்கறா. ஒருத்தன்... இரண்டு பேரும் காசிக்குப் போயிட்டு வந்ததா கனவு காண்றான். அதை இன்னொருத்தன்கிட்டே இரண்டு பேரும்தான் காசிக்குப் போனோம்ன்னு சொன்னான். அவன் ஒத்துக்கலே. அவா அவா பார்வையிலே அது சரி.

3. சிருஷ்டி திருஷ்டி வாதம்.

உலகம் படைக்கப்பட்டது. அதைப் பாக்கறோம்.

(383) ***பகவான் பொதுவாகச் சொன்னது:-***

ப: கர்மம் மூவிதம். பிராப்தம், சஞ்சிதம், ஆகாமியம். கர்மத்துக்குக் கர்த்துருத்துவமும், கர்த்தாவும் இருக்கணும். கர்மம் உடம்புக்கு கிடையாது. அது ஜடம். தேகாத்ம புத்தியிருக்கற வரைக்கும்தான் கர்மம் இருக்கும். தேகாத்ம புத்தி போச்சுன்னா... அவன் ஞானி. புத்தி இல்லாம கர்த்துருத்துவமோ, கர்த்தாவோ இருக்க முடியாது. அதனாலே ஞானிக்கு மூணு கர்மமும் இல்லை. அது அவனோட அனுபவம். இல்லேன்னா அவன் ஞானி இல்லை.

ஒரு அஞ்ஞானி, அவனை உடம்போட பாக்கறதாலே, ஞானியையும் உடம்பாத்தான் பார்ப்பான். ஆனா, ஞானி தன்னை உடம்பாக பாக்கறது இல்லை. அதனாலேயே, அஞ்ஞானி, ஞானியும் நம்மள மாதிரியேதான், சாப்பிடறான், வேலைபாக்கறான், தூங்கறான். அப்போ இவனைக் கர்மம் பாதிக்குமா? இல்லையான்னு கேக்கறான்.

சாஸ்திரங்கள் ஞானம்ங்கற நெருப்பு எல்லாக்கர்மங்களையும் எரிச்சுடறதுன்னு சொல்றது. 'எல்லாக் கர்மங்களையும்'ங்கறதிலே இரண்டு கருத்து சொல்றா.

1. சஞ்சிதம், ஆகாமியம் மட்டும் எரிஞ்சுடும். பிராப்தம் அனுபவமாகும்.

2. மூணும் எரிஞ்சுடும். எதுவும் மிஞ்சாது.

முதல் கருத்து என்ன சொல்றது. ஒருத்தனுக்கு மூணு மனைவி இருந்தா அவன் இறந்ததுக்கு பிறகு இரண்டு பேர்தான் விதவை; இன்னொருத்தி சுமங்கலிங்கறது.

இரண்டாவது: எல்லாரும் விதவைதாங்கறது. அப்படியே கர்த்தா இல்லைன்னா மூணு கர்மமும் இருக்காது.

இனனொரு விளக்கமும் கொடுக்கறா அது கேக்கறவனைத் திருப்திப்படுத்தறதுக்காக.

எல்லாக் கருமமும் போயிடும். பிராப்தம் மட்டும் மிஞ்சும், உடம்பு எதுக்கு வந்ததோ... அதைச் செய்யும். அதுதான் பிராப்தம். ஞானிக்கு அன்னியமா உடம்பும் இல்லை... கர்மமும் இல்லை... அதனாலே கர்மம் அவனைப் பாதிக்காது.

**கே: ஞானிக்கு தேகாத்ம புத்தி இல்லைன்னா... ஒரு உதாரணத்துக்கு பகவானுக்கு எறும்பு கடிச்சா வலிக்குமா?**

ப: இது ஞானி அஞ்ஞானி இரண்டு பேருக்கும் பொது. ஆனா அஞ்ஞானி நான் உடம்பு மட்டும்தான்னு நினைப்பான். ஆனா ஞானிக்கு எல்லாம் அவன்தான். வலியிருந்தா இருக்கட்டுமே. அதுவும் ஆத்மாதான். ஆத்மா பூரணமாத்தான் இருக்கு.

கர்மங்கள் ஞானியைப் பாதிக்காது. பொதுவா ஒவ்வொருத்தருக்கும் கர்மம் ஸம்ஸ்காரமா மனசுலே

பதியும். ஞானிக்கு மனம் நாசமானதாலே அவன் மனசுக்கு அதீதப்பட்டுட்டான். வறுத்த விதை முளைக்காது. எந்த ஸம்ஸ்காரமும் பதியாது. அதனாலேயே, ஞானியின் மனம் பிரம்மம்ன்னு சொல்றா. பிரம்மம் வேற எதுவும் இல்லை.... ஞானியின் மனம்தான்.

ஆனாலும் அவனுக்கு பிராப்தம் உண்டுன்னு சொல்றதாலே வாசனைகள் ஞானிக்கும் இருக்கும். ஆனா அவை போக ஹேதுவான வாசனைகள். பொதுவா கர்மம் இரண்டு வேலை பாக்கும். ஒண்ணு கர்மபலனை அனுபவிக்கறது.

இரண்டு அதை மனசுலே ஸம்ஸ்காரங்களா திரும்பவும் பண்றதுக்காக பதிச்சு வச்சுக்கறது.

ஒரு ஞானியோட வாசனைகள் பலனை மட்டும் கொடுத்துட்டு ஸம்ஸ்காரங்களைப் பதிக்காது.

உண்மையிலேயே ஞானியோட கர்மம் அஞ்ஞானியோட பார்வையிலேதான். ஞானி அகர்த்தா. உடம்பை ஆத்மாவிலே இருந்து வேறாப் பாக்கமாட்டான். அவனுக்கு முக்தியோ, பந்தமோ எப்படி இருக்கும். இரண்டும் கடந்தவன். இப்பவும் எப்பவும் கர்மத்துக்குக் கட்டுப்படாதவன். அவனுக்கு ஜீவன் முக்தனும் இல்லை. விதேக முக்தனும் இல்லை.

(383&385) ***வெங்கடராவ் கேட்டார்.***

**கே: ஞானிக்கு வாசனையெல்லாம் போயிடுச்சுன்னா... கல்லு மாதிரி அசையாம இருக்கலாமே!**

**ப:** தேவையில்லே. வாசனைகள் அவனை ஒண்ணும் பண்ணாது, கல்லு மாதிரி அசையாம இருக்கறது கூட வாசனைதான். ஸஹஜம்தான் நிலை.

நீர் ஞானமடையற வரைக்கும் ஞானியோட நிலை புரியாது. ஏன் ஈஸ்வரன் இப்படிப் பண்ணினான்னு பேசறதுலே ஒரு பிரயோஜனமும் இல்லை. சிலர், ஏன் தாருகாவனத்திலே, சிவன், ரிஷி பத்தினிகள் கற்பை எல்லாம் கெடுத்தார்ன்னு கேக்கறா.

இந்தக் கதையைச் சொல்ற புராணங்கள்தான் சிவன் தேவர்களை வாழ வைக்க ஆலகால விஷத்தைச் சாப்பிட்டார்ன்னு சொல்றது. முனிவர்களை எல்லாம் முக்திக் கரையேத்தினவரே... அவாளோட மனைவிகள் முன்னாடி நிர்வாணமா உலவினார். இதையெல்லாம் நாம புரிஞ்சுக்க முடியாது.

**கே: ஒரு ஞானியோட செயல்களை பாத்து நம்மளும் பழகலாமா?**

ப: ஒரு பிரயோஜனமும் இல்லை.

**கே: பக்திக்கும் ஞானத்துக்கும் சம்பந்தம் என்ன?**

ப: எப்பவும் இடைவிடாமல் ஸ்வபாவமான நிலையிலேயே இருக்கறது ஞானம்.

அதுக்கு ரொம்பப் பிரியம் வேணும். அது பக்திதானே!

**கே: உருவ வழிபாடு தவறு. இஸ்லாம் அதை கண்டிக்குது இஸ்லாத்துல கடவுளுக்கு உருவம் இல்லை.**

ப: அவா இறைவன்னா என்னன்னு சொல்றா.

**கே: எங்கும் நிறைந்தவர். எல்லாம் வல்லவர்.**

ப: அப்போ இறைவனுக்கு குணம் இருக்கா! உருவம் ஒரு அம்சம்; குணம். யாரும் இறைவனை குணம் கடந்து கும்பிட முடியாது. எந்த பாவனையும் இறைவனை சகுணமாத்தான் காட்டும்.

கடவுளுக்கு உருவம் இருக்கா இல்லையான்னு தெரியறதாலே ஒரு பிரயோஜனமும் இல்லை. உமக்கு உருவம் இருக்கா இல்லையான்னு பாரும்! அப்போ கடவுளைப் பத்தித் தெரியும்!

**கே: எனக்கு உருவம் இல்லை.**

ப: சரி, தூங்கும்போது உமக்கு உருவம் இல்லை. ஆனா விழிப்பு நிலையிலே உம்மை ஒரு உருவத்தோடேதானே சம்பந்தப்படுத்திக்கரீர். எது உம்முடைய உண்மையான ஸ்திதின்னு விசாரத்தாலேயே தெரியும். உம்மை அப்படித்

தெரிஞ்சுக்கற வரைக்கும் கடவுளுக்கு உருவமில்லைன்னு சொல்றது பொருந்தாது.

**கே: ஆனா கடவுளுக்கு உலகம் இருக்கே?**

ப: உலகம் எப்படித் தோன்றுது? நாம எப்படி வர்றோம்? இதெல்லாம் தெரிஞ்சா கடவுளைப் பத்தியும் தெரியும். அவர் அப்போ சிவனா? விஷ்ணுவா? இல்லே வேற யாருமா? இல்ல எல்லாமா? இல்லே ஒண்ணான்னு பாப்போம் ஓய்.

**கே: வைகுண்டம் பரமபதத்துல இருக்கா?**

ப: பரமபதமோ, வைகுண்டமோ உம்மகிட்டே இல்லாம எங்கே இருக்கு ஓய்?

**கே: வைகுண்டம் தானே தோன்றினதுதான்.**

ப: ஏன் ஓய்! அப்போ உலகம் தானே தோன்றலையோ?

கேள்வி கேட்டவர் பதிலேதும் கூறவில்லை. சிறிது நேரம் கழித்து பகவான், 'இருக்கறதை விட்டுட்டுப் பறக்கறதைத் தேடறது'.



(386) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: இராமகிருஷ்ணர் வாழ்க்கையில இராமர்சிலை அவர்கிட்டே பேசுச்சுங்கறாங்களே! அது உண்மையா?**

ப: உடம்பே பேசறது! நடக்கறது! இதெல்லாம் உமக்குத் தெரியாதா?

சிலை பேசறது நகர்றது, உடம்பு பேசறது... நடக்கறத விடவா விசேஷம்.

**கே: உலோகம் ஜடம். அதுவா நகராதே!**

ப: அப்போ உடம்பு ஜடமில்லையா! ஒருவேளை பிணம் பேசினா அதிசயம்ன்னு சொல்லுவீர் போலும்!



**(387) தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: படைப்பு பத்தி உபநிஷத்துல ஒரு மாதிரி சொல்றாங்க... புராணங்கள்ல ஒரு மாதிரி சொல்றாங்க... எது உண்மை?**

ப: ஆத்மிகமாவும் விஞ்ஞானமாவும் படைப்பு எப்படி ஏற்படறதுன்னு நிறைய கொள்கைகள் இருக்கு. ஏதாவது முடிவுக்கு வந்துதா? முடியாது. இந்த மாதிரியான விளக்கம் எல்லாம் கிரம சிருஷ்டி.

உண்மை என்ன?

திருஷ்டியே சிருஷ்டி. பாக்கறவன் இல்லாம பாக்கப்படுவது இருக்காது. இரண்டும் ஒண்ணாத்தான் தோன்றுது. பாக்கறவனை பாத்தாலே படைப்பு அதிலேயே அடங்கிடும்.

ஏன் வெளியே பாக்கணும். அதை விளக்கணும்?

அது முடிவில்லாதது.



**(389) பகவானைப் பாக்க வர்றவங்க கொண்டு வர்ற காணிக்கைப் பொருட்கள் பத்தி...**

ஏன் இதெல்லாம் கொண்டு வர்றா? எனக்குத் தேவையா? வேண்டாம்னாலும் திணிப்பா. எதுக்கு? வாங்கிக் கொண்டா அவாளோட இஷ்டத்துக்கு சரின்னுவேன்னுதான்.

மீனுக்குப் புழுவைத் தூண்டில்லே போடற மாதிரிதான். மீனுக்குப் பசிக்கறதுன்னா போடறா? மீனைச் சாப்பிடணும்ன்னு போடறா.



**(389) சுவாமி லோகேசானந்தா கேட்டார்.**

**கே: ஞானம்ன்னா என்ன? விஞ்ஞானம்னா என்ன?**

ப: வேதாந்தத்திலே 'ஞானம்'ன்னா எப்பவும் இருக்கற நான். போலி 'நான்' விஞ்ஞானம்.

**கே: பிரம்மத்துக்கும் ஈஸ்வரன்னுக்கும் என்ன சம்பந்தம்?**

ப: பிரம்மத்தைத்தான் உலகத்தோட சேத்து சொல்லும்போது ஈஸ்வரன்னு சொல்றோம்.

**கே: ராமகிருஷ்ணர் கடவுள் கிட்டே பேசின மாதிரி ஈஸ்வரனோட பேச முடியுமா?**

ப: நாம இரண்டு பேரும் பேசிக்கறோமே! ஈஸ்வரனோட ஏன் பேச முடியாது?

**கே: அப்போ ஏன் எங்களுக்கு முடியலை?**

ப: அதுக்கு சித்த சுத்தியும், மனோபலமும் தியானத்திலே நல்ல அப்பியாசமும் வேணும்.

**கே: இதெல்லாம் இருந்தா கடவுளை பாக்கலாமா?**

ப: அந்தக் காட்சி நீங்க எவ்வளவுக்கு உண்மையோ அவ்வளவுக்குத் தான் உண்மை.

நீஙகோ உங்களை ஸ்தூல உடம்போட சம்பந்தப் படுத்திக்கொண்டு... ஸ்தூல உலகத்தை விழிப்பு நிலையிலே பாக்கறேள்.

கனவிலே, சூட்சும உடம்போட சம்பந்தம் படுத்திக்கொண்டு... சூட்சும உலகத்தைப் பாக்கறேள்.

தூக்கத்திலே உடம்பு இல்லை. எதையும் பாக்கமாட்டேள். இது கடவுள் காட்சிக்கும் பொருந்தும். நீண்டகால தியானப்பயிற்சியாலே கனவிலே வர்ற இறைவன் விழிப்பிலேயும் வருவார்.

இதுதான் இறைவனை உணர்ந்த நிலையா?

ஒரு தடவை என்ன நடந்ததுன்னு சொல்றேன்.

நாமதேவர்னு ஒரு மகான் இருந்தார். அவர் விடோபாவோட பேசுவார்.... விளையாடுவார்... நாம எப்படி ஒருத்தரோட ஒருத்தர் இருக்கோமோ, அப்படி இருப்பார்.

ஒரு தடவை சாதுக்களெல்லாம் கூடினா. அதிலே ஞானேஸ்வர் இருந்தார். ஞானேஸ்வர் அங்கே இருந்த கோரகும்பர்கிட்டே (அவர் பானை செய்றவர்) 'இங்கே இருக்கறவாள்லே வெந்தது எது? வேகாதது எதுன்னு

சொல்லுங்கோ' அப்படின்னார். கோரகும்பரும் பானையைச் சோதிக்கற மாதிரி ஒரு கம்பை வச்சு ஒவ்வொருத்தர் தலையையும் தட்டிக்கொண்டே போனார். நாமதேவர்கிட்டே வந்தவுடனே நாமதேவர் 'என்னைச் சோதிக்கற அளவுக்கு நீ பெரிய ஆளா'?ன்னார். உடனே கோரகும்பர், 'இதுதான் வேகாத பானை'ன்னார். எல்லோரும் சிரிச்சா. நாமதேவருக்கு ரொம்ப அவமானமா போச்சு. நேரே விடோபாகிட்டே போனார். போனா... விடோபா 'சாதுக்களுக்குத்தான் உண்மை நல்லா தெரியும்'ன்னார். இதைக் கேட்ட உடனே நாமதேவர் ரொம்ப பாதிப்படைஞ்சுட்டார்.

**நாமதேவர்:**

நீங்க பரம்பொருள். உங்க கூட நான் பேசறேன்! நீங்களும் என்கூட விளையாடறேள்! இதைவிட வேறென்ன ஒரு மனுஷனுக்கு வேணும்?

**விடோபா:**

அது சாதுக்களுக்குதான் தெரியும்.

**நாமதேவர்:**

உன்னைவிட ஸத்யம் வேற ஏதாவது இருந்தாச் சொல்லு.

**விடோபா:**

நாம இரண்டு பேரும் ரொம்ப நாள் பழக்கம். நான் சொன்னா உனக்கு ஏறாது. ஒரு பிச்சைக்கார சாது காட்டிலே இருக்கார். அவரைப்போய்ப் பாரு! உண்மை புரியும்.

அப்படியே நாமதேவரும், அந்த சாதுவை காட்டிலே கண்டுபிடிச்சார். நாமதேவருக்கு ஒண்ணும் பெரிய சிறப்பா தெரியலே. அவர் துணியில்லாமே, அழுக்கா, தரையிலே படுத்து, காலை தூக்கி அவருக்குப் பக்கத்திலே இருந்த, ஒரு சிவலிங்கத்து மேலே போட்டு, படுத்து இருந்தார்.

நாமதேவருக்கு ரொம்ப ஆச்சர்யம், 'இவர் எப்படி மகானா இருக்க முடியும்? காலைத் தூக்கி லிங்கத்து மேலே போட்டிருக்காரே'ன்னு. அந்த சாது நாமதேவரைப் பாத்த உடனே சிரிச்சார். 'என்ன? விடோபா அனுப்பிவச்சானா'?ன்னார்.

நாமதேவருக்குப் பெரிய ஆச்சர்யம், வேற வழி இல்லை. பெரிய ஆள்தான்னு நம்ப வேண்டியதா போச்சு. நாமதேவர் கேட்டார். 'நீங்க ஒரு சாது! நீங்களே லிங்கத்தை அபசாரம் பண்ணலாமா'ன்னார். அதுக்கு அந்த சாது, 'ரொம்ப வயசானதாலே முடியல. எது எங்கேன்னு தெரியலே. என் காலைத் தூக்கி லிங்கம் இல்லாத இடத்திலே வை'ன்னார்.

நாமதேவரும் அவர் காலைத் தூக்கி வேற இடத்திலே வச்சார். பாத்தா... அங்கே ஒரு லிங்கம் இருக்கு. எங்கே காலைக் கொண்டு போனாலும் லிங்கம் தோண்றது. கடைசியிலே நாமதேவர்... அவர் தலையிலேயே காலை வச்சுக்கொண்டு லிங்கமாயிட்டார். நாமதேவருக்கு உண்மை புரிஞ்சுடுத்து. வீட்டுக்குத் திரும்பிப் போன நாமதேவர், பலநாள் கோவிலுக்குப் போகவே இல்லை. நாமதேவரைக்காணோம்னு விடோபாவே வீட்டுக்கு வந்துட்டார். ஏன் கோயிலுக்கு வரலேன்னார். நாமதேவர் சொன்னார், 'ஏமாத்தாதே! நீ இல்லாத இடம் ஏதாவது இருக்கா'ன்னார்.



(390) ***தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.***

**கே: விசாரம் எப்படிப் பண்றது?**

**ப:** இந்தக் கேள்வி கேக்கறவன் முதல்லே அவன் இருக்கறதை ஒத்துக்கணும். நான் இருக்கேன்கறதுதான் ஞானம். அதைத் திடமா அடையற வரைக்கும் அதைப் பிடிச்சுக்கறதுதான் விசாரம். விசாரமும், ஞானமும் ஒண்ணுதான்.

**கே: எனக்குப் புரியலே. எதிலே தியானம் பண்ணணும்?**

**ப:** தியானத்துக்கு ஒரு பொருள் வேணும். விசாரத்திலே தியானிக்கறவன் மட்டுமே இருப்பான். இப்படித்தான் விசாரமும், தியானமும் வேறுபடும்.

**கே: ஞானமடைய தியானம் சிறந்த வழியில்லையா?**

**ப:** தியானம் ஒரே பொருள்லே ஏகாக்கிரமா இருக்கறது. அதோட பிரயோஜனம் மத்த நினைவுகளை வரவிடாது.

ஏகசிந்தனையிலே வச்சுருக்கும். ஆனா ஞானத்துக்கு ஏகசிந்தனையும் போகணும். ஞானம் புதுசா வர்றது இல்லே. ஏற்கனவேயிருக்கு. நினைவுகள் திரைமாதிரி மறைச்சுக்கொண்டு இருக்கு. நம்மளோட முயற்சி எல்லாம் அந்தத் திரையை நீக்கத்தான். அப்போதான் ஞானம் வெளிப்படும்.

தீவிரமான சாதகர்கள் கிட்டே தியானம் பண்ணச் சொன்னா கேள்வி எதுவும் கேக்காம திருப்தியா தியானத்துக்குப் போயிடுவா. ஆனா யாரோ ஒருத்தன், 'ஏன் தியானம் பண்ணணும்? நான் யார் தியானம் பண்றதுக்கு'ன்னு கேப்பான். அவன்கிட்டேதான், 'நீ யார்ன்னு பார்'ன்னு சொல்றோம். அதுதான் முடிவு. அதுதான் விசாரம்.

**கே: விசாரமே போதுமா?**
**தியானம் தேவையில்லையா?**

ப: விசாரமே வழியும் முடிவும். 'நான்'கறதே முடிவும் பரமார்த்த சத்தியமும். அதை முயற்சியோட பிடிச்சுக்கொண்டு இருந்தா விசாரம்.

முயற்சியற்று ஸ்வபாவமா இருந்தா ஞானம்.



**பகவான் பொதுவாகச் சொன்னது.**

நிர்குணாதீத பிரம்மம் (Pure Being)



குணாதீத பிரம்மம் (இது ஒளிரும்)



சகுண பிரம்மம் (ஈஸ்வரன் சுத்தமனம் சத்வ மனம்)





ரஜஸ் | தமஸ்

அஹம் (நான்) | இதம் (உலகம்)

ஆவரணம் ஜீவனை மறைக்கறது இல்லை. அவனோட இருப்பு முழுசா தெரியும். யார்ன்னுதான் தெரியாது. உலகத்தைப் பார்ப்பான். ஆனா அது பிரம்மம்ன்னு தெரியாது. இருட்டிலே கொஞ்சம் வெளிச்சம் இருக்கற மாதிரி.

சினிமாவுக்கு முதல்லே இருட்டு வேணும். அதிலே செயற்கை வெளிச்சம்... பாய்ச்சினா அந்த ஒளியிலேதான் படம் தெரியறது. பிரிச்சு அறிய ஒரு பிரதிபலன ஒளி தேவை.

தூங்கறவன் கனவு காண்றான்... தூக்கத்திலேதான் இருக்கான். தூக்க இருள் இருந்தாத்தான் கனவு உலகம் பாக்க முடியும். அப்படியே அஞ்ஞான உறக்கத்திலேயே இந்தப் பெரிய கனவு நடக்கறது.

அஞ்ஞானம் இருள்தான்....... ஆவரணம்

இந்த ஆவரணம் அஞ்ஞானத்தோட ஸ்வபாவம். ஆத்ம ஸ்வபாவமில்லே. அது ஆத்மாவை மறைக்காது. ஜீவனைத்தான் மறைக்கும். அகந்தை ஜடம். அது மேலே ஆத்ம ஒளி பட்ட உடனே அது ஜீவனாயிடறது.

அகந்தையையும் ஒளியையும் பிரிக்க முடியாது. எப்பவும் ஒண்ணாவே இருக்கும். கேள்வி கேக்கறவனைத் திருப்திப் படுத்த இப்படி எல்லாம் சொல்ல வேண்டியதா இருக்கு. ஜீவன் ஒரு கலவை.



(391) **சமாதியைப் பத்திய ஒரு கேள்விக்கு.**

ப: 'நான்'கறதிலே இருக்கறதுதான் சமாதி.

முயற்சியோடு 'நான் இருக்கேன்'கறதிலே இருந்தா ஸவிகல்ப சமாதி.

'நான் இருக்கேன்'கறதிலே ஐக்கியமாகி உலகம் தெரியலேன்னா... நிர்விகல்ப சமாதி.

அறியாமையிலே ஐக்கியமாகி உலகம் தெரியலேன்னா... தூக்கம்.

எப்பவும் இருக்கறதிலே முயற்சி இல்லாம இருந்தா ஸஹஜ சமாதி.

(395) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: பூரண பிரம்மத்தை எப்படி அடையறது?**
**கிருஹஸ்தர்களுக்குத் தகுந்த ஏதாவது வழியிருக்கா?**

ப: நீங்களே பூரண பிரம்மம்ன்னு சொல்லிட்டேள். அப்போ நீங்க பூரணத்திலே இருந்து வேறா?

வேறேன்னா... எப்படி அது பூரணமாயிருக்கும். வேறு இல்லேன்னா... இந்தக் கேள்வி எப்படி வரும். பிரம்மம் பூரணம்... நாம அதிலே இருந்து வேறே இல்லைங்கற அறிவுதான் முடிவு. இது புரிஞ்சா நீங்க உங்களைக் கிரஹஸ்தனாகவோ வேறு எதுவாவோ அப்புறம் நினைக்க மாட்டேள்.



(396) **திருமதி காஸ்ரீப் கேட்டார்.**

**கே: வாழ்க்கைன்னா என்ன?**

ப: இருக்கறதுதான் வாழ்க்கை. அது நீங்கதான். அதுதான் அழியாத வாழ்க்கை.

**கே: காலம்ன்னா என்ன?**

ப: இருக்கறதுதான். நீங்க இல்லாமே காலம்ன்னு ஒண்ணைக் கற்பனை பண்ண முடியுமா?

இந்த வாழ்க்கை உடம்பை வச்சு இருக்கு. நீங்களும் உங்களை உடம்புன்னு நினைச்சுக்கறேள். ஆனா நீங்க அழியாத வாழ்வு. இந்த உடம்புகள் எல்லாம் உங்களைப் பிடிச்சுக்கொண்டு, நான்தான் வாழ்றேன்னு சொல்றது. இதைத்தான் தேகாத்ம புத்தியாலே பீடிக்கப்பட்டு இருக்கறதுன்னு சொல்றது. தேகாத்ம புத்தி போச்சுன்னா... நீங்கதான் ஆத்மா.

பிறக்கறதுக்கு முன்னாடி நீங்க எப்படி இருந்தேள்?

தூங்கிக்கொண்டு இருந்தேளா?

எப்படி இருந்ததோ?

அப்பவும் உடம்பு இல்லாம இருந்தேள்! அகந்தை கிளம்பித்து... மனசு, உடம்புன்னு ஒரு படத்தைப் போட்டது. விளைவு.... தேகாத்மபுத்தி. உடம்பு தெரியறதாலே நான் பிறந்தேன்; இறப்பேன்னு சொல்றேள். உடம்போட தோற்றத்தையும் மறைவையும் உங்க மேலே ஏத்திக்கறேள். இந்த நான் பிறந்திருக்கேன்... நான் ஒருநாள் சாவேங்கறேள். இந்த உடம்பு தெரியறதையே உங்களோட வாழ்க்கைங்கறேள். ஆனா உண்மை என்ன?

நீங்க உடம்பு இல்லாமலே இருக்க முடியும். ஆனா உடம்பு நீங்க இல்லாம இருக்க முடியாது.

நான் இந்த உடம்புதான்கறது அஞ்ஞானம், உடம்பும் நான்தான் கறது ஞானம். இதுதான்... ஞான அஞ்ஞானபேதம். உடம்பு மனசோட கற்பனை. மனம்தான் அகந்தை. ஆத்மாவிலே இருந்து வர்றது. அதனாலே இந்த நான் உடம்புங்கற நினைப்பு... ஆத்மாவை மறக்கவச்சுடறது.

யாருக்கு இந்த உடம்பு?

யாருக்கு இந்த பிறப்பு?

ஆத்மாவுக்கு இல்லை. அகந்தைதான் தனியா கற்பனை பண்ணிக்கறது.

நான் தனிங்கற நினைப்பு இருக்கற வரைக்கும் துயரம் இருக்கும். நாம யார்ன்னு தெரிஞ்சா.... நாம வேறே, உலகம்

வேறே, நாம ஏதோ எங்கேயோ பிரிஞ்சு, தனியா இருக்கோம்ங்கற நினைப்பு போயிடும். அமைதியே மிஞ்சும்.

மேலே தூக்கி எறிஞ்ச கல்லு, தன் மூலத்தை விட்டு எவ்வளவு தூரம் போனாலும் திரும்பத் தரைக்கு வரும். வர்ற வரைக்கும் அதோட இயக்கம் நிக்காது. தரைக்கு வந்தாத்தான் நிலைப்படும். சமுத்திரத்திலே இருக்கற நீர் ஆவியாகி, மேகமாகி, மழையாகி, நதியாகி மீண்டும் சமுத்திரத்தை வந்து சேர்றமாதிரி... நாம மூலத்திலே இருந்து பிரிஞ்சுட்டோம்கற நினைப்பே... பதைபதைப்பைக் கொடுத்து... திரும்பவும் தன்னிலை சேர்ற வரைக்கும் விடாது.

நம்மள உடம்போட சேத்துக்கொண்டு, நாம பிரிஞ்சதா ஒரு பதைபதைப்பு நம்மளோட மூலத்திலே திரும்பவும் சேர்ற வரைக்கும் இருக்கும். சேந்தாத்தான் அமைதி திரும்பும். தேகாத்ம புத்தி ஒழியும்.

தங்கம் ஆபரணம் இல்லே. ஆனா ஆபரணம் தங்கத்தைத் தவிர வேறே இல்லை. ஆபரணம் எந்த விதத்திலே இருந்தாலும் அது தங்கம்தான். அப்படியே உடம்புகளும் ஆத்மாவும்.

நாம உடம்புன்னு நினைச்சு சுகமா இருக்க விரும்பறது.... முதலையை தெப்பம்ன்னு நினைச்சு அதைப் பிடிச்சு ஆற்றைக் கடக்க நினைக்கற மாதிரிதான். நான் இந்த உடம்புதான்கற நினைப்பு மனத்தாலேயே.... அதோட வெளிமுக அலைச்சலாலேயே ஏற்படறது. அப்படியே இருந்தா முடிவிலே துயரமும் அமைதியின்மையுந்தான் மிஞ்சும்.

நீங்க யார்ன்னு பாருங்கோ! அதிலேயே அடங்கி யிருங்கோ! அமைதியடைங்கோ!

**கே: தன்ஹா மறுபிறப்பு அப்படின்னா என்ன?**

ப: தன்ஹான்னா... தாகம்.

மறுபடியும் பிறக்கறதுக்கான தாகம். இப்போ இருக்கற நிலையிலேயே திருப்தி இல்லாமே, எப்பவுமே திரும்பி வராத இடத்திலே... அதிருப்தி இல்லாத இடத்திலே... மறுபடியும்

பிறக்க ஆசைப்படறது. ஞானமடைய ஆசைப்படறதைத்தான் அப்படிச் சொல்றா.

பிறப்பு உடம்போடதனாலே அது ஆத்மாவைப் பாதிக்காது. உடம்பு இறந்தாலும் ஆத்மா அப்படியே இருக்கும். அதிருப்தி எல்லாம் எப்பவும் இருக்கற ஆத்மாவை... இல்லாத உடம்போட சம்பந்தப்படுத்தி... உடம்பு இருக்கறதா அதுக்கு ஆத்மஅந்தஸ்து தர்றதாலேதான். உடம்பு அகந்தையோட உபாதி. அகந்தை நாசமாச்சுன்னா.... ஆத்மா வெளிப்படும்.

**கே: உடம்பு இல்லாம போயிடும்கற பயம் தூக்கத்துல ஏன் வரமாட்டேங்குது? மாறாகத் தூங்கப் பிரியப்படறோம். ஆனா மரணத்துக்குப் பயப்படறோம் ஏன்?**

ப: தூங்கறதுக்குப் பிரியப்படறதும், மரணத்துக்குப் பயப்படறதும், முழிச்சு இருக்கறப்போதான் ஏற்படறது. ஆனா தூங்கும்போது பிரியம் இல்லே; மரணத்திலே பயம் இல்லே; தூங்கும்போது உடம்பு அறவே இல்லேன்னாலும்...

மனசுக்குதூங்கும்போது உடம்பு அறவே இல்லேன்னாலும்... திரும்ப வந்துடும்ன்னு தெரியும். அதனாலே பயம் இல்லை. உடம்பற்ற சுகத்தைத் தேடறது. ஆனா சாவிலே திரும்ப வருவோமாங்கறது நிச்சயமா மனசுக்குத் தெரியாததாலே... பயப்படறது.



(398) *ஹிருதயம் வலப்பக்கம் இருக்குன்னு* **Modern Psychological Review***ங்கற பத்திரிக்கையில் குறிப்பிட்டு இருந்ததை ஒருத்தர் தபால்லே அனுப்பி இருந்தார்.*

அதைப் பற்றி பேச்சு தொடர்ந்தது.

ப: யோக மார்க்கம் ஆறு ஆதாரம் பத்திப் பேசறது. ஒவ்வொண்ணையும் அடைஞ்சு அடுத்ததுக்குப் போகணும். கடைசியிலே சஹஸ்ராரத்திலே அமிர்தம் இருக்கு. அப்புறம் அமரத்தன்மை ஏற்படும்ங்கறது.

யோகிகள்... பரநாடியிலே நுழையணுங்கறா. அது மூலாதாரத்துலே இருந்து ஆரம்பம் ஆகறதுங்கறா.

ஞானிகள்... அதே பரநாடி ஹிருதயத்துலே இருந்து ஆரம்பமாறதுங்கறா.

இரண்டுமே வேற வேறயாத் தெரிஞ்சாலும்... இதோட உண்மை... ரகஸ்யம். யோகப்பரநாடி மூலாதாரத்திலே இருந்து ஆரம்பமாகும்.

உண்மை என்னன்னா... பரநாடியிலே நுழையணும். யோகத்திலே ஒருத்தர் கீழே போய் மறுபடியும் மேலே வந்து இங்கே அங்கே சுத்தி மூலத்துக்கு வர்றார். ஞானத்திலே நேரடியாவே மூலத்திலே அமர்றான்.

யோகிகள் சஹஸ்ராரத்துக்குப் போறதை ரொம்ப முக்யத்துவம் கொடுக்கறா. ஜிவன் பிரம்மரந்திரத்து வழியாத்தான் உடம்புக்குள்ளே வர்றது. வியோகம் (பிரிவு) அதனாலேதான் ஏற்படறது. மறுபடியும் யோகத்தாலே பிராணனை உச்சிக்குழி வழியா கொண்டு போய் சேத்துடணுங்கறா.

ஞானிகள் என்ன சொல்றா... யோகி உடம்பை உண்மைன்னு நம்பறான்... அது ஆத்மாவிலே இருந்து பிரிஞ்சிடுத்து... அதனாலே யோகத்தாலே மறுபடியும் போய்ச் சேரணும்ன்னு நினைக்கறான். உண்மை என்னன்னா... உடம்பு மனசுலே இருக்கு. மனசு, உடம்பு படத்தை போட்டு, சஹஸ்ராரத்திலே இருந்து, தன்னோட மூலத்திலே இருக்கற ஒளியை வாங்கி தொழிற்படறது. இதை யோகிகளும் ஒத்துக்கறா... ஆனா உச்சிக்குழி கொள்கைப்படி.

ஞானி என்ன சொல்றான்... ஒளியை வேற இடத்திலே இருந்துதான் மனம் வாங்கறதுன்னா... அந்த இடத்துக்கே நேரா போயிட வேண்டியதுதானே! எதுக்கு வாங்கி விக்கறவனைப் பிடிச்சுக்கணும்ங்கறான். அதாவது ஏன் ஸஹஸ்ராரத்துக்கு போகணும்? நேர மூலத்துக்கே போயிட வேண்டியதுதானே!

இரும்பு குண்டு நெருப்பிலே இருந்தா... நெருப்பு குண்டு மாதிரி தெரியும். இரும்புக்கு நெருப்பு சுபாவமில்லே. நெருப்போட தன்மையை, இரும்பு எடுத்துக்கொண்டு நெருப்பு குண்டு மாதிரி பிரகாசிக்கறது. இப்போ குண்டுலே

நெருப்பு போயிடுத்து. திரும்பவும் நெருப்பு வேணும்ன்னா... நெருப்புக்குத்தான போகணும். அதே மாதிரி வியோகம் எதனாலே ஏற்பட்டுத்தோ... அதுக்குத் திரும்பறது தானே யோகம்.

ஒரு பிம்பம் பிரதிபிலிக்கறதுன்னா... அதுக்கு ஒரு மூலம் வேணும். பிரதி பலிக்கறதுக்கு ஒரு ஸாதனம் வேணும். சூரியனும், நீர் நிறைந்த குடமும் மாதிரி. இந்தப் பிரதிபலிப்பு போகணும்ன்னா... என்ன செய்யணும்... ஒண்ணு போர்வையைப் போட்டு குடத்தை மூடணும். அதுதான் யோகிகள் சொல்ற பிரம்மரந்திரக் கொள்கை. அல்லது ஜலம் எல்லாத்தையும் போக்கணும். அதுதான் தபஸ். நினைப்பு எல்லாம் போக்கறது. அதுதான் ஞான மார்க்கம்.

இது எல்லாம் ஜீவன் ஆத்மாவிலே இருந்து வேறேங்கற நம்பிக்கையாலேதான்.

உண்மையிலேயே நாம ஆத்மாவிலே இருந்து வேறா?

இல்லேங்கறான் ஞானி. அகந்தைங்கறது தவறான சேர்க்கை. ஆத்மாவை அனாத்மாவோடு தப்பா சேத்துக்கறது.

நிறமற்ற ஸ்படிகம் எந்த நிறத்தை ஆதாரமாக் கொண்டிருக்கோ... அந்த நிறத்திலே தெரியும். ஆதாரத்தை நீக்கினா... முன்பு எப்படி இருந்ததோ அப்படியே நிறமற்றுத் தெரியும். அப்படித்தான் ஆத்மாவும் அந்தகரணங்களும்.

இந்த உதாரணம்கூட அவ்வளவு பொருத்தமா இல்லை. ஏன்னா... அகந்தை ஆத்மாவையே மூலமா கொண்டது. அதுக்கு அன்னியமாவும் இல்லை. ஸ்படிகமும் நிறமும் வேற வேறயா இருக்கு. அகந்தைக்கு மூலம் ஆத்மாவேங்கறதாலே... அதை அதோட மூலத்தோடதான் போய் சேக்கணும்.

அகந்தையோட மையமும் அதோட கருவும் ஹிருதயம்ன்னு சொல்லப்படறது. அதேதான் ஆத்மா. யோகிகள் ஹிருதயம்ன்னு சொல்ற அனாஹதத்திலே ஞானிகள் உணர்றதை உணர மாட்டா. ஏன்னா... அனாஹதம் வேறே; ஹிருதயம் வேறே;

அனாஹதம்தான் ஹிருதயம்ன்னா... அதுக்கு அப்புறம் ஏன் ஸஹஸ்ராரத்துக்கு அலையணும்?

இந்தக் கேள்வி ஏன் வர்றதுன்னா... நம்மளிடம் பிரிஞ்சுருக்கோம்...ங்கற நினைப்பு இருக்கு. நாம ஹிருதயத்தை விட்டு எப்பவும் தனியா இல்லை. அனாஹதத்தை அடையறதுக்கு முன்னாடியும், அதைத் தாண்டினதுக்கு அப்புறமும், நாம ஹிருதயத்திலேயேதான் இருக்கோம். ஒருத்தனுக்குப் புரிஞ்சாலும் புரியலேன்னாலும் ஹிருதயத்திலேதான் இருக்கான்.

யோகம் பண்ணினாலோ... விசாரம் பண்ணினாலோ... ஹிருதயத்திலே இருந்துகொண்டேதான் பண்றோம்.

**கே: அப்போ எங்களோட சாதனை என்ன?**

ப: சாதகனுக்கு சாதனையாயிருக்கறது, சித்தனுக்கு ஸஹஜமாயிருக்கு.

ஸஹஜம்தான் ஆதிநிலை. சாதனையெல்லாம் எப்பவும் இருக்கற உண்மையைத் தெரிஞ்சுக்க விடாம தடுக்கற தடைகளை நீக்கறதுக்குத்தான்.



(398) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: ஏகாக்கிரம் சாதனையில்லையா?**

ப: ஏகாக்கிரம்ன்னா ஏதாவது ஒண்ணை சிந்திக்கறது இல்லே... சிந்தனை இல்லாம இருக்கறது. அப்போ நம்மள மறைக்கற நினைப்புங்கற திரையில்லாததாலே நம்மளோட ஸ்வபாவம் நல்லாத் தெரியும். அந்தத் திரையை நீக்கறதுதான் நம்மளோட சாதனையெல்லாம். நினைப்பு இல்லாமே இருக்கறது, இப்போ ரொம்பக் கஷ்டமாயிருக்கும். நினைக்கறது... அப்போ ரொம்பக் கஷ்டமாயிருக்கும். நினைக்கறதுக்கு ஒண்ணும் இருக்காது. ஆத்மா மட்டுமே இருக்கும். ஏதாவது இருந்தா நினைக்கலாம்! எதுவும் இல்லேங்கறப்போ எப்படி நினைக்கறது!

பழக்கதோஷத்தாலே நினைக்காம இருக்க முடியாதுன்னு நம்பறோம். நாம தப்பு தெரிஞ்சா தேவையில்லாமே முட்டாள்தனமா சிந்திக்கமாட்டோம்.

**கே: அப்பியாசத்தை விட குரு அருள்தானே பலிதத்துல சிறந்தது?**

ப: குரு அஞ்ஞானத்தை நீக்குவார். ஞானத்தைத் தூக்கிக் கொடுக்கறது இல்லை.

**கே: நாங்கள் எல்லாம் அஞ்ஞானிகள்.**

ப: நான் அஞ்ஞானின்னு சொல்றப்போவே நீ ஞானிதான். எந்தப் பைத்யமாவது நான் பைத்தியம்னு சொல்லுமா? குரு அருள்ங்கறது ஜலத்துலே தத்தளிக்கறவனைக் கரையேத்த நீட்டப்படற கை. அஞ்ஞானத்தை நீ எளிமையா போக்கிக்கறதுக்கான உதவி.

**கே: அஞ்ஞானம்கற நோயைத் தீக்கற மருத்துவன்னு குருவை சொல்லலாமா?**

ப: எதுக்கு மருந்து? நோயளின்னு நினைச்சுக்கொண்டு இருக்கறவனை நீ ஆரோக்கியமாதான் இருக்கேன்னு புரிய வச்சு திரும்பவும் பழைய ஆரோக்கியத்துக்குக் கொண்டு வர்றதுதான்.

**கே: குரு, கடவுள், அருள் இதெல்லாம் என்ன?**

ப: குரு என்ன கையைப் பிடிச்சு எங்கேயாவது கூட்டிக்கொண்டு போறாரா?

இல்லே காதிலே ஏதாவது ஓதறாரா?

நீ அவரையும் உன்னை மாதிரி உடம்புன்னு கற்பனை பண்ணிக்கறே.

நீ உன்னை உடம்புன்னு நினைக்கறதாலே... அவரையும் உடம்புன்னு நினைக்கற உன்னை ஏதோ செய்யப் போறார்ன்னு நினைக்கறே. அவரோட வேலை எல்லாம் உள்ளே.

கே: குரு எப்படி ஒருத்தருக்கு கிடைக்கறார்.

ப: எங்கும் நீக்கமற நிறைந்து இருக்கற இறைவன் கருணையிலே, தன் பிரிய பக்தனுக்காக... தன்னைத் தன் பக்தனோட தரத்துக்கு வெளிப்படுத்தறார். பக்தன் தன்னை உடம்பாவும், ஒரு உடம்போட தனக்கு ஒரு உறவு... பிரியம் செலுத்த வேணும்ன்னு நினைக்கறான். ஆனா குரு உண்மையிலேயே ஆத்மாவே. இறைவனே வடிவுகொண்டு உலவறது. பக்தனுக்கு உள்ளேயிருந்து வேலை பாக்கறது. அவனோட தவறான பார்வையை சரிபண்ணி... சரியான பாதையிலே அவனை நடத்தி.... ஆத்மாவிலேயே சேத்துடறது.

அப்படி ஆத்மாவிலே சேந்ததுக்கு அப்புறம் சிஷ்யன் என்ன சொல்றான்... 'முன்னாடி ரொம்ப துக்கத்திலே இருந்தேன். நான் எப்பவுமே ஆத்மாதான். துக்கத்திலே இருந்தப்போவும்... இதேதான் நான். ஆனா இப்போ துக்கமெல்லாம் எங்கே போச்சுன்னு தெரியலே, யார் துக்கப்பட்டதுன்னு இப்போ தேடினா... அவனைக் காணவே காணோம்'. இப்படி குரு வெளியே இருந்து உள்ளே தள்ளியும், உள்ளே இருந்து உள்ளே இழுத்தும் அவனை ஹிருதயத்திலேயே இருத்திடறார்.

தூங்கும்போது உள்ளேதான் இருக்கோம். விழிச்சவுடனே மனம் கிளம்பிடறது. அது இதுன்னு போட்டுப் பிராண்டறது. அதை நிறுத்தணும். உள்ளேயும் வெளியேவும் வேலை பாக்கறவனாலேதான் அது முடியும். அவனை உடம்போட சம்பந்தப் படுத்தலாமா?

நாம என்ன நினைக்கறோம்... உலகத்திலே எதுவேணா செஞ்சுடலாம். உலகத்தையே வெல்லலாம்ன்னு நினைக்கறோம். போராடி தோத்துப்போய் உண்முகமாவோம். நம்மள விட மேலான சக்தி ஒண்ணு இருக்குன்னு ஒத்துப்போம். அதைத் தெரிஞ்சுப்போம். அகந்தை மிகப் பலமான யானை. சிங்கத்தைத் தவிர வேறு எதனாலேயும் அதை வழிக்குக் கொண்டு வர முடியாது. இங்கு குருதான் சிங்கம். அவனோட ஒரே பார்வை யானையை நடுநடுங்க வைக்கும். கொன்னுடும்.

பழக்கதோஷத்தாலே நினைக்காம இருக்க முடியாதுன்னு நம்பறோம். நாம தப்பு தெரிஞ்சா தேவையில்லாமே முட்டாள்தனமா சிந்திக்கமாட்டோம்.

**கே: அப்பியாசத்தை விட குரு அருள்தானே பலிதத்துல சிறந்தது?**

ப: குரு அஞ்ஞானத்தை நீக்குவார். ஞானத்தைத் தூக்கிக் கொடுக்கறது இல்லை.

**கே: நாங்கள் எல்லாம் அஞ்ஞானிகள்.**

ப: நான் அஞ்ஞானின்னு சொல்றப்போவே நீ ஞானிதான். எந்தப் பைத்யமாவது நான் பைத்தியம்னு சொல்லுமா? குரு அருள்ங்கறது ஜலத்துலே தத்தளிக்கறவனைக் கரையேத்த நீட்டப்படற கை. அஞ்ஞானத்தை நீ எளிமையா போக்கிக்கறதுக்கான உதவி.

**கே: அஞ்ஞானம்கற நோயைத் தீக்கற மருத்துவன்னு குருவை சொல்லலாமா?**

ப: எதுக்கு மருந்து? நோயளின்னு நினைச்சுக்கொண்டு இருக்கறவனை நீ ஆரோக்கியமாதான் இருக்கேன்னு புரிய வச்சு திரும்பவும் பழைய ஆரோக்கியத்துக்குக் கொண்டு வர்றதுதான்.

**கே: குரு, கடவுள், அருள் இதெல்லாம் என்ன?**

ப: குரு என்ன கையைப் பிடிச்சு எங்கேயாவது கூட்டிக்கொண்டு போறாரா?

இல்லே காதிலே ஏதாவது ஓதறாரா?

நீ அவரையும் உன்னை மாதிரி உடம்புன்னு கற்பனை பண்ணிக்கறே.

நீ உன்னை உடம்புன்னு நினைக்கறதாலே... அவரையும் உடம்புன்னு நினைக்கற உன்னை ஏதோ செய்யப் போறார்ன்னு நினைக்கறே. அவரோட வேலை எல்லாம் உள்ளே.

**கே: குரு எப்படி ஒருத்தருக்கு கிடைக்கறார்.**

ப: எங்கும் நீக்கமற நிறைந்து இருக்கற இறைவன் கருணையிலே, தன் பிரிய பக்தனுக்காக... தன்னைத் தன் பக்தனோட தரத்துக்கு வெளிப்படுத்தறார். பக்தன் தன்னை உடம்பாவும், ஒரு உடம்போட தனக்கு ஒரு உறவு... பிரியம் செலுத்த வேணும்ன்னு நினைக்கறான். ஆனா குரு உண்மையிலேயே ஆத்மாவே. இறைவனே வடிவுகொண்டு உலவறது. பக்தனுக்கு உள்ளேயிருந்து வேலை பாக்கறது. அவனோட தவறான பார்வையை சரிபண்ணி... சரியான பாதையிலே அவனை நடத்தி.... ஆத்மாவிலேயே சேத்துடறது.

அப்படி ஆத்மாவிலே சேந்ததுக்கு அப்புறம் சிஷ்யன் என்ன சொல்றான்... 'முன்னாடி ரொம்ப துக்கத்திலே இருந்தேன். நான் எப்பவுமே ஆத்மாதான். துக்கத்திலே இருந்தப்போவும்... இதேதான் நான். ஆனா இப்போ துக்கமெல்லாம் எங்கே போச்சுன்னு தெரியலே, யார் துக்கப்பட்டதுன்னு இப்போ தேடினா... அவனைக் காணவே காணோம்'. இப்படி குரு வெளியே இருந்து உள்ளே தள்ளியும், உள்ளே இருந்து உள்ளே இழுத்தும் அவனை ஹிருதயத்திலேயே இருத்திடறார்.

தூங்கும்போது உள்ளேதான் இருக்கோம். விழிச்சவுடனே மனம் கிளம்பிடறது. அது இதுன்னு போட்டுப் பிராண்டறது. அதை நிறுத்தணும். உள்ளேயும் வெளியேவும் வேலை பாக்கறவனாலேதான் அது முடியும். அவனை உடம்போட சம்பந்தப் படுத்தலாமா?

நாம என்ன நினைக்கறோம்... உலகத்திலே எதுவேணா செஞ்சுடலாம். உலகத்தையே வெல்லலாம்ன்னு நினைக்கறோம். போராடி தோத்துப்போய் உண்முகமாவோம். நம்மள விட மேலான சக்தி ஒண்ணு இருக்குன்னு ஒத்துப்போம். அதைத் தெரிஞ்சுப்போம். அகந்தை மிகப் பலமான யானை. சிங்கத்தைத் தவிர வேறு எதனாலேயும் அதை வழிக்குக் கொண்டு வர முடியாது. இங்கு குருதான் சிங்கம். அவனோட ஒரே பார்வை யானையை நடுநடுங்க வைக்கும். கொன்னுடும்.

நம்மளோட அழிவிலேதான் நம்ம சிறப்பு இருக்குன்னு இப்போ தெரியாது. பின்னாடி காலப் போக்குலே தெரியும். அந்த நிலை அடையறதுக்குத்தான் ஒருத்தன் சரணடையணும். 'இறைவா நீயே என் அடைக்கலம். காப்பாத்து'ன்னு கத்தணும். அப்போதான் குரு பார்ப்பான். இவன் பக்குவமாயிட்டான். அவனைக் காப்பாத்த வேண்டியதுதான்னு கொன்னுடுவான்.

**கே: ஆத்ம சமர்ப்பணம்ன்னா என்ன?**

**ப:** மனம் கட்டுப்படறதுதான். அகந்தை நசியறதுதான். எப்போ நசியும்ன்னா... ஸம்ஸ்காரங்களெல்லாம் போச்சுன்னா நசியும். அகந்தை அதைவிட பெரிய சக்திகிட்டே சரணடைஞ்சுடும். பெரிய சக்தின்னு அதுக்குத் தெரியணுமில்லையா... அப்படித் தெரிஞ்சுக்கறதுதான் ஆத்ம ஸமர்ப்பணம்... ஒப்படைக்கறது... அகந்தை நாசம். அது தெரியலேன்னா... அகந்தை கோபுரம் தாங்கும் பொம்மை மாதிரியே முகத்தைக் கஷ்டத்தோடு தன் தோள்லே கோபுரத்தைத் தாங்கிக்கொண்டு இருக்கற மாதிரி காட்டிக்கொண்டு இருக்கும்.

**கே: கட்டுப்படாத மனத்தை எப்படி கட்டுப்படுத்தறது?**

**ப:** ஒண்ணு அதோட மூலத்தைப் பார். அது இருக்காது; மறைஞ்சுடும். இல்லே சரணடைஞ்சுடு! ஒரேடியா போயிடும்.

**கே: ஆனா கட்டு விட்டு போயிடுதே?**

**ப:** அப்படித்தான் போகும். அதைப் பத்தி நினைக்காதே! மனதை இல்லாம பண்றது ஒண்ணும் நம்மளோட பிறப்பு உரிமை இல்லை. அதை இடைவிடாம போராடறவாதான் அடைஞ்சுருக்கா.

டிரெயின்லே போற ஒருத்தன் சுமையைக் கீழே இறக்கி வைப்பானா... இல்லை தலையிலேயே தூக்கி வச்சிருப்பானா?

அதே மாதிரிதான் நம்மள ஒப்படைச்சிடணும்.

**கே: விவேகானந்தர், குரு, சிஷ்யனுக்கு தன்னிடம் இருக்கற ஆன்ம சக்தியை மாத்தி விடுறார்ன்னு சொல்றாரே?**

ப: ஆன்ம சக்தி அப்படி மாத்தி விடற மாதிரியான பொருளா?

மாத்தி விடறதுன்னா... சிஷ்யன்கற தனித்தன்மையை அழிக்கறதுதான். அதைத்தான் குரு பண்றார். அதுக்காக ஏதோ ஒருகாலத்திலே சிஷ்யன் வேற மாதிரி இருந்ததாகவும்... இப்போ அவன் ஏதோ ஒண்ணா ஆகப்போறதும் இல்லை.

**கே: அருளை குருவோட பரிசுன்னு சொல்லலாமா?**

ப: குரு, ஆத்மா, கடவுள், அருள் எல்லாம் ஒண்ணுதான். எப்பவும் மாறாம இருக்கறது ஆத்மா. அது ஏற்கனவே உன்கிட்டே இல்லையா?

அதைக் குரு கண்ணிலே நயன தீட்சையிலேதான் தரணுமா? அப்படி நிறைய தீட்சை இருக்கு... ஹஸ்த தீட்சை, மனோதீட்சை, ஸ்பர்சதீட்சை, சக்ஷு தீட்சை மேலும்... குரு, நெருப்பு எல்லாம் வளர்த்து, தன்னை வச்சு ஜபம், மந்திரம் எல்லாம் சொல்லி ஏதோ செய்றதை தீட்சைன்னு சொல்றா. ஏன்னா... அப்போதான் சிஷ்யன் பக்குவனாவானாம்.

ஆசாமி யாருன்னு தேடினா ஆசாமி இருக்க மாட்டான். சாமிதான் இருக்கும். அப்படித்தான் குரு. அப்படித்தான் தட்சிணாமூர்த்தி. அவர் என்ன செஞ்சார்?

மௌனமாயிருந்தார். சிஷ்யர்கள் அவர் முன்னாடி தோன்றினா. அவர் கண்டுக்கலே. மௌனமாவே இருந்தார்; சிஷ்யர்களோட சந்தேகம் எல்லாம் போயிடுத்து. அப்படின்னா... ஆசாமி போயிட்டான். அதுதான் ஞானம். தீட்சைன்னு சொல்ற இதெல்லாம் இல்லை.

மௌனம்தான் சிறந்த தீட்சை. சாஸ்திரங்கள் எவ்வளவு சிறப்பா நிறைய சமுத்திரம் மாதிரி இருந்தாலும் அதெல்லாம் பலன் தராது. குரு மௌனமாயிருக்க எல்லோரும் அடங்கிடுவா. இந்தக்கேள்வியை ஏன் கேக்கறேள்ன்னா இங்கேயே நிறைய நாள் இருந்து நிறைய கேட்டுட்டேள். ஆனாலும் ஒண்ணும் நடக்கலேன்னு நினைக்கறேள். உள்ளே நடக்கற வேலை வெளியே தெரியாது. குரு உண்மையிலேயே உள்ளேதான் இருக்கார்.

பகவத் கீதையும் அதையே வேற மாதிரி சொல்றது, 'நாம இரண்டு பேரும் இப்போ வரலே; எப்பவுமே இருக்கோம்ன்னு.

**கே: குரு ஸ்தூல வடிவம் எடுக்கமாட்டாரா?**

ப: ஸ்தூலம்ன்னா என்ன?

நீ உன்னை உடம்பாப் பாக்கறதுனாலே இப்படிக் கேக்கறே. நீ யார்ன்னு பார்! உடம்பா நீ? கீதை 'பரம் பாவம் அஞ்ஞானதா'ங்கறது. என்னோட உண்மையான இயல்பைப் புரியாதவன் அஞ்ஞானத்தாலே மயங்கிய முட்டாள்.

(399) *போஸ் கேட்டார்.*

**கே: கனவுக்கும் நனவுக்கும் ஏதாவது வித்தியாசம் இருக்கா?**

ப: விழிப்பைக் காட்டிலும் கனவு கொஞ்ச நேரத்திலேயே முடிஞ்சுடுறதுன்னு நீங்க நினைக்கறதனாலே வித்தியாசம் இருக்குன்னு சொல்றா.

உண்மையிலேயே வித்தியாசம் இல்லை. இருக்கற மாதிரி தெரியறது.

**கே: உலகம்கறது ஏற்கனவே இருக்கு. அதிலே விழிப்பு நிலை ஏற்படுதா?**

**இல்லை விழிப்பு நிலையிலே உலகம் ஏற்படுதா?**

ப: நீங்க இல்லாமே உலகம் ஏற்கனவே இருக்குன்னா... அது சொல்லணுமே, 'நான் இருக்கேன்னு. உலகம் சொல்லுமா! ஒரு மாடு உங்க முன்னாடி போறது... அது, 'நான் போறேன்னு சொல்றதா... இல்லே. நீங்க மாடு போறதுன்னு சொல்றேளா... இங்கே பாக்கறவன் இருக்கறதனாலேதான் பாக்கப்படுவது இருக்கு.

**கே: கௌடபாதர் இரண்டு நிலைக்கும் வித்தியாசம் இல்லைன்னு பரமார்த்த சத்யத்துல இருந்துதான் சொல்றார்.**

ப: இல்லே.

**கே: பகவானும் அப்படித்தான் சொல்றீங்கன்னு நான் நினைக்கறேன். Dr.ராதா கிருஷ்ணன் அவரோட Indian Philosophy-ல, ஆதிசங்கரர் தன்னோட பிரம்ம சூத்திர உரையில இரண்டு நிலையும் வேற வேறங்கறார்ன்னு சொல்றார். அது உண்மையா? அது உண்மைன்னா அது என்ன?**

ப: மனசுக்கு வேணா... வித்தியாசம் இருக்கும் பரமார்த்த சத்யத்துக்கு எப்படி வித்தியாசம் இருக்கும்?

விழிச்சவன்தான் கனவுங்கறான். பரமார்த்தத்திலே இரண்டும் பொய்.

**கே: சுத்த அத்வைதத்துலே பரிணாமம் சிருஷ்டி அல்லது தோற்றம் இதுக்கெல்லாம் இடமிருக்கா? விவர்த்தம்... பிரம்மம்தான் தன்னோட உண்மையை மறக்காம உலகமா தோன்றுது... எப்படிக் கயிறு பாம்பாத் தோன்றுதோ... அப்படின்னு சொல்றது. அது என்ன?**

ப: இதெல்லாம் உலகம் உண்மை கிடையாதுன்னு தெரிஞ்சுக்கறதுக்கு இருக்கற வேற வேற முறைகள்.

உலகம் ஒரு கனவுன்னு சொல்றதும் அதிலே ஒண்ணு.

கனவு, நனவு, துயில்ன்னு மூணு நிலையைப்பத்தி விளக்கமா பேசறது அதோட ஆதாரமா இருக்கற சத்யத்தைத் தெரிஞ்சுக்கறதுக்குத்தான். அந்த நிலைகளோட தன்மையைப் பத்தி தெரிஞ்சுக்கறதுக்கு இல்லை. நோக்கம் பிறழ்ந்து விடக் கூடாது.

**கே: உலகம் பொய்ன்னு சொல்றாங்களே, எந்த அளவுக்கு அது பொய்?**

ப: மலடி மகன் எந்த அளவுக்குப் பொய்யோ; வார்த்தை மாத்ரமோ; சப்தமாத்ரமோ; அந்த அளவுக்கு.

இப்போ ஒரு கேள்வி.... அந்த அளவுக்குத்தான் பொய்யா?

ஆனா உலகம் அனுபவமாறதே!. அது சப்தமாத்திரமா இல்லே. அப்போ பதில்... அது உள்ளதிலே ஆரோபம். (Super

Imposition). அதாவது... கயிறு பாம்பாத் தெரியறது. அதிலேயும் ஆப்தன் கயிறுன்னு காட்டிக்கொடுத்த உடனே தவறான பாம்புத் தோற்றம் போயிடறது. ஆனா உலகத் தோற்றம் அது பொய்ன்னு தெரிஞ்ச பிறகும் போக மாட்டேங்கறதே! எப்படி? திரும்பவும் கானல் ஜலம் உதாரணம். கானல் ஜலம்ன்னு தெரிஞ்ச பிறகும்... ஜலம் தெரியும். அப்படித்தான். உலகம் அது பொய்ன்னு தெரிஞ்ச பிறகும் அதோட தோற்றம் இருந்துகொண்டேயிருக்கும்.

ஆனா கானல் ஜலத்தை... அது கானல் ஜலம்ன்னு தெரிஞ்ச உடனே, யாரும் தாகத்துக்குக் குடிக்கறது இல்லே.

உலகத்தோற்றத்திலே அப்படி இல்லை. அதைப் பொய்ன்னு தெரிஞ்ச பிறகும் சாப்பிடறோம்... வேலை பாக்கறோம்... எல்லாம் பண்றோம். கனவு தாகத்தை கனவு ஜலம் தீக்கற மாதிரி, இங்கேயும் பொருட்கள் இருக்கு... தேவையும் இருக்கு... தீத்துக்கறோம். கனவு உலகமும் இந்த உலகம் மாதிரியேதான் உபயோகத்தோட இருக்கு... ஆனா அதைப் பொய்ங்கறோம்.

இந்த எல்லா உதாரணங்களாலே பொய் எப்படித் தரவாரியா இருக்குன்னு தெரிஞ்சுக்கறோம்.

உண்மையை உணர்ந்த ஞானி முடிவா என்ன சொல்றான். எப்பவும் இருக்கற நிலையிலே இருந்து இந்த விழிப்பு நிலையும் பொய்யே! எப்படி விழிப்பு நிலையிலே இருந்து கனவுநிலை பொய்ன்னு சொல்றோமோ... அப்படி.

இந்த ஒவ்வொரு விளக்கமும் சரியா புரிஞ்சுக்கப்படணும். அந்தந்த விஷயத்தை அது அது விளக்கும். தனியா ஒண்ண மட்டும் எடுத்துக்கக்கூடாது. சங்கிலி மாதிரி ஒண்ணோட ஒண்ணு தொடர்ச்சி. இதோட நோக்கம் உண்மையைத் தேடறவன் மனசை இதுக்கெல்லாம் ஆதாரமாயிருக்கற சத்தியத்தைத் தெரிஞ்சுக்க வைக்கத்தான். இந்த நிலைகளை ஆராய்ச்சி பண்றதுக்கு இல்லை.

**கே: Dr. இராதாகிருஷ்ணன் சங்கரருக்கும் கௌடபாதருக்கும் வித்தியாசம் இருக்குன்னு நம்மள நம்ப வைக்கறார்.**

**ப:** அவர் கற்பனையிலேதான் இருக்கு.

டாக்டர் இராதாகிருஷ்ணன் எழுதியது வாசிக்கப்பட்டது.

ப: ஏற்கனவே சொன்னதுதான். இந்த சாஸ்திரங்கள், தத்துவங்களோட நோக்கம் ஆதார சத்தியத்தை சுட்டி காட்டறதுதான்.

கனவு, நனவு, துயிலா இருக்கட்டும்... இல்லே ஜீவன், ஈஸ்வரன், ஜகமாயிருக்கட்டும்... மூணு பார்வைதான் இங்கே இருக்க முடியும்.

**1.விவகார ஸத்யம்:-**

ஒருத்தன் உலகத்திலே பலவிதமா பல விஷயம் இருக்கறதைப் பாக்கறான். இதை எல்லாம் ஒருத்தர் படைச்சார்ன்னு நினைக்கறான். அவனையும், அவர்தான் படைச்சார்ன்னு நினைக்கறான்.

இதை மூணு அடிப்படைக்குக் கொண்டு வந்துடலாம்.

ஜகத் ஜீவன் ஈஸ்வரன்.

அவன் என்ன பண்றான்... ஈஸ்வரனை அடைஞ்சா நாமளும் அமரத்துவம் பெறலாம்ன்னு முயற்சி பண்றான். அப்படி அவன் முக்தி அடைஞ்சுட்டான்னா மத்தவா எல்லாம் இருக்காளே! அவா எல்லாம்.... அவாவா முக்தியை அவாவாளே பாத்துக்கணும். அவன் ஒரு விதமா எல்லாத்திலேயும் ஒரே உண்மைதான் இருக்குன்னு ஒத்துக்கறான். இந்தத் தோற்றம், மாயையோட விளையாட்டுங்கறான். மாயை ஈஸ்வரனோட சக்திங்கறான். மத்த ஜீவர்களும் உலகமும் இருக்கறது அவனோட அத்வைதத்துக்கு முரணா இல்லே.

**2. பிராதி பாசிக ஸத்யம்:-**

ஜகத், ஜீவன், ஈஸ்வரன் மூணையும் ஒருத்தன்தான் பாக்கறான். பாக்கறவன் இல்லாமே மூணும் இல்லை. ஒரே ஜீவன்தான் இங்கே இருக்கான். அவன் சிவனோ... ஜீவனோ...ஏகப்பட்ட ஜீவர்கள் இல்லை. எல்லாம் சும்மா கதை.

**3. பரமார்த்த ஸத்யம்:-**

அஜாதவாதம்.... இரண்டாவதை ஒத்துக்கறதே இல்லை. ஜகத், ஜீவன், ஈஸ்வரன்... இது மூணும் எந்தக் காலத்திலேயும் இல்லை. உலகம்ன்னு ஒண்ணு தோன்றவே இல்லை. மறையவே

இல்லை. ஜீவர்கள் கிடையாது. முக்தி கிடையாது. பந்தம் கிடையாது. முக்திக்கு முயல்றவனும் கிடையாது.

ஒரு கேள்விவர்றது... அப்போ... ஏன் எல்லா சாஸ்திரங்களும் ஈஸ்வரனைப் படைப்பவர்ன்னு சொல்றது? அவராலேயே படைக்கப்பட்டு அவரையே நான்தான் படைச்சேன்.... உலகத்தை நான்தான் படைச்சேன்... என்னையும் நான்தான் படைச்சேன்னு சொல்றது... கொஞ்சமாவது நியாயமா?

இதெல்லாம் அநியாயத்துலேயும் அநியாயங்கறா.

அதுக்குப் பதில் என்னன்னா.... இப்போ உங்களோட அப்பா, அம்மா செத்துட்டான்னு உங்களுக்குத் தெரியும். அவா செத்துப் பல வருஷம் ஆயிடுத்து. இப்போ அவாளைக் கனவிலே பாக்கறேள்... பாத்த உடனே அப்பா, அம்மாங்கறேள்... நீங்க யார் மூலமா பிறந்தேளோ.... யார் உங்களுக்கு உடம்பு கொடுத்தாளோ... அதாவது உங்களைப் படைச்சவா... நீங்க படைச்ச படைப்பான கனவுக்குள்ளேதான் இருக்கா.

இன்னொரு கனவிலே... ஒரு ராஜாகிட்டே நீங்க மந்திரியா இருக்கேள்னு வைங்கோ. விழிச்சவுடன் என்ன ஆச்சு?

எல்லாம் போயிடுத்து, உங்களை மட்டும் விட்டுட்டு இதெல்லாம் எங்கே போச்சு?

உங்களுக்குள்ளேதான். இது எல்லாத்துக்கும் பொருந்தும்.

**கே: விவகாரத்துலே மாயை எப்படி வருது?**

ப: மாயை ஈஸ்வரனோட சக்தி.

**கே: ஏன் தொழில்படுது? ஏன் வருது?**

ப: இந்தக் கேள்வி எப்படி வரும்?

நீங்களே அதிலேதான் இருக்கேள்... அதிலே இருந்து வெளியே இருந்தா... அது எப்படி வர்றதுன்னு கேக்கமுடியும்.

எல்லா சந்தேகமும் போறதுக்கு... அதேதான் இந்த கேள்வியைக் கேட்டுக்கறது.

**கே: கனவு உலகத்துலே கிடைக்கறது இங்கே உபயோகப் படலையே?**

**அது பிரயோஜனம் இல்லை.**

ப: இல்லை. அது கனவு தாகத்தைத் தீர்க்கறது. கனவிலே தவிக்கறதை கனவு ஜலம்தான் தீக்கும். வீட்டுலே குடத்திலே எவ்வளவு ஜலம் இருந்தாலும் தீக்காது.

**கே: நம்ம கனவை விழிப்புலே ஞாபகப்படுத்திக்கறோம். ஏன் கனவிலே விழிப்பை ஞாபகப்படுத்த மாட்டேங்கிறோம்?**

ப: திரும்பவும் தப்பு. கனவிலே இப்போ இருக்கறவனாத்தான் உங்களை நினைக்கறேள்

**கே: ஆனா கனவு கண்டுகொண்டு இருக்கோம்னு தெரிய மாட்டேங்குதே!**

ப: கனவு... தூக்கமும், விழிப்பும் கலந்தது. விழிப்பிலே இருக்கற ஸம்ஸ்காரங்களாலே ஏற்படறது. அதனாலேதான் கனவை ஞாபகப்படுத்திக்கறோம். கனவு ஸமஸ்காரங்களாலே விழிப்பு ஏற்படறது இல்லே. அதனாலேதான் கனவையும் விழிப்பையும் ஒரே நேரத்திலே தெரிஞ்சுக்க முடியலே. ஆனாலும் விழிப்போட அம்சம் கனவிலே கொஞ்சம் கொஞ்சம் இருக்கும். 'நான் கனவு காண்றேனா இல்லே.... விழித்துக்கொண்டு இருக்கேனான்னு ஆச்சர்யப்படறோம். இல்லை... விழித்துக்கொண்டுதான் இருக்கேன்னு அதைத் தொடர்கிறோம். உண்மையிலேயே விழிக்கும்போது எல்லாம் கனவுதான்னு தெரியும்.



**உள்ளது நாற்பது முதல் சில பாடல்களுக்கு பகவான் கொடுத்த விளக்கம்.**

1 மங்கல வெண்பா

> **'உள்ளதல துள்ளவுணர் வுள்ளதோ வுள்ளபொரு**
> **ளுள்ளலற வுள்ளத்தே யுள்ளதா — லுள்ளமெனு**
> **முள்ளபொரு ளுள்ளலெவ னுள்ளத்தே யுள்ளபடி**
> **யுள்ளதே யுள்ள லுணர்'.**

நாம இருக்கறதேதான் அறிவு. நாம இருக்கறதேதான் ஹிருதயம். அப்போ நாம இருக்கறதை எப்படித் தியானம் பண்ண முடியும். நாம இருக்கறதுக்கு அன்னியமா தியானிக்கற அறிவு இல்லாததாலே... அதைத் தியானிக்க முடியாதுன்னு சும்மா இருக்கறதுதான்.... அதைத் தியானிக்கறது.

இது நிர்குணபிரம்மத்தைக் குறிக்கறது.

2 வது மங்கல வெண்பா

**'மரணபய மிக்குளவம் மக்களர ணாக**
**மரணபவ மில்லா மகேசன் - சரணமே**
**சார்வர்தஞ் சார்வொடுதாம் சாவுற்றார்**
**சாவெண்ணஞ் சார்வரோ சாவா தவர்'.**

இது சகுண பிரம்மத்தை... ஈஸ்வரனைக் குறிக்கறது. முதல் பாட்டுலே சும்மாயிருக்கறதைச் சொல்லியாச்சு. இதிலே ஈஸ்வரனுக்கு சரணடையறதைச் சொல்றது.

இந்த இரண்டாவது மங்கல வெண்பா....

இந்த நூலுக்கு அதிகாரி யார்?

இதிலே உள்ள பொருள் எதைப் பத்தி?

இதிலே அதோட சம்பந்தம் என்ன?

இந்த நூலோட பயனைப்பத்தி எல்லாம் இருக்கு.

அதிகாரின்னா இந்த நூல்லே இருக்கற விஷயத்துக்குப் பக்குவமானவன் யார்? அது என்ன பக்குவம்?

பக்குவம்னா... உலகத்திலே வைராக்கியமும், விடுபடறதுக்கான மோக்ஷ இச்சையுந்தான்.

எல்லோருக்கும் என்னைக்காவது ஒரு நாள் சாவோம்ன்னு தெரியும். ஆனா அதை ஆழ்ந்து சிந்திக்க மாட்டா. எல்லோருக்கும் மரணபயம் இருக்கு. ஆனா தாற்காலிகமா இருக்கு. ஏன் மரணத்துக்குப் பயப்படணும்? நான் உடம்புங்கற நினைப்பினாலேதான். எல்லோருக்கும் உடம்பு மரிக்கும்ன்னு தெரியும். அதை எரிப்பான்னும் தெரியும். செத்தா உடம்பு இருக்காதுன்னு தெரியும். நான் இந்த உடம்புங்கற நினைப்பினாலே மரணத்தைத் தன்னோட இழப்பாவே பாக்கறோம். பிறப்பும், இறப்பும் உடம்புக்குத்தான். அதை

ஆத்மாமேலே ஏத்திக்கறோம். அதனாலே மயங்கி... நாமளே பிறக்கறோம்... நாமளே இறக்கறோம்ன்னு நினைக்கறோம். இந்தப் பிறப்பு இறப்புச் சுழல்லே இருந்து காப்பாத்த பரம்பொருளையே நாடறோம். இப்படியே இறைவன் மேலே நம்பிக்கையும், பக்தியும் வர்றது.

சரி...... இறைவனை எப்படி வணங்கறது?

இறைவன் சர்வ சக்தி உடையது. அதை எப்படி அணுகறது? அதுகிட்டேயே நம்மள ஒப்படைச்சுடறதுதான் வழி நமக்கு. சம்பூர்ண சரணாகதியே ஒரே வழி. அதனாலே அவன் இறைவனிடம் சரணடையறான். சரணடையறதுன்னா... தன்னையும்தன்னோடஉடைமைப்பொருளையும்இறைவனோட கருணைக்கே விட்டுடறது. பிறந்தது இறக்கும். இந்த உடம்பை இறைவன்கிட்டே ஒப்படைச்சிடறதாலே நாம அதைப்பத்திக் கவலைப்படத் தேவையில்லே. இப்போ பிறப்பும் இறப்பும் பயமுறுத்தாது. உடம்பு நம்மளோடதுங்கற நினைப்புதான் பயத்துக்குக் காரணம். அதை ஒப்படைச்சுட்டதாலே அது நம்மளோடது இல்லே... நாம ஏன் பயப்படணும்? அல்லது பயப்பட ஆள் இல்லே. அதனாலே ஆத்மஞானமும் ஆனந்தமும் ஏற்படறது. இதுதான் இதோட பொருள்.

துக்க நிவிர்த்தியும் சுகப்பிரப்தியும் அடையப்படறது. இதுவே அடைய வேண்டியது. எல்லாத்திலேயும் உயர்ந்தது. சரணடையறதே ஆனந்தம். இதுவே இதோட பொருள்.

இப்பொருளைநன்றாகமனனம்பண்ணிஎப்பவும்இங்கேயே இப்போவே இருக்கற ஞானத்தைத் தெரிஞ்சுக்கறதுதான் பலன். இந்தப் பாட்டு 'சாவாதவர்'ன்னு முடியறது. அதுவே பலன்.



**யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: எனக்கு ஞானம் வேணும்...**

ப: யாருக்கு ஞானம் வேணும்?

**கே: நான்தான் வேணுங்கறேன்.**

ப: யார் இந்த 'நான்'? அதைக் கண்டுபிடிங்கோ. அப்புறம் வேற ஏதாவது இருந்தா பாக்கலாம்.

(401) *கிருஷ்ணமூர்த்தி, ஆந்திராக்காரர் கேட்டார்.*

**கே: தபஸ் பண்ணும்போது நம்ம பார்வையை எதிலே நிறுத்தணும்?**
**மனம் நாம ஜபிக்கறதிலே நிக்கறது.**

ப: எதுக்கு தபஸ்?

**கே: ஆத்ம ஞானத்துக்கு.**

ப: சரி. தபஸ் பக்குவத்தைப் பொறுத்தது.

ஒருத்தருக்கு உருவம் வேணும். ஆனா.... அது பத்தாது. எப்பவும் உருவத்தைப் பாத்துக்கொண்டேயிருக்க முடியுமா?

உருவத்தை நாமத்திலே கொண்டு வந்துடறான். அதுதான் ஜபம். ஜபம் தன்னை மட்டுமில்லாமல் மனசையும் உருவத்திலேயே வச்சிருக்கும். அதோட விளைவு மனசோட ஏகாக்கிரம். அது ஆத்ம ஞானத்திலே முடிஞ்சுடும். எதை நினைக்கறோமோ... அதாவே ஆயிடுவோம். சிலர் நாமத்திலேயே திருப்தியாயிடுவா. எல்லா ரூபமும் நாமத்தோடேதான் இருக்கு. அதனாலே நாமத்திலே எல்லாம் அடங்கிடும். இடைவிடாத ஜபம் எல்லா நினைப்பையும் போக்கி மனசை ஏகாக்கிரமாக்கிடும். அதுதான் தபஸ். ஏகாக்கிரமே தபஸ்க்கு வேணும்.

எதுக்காக தபஸ்னு கேட்டது... அதோட நோக்கத்தைத் தெரிஞ்சுக்கறதுக்காக! எதுக்காகப் பண்றோமோ, அதோட உருவத்தை எடுத்துக்கும்.

**கே: விரதம் இருக்கறது இதுவும் தபஸ்தானே!**

ப: ஒரு விதத்திலே.... அது வைராக்கியத்தாலே.

ஜபம் ஆந்திரமாவோ, பாஹ்யமாவோ இருக்கலாம். இரண்டுமாவும் இருக்கலாம். ஜபம், உருவத்தை உபாஸிக்கறதை விடச் சிறந்தது. அது முயற்சியிலே ஆரம்பிச்சு, முயற்சி இல்லாமே நடக்கற வரைக்கும் செய்யணும். ஜபம் முயற்சி இல்லாமே நடந்ததுன்னா அதுதான் ஞானம்.

**கே: ஜபம் வேலை பாக்கறப்பவும் பண்ணலாமா?**

ப: இருக்கறது ஒண்ணுதான். அதை எந்த விதத்திலேயும் அனுபவிக்கலாம். ஜபமோ, மந்திரமோ, விசாரமோ இதெல்லாம் 'இருக்கறது'லேயே முடிஞ்சுடும். இல்லாததை விரட்டறதுக்கு நாம செய்யற முயற்சிதான் பக்தி, விசாரம், ஜபம் எல்லாம். இல்லாதது இப்போ இருக்கற மாதிரி இருக்கு. அதிலே ஒரு மோகம் இருக்கு. இருக்கறது நம்மளோட ஸ்வபாவம். நம்மளோட முயற்சி எல்லாம், அதைத் தடுக்கறதைப் போக்கறதுக்குத்தான்.

நாம ஏதோ இறைவனையோ, ஆத்மாவையோ, எந்த நேரமும் நினைக்கறதனாலேயே அது சாதிக்கப்படறதுன்னு நம்பறோம். உண்மையிலேயே நாம இறைவனை நினைக்கலே. அதை மறைக்கற நினைப்பைத் தடுக்கறோம். தியானமோ, விசாரமோ நம்மளோட ஸ்வபாவத்துக்குத் திரும்பறதுதான்.

**கே: எங்களோட முயற்சி கண்டிப்பா வெற்றி அடையுமா?**

ப: ஆத்ம ஞானம்தான் நம்மளோட ஸ்வபாவம். அது புதுசா அடையப்படறது இல்லை. புதுசா வந்தா போயிடும். அது எப்பவும் இருக்கற உண்மையா இருக்காது. அதனாலே முயற்சி வெற்றியா தோல்வியாங்கற கேள்விக்கே இடம் இல்லை.



(402&403) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: வாசனைகள் எங்கே இருக்கு ஹிருதயத்துலேயா ஸஹஸ்ராரத்துலேயா?**

ப: வாசனைகள் ஹிருதயத்திலே இல்லாமே, சஹஸ்ராரத்திலேதான் இருக்குன்னா, தலையை வெட்டிட்டாலே போதுமே... பிறப்பு எல்லாம் போயிடும். அப்படி இல்லை. எப்படி கஞ்சன் பணத்தை யார்கிட்டேயும் தரமாட்டானோ... அவனிடமே பத்திரமா வச்சுப்பானோ... அப்படியே ஆத்மா வாசனைகளை ரொம்பப் பத்திரமா அதுகிட்டேயே வச்சிருக்கும். வாசனைகளோட இருப்பிடம் ஆத்மாவே; ஹிருதயமே, சஹஸ்ராரம், தியேட்டர், வாசனைகளைப் படம் போடற தியேட்டர்.

**கே: பகவானோட சில சீடர்கள் அவரோட மார்பிலே கை வச்சு ஹிருதயத்தை.... ஸ்புரணத்தை உணர்ந்ததா சொல்றாங்களே! உண்மையா?**

ப: ஆமாம்.

**கே: ஹிருதயம் வலதுபக்கம், இடதுபக்கம், நடுவில இப்படின்னு பலபேர், பலவிதமா சொன்னா, நான் எப்படி ஹிருதயத்திலே தியானம் பண்றது?**

ப: நீ இருக்கேல்லியா... அது தெரியறதில்லையா... நீ நீயாவே உன்கிட்டேயே இருக்கறதுதான்... தியானம். தியானம் நீ எங்கே இருக்கியோ... அங்கேயே நடக்கும். உனக்கு வெளியே நடக்காது. நீதான் உன் தியானத்தோட மையம். அதுதான் ஹிருதயம்.

அதை ஏன் ஒரு இடத்திலே குறிக்கறோம்னா... உடம்பை வச்சுதான் குறிக்கறோம். நீயிருக்கேன்னு... உனக்குத் தெரியும்.

எங்கே இருக்கே?

உடம்பிலே இருக்கே. உடம்புக்கு வெளியே இல்லே. ஆனா உடம்பு பூராவும் இல்லே. உடம்பு பூராவும் நீ இருந்தாலும்... நீ ஏதோ ஒரு இடத்திலே இருந்துதான் நினைக்கறே. உன்னோட நினைப்பெல்லாம் அங்கிருந்தே வர்றது. அங்கேயே அடங்கறது. நினைப்பு கால்லே இருந்தா வர்றது? காலை வெட்டிட்டாலும் நீ இருக்கே... நினைக்கறே. அதனாலே நம்மயிருப்போட மையமா

ஒரு இடத்தை ஒத்துக்க வேண்டியதா இருக்கு. அதுதான் ஹிருதயம். அது மையம் மட்டுமில்லே; அதுதான் ஆத்மா. ஹிருதயத்துக்கு இன்னொரு பெயர்தான் ஆத்மா.

சாஸ்திரங்கள் சந்தேகமில்லாமே 101 நாடிகளோட மூலம்தான் ஹிருதயம்ன்னு சொல்றது. யோக வாஷிஷ்டம் குண்டலினி 101 நாடிகள் கொண்டதுன்னு சொல்றது. ஹிருதயம் கற்பனை கிடையாது. தியானிக்கக் கூடிய ஸ்தானமும் கிடையாது. தியானத்தோட ஸ்தானம். ஆத்மா மாத்ரமா இருக்கு. அதிலேயே உடம்பு உலகம் எல்லாம் இருக்கு. அதிலே இருந்து வெளியேன்னு எதுவும் இல்லே. எல்லா முயற்சியும் அங்கேயேதான் இருக்கு.

ஹிருதயம்தான் ஆரம்பம், நடு, முடிவு எல்லாம்.

**கே: வைராக்கியம் எவ்வளவுக்கு அவசியம்**

ப: அகந்தையோடு கூடிய வைராக்யம் பிரயோஜனம் இல்லே. அகந்தை இல்லாமே, என்ன இருந்தாலும் ஒண்ணும் இல்லே.

(405) **ஒருத்தர் ஸ்ரீ சக்கரத்தைப் பத்திக் கேட்டார்.**

ப: அது ரொம்ப ஆழ்ந்த அர்த்தம் பொருந்தியது.

(406) **எஸ்.எஸ். கோஹன் கேட்டார்.**

**கே: ஆந்திர பாஹ்ய சமாதின்னா என்ன?**

ப: உலகத்தைப் பாத்துக்கொண்டு இருக்கும்போதே உள்ளே மனசு சலனமில்லாமே உண்மையிலே பதிஞ்சு இருந்தா... அதுதான் பாஹ்ய சமாதி. அலையற்ற கடல் மாதிரி மனசு சும்மாயிருக்கணும்.

உலகத்தைக் கவனிக்காமே உடல் உணர்வு இல்லேன்னா ஆந்திர சமாதி.

**கே: சகஜசமாதி வர்றதுக்கு உடலுணர்வு போகணுமா?**

ப: விசாரம் பண்ணுங்கோ. உடல் உணர்வுன்னா என்ன?

ஒரு உடம்பு இருக்கணும்; அதிலே உணர்வு உடலளவா இருக்கணும்; அதுதான் உடல் உணர்வு. இதெல்லாம் ஒரு உணர்வு மேலேதான் இருக்கு. அதுதான் ஸத்யம்; பாதிக்கப்படாதது. அதைப் பிடிச்சுக்கோங்கோ. அதுதான் சமாதி. அது உடலுணர்வு இல்லாதப்போதான் இருக்கும். ஏன்னா... உடலுணர்வை தாண்டிதான் சமாதி இருக்கு.

உடலுணர்வு இருக்கறப்ப மையம் இருக்கு. அது எப்பவும் இருக்கு. உடல் உணர்வு இருந்தா என்ன...! இல்லேன்னா என்ன!

இல்லேன்னா... ஆந்திரம்.

இருந்தா... பாஹ்யம்.

இது ரெண்டும் தெரிஞ்சா... சகஜம்.

**கே: மனம் ஒரு நிமிஷம் கூட சமாதியில இருக்க மாட்டேங்குது.**

ப: தோற்றம் மனம்... கடக்கணும்னா 'நான் ஆத்மா'ங்கற திட நிச்சயம் வேணும்.

**கே: என்ன செஞ்சாலும் கட்டை மாதிரி தண்ணியில மூழ்க மாட்டேங்குது!**

ப: மனசு வேலைபாத்தா பாத்துட்டுப் போகட்டும்! ஆத்மாவிலேதான் மனசு இருக்கு. மனசு வேலை பாக்கறப்போவும் ஆத்மாவைப் பிடிச்சுக்கோங்கோ.

**கே: ரொம்ப ஆழத்துக்கு போக முடியலை.**

ப: அப்படில்லாம் சொல்லக்கூடாது. இப்போ ஆத்மாவிலே இல்லாமே எங்கே இருக்கேள்? எந்த ஆழத்துக்குப் போகணும், வேண்டியது எல்லாம்... 'நீங்க ஆத்மாங்'கற திட நிச்சயம்தான். வேலைகள் அதை மறைக்கறதுன்னு வேணா சொல்லுங்கோ.

**கே: ஆமா! அப்படித்தான்!**

ப: அப்போ, திடநிச்சயம்தான் வேணும்.

**கே: நான்கறது கிருத்துருமம் (போலி)தான்னு புரியுது. என்னோட முயற்சி எல்லாம் இந்த போலி நானை வச்சு உண்மை நானை கண்டு அறிய முயற்சி பண்றேனா?**

ப: விவேகசூடாமணி ரொம்பத் தெளிவாச் சொல்றது. விஞ்ஞானமய கோசத்திலே இருக்கற போலி நான் ஒரு தோற்றம். ஆனா அது மூலமாத்தான் நான்கறதோட வாச்சியார்த்தத்தைத் தெரிஞ்சுக்க முடியும்.

(413) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: நாம ஜபம் பண்ணும்போது ஒரு மணிநேரத்துலே அல்லது இன்னும் கொஞ்சம் கூடவோ தூக்கம் மாதிரியான ஒரு நிலையிலே விழுந்துடறேன். விழிப்பு வந்த உடனே ஜபம் நின்னுடுச்சுன்னு தெரிஞ்சு தொடர்றேன். எனக்கு என்ன நடக்குது?**

ப: தூக்கம் மாதிரி... ம்...அதுதான் சரி. அதுதான் நம்மளோட ஸ்வபாவ ஸ்திதி.

நீங்க உங்களை இப்போ அகந்தையோட சம்பந்தப் படுத்திக்கறதாலே இந்த நிலை உங்களோட ஜபத்தைக் கெடுக்கறதுன்னு நினைக்கறேள். அது திரும்பத் திரும்ப வரணும். அப்போதான், அதுதான் உங்களோட ஸ்வபாவம்ன்னு தெரியும். அது வரைக்கும் ஜபம் பண்ணணும். அப்புறம், ஜபம் தேவையில்லேன்னு தெரியும். ஆனா ஜபம் தானாவே நடக்கும். உங்களுடைய சந்தேகம் தவறான சேர்க்கையாலேதான்.



(414) **ஜி.வி. சுப்பராமய்யா கேட்டார்.**

ப: குழந்தையும் ஞானியும் ஒண்ணு. ஸம்ஸ்காரங்கள் குழந்தைகிட்டே வெளிப்படலே. அதனாலே, அதோட

அறியாத்தன்மை முழுமையாயிருக்கு. ஸம்ஸ்காரங்கள் போயிடுத்துன்னா வயசான ஆளும் குழந்தையாயிடுவான்.

**கே: குழந்தைகள் ஆசிரமத்துலே வீட்டுச் சூழ்நிலையைக் கொண்டு வந்துடறது...**

**ப:** குழந்தைகள் எப்பவும் வீட்டிலேதான் இருக்கா. நாமளும் எப்பவும் வீட்டிலேதான் இருக்கோம். ஆனா வீட்டைவிட்டு வெளியே இருக்கறதா கனவிலே கற்பனை பண்ணிக்கறோம்.

(418) **கே: கம்பராமாயணம் படிச்சு இருக்கீங்களா?**

**ப:** இல்லே. நான் எதையும் படிச்சது இல்லே. 14 வயசு வரைக்கும்தான் நமக்குப் படிப்பு.

அப்போவே எனக்குப் படிக்கப் பிடிக்காது.

ஆனா பகவத்கீதை ஸ்லோகம் எல்லாம் எப்படி சொல்றேன்னு எல்லாரும் ஆச்சர்யப்படுவா. கேள்வி ஞானம்தான். நான் கதையோ, பாஷ்யங்களோ, உபநிஷத்களோ படிச்சது இல்லை. யாராவது ஒரு சுலோகம் சொன்னா... அதோட அர்த்தம் சரிதான்னு எனக்குப்பட்டா... என்னாலே திரும்பச் சொல்ல முடியும். அவ்வளவுதான். வேற ஒண்ணும் இல்லை.

வேற குறிப்புகளும் அப்படித்தான். ஸ்வபாவமா வர்றதுதான். உண்மை அறிவுக்கும் வார்த்தைக்கும் அப்பாற் பட்டதுன்னு எனக்குத் தெரியும். அப்போ ஏன் அதை படிக்கணும். நோக்கம்... உண்மைய உணரணும்ன்னு வந்தாச்சு... அப்புறம் எதுக்கு படிக்கணும்?

**கே: பகவான் ஒருவேளை படிச்சுருந்தா இங்கே எங்களுக்கு பகவான் கிடைச்சுருக்க மாட்டார்.**

**ப:** என்னோட பூர்வத்திலேயே எல்லாத்தையும் முடிச்சி ருப்பேன். அதனாலே அதிலே எனக்கு ஸம்ஸ்காரம் இல்லை.

(420) *கடலூர் வக்கீல் கேட்டார்.*

**கே: 'சூரியன் அங்கு சுடர்வதில்லை; சந்திரன் இல்லை; நட்சத்திரங்களும் இல்லை; மின்னலும் இல்லை; அங்கு எப்படி நெருப்பு பிரகாசிக்கும்? இந்த எல்லா ஒளிகளும் ஒளிர்வது அவனுடைய ஒளியினாலே. அவன் ஒளியாலே எல்லாம் சுடர்கிறது'.**

**இந்த ஸ்லோகத்துலே அவனுடைய ஒளியாலேன்னா என்ன அர்த்தம்?**

ப: எல்லாம் அவனாலே ஒளிர்றதா? இல்லே. அவனோட ஒளியாலே ஒளிர்றதா?

அவன் மட்டும்தான் இருக்கான். அவனும் அவன் ஒளியும் ஒண்ணுதான்.

'இங்கு யாரும் எதையும் பார்ப்பதில்லே'... அப்படின்னா என்ன அர்த்தம்?

பாக்கறவனும் பாக்கப்படறதும் அவன்தான்னு அர்த்தம்.

சூரிய சந்திரர்கள் ஒளிர்வது எப்படி?

அவாளா வந்து உன்கிட்டே, 'நாங்க ஒளிர்றோம்'னு சொன்னா?

இல்லே, வேற ஏதோ தனியா இருந்து சொல்றதா?

**கே: நான்தான் சொல்றேன்.**

ப: அப்போ சூர்ய சந்திரர்கள் ஒளிர்வது உன்னாலேயே!

அறிவு வேணும். சூரிய சந்திரரைப் பாக்கறதுக்கு.

அந்த அறிவுதான் நீ.

அப்போ நீயும் உன் அறிவும் ஒண்ணுதான்... அவனும் அவன் ஒளியும் மாதிரி.

**கே: அந்த ஒளி சூரிய வெளிச்சம் மாதிரியா?**

ப: இல்லே. சூரிய வெளிச்சம் ஜடம். நீதான் அதை அறியறே.

சூரிய ஒளி பொருட்களைப் பாக்கப் பயன்படறது. இருட்டைப் போக்கறது. ஆனா அறிவுதான் இருட்டையும் வெளிச்சத்தையும் அறியற ஒளி.

இருள்... சூரிய ஒளி முன்னாடி இருக்காது.
அறிவொளி முன்னாடி இருள் இருக்கும்.
இந்த அறிவுதான் அறிவு, அறியாமைக்கு ஆதாரம்.

**கே: கடவுள்தான் எல்லாம் செய்றார்ன்னா நாம ஏன் துன்பப் படணும்? கடவுள் தூண்டுறார்... அவன் செய்றான்... அவன் ஒரு கருவி தானே! அவனை ஏன் தண்டிக்கணும்?**

ப: நான் செஞ்சேன்னு எவன் நினைக்கறானோ... அவனே துன்பப்படறான். இதைத் துன்பத்திலேதானே சொல்றேள்... சந்தோஷத்திலே சொல்ல மாட்டேங்கறேளே...! இன்பத்திலேயும் இந்த நினைப்பு இருந்தா... துன்பம் வராது.

**கே: துன்பம் எப்போ ஒழியும்?**

ப: தனித்தன்மை போற வரைக்கும் துன்பம் போகாது. நல்லதும் கெட்டதும் கடவுள் செயல்ன்னா அதிலே வர்ற துன்பமும், இன்பமும் கடவுளுக்குத்தான்.
அதை ஏன் நம்ம மேலே ஏத்திக்கணும்?



(423) ஒரு இளைஞன் கேட்டார்

**கே: மனோபலம் (Will power) எப்படிப் பெறுவது?**

நீ மனோபலம்ன்னு நினைக்கறது எல்லாத்திலேயும் வெற்றி அடையறது தானே...!
மனோபலம்ன்னா வெற்றி தோல்வியை சமமா பாக்கறது. வெற்றி மட்டுமே அடையறது இல்லை.
ஏன் எப்பவுமே ஜெயிக்கணும்? அது அகந்தையைத்தான் வளர்க்கும்.
ஆத்மிகம் தடைபடும்!
தோல்வி நல்லது!
கண்ணைத் திறக்கும்!

தன்னை மீறிய சக்தியிருக்குன்னு தெரியும். சரணடையத் தயார் பண்ணும்.

சமசித்தம்தான் எப்பவும் வேணும். மேலும் வெற்றி, தோல்வி பிராப்தப்படி. ஒருத்தன் நல்லதே செய்றான்... ஆனா, தோத்துடறான். இன்னொருத்தன்... அநியாயக்காரன், அவன் ஜெயிக்கறான். அதுக்கு அர்த்தம் அவர் மனோபலம் பெறலே. இவர் மனோபலம் பெற்றுட்டார்ன்னு இல்லை.

(424) **மெத்தப் படித்தவர் ஒருவர் கேட்டார்.**

**கே: புருஷ - பிரகிருதின்னா என்ன?**

ப: பரத்தை இரண்டாப் பிரிச்சுக்கறா. புருஷன்... பிரகிருதின்னு. ஏன் பிரிக்கறான்னா சிஷ்யனிடம் துவைத பாவம் இருக்கறதனாலே.

அதே கீதை புருஷோத்தமன் புருஷ பிரகிருதியைக் கடந்து இருக்கான்னு சொல்றதே!

**கே: பரநாடி, சுழுமுனை நாடி, ஹிருதயம்ன்னா என்ன?**

ப: சுழுமுனை பரநாடியிலே அடங்கிடும். ஹிருதயம்ன்னா சம்வித்.

**கே: அனாஹதம்ன்னா என்ன?**

ப: ஒரு சக்கரம். ஆனா சம்வித் இல்லே.

(426) **தாஸ், அலஹாபாத் யுனிவர்சிட்டி கேட்டார்.**

**கே: உணவுக்கும் ஆத்மிக முன்னேற்றத்துக்கும் சம்பந்தம் உண்டா?**

ப: ஆமாம். சாத்விக உணவு சத்வ குணத்தை வளர்க்கும். ஆத்மிக முன்னேற்றம் ஏற்படும்.

**கே: கிரஹஸ்தர்க்கு எது சிறந்தது?**

ப: தியானமோ... பக்தியோ...

**கே: பைபிள் கடவுள் பெயரை வீணா உச்சரிக்காதேங்குது. ஹிந்து சாஸ்திரங்கள் எல்லா நேரமும் நாமத்தை சொல்லுங்கங்குது. எப்படி எடுத்துக்கறது?**

ப: உணர்ச்சி இல்லாமே ஜபம் பயிற்சியா இருக்கக் கூடாது. நாமத்தை ஜபிச்சா சரணடையணும். சரணடைஞ்சா அப்புறம் நாமம் நம்ம கூடவே இருக்கும்.

**கே: ஆத்மீகத்துலே பெரிய நிலை அடைஞ்சு இருக்காங்கன்னு தெரிஞ்சுக்கறதுக்கு அடிப்படை சோதனைகள் என்ன? ஏன் கேக்கறேன்னா... சிலர் பைத்தியம் மாதிரி இருக்காங்க.**

ப: ஞானியை ஞானியே அறிவான்.

நாம ஞானியாயிருந்தாத்தான் இன்னொரு ஞானியைத் தெரியும். இருந்தாலும் ஞானியிடம் நமக்கு ஏற்படற மன அமைதியாலேயும் அவன்கிட்டே ஏற்படற மரியாதையாலும் தெரிஞ்சுக்கலாம்.

அவனோட வார்த்தைகளோ, செயல்களோ, தோற்றமோ, அடையாளம் இல்லை. இதெல்லாம் புரிஞ்சுக்க முடியாது.

**கே: நமக்கு இங்கே சுதந்திரம் இருக்கா? இல்லை. எல்லா முன்கூட்டியே முடிவு பண்ணிட்டாங்களா?**

ப: தனித்தன்மைக்குத்தான் தற்சுதந்திரம்.

அது (த.த) இருக்கற வரைக்கும் இதுவும் (த.சு) இருக்கும்.

எல்லா சாஸ்திரங்களும் தற்சுதந்திரத்தை அடிப்படையாக் கொண்டதே. அதனாலேதான் சுதந்திரத்தை சரியான வழியிலே செலுத்தச் சொல்றா.

விதியோ... மதியோ... யாருக்குன்னு பாருங்கோ? அதிலேயே நில்லுங்கோ. அதைக் கடந்துடலாம்.

அதுதான் இதைப் பேசறதுக்கான பிரயோஜனம்.

**கே: புத்தி, உணர்ச்சிகள் இதெல்லாம் உடம்புமாதிரி பிறக்கறப்பவே சேந்தே வருதா? இறந்த பின்னாடி என்ன ஆகும்?**

ப: இறந்ததுக்கு அப்புறம் என்ன ஆகும்ன்னு தெரிஞ்சுக்கறதுக்கு முன்னாடி தூக்கத்துலே என்ன ஆறதுன்னு பாருங்கோ!

இரண்டு விழிப்புக்கு இடையிலே தூக்கம்.

இரண்டு பிறப்புக்கு இடையிலே மரணம்.

**கே: அந்த இடைவெளியில என்ன ஆகுது? புத்தி இருக்குமா?**

ப: ஆமாம் இருக்கு.

தூங்கும்போது புத்தி ஆத்மாவிலே ஒடுங்கியிருக்கு. முழிச்ச உடனே வந்துடறது. அதேதான் மரணத்துக்கும்.

பிறப்பிறப்பு உடலுணர்வையே குறிக்கும். வேற ஒண்ணும் இல்லே. நீங்க உடம்புன்னா... அது உங்களை எப்பவும் பிடிச்சுக்கும். நீங்க உடம்பு இல்லேன்னா... அது உங்களைப் பாதிக்காது.

யார் தூக்கத்துலே இருக்கானோ... அவனேதான் இப்போ பேசிக் கொண்டிருக்கான். நீங்க தூங்கும்போது உடம்பு இல்லே.

இப்போ நீங்க உடம்பா?

கண்டுபிடிங்கோ!

எல்லாம் பிரச்சனையும் தீந்துடும்.

பிறந்தது இறக்கும்.

யாரோட பிறப்பு?

நீங்க பிறந்திருக்கேளா?

நீங்கதான் பிறந்திருக்கேள்ன்னா... எதோட பிறப்பைப் பத்திப் பேசறேள்?

உடம்புதான் பிறந்தது. அது சாகும்.

அதோட பிறப்பும் இறப்பும் எப்பவும் இருக்கற உங்களை என்ன பண்ணும்?

இந்தக் கேள்வி எல்லாம் யாருக்கு வர்றது?

யோசிங்கோ! அப்போ உங்களுக்குத் தெரியும்.

**கே: ஆத்ம ஞானத்தை நோக்கி முன்னேற்றம் ஏற்படுதுங்கறதுக்கு, தியானத்துலே ஏதாவது குறிப்பிட்ட அனுபவங்கள் உண்டா?**

ப: தேவையில்லாத சிந்தனையிலே இருந்து விடுபட்டிருக்கறதும், ஒரே சிந்தனையிலே நிக்கறதும், எந்த அளவுக்கு நம்மகிட்டே ஏற்பட்டுருக்கோ அந்த அளவுக்கு முன்னேற்றம்.

**கே: ஆத்மஞானம் அடைய சன்யாசம் வாங்கணுமா?**

ப: நாம தனித்தன்மையை இழக்கறதுதான் சன்யாசம் வாங்கறது.

மொட்டை போட்டுக் காவி கட்டறது இல்லே.

ஒருத்தன் கிருஹஸ்தனாக்கூட இருக்கலாம்... ஆனா அவன் தன்னை கிருஹஸ்தன்னு நினைக்கலேன்னா அவன்தான் சன்யாசி.

இதுக்குமாறா ஒருத்தன் காவிகட்டி அலையலாம்... அவன் சன்யாசின்னு நினைச்சா அதோட நோக்கமே செத்துடும்.

**கே: நான் அனாத்மாவை ஒழிக்கணும்ன்னு ஆசைப்படறேன். ஆத்மாவை அடையணும். எப்படி பண்றது? அனாத்மாவோட ஸ்வபாவம் என்ன?**

ப: அனாத்மாவை ஒழிக்கணும்னு ஆசைப்படற ஒருத்தன் இருக்கான்.

அவன் யார்?

**கே: இவன்தான். நான் கல்கத்தாவிலே இருந்து சென்னைக்கு பிரயாணம் பண்ணினேன். எனக்கு சென்னை எதுன்னு தெரியணுமில்லே.... இல்லேன்னா இடையிலே வேற எங்கேயாவது இறங்கிட்டா... பிரயாணத்துலே பெயர்ப் பலகையும் நேர அட்டவணை இருந்தது. ஆத்மாவை அடையறதுக்கு அப்படி வழிகாட்டி எது?**

ப: உங்களோட பிரயாணத்துக்கு சரிதான்.

உங்களோட ஊர்லே இருந்து சென்னைக்கு எவ்வளவு தூரம்னு உங்களுக்குத் தெரியும்.

நீங்க ஆத்மாவிலே இருந்து எவ்வளவு தூரத்துலே இருக்கேள்ன்னு சொன்னா வழி சொல்லலாம்.

**கே: எனக்குத் தெரியாது.**

ப: உங்ககிட்டே இருந்து நீங்க விலகி இருக்கேளா...
உங்ககிட்டே இருந்து நீங்க விலக முடியுமா?
நீங்க பாக்கற எல்லாப் பொருளையும்விட நீங்க உங்களுக்கு நெருக்கம் இல்லையா...?
நீங்க உங்களை அடையறதுக்கு எங்கே போகணும்...?

**கே: நான் ஆத்மாவுலே இருந்து வெளியே இருக்கேன். நான் ஆத்மாவுக்கு திரும்பணும். அதை மறுபடியும் அடையணும்.**

ப: எவ்வளவு தூரம் தள்ளிப் போயிட்டேள்...
வெளியே போயிட்டேன்னு சொல்றது யார்?
இரண்டு நான் இருக்கா?
நாம எல்லோரும் ஆத்மாவோட மறுவடிவம்தான்.
நகையும், தங்கமும் மாதிரின்னு சொல்றா.
ஒருத்தன் தங்கத்தை விட்டுட்டு நகையைப் பத்திப் பேசும்போது அவனுக்கு நகை, தங்கம்தான் மறுவடிம்ன்னு சொல்றா.

ஆனா இங்கே அவனே அறிவுதான்.

அவனை மறுவடிவம்ன்னு சொல்றதுகூடப் பொருத்தமாயில்லை.

நீங்க உங்கள்லே இருந்து வேறா இருக்கேளா... உங்களை உங்களோட மறுவடிவம்ன்னு சொல்றதுக்கு.

**கே: தங்கமே தன்னை மறந்துட்டு நகைன்னு நினைச்சுக்குதா?**

ப: அது ஜடம். அப்படிச் சொல்லாது.
மனுஷன் அறிவுக்கு வேறா இல்லை.
ஆத்மாதான் சுத்த அறிவு.
ஆனாலும் மனுஷன் அவனை உடம்போட சம்பந்தப்படுத்திக் கொண்டு நான் இந்த உடம்புங்கறான்.
ஆனா உடம்பு அப்படிச் சொல்லலே.
அறிவும் அப்படிச் சொல்லலே.
அப்போ யார் சொல்றது?
போலியா ஒரு நான் கிளம்பி நான் இந்த உடம்புதான்னு குறுக்கிக்கறது.

சுத்த அறிவுக்கும் ஜட உடம்புக்கும் இடையிலேதான் இந்த போலி நான் கிளம்பறது. அது என்னன்னு பாத்தா பேய் மாதிரி மறைஞ்சுடும்.

அந்தப் பேய்தான் அகந்தை, மனம், ஜீவன், தனித்துவம் எல்லாம்.

எல்லா சாஸ்திரங்களும் அதுக்காகத்தான்.

அது வந்ததாலேதான். அதைப் போக்கறதுக்குத்தான்.

இதைத் தெளிவிக்கறதுதான் நோக்கம். வேறே ஒண்ணும் இல்லே.

**கே: மனம் எண்ணங்களின் குவியல். சரியா?**

ப: ஆனா, நான்கற எண்ணமே மூலம். அதுக்குத் தனியா இருப்பு இல்லை.

**கே: எண்ணங்கள் மனத்தோட தோற்றம்தானே?**

ப: மனம்னா நான்கற எண்ணம்ன்னு எடுத்துக்கொண்டாலோ, அகந்தைன்னு எடுத்துக்கொண்டாலோ சரி.

(429) ஒரு *பெண்மணி, (பெங்களூர்) கேட்டார்.*

**கே: உலகம் இவ்வளவு பேதங்களோட இருக்கே! இதெல்லாமே ஒண்ணுதான்னு எப்படித் தெரிஞ்சுக்கறது?**

ப: பேதம் கர்த்துருத்துவத்தாலேயே வர்றது.

வேர அழிச்சா மரமும் அழிஞ்சுடும்.

கர்த்துருத்துவம் போச்சுன்னா பேதம் போயிடும்.

கர்த்துருத்துவம் போகணும்ன்னா... யார் செய்யறதுன்னு பாக்கணும்.

உள்ளே விசாரிங்கோ! கர்த்துருத்துவம் போயிடும்.

விசாரந்தான் வழி.

(430) மராத்தி கனவான் கேட்டார்.

கே: ஆத்ம ஞானத்தைப் பத்தி நிறைய படிச்சுட்டேன். ஜபம், பூஜை எல்லாம் பண்றேன். எதுவும் திருப்தியாயில்லை. எனக்கு வழிகாட்ட முடியுமா?

ப: எதை அடையத் தேடறேள்?

எல்லோரும் சுகத்தையே தேடறோம். சுகம் எல்லோருக்கும் தூக்கத்திலே இருக்கு. அதை இப்போ விழிப்புலே திரும்பக் கொண்டு வரணும். அவ்வளவுதான்.

கே: எனக்குப் புரியலே. அதை எப்படிச் செய்யறது?

ப: ஆத்ம விசாரந்தான் வழி.

கே: பிடிபட மாட்டேங்குதே! ரொம்பக் கஷ்டமாயிருக்கு. விசாரத்துக்குத் தகுதியில்லேன்னு எனக்கே தெரியுது. என்ன செய்யலாம்?

ப: வழிகாட்டலாம். அதை ஏத்துக்கறது அவாவா இஷ்டம்.



(432) ஆந்திராவில் இருந்து தரிசிக்க வந்தவர் கேட்டார்.

கே: தூக்கம்ன்னா என்ன?

ப: ஏன் தினமும் அனுபவந்தானே!

கே: சரியா அது என்னன்னு தெரியணும். அப்பத்தான் சமாதிக்கும், அதுக்கும் வித்தியாசம் தெரியும்.

ப: முழிச்சு இருக்கும்போது எப்படித் தூக்கத்தைப் பத்தி தெரியும்? இதுக்குப் பதில்... போய்த் தூங்குங்கோ. அங்கே தெரியும்.

கே: அப்படி தெரிஞ்சுக்க முடியாது.

ப: தூக்கத்திலேதான் இந்தக் கேள்வி கேக்கணும்.

கே: அங்கே கேள்வி கேக்க முடியாது?

ப: அப்போ அதுதான் தூக்கம்.

**கே: ஞானிகள் மத்தவங்க மாதிரியேதான் சாப்பிடறாங்க; வேற வேலை எல்லாம் பாக்கறாங்க. மத்தவங்களை மாதிரியேதான் கனவு, தூக்கம் எல்லாமுமா?**

ப: ஏன் அடுத்தவா சமாச்சாரம். நமக்கு அதனாலே என்ன கிடைக்கப்போறது.

நீங்க யார்ன்னு தெரிஞ்சுக்கோங்கோ!

நீங்க யார்ன்னு நினைக்கறேள்? இந்த உடம்புதானே!

**கே: ஆமாம்.**

ப: அப்படித்தான் ஞானியையும் உடம்புன்னு நினைக்கறேள். ஞானி.... கனவு வர்றதா... தூக்கம் வர்றதா...ன்னு கேக்கறது ஞானி.... கனவு வர்றதா... தூக்கம் வர்றதா...ன்னு கேக்கறது இல்லே. அவனுக்கு எந்தச் சந்தேகமும் இல்லே. சந்தேகம் எல்லாம் உங்களுக்குத்தான். ஞானி உடம்பு இல்லே. அவன் எல்லோரோட ஆத்மாவும். கனவு நனவு தூக்கம் எல்லாம் அஞ்ஞானிகளோட நிலை. ஆத்மா இது எல்லாத்திலேயும் விடுபட்டு இருக்கு.

**கே: ஸ்திதப்பிரஞ்ஞனோட நிலைமையை தெரிஞ்சுக்கத்தான் கேக்கறேன்.**

ப: சாஸ்திரங்கள் ஞானிக்கு இல்லே. ஞானிகளுக்கு எந்தச் சந்தேகமும் தீக்கறதுக்கு இல்லே. புதிர் எல்லாம் அஞ்ஞானிக்குத்தான். சாஸ்திரமும் அவனுக்குத்தான்.

**கே: தூக்கம் அறியாமை; அதைப் போய் சமாதின்னு எப்படிச் சொல்லலாம்?**

ப: ஞானம்... அறிவு அறியாமை கடந்தது. அங்கே எந்தக் கேள்வியும் இல்லே. அது ஆத்மாவேதான்.



(433) **ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டி ஸம்ஸ்கிருத பேராசிரியர் தாமஸ் கேட்டார்.**

**கே: பகவான் தீட்சை கொடுக்கறதுண்டா?**

ப: மௌனமே சிறந்த தீட்சை.

பலிதத்திலேயும் அதுவே சிறந்தது.

தக்ஷிணாமூர்த்தி அதையேதான் செஞ்சார். மத்த தீட்சைகள் இரண்டாம் தரம்தான்.

இங்கே குருவும் இல்லை... சிஷ்யனும் இல்லை... அஞ்ஞானி தன்னை உடம்பா நினைக்கறதாலே, இன்னொரு உடம்பைக் குருங்கறான்.

குரு தன்னை உடம்பாக் கருதறாரா?

அவர் உடம்பைக் கடந்தவர். அவருக்கு எந்தப் பேதமும் இல்லை.

அஞ்ஞானியாலே இதைப் புரிஞ்சுக்க முடியாது. உபாசனையோ தியானமோ மனம் இருக்கற வரைக்கும்தான் பண்ண முடியும். மனமற்ற நிலையிலே பண்ண முடியாது. சும்மாயிருக்கறதுக்கு முந்திய நிலையே அது.



(433) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: சைவசித்தாந்தம் பசு, பதி, பாசம் அனாதிங்குதே! அது வேதாந்தத்துக்குப் பொருந்த மாட்டேங்குதே!**

ப: மூணும் மனம் இருக்கற வரைக்கும் உண்மை.

மனம் வந்த பிறகுதான் இறைவன்.

இறைவன் ஆத்மாவிலே இருந்து வேற இல்லை.

ஆத்மாவே கடவுள்; ஆத்மாவே குரு.

**கே: ஏன் பிரம்மத்தை சத்சித்ஆனந்தம்னு சொல்றோம். கடவுள்ன்னு சொல்லமாட்டேங்கறோம்?**

ப: சத்ன்னா சத்அசத் கடந்தது.

சித்ன்னா சித்அசித் கடந்தது.

ஆனந்தம்ன்னா ஆனந்தம் அனானந்தம் கடந்தது

அப்போ அது என்ன?

சத்தும் இல்லை... அசத்தும் இல்லைன்னா... அதை சத்ன்னுதான் சொல்லணும். ஞானத்தை எடுத்துக்கோங்கோ... அது ஞான அஞ்ஞானம் கடந்தது... ஆனா அது அஞ்ஞானமில்லேங்கறதாலே அதை ஞானம்ங்கிறோம்.

அப்படித்தான் சத் சித் ஆனந்தம்.

**கே: உபாசனை, தியானம், மனசு இருக்கற வரைக்கும்தான்னா... சும்மாயிருக்கறதுதான் ஞானம்ன்னா... உபாசனை, தியானம் இல்லாம ஞானம் வந்துடுமா?**

ப: உபாசனை, தியானம் முதல்படி. அது சும்மாயிருக்கறதா முடிஞ்சுடும்.

(434) *கிருஸ்துமஸ் விடுமுறையை ஒட்டி வந்த கூட்டம் கேட்டது.*

**கே: உங்களுக்கு ஆங்கிலம் தெரியுமா?**
**நீங்க ஆத்ம ஞானம் அடைஞ்சிருக்கீங்களா?**

பகவான் சிரித்தார், 'மேலே கேளுங்கோ'

**நிர்விகல்ப சமாதியனுபவம் உண்டா?**
**நீங்க நினைச்சப்ப சமாதிக்கு போவீங்களா?**

இப்படி எல்லாம் கேள்வி கேக்கக்கூடாதுன்னு யாரோ கூட வந்தவா அவரைக் கேக்க விடலே.

*வேறு ஒருத்தர்.*

**கே: பகவான் உண்மையை நாங்க உணர உதவுவீங்களா?**

ப: உதவி எப்பவும் இருக்கு.

**கே: அப்போ கேள்வியே இல்லை. எனக்குக் கிடைக்கற மாதிரி தெரியலை.**

ப: சரணடைங்கோ தெரியும்.

**கே: நான் உங்க சரணத்திலேயேதான் இருக்கேன். ஏதாவது உபதேசம் குடுங்க. 600 மைல் தள்ளியிருந்து எப்படி உங்க அருளுக்குப் பாத்தியமாவேன்?**

ப: ஸத்குரு உள்ளேயே இருக்கார்.

**கே: சத்குருவே என்னை வழிநடத்தி அதை உணர வைக்கணும்.**

ப: ஸத்குரு உள்ளேதான் இருக்கார்.

**கே: எனக்கு கண்ணுக்கு தெரியற குருதான் வேணும்.**

ப: கண்ணுக்குத் தெரியற குருதான் உள்ளே இருக்குன்னு சொல்றார்.

**கே: குருவோட அருளுக்கே என்னை விட்டுடவா?**

ப: ஆமாம். உபதேசமெல்லாம் சரணடையற வரைக்கும்தான்.

**கே: தியானம் குறிப்பிட்ட காலத்துலதான் பண்ணணுமா?**

ப: தியானம் மனோபலத்தைப் பொறுத்தது: எப்பவும் பண்ணணும். வேலை பாக்கும்போதும் பண்ணணும். குறிப்பிட்ட காலம் எல்லாம் ஆரம்பசாதகர்களுக்குத்தான்.

**கே: குரு என் தலையில கை வச்சு உதவுவேன்னு ஸத்யம் பண்ணுவாரா? எனக்கு ஆறுதலா இருக்கும்.**

ப: ஏன் ஒரு பாண்டு பேப்பர் வாங்கிக்கொண்டு வந்து எழுதிக்கேளுங்கோ!

எதுவும் நடக்கலேன்னா... கேஸ் போடுவேள் போலிருக்கே! (சிரிக்கிறார்).

**கே: உங்க பக்கத்துலே வரலாமா?**

ப: இந்தக் கேள்வி எல்லாம் வரலாமா?

சரணடைஞ்சுட்டேன்னு சொன்னா குருவோட பாதம் எப்பவும் நம்மளோட தலைமேலேதான்.

**கே: நிறைய முயற்சிக்கு பிறகுதான் முழுமையான சரணடைய முடியுமா?**

ப: ஆமாம். நாள்பட முழுமையாகும்.

**கே: குருவோட உபதேசம் அவசியமா?**

ப: ஏதாவது புதுசா படிக்கணும்னாத்தான் குருவும் உபதேசமும் அவசியம். இங்கே எல்லாம் மறக்கறதுதான்.

**கே: ஆனாலும் குரு அவசியம் தானே?**

ப: நீங்க எதைத் தேடறேளோ அது ஏற்கனவே இருக்கு. அதனாலே குரு அவசியம் இல்லை.

**கே: உண்மைய உணர்ந்தவனாலே தேடறவங்களுக்கு ஏதாவது பிரயோஜனம் உண்டா?**

ப: உண்டு. நாம இன்னும் அடையலேங்கற மயக்கத்தைப் போக்குவான்.

**கே: அப்போ எப்படின்னு சொல்லுங்க?**

ப: இது மயக்கத்திலே இருக்கறவனைத் தெளிவிக்கற வழி.

**கே: அப்போ என்னை தெளிங்க. நான் என்ன செய்யணும்.**

ப: நீங்க இப்போ எங்கே இருக்கேள்?
எங்கே போகணும்?

**கே: என்னை தெரியும்.... ஆனா நான் யார்ன்னு தெரியாது....**

ப: இரண்டு நான் இருக்கா?

**கே: என் கேள்வியையே திருப்பி போட்டுர்றீங்க.**

ப: யார் இதை சொல்றது?
இருக்கறவன் சொல்றானா?
யார்னு என்னைத் தெரியலேங்கறவன் சொல்றானா?

**கே: நான்தான். எப்படின்னு தெரியலே**

ப: நான்கறது எப்பவும் இருக்கே!

கே: நான்கறது மரணத்துலே ஏதாவது மாறுமா?

ப: யார் மாறுவதைப் பாக்கறது?

கே: நீங்க பேசறது ஞானயோகம்.

ப: ஆமாம்.

கே: சரணடையறது பக்தியோகம்.

ப: இரண்டும் ஒண்ணுதான்.

கே: அப்போ இப்படித்தான் முடிவுக்கு வர வேண்டியது இருக்கு. நான்கறதுதான் இங்கே இருக்கு. நான் அறிவு. நான்கறது இல்லாம எதுவும் இல்லை.

ப: இந்த முடிவுக்கு விசாரிச்சும் வரலாம். இல்லே சரின்னு கேட்டுக்கொண்டாலும் போறும்.



(435) சிலோன்லயிருந்து வந்த ஒருவர் கேட்டார்.

கே: நீங்க இறைவனை பாத்துருக்கிங்களா? எந்த உருவத்துல?

ப: கடவுளைப் பாக்க யாரு இருக்கப்போறா? இந்தக் கேள்வியை இப்படிக் கேட்டா நல்லாயிருக்கும். நான் என்னைப் பாத்திருக்கேனா? நமக்கு நம்மளத் தெரியுமா?

கே: நான் என்னை பாத்துருக்கேன். எனக்கு என்னை தெரியும்.

ப: உங்களுக்கு உங்களை எப்போ தெரியும்?

கே: உடம்பாத் தெரியும். நான்கறது உடம்ப விட வேறான்னு பகவானே சொல்லணும். எப்படி ஆத்மாவை உடம்புல இருந்து பிரிச்சு அறியறது?

ப: ஏன் பிரிச்சு அறியணும்?
உடம்பு அது பாட்டுக்கு இருக்கட்டுமே!

கே: எல்லோரும் கடவுளை உணர்ந்துகொண்டேதான் இருக்காங்களா?

ப: ஆமாம்.

**கே: அப்போ ஞானம்ன்னா என்ன?**

ப: நாம... ஞானம் அடையலேங்கற தப்பான எண்ணம் போறதுதான்.

**கே: எனக்குப் புரியலே.**

பகவான் மௌனமாயிருந்தார்.

(436) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: விஸ்வரூப தரிசனம்னா என்ன?**

ப: உலகத்தை கடவுளா பாக்கறது.

(437) ***பகவான் பொதுவாக சொன்னது.***

ப: எல்லாரும் விவேகானந்தர் புஸ்தகத்தை படிச்சுட்டு அவர் ராமகிருஷ்ணர்கிட்டே கேட்ட மாதிரியே என்கிட்டே வந்தும் கேக்கறா.

நீங்க ஞானமடைஞ்சிருக்கேளா?
எனக்கும் ஞானம் கொடுக்க முடியுமா?
நீங்க கடவுளைப் பாத்துருக்கேளா?
எனக்குக் காட்ட முடியுமா?
நான் 'ஞானம்ன்னா என்ன'ன்னு கேக்கறேன்.

(438) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: நான்கறது விழிப்புலேயும் கனவிலேயும் தெரியுது. ஆனா தூக்கத்திலே தெரிய மாட்டேங்குதே!**

ப: அப்போ அது தூக்கத்திலே இல்லையா?

(439) தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.

கே: இராமன் கேக்கறான், 'பிரம்மம் பரிசுத்தமா இருக்கும்போது, மாயை எப்படி அதுல இருக்கும். பிரம்மத்தையே மறைக்கும்.

வசிஷ்டர் 'தீவிர வைராக்கியத்தோட இருக்கற சுத்தமான மனசுலே இந்தக் கேள்வி வராது'ன்னு சொல்றார்.

அத்வைதத்திலே ஜீவன், ஈஸ்வரன், மாயைக்கு இடமில்லை. ஆத்மாவிலே ஒருத்தன் கரைஞ்சுட்டான்னா வாசனைகள் அழிஞ்சுடும். கேள்விக்கே இடம் இல்லை. இதுக்கு சரியான பதில் என்ன?

ப: சாதகனோட பக்குவத்தைப் பொறுத்துதான் இந்தக் கேள்விக்குப் பதில்.

கீதையிலே கிருஷ்ணர் இரண்டாவது அத்தியாயத்திலே, 'யாரும் பிறக்கலே யாரும் இறக்கலே'ங்கறார். நான்காவது அத்தியாயத்திலே, 'உனக்கும் எனக்கும் நிறையப் பிறப்புகள் வந்து போயிடுத்து... அதெல்லாம் எனக்குத் தெரியும், உனக்குத் தெரியாது'ங்கறார்.

இந்த ரெண்டுலே எது உண்மை?

ரெண்டும் உண்மை. வேற வேற பார்வையிலே.

இப்போ ஒரு கேள்வி வர்றது... ஒரு ஜீவன் எப்படி ஆத்மாவிலே இருந்து வர்றது?

நீ யார்ன்னு பார், அப்போ நீ இந்தக் கேள்வியைக் கேக்கமாட்ட...ன்னு சொல்றேன்.

ஏன் ஒருத்தன் தன்னை எதிலே இருந்தோ வந்ததா நினைக்கணும்?

பிறக்கறதுக்கு முன்னாடி எப்படி இருந்தான்?

இறந்ததுக்கு அப்புறம் எப்படி இருப்பான்?

ஏன் இந்தத் தேவையில்லாத ஆலோசனைகள்லே நேரத்தை வீணாக்கணும்.

ஏன் உன்னைத் தனித்துவத்தோடு கூடிய ஆள்ன்னு பாக்கறே?
தூங்கும்போது உனக்கு என்ன வடிவம்?

**கே: தூக்கத்துலே நான் சூட்சும வடிவத்துல இருக்கேன்.**

ப: காரணம் எப்படியோ காரியம் அப்படி...
விதை எப்படியோ மரம் அப்படி....
முழுமரமும் விதையிலே இருக்கு.
விரிஞ்சு படர்ந்த மரத்துக்கு ஒரு ஆதாரம் இருக்கணுமே...
அந்த மாதிரி மாயை இருக்கும்.
உண்மையிலே மரமும் இல்லை; விதையும் இல்லை;
இருக்கறது மட்டுந்தான் இருக்கு.

**கே: வாசனாட்சயம், மனோநாசம், ஆத்ம சாட்சாத்காரம் மூணும் ஒண்ணோட ஒண்ணு சேர்ந்த மாதிரிதானா?**

ப: மூணுக்கும் ஒரே அர்த்தம்தான். ஒருத்தனோட பக்குவத்துக்கு ஏத்த மாதிரி மாறுபடும். வைராக்கியமும், ஞானமும் ஒண்ணுதான். அப்பியாசமும், வைராக்கியமும் ஒண்ணுதான்.
ஏன் அப்யாசம்ன்னு சொல்றா?
ஏன்னா மனம் ஒடுங்கி மறுபடியும் எழுந்துடறது.

**கே: எப்போ எனக்கு வாசனைகள் ஏற்பட ஆரம்பிச்சுச்சுன்னே தெரியலை... ஆனா இந்த வாசனைகள் தவறு பண்ண வைக்குது. ஞானமில்லாம வாசனை அழியாது. ஆனா ஞானம் ரொம்பக் கஷ்டமாயிருக்கு. அனுபவிச்சுத்தான் கர்மம் எல்லாம் தீர்க்கணும்ன்னா... எவ்வளவு அனுபவிக்கறது...! என்ன ஆவேனோ...! எல்லாம் ரொம்பக் கஷ்டமாயிருக்கு... என்னாலே முடியலை... சாதுக்கள் சகவாசம்தான் இந்த நோய்க்கு ஒரே மருந்தாயிருக்கும்...!**

ப: என்ன செய்ய முடியும்....?
உண்மை ஒண்ணுதான்.
அதை எப்படி உணர்றது?
ஆத்மஞானம்கறது கட்டுக்கதை. பொய். அப்பியாசம் வேணுங்கற மாதிரித் தெரியறது.

அப்போ...ஆத்ம ஞானமடைய யாரு அப்பியாசம் பண்றது?

யார் பண்றதுன்னு பாத்தா... தியானமும் தியான சாதனங்களும் (Tools) மறைஞ்சுடும்.

ஆத்மஞானம் இங்கேயே இப்போவே இல்லேன்னா... அது புதுசா வந்ததுன்னா... ஒரு பிரயோஜனமும் இல்லே.

எது சத்யமோ அது எப்பவும் இருக்கணும். புதுசா இனிமேல் அடைய போறது எப்படி சத்தியமாவும் நிலையாவும் இருக்கும்?

இங்கேயே.... இப்போவே... இருக்கு பாரு!

ரிஷிகள் முன்னாடியும் இப்படித்தான் உள்ள பொருளை தேடி அப்பியாசம் பண்ணா. இப்பவும் அதையேதான் பண்றா.

அஞ்ஞானத்தாலே மறைபட்டு வெளிப்படறதனால... புதுசா கிடைச்ச மாதிரி தெரியறது. ஆத்மஞானமடையறோம்ன்னு சொல்றோம். ஆனா அது புதுசு இல்லே.

**கே: எந்த யுக்தியும் இல்லாம, சாஸ்திர வார்த்தைகள் இல்லாம, எனக்கு ஆத்ம சுகத்துக்கு வழி சொல்லுங்க. அதுவே எனக்கு குருவருள்.**

ப: உனக்கு என்ன வேணும்ன்னு முதல்லே தெளிவாகு!

யார் எதை அடையறது?

யார் என்னத்தைத் தேடறது?

அப்புறம் வழி கேளு!

**கே: இறைபக்தி, குரு அனுக்கிரகம், தியானம் இந்த மூணுல எது எல்லா வழியையும் விட பலிதத்துல சிறந்தது?**

ப: ஒண்ணு மத்ததோட விளைவு. ஒண்ணு அடுத்ததுக்கு கூட்டிக்கொண்டு போகும்.

இது மூணும் ஒரே பொருள்தான்.

கடவுள், குரு, ஆத்மா வேற வேற இல்லே.

மூணும் ஒண்ணுதான். எது சிறந்ததுங்கற கேள்விக்கே இடமில்லே.



(441) *பண்ணாலால் ஐ.சி.எஸ்., அலஹாபாத் கேட்டார்.*

கே: பெரிய மகான் ஒருத்தர் எங்களுக்குக் குருவாயிருந்தார். அவர் ஹரி நாம ஜபத்தையே எங்களுக்கு உபதேசம் பண்ணினார். அதிலேயே எல்லாம் வந்துடும்... தியானத்துக்கோ, வேற எதுக்கோ, முயற்சி தேவையில்லை.... ஏகாக்கிரம், எப்பவும் ஹரிநாமம் இருந்தா வந்துடும்ன்னார். நாங்களும் அதையே சிரத்தையா செஞ்சுகொண்டு வந்தோம். அவர் விதேகமானார். மாலுமி இல்லாத கப்பல் மாதிரி ஆகிட்டோம். எங்க கலக்கம் கரையேறுவோமா... மாட்டோமாங்கற வேதனை. இப்படி இருக்கும்போதுதான்... உங்களைப்பத்தி கேள்விப்பட்டோம். இரண்டு வருஷ ஏக்கத்துக்கு பிறகு இப்போதான் பலிச்சது. இங்கே வந்த பிறகு நீங்க போதிக்கறது ஆத்ம விசாரம், ஞானமார்க்கம்ன்னு தெரியுது. ஆனா எங்க குரு எங்களுக்கு பக்தி மார்க்கத்தையே போதிச்சார். நாங்க என்ன பண்றது? அதை விட்டுடறதா? விட்டுட்டு புதுவழியிலே போறதா?

இப்போ வழியை மாத்தினா.... நாளைக்கு இன்னொரு குருவைப் பாக்கறப்ப வேற வேற வழிகளுக்கு மாறிக் கொண்டே இருக்கறதா? இப்படி மாறிக்கொண்டே இருந்தா முன்னேற்றம் இருக்குமா? எங்க சந்தேகத்தைத் தீர்த்து ஆசீர்வாதம் பண்ணணும்.

பகவான் 'விஷன்' பத்திரிக்கையிலே வந்திருந்த ஒரு கட்டுரையை அவருக்குக் கொடுக்கச் சொன்னார். அந்தக் கட்டுரை அவருக்குப் பரிபூரண திருப்தியை அளித்தது. அந்தக் கட்டுரை கீழே தரப்பட்டுள்ளது.



*ஸ்ரீ நாமதேவர் அருளிய நாம மகிமை.*

நாமமே இந்தப் பிரபஞ்சம் முழுதும் வியாபித்து உள்ளது. அனைத்தினும் சாரமான நாமத்தை உணராத அறிவிலிகள்

பிறப்புச்சுழலில் இருந்து விடுபடுவதில்லை. நாமமே அழியாதது. ரூபங்கள் வேறு வேறாயினும் அனைத்தின் நாமமும் ஒன்றே.

நாமமே ரூபம். ரூபமே நாமம். இவை இரண்டிற்கும் பேதம் இல்லை. இறைவனே நாமரூபத்தோடு வெளிப்படறான். அதனாலேயே வேதங்கள் நாமத்தையே சிறப்புச் செய்யறது. நாமத்தை விட சிறந்த மந்திரம் இல்லை. இதை அறியாதவர்கள் அறிவிலிகள்.

நாமமே இறைவன். இது அவனுடைய அந்தரங்க பக்தர்களுக்கே தெரியும். நான் என்பது எது என்று தன்னை உணர்ந்தவர்க்கே எங்கும் நிறைந்த நாமத்தை உணர முடியும். நான் என்பது எது என்று தெரியாதவர்களுக்கு, எங்கும் நிறைந்த நாமம் தெரியாது. தன்னை உணர்ந்தால், எங்கும் நிறைந்த நாமத்தை உணரலாம்.

தியானத்தாலோ, சாஸ்திர ஞானத்தாலோ, பிற இயம நியமங்களாலோ எங்கும் நிறைந்த நாமத்தை உணர முடியாது. உன்னை முதலில் ஒரு குருவிடம் முழுமையாக சரணம் செய்து, ஒப்படைத்து, அவரிடம் இருந்து, உன்னிடம் இருக்கும் 'நான்' என்பது எது என்று தெரிந்து கொள். நான் என்பது எங்கிருந்து வருகிறதோ, அந்த மூலத்திலே உன் தனித்தன்மையை கரைத்து விடு. அதுவே துவிதமற்ற, என்றும் உள்ள பொருள். அதுவே மூவுலகும் நிறைந்த நாமம்.

துவிதமற்ற அந்த வஸ்துவே பரமாத்மா. அதுவே நாமம்.



(442) **அருணாசல ஸ்துதி பஞ்சகத்தில் ஒரு பாட்டை பகவான் விளக்கினார்.**

**'அருணிறை வான அமுதக் கடலே**
**விரிகதிரால் யாவும் விழுங்கு — மருண**
**கிரிபரமான் மாவே கிளருளப்பூ நன்றாய்**
**விரிபரிதி யாக விளங்கு'**

சூரியன் இந்தப் பிரபஞ்சத்தையே ஒளிர்விக்கறது. ஆனால் அருணாசலம்கற சூரியன் பிரபஞ்சத்தையே உள்ளே ஒடுக்கறது. அதோட ஒளியே மிஞ்சறது. அந்த ஒளியை இப்போ இருக்கற நிலையிலே யாராலும் உணரமுடியலே. உள்ளத்திலே இருக்கற ஹிருதய தாமரை மலரும்போதுதான் உணரமுடியும்.

சாதாரணமான தாமரை சூரிய ஒளியாலேயே மலரும். ஆனா அகத் தாமரையோ சூரியனுக்கெல்லாம் சூரியனான அருணாசலத்தாலேயே மலரும். அருணாசலா! உன் அருளாலேயே என் அகத் தாமரையை மலரச்செய்து உன் அருளொளியே என்றும் ஒளிரட்டும்.

கண்ணாடியிலே தெரியற பிம்பங்கள் உண்மை கிடையாது. அதே மாதிரிதான் உலகமும், மனதிலே ஏற்படற பிரதிபலிப்பு. மனம் இல்லாமே உலகம் இருக்காது.

இப்போ ஒரு கேள்வி வர்றது... உலகம் மனதிலே ஏற்படற ஒரு பிரதிபலிப்புன்னா... உலகம்னு ஒரு பொருள் வெளியே இருக்கணுமே. அப்படின்னா உலகம்ன்னு ஒண்ணு உண்மையிலேயே இருக்கறதா முடிஞ்சுடும். உண்மையிலேயே உலகம்ன்னு ஒண்ணு இல்லை.

அதுக்குத்தான் கனவை எடுத்துக்கறா. கனவு உலகத்துக்கு இருப்பு இல்லை. அப்போ எப்படி வந்தது... வாசனைகள்ன்னு சொல்ல வேணடியதிருக்கு. வாசனைகள் மனசுல எப்படி இருக்கும்? பதில். சூட்சுமா இருக்கும். எப்படி ஒரு பெரிய மரம் விதைக்குள்ளே இருக்கோ அப்படி உலகம் மனசுலேதான் இருக்கு.

இப்போ இன்னொரு கேள்வி வர்றது... விதை மரத்திலே இருந்துதான் வந்துருக்கணும்! அப்போ மரம் ஏற்கனவே இருந்திருக்கணும். அப்போதானே விதை விழும். அப்போ உலகம் ஏற்கனவே இருந்து அதனாலேதான் அது மனசுலே பதிஞ்சுத்து.

இதுக்குப் பதில்... இப்போ இருக்கற உலகத்தைப் பாக்கும்போது நிறைய பிறப்பு நமக்கு இருந்திருக்கணும். அப்போதான் இவ்வளவு வாசனைகள் ஏற்பட்டிருக்கும்.

நான் இப்போ எப்படி இருக்கேனோ... அப்படியே அப்பவும் இருந்திருக்கணும். இது அனவஸ்தா. முடிவில்லாதது.

அதுக்கு நேர் முடிவு... உலகம் இருக்குன்னு சொல்றதுக்கு பாக்கறவன் ஒருத்தன் இருக்கணும். அது நான்தான். முதல்லே நான் யார்ன்னு பாக்கறேன். அப்புறம் இரண்டுக்கும் உள்ள சம்பந்தத்தை பாக்கறேன். இப்போ, நான் என்னை யார்ன்னு பாத்தா... நான் மட்டுமே இருக்கேன் உலகத்தைக் காணோம்!. அப்போ உண்மை என்ன? பாக்கறவன்தான் உண்மை. உலகம் இல்லை.

உண்மை இப்படி இருக்க, மனுஷன் உலகம் உண்மைன்னு வாதிக்கறான். யார் இவனை உலகம் பொய்ன்னு நம்பச் சொன்னா...?

உன் இஷ்டம்.... இருந்துட்டுப் போ!

யோக வாசிஷ்டம் துல்லியமாச் சொல்றது.

"பாக்கப்படும் பதார்த்தங்களுக்கு வாஸ்தவத்திலேயே இருப்பு இருக்கறது என்ற நினைப்பே பந்தம். அதன் நீக்கமே மோட்சம். பார்க்கப்படும் பதார்த்தம் என்பதில் இராமா... நீ, நான், இந்த உலகம் எல்லாமும் சேர்ந்ததுதான்".



(443) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: கண்ணாடியிலே தெரியற ஒரு பிம்பம் மாதிரிதான் உலகம்ன்னா அது பாக்கற ஒரு புலனுக்கு மாத்திரம்தான் அனுபவமாகுது. ஆனா உலகம் ஐம்புலனுக்கும் அனுபவமாகுதே!**

**ஐம்புலனோட அனுபவமும் பொய்ன்னு நிரூபணம் பண்ணினாத்தான் ஏத்துக்க முடியும்.**

ப: சினிமா காட்சியிலே, ஸ்கிரீன்லே ஒருத்தன் உலகத்தைப் பாக்கற மாதிரி காட்றா... அவன் மண்ணை முத்தம் கொடுக்கறான். அருவியோட ஓசையைக் கேக்கறான்.

பூக்களோட நிறத்தை வியக்கறான். வாசத்தை வியக்கறான். நீரோட சுவையை அனுபவிக்கறான். அவனும் அவன் உலகமும் எந்த அளவுக்கு உண்மை? ஒரு பொய்யான தோற்றம் பொய்யான உலகத்தை அனுபவிக்கறது.

**கே: ஆனா, நான்தான் சினிமாவைப் பாக்கறேன்.**

ப: கண்டிப்பா நீதான். நீயும் உலகமும் அந்த சினிமா காட்சி எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை.

**கே: மனம் புலன்களால உலகை அனுபவிக்குது. புலன்கள் தொழில்படும்போது உலகத்தோட இருப்பை மறுக்க முடியலை. உலகம் பொய்ன்னு சொன்னா... கர்மயோகம் அப்போ எப்படி சுத்த ஞானத்துக்கு கொண்டு போகும்?**

ப: உலகம் புலன்களாலே மனசுலே அனுபவப்படறது. அது மனசேதான். பாக்கறவன் மனசையும் புலன்களையும் தனக்கு வேறா பாக்கறது இல்லை. இந்த பாக்கறவன்...மனம், புலன்களோட செயல்பாடுகளாலே பாதிக்கப்படலேன்னா... சுத்தமாகிக்கொண்டே போறான்னு அர்த்தம். தன்னை உணர்ற வரைக்கும் இது தேவை.

(445) ***'அட்சர மணமாலை' பாடல் ஒன்றை விளக்கும்போது***
**'மௌனியாய் கற்போன் மலரா திருந்தான்**
**மௌனமி தாமோ அருணாசலா'.**

ப: மௌனமே உயர்ந்த உபதேசம். இங்கே மௌனம் குருவையும் குறிக்கும்; சிஷ்யனையும் குறிக்கும்; சாதகனையும் குறிக்கும்.

(445) ***சன்யாசிகள் மூவர் கேட்டது.***

**கே: மௌனமா சும்மாயிருந்தா வேலை எப்படி நடக்கும்? கர்ம யோகத்துக்கு இடம் இருக்காதே!**

ப: முதல்லே கர்மம்ன்னா என்ன?

அது யார் கர்மம்... யார் கர்த்தா...?

இதை தெளிவா புரிஞ்சவன் ஆத்ம அமைதி அடையறான். அது வரைக்கும் கர்மம் இருந்துக்கொண்டேதான் இருக்கும்.

**கே: நான் வேலை பாக்கலைன்னா வேலை எப்படி நடக்கும்?**

ப: யார் இந்தக் கேள்வியைக் கேக்கறது?

ஆத்மாவா...?

வேறயா?

ஆத்மா கர்மத்தைப் பத்திக் கவலைப்படறதா?

**கே: இல்லை. ஆத்மா கேக்கலை. வேற ஒண்ணுதான் கேக்குது, அது ஆத்மாவுலே இருந்து வேற.**

ப: அப்போ தெளிவாப் புரியறதே! ஆத்மா கர்மத்தைப் பத்திக் கவலைப்படலே. இந்தக் கேள்வியும் இல்லே.

**கே: ஒத்துக்கறேன்.**

**வேறு ஒருத்தர் கேட்டது.**

**கே: ஒரு ஞானியோட நிலை என்ன? அவன் கர்மம் புரியலையா?**

ப: ஞானி இந்தக் கேள்வியைக் கேக்கலேன்னு கேள்வியில் இருந்தே தெரியறது. ஏன் நமக்கு அடுத்தவா வம்பு?

நாம... நம்மளோட வேலையப்பாப்போம்.

**கே: சாஸ்திரங்கள் அவனையே உயர்வாவும் உதாரணமாவும் பேசுதே?**

ப: நிச்சயம் அவன் உன்னதம்தான்.

நீங்கதான் ஆத்மாவை உணரணும். அவன் நிலையை எவ்வளவு சொன்னாலும் உங்களோட பக்குவத்துக்கு ஏத்த மாதிரிதான் கிரஹிப்பேள்.

நீங்களே உங்களை வரையுற்றவன்னு சொல்றேள்.

ஞானநிலை வரம்பற்றதுன்னு சாஸ்திரங்கள் சொல்றது.

ஞானியோட நிலையை உணர ஒரே வழி நீங்க ஞானியாகறது தான்.

அப்போ இந்தக் கேள்வி இருந்தா... பதில் தேடலாம்.

(445) தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.

**கே: உபதேச சாரத்துலே ஜடத்துக்கும் சித்துக்கும் பேதம் சொல்லப் பட்டுருக்கே. எப்படி?**

**ப:** உபதேசசாரம் கேக்கறவனோட பக்குவத்திலே இருந்து பேசப்படறது. வாஸ்தவத்திலே ஜடம்ன்னு ஒண்ணு கிடையாது. ஜடமும் சித்துதான். இங்கே எல்லாமே சித்துதான்.

(446) **கே: ஒருவர் காவ்ய கண்ட கணபதி முனிவர் எழுதிய 'சத் தர்சன பாஷ்யம்' நூலுக்கும், லட்சுமண சர்மா எழுதிய 'மகாயோகம்' நூலுக்கும், கருத்து வித்தியாசம் இருக்கறதை சுட்டிக் காட்டினார். இரண்டுமே பகவானோட தத்துவத்தை விளக்கற நூல்கள். இரண்டு பேருமே பகவான்கிட்டே பாடம் படிச்சவங்க. ஆனா இரண்டுக்கும் நிறைய வித்தியாசம் இருக்குதுன்னார். மேலும் மகாயோகம் சத்தர்சன பாஷ்யத்தை கண்டிக்குது... அப்படின்னு சொன்னார்.**

**மற்றொருவர் சத்தர்சன பாஷ்யத்தோட வித்தியாசமான கருத்தையும் அதாவது மனோநாசத்துக்கு பிறகு தனித்துவம் இருக்கும்ன்னும் சொல்றதா சுட்டிக்காட்டினார்.**

**ப:** என்ன செய்யறது.... உபநிஷத்துகள் 'பிரஹ்மவித் பிரஹ்மைவ பவதி'ங்கறது.

அதாவது 'பிரம்மத்தை உணர்ந்தவன் பிரம்மமே' யாகறான். ஒரே சமயத்திலே பல பிரம்மவித் இருக்கா. எல்லாரும் ஒண்ணா? இல்லை வேற வேறயா? இப்படி சிலர் கேக்கறா. அவா உடம்பையே பாக்கறா. ஞானத்தைப் பாக்கலே. வெவ்வேற

ஞானிகள் இருந்தாலும் இவா ஞானத்திலே பேதம் இல்லே. அதுதான் உண்மை. ஆனா இந்தக் கேள்வியை உடம்போட நிலைப்பாடுலே இருந்து கேட்டா... பதில்... கண்டிப்பா ஆமாம். வேற வேறதான். இதுதான் இந்தக் குழப்பத்துக்குக் காரணம்.

(446) கிராண்ட் டஃப் கேட்டார்.

**கே: புத்தர்கள் உலகத்தை மறுக்கறா. ஹிந்து சாஸ்திரங்கள் உலகம்கறதை ஒத்துக்கறது. ஆனா மித்யைங்குது சரிதானா?**

ப: மாறுபட்ட கருத்து வேறு வேறு கோணத்திலே இருந்து பாக்கறதாலே ஏற்படறது.

**கே: சக்திதான் உலகத்தை படைக்குதுன்னு சொல்றாங்க. மாயையாலதான் உலகத்தை அறியுறோமா?**

ப: எல்லாரும் சக்திதான் படைக்கறதுன்னு ஒத்துக்கறா. படைக்கறவனோட ஸ்வபாவம் என்ன? அதாவது மாயையோட ஸ்வபாவம் என்ன?

படைக்கறவனோட ஸ்வபாவம்தான் படைக்கப்படறதும். படைக்கறவன் தன்னையேதான் இப்படிப் படைச்சுக்கறான்.

**கே: மாயையில பல தரங்கள் இருக்கா?**

ப: மாயையிலே இல்லே.

மாயைன்னு பாக்கறதுக்கு ஒருத்தன் இருக்கணுமே?

அவன்தான் மாயையோட தரத்தைப் பத்தி சொல்ல முடியும்.

சினிமாவிலே நெருப்பு எரியறது. அருவி கொட்டறது. ஆனா ஸ்கிரீன் ஒண்ணும் ஆகமாட்டேன்றது. ஏன்?

படம் பொய். ஸ்கிரீன் உண்மை. அப்படியே உலகமும் ஒரு சத்தியத்திலே தோன்றுகிற தோற்றம். அந்த ஸத்யத்துக்குப் பாதிப்பு எதுவும் இல்லே. இருக்கறது அது ஒண்ணுதான். பார்வையை ஞானமா மாத்தினா... உலகம் பிரம்மமாயிடும்.



*(448) தியாகராஜர் கீர்த்தனைகளை ஒருத்தர் பகவான் சன்னதியில் பாடினார்.*

அதைக் கேட்டு முடிச்ச உடனே பகவான் 'தியாகராஜர் ரொம்ப சரியா சொல்றார். முதல்லே மனத்தைக் கட்டுப்படுத்தணும்னு சொல்றார். நமக்கு அடுத்த கேள்வி வர்றது... மனம்னா என்ன? அவரே அடுத்த வரியிலே பதில் சொல்றார். தேகாத்ம புத்தியே மனம். அப்போ அடுத்த கேள்வி... எப்படிக் கட்டுப்படுத்தறது? பதிலும் அவரே சொல்றார். சம்பூர்ண சரணாகதியாலே. அப்போ சம்பூர்ண சரணாகதி எப்படிப் பண்றது? அவரே சொல்றார்: 'நான்'ன்னு ஒண்ணும் இல்லே. எல்லாம் அவனே'ன்னு உணர்றதுதான் சம்பூர்ண சரணாகதி. இந்தப் பாட்டு உள்ளதை சுருக்கமாவும் தெளிவாவும் சொல்றது.

(449) *தரிசனம் பண்ண வந்த நீண்ட நாள் பக்தர்.*

**கே: பகவான்கிட்டே இருக்கற ஒரு சக்தி உலகத்தோட எல்லா மூலைகள்லே இருந்தும் இந்த இடத்துக்கு ஆட்களை இழுக்குது.**

**ப:** எது ஓய் உம்ம பகவானை இழுத்தது இந்த ஊருக்கு! அதேதான் ஓய் எல்லாத்தையும் இழுக்கறது!

(449) **பகவான் இன்னைக்கு நிறைய கதை சொன்னார்.**

**இராஜன் கதை:**

**ப:** ஒரு ராஜா, ராணியோடு வாழ்ந்து வந்தான். அந்த ராணி... பெரிய பக்தை. அவளுக்குப் பெரிய குறை... ஸ்ரீராமனோட ஸ்ரீராமனோட கணவன் ஸ்ரீராமர் மேலே பக்தியா இல்லேன்னு... ஒரு இரவு... படுக்கையிலே தூங்கும்போது, ராஜா ஏதோ முணுமுணுக்கற மாதிரி கேட்டது. ராணி, ராஜாவோட வாய்கிட்டே காதை வச்சு என்ன முணுமுணுக்கறார்ன்னு கேட்டா... பாத்தா... ராஜா கிட்டேயிருந்து ராமா... ராமான்னு

ஜபம் வந்துகொண்டே இருந்தது. ராணிக்கு ரொம்ப சந்தோஷமாயிடுத்து. அடுத்த நாள் மந்திரியைக் கூப்பிட்டு... ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செஞ்சா. விருந்திலே கலந்துகொண்ட ராஜா, ராணிகிட்டே விருந்துக்கு என்ன காரணம்ன்னு கேட்டான். ராணியும் தன்னோட நீண்ட நாள் மனக்குறையையும், நேத்து இரவு நடந்ததையும், ராஜன்கிட்டே சொன்னா. அதைக் கேட்ட ராஜா ரொம்ப மனம் உடைஞ்சு போனார். தன்னுடைய அந்தரங்க பக்தி வெளியானதே, அதுக்குக் காரணம்.

சிலர் சொல்றா. இறைவனுக்குத் துரோகம் பண்ணிட்டதா நினைச்சு அவன் தற்கொலை செஞ்சுகொண்டான்னு. நாம... ராஜன் ராணியிடம், 'இது மாதிரி எல்லாம் பக்தியை ஆர்ப்பாட்டம் பண்ணக்கூடாது'ன்னு கண்டிச்சு ரெண்டு பேரும் நீண்ட நாள் சந்தோஷமா வாழ்ந்தான்னு எடுத்துப்போம்.

**தொண்டரடிப் பொடியாழ்வார் கதை:**

தொண்டரடிப் பொடியாழ்வார்... ஒருத்தரோட நிலத்திலே துளசித் தோட்டம் அமைச்சு, பெருமாள் கோவிலுக்கு துளசி மாலை கட்டிதர்ற கைங்கர்யம் பண்ணிக்கொண்டு இருந்தார். அவர் பிரம்மச்சாரியாவே வாழ்ந்து, எல்லோராலேயும் மதிக்கப் படுபவரா இருந்தார். ஒருநாள் இரண்டு தேவதாசி சகோதரிகள், அவரோட தோட்டத்து வழியா போகும்போது, அங்கே இருக்கற மரநிழல்லே இளைப்பாறினா. அப்போ ஒருத்தி, மூத்தவ சொன்னா, 'நம்மளோட வாழ்க்கை எவ்வளவு அருவருப்பா இருக்கு. தினம் நம்மளோட உடம்பையும் மனசையும் களங்கப்படுத்திக் கொண்டேயிருக்கோம். இந்த மனுஷனோட வாழ்க்கையே சிறந்தது.'

அதுக்கு இளையவ, 'அவர் மனசு என்னன்னு நமக்கு எப்படித் தெரியும்? வெளியே பாக்க எல்லாம் அப்படித்தான் இருப்பா. உடம்பை வேணா அடக்கி வச்சுருப்பாரு. மனசு அடங்காது. அது தாறுமாறாத்தான் அலையும். வாசனை அவ்வளவு எளிதா விடாது'ன்னா.

அதுக்கு மூத்தவ, 'மனம் எப்படி இருக்குங்கறதுக்கு அவாளோட செயல்களே அடையாளம். அவரோட வாழ்க்கையே, அவர் மனம் சுத்தமா இருக்குன்னு சொல்றது'.

அதுக்கு இளையவ, 'அவரோட மனச இன்னும் சோதிச்சுப் பாக்கலே. அதனாலே இதை ஒத்துக்க முடியாது'ன்னா.

மத்தவ, 'அப்போ.... நீ சோதிச்சுப் பாரு'ன்னு சொன்னா. இளையவளும் ஒத்துக்கொண்டா. மூத்தவ வீட்டுக்குத் திரும்பிட்டா. இளையவ ஒரே உடுத்தின மெல்லிய துணியோட அங்கேயே தங்கினா. அந்த மரத்தடியிலே பொறுமையா அடக்க ஒடுக்கமா தங்க ஆரம்பிச்சா.

அதைப் பாத்த ஆழ்வார், அவளை கூப்பிட்டு, 'யாரம்மா நீ? இங்கே இருக்கியே'ன்னார். அவ தன்னோட கடந்த காலத்தைச் சொல்லி, அதுக்கு ரொம்ப மனம் வருந்தறதாவும் அதுக்குப் பிராயச்சித்தமா இறைத்தொண்டிலே ஈடுபட விரும்பறதாவும் சொன்னா. அவர்கிட்டே அவ, 'தோட்டத்தை சுத்தம் பண்ற வேலையைச் செய்றேன். உங்களுக்கும், என்னாலே முடிஞ்ச சேவையை செய்றேன். என்னை நீங்க ஏத்துக்கணும்'னு பிரார்த்தனை பண்ணினா.

அவரோ ஒத்துக்கலே. அவளுக்கு அறிவுரை சொல்லி, வீட்டுக்குப்போய் சாதாரண வாழ்க்கையை வாழச் சொன்னார். அவ ஒத்துக்கலே. சரின்னு தோட்டத்தைப் பராமரிக்கற வேலையைப் பார்ன்னு சொன்னார். அவளும் சந்தோஷமா தோட்டத்திலே துளசிக்கெல்லாம் ஜலம் விடற வேலையை செஞ்சுகொண்டு அங்கேயே தங்கியிருந்தா.

அப்போ ஒரு இரவு சரியான மழை... அவளோட உடுப்பெல்லாம் நனைஞ்சு, ஈரம் சொட்டச்சொட்ட, நடுங்கிக்கிட்டே ஆழ்வார் இருக்கற குடில்லே ஒதுங்கி நின்னா. ஆழ்வார், 'ஏம்மா இப்படி நிக்கறே... என்ன ஆச்சுன்னு கேட்டார். அதுக்கு அவ, 'நான் இருக்கற குடிசை ரொம்ப ஒழுகறது. எங்கேயும் இடம் இல்லே. அதுதான் மழை நிக்கற வரைக்கும் இங்கே ஒதுங்கலாம்ன்னு வந்தேன். மழை விட்ட உடனே

போயிடுவேன்'னு சொன்னா. அவரும், 'சரி உள்ளே வா'ன்னு சொன்னார். ஈரத்துணியை மாத்திக்க சொன்னார். அவகிட்டே துணி இல்லேன்னு சொன்னா. அவரோட துணியை எடுத்துக் கொடுத்து கட்டிக்க சொன்னார். அவளும் அதை மாத்திக்கொண்டு வந்து, 'உங்களோட காலைக் கொஞ்சம் அமுக்கி விடறேன்'னு கெஞ்சினா. அவரும் சரின்னு ஒத்துக்கொண்டார்.

முடிவிலே அவா ஒருத்தரோட ஒருத்தர் இணைஞ்சா.

அடுத்த நாள் அவ வீட்டுக்குத் திரும்பிப் போய்ட்டா. நல்லா சாப்பிட்டு நல்ல உடைகளை உடுத்திக்கொண்டு, அப்பப்போ தோட்டத்துக்கு வந்து வேலைகளைச் செய்வா. சில நாள் வராமே, அவ வீட்டிலேயே தங்கிடுவா. அப்போல்லாம் அவர், அவ வீட்டுக்குப் போயிட்டு வருவார். கடைசியிலே ஒண்ணாவே சேந்து வாழ ஆரம்பிச்சார். இவ்வளவு நடந்தப்போவும் அவர் கைங்கர்யத்தை விடலே. தினம் தோட்டத்தைப் பராமரிச்சு, மாலை கட்டி சுவாமிக்கு அனுப்பிடுவார். ஊர்லே எல்லாரும் தப்பா பேச ஆரம்பிச்சா.

சுவாமி இதுக்கு ஒரு முடிவு கட்டி, அவரைப் பழைய வழிக்கே கொண்டு வரணும்ன்னு நினைச்சு, ஆழ்வாரோட உருவத்தை எடுத்தார். இப்போ... அவர் உருவத்துலே சுவாமி, தாசி வீட்டுக்குப் போய்... சுவாமியோட கால் தண்டையைப் பரிசா கொடுத்தார். அவளும் சந்தோஷமாகி அதைத் தலையணைக்கு அடியிலே ஒளிச்சு வச்சுக்கொண்டா. இப்போ சுவாமி மறைஞ்சுட்டார். இதையெல்லாம் ஒரு வேலைக்காரன் ஒளிஞ்சு பாத்துக்கொண்டு இருந்தான்.

இப்போ கோவில்லே சுவாமியோட கால் தண்டைக் காணலே. அர்ச்சகர்கள் அதிகாரிகள்கிட்டே முறையிட்டா. அதிகாரிகளும், இதைப் பத்தின துப்பு கொடுத்தா, பரிசு தர்றதா அறிவிச்சா. வேலைக்காரன் துப்பு கொடுத்து, பரிசை வாங்கிக்கொண்டான். காவலர்கள், தாசி வீட்டுலே இருந்து சுவாமியோட கால் தண்டையைக் கைப்பத்தி, அவளையும் கைது செஞ்சா. அவ ஆழ்வார்தான் கொடுத்தார்ன்னு சொல்லிட்டா.

ஆழ்வாரையும் காவலர்கள் பிடிச்சு கடுமையான தண்டனை தரப்போறப்போ, வானத்திலே இருந்து ஒரு அசரீரி கேட்டது. 'நான்தான் கொடுத்தேன்; அவனை விட்டுடுங்கோ'ன்னு.

அரசனும் எல்லோரும் ஆச்சரியத்திலே, ஆழ்வார் காலிலே விழுந்து நமஸ்காரம் பண்ணி அவரை விடுதலை பண்ணினா. அவரும் பிறகு முன்னாடி இருந்ததை விட, சிறப்பாவும், பரிசுத்தமாவும், இறைவனுக்காக வாழ்ந்தார்.

**கடுவெளி சித்தர் கதை:-**

கடுவெளி சித்தர்ன்னு ஒருத்தர் அபார தபஸ்க்கு பெயர் பெற்று இருந்தார். அவர் மரத்திலே இருந்து விழற காய்ஞ்ச இலைகளைச் சாப்பிட்டு உயிர் வாழ்ந்தார். அரசன் அவரைப் பத்திக் கேள்விப்பட்டு வந்து பாத்தான். இவர் ஞானி இல்லேன்னு யாராவது நிரூபிச்சா பரிசு தர்றதா அறிவிச்சான்.

ஒரு பணக்கார தாசி அதுக்குச் சம்மதம் தெரிவிச்சு, அவர் இருக்கற இடத்துக்குப் பக்கத்துலே வசிக்க ஆரம்பிச்சா. அந்த அவருக்குப் பணிவிடைகளும் செஞ்சுகொண்டு வந்தா. அந்த காய்ஞ்சஇலைகளுக்குஊடே... அப்பளத்தைப் போட்டுவைப்பா. அவரும் அதை எடுத்துச் சாப்பிடுவார். அவளும், கொஞ்சம் கொஞ்சமா, மத்த பதார்த்தங்களையும் காய்ஞ்ச இலைகளோட இலையா சேத்து வைப்பா. அவரும் சாப்பிடுவார். அப்புறம் அவா ஒண்ணு சேர்ந்து வாழ ஆரம்பிச்சுட்டா. அவாளுக்கு ஒரு குழந்தையும் பிறந்தது. தாசி அரசனுக்கு இதையெல்லாம் தெரிவிச்சா. அரசனும் இதை எல்லார் முன்னாடியும் நிரூபிக்க முடியுமான்னு கேட்டான். அவளும் ஒத்துக்கொண்டு, ஒரு திட்டம் சொன்னா. அதுபடி, அரசனும் தாசியோட சதுராட்டத்துக்கு ஏற்பாடு பண்ணினார். எல்லோரையும் கூப்பிட்டார். குழந்தையை சித்தர்கிட்டே பாத்துக்கச் சொல்லிட்டு, தாசியும் அன்றைக்கு குழந்தைக்கு பால் குடுக்காம ஆட்டத்துக்கு வந்துட்டா...

ஆட்டம் வெகு ஜோரா போய்க்கொண்டு இருக்கு.... அங்கே குழந்தை அம்மாவுக்கு அழறது.... இவரும் குழந்தையைத்

தூக்கிக்கொண்டு ஆட்டம் நடக்கற இடத்துக்கு வந்தார். அவ பம்பரமா ஆடிக்கொண்டு இருக்கா. இவர்னாலே அவகிட்டே போக முடியலே. அதைத் தாசி பாத்துட்டா, இப்போ அவ என்ன பண்ணினா... ஆடிக்கிட்டே இவர் நிக்கற இடத்துக்கு வந்தா. அவளோட கால் சலங்கையை ஆட்டத்தின்போதே ஒரு மாதிரியா ஆடி, கழண்டு விழற மாதிரி செஞ்சுகொண்டா. இப்போ அவர் முன்னாடி நின்னு, அந்தக் காலை தூக்கிக் காட்டுனா... இவரும் சலங்கையைக் கட்டி விட்டார்... மக்கள் எல்லாரும் பாத்து கைகொட்டி சிரிச்சா. ஆனா அவர் இதனாலே பாதிக்கப்படலே. இருந்தாலும் அவரோட நிலையை உணர்த்துறதுக்காக பாட்டு ஒண்ணு பாடினார்.

'நான் இரவும், பகலும் ஆத்மாவிலேயே இருக்கறது உண்மைன்னா... இந்தப் பாறை சுக்குசுக்காகட்டும். உடனே பலத்த சத்தத்தோட அந்தப் பாறை வெடிச்சு சிதறித்து. மக்கள் எல்லோரும் வியப்படைஞ்சா.

ஒரு ஜீவன்முக்தன் பிராப்தத்தாலே உடம்போடு சம்பந்தப் பட்டாலும், அவன் ஞானநிலையிலே இருந்து நழுவி, அஞ்ஞானத்திலே மாட்டிக்கொண்ட மாதிரி தெரியுமே தவிர, உண்மையிலேயே அவன் ஆகாசத்தை மாதிரி அதிசுத்தமானவன். ஆகாசம் மேகங்களாலே நிறைஞ்சு இருந்தாலும், ஸ்வச்சமா இருந்தாலும், அதோட பரிசுத்த தன்மைக்கு எப்படி எந்த பாதிப்பும் இல்லையோ அப்படித்தான். கற்புடைய மனைவி பதி மேலேயே பிரியம் கொள்றது மாதிரி, அவன் ஆத்மாவிலேயே எப்பவும் ரமிப்பான்.

அவன் மூடன் மாதிரி மௌனமா இருந்தாலும்... அவனுடைய மௌனமே வேதங்களின் உட்கருத்து.

குருன்னு தன்னைச் சொல்லிக்காம, தன்னை அடுத்தவாளுக்கு, குரு சிஷ்யன்கறது எல்லாம் பொய்ன்னு நல்லாத் தெரிஞ்சாலும்... அசரீரியா உபதேசம் பண்ணுவான். .

அவன் பேசறது சில சமயம் உளர்றது மாதிரி இருக்கு.... சிவானந்தத்தை வெளிப்படுத்த வார்த்தை இல்லாததாலேதான்.

சில சமயம் மடைதிறந்த மாதிரி பேசறது...... அவனோட சுயானுபவத்தை நினைவு கூர்றதுதானே தவிர... அதிலிருந்து இவன் கீழ இறங்கறது இல்லே.

அடுத்தவா மாதிரியே, தன்னைச் சுத்தி நடக்கற துக்கங்களைப் பாத்து இவனும் துக்கிப்பான்.

இந்திரியங்களை முன்பு கட்டுப்படுத்தியதுபோலே... இப்போ கட்டுப்படுத்த மாட்டான்.

பரம்பொருளோட உபகரணங்களாவும் வெளிப்பாடுமாதான் இந்திரியங்களையும், உலகத்தையும் பார்ப்பான்.

சில சமயம் போகத்திலே பொருந்தினா... ஆத்மா னந்தத்தையே அனுபவிப்பான்.

கோபப்படுவதும் பிறர் நன்மைக்கே.

அவனுடைய செயல்கள் எல்லாம் ஈஸ்வரனோட செயல்தான்.

பரமேஸ்வரன் மனுஷ வேஷம் கொண்டு உலவறான்.

அவன் வாழறதே பரோபகாரம்தான்.

**பரிட்சீத்து கதை:-**

பரிட்சீத்து மகாராஜா இன்னும் பிறக்கலே. பிறந்த உடனே இறந்து போயிடுவான். பெண்கள் எல்லாம் கிருஷ்ணர்கிட்டே முறையிடறா. எப்படியாவது காப்பாத்துங்கோன்னு. முனிவர்கள் எல்லாம், எப்படி அசுவத்தாமனோட அபாண்டவ அஸ்திரத்திலே இருந்து, கிருஷ்ணர், குழந்தையைக் காப்பாத்தப் போறார்ன்னு யோசிச்சா. கிருஷ்ணர் சொன்னார், 'யாராவது நிஷ்ஸ்கலித நித்ய பிரம்மச்சாரி குழந்தையைத் தொட்டு ஆசீர்வாதம் பண்ணினா குழந்தை பிழைச்சுடும்'.

யாரும் முன்வரலே. சுகப்பிரம்ம மகரிஷியே முன்வரலே. மிகச் சிறந்த முனிவர்களே முன் வராததைப் பாத்த கிருஷ்ணர் அவரே வந்து 'நான் நிஷ்ஸ்கலித நித்யப் பிரம்மச்சாரிங்கறது ஸத்யம்ன்னா... இந்தக் குழந்தை பிழைக்கட்டும்'ன்னு கையைக் குழந்தையோட தலையிலே வச்சு ஆசீர்வாதம் பண்ணினார். குழந்தை பிழைச்சுடுத்து. அந்தக் குழந்தையே பரிட்சீத்து மகாராஜன்.

கிருஷ்ணர் 16000 கோபிகைகளாலே எப்பவும் சூழப்பட்டவர். ஆனா அவர்தான் நிஷ்ஸ்கலித பிரம்மச்சாரி. இதுதான் ஜீவன் முக்தனோட விசேஷம். அவன் ஆத்மாவைத் தவிர வேற எதையும் பார்ப்பதில்லை.

இதே ஒருத்தன்... சித்திகளை வேணும்னே காட்டணும்ன்னு நினைச்சா அடிதான் விழும்.

(450) உமாதேவி என்ற போலந்து பெண்மணி கேட்டார்.

கே: நான் ஹிந்துவா மாறினப்போ எனக்கு சிவனோட தர்சனம் கிடைச்சது. அதே மாதிரி ஒரு அனுபவம் திரும்பவும் குற்றாலத்துலேயும் கிடைச்சது. அந்த தரிசனம் கொஞ்ச நேரம்தான் இருக்கு. ஆனா ஆனந்தமா இருக்கு. அது எப்பவும் கிடைக்கணும். அதுக்கு என்ன செய்யணும்?

எனக்கு சிவன் இல்லாம வாழ்க்கையே இல்லே. அவரை நினைக்கறது ஒண்ணுதான் சந்தோஷம். என்னோட தர்சனம் எப்பவும் கிடைக்கணும். எப்படி?

ப: நீங்க ஏதோ சிவபெருமான் காட்சி கொடுத்தார்ன்னு சொல்றேள்... காட்சி எப்பவுமே பாக்கப்படற பொருள். அதைப் பாக்கறதுக்கு ஒருத்தன் இருக்கணும். அதைத்தான் நீங்க பாத்த காட்சி சொல்றது. நீங்க பாத்த காட்சியோட மகிமை பாக்கறவனோட விசேஷம்தான்.

காட்சின்னாலே.... மறையும்ன்னுதான் அர்த்தம். ஒரு காட்சி எப்பவும் பரமார்த்த சத்யமா இருக்காது. ஆனா சிவம் பரமார்த்த ஸத்யம். பிரத்யட்சமா கண்ணாலே பாத்தேன்னு சொன்னா.... அதுக்கு கண்ணு வேணும். கண்ணு பாக்கணும்னா புத்தி வேணும். புத்திக்கும், பார்வைக்கும் பின்னாலே... பாக்கறவன் இருக்கணும். கடைசியா பாக்கறவனுக்கு பின்னாடி அறிவு இருக்கணும். இந்த பிரத்யட்ச காட்சி, நீங்க நினைக்கற மாதிரி உண்மை கிடையாது. ஏன்னா... அது நம்மளோட ஸ்வபாவம் இல்லே. அது நேர் அனுபவம் இல்லே. அறிவோட பல தரங்களை

தாண்டி கிடைக்கற அனுபவம். இதிலேயே அறிவு மாத்ரம்தான் மாறாதது. அதுதான் எப்பவும் இருக்கறது. அதுதான் சிவம். அதுதான் ஆத்மா.

காட்சி... காண்பானையே குறிக்கும். காண்பான்... ஆத்மா இல்லாமல் இல்லே. ஆத்மா... அறிவா இல்லாத காலமே இல்லே. பாக்கறவன் இந்த அறிவுதான். எப்பவும் இருக்கற இருப்பு. பாக்கறவன்... தன்னையே... நீங்க சிவபெருமானை பிரத்யட்சமா பாத்த மாதிரி பாக்க முடியாது. அதுக்காக நான் இல்லேன்னு யாராவது சொல்வாளா? இல்லே. அதனாலே பிரத்யட்சம்ன்னா... பாக்கறது இல்லே. இருக்கறது.

இருக்கறதுதான் ஞானம். அதனாலேதான் I Am that I Am-ன்னு கடவுள் பைபிள்லே சொல்லியிருக்கார். நான் நானாயிருக்கேன்னா... நான்கறதுதான் இறைவன்; சிவம். வேறு எதுவும் அதைத் தவிர இருக்க முடியாது. எல்லோரும் சிவமாவேதான் இருக்கோம். சிவத்தாலேயேதான் இருக்கோம்.

அதனாலே நான் யார்ன்னு விசாரிங்கோ! உள்ளே ஆழ்ந்து ஆத்மாவாவே இருங்கோ! அதுதான் சிவமா இருக்கறது. அவரைப் பாக்கணும்ன்னு எதிர்பார்க்காதேள்! நீங்க பாக்கற மத்தப் பொருட்களுக்கும், சிவனுக்கும் என்ன வித்தியாசம்?

சிவம்தான் பாக்கறவனும், பாக்கப்படற பொருளும். சிவம் இல்லாம நீங்க இருக்கவே முடியாது. சிவத்தை இங்கேயே இப்போவே எல்லாரும் உணர்ந்துகொண்டேதான் இருக்கோம். நீங்க இன்னும் சிவத்தை உணரலேன்னு நினைச்சா... அது தவறு. அந்த நினைப்பே பெரிய தடை. அந்த நினைப்பை இத்தோட விட்டுடுங்கோ! இங்கேயே இப்போவே சிவம் இருக்கு.

**கே: ஆமாம். அதை இப்பவே உடனே எப்படி அடையறது?**

ப: இதுதான் ஞானத்துக்குப் பெரிய தடை. யாராவது சிவம் இல்லாமே இருப்பாளா?

இப்போவே நீங்க சிவம்தான். இதுக்கு காலத்திலே இடமே இல்லை. நீங்க ஒருவேளை.... ஒரு நிமிஷமாவது.... சிவத்தை உணராம இருந்தா, சிவத்தை உணர்றதைப் பத்தி பேசலாம். சிவம்

நீங்கதான். சிவம் இல்லாம நீங்க இல்லே. சிவம் ஏற்கனவே உணரப்பட்டே இருக்கார். எப்பவும் உணரப்பட்டே இருக்கார். உணரப்படாம இருந்ததே இல்லே.

அவரைச் சரணடைஞ்சுடுங்கோ! அவரோட இஷ்டத்துக்குக் கட்டுப்படுங்கோ! அவர் தோன்றுவதும், மறையறதும் அவரோட இஷ்டம்னு விடுங்கோ! எப்போ வேணும்னாலும் வரணும்னா... அது சரணடையறது இல்லை. அவரை அடிமைப்படுத்தறது. ஏவறது. அவரையெல்லாம் அப்படிப் பண்ணமுடியாது. ஆனா நீங்க அவருக்கு அடிமைன்னு நினைச்சுக்கறேள். எது உங்களுக்கு நல்லதுன்னு அவருக்குத் தெரியும். அதை எப்போ செய்யணும்னும் அவருக்குத் தெரியும், மொத்தமா எல்லாத்தையும் அவர்கிட்டே விட்டுடுங்கோ. அவர் பாரம். நமக்குத் தலைவலி இல்லை. நம்மளோட கவலை எல்லாம், அவர் கவலை. அதுதான் பக்தி; சரணாகதி.

இல்லேன்னா.... இந்தக் கேள்வி எல்லாம் யாருக்கு வர்றதுன்னு பாருங்கோ. உங்களுக்குள்ளேயே ஆழ்ந்து ஆத்மாவாயிருங்கோ. ரெண்டு வழிதான் இருக்கு சாதகாளுக்கு.

'நான் இருக்கேன்'கறது எல்லோருக்கும் அனுபவமா இருக்கறதாலே, யார்தான் இங்கே சிவம் இல்லே...! அவன் மட்டும் சிவம் இல்லே...! அவன் பாக்கறதும் பாக்காததும் எல்லாம் சிவம்தான்...! ஆனாலும் அஞ்ஞானத்தாலே உலகத்தை பேதத் தோற்றமாவே பாக்கறான். 'இருக்கறது'ன்னு பாத்தா... ஆத்மான்னு பாத்தா.... பேதத் தோற்றம் தெரியாது. அவனும் மத்த பேதத் தோற்றமும் ஒரே சிவமாவே இருக்கும்.

துணியைப் பாக்கறவன் நூலைப் பாக்காதது மாதிரி சினிமாவைப் பாக்கறவன் ஸ்கிரீனைப் பாக்காதது மாதிரி, எழுத்தைப் பாக்கறவன் காகிதத்தைப் பாக்காத மாதிரிதான். இங்கே எல்லாம் சிவம்தான். அறிவுதான் இப்படித் தோற்றங்களா இருக்கு. அஞ்ஞானி இந்தத் தோற்றத்தையே பாக்கறான்.

சிவம்தான் இங்கே இருக்கு. அதுவே பாக்கறவனும், பாக்கப்படற பொருள்களாவும் வடிவெடுத்து இருக்கு. காண்பான், காட்சிக்கு ஆதாரமா சிவம் இருக்குன்னு இதைத்தான் சொல்றா.

இதைத்தான் சும்மாயிருக்கற சிவன்; நடனமாடற சிவன்னு சொல்றா. அல்லது சிவ-சக்தி; புருஷ-பிரகிருதி எல்லாம் ஒண்ணுதான். எந்தப் பேர்லே இதைச் சொன்னாலும் அது அறிவுதான். ஆடினாலும், சும்மா இருந்தாலும் அது அறிவுதான்.

இங்கே இருக்கேன்கற அறிவு இல்லாமே யார் இருக்கா? அப்போ யாரும் ஞானமடையாமே இல்லே. அப்போ ஞானமடையறதைப் பத்தியோ அதுக்கு வழியைப்பத்தியோ கேள்விக்கே இடம் இல்லே. நான்கறதுதான் பிரத்யட்சம். இப்படி நமக்கு பிரத்யட்சமா இல்லேன்னா வேணா... சிவம் பிரத்யட்சமா இல்லேன்னு சொல்லலாம்.

இந்தக் கேள்வி எல்லாம் நம்மள உடம்போட சம்பந்தப் படுத்திக்கறதனாலேயே ஏற்படறது. அப்போதான் உள்ளே வெளியே எல்லாம் வர்றது. பாக்கறவன், பாக்கப்படற பொருள் எல்லாம் கிளம்பறது. பாக்கற காட்சியிலே ஒரு விசேஷமும் இல்லை. அது எப்பவும் இருந்தாக்கூட ஒரு விசேஷமும் இல்லை. திருப்தியும் தராது. உமாதேவி எப்பவும் சிவத்தோட சேர்ந்துதான் இருக்கா. அவா ரெண்டு பேரும் சேந்ததுதான் அர்த்தநாரீஸ்வரர். ஆனா உமா சிவத்தோட உண்மை ஸ்வபாவம் தெரியணும்ன்னு தேடினா. தபஸ் பண்ணினா. அவ தியானத்திலே பெரிய ஒளி தெரிஞ்சது. அவ, 'இது சிவமாயிருக்க முடியாது. ஏன்னா என்னாலே பாக்கப்படறதே! அப்போ நான் அந்த ஒளியை விடப் பெரியது'ன்னு தபஸைத் தொடர்ந்து செஞ்சா. நினைப்புகள் ஒழிஞ்சது. சும்மாயிருக்கற நிலை ஏற்பட்டது. அப்போ உமா.... இருப்பை உணர்ந்தா.... அதாவது சிவத்தை அதோட உண்மை ஸ்வபாவத்திலே.

அப்போது முருகனார். அப்பர் தேவாரத்திலிருந்து ...

**'நின்னுள்ளத்து அருள்கொண்டு இருள் நீக்குதல்**

**என்னுள்ளத்துள எந்தை பிரான் நீரே!'**ன்னு குறிப்பிட்டார்.

பகவான் திருவாசகத்திலே,

'கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்

கேட்டறியோம் உன்னைக் கண்டறிவாரை'...ன்னு இதைத் தான்சொல்றா. கடவுளையும்பாக்கணும்... நானும்இருக்கணும்னா முடியாது. அங்கே பாக்கறவன், பாக்கப்படுபொருள், பார்வை எதுவும் இல்லே. எல்லாம் பரமசிவத்திலே அடங்கிடும்.

(451) எஸ்.எஸ். *சூரியநாராயண சாஸ்திரி கேட்டார்.*

**கே: உலகத்தை எப்படி கற்பனை; நினைப்புன்னு சொல்லலாம். நினைப்பு மனசோட தொழில். மனம் மூளையிலே இருக்கு. மூளை மண்டை ஓட்டிலே இருக்கு. மண்டை ஓட்டை பிரபஞ்சத்தோட கணக்குப் பண்ணா, அணுமாத்ரம். எப்படி மூளையோட செல்கள்லே உலகம் இருக்குன்னு சொல்றீங்க?**

ப: ஒருத்தன் கனவு காண்றான்... ஒரு ரூம்லே கதவைப் பூட்டிக்கொண்டு தூங்கறான். எதுவும் வந்துடக்கூடாதுன்னு... தூக்கத்திலே கண்ணையும் மூடிக்கறான். எதையும் பாத்துடக்கூடாதுன்னு... ஆனாலும் கனவு வர்றது. கனவிலே ஒரு பெரிய ஊர்லே ஆட்கள் வந்தும் போய்க்கொண்டுமா இருக்கா. அவனும் அங்கே இருக்கான். அந்த ஊர் ரூமுக்குள்ளே கதவு வழியா வந்துதா! இல்லே, அவன் மூளையிலே இருந்து விரிஞ்சதா?

சரி, யார் மூளையிலே இருந்து விரிஞ்சது?

தூங்கறவனோட மூளையிலே இருந்தா? இல்லே. கனவிலே இருக்கறவனோட மூளையிலே இருந்தா?

தூங்கறவனோட மூளையிலே இருந்துதான். தூங்கறவனோட மூளையிலே இருக்கற செல்களுக்குள்ளே எப்படி பெரிய ஊரும் ஆட்களும் இருக்கும்? இதை விளக்கப் பழைய பல்லவியையே பாடணும். உலகம் நினைப்புதான். நினைப்போட தொடர்ச்சி.

**கே: எனக்குப் பல் வலிக்கறது. அதுவும் நினைப்பா?**

ப: ஆமா.

**கே: அப்போ ஏன் நினைச்சே பல்வலியைப் போக்கிக்க முடியலே?**

ப: பிற நினைப்புகள்லே மூழ்கி இருக்கறப்போ பல்வலி தெரியலே. தூங்கும்போது தெரியலையே!

**கே: ஆனாலும் பல்வலி அப்படியே இருக்கே!**

ப: உலகம் உண்மைன்னு அவ்வளவு திட நிச்சயம் இருக்கு. அதனாலே போக்கிக்க முடியலே.

**கே: இப்போ சீனா-ஜப்பானிய யுத்தம் நடக்குது. இது எல்லாம் ஒரு கற்பனைன்னா... பகவான் அது முடிஞ்சுட்டதா ஒரு கற்பனை பண்ணி போரை முடிவுக்கு கொண்டு வர முடியுமா?**

ப: இந்தக் கேள்வியிலே உள்ள பகவானும், சீனா-ஜப்பானிய யுத்தம் மாதிரி கற்பனைதான்.

(452) திரு. தார் கேட்டார்.

**கே: தியானத்தை எப்படி நிரந்தரமாக்கறது?**

ப: தியானம்னா என்ன?

நினைப்பு இல்லாமே இருக்கறது. இந்தத் தியானத்தை எப்படி நிரந்தரமாக்கறதுன்னு நினைக்கற தொந்தரவு எல்லாம் நினைப்பாலேயே வர்றது. நாம தியானம் பண்றோம்கறதே நினைப்புதான். நினைப்பை விடுங்கோ! அதுதான் சுகம். அதுதான் தியானம்.

**கே: நினைப்பை எப்படி விடறது?**

ப: நினைக்கறவனுக்குதான் நினைப்பு. நினைக்கறவனை விடுங்கோ. அவனைக் கண்டுக்காதேள்! அதுதான் அவனுக்கு ஆகாரம். நினைப்பை இப்படித்தான் விடணும்.

**கே: பிரம்மம் பரிபூரணம்ன்னா படைப்புலே ஏன் இவ்வளவு குறைகள்?**

ப: கேள்வி கேக்கறவன் படைப்புக்குள்ளேயே இருக்கறதாலே இந்தக் கேள்வி பொருந்தாது. இந்தப் படைப்புக்கு அப்பால் நின்னு பாத்தா, அப்போ இந்தக் கேள்வி வர்றதான்னு பாக்கலாம்.

(453) **திருமதி. ஹிஸ்ட், திருமதி. கிராக், திருமதி. அலிசன் கேட்டார்கள்.**

**கே: உலக அமைதிக்கு சிறந்த வழியில் எப்படிப் பாடுபடலாம்?**

ப: உலகம்ன்னா என்ன? அமைதின்னா என்ன? யார் பாடுபடறது?

உலகம் உங்களோட தூக்கத்திலே இல்லை. மனம் உலகத்தை விழிப்பிலே தோன்றச் செய்யறது. அதனாலே உலகம் நம்மளோட நினைப்பு. வேற ஒண்ணும் இல்லை.

அமைதின்னா... தொந்தரவு இல்லேங்கறதுதான். தொந்தரவு எது?

ஒருத்தன்கிட்டே ஏற்படற நினைவுகள்தான். அவன் அறிவிலே ஏற்படற போலி அகந்தைதான் நினைப்புக்குக் காரணம். அமைதியைக் கொண்டு வர்றதுன்னா... நினைப்பிலே இருந்து விடுபட்டு இருக்கறது. அறிவாவே இருக்கறது. இப்படி அமைதியா இருந்தா எல்லா இடத்திலேயும் அமைதியே இருக்கும்.

**கே: 'தப்பு. இதை நான் செய்யக்கூடாது'ன்னு ஒண்ண நான் நினைக்கறேன். அதனால இன்னொருத்தர் செய்யப்போற, பெரிய தவறுல இருந்து காப்பாத்தப்படுவாங்க. அதை நான் செய்யலாமா... செய்யக்கூடாதா?**

ப: எது சரி! எது தவறு! எந்த நியாயத்தை வச்சு, இது சரி இன்னொன்னு தப்புன்னு சொல்றது. நியாயம்,

இடத்துக்கு இடம், ஆளுக்கு ஆள் மாறுபடும். மேலும் இதெல்லாம் கற்பனை. அதைப்பத்தி கவலைப்படாதேள்! நினைப்புகள்லே மாட்டிக்காதேள். அப்படி இருந்தா சரியாகவே வழிநடத்தப்படுவேள்!

**கே: தியானம் பண்ணும்போது எதை நினைக்கணும்?**

**ப:** தியானம்ன்னா என்ன?

நினைப்பு இல்லாம இருக்கறது. நினைப்பு ஒண்ணொன்னா வந்து தொந்தரவு பண்ணும். ஒரே நினைப்பை பிடிச்சுக்கொண்டு, மத்ததை விரட்டணும். இடைவிடாத அப்பியாசம், தேவையான மனோபலத்தைக் கொடுக்கும்.

தியானம் ஒருத்தருக்கு ஒருத்தர் மாறுபடும். பக்குவமானவன் நேர நினைக்கறவனை பிடிச்சுப்பான். நினைக்கறவன் மூலத்திலே அமுங்கிடுவான். அதாவது சுத்த அறிவிலே ஒடுங்கிடுவான்.

நேரடியா நினைக்கறவனைப் பிடிக்க முடியலேன்னா... கடவுளைத் தியானிக்கணும். காலக்கிரமத்திலே நினைக்கறவனைப் பிடிச்சுக்கற பக்குவத்துக்கு வந்துடுவான்.

**ஏற்கெனவே கேட்ட ஒரு கேள்வியைப் பற்றி மறுபடியும் விளக்கமாகக் கேட்டார்கள்.**

**ப:** நம்மளோட தப்பைத்தான் பிறர்கிட்டே பாக்கறோம். நல்லது கெட்டதுன்னு பிரிக்கறதுதான் வினைக்கு ஆரம்பம். ஒவ்வொருத்தனும் அவனோட பூர்வவினையத்தான் வெளியே, உலகமா பாக்கறான். அறியாமையாலே, அவன் தப்பு... இவன் தப்புன்னு... பிறர் மேலே அதை ஏத்திக்கறோம். இந்த சரி தப்புன்னு பாக்காத நிலையிலேயே, பேசாம இருந்துடணும். அதுதான் இதுக்குத் தீர்வு.

தூங்கும்போது சரி... தப்புன்னு பாக்கறேளா? தூக்கத்திலே நீங்க இல்லையா? அதே மாதிரி இப்பவும் இருக்கணும். ஆத்மாவாயிருங்கோ! உங்களைச் சுத்தி என்ன நடந்தாலும் பாதிக்கப்படாமே இருங்கோ! நீங்க எவ்வளவு நல்லதை எடுத்துச் சொன்னாலும் யாரும் கேக்கப்

போறது இல்லே. திருந்தவும் மாட்டா. உங்களோட நியாயத்திலே அமைதியாயிருங்கோ! உங்களோட அமைதி.... வார்த்தை, செயலை விட மிகப் பலமானது. அதுதான் மனோபலம். இப்போவே உலகம் தேவலோக சாம்ராஜ்யமா இருக்கும். அது உங்களுக்குள்ளே இருக்கு.

**கே: ஒருத்தர் உலகத்துல இருந்து இப்படி ஒதுங்கிக்கொண்டா அப்போ உலகம் எதுக்கு?**

ப: உலகம் எங்கே இருக்கு?

எங்கே ஒருத்தன் ஒதுங்கறது! ஏரோபிளேன்லே ஏறி ஆகாசத்துக்குப் போயிடறானா..... அதுதான் ஒதுங்கறதா!

**கே: நான் உலகத்துல இருக்கேன். நான் அதோட ஒரு பகுதி.**

ப: அதுதான் தவறு. உலகம் வந்து சொல்லித்தா, 'நான் உலகம்; நான் இருக்கேன்; நீ என்னோட பகுதி'னு... அப்படி இருந்ததுன்னா.... அது சொல்லணும். தூங்கும்போதும் உலகம் இருக்கணும்.

**கே: நான் விழிப்புலையே அதை பாக்கறேன்.**

ப: முதல்லே உங்களைப் பாத்து அப்புறம் உலகத்தைப் பாக்கறேளா?

இல்லே, முதல்லே உலகத்தைப் பாத்து அப்புறம் உங்களைப் பாக்கறேளா?

இல்லே, இரண்டையும் ஒண்ணாப் பாக்கறேளா?

**கே: இரண்டையும் ஒண்ணாத்தான் பாக்கறேன்.**

ப: உங்களைப் பாக்கறதுக்கு முன்னாடி நீங்க இருந்தேளா? இல்லையா?

நீங்க உலகத்தைப் பாக்கறதுக்கு முன்னாடியும், பாத்த பிறகும், இடைவிடாம இருந்தேளா?

**கே: ஆமாம். இடைவிடாம இருந்தேன்.**

ப: நீங்க எப்பவும் இருக்கேள்னா.... ஏன் தூங்கறப்போ உலகத்தை பாக்கலே?

**கே: விழிப்பு வரும்போதுதான், என்னையும் உலகத்தையும் பாக்கறேன்.**

ப: அப்ப, நீங்க உங்களைப் பாக்கறேள்.
யார் யாரைப் பாக்கறது?
இரண்டு நான் இருக்கா?

**கே: இல்லை.**

ப: ஆத்மா எப்பவும் அறிவாவேதான் இருக்கு. அது தன்னைப் பாக்கறவனோட சம்பந்தப்படுத்திக் கொண்டுதான் பொருட்களைப் பாக்கறது. இந்தப் பாக்கறவன், பாக்கப்படு பொருள், வந்துடறதில்லையா... இதைத்தான் உலகத்தோட தோற்றமா சொல்றோம்.

சுத்த அறிவிலேயே இரண்டும் தோன்றும்.... இருக்கும்.

சினிமாவிலே எப்படி படம் ஸ்கிரீன்லே தெரியறதோ அப்படி. படத்தையே பாக்கறதாலே ஸ்கிரீன் தெரியலே. ஆனா ஸ்கிரீன் இல்லாமே படம் இல்லை. உலகம்... படத்துக்கும், அறிவு... ஸ்கிரீனுக்கும் பொருந்தும். அறிவு சுத்தம். அதுதான் ஆத்மா.

பாக்கறவனையும், பாக்கப்படறதையும் போக்கிக் கொண்டா.... சுத்த அறிவே மிஞ்சும்.

**கே: அப்படின்னா எதுக்கு பிரம்மம்.... ஈஸ்வரன் உலகத்தை படைக்கணும்?**

ப: பிரம்மமோ ஈஸ்வரனோ வந்து சொல்லித்தா?

இதெல்லாம் நீங்க சொல்றது. தூக்கத்திலே சொல்றேளா...! அதுவும் விழிப்பிலே மட்டும்தான் சொல்றேள்...! இந்த விழிப்பு, காண்பான் காட்சி இரட்டைகள், எல்லாம் நினைப்பாலேயே வர்றது. அதனாலே அது உங்களோட நினைப்பு படைச்சதுதான். அதை ஈஸ்வரன் படைச்சான்னு சொல்லக் கூடாது.

**கே: தூங்கும்போது உலகம் இருக்கு. நான் பாக்கல. ஆனா பிறர் பாத்துருக்காங்க.**

ப: அவா, நீங்க தூங்கும்போது வந்து சொன்னாளா? இல்லே... தூக்கத்திலே உலகத்தைப் பாத்தவாளை... பாத்தேளா?.

**கே: இல்லை. கடவுளுக்கு உலகம் இருந்தது தெரியும்.**

ப: அப்போ கடவுள் பாத்துக்கட்டும். உங்களுக்குக் கடவுளைத் தெரியாது. நீங்க எதுவா நினைக்கறேளோ அதாத்தான் தெரியும். கடவுள் உங்களை விட்டு வேறா? அவன்தான் சுத்த அறிவு. இந்தக் கற்பனையெல்லாம் நடந்துகொண்டு இருக்கறதுக்கான காரணம். நீங்கதான் அந்த அறிவு.

(454) **திருமதி. தார் கேட்டார்.**

**கே: பகவான் வேலை பாக்கும்போது விசாரத்திலேயே இருக்கச் சொல்றீங்க. விசாரத்தோட முடிவு ஒடுங்கறது. மனம் ஒடுங்கினா பிராணனும் ஒடுங்கும். அப்போ எப்படி வேலை நடக்கும். அல்லது வேலை செய்யும் போதே பிராணன் ஒடுங்குமா?**

ப: சாதனத்தை சாத்தியத்தோட குழப்பிக்கறோம். யார் விசாரம் பண்றவன்?

சாதகன்தான். சித்தன் இல்லே. விசாரிக்கறான்னாலே இன்னும் பேதம் இருக்குன்னுதானே அர்த்தம். பேதம் இருக்கற வரைக்கும் விசாரம் பண்ணணும். தனித்தன்மை போற வரைக்கும்... ஆத்மாதான் இங்கே இருக்குன்னு உணர்ற வரைக்கும் விசாரம் தேவை.

உண்மை எப்பவும் இருக்கு. விசாரத்தோட நோக்கம்... இருக்கறதை உணர்றதுதான். தான் ஒரு தனிஇருப்புங்கற நினைப்பு இருக்கற வரைக்கும் ஒருத்தன் விசாரம் பண்ணணும்.

ஞானம் வந்துட்டா விசாரம் தேவையில்லே. கேள்வியே வராது. இருப்பு எப்போவாவது... யார் இருக்கறதுன்னு யோசிச்சுருக்கா?

இருப்பு சாமான்யமாவும் சுத்தமாவும் இருக்கு.

விசாரிப்பவன் தன்னோட தனித்தன்மையை உணர்றான். விசாரம் அவனோட அறிவைப் பாதிக்கறது இல்லே. அதாவது அவன் இருக்கான்கறதை ஒண்ணும் செய்யப்போறது இல்லே.

வேலையும் அவன் இருக்கான்கறதை பாதிக்கறது இல்லே. வெளிவேலை, அவனோட தனி இருப்பையே பாதிக்கலேன்னா... எப்பவும் இருக்கற இருப்பையா பாதிச்சுடும்!

**கே: நான் இந்த படைப்புக்குள்ளதான் இருக்கேன். அதை விட்டு சுதந்திரமா ஆனாத்தான் என்னை யார்ன்னு தெரியும். ஆனாலும் பகவானே எனக்காக அதோட விடையை சொல்லக்கூடாதா?**

ப: ஆமாம். பகவான்தான் சொல்றார். நீங்கதான் செய்யணும். நீங்க சுதந்தரமாகி உண்மையை நீங்களே தெரிஞ்சுக்கோங்கோ.

நீங்க இப்போ இந்தக் கேள்வி கேக்கறதுக்கு எங்கே இருக்கேள்?

உலகத்துலே இருக்கேளா?

இல்லே உலகம் உங்களுக்குள்ளே இருக்கா?

நீங்களே ஒத்துக்கறேள்... தூங்கும்போது உலகம் இல்லை. ஆனா நான் இருக்கேன்னு... நீங்க விழிச்சவுடன் உலகம் தோணிடறது... அப்போ அது எங்கே இருக்கு?

கண்டிப்பா உங்களோட நினைப்புதான். நான்கறது முதல்லே வர்றது. அப்புறம் உலகம். உலகத்தை நான்கற எண்ணம்தான் படைக்கறது. நான்கற எண்ணம் ஆத்மாவிலே இருந்து வர்றது. நான்கற எண்ணத்தை எதுன்னு பாத்துட்டா... உலகத்தோட புதிர் புரிஞ்சுடும். அதனாலேதான், நீங்க யார்ன்னு பாருங்கோன்னு...... சொல்றேன்.

உலகம் உங்ககிட்டே வந்து, 'நான் ஏன் வந்தேன்'னு கேட்டுத்தா?

'நான் எப்படி படைக்கப்பட்டேன்'னு கேட்டுத்தா?

நீங்கதான் கேக்கறேள்... கேக்கறவனுக்கும் உலகத்துக்கும் ஒரு சம்பந்தம் இருக்கணும். ஏன்னா.... அது அவனோட கற்பனை.

யார் கற்பனை பண்றா?

முதல்லே நான்கறதைத்தான் கண்டுபிடிக்கணும்.

அப்புறம்தான் ஆத்மா.

உண்மையிலேயே... ஞானத்திலே உலகம்னு ஒண்ணு படைக்கப்படவே இல்லேன்னு முடிஞ்சுடும். தன்னைப்பாத்தா உலகம் தெரியாது. உலகத்தைப் பாத்தா தன்னைத் தெரியாது.

(456) **யாரோ ஒருவர் கேட்டார்.**

குருகூட ரொம்ப நாள் இருக்கக்கூடாது. ஒரு பெரிய மரத்துக்கு அடியிலே இன்னொரு மரம் வளர முடியாதுங்கற பொருள்பட காஞ்சன்காடு சுவாமி ராமதாஸ் எழுதிய கட்டுரை பகவானிடம் வாசித்துக் காண்பிக்கப்பட்டது.

**கே: குருகூட ரொம்ப நாள் இருக்கறது ஆபத்தா?**

ப: ஒருத்தன் விதேக முக்தி அடையற வரைக்கும் குருகூடத் தான் இருக்கணும்.

உண்மையிலேயே குரு யார்?

எங்கே இருக்கார். அவர் நம்மளோட அந்தராத்மா.

கைவல்ய நவநீதத்திலே,

**"நற்கருத்துடையோனாகி**
**ஞானவானாகி நின்றோன்**
**மர்கட நியாயம் போல**
**மகாபூத விகாரந் தொட்டு**
**நிர்க்குண விதேக முத்தி**
**நிலை பரியந்தம் சொன்ன**
**சற்குருவினை விடாமல்**
**சந்ததம் அநுசரித்தான்."**... ங்கறா.

**சந்ததம் புருடன் தன்னை சாயைபோல் விடாமல்**...ங்கறா. என்றும் எப்போதும் தன்னைப் பிரியாத நிழல்போலே குருகுலவாசம் பண்றவன் குருகுலத்தை விட்டு வெளியே

போறது எங்கே? உள்ளே இருக்கறது எங்கே? அவனுக்கு எல்லா இடமும் குருகுல வாசம்தான்.

(462) திருமதி. தார் கேட்டார்.

**கே: வீட்டிலே என்னாலே தியானம் பண்ண முடியலே. என்னோட உடல் நிலையும் சரியில்லை. உங்க கூட இருக்கற எல்லோரும் ஆனந்தமா அமைதியா இருக்காங்க. எங்களுக்கு கொடுப்பினை இல்லை. நாங்க ஊருக்கு கிளம்பறோம். இந்த நினைப்பே ரொம்ப வேதனையைக் கொடுக்குது.**

ப: என்னாலே தியானம் பண்ண முடியலேங்கற நினைப்புதான் தடை. ஏன் இப்படி நினைக்கணும்?

**கே: ஒருத்தராலே நினைப்பு இல்லாமே இருபத்திநாலு மணி நேரமும் இருக்க முடியுமா? நான் தியானம் பண்ணத் தேவையில்லையா?**

ப: நேரம்ன்னா என்ன?

அது கற்பனை. உங்களோட ஒவ்வொரு கேள்வியும் ஒரு நினைப்புதான்.

உங்களுடைய இயல்பே சுகம்தான். அமைதிதான். நினைப்புதான் ஞானத்துக்கு தடை. ஒருத்தரோட தியானமோ, ஏகாக்கிரமோ நினைப்பைப் போக்கறதுக்குத்தான். ஞானத்தை அடையறதுக்கு இல்லே. அமைதியே உண்மையான ஆத்ம ஸ்வபாவம். அப்போ எனக்கு அமைதி இல்லேன்னு நீங்க சொன்னேள்னா.... அது உங்களோட நினைப்புதான். அது ஆத்மா இல்லை.

தியானம் பண்றது இந்த மாதிரி நினைப்பைப் போக்கறதுக்குத்தான். ஒரு நினைப்பு எழுந்தா, அப்பவே அதைப் பாத்துடணும். அதோட சேரக்கூடாது. சேந்தா அது அடுத்த நினைப்புக்குக் கூட்டிக்கொண்டு போகும். அது அடுத்ததுக்கு...

அப்புறம் அதோகதிதான். நீங்க உங்களை மறக்கறதனாலேயே உடம்பை நினைக்கறேள். ஆனா உங்களை மறக்க முடியுமா? நீங்க நீங்களாவே இருக்கும்போது எப்படி மறக்க முடியும்?

இரண்டு நான் இருந்தாத்தான்... ஒண்ணு இன்னொன்னை மறக்க முடியும். அது முட்டாள்தனம். ஆத்மா வேதனைப்படலே. அது குறையுணர்ச்சி உடைய பொருள் இல்லே. எப்பவும் அதுக்கு நேர் மாறான உணர்ச்சிதான் நினைப்பு. அதுக்கு உண்மையிலேயே இருப்பு கிடையாது.

நினைப்புகளைப் போக்குங்கோ! நாம எப்பவுமே ஆத்மாவாவே இருக்கும்போது, ஏன் தியானம் பண்ணணும்? நாம எப்பவும் ஞானம் அடைஞ்சேதான் இருக்கோம். நினைப்பு இல்லாமே இருக்கணும். அவ்வளவுதான்.

உங்களோட உடல்நிலை தியானத்துக்கு ஒத்துழைக்க மாட்டேங்கறதுன்னு நீங்க நினைக்கறேள். இந்த வேதனை எப்படி வர்றதுன்னு பாக்கணும். நம்மள உடம்போட தப்பா சேத்துக்கறதாலே ஏற்படறது. நோய் ஆத்மாவுக்கு இல்லை. உடம்புக்குதான். உடம்பு வந்து சொல்லித்தா, 'எனக்கு உடம்பு சரியில்லே'ன்னு. நீங்கதான் சொல்றேள். ஏன்?

உடம்போட தவறா நம்மள சம்பந்தப்படுத்திக் கொண்டோம். உடம்பே நினைப்புதான். நீங்க எப்பவும் இருக்கற மாதிரியே இருங்கோ. கவலைப்படறதுக்கு எந்தக் காரணமும் இல்லே. சும்மாயிருங்கோ! கவலையில்லாமே இருங்கோ!

**கே: இதெல்லாம் உங்க அருளாலே மட்டும்தான் முடியும். மனித முயற்சி பக்கத்துலே கூட போகாது.**

ப: ஆமாம்.

**கே: நான் கேக்கறது சரணடையறது பத்தி. நீங்க சொல்றது ஞானம். எங்களுக்கு குழப்பமாயிருக்கு.**

ப: ஞானம் வந்தாத்தான் சரணடைய முடியும். முழுமையான சரணாகதி அப்போதான் பலிதம் ஆகும்.

ஞானம் விசாரத்தாலேயே வரும். சரணடையறதா முடிஞ்சுடும்.

**கே: தனித்தன்மையை இழக்கறப்போதான் ஞானத்துக்கே தயாராகறோம். தனித்தன்மை இழந்த பிறகுதானே ஞானம் வருது. அப்போ எதுக்கு சரணடையணும்?**

ப: அப்படித்தான். ஞானத்துக்கும் சரணடையறதுக்கும் வித்தியாசம் இல்லே.

**கே: அப்போ எனக்கு இருக்கற ஒரே வழி சாதுசங்கமும் ஈஸ்வர பக்தியும்தான்.**

ப: அப்படியே!

(465) ஐகோர்ட்டு ஜட்ஜ் கேட்டதற்கு.

பகவான் உபதேசசாரத்திலே இருந்து சில குறிப்புகள் கூறினார்.

1. தியானம் இடைவிடாமே தைலதாரையா இருக்கணும். அதுக்குப் பேர்தான் சமாதி.

2. மனம் லயமாகும்போது லயப்பட்ட மனசு மீண்டும் உதிக்கும். எந்த மாற்றமும் இருக்காது. ஏன்னா மனோலயத்திலே வாசனைகள் அழியாது. திரும்பவும் வந்துடும்.

மனோநாசம். இது லயத்திலே இருந்து வேறுபட்டது. பற்று போயிடும். திரும்பவும் வராது. மனோ நாசத்துக்குப் பிறகு அவன் உலகத்தைப் பாத்தாலும் அது ஆத்மாவோட தோற்றமாவே இருக்கும்.

நம்மளோட உண்மையான ஸ்வபாவம் சமாதியிலேயே தெரியும். அப்போ என்ன இருக்கோ... அதுதான் இப்பவும் இருக்கு. இல்லேன்னா அதை ஸத்யம்ன்னு சொல்ல முடியாது. சமாதியிலே எது இருக்கோ... அது இங்கேயே இப்போவே இருக்கு. அதைப் பிடிச்சுக்கோங்கோ. அதுதான் உங்களோட ஸ்வபாவ ஸ்திதி.

சமாதிப் பழக்கம்.... சகஜப் பழக்கத்துக்குக் கொண்டு போயிடும். இல்லேன்னா... நிர்விகல்ப சமாதியாலே ஒரு பிரயோஜனமும் இல்லே. கட்டை மாதிரி எவ்வளவு நாள் கிடந்தாலும் திரும்பவும் இந்த உலகத்தைப் பாக்கணும். ஆனா சகஜத்திலே உலகத்தாலே பாதிக்கப்படாமே இருக்கான்.

ஸ்கிரீன்லே சினிமா வர்றது. மழை பெய்யறது! தீ பிடிக்கறது! ஸ்கிரீன் பாதிக்கலே. அப்படியே, ஞானி முன்னாடி, இந்த உலகம் சும்மா போகும். அவனை ஒண்ணும் செய்யாது.

உலகத்துலே ஜனங்க உலக விஷயங்களாலே சுகதுக்கப் படறா. ஆனா அது ஆரோபத்தாலேதான். அதுதான் கூடாது. அதுவேதான் நம்மளோட அப்பியாசத்தோட நோக்கமா இருக்கணும்.

அப்பியாசம் இரண்டு வகைதான் இருக்கு. பக்தி இல்லேன்னா ஞானம். இந்த இரண்டுமே கூட முடிவு இல்லே. சமாதிதான் முடிவு. அதை சகஜம் சித்திக்கற வரைக்கும் அப்பியாசிக்கணும். அப்புறம் எதுவும் பாதிக்காது.



(466) **வைத்தியலிங்கம், நேஷனல் பாங்க் கேட்டார்.**

**கே: தியானத்துலே தோற்றம் மறைஞ்சுடுது. ஆனந்தம் ஏற்படுது. அது அப்புறம் போயிடுது. அது எப்பவும் இருக்க என்ன பண்ணணும்?**

ப: வாசனை எல்லாம் பொசுக்கணும்.

**கே: ஆத்மா சாட்சி மாத்திரமா?**

ப: சாட்சின்னா ஏதாவது பாக்கறதுக்கு ஒரு பொருள் இருக்கணும். அப்போ துவைதம் வந்துடும். உண்மை இது இரண்டையும் தாண்டி இருக்கு. சாட்சின்னா... சந்நிதின்னு பொருள். அதாவது அது இல்லாமே எதுவும் இல்லை. சூரியன் இல்லாமே எந்த வேலையும் இல்லை. ஆனா சூரியன் சாட்சியாவா இருக்கு. ஆனாலும், சூரியன் இல்லாமே எந்தக்

கார்யமும் இல்லை. சூரியனோட ஸந்நிதி மாத்திரத்திலே கார்யங்கள் நடக்கறது. அப்படியேதான் ஆத்மாவும்.

(467) யோகி ராமையா கேட்டார்.

**கே: எல்லாக் காரியங்களையும் ஒரு சக்திதான் பண்றது எது வரைக்கும் சக்தி வேலை பாக்கும்? நம்ம பிரயத்தனம் இருக்கற வரைக்கும்தானே!**

ப: நாமன்னு எதைச் சொல்றேள்ங்கறதைப் பொறுத்துத்தான். நாமன்னு நீங்க சொல்றது அகந்தையையா? ஆத்மாவையா?

**கே: நான்கறது ஸ்வரூபம்தான்!**

ப: ஸ்வரூபம் எந்தப் பிரயத்தனமும் பண்ணாது. ஜீவன்தான் பிரயத்தனம் பண்றான்.

ஜீவபாவம் இருக்கற வரைக்கும் பிரயத்தனம் அவசியம். ஜீவபாவம் போயிடுத்துன்னா... வேலைகள் தானே நடக்கும். ஜீவன் ஆத்ம சந்நிதியிலேயே தொழில் படறது. ஆத்மா இல்லாமே ஜீவன் இல்லே. ஆத்மா தன்னோட சக்தியாலே உலகத்தைப் படைக்கறது. ஆனா அதே படைக்கலே.

கிருஷ்ணர் பகவத்கீதையிலே 'நான் கர்த்தா இல்லை. வேலைகள் தானே நடக்கறது'ன்னு சொல்றார், ஆனாலும் மகாபாரதத்திலே எவ்வளவு கார்யம் பண்றார். ஆனாலும் நான் எதுவும் செய்யலேங்கறார். சூரியனும் உலக கார்யங்களும் மாதிரி.

**கே: ஸ்ரீகிருஷ்ணருக்கு அபிமானம் இல்லை. ஆனா ஜீவனுக்கு இருக்கே!**

ப: ஆமாம். அபிமானத்தாலேதான் கர்மம் புரியறான். பலனையும் அனுபவிக்கறான். பலன் அவன் ஆசைப்பட்ட மாதிரி இருந்தா சந்தோஷப்படுவான். இல்லேன்னா துக்கப் படறான். சுகதுக்கம் அபிமானத்தாலேதான். அபிமானம் இல்லாமே செஞ்சா, பலனுக்கு எதிர்பார்ப்பும் இருக்காது.

**கே: நம்ம முயற்சி இல்லாம வேலை அதுவாவா நடக்குது? சாப்பிடணும்ன்னா சமைக்க வேண்டியது இருக்கே?**

ப: ஆத்மா அகந்தை வாயிலாத்தான் வேலை பாக்கறது. எல்லாக் கார்யமும் முயற்சியாலேதான்.

தூங்கற குழந்தைக்கு தாய் ஊட்டறா, குழந்தையும் சாப்பிடறது.

மறுநாள் நான் சாப்பிடலேங்கறது. தாய்க்குத் தெரியும் ஊட்டினது.

அப்படித்தான் ஞானியும். வேலை பாக்கறது அவனுக்குத் தெரியாது.

பிறருக்கு அவன் வேலை பாக்கற மாதிரி தெரியும். அவனுக்குத் தெரியாது. அவன்தான் எல்லாத்தையும் நடத்தறான். உலகம் அவனுக்குக் கட்டுப்பட்டு நடக்கும். ஆனா அவனுக்கு அது தெரியாது. இதுதான் இங்கே நியதி. அதனாலேதான் அவனை மாகர்த்தன்கிறோம். எல்லா அஞ்ஞானியும் நியதிக்குக் கட்டுப்பட்டுத்தான் நடக்கணும். பிரம்மாவும் இதுக்கு விலக்கு இல்லே.



(467) **யோகி ராமையா கேட்டார்.**

**கே: சிஷ்யன் குருவை ஞானத்துக்காக அடையறான்.**

**குரு சொல்றார், 'பிரம்மத்துக்கு எந்தக் குணமும் இல்லே. எந்த அசைவும் இல்லே'.**

**இப்போ குரு ஒரு தனியாளா இருந்துதானே பேசறார்... குரு ஒரு தனி இருப்போட இருந்து பண்ற உபதேசம்.... எப்படி சிஷ்யனோட அஞ்ஞானத்தைப் போக்கும்? இப்படி ஒரு குரு தனித்தன்மையோட பண்ற உபதேசம் எப்படி சத்தியமாகும்?**

ப: குரு யார் கிட்டே பேசறார்? யாருக்கு உபதேசம் பண்றார்? தனக்கு அன்னியமா யாரையாவது பாக்கறாரா?

**கே: ஆனா குருவை சிஷ்யன் கேக்கறது சந்தேக நிவர்த்திக்குத்தானே?**

ப: உண்மைதான். ஆனா குரு அவனைப் பேதமா பாக்கறாரா? சிஷ்யனோட அஞ்ஞானமே... இங்கே எல்லோரும் ஞானிதான்னு தெரியாததுதான். யாராவது ஆத்மாவுக்கு அன்னியமா இருக்க முடியுமா?

இது எல்லாம் ஒரே பொருள்தான்னு குரு சிஷ்யனோட அஞ்ஞானத்தைத்தான் சுட்டிக்காட்டறார். அவரே அதுக்கு மாட்டிப்பாரா? மாட்டார்.

ஞானம்னா என்ன? கடவுளை நாலு கையோட சங்கு சக்கரத்தோட பாக்கறதா?

அப்படியே அவர் காட்சி கொடுத்தாலும்.... அது எப்படி சிஷ்யனோட அஞ்ஞானத்தைப் போக்கும். ஸத்யம் எப்பவும் உணரப்பட்டதா இருக்கணும். பிரத்யட்சம்கறது நாம இருக்கறதுதான். 'கடவுள் பிரத்யட்சமா காட்சி கொடுத்தார்ன்னு'தான் சொல்றோம். அதுக்கு அர்த்தம்... 'ஞானம்'... சங்கு சக்கரத்தோட வந்து நின்னார்ங்கறது இல்லே. ஞானம் ஏற்கெனவே எப்பவும் இருக்கணும்... இல்லேன்னா ஞானம் ஏற்கெனவே எப்பவும் இருக்கணும்... இல்லேன்னா பிரயோஜனம் இல்லே. நாலு கையோட பாக்கறதா எப்பவும் இருக்கற ஞானம். அது தோற்றம்; மித்யை; பொய். பாக்கறவன் ஒருத்தன் இருக்கணும். பாக்கறவன்தான் உண்மையும், எப்பவும் இருக்கற சத்யமும்.

சரி, கடவுள் கோடி சூர்ய பிரகாசமா தோன்றட்டும். அது பிரத்யட்சமா? பாக்கறதுக்கு கண்ணு வேணும். மனசு வேணும். அது பரோக்ஷ ஞானம். பாக்கறவன்தான் அபரோக்ஷம். பாக்கறவன்தான் பிரத்யட்சம். மத்தது எல்லாம் இரண்டாம் பட்சம்தான். நான் உடம்புங்கற எண்ணம் வேரூன்றி ஆழமா இருக்கு. அதனாலே கண்ணாலே பாக்கறதையே பிரத்யட்சம்னு சொல்றோம். பாக்கறவனை விட்டுடறோம்.

யாரும் இங்கே ஞானத்தைத் தேடறது இல்லே. ஏன்னா ஞானமில்லாமல் யாரும் இல்லே. யாராவது எனக்கு ஏற்கனவே ஞானம் இல்லேன்னு சொல்ல முடியுமா? இல்லே.... நான் ஆத்மாவிலே இருந்து வேறன்னு சொல்லமுடியுமா? முடியாது. அதனாலே எல்லோரும் ஞானமடைஞ்சேதான் இருக்கா. எது அவனைத் துக்கமாக்கறதுன்னா விசேஷ சக்திகள் இல்லேங்கறதுதான். அதைக் காட்டணும்கற நினைப்புதான். அவனாலே முடியாதுன்னு அவனுக்கே தெரியும். அதனாலே கடவுள் அவன் முன்னாடி வந்து, அவரோட சக்தி விசேஷங்களை, அவனுக்குக் கொடுத்துட்டு ஒதுங்கிக்கணும்ன்னு நினைக்கறான். மொத்தத்திலே கடவுள் அவரோட சக்தியை அவனுக்குத் தந்தாப் போறும்.

**கே: உங்களை மாதிரி இப்படி தைரியமா போட்டு உடைக்கறதுக்கு இங்கே யாரும் இல்லை.**

ப: உள்ளதைச் சொல்றதுக்கு எதுக்கு ஓய் தைரியம் வேணும்? பொய்யைச் சொல்றதுக்குத்தான் ஓய் தைரியம் வேணும்.

**கே: நீங்க சொல்றது உங்களுக்குச் சரி... நீங்க வழுவாத நிலையில இருக்கீங்க... உங்க ஸ்திதி வேற... அதனால எல்லோருக்கும் அது எளிமையாத்தான் இருக்குன்னு நீங்க நினைக்கறீங்க... ஆனா எங்கள மாதிரி சாதாரணப் பட்டவங்க கதி ரொம்ப திண்டாட்டம்...!**

ப: அப்போ யாராவது நான் இல்லேன்னு வந்து சொல்லட்டும் ஓய்!



**(470) ஐரோப்பிய பெண்மணி ஒருத்தர் ஊருக்குக் கிளம்பும் தன்னையும் தன் குடும்பத்தையும் ஆசீர்வாதம் பண்ண வேண்டினார்.**

ப: நீங்க நினைக்கற மாதிரி சந்நிதியை விட்டு நீங்க எங்கேயும் போகலே. சந்நிதி எங்கும் இருக்கு. உடம்பு ஒரு

இடத்திலே இருந்து இன்னொரு இடம் போறது. ஆனாலும் சந்நிதியை விட்டுப் போறது இல்லே. பரம்பொருளோட சாந்நித்தியத்தை விட்டு யாரும் போக முடியாது. நீங்க உங்களை ஒரு உடம்பாவும், பகவானை ஒரு உடம்பாவும், இரண்டு தனிப்பட்ட ஆள்கன்னு பாக்கறதாலே, இங்கேயிருந்து போறேன்னு சொல்றேள். நீங்க எங்கே இருந்தாலும் 'நான்' அங்கே இருப்பேன்... என்னை விட்டுப் போக முடியாது.

(472) *யாத்திரை வந்த பஞ்ஜாபிகள் கேட்டது.*

**கே: கடவுளை நம்பறவங்களுக்கு சரி, மத்தவங்களுக்கு... அவங்க கேக்கறாங்களே கடவுள் இருக்காரான்னு....**

ப: நீங்க இருக்கேளா?

**கே: ஆமாம். இந்த உலகத்தைப் பாக்கறேன். அதனாலே நான் இருக்கேன். ஆனா இந்த உலகத்தைப் படைச்சவரை நான் எப்படிப் பாக்கறது!**

ப: இந்த உலகத்தைப் பாக்கறவனைப் பாருங்கோ. உங்களோட பிரச்சனை தீந்துடும்.

**கே: பேசாம சும்மாயிருக்கறதா... இல்ல சாஸ்திரங்களை படிக்கறதா... இல்லை தியானம் பண்றதா...?**

**ஒரு சிறந்த பக்தனா இருந்தா மக்கள் எல்லாரும் கால்ல விழறாங்க. அது நடக்கலைன்னா ஏமாற்றமாயிடுது. பக்தியும் போயிடுது.**

ப: சுகத்துக்கான பிரேரேபணை போகாது... அதுதான் பக்தி.

**கே: அதை எப்படி விரைவா அடையறது? இன்னைக்கு இரண்டு மணி நேரம் தியானம் பண்ணா நாளைக்கு அதைவிட அதிக நேரம் பண்ணணும்ன்னு நினைக்கறேன். ஆனா தூங்கிடறேன். வேலை களைப்பாக்கிடுது.**

ப: தூங்கும்போது சோர்வு இல்லையே! அதே ஆள்தான் இப்பவும் இங்கே இருக்கான். இப்போ ஏன் சோர்வாகணும்? ஏன்னா... உங்களோட மனசு அலையறது. சோர்வாகறது. நீங்க இல்லே.

**கே: நான் ஒரு வியாபாரி. வியாபாரமும் பாத்து, மன அமைதியும் எப்படி பெறுவது?**

ப: இது உங்களோட நினைப்பு. இந்த நினைப்பை விடுங்கோ! நீங்க நீங்களாவேயிருங்கோ!

**கே: பலனை எதிர்பாக்காம கர்மம் பண்ணச் சொல்றாங்களே! அந்த மனநிலைக்கு எப்படி வர்றது?**

ப: எந்த மனநிலைக்கும் வர வேணாம். இப்போ இருக்கற நினைப்பைப் போக்கிக்கோங்கோ. அவ்வளவுதான்.

**கே: அதுக்கு தேவையான பக்தியை எப்படி பெறுவது?**

ப: நினைப்பு இல்லாமே இருக்கறதுதான் பக்தி.

**கே: மனோபலத்தாலே பாரிஸ்லே ஒருத்தர், Dr. Cove படிக்காதவர், தீர்க்க முடியாத வியாதிகளை எல்லாம் தீர்க்கறார். அவர், சக்தி உனக்குள்ளயே இருக்கு, நோயைக் குணப்படுத்த அதை வளர்த்துக்கங்க என்கிறார்.**

ப: அதே மனோபலத்தாலேதான் நோய்க்கெல்லாம் இருப்பிடமான உடம்பே வர்றது.

**கே: நாம நினைக்கறது நடக்கும்ங்கறாங்களே!**

ப: அந்த நினைப்பு முக்திக்காக இருக்கணும்.

**கே: கடவுள்தான் நினைப்பை வரவிடாம பாத்துக்கணும்.**

ப: இது மறுபடியும் நினைப்புதான். எது பிறந்ததோ அது இந்தக் கேள்வியைக் கேக்கட்டும். நீங்க இல்லே. அதனாலே நீங்க மனமற்று இருங்கோ!



ப: குரு யார் கிட்டே பேசறார்? யாருக்கு உபதேசம் பண்றார்? தனக்கு அன்னியமா யாரையாவது பாக்கறாரா?

**கே: ஆனா குருவை சிஷ்யன் கேக்கறது சந்தேக நிவர்த்திக்குத்தானே?**

ப: உண்மைதான். ஆனா குரு அவனைப் பேதமா பாக்கறாரா? சிஷ்யனோட அஞ்ஞானமே... இங்கே எல்லோரும் ஞானிதான்னு தெரியாததுதான். யாராவது ஆத்மாவுக்கு அன்னியமா இருக்க முடியுமா?

இது எல்லாம் ஒரே பொருள்தான்னு குரு சிஷ்யனோட அஞ்ஞானத்தைத்தான் சுட்டிக்காட்டறார். அவரே அதுக்கு மாட்டிப்பாரா? மாட்டார்.

ஞானம்னா என்ன? கடவுளை நாலு கையோட சங்கு சக்கரத்தோட பாக்கறதா?

அப்படியே அவர் காட்சி கொடுத்தாலும்.... அது எப்படி சிஷ்யனோட அஞ்ஞானத்தைப் போக்கும். ஸத்யம் எப்பவும் உணரப்பட்டதா இருக்கணும். பிரத்யட்சம்கறது நாம இருக்கறதுதான். 'கடவுள் பிரத்யட்சமா காட்சி கொடுத்தார்ன்னு'தான் சொல்றோம். அதுக்கு அர்த்தம்... 'ஞானம்'... சங்கு சக்கரத்தோட வந்து நின்னார்ங்கறது இல்லே. ஞானம் ஏற்கெனவே எப்பவும் இருக்கணும்... இல்லேன்னா பிரயோஜனம் இல்லே. நாலு கையோட பாக்கறதா எப்பவும் இருக்கற ஞானம். அது தோற்றம்; மித்யை; பொய். பாக்கறவன் ஒருத்தன் இருக்கணும். பாக்கறவன்தான் உண்மையும், எப்பவும் இருக்கற சத்யமும்.

சரி, கடவுள் கோடி சூர்ய பிரகாசமா தோன்றட்டும். அது பிரத்யட்சமா? பாக்கறதுக்கு கண்ணு வேணும். மனசு வேணும். அது பரோக்ஷ ஞானம். பாக்கறவன்தான் அபரோக்ஷம். பாக்கறவன்தான் பிரத்யட்சம். மத்தது எல்லாம் இரண்டாம் பட்சம்தான். நான் உடம்புங்கற எண்ணம் வேரூன்றி ஆழமா இருக்கு. அதனாலே கண்ணாலே பாக்கறதையே பிரத்யட்சம்ன்னு சொல்றோம். பாக்கறவனை விட்டுடறோம்.

யாரும் இங்கே ஞானத்தைத் தேடறது இல்லே. ஏன்னா ஞானமில்லாமல் யாரும் இல்லே. யாராவது எனக்கு ஏற்கனவே ஞானம் இல்லேன்னு சொல்ல முடியுமா? இல்லே.... நான் ஆத்மாவிலே இருந்து வேறன்னு சொல்லமுடியுமா? முடியாது. அதனாலே எல்லோரும் ஞானமடைஞ்சேதான் இருக்கா. எது அவனைத் துக்கமாக்கறதுன்னா விசேஷ சக்திகள் இல்லேங்கறதுதான். அதைக் காட்டணும்கற நினைப்புதான். அவனாலே முடியாதுன்னு அவனுக்கே தெரியும். அதனாலே கடவுள் அவன் முன்னாடி வந்து, அவரோட சக்தி விசேஷங்களை, அவனுக்குக் கொடுத்துட்டு ஒதுங்கிக்கணும்ன்னு நினைக்கறான். மொத்தத்திலே கடவுள் அவரோட சக்தியை அவனுக்குத் தந்தாப் போறும்.

**கே: உங்களை மாதிரி இப்படி தைரியமா போட்டு உடைக்கறதுக்கு இங்கே யாரும் இல்லை.**

ப: உள்ளதைச் சொல்றதுக்கு எதுக்கு ஓய் தைரியம் வேணும்? பொய்யைச் சொல்றதுக்குத்தான் ஓய் தைரியம் வேணும்.

**கே: நீங்க சொல்றது உங்களுக்குச் சரி... நீங்க வழுவாத நிலையில இருக்கீங்க... உங்க ஸ்திதி வேற... அதனால எல்லோருக்கும் அது எளிமையாத்தான் இருக்குன்னு நீங்க நினைக்கறீங்க... ஆனா எங்கள மாதிரி சாதாரணப் பட்டவங்க கதி ரொம்ப திண்டாட்டம்...!**

ப: அப்போ யாராவது நான் இல்லேன்னு வந்து சொல்லட்டும் ஓய்!



**(470) ஐரோப்பிய பெண்மணி ஒருத்தர் ஊருக்குக் கிளம்பும் தன்னையும் தன் குடும்பத்தையும் ஆசீர்வாதம் பண்ண வேண்டினார்.**

ப: நீங்க நினைக்கற மாதிரி சந்நிதியை விட்டு நீங்க எங்கேயும் போகலே. சந்நிதி எங்கும் இருக்கு. உடம்பு ஒரு

இடத்திலே இருந்து இன்னொரு இடம் போறது. ஆனாலும் சந்நிதியை விட்டுப் போறது இல்லே. பரம்பொருளோட சாந்நித்தியத்தை விட்டு யாரும் போக முடியாது. நீங்க உங்களை ஒரு உடம்பாவும், பகவானை ஒரு உடம்பாவும், இரண்டு தனிப்பட்ட ஆள்கன்னு பாக்கறதாலே, இங்கேயிருந்து போறேன்னு சொல்றேள். நீங்க எங்கே இருந்தாலும் 'நான்' அங்கே இருப்பேன்... என்னை விட்டுப் போக முடியாது.

(472) *யாத்திரை வந்த பஞ்ஜாபிகள் கேட்டது.*

**கே: கடவுளை நம்பறவங்களுக்கு சரி, மத்தவங்களுக்கு... அவங்க கேக்கறாங்களே கடவுள் இருக்காரான்னு....**

ப: நீங்க இருக்கேளா?

**கே: ஆமாம். இந்த உலகத்தைப் பாக்கறேன். அதனாலே நான் இருக்கேன். ஆனா இந்த உலகத்தைப் படைச்சவரை நான் எப்படிப் பாக்கறது!**

ப: இந்த உலகத்தைப் பாக்கறவனைப் பாருங்கோ. உங்களோட பிரச்சனை தீந்துடும்.

**கே: பேசாம சும்மாயிருக்கறதா... இல்ல சாஸ்திரங்களை படிக்கறதா... இல்லை தியானம் பண்றதா...?**

**ஒரு சிறந்த பக்தனா இருந்தா மக்கள் எல்லாரும் கால்ல விழறாங்க. அது நடக்கலைன்னா ஏமாற்றமாயிடுது. பக்தியும் போயிடுது.**

ப: சுகத்துக்கான பிரேரேபணை போகாது... அதுதான் பக்தி.

**கே: அதை எப்படி விரைவா அடையறது? இன்னைக்கு இரண்டு மணி நேரம் தியானம் பண்ணா நாளைக்கு அதைவிட அதிக நேரம் பண்ணணும்ன்னு நினைக்கறேன். ஆனா தூங்கிடறேன். வேலை களைப்பாக்கிடுது.**

ப: தூங்கும்போது சோர்வு இல்லையே! அதே ஆள்தான் இப்பவும் இங்கே இருக்கான். இப்போ ஏன் சோர்வாகணும்? ஏன்னா... உங்களோட மனசு அலையறது. சோர்வாகறது. நீங்க இல்லே.

**கே: நான் ஒரு வியாபாரி. வியாபாரமும் பாத்து, மன அமைதியும் எப்படி பெறுவது?**

ப: இது உங்களோட நினைப்பு. இந்த நினைப்பை விடுங்கோ! நீங்க நீங்களாவேயிருங்கோ!

**கே: பலனை எதிர்பாக்காம கர்மம் பண்ணச் சொல்றாங்களே! அந்த மனநிலைக்கு எப்படி வர்றது?**

ப: எந்த மனநிலைக்கும் வர வேணாம். இப்போ இருக்கற நினைப்பைப் போக்கிக்கோங்கோ. அவ்வளவுதான்.

**கே: அதுக்கு தேவையான பக்தியை எப்படி பெறுவது?**

ப: நினைப்பு இல்லாமே இருக்கறதுதான் பக்தி.

**கே: மனோபலத்தாலே பாரிஸ்லே ஒருத்தர், Dr. Cove படிக்காதவர், தீர்க்க முடியாத வியாதிகளை எல்லாம் தீர்க்கறார். அவர், சக்தி உனக்குள்ளயே இருக்கு, நோயைக் குணப்படுத்த அதை வளர்த்துக்கங்க என்கிறார்.**

ப: அதே மனோபலத்தாலேதான் நோய்க்கெல்லாம் இருப்பிடமான உடம்பே வர்றது.

**கே: நாம நினைக்கறது நடக்கும்ங்கறாங்களே!**

ப: அந்த நினைப்பு முக்திக்காக இருக்கணும்.

**கே: கடவுள்தான் நினைப்பை வரவிடாம பாத்துக்கணும்.**

ப: இது மறுபடியும் நினைப்புதான். எது பிறந்ததோ அது இந்தக் கேள்வியைக் கேக்கட்டும். நீங்க இல்லே. அதனாலே நீங்க மனமற்று இருங்கோ!



(472) *ராவல்பிண்டியிலிருந்து தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: ஆத்மாவுக்கு உருவமில்லை அதை எப்படித் தியானிக்கறது?**

ப: ஆத்மாவுக்கு உருவமில்லே, பிடிக்க முடியலேங்கறதை விட்டுடுங்கோ. மனசைப் பிடிக்க முடியாதா? அதைப் பிடிச்சுக்கோங்கோ. அது ஆத்மாவுக்குக் கூட்டிக்கொண்டு போகும்.

**கே: மனமும் சூட்சுமம்தான். அது ஆத்மா மாதிரிதான். எப்படி மனத்தோட இயல்பை தெரிஞ்சுக்கறது? எல்லாப் படிமானமும் பிரயோஜனமில்லைன்னுட்டீங்க. எதைப் பிடிச்சுத்தான் நிக்கறது?**

ப: மனசு எங்கே நிக்கறது?

**கே: அது எங்கே நிக்குது?**

ப: மனசையே கேளுங்கோ!

**கே: நான் உங்களைக் கேக்கறேன். மனம் ஒரு நிலைப்படணுமா?**

ப: ....ம்.

**கே: மனசோட ஸ்வபாவம் என்ன? அது உருவமற்றது. குழப்புது.**

ப: ஏன் குழம்பறேள்?

**கே: சாஸ்திரங்கள் மனதை ஒரு நிலைபடுத்தச் சொல்லுது. என்னால முடியலை.**

ப: எந்த சாஸ்திரத்தை வச்சு நீங்க இருக்கறதைத் தெரிஞ்சு கொண்டேள்!

**கே: அது அனுபவம். ஆனா நான் தியானம் பண்ணணும். ஒரு நிலை படணும்.**

ப: நினைப்பு இல்லாமே இருங்கோ! எதையும் பிடிக்காதேள்! எதுவும் உங்களைப் பிடிக்கலே. நீங்க நீங்களாயிருங்கோ!

**கே: எனக்கு நான் எந்த நிலைப்பாட்டிலே இருந்து தியானம் பண்றதுன்னு புரியலே. என் மனசையே நான் தியானம் பண்ணவா?**

ப: யாரோட மனசு?

**கே: என் மனசு.**

ப: நீங்க யார்? இந்தக் கேள்வியே எல்லாத்தையும் சரி பண்ணிடும்.

**கே: பகவான் நினைப்புகளைப் போக்க சொல்றீங்க. நான் எதை தியானம் பண்ணினா, நினைப்பெல்லாம் போகும். நினைப்பெல்லாம் போனா, நான் எப்படி இருப்பேன்னு தெரியலை! எதை ஒருநிலைபடுத்தறதுன்னும் தெரியலை!**

ப: யாருக்கு ஒரு நிலை?

**கே: மனசுக்குத்தான்.**

ப: அப்போ மனசையே ஒரு நிலைப்படுத்துங்கோ.

**கே: எது மேல?**

ப: நீங்கதான் பதில் சொல்லணும். மனம்ன்னா என்ன? நீங்க ஏன் ஒருநிலைப்படுத்தணும்?

**கே: எனக்கு மனசுன்னா என்னன்னு தெரியலை. நான் பகவானையே கேக்கறேன்.**

ப: பகவானுக்கு மனசைத் தெரியாது. கேள்வி கேக்கறவாதான் மனசை, அது என்னன்னு கேக்கணும்?

**கே: பகவான், மனத்தை நினைப்பு இல்லாம பண்ணச் சொல்றீங்க.**

ப: அதுவும் நினைப்புதானே!

**கே: எல்லா நினைப்பும் போச்சுன்னா என்ன மிஞ்சும்?**

ப: மனம் நினைப்பிலே இருந்து வேறேயா?

**கே: இல்லை. மனம் நினைப்புகளால ஆனது. எந்த நினைப்பும் இல்லைன்னா மனசை எப்படி ஒரு நிலைப்படுத்த முடியும்?**

ப: இதுவும் நினைப்புதானே!

**கே: ஆமா, நான் ஒரு நிலைப்படுத்தணும்னு அறிவுறுத்தப் படறேன்.**

ப: ஏன் ஒருமுகப் படணும்?

நினைப்புகளை அது பாட்டுக்கு அது இஷ்டத்துக்கு ஏன் விடக் கூடாது?

**கே: சாஸ்திரங்கள், நினைப்புகளை அப்படி விட்டா நம்மள குட்டிச்சுவராக்கிடும்னு சொல்லுது. அதாவது மாயையில மாட்டி விட்டுடும்.**

ப: அப்போ மாயையிலே மாட்ட விரும்பலே. உங்களோட நினைப்புதான் மாயையும்.... மாறிக்கொண்டே இருக்கறதும். நீங்க உண்மையைப் பிடிச்சுக்க விரும்பறேள். நான் அதைத்தான் நினைப்பை விடுங்கோங்கறேன். நினைப்புதான் பொய்.

**கே: எனக்கு இப்போ புரியுது. ஆனா ஒரு சந்தேகம். கீதை 'ஒரு கடுகு கூட கர்மம் பண்ணாம சும்மாயிருக்க முடியாது' ன்னு சொல்றப்ப எப்படி நான் நினைப்பு இல்லாம இருக்க முடியும்?**

ப: அதே கீதைதான், 'எல்லா தர்மங்களும் நடந்தாலும் நான் எதையும் செய்யலே'ன்னு சொல்றது. 'உலக காரியங்களும் சூரியனும் மாதிரி' ஆத்மா நிஷ்கிரியம். எந்த வேலையும் செய்யாது. ஆனா நினைப்பு கிளம்பும்; அடங்கும். ஆத்மா பூரணம்; மாறாதது. மனம் வரையுற்றது; மாறும். உன்னுடைய கட்டுகள்தான் விடுபடணும், உங்களுடைய பூரணநிலை தானே வெளிப்படும்.

**கே: அதுக்கு அருள்தான் வேணும்.**

ப: அருள் எப்பவும் இருக்கு. அதுக்கு சரணடையணும். அதுதான் வேணும்.

**கே: நான் சரணடையறேன். நானே தவறா போனாலும் என்னை வலுக்கட்டாயமா இழுத்துக்கணும்னு பிரார்த்தனை பண்ணிக்கறேன்.**

ப: இதுதான் சரணடையறதா? எந்தக் கேள்வியும் எந்த நிபந்தனையும், இல்லாதப்போதான் சரணடையறது முழுமையாகறது.

**கே: சரி நான் சரணடையறேன். ஆத்ம சமுத்திரத்தில, முத்து குளிக்கறப்ப குதிக்கற மாதிரி குதிக்கறேன்.**

ப: ஏன்னா... நீங்க உங்களை அறிவுக்கு வெளியே இருக்கறதா நினைச்சுக்கொண்டு இருக்கேள்.

**கே: பிராணாயாமம் பண்றேன். அதனால உடம்புலே சூடு ஏற்படுது. என்ன செய்யணும்?**

ப: மனசு குளிர்ந்தா சூடு போயிடும்.

**கே: உண்மைதான். அது ரொம்பக் கஷ்டம்.**

ப: இந்த நினைப்புதான் தடை.



(473) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: அருணாசலத்தைச் சுத்தி முபபது மைல் தூரம் வசிக்கறவங்களுக்கு தீட்சை தேவையில்லை. முக்தி தானே கிடைக்கும்ன்னு சொல்லப்படுதே!**

ப: அண்ணாமலையார் 'ஈசனாம் எந்தன் ஆணை யினாலே'ங்கறார். சுப்ரீம் கோர்ட் ஆர்டர் ஓய்! அப்பீல் இல்லே.

**கே: புராணமும் சொல்லுது, இங்கே பிறக்கறவங்க சிவகணங்கள்ன்னு. எப்படி ஒரு சேத்திரத்துல பிறக்கறதும், இறக்கறதும் முக்தியாகும்? எனக்குப் புரியல.**

ப: தர்சனாத் அப்ர சதஸி (சிதம்பரத்தைத் தரிசிச்சா)
ஜனனத் கமலாலயே (திருவாரூர்லே பிறந்தா)
காச்யந்து மரணம் முத்திஹி (காசியிலே இறந்தா)
ஸ்மரணாத் அருணாசலே (அருணாசலத்தை நினைக்க முக்தி).

**கே: ஆமா, நான் ஒரு நிலைப்படுத்தணும்னு அறிவுறுத்தப் படறேன்.**

ப: ஏன் ஒருமுகப் படணும்?

நினைப்புகளை அது பாட்டுக்கு அது இஷ்டத்துக்கு ஏன் விடக் கூடாது?

**கே: சாஸ்திரங்கள், நினைப்புகளை அப்படி விட்டா நம்மள குட்டிச்சுவராக்கிடும்னு சொல்லுது. அதாவது மாயையில மாட்டி விட்டுடும்.**

ப: அப்போ மாயையிலே மாட்ட விரும்பலே. உங்களோட நினைப்புதான் மாயையும்.... மாறிக்கொண்டே இருக்கறதும். நீங்க உண்மையைப் பிடிச்சுக்க விரும்பறேள். நான் அதைத்தான் நினைப்பை விடுங்கோங்கறேன். நினைப்புதான் பொய்.

**கே: எனக்கு இப்போ புரியுது. ஆனா ஒரு சந்தேகம். கீதை 'ஒரு கடுகு கூட கர்மம் பண்ணாம சும்மாயிருக்க முடியாது' ன்னு சொல்றப்ப எப்படி நான் நினைப்பு இல்லாம இருக்க முடியும்?**

ப: அதே கீதைதான், 'எல்லா தர்மங்களும் நடந்தாலும் நான் எதையும் செய்யலே'ன்னு சொல்றது. 'உலக காரியங்களும் சூரியனும் மாதிரி' ஆத்மா நிஷ்கிரியம். எந்த வேலையும் செய்யாது. ஆனா நினைப்பு கிளம்பும்; அடங்கும். ஆத்மா பூரணம்; மாறாதது. மனம் வரையுற்றது; மாறும். உன்னுடைய கட்டுகள்தான் விடுபடணும், உங்களுடைய பூரணநிலை தானே வெளிப்படும்.

**கே: அதுக்கு அருள்தான் வேணும்.**

ப: அருள் எப்பவும் இருக்கு. அதுக்கு சரணடையணும். அதுதான் வேணும்.

**கே: நான் சரணடையறேன். நானே தவறா போனாலும் என்னை வலுக்கட்டாயமா இழுத்துக்கணும்னு பிரார்த்தனை பண்ணிக்கறேன்.**

ப: இதுதான் சரணடையறதா? எந்தக் கேள்வியும் எந்த நிபந்தனையும், இல்லாதப்போதான் சரணடையறது முழுமையாகறது.

**கே: சரி நான் சரணடையறேன். ஆத்ம சமுத்திரத்தில, முத்து குளிக்கறப்ப குதிக்கற மாதிரி குதிக்கறேன்.**

ப: ஏன்னா... நீங்க உங்களை அறிவுக்கு வெளியே இருக்கறதா நினைச்சுக்கொண்டு இருக்கேள்.

**கே: பிராணாயாமம் பண்றேன். அதனால உடம்புலே சூடு ஏற்படுது.**
**என்ன செய்யணும்?**

ப: மனசு குளிர்ந்தா சூடு போயிடும்.

**கே: உண்மைதான். அது ரொம்பக் கஷ்டம்.**

ப: இந்த நினைப்புதான் தடை.



(473) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: அருணாசலத்தைச் சுத்தி முபபது மைல் தூரம் வசிக்கறவங்களுக்கு தீட்சை தேவையில்லை. முக்தி தானே கிடைக்கும்ன்னு சொல்லப்படுதே!**

ப: அண்ணாமலையார் 'ஈசனாம் எந்தன் ஆணையினானே'ங்கறார். சுப்ரீம் கோர்ட் ஆர்டர் ஓய்! அப்பீல் இல்லே.

**கே: புராணமும் சொல்லுது, இங்கே பிறக்கறவங்க சிவகணங்கள்ன்னு. எப்படி ஒரு சேத்திரத்துல பிறக்கறதும், இறக்கறதும் முக்தியாகும்? எனக்குப் புரியல.**

ப: தர்சனாத் அப்ர சதஸி (சிதம்பரத்தைத் தரிசிச்சா)
ஜனனத் கமலாலயே (திருவாரூர்லே பிறந்தா)
காச்யந்து மரணம் முத்திஹி (காசியிலே இறந்தா)
ஸ்மரணாத் அருணாசலே (அருணாசலத்தை நினைக்க முக்தி).

கமலாயத்திலே பிறக்கறதுன்னா என்ன?

அதுதான் ஹிருதயம்.

சிதம்பரத்தைத் தரிசிக்கறதுன்னா என்ன?

அறிவோட இருப்பிடத்தைத் தெரிஞ்சுக்கறது.

காசின்னா என்ன?

ஞானஒளி.

அப்படியே அருணாசலமும்... அப்படிப் புரிஞ்சுக்கணும்.

**கே: அப்போ பக்தி அவசியமா?**

ப: நம்மளோட பார்வையைப் பொறுத்து.

ஒருத்தர்திருவாரூர்லேபிறக்கறஎல்லோரும்...சிதம்பரத்தைத் தரிசனம் பண்ற எல்லோரும்... காசியிலே மரிக்கற எல்லோரும்... அருணாசலத்தை ஸ்மரிக்கற எல்லோரும்.... முத்தர்கள்ன்னு பாக்கறார்.

**கே: நான் அருணாசலத்தைதான் நினைக்கறேன். இன்னும் நான் முக்தன் ஆகலையே!**

ப: திருஷ்டியை மாத்துங்கோ. அதுதான் வேணும். பார்வை மாற்றம் அர்ஜுனனை என்ன பண்ணித்துன்னு பாருங்கோ.

அர்ஜுனனுக்கு விஸ்வரூபதர்சனம் கிடைச்சது. கிருஷ்ணர் சொல்றார், 'கடவுள்களும் மகான்களும் என்னோட விஸ்வரூப தர்சனத்தைப் பாக்க ஆவலாயிருக்கா. நான் அவாளுக்கெல்லாம் காட்டலே.... உனக்குத்தான் திவ்யதிருஷ்டி தர்றேன். அதை வச்சுப் பாரு'ங்கறார். அப்படிச் சொல்லிவிட்டு அவர் உண்மையிலேயே எதுவோ அதையா காட்டினார்? இல்லே. என்னவெல்லாம் என்னிடம் பாக்க ஆசைப்படறியோ, அதை எல்லாம் பார்ன்னார்.

அதுதான் அவரோட உண்மையான வடிவமா? அப்படின்னா அது மாறாம எப்பவும் இருக்கறதா இருக்கணுமே! அதுக்குப் பதிலா நீ என்ன பாக்கப் பிரியப்படறியோ அதைப் பார்ங்கறார்.

அப்போ விஸ்வரூபதர்சனம் எங்கேயிருக்கு? அர்ஜுனன் கிட்டேதான் இருக்கு. அர்ஜுனன், அதிலே கடவுள்களும், மகான்களும் கிருஷ்ணனைக் கும்பிட்டதைப் பாக்கறான்.

விஸ்வரூபக் காட்சி கடவுளுக்கும், மகான்களுக்கும் நான் தரலேன்னு சொன்னா... அப்போ அர்ஜுனனோட தர்சனத்திலே தெரிஞ்ச கடவுள்களும், மகான்களும் யார்?

அவனோட கற்பனைதான்.

அவனோட பார்வை காரணமா அப்படி தெரியறது.

**கே: அப்போ நம்மோட பார்வை கடவுள் அருளாலே மாறணும்.**

ப: ஆமாம் பக்தர்களுக்கு அப்படித்தான்.

கனவிலே ஒருத்தன் புலியைப் பாக்கறான். பயந்து எழுந்துட்டான். கனவுப் புலி கனவு அகந்தைக்குத்தான். அதுதான் பயந்தது. ஆனா, விழிச்சவுடனே எப்படி அகந்தை மறையறது! இவன் இப்போ இருக்கற அகந்தையா எழுந்துக்கறான். அகந்தை ஒண்ணுதான்னு இதிலேயே தெரியறதே!

மூணு நிலையும் அகந்தைக்குத்தான்.

**கே: மனசை கண்டுபிடிக்கறது ரொம்ப கஷ்டமாயிருக்கு. எல்லோரும் அப்படியே இருக்குன்னு சொல்றாங்க!**

ப: மனசை வச்சே, மனசை எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? அதைக் கடக்கணும். அப்போதான் அது இல்லேன்னு தெரியும்.

**கே: அப்போ 'நான்'ன்னா என்னன்னு நேரடியா பாக்கணும்!**

ப: அதுதான்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எல்லாம் ஒரே அந்தகரணத்துக்கு இருக்கற வேற வேற பெயர். மனம் நினைவுகளோட கூட்டம். நினைப்பு 'நான்'கற எண்ணம் இல்லாம இருக்காது. எல்லா நினைப்பும் இந்த நினைப்பாலேயே வர்றது. எங்கிருந்து இந்த நான்கற எண்ணம் வர்றதுன்னு பாருங்கோ. மத்த நினைவு போயிடும். மிஞ்சறது நான்கற நினைப்பு இல்லை. அதுதான் அறிவு.

நாம சுகத்தையே தேடறோம். விசாரிச்சுப் பாக்கறப்போ, துக்கம் நினைப்புகளாலேயே ஏற்படறதுன்னு தெரியறது. அதைத்தான் மனசுங்கிறோம். மனசைக் கட்டுப்படுத்த நாம...

'நான்' கறது என்னன்னு பாக்கறோம். அப்படிப் பாக்கறதாலே இருப்பிலே நிக்கறோம்.

**கே: அப்போ மனசு என்னதான்?**

**ப:** அறிவுதான். வரையுற்று மனசா இருக்கு. நாம உண்மையிலேயே வரையற்ற அறிவு. நம்மளையே வரையுற்று மனசாக்கிக்கறோம்.

**கே: அப்போ ஆவரணம்(மறைப்பு)தான அது? எப்படி ஏற்படுது?**

**ப:** யாருக்கு ஆவரணம்?

அஞ்ஞானம், மனம், அகந்தை, ஆவரணம் எல்லாம் ஒண்ணுதான்.

**கே: ஆவரணம்னா மறைப்பு. யார் மறைக்கப்படறது? எப்படி ஆவரணம் ஏற்படுது?**

**ப:** நம்மளக் குறுக்கிக்கறதுதான் ஆவரணம். அதைக் கடந்தா கேள்வி இல்லை.

(474) **ஹிருதயத்தைப் பற்றிய ஒரு கேள்விக்கு**

**ப:** யோக சாஸ்திரங்கள் 72,000 நாடி இருக்கு, அதிலே 101 நாடி முக்ய நாடின்னு சொல்றது. அந்த 101 நாடிதான் 72,000 நாடியாய்ப் பிரியறது. சிலர் ஸஹஸ்ராரத்திலே இருந்து பிரியறதுங்கறா. சிலர் ஹிருதயத்துலே இருந்துன்னு சொல்றா.

அவா பரநாடி மூலாதாரத்திலே இருந்து சுழுமுனை வழியா ஸஹஸ்ராரத்துக்குப் போறது. போயி...... ஹிருதயத்துக்கு இறங்கறதுங்கறா.

சிலர் சுழுமுனை, பரநாடிலே ஸஹஸ்ராரத்தோட முடிஞ்சிடறதுங்கறா. சிலர், உண்மையை உணர்றது ஸஹஸ்ராரத்துலேதான்னு சொல்றா. சிலர் புருவமத்திங்கறா. சிலர் ஹிருதயம்.... சிலர் மூலாதாரம்.

ஞானம்ன்னா... பர நாடியிலே நிக்கறதுன்னா... ஹிருதயத்துக்குத்தான் போகணும்.

ஆனா ஒரு யோகி, நாடி எல்லாம் சுத்தி பண்ணி குண்டலினியை எழுப்பிடறான். குண்டலினி மூலாதாரத்திலே இருக்கறதா சொல்லப்படறது. அங்கே இருந்து ஸஹஸ்ராரத்துக்குப் போறார். ஒருவேளை அந்த யோகி நல்ல அருளாளனா இருந்தா... ஹிருதயத்துக்குக் கீழே இறங்கு... அதுதான் கடைசி முடிவு நிலைன்னு அறிவுறுத்தப்படறான். கேக்கலேன்னா தூக்கிலே மாட்டிக்கொண்டு தொங்கற மாதிரி சாகும்போது தொங்குவார். அருள்தான் கீழே இறக்கி விடும்.

வேதங்கள், ஹிருதயம், தாமரை மொட்டு கவிழ்ந்து இருக்கற மாதிரி, வாழைப்பூ மாதிரின்னு சொல்றது. அணுமாத்ரமா ஓர் பிரகாசமான இடம், நெல் மணியின் நுனி அளவு, ஜோதி மாதிரி, அதனுள்ளே அதீதமான பிரம்மம் இருக்கறது. இப்படின்னு சொல்றது.

அந்த ஹிருதயம் எது ?

மாம்ஸ உறுப்பு இல்லே. ஹிருதயம்ன்னா... ஹிருத்+அயம். இதுவே மையம். எங்கிருந்து மனம் உதிக்குமோ, ஒடுங்குமோ, அதுதான் ஆத்மாஸ்தானம். அங்கேயேதான் ஆத்மஞானமும்.

அதுதான் ஆத்மான்னு நான் சொல்றதை, அது ஏதோ உடம்பிலே இருக்கற இடம்ன்னு தவறாப் புரிஞ்சுக்கறா. தூங்கும்போது ஆத்மா எங்கே இருக்குன்னு கேட்டா... உடம்பிலே இருக்குன்னு சொல்றா.

இருட்டிலே ஒருத்தன் இருக்கற மாதிரி, தூங்கும்போது உடம்பைத் தெரியாம, உலகமும் தெரியாமே இருக்குன்னு சொல்றவாளுக்கு அதோட ஸ்தானத்தை உடம்பிலே ஒரு இடத்திலே சொல்ல வேண்டியதாயிருக்கு. அந்த இடம்தான் ஹிருதயம். அதை ஸ்தூல மாம்ஸ ஹிருதயத்தோட குழப்பக்கூடாது.

ஒருத்தன் கனவு காணும்போது, தன்னையும், தன்னைச் சுத்தியிருக்கறதையும், அவனேதான் படைக்கறான். கனவு

முடிஞ்சதும் எல்லாம் அவனுக்குள்ளேயே போயிடறது. ஒண்ணுதான் பலவாகறது... பாக்கறவனோட சேர்த்து. அப்படியேதான் விழிப்பிலேயும் ஒண்ணுதான் பலவாகறது. நாம பாக்கற உலகம் உண்மையிலேயே நாமதான் . ஒரு வான சாஸ்திரி (விஞ்ஞானி) புதுசா ஒரு நட்சத்திரத்தைக் கண்டுபிடிக்கறான். அந்த நட்சத்திரம் கணக்கில்லாத தொலைவிலே இருக்குங்கறான். அதோட ஒளி பூமிக்கு வந்த சேர ஆயிரக்கணக்கான ஒளி ஆண்டுகள் ஆகுங்கறான்.

சரி உண்மையிலேயே நட்சத்திரம் எங்கே இருக்கு? பாக்கறவனிடம்தானே!

ஆனாலும் மக்கள் இந்தப் பிரபஞ்சம் எவ்வளவு பரந்தது.

சூரியனை விடப் பெரிசு. அவ்வளவு தூரத்துலே இருக்கறது எப்படி நம்மளுக்குள்ளே இருக்குன்னு ஆச்சர்யப்படறா. இந்த ஆகாயம் அதோட எல்லையற்ற தன்மை இதோட புதிர் எல்லாம் நம்மளோட மனம்தான்.

அப்போ எப்படி உலகம் மனசுலே இருக்கும்?

அது இருக்குன்னு நீ பாக்கறதனாலே, அதை ஒளிர்விக்கறே.

ஒருவிஷயத்தை நீ ஒத்துக்கொண்டே தீரணும்.... இந்த உலகம் எல்லாம், தூங்கும்போது இல்லை. விழிச்ச உடனே வந்துடறது. அப்போ இந்த உலகத்தை ஒளிர்விக்கற ஒளி சாஸ்வதம் இல்லை. அதுக்கு ஒரு ஆரம்பமும் முடிவும் இருக்கு. ஆனா 'நான் இருக்கறது' இடைவிடாம மாறாம இருக்கு. அப்போ அது முன்னாடி சொன்ன ஒளியாயிருக்க முடியாது. உலகத்தை ஒளிர்விக்கற ஒளி வேற. ஆனா... அது தனியா இல்லை.

அப்போ அது ஆபாசப்பிரகாசம்... அதாவது பிரதிபலிக்கற ஒளி. நாம விழிப்பிலே இருக்கும்போது பாக்கற அறிவு ஆபாஸ அறிவு... அதாவது போலி அறிவு. நம்மளோட விழிப்பிலே, நான் இன்னாராக இருக்கேன்கறது போலி இருப்பு. ஆபாஸ ஸித். உண்மையான அறிவு (சித்); உண்மையான இருப்பு (ஸத்) ஹிருதயத்திலே இருக்கு. தூக்கத்திலே இருந்து விழிக்கும்போது ஸஹஸ்ராரத்திலே பிரதிபலிக்கறது. அதனாலேதான்

ஸஹஸ்ராரத்திலே விழிச்சவுடனே, தலை நிமிர்றது. கீழேயே கிடைக்க மாட்டேங்கறது. அங்கே இருந்து உடம்பு பூரா உணர்வு பரவறது. முழிச்சு இருக்கற ஆளா... போலி அறிவு தொழில் படறது.

ஸஹஸ்ராரத்திலே சுத்த அறிவா இருக்கறதுதான், சுத்த மனஸ். அதுவே, பிறகு மலினமாயிடறது. இப்போ இருக்கற மாதிரி ஆயிடறது.

எது எப்படியோ, இதெல்லாம் மொத்தத்திலே ஆத்மாவிலேதான் இருக்கு, உடம்பும், அதோட செயல்பாடுகளும், உலகமும், ஆத்மாவிலேயேதான் இருக்கு. ஆனா ஆத்மா உடம்புக்குள்ளே இல்லே.



(477) **திருமதி. ஜீனராஜதாசா கேட்டார்.**

**கே: கனவுல நடக்கறதை எப்படி திரும்பவும் ஞாபகப் படுத்திக்கறது?**

ப: இப்போ இருக்கற விழிப்பு நிலை, உங்களோட கனவுகள், அதை ஞாபகப்படுத்திக்கணும்கற ஆசை, எல்லாம் நினைப்புதான். மனம் வந்த பிறகுதான் எல்லாம். மனம் இல்லாதப்போ நீங்க இல்லையா?

**கே: இருந்தேன்.**

ப: நீங்க இருந்தேள்ங்கறது தெரியறதில்லையா! அதுதான் ஞானம்.

**கே: புத்திபூர்வமா புரியுது. இன்னும் உண்மை நிரந்தரமாகலை.**

ப: இந்த நிரந்தரமாகலேங்கற நினைப்புதான், எப்பவுமே நீங்க அடைஞ்சுருக்கற ஞானத்துக்குத் தடை.

**கே: நகர வாழ்க்கை ஞானத்துக்கு உகந்தது அல்ல. காடுதான் சரி.**

ப: நகரத்திலே விடுபட்டும் இருக்கலாம். காட்டிலே மாட்டிக்கொண்டும் இருக்கலாம். எல்லாம் மனசுதான்.

**கே: மனசுதான் மாயை. சரிதானே?**

ப: மாயையன்னா என்ன?

மனம் ஆத்மாவிலே இருந்து வேறங்கறதுதான் மாயை. மனம்தான் ஆத்மா. அதை விட்டு வேறஇல்லை. இந்த ஞானந்தான் மாயை விலகறது.

**கே: மனமும் ஸஹஸ்ராரமும் ஒண்ணா?**

ப: மனம் ஸஹஸ்ராரத்திலே வேலை பாக்கற சக்தி. இப்போ நீங்க முழிச்சு இருக்கேள்.... இந்த உலகத்தைப் பத்திய நினைப்பும், உங்களைப் பத்திய நினைப்பும், மூளையிலே, உடம்பிலே இருக்கு. கனவு காணும்போது, இன்னொரு உடம்பைப்படைச்சு உலகத்தையும் படைச்சிடறேள். அந்தக் கனவு உடம்பும் இப்போ மாதிரியே எல்லாத்தையும் பாக்கறது... நினைக்கறது. அந்தக் கனவு, காட்சி எல்லாம் கனவு மூளையிலே இருக்கு. அந்தக் கனவு மூளை, கனவு உடம்பிலே இருக்கு. அந்தக் கனவு உடம்பு, இந்த நனவு உடம்பை விட வேறு. அந்தக் கனவை இப்போ நினைச்சுப் பாக்கறேள். அந்தந்த மூளைகள் வேற வேறயா இருந்தாலும் காட்சி எல்லாம் மனசுக்குத்தான். மனம் மூளையில்லை. மூணு நிலையும் மனசுக்குத்தான்.

**கே: புத்திபூர்வமா புரியுது.**

ப: புத்திங்கறியே யாரோட புத்தி?

இதிலேயே எல்லாம் அடங்கிடும்.

தூங்கும்போது, அதாவது புத்தி இல்லாதபோதும், நீங்க இருக்கறதை ஒத்துக்கறேள். நீங்க தூங்கும்போது இருக்கேள்ங்கறதை, உங்களோட அனுபவமா இல்லாமே, எப்படிச் சொல்ல முடியும்? அப்போ நீங்க இருக்கறது அனுபவம். அதுதான் ஞானம். நீங்க இல்லாத காலம்ன்னு ஒண்ணை, கற்பனை கூடப் பண்ண முடியாது. அப்போ நீங்க

ஞானமடையாத காலம்ன்னு ஒண்ணுன்னு இல்லவே இல்லை. நீங்க இருக்கறதே ஞானம்தான்.

(478) **மதுரையில் இருந்து வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: கடவுள் இருக்கறதை, அவரோட சக்தியை எப்படி உணர்றது?**

ப: நான் இருக்கேன்னு சொல்றீரில்லையா... அதுதான் கடவுள் இருக்கறதும்... அவரோட சக்தியும். வேறே எது நான் இருக்கேன்னு சொல்லும்! பிரச்சனை எல்லாம், நான் இன்னார்ன்னும், நான் அது, நான் இதுன்னு சொல்றதிலேதான். அதைச் செய்யாதீர்! அவ்வளவுதான்.

**கே: ஆனந்தத்தை எப்படி அனுபவிக்கறது?**

ப: ஆனந்தத்திலே இருந்து நான் வேறங்கற நினைப்பிலே இருந்து விடுபட்டு இருக்கறது மூலமா.

**கே: மனதோட விருத்திகள்ல இருந்து விடுபட சொல்றீங்க.**

ப: இல்லை. ஒரே விருத்தியோட இருக்கச் சொல்றேன். மத்த விருத்திகள் எல்லாம் போறதுக்கு.

**கே: ஆனந்தம் அனுபவிக்கப் படணுமே?**

ப: நம்மள மறக்காம இருக்கறதிலேயே அது வந்துடும் ஓய். எப்படி உம்ம ஸ்வபாவத்திலே இருந்து வேறா நீ இருப்பீர்?

அன்பே சிவம். அன்பே ஆனந்தம்.

**கே: எப்படி நான் எங்கும் நிறைந்து இருக்கறது?**

ப: 'இப்போ நான் எங்கும் நிறைந்து இல்லை'ங்கற நினைப்பை விடறது மூலமா ஓய்.

**கே: எல்லாத்துக்குள்ளயும் நான் எப்படி இருக்கறது?**

ப: 'நான்'கறது இல்லாமே 'எல்லாம்'கறது இருக்கா ஓய்?

'எல்லாம்' வந்து உம்மகிட்டே சொல்லித்தா 'நாங்கள்லாம் இருக்கோம்'ன்னு, நீர்தான் எல்லாத்தையும் பாக்கறீர். நீரிருக்கீர்... அப்புறம்தான் எல்லாம் இருக்கு. நான் இல்லாமே எல்லாம் இல்லேங்கற ஞானம்தான் எல்லாத்துக்குள்ளேயும் இருக்கறது ஓய்.

நான் இந்த உடம்புதான். எனக்குள்ளே ஏதோ இருக்கு. அப்படிங்கற நினைப்புதான், உமக்கு வெளியே தனியா எல்லாம் இருக்குங்கறதா பிரமிக்க வைக்கறது. எல்லாம் உமக்குள்ளேயே இருக்குன்னு தெரிஞ்சுக்கும். துணி நூலுக்கு வேறா ஓய்? நான் இல்லாமே விஷயங்கள் இருக்குமா?

(479) **தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: எந்த மதம் சிறந்தது? எது பகவான் வழி?**

ப: எல்லா மதமும் வழியும் ஒண்ணுதான்.

**கே: முக்திக்கு பல மார்க்கங்கள் சொல்றாங்களே?**

ப: முதல்லே நீங்க ஏன் முக்தி அடையணும்?
ஏன் இப்போ இருக்கற மாதிரியே இருக்கக்கூடாது?

**கே: எனக்கு துன்பம் போகணும். துன்பம் போறதுதான் முக்தி.**

ப: எல்லா மதமும் அதையே போதிக்கறது.

**கே: ஆனா அதை செய்யறது எப்படி?**

ப: வந்த வழியே போங்கோ!

**கே: எங்கிருந்து வந்தேன்?**

ப: இதை நீங்கதான் தெரிஞ்சுக்கணும். இந்தக் கேள்வி எல்லாம் தூக்கத்திலே இருந்ததா? அப்போ நீங்க இல்லை! அதே ஆளுதானே இப்பவும்!

**கே: ஆமா நான் தூக்கத்துலே இருந்தேன். மனசும் இருந்தது. இந்திரியங்கள் ஒடுங்கிடுச்சு. அதனால பேச முடியலை.**

ப: நீங்க ஜீவனா? நீங்க மனசா?
மனசு, 'நான் இருக்கேன்'னு தூக்கத்திலே சொல்லித்தா?

**கே: இல்லை. பெரியவங்க சொல்றாங்க. ஜீவன் ஈஸ்வரன்ல இருந்து வேறன்னு.**

ப: ஈஸ்வரனை விட்டுடுங்கோ! உங்களைப் பத்திப் பேசுங்கோ!

**கே: என்னை பத்தி என்ன இருக்கு. நான் யார்?**

ப: அதுதான் விஷயம். அது தெரிஞ்சப்போ, எதுவும் உங்களுக்குப் புரியலேன்னா... அப்போ கேளுங்கோ!

**கே: நான் முழிச்ச உடனே உலகத்தை பாக்கறேன். தூக்கத்துல இருந்த அதேதான் நான். மாறலை.**

ப: ஆனா இது தூக்கத்திலே தெரியறதா?
இப்பவும், எப்பவும், அதே நீங்கதான் இருக்கேள்.
எது மாறித்து இப்போ?
உங்களோட ஸ்வபாவம் மாறித்தா? இல்லே... மாறாம இருக்கா?

**கே: இதுக்கு எது ப்ரமாணம் (நிருபணம்)?**

ப: நீங்க இருக்கறதுக்கு ப்ரமாணம் வேணுமா!
நீங்க இருக்கறதைத் தெரிஞ்சு இருங்கோ! எல்லாம் தெரிஞ்சுடும்.

**கே: அப்போ ஏன் வேதாந்திகளும், சித்தாந்திகளும் சண்டை போடறாங்க?**

ப: அவாவாளோட வேலையை அவாவா பாத்தா சண்டை இருக்காது.



(480) **திருமதி. காஸ்க் கேட்டார்.**

**கே: நீங்க அமெரிக்கா வர்றதுக்கான உத்தேசம் எதுவும் இருக்கா.**

ப: இந்தியா எங்கே இருக்கோ, அங்கேதான் அமெரிக்காவும் இருக்கு.

(481) *முருகனார் கேட்டார்.*

**கே: பிரஞ்ஞானம்ன்னா என்ன?**

ப: விஞ்ஞானம் (போலி அறிவு) எங்கிருந்து உதிக்கறதோ, அந்த மூலமே பிரஞ்ஞானம் (உண்மை அறிவு).

**கே: விழிப்பிலே விஞ்ஞானத்தை வச்சுத்தான் சம்வித்தை அதாவது பிரஞ்ஞானத்தை உணர்றோம். தூங்கும்போது விஞ்ஞானம் இல்லை. பிரஞ்ஞானம் அப்போ அதுவே தன்னைத் தானே உணர்ந்து கொள்ளுமா?**

ப: ஆமாம், சம்வித்னாலே சுயம் வேத்யம்தான். அதாவது தன்னை அறியறதுக்கு வேற பொருள் தேவை இல்லாதது.

**கே: விழிப்பிலே விஞ்ஞானத்தை வச்சுதான் பிரஞ்ஞானத்தை உணர்றோம். ஆனா தூங்கும்போது, அது சுயம் வேத்யம்னா அது அங்கேயும் பிரகாசிக்கணுமே?**

ப: பிரஞ்ஞானம் இப்போ போலி அறிவிலே ஒளிர்றது. தூங்கும்போதும் ஒளிர்றது. விழிப்பு நிலையிலே இடைவிடாமே பிரஞ்ஞானத்தை உணர்ந்தா... அது தூக்கத்திலேயும் ஒளிர்றது தெரியும்.

இதை இப்படிச் சொல்லலாம்.

ராம்நாட் ராஜா ஹாலுக்கு வர்றார். கொஞ்ச நேரம் இருக்கார். அப்புறம் போயிடறார். அவர் பாகசாலைக்குப் போகலே. அதுக்காக, பாகசாலையிலே இருக்கற ஒருத்தர், ராஜா வரலேன்னு சொல்ல முடியுமா?

அப்படிச் சொன்னா... அவர் சாட்சியை ஒத்துக்க முடியுமா? ஹால்லே இருக்கற ஆள் சொன்னா ஒத்துக்கலாம்.



(482) டாக்டர் பாண்டே கேட்டார்.

**கே: ஆத்ம ஞானமடைய, செய்யக்கூடிய மாதிரி ஏதாவது சொல்லுங்க. தியானத்துக்கு பிரதிகம் (அடையாளம்) இருந்தா சுலபம். நீங்க சொல்ற ஆத்ம விசாரத்துல பிரதிகம் இல்லை.**

ப: நீங்க இருக்கறதை ஒத்துக்கறேள்லியா.... அதுக்கு ஏதாவது பிரதிகம் தேவைப்படறதா?

தூங்கும்போது எப்படி?

இருந்தேள் இல்லையா! அங்கே உங்களுக்கு எது பிரதிகம்? அதனாலே ஆத்மாவை எந்த பிரதிகமும் இல்லாமலே உணரலாம்.

**கே: உண்மைதான். உங்க வார்த்தையோட சத்தியத்தை உணர்றேன். ஆனாலும் மந்திரங்கள் சொல்லலாமா? உதவுமா?**

ப: உதவும். மந்திரம்ன்னா என்ன?

சப்தத்தை நினைச்சுக்கொண்டு இருப்பேள்! திரும்பத் திரும்ப சொல்றப்போ எல்லா நினைப்பையும் அது போக்கும். மந்திர ஜபம்ங்கற ஏக நினைவு மட்டும் இருக்கும். அதுவும் நான்கறதிலே கரைஞ்சுடும். அதுதான் உண்மையான மந்திரம். மந்திரம், தியானம், பக்தி எல்லாம் சொரூபத்திலேயே முடியும்.

நான்கறதுதான் சொரூபம். காலாதீதமா எல்லோரும் சொரூபம்தான். ஆனாலும், ஒவ்வொருத்தரும், தன்னை உடலோட சம்பந்தப்படுத்திக்கறதாலே நான் உடம்புதான்னு நினைக்கறா.

எதையும் அறியணும்னா... ஒளி வேணும். அப்படி எல்லாத்தையும் ஒளிர்விக்க வைக்கறவன் ஒளியாத்தான் இருக்கணும். அந்த ஒளி இருளையும், ஒளியையும் விளக்கற ஒளி. அது ஒளியுமில்லை, இருளுமில்லை, ஆனா இது இரண்டையும் விளக்கறதாலே அதை ஒளிங்கிறோம்.

அது முடிவில்லாதது. அறிவாயிருக்கு. அறிவுதான் 'நான் இருக்கேன்'னு எல்லோராலேயும் அனுபவிக்கப்படறது. யாரும்

அதை விட்டு வெளியே இல்லை. அதனாலே ஒவ்வொருத்தரும் ஆத்மாவை உணர்ந்தவாதான்.

ஆனா ஆச்சர்யம், இந்தச் சின்ன விஷயம் யாருக்கும் தெரியலே. ஆத்மாவை உணரணும்ன்னு ரொம்ப தவிதாயப் படறா. இந்த அறியாமை 'உடம்புதான் நான்'ன்னு நினைக்கறதுனாலேயே ஏற்படறது. அப்போ ஞானம் எதிலே அடங்கியிருக்குன்னா... 'நான் இன்னும் ஞானமடையலே'ங்கற தவறான நினைப்பைப் போக்கறதிலேதான் இருக்கு.

ஆத்ம ஞானம் புதுசா வர்றது இல்லை. அது ஏற்கெனவே இருக்கணும். அப்போதான் அது நிரந்தரமாயிருக்கும். அதை யாரும் நிரந்தரமாக்க தேவையிருக்கக் கூடாது. அப்போதான் அது ஞானம். அதுக்கு எந்த முயற்சியும் தேவைப்படக்கூடாது. அப்போதான் அது ஞானம். இல்லேன்னா அதை அடையறதிலே பிரயோஜனம் இல்லை.

'நான் இன்னும் ஞானமடையலே' அல்லது 'நான் இந்த உடம்புதான்'. இந்த இரண்டும் ஒண்ணுதான். ஒண்ணு போச்சுன்னா இன்னொன்னும் போயிடும். ஆத்மாவே மிஞ்சும், அதையே, இப்போ இருக்கற அறிவை வச்சு ஞானம்ன்னு சொல்றோம். ஆனா உண்மையிலேயே ஞானம் எப்பவுமே இருக்கு. இங்கேயே இப்போவே இருக்கு.

மொத்தத்திலே அஞ்ஞான நீக்கத்தையே, ஞானமடையறதா சொல்றோம். வேற ஒண்ணும் இல்லை.

**கே: என்னோட வேலை காரணமாக, என்னால சாதுக்கள் சங்கத்துல இருக்க முடியலை. நான் எங்கே இருந்தாலும், சாது சகவாசத்தோட இல்லைன்னாலும் ஞானமடைய முடியுமா? என்னோட சூழ்நிலை அப்படி.**

**ப:** சத்...ன்னா அஹம் பிரத்யசாரம். எல்லாம் இருக்கறதுக்கு ஆதாரமான இருப்பு. அதுதான் எல்லாத்துக்குள்ளேயும் இருக்கு. அதை விட்டு யாரும் இருக்க முடியாது. அதனாலே சத்சங்கத்தை விட்டு யாரும் இல்லை.

(483) சீதாராமய்யா கேட்டார்.

கே: பதஞ்சலி யோக சூத்திரத்துலே சம்யமம்ன்னு சொல்றது எதை?

ப: ஏகாக்கிரம்.

கே: ஹிருதயத்துல சம்யமம் பண்ணா சித்தசம்வித் ஏற்படும்ன்னு சொல்றது எதை?

ப: ஆத்ம ஞானத்தை.

தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.

கே: ஆத்ம விசாரத்துலே முன்னேறணும்ன்னா பிரம்மச்சரிய விரதமும் தீட்சையும் கிருஹஸ்தருக்கும் அவசியம் வேணும். சரிதானே?

ப: இல்லை.

கே: கிருஹஸ்தர்கள் முதல்ல பிரம்மச்சரிய விரதத்தோட இருக்கணும். தேவையானபோது தீட்சை வாங்கிக்கலாம். சரிதானே?

ப: முதல்லே ஆண் யாரு? பெண் யாரு?
அப்புறம் இந்தக் கேள்வி எல்லாம் கேக்கலாம்.

கே: பிற விவகாரங்கள் இருக்கும்போது நினைக்காம எப்படி இருக்க முடியும்?

விசாரம் எப்படிப் பண்ண முடியும்? பொருத்தமா இல்லையே!

ப: மனோபலம் இல்லாதாலேதான் இந்தக் கேள்வி வர்றது. நினைவுகள் இறக்க... இறக்க... மனோபலம் வந்துடும்.

கே: கர்மக் கொள்கைபடி உலகம்... கர்மமும் அதோட எதிர் கர்மமும்தான். எதோட கர்மமும் எதிர்கர்மமும்?

ப: ஞானமடையற வரைக்கும் கர்மம் இருக்கும். ஞானத்துக்குப் பிறகு கர்மமும் இருக்காது. உலகமும் இருக்காது.

(485) *தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: ஆத்ம விசாரத்துலே ஈடுபடும்போது தூங்கிடறேன். என்ன பண்றது?**

ப: நாம சங்கீர்த்தனம் பண்ணுங்கோ.

**கே: தூங்கும்போது பண்ண முடியாதே?**

ப: உண்மைதான். அப்பியாசம் விழிப்பிலேதான் பண்ண முடியும். தூக்கம் வந்தா தூங்கிடுங்கோ. திரும்பவும் விழிச்சவுடன் பிடிச்சுக்கோங்கோ. தூங்கறவன் ஆத்ம விசாரத்தைப் பத்திக் கவலைப்படலே. அவன் அப்பியாசம் பண்ண வேண்டியது இல்லை. முழிச்சு இருக்கறவன்தான் கவலைப்படறான். அவன்தான் பண்ணணும்.

மனம் ரொம்ப விசித்திரமானது. அதிசய சக்தி. சத்வம் ரஜஸ் தமஸ்ன்னு மூணு உடையது. பின்னது இரண்டும் விட்சேப அம்சத்தைக் கொடுக்கறது. சத்வ அம்சத்திலே மலினப்படாமே சுத்தமா இருக்கு. அப்போ அதிலே எந்த நினைப்பும் இல்லை.

மனம் ஆகாசம் மாதிரி. எப்படி ஆகாசத்திலே பொருட்கள் இருக்கோ அப்படித்தான் மனசுலே நினைப்பு இருக்கு. உலகத்தை அளந்துட முடியாது. அது என்னன்னும் தெரிஞ்சுக்க முடியாது. ஏன்னா... உலகம் மனோ கற்பனை. நம்மளோட நிழலோட தலையிலே, நம்மளோட காலை வைக்க முயற்சி பண்ற மாதிரி. நாம நகர, அதுவும் நகரும்.

குழந்தை தன் நிழலோட தலையைத் தொட முயற்சி பண்ணித்தாம். குனிஞ்சு தொடப்போனா... தலை வேற இடத்துக்கு நகந்துடறது. நிழல் தலையைத் தொடறதுக்கு ரொம்பவும் பிரயாசைப் படறது. அம்மா அதோட சிரமத்தைப் பாத்துட்டு குழந்தையோட கையைப் பிடிச்சு அது தலையிலேயே

வச்சாளாம். 'இப்போ பாரு. உன் தலையைத் தொட்டுட்டே'ன்னு நிழலைக் காட்டினாளாம். அப்படித்தான் உலகம் என்ன? எப்படி?ன்னு ஆராய்ச்சி பண்றது.

உலகம் மனத்தாலேயே கற்பிக்கப்பட்டதனாலே, அதை வெளியிலே எப்பவும் இருக்குன்னு நினைச்சு, அளந்துட முடியாது. உலகத்தைத் தெரியணும்னா... ஆத்மாவைத் தெரிஞ்சுக்கணும்.

மறுபடியும் அடிக்கடி கேக்கறது... மனத்தை எப்படி அடக்கறது?

நான் அவாகிட்டே....மனசைக் காட்டுங்கோ. அப்புறம் எப்படி அடக்கறதுன்னு தெரியும். உண்மை என்னன்னா, மனம்ங்கறது நினைவுகளோட கூட்டம். அதை நினைப்பாலேயோ, ஆசைப்படறதினாலேயோ எப்படி இல்லாமப் பண்ண முடியும்? அதைக் கட்டுப்படுத்தணும்... ஒழிச்சுக் கட்டணும்....கறதும்... மனசோட நினைப்புக் கூட்டத்திலே ஒண்ணுதான். அப்போ மனசை வச்சு, மனசைக் கொல்ல முயற்சி பண்றது முட்டாள்தனம். ஒரே வழி, அது எங்கேயிருந்து வர்றதுன்னு பாத்து... அதைக் கெட்டியா பிடிச்சுக்கறதுதான். மனம் தன்னைப்போலே காணாமப் போயிடும்.

யோகம்.... 'சித்த விருத்தி நிரோதம்'ன்னு சொல்றது. அதாவது மனசோட வேலையைக் கட்டுப்படுத்துங்கறது. இங்கே என்ன சொல்றோம்ன்னா... ஆத்ம விசாரம். அதாவது நான் யார்ன்னு பாக்கறது. இதுதான் சாத்தியமான வழி.

சித்த விருத்தி நிரோதம் தூங்கும்போது இருக்கு.... மயக்கத்திலே இருக்கு.... பட்டினி கிடந்தாலும் இருக்கும். காரணம் முடிஞ்சா.... நினைப்பு கிளம்பிடும். அப்போ என்ன பிரயோஜனம்? தூங்கும்போது துன்பம் இல்லை. சுகம்தான். முழிச்சா... துன்பம் தொடர்றது. அப்போ நிரோதம் (கட்டுப்பாடு) பயனில்லே. நீடித்த பயனைத் தராது.

எப்படி நீடித்த பயனைப் பெறுவது?

துன்பத்துக்கான மூலத்தைக் கண்டுபிடிக்கணும். துக்கம் விஷயங்களாலேதான். விஷயங்கள் இல்லேன்னா... நினைப்பு இல்லை; துன்பம் இல்லை.

எப்படி விஷயங்களை முடிவுக்குக் கொண்டு வர்றது?

சாஸ்திரங்களும், ரிஷிகளும், 'நீ பாக்கற விஷயங்கள் மனத்தோட தோற்றம். அதுக்கு வாஸ்தவத்திலேயே இருப்பு இல்லே'ன்னு சொல்றா.

இந்தக் கூற்றை நல்லா விசாரிச்சா, முடிவு.... நமக்கு விஷயமாகற உலகம் உண்மையிலேயே நாமதான்னு முடியும். நாம அறிவுதான்னு முடியும்.

அப்போ நாமதான் இங்கே உலகமாத் தெரியறோம். இப்போ துவிதம் இல்லாததாலே நம்மளோட அமைதியை எந்த நினைப்பும் கெடுக்காது. அதுதான் ஆத்மஞானம். எப்பவும் இருக்கு.

**கே: நீங்க சொல்றதுக்கு சரியான அப்பியாசம் என்ன?**

**ப:** ஒவ்வொரு தடவை நினைப்பாலே தொந்தரவு வரும்போதும். அதோட சேந்து ஓடிடாமே, சும்மாயிருப்பதே சரியான அப்பியாசம்.

சும்மாயிருக்கறதுன்னா... ஒருமுகமா இருக்கறதும் இல்லே, மனதைக் கட்டுப்படுத்தறதும் இல்லே, கவலைப்படாம இருக்கறதுதான்.

இது முடியலேன்னா... பிற அப்பியாசம். தியானம், பக்தி, ஜபம் உதவும். இதெல்லாம் நினைப்பு விரிஞ்சு போகாம வச்சுருக்கும். ஏக நினைப்பிலே நிக்க வைக்கும். ஏக நினைப்பும் காலக்கிரமத்திலே மறைஞ்சு சும்மாயிருந்துடும்.

(486) **திரு. கணபாத்ரம் கேட்டார்.**

**கே: நான் யார்ன்னு எப்படி கண்டுபிடிக்கறது?**

**ப:** இரண்டு நான் இருக்கா?

ஒண்ணு இன்னொண்ணைக் கண்டுபிடிக்க!

**கே: எப்படி நான்கறதை உணர்றது? நான் யார்ன்னு ஜபம் மாதிரி பண்ணணுமா?**

ப: இல்லை.

**கே: நான் யார்ன்னு யோசிக்கணுமா?**

ப: 'நான்'ன்னு ஒரு நினைப்பு வந்துருக்கில்லையா... அதைப் பிடிச்சுக்கோங்கோ. அதோட மூலத்தைக் கண்டுபிடிங்கோ!

**கே: எனக்கு எப்படிச் செய்யணும்ன்னு தெரியலை!**

ப: உங்களுக்கு வெளியே 'நான்' இருக்குன்னா சொல்லலாம். உள்ளே இருக்கறதை நீங்கதான் செய்யணும்.

**கே: எனக்கு புரியலை.**

ப: என்னது! நீங்க இருக்கறது உங்களுக்குப் புரியலேயா!

**கே: தயவு செஞ்சு வழி சொல்லுங்க?**

ப: உங்களோட வீட்டுக்குள்ளே உங்களுக்கு வழி காட்டணுமா?

உங்களிடமே இருக்கு.

**கே: என்னை என்னதான் செய்யச் சொல்றீங்க! எனக்கு உபதேசம் பண்ணுங்க.**

ப: நீங்க ஏன் எதையாவது செய்யணும்?
எதுக்கு நீங்க நான்கறதைப் பிடிக்கணும்?
ஏன் அதோட மூலத்தைத் தேடணும்?
சும்மாயிருக்கறதுக்குத் தானே...!
கவலையில்லாமே இருக்கறதுக்குத் தானே....!

அதை ஏன், இப்போவே கவலையில்லாமே சும்மாயிருக்கக் கூடாது?

இந்த உண்மை புரியாதவா... அவாவாளோட பக்குவத்துக்கு ஏத்தமாதிரி ஏதாவது செய்யலாம்.



(487) ஒரு ஆங்கிலேயப் பெண்மணி கேட்டார்.

**கே: ஆத்ம ஞானத்தோட நோக்கம் என்ன?**

ப: ஆத்மஞானம்தான் முடிவு. அதுக்கு மேலே ஒண்ணும் இல்லே. அதனாலே ஆத்ம ஞானத்துக்கு எந்த நோக்கமும் இல்லே.... இருக்கவும் முடியாது.

**கே: இல்லை... ஆத்ம ஞானத்தோட உபயோகம் என்னன்னு கேட்டேன்?**

ப: ஏன் ஆத்ம ஞானம் அடையணும்ன்னு தேடறேள்? பேசாம இருக்கற மாதிரியே ஏன் இருக்கக்கூடாது? ஏன்னா... இப்போ இருக்கற நிலை திருப்தியா இல்லே. ஆத்மஞானம் அடைஞ்சா அதிருப்தி போயிடும்.

**கே: அதிருப்தியை எப்படி ஆத்மஞானம் போக்கும்?**

**நான் உலகத்திலே இருக்கேன். ஒரே போர் மயமா இருக்கு. ஆத்ம ஞானம் இதெயெல்லாம் முடிவுக்கு கொண்டு வருமா?**

ப: நீங்க உலகத்திலே இருக்கேளா? இல்லே, உலகம் உங்ககிட்டே இருக்கா?

**கே: எனக்குப் புரியலை, உலகம் என்னைச் சுத்தி இருக்கு.**

ப: நீங்க உலகத்தையும், அதிலே நடக்கறதையும் சொல்றேள். அதெல்லாம் உங்களோட கற்பனை. கற்பனை மனசுலே இருக்கு. மனசு உங்களிடம் இருக்கு. அதனாலே உலகம் உங்களிடம்தான் இருக்கு.

**கே: எனக்குப் புரியலை. நான் உலகத்தைப் பத்தி நினைக்கலைன்னாலும் உலகம் இருக்கு.**

ப: உலகம் மனசுக்கு வேறையா இருக்குன்னு சொல்ல வர்றேள். அதாவது மனசு இல்லேன்னாலும் இருக்கு.

**கே: ஆமாம்.**

ப: தூங்கும்போது உலகம் இருக்கா ?

**கே: ஆமாம்.**

ப: தூங்கும்போது பாத்தேளா ?

**கே: இல்லை. நான் பாக்கலை. ஆனா அப்போ முழிச்சு இருந்தவங்க பாத்தாங்க.**

ப: தூங்கும்போது முழிச்சுக்கொண்டு இருந்தவாளைப் பாத்தேளா ?

இல்லே, இப்போ பாத்தேளா ?

**கே: என்னோட விழிப்பு நிலையிலே.**

ப: அப்போ நீங்க சொல்றது விழிப்பு நிலையைப் பத்தி. தூக்கத்தைப் பத்தி இல்லை. கனவிலேயும், விழிப்பிலேயும் மனசாலேயேதான் உலகம் தோற்றமாகும். தூங்கும்போது மனசு ஒடுங்கிடறது. உலகம் விதை வடிவிலே மனசுலே இருக்கு. அது மீண்டும் விழிப்பிலே மரமாகறது... உலகமாகறது. நான்னு ஒரு எண்ணம் கிளம்பி, உடம்பைப் பிடிச்சுக்கறது... பிடிச்சுக்கொண்டு உலகத்தைப் பாக்கறது. அதனாலே உலகம் மனசோட படைப்பு.

**கே: எப்படி இருக்க முடியும்? உலகப்போருக்கு நானா காரணம்?**

ப: ஏன் இருக்க முடியாது? கனவிலே ஒரு உலகத்தை நீங்க படைக்கலியா?

விழிப்பு ஒரு நீண்ட கனவு. கனவையும், நனவையும். பாக்கறதுக்கு ஒருத்தன் இருக்கணும். அவன் யார்?

அது உடம்பா?

**கே: இல்லை.**

ப: அது மனசா?

**கே: அப்படித்தான் இருக்கணும்.**

ப: ஆனா மனசில்லாமே, நீங்க இருக்கேளே!

**கே: எப்படி?**

ப: தூக்கத்திலே.

**கே: அப்போ நான் இருந்தனான்னு தெரியலையே!**

ப: நீங்க இல்லேன்னா, நேத்து நிகழ்ச்சியை எப்படி ஞாபகப்படுத்துவேள்?

தூங்கும்போது நீங்க இருக்கேள்ங்கறதோட தொடர்ச்சி விட்டுப் போச்சா?

**கே: ஒரு வேளை போயிருக்கலாம்.**

ப: அப்படின்னா குப்புசாமி ராமசாமியாதானே முழிப்பான்!

எப்படி ஒரே ஆளே தூங்கறதுக்கு, முன்னாடியும் பின்னாடியும் இருக்கான்.

நான் சுகமாத் தூங்கினேன்னு சொல்றேள் இல்லையா....

நல்லாத் தூங்கி எழுந்தப்பறம், ரொம்பத் தெளிவா இருக்கேன்னு சொல்றேள்லே... அப்போ தூக்கம் உங்களோட அனுபவம்தானே?

தூக்கத்தை அனுபவிச்சவன்தான்... இப்போ விழிப்புலே பேசறவனோட தன்னை சம்பந்தப்படுத்திக்கறான். அதனாலேதான் அப்படிச் சொல்றான்.

அப்போ நீங்க தூக்கத்திலே இருந்திருக்கணும்.

**கே: ஆமாம்.**

ப: அப்போ 'நான்'கறது தூக்கத்திலே இருந்தது. ஆனா, அப்போ உலகம் இருந்தா... அது இருக்கேன்னு சொல்லணுமில்லையா!

**கே: இல்லை. ஆனா இப்போ சொல்லுதே!**

**உலகம் இல்லைன்னு இப்போ சொன்னா, கல்லுலே மோதி காலிலே காயம்தான் படும்.**
**காயம்.... கல்லு இருக்குன்னு சொல்றது...**
**உலகம் இருக்குன்னு சொல்றது.**

ப: ஆமா! கல்லு, கால்லே வந்து மோதித்து!
· காலா சொல்லித்து, கல்லு இருக்குன்னு.

**கே: இல்ல நான்தான்.**

ப: யார் இந்த நான்?

நான்கறது உடம்பா இருக்க முடியாது. மனசா இருக்க முடியாதுன்னு ஏற்கனவே பாத்துட்டோம்.

நான்கறதுதான் மூணு நிலையிலேயும் இருக்கு... அனுபவிக்கறது. இந்த மூணு நிலையும் நான்கறதை பாதிக்கறது இல்லை. சினிமா படம் ஸ்கிரீனைப் பாதிக்காத மாதிரி.

மூணு நிலை மாறிமாறி வந்தாலும், நான்கறதைப் பாதிக்கறது இல்லே. இந்தப் படம், அதாவது விழிப்பும், கனவும், மனசு போடறதுதான்.

இந்தப் படங்களாலே நமக்கு ஒரு பாதிப்பும் இல்லேன்னு... எப்பவும் இருக்கற நான்கறதை தெரிஞ்சுக்கறதுதான்.... ஆத்மஞானம்.

அதோட பயன் முழுமையும் மாறாத ஆனந்தமும்.

**கே: உலகத்தோட அமைதிக்கு எதுவும் பண்ணாம, நாம மட்டும் அமைதியா இருக்கறது, எப்படி முழுமையான ஆனந்தமாகும்?**
**எப்படி ஸ்பெயின்லையும், சீனாவுலையும் போர் நடக்கறப்ப ஒருத்தன் ஆனந்தமா இருக்க முடியும்? அது சுயநலமில்லையா?**
**உலகம் கஷ்டப்படணும், நாம மட்டும் சுகமா சும்மாயிருக்கணுமா?**

ப: நான்கறதுதான் இங்கே எல்லாமும் அதைத் தாண்டினதும்ன்னும் புரிய வச்சாச்சு. உலகம் நான்கறதுக்கு தனியா இல்லை. அப்படி இருக்கற நான்கறதை உணர்றது சுயநலம்ன்னா... அந்தச் சுயநலம் உலகத்தையும், தனக்குள்ளே சேத்துதான் வைச்சு இருக்கு. ஆட்சேபணைக்குரியது இல்லை.

**கே: அப்போ உண்மையை உணர்ந்தவனும், மத்தவங்க மாதிரிதான வாழ்வான்!**

**ப:** ஆமா. உண்மையை உணர்ந்தவன் தனக்கு அன்னியமா உலகத்தைப் பாக்கறது இல்லே. அவனுக்கு உண்மை நல்லாத் தெரியும். குறை இல்லை, நிறைதான்ங்கறான். அவனோட அமைதி பாதிக்கப்படாது.

அஞ்ஞானியே உலகத்தைத் தனக்கு வேறா பாக்கறான். எதுவும் சரியில்லேன்னு குறைபடறான். அமைதியை இழக்கறான்.

மத்தபடி பேசறது சாப்பிடறது எல்லாம் ஒண்ணுதான்.

**கே: அப்போ மத்தவங்களுக்கு தெரியற மாதிரி, ஞானிக்கும் உலகத்துலே போர் நடக்கறது தெரியுமா?**

**ப:** ஆமாம்.

**கே: அப்போ எப்படி சுகமாயிருக்க முடியும்?**

**ப:** சினிமா ஸ்கிரீன், படத்திலே வர்ற நெருப்பினாலேயோ, கடல்னாலேயோ பாதிக்கப்படுமா?

அப்படித்தான் ஆத்மாவும்.

நான் உடம்புதான்கற எண்ணம் கெட்டியா இருக்கு. எவ்வளவு சொன்னாலும்... புரிஞ்சாலும்... அதைத் தாண்ட முடியலே. அதை விட முடியலே.

ஒருத்தன் கனவு காண்றான். முழிச்சா கனவு பொய்ங்கறான். விழிப்பு மத்த இரண்டு நிலைகளிலும் பொய்யாயிடறது. ஒவ்வொரு நிலையும் அடுத்ததிலே பொய்யாயிடறது.

அதனாலே பாக்கறவன்லே ஏற்படற மாற்றம்தான் மூணு நிலையும். அல்லது, எதனாலேயும், பாதிக்கப்படாமலும், இடைவிடாமலும் இருக்கற ஆத்மாவிலே ஏற்படற தோற்றங்கள்தான்.

அப்படியேதான் பிறப்பும், வளர்ப்பும், இறப்பும் ஆத்மாவிலே ஏற்படற தோற்றம். பிறப்பு, இறப்பு வெறும் நினைப்புதான். அது உடம்புக்குத்தான். அல்லது மனசுக்குத்தான்.

ஆத்மா பிறக்கறதுக்கு முன்னாடியே இருந்ததினாலே, இறந்ததுக்கு அப்புறமும் மாறாம இருக்கும். அடுத்து அடுத்து வர்ற உடம்புகள்லேயும் அப்படியேதான் நடக்கும். ஆத்மா அழியாதது. தோற்றம் மாறிக்கொண்டே இருக்கும். அழியும்.

மரணபயம் மனசுக்குத்தான். ஆத்மாவுக்கு இல்லை. அந்தப் பயம் அஞ்ஞானத்தாலேயே ஏற்படறது.

ஞானம்னா... ஆத்மாவோட அழிவற்ற தன்மையை உணர்றதும், இந்த முழுமையை அறியறதும்தான்.

சாவு ஒரு எண்ணம். துக்கத்தைக் கொடுக்கறது. அழிவற்றதை உணர்ந்தா....அது ஓடிடும்.

**கே: உலகம் கனவுன்னா அது எப்படி எப்பவும் இருக்கற உண்மையோட பொருந்தும்?**

ப: உலகம் ஆத்மாவிலே இருந்து வேறில்லேங்கறதை உணர்ந்தா பொருந்தும்.

**கே: ஆனா, கனவு கொஞ்ச நேரம்தான் இருக்கு. விழிப்புல அது பொய்ன்னு தெரிஞ்சுடுது.**

ப: விழிப்பும் அப்படித்தான்.

**கே: ஒருத்தர் ஐம்பது வயசு வரைக்கும் வாழ்றார்ன்னா, அவரோட விழிப்பு நிலை ஐம்பது வருஷமா மாறாம தொடர்ச்சியா இருக்கு. கனவுல அப்படி இல்லை. அடுத்த கனவு வேறையா இருக்கு.**

ப: உங்களுக்கு ஒரு கனவு வர்றது. அதிலே ஐம்பது வருஷம் நீங்க வாழ்ந்த அனுபவங்கள் எல்லாத்தையும் ஒரு புஸ்தகமா எழுதி வெளியிடறேள். உங்களோடகூட இருந்த எல்லாரும் அதிலே கலந்துக்கறா. உங்களைப் பாராட்டறா. அப்புறம் கனவு முடிஞ்சுடறது. பாத்தா... அஞ்சு நிமிஷம்தான். ஆனா அந்தக் கனவிலே நீங்க தொடர்ந்து அம்பது வருஷம் டைரி எழுதினதா இருக்கு. எது உண்மை? இப்போ நீங்க வாழ்ந்த அம்பது வருஷமா? இல்லே கனவிலே நீங்க வாழ்ந்த அம்பது வருஷமா? கனவிலே அம்பது வருஷம் இப்போ அஞ்சு

நிமிஷம். இந்த அம்பது வருஷம் தூக்கத்திலே இல்லவே இல்லை. அவ்வளவுதான். இரண்டு நிலைக்கும் பேதம் இல்லை.

**கே: அப்போ ஆன்மா இந்நிலைகளால பாதிக்கப்படுவதில்லை. மறுபிறப்புகள்ல வர்ற உடம்புகளாலையும் பாதிக்கப்படாது. அப்போ உடம்பு எப்படி தொழில்படுது?**

ப: உடம்பு ஜடம்னாலும் ஆத்மாவோட சந்நிதி மாத்திரத்தாலேயே தொழில்படும்.

**கே: அப்போ உண்மையை உணர்ந்தவன் ஆத்மாவேதான். அவன் உலகத்தை பாக்கறது இல்லையா?**

ப: அவன் பார்ப்பான். ஆனா ஆத்மாவுக்கு அன்னியமா இல்லே.

**கே: உலகத்தை பாக்கறப்ப ரொம்ப துக்கமாயிருக்கு. அவன் ஏன் உலகத்தை அப்படி கற்பனை பண்ணணும்?**

ப: ஞானி, உலகம் துக்கமாயிருக்குன்னு சொன்னானா... நீங்கதான் சொல்றேள். உலகம் துன்பமா இருக்கே! என்ன செய்யறதுன்னு அவன் கிட்டே உதவி கேக்கறேள். ஞானி தன்னோட அனுபவத்திலே இருந்து, ஆத்மாவிலே இருந்தா துக்கம் இல்லைங்கறான்...

துக்கம் உலகத்தை நம்மள்லே இருந்து வேறா பாக்கறதாலேதான் இருக்கு. அதை நம்மள்லே இருந்து பிரிக்கவே முடியாத மொத்தமா, உலகத்தை ஒரே ஆத்மாவா உணர்ந்தா, எதைப்பத்திக் கவலைப்படறது!

உண்மையை உணர்ந்தவனுக்கு இது பரலோக சாம்ராஜ்யம். பரலோக சாம்ராஜ்யம் உனக்குள்ளே இருக்குன்னு சொல்றதுக்கு அர்த்தம் இதுதான். அது இங்கேயே இப்போவே இருக்கு.



**(488) இளைஞர் ஒருவர் கேட்டார்.**

கே: ஆரோக்கியமான உடம்புலதான் ஆரோக்கியமான மனசு இருக்கும்னு சொல்றாங்களே! உடம்பை எப்பவும் ஆரோக்கியமாவும் வலிமையாவும் வச்சுக்கணுமா?

ப: அதுக்குக் கவனம் கொடுத்தா முடிவேயிருக்காது.

கே: இப்போ இருக்கற அனுபவங்களுக்கு. பூர்வ வினைதான் காரணம்ன்னு சொல்றாங்களே! முன்னாடி என்ன தப்பு பண்ணோம்னு தெரிஞ்சா இப்போ பரிகாரம் பண்ணலாமா?

ப: ஒரு தப்புக்கு பரிகாரம் பண்ணிடுவே... மொத்த சஞ்சிதத்துக்கும் என்ன பண்றது? அது ஏகப்பட்ட பிறப்பை கொடுக்கப் போறதே! அப்போ பரிகாரம் தேடறது வழியில்லே. பரிகாரம் பண்ணப் பண்ண கர்மம் ரொம்ப வீரியமாகும். அந்தக் கர்மம் மேலும் கர்மத்தைச் சேக்கும். யாரோட கர்மம்ன்னு பாக்கறதுதான் அதை ஒழிக்கறது.

(489) ஒரு ஆங்கிலப் பெண்மணி கேட்டார்.

கே: ஆத்மஞானமடையறது எப்படி?

ப: மனத்தைப் பிடிச்சுக்கணும், அது எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ...ன்னு ஆரம்ப சாதகர்களுக்கு சொல்றோம். உண்மையிலேயே மனம்னா என்ன? ஆத்மாவோட வெளிப்பாடுதான். யாருக்குத் தெரியறதுன்னு பாருங்கோ... எங்கிருந்து வர்றதுன்னு... பாருங்கோன்னு சொல்றோம். இன்னும் ஆழமாப் போனா நான்கற எண்ணம் மறைஞ்சுடும். எல்லையற்ற நான் ஒளிரும். அதைத்தான் ஹிரண்யகர்பன்னு சொல்றா. அது தன்னை சுருக்கிக்கொண்டா தனிப்பட்ட ஆளாயிடும்.



நிமிஷம். இந்த அம்பது வருஷம் தூக்கத்திலே இல்லவே இல்லை. அவ்வளவுதான். இரண்டு நிலைக்கும் பேதம் இல்லை.

**கே: அப்போ ஆன்மா இந்நிலைகளால பாதிக்கப்படுவதில்லை. மறுபிறப்புகள்ல வர்ற உடம்புகளாலையும் பாதிக்கப்படாது. அப்போ உடம்பு எப்படி தொழில்படுது?**

ப: உடம்பு ஜடம்னாலும் ஆத்மாவோட சந்நிதி மாத்திரத்தாலேயே தொழில்படும்.

**கே: அப்போ உண்மையை உணர்ந்தவன் ஆத்மாவேதான். அவன் உலகத்தை பாக்கறது இல்லையா?**

ப: அவன் பார்ப்பான். ஆனா ஆத்மாவுக்கு அன்னியமா இல்லே.

**கே: உலகத்தை பாக்கறப்ப ரொம்ப துக்கமாயிருக்கு. அவன் ஏன் உலகத்தை அப்படி கற்பனை பண்ணணும்?**

ப: ஞானி, உலகம் துக்கமாயிருக்குன்னு சொன்னானா... நீங்கதான் சொல்றேள். உலகம் துன்பமா இருக்கே! என்ன செய்யறதுன்னு அவன் கிட்டே உதவி கேக்கறேள். ஞானி தன்னோட அனுபவத்திலே இருந்து, ஆத்மாவிலே இருந்தா துக்கம் இல்லைங்கறான்...

துக்கம் உலகத்தை நம்மள்லே இருந்து வேறா பாக்கறதாலேதான் இருக்கு. அதை நம்மள்லே இருந்து பிரிக்கவே முடியாத மொத்தமா, உலகத்தை ஒரே ஆத்மாவா உணர்ந்தா, எதைப்பத்திக் கவலைப்படறது!

உண்மையை உணர்ந்தவனுக்கு இது பரலோக சாம்ராஜ்யம். பரலோக சாம்ராஜ்யம் உனக்குள்ளே இருக்குன்னு சொல்றதுக்கு அர்த்தம் இதுதான். அது இங்கேயே இப்போவே இருக்கு.



(488) **இளைஞர் ஒருவர் கேட்டார்.**

கே: ஆரோக்கியமான உடம்புலதான் ஆரோக்கியமான மனசு இருக்கும்னு சொல்றாங்களே! உடம்பை எப்பவும் ஆரோக்கியமாவும் வலிமையாவும் வச்சுக்கணுமா?

ப: அதுக்குக் கவனம் கொடுத்தா முடியாமலிருக்காது.

கே: இப்போ இருக்கற அனுபவங்களுக்கு, பூர்வ வினைதான் காரணம்ன்னு சொல்றாங்களே! முன்னாடி என்ன தப்பு பண்ணோம்னு தெரிஞ்சா இப்போ பரிகாரம் பண்ணலாமா?

ப: ஒரு தப்புக்கு பரிகாரம் பண்ணிடுவே... மொத்த சஞ்சிதத்துக்கும் என்ன பண்றது? அது ஏகப்பட்ட பிறப்பை கொடுக்கப் போறதே!

அப்போ பரிகாரம் தேடறது வழியில்லே. பரிகாரம் பண்ணப் பண்ண கர்மம் ரொம்ப வீரியமாகும். அந்தக் கர்மம் மேலும் கர்மத்தைச் சேக்கும். யாரோட கர்மம்ன்னு பாக்கறதுதான் அதை ஒழிக்கறது.



(489) ஒரு ஆங்கிலப் பெண்மணி கேட்டார்.

கே: ஆத்மஞானமடையறது எப்படி?

ப: மனத்தைப் பிடிச்சுக்கணும், அது எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ...ன்னு ஆரம்ப சாதகர்களுக்கு சொல்றோம்.

உண்மையிலேயே மனம்னா என்ன? ஆத்மாவோட வெளிப்பாடுதான்.

யாருக்குத் தெரியறதுன்னு பாருங்கோ...

எங்கிருந்து வர்றதுன்னு... பாருங்கோன்னு சொல்றோம்.

இன்னும் ஆழமாப் போனா நான்கற எண்ணம் மறைஞ்சுடும். எல்லையற்று நான் ஒளிரும். அதைத்தான் ஹிரண்யகர்பன்னு சொல்றா. அது தன்னை சுருக்கிக்கொண்டா தனிப்பட்ட ஆளாயிடும்.



(490) *அந்த ஆங்கிலப் பெண்மணி தன் நாடு திரும்புமுன்*

**கே: எங்க ஊர்லே ஆத்ம ஞானம் எளிமை கிடையாது. ஆனாலும் நான் அதுக்கு முயற்சி பண்ணுவேன். எந்த வழியிலே முயற்சிக்கறது?**

ப: ஆத்ம ஞானம் உங்களுக்கு வெளியே இருந்தா... அதுக்கு வழி காட்டலாம்.

எப்படி போறது? எவ்வளவு நாள் ஆகும்? எல்லாம் சொல்லலாம்.

ஆனா, இங்கே...நீங்க உங்களையேதான் உணரப் போறேள். நீங்க இல்லாமே நீங்க இருக்க முடியாது. நீங்க இருக்கறது உங்களுக்கு எப்பவும் மாறாத அனுபவம். அதுதான் ஆத்மா. ஆத்மஞானம் அதனாலே எப்பவுமே அடையப்பட்டே இருக்கு.

என்ன... உங்களுடைய ஞானம், உலகம் உங்களுக்கு வெளியே இருக்குங்கற தப்பான நினைப்பாலே மறைக்கப்பட்ட மாதிரி இருக்கு. இந்த நினைப்பு போச்சுன்னாபோதும்.

நீங்க செய்ய வேண்டியது எல்லாம் இவ்வளவுதான். அதைச் செஞ்சா போதும். ஆத்ம ஞானம் வெளிப்படும். ஆத்மாவை அடையறதுக்கு எந்த விசேஷ முயற்சியும் இல்லே. உங்களோட முயற்சி எல்லாம் உண்மையை மறைக்கற நினைப்பைப் போக்கணும். அவ்வளவுதான்.

கழுத்திலே இருந்த நகையைத் தொலைச்சதா நினைச்சு தேடினவ கதைதான் நம்மளோட கதை எல்லாம். அப்படித்தான் ஆத்ம ஞானமும். ஆத்மா எப்பவும் அடையப்பட்டே இருக்கு, அது அடையப்பட்டு இருக்குங்கற அறிவுதான் மறைபட்டு இருக்கு. அந்த மறைப்பு போச்சுன்னா... எப்பவும் தன்னாலேயே உணரப்பட்டு வந்த ஆத்மாவை அவன் திரும்பவும் கண்டுபிடிச்சுட்டதா ஆனந்தப்படறான். இந்த எப்பவும் இருக்கற ஆத்ம ஞானம் புதுசா கிடைச்ச மாதிரித் தெரியறது.

**கே: இப்போ இருக்கற அஞ்ஞானத்தை தொலைக்கறதுக்கு என்ன செய்யணும்?**

ப: உண்மை ஞானம் வேணும்னு ஆர்வமாயிருக்கணும். இந்த பிரேரேபணை வளர வளர அஞ்ஞானம் குறைஞ்சுகொண்டே வரும். கடைசியிலே அது இருக்காது மறைஞ்சுடும்.

(491) கிஷோரிலால், காந்திசேவாசங்கம் கேட்டார்.

**கே: பிரம்மச்சர்யம் எப்படி வெற்றிகரமா கடைப்பிடிக்கறது?**

ப: மனோபலம்தான் முக்ய விஷயம். சாத்விக ஆகாரம், பிராத்தனை எல்லாம் இதுக்கு உதவும்.

**கே: பிரம்மச்சர்ய விரதத்திலே சிலர் தவறிடறாங்க. அவங்களுக்கு என்ன ஆலோசனை?**

ப: உண்மையான பிரம்மச்சர்யத்திலே இந்தப் பிரச்சனை இல்லை.

**கே: ஆத்ம ஞானத்துக்கு நைஷ்டிக பிரம்மச்சர்யம் அவசியமா?**

ப: ஆத்ம ஞானமே... நைஷ்டிக பிரம்மச்சர்யம்.

விரதம் பிரம்ச்சரியம் இல்லை. பிரம்மத்திலே வாழறதுதான் பிரம்மச்சரியம்.

ஆத்மஞானத்துக்கும் நீங்க சொல்ற பிரம்மச்சரியத்துக்கும் சம்பந்தம் இல்லே. நீங்க சொல்ற பிரம்மச்சர்யம் அவாவாளோட பூர்வ ஸம்ஸ்காரத்தைப் பொறுத்தது.

**கே: ஜீவன் அனாதியா?**

ப: ஜீவன்னு உண்மையிலேயே ஒண்ணு இருக்கான்னு விசாரிச்சுப் பாருங்கோ. இந்தக் கேள்வியை அப்புறம் கேக்கலாம்.

**கே: வாசனைகள் ஞானிகளுக்கும் உண்டுங்கறாங்களே?**

ப: ஆமா. போக வாசனை.

**கே: இந்த விளக்கத்தை போலி குருமார்கள் தவறா பயன்படுத்திக்கறாங்க.**

**அவங்க செய்யறதுக்கு எல்லாம் பிராப்தத்து மேலேயே பழியைப் போடறாங்க. எப்படி உண்மையை போலியில இருந்து அடையாளம் கண்டுக்கறது?**

ப: கர்த்துருத்துவம் போனவன் 'இது என் பிராரப்தம்'ன்னு சொல்ல மாட்டான்.

ஞானிகள் வெவ்வேறு விதமான வாழ்க்கை வாழ்ந்தாலும், பிறருக்காகவே. ஞானிகள், பிராப்தம்ன்னு தங்களுடைய வாழ்க்கைக்கும் நடத்தைக்கும் காரணம் சொல்ல மாட்டா.

(492) ***கோவில் நிர்வாகத்துக்கும் அரசாங்க வனத்துறைக்கும் நடந்த ஒரு வழக்கில் பகவான் ஒரு சாட்சியாக விசாரிக்கப் பட்டார்.***

அதில்

ப: சிவம் எப்பவும் மூணுவடிவமா இருக்கார்.

1. பரப்பிரம்மம் --------- பிரம்ம ரூபம்
2. லிங்கம்--------- லிங்க ரூபம் (இங்கே மலை)
3. சித்தன் -------------- சித்த ரூபம்

கட்டடங்களும், ஆசிரமங்களும் என்னைச் சுத்தி ஏற்பட்டது. நான் அதை விரும்பலே. இதை நான் கேட்கவும் இல்லே. அது உருவாகறதைத் தடுப்பதும் இல்லே. நான் விரும்பலேன்னாலும் நடக்க வேண்டியது நடக்கும்ன்னு தெரியும். அதனாலே இது நடக்க வேண்டியது இருக்கு போலும்ன்னு மறுப்பு சொல்றது இல்லே.

**கே: இப்போ இருக்கற சர்வாதிகாரி உங்க வாரிசா?**

ப: ஆமாம். நிர்வாகத்துக்கு மட்டும்.

**கே: எல்லா வேலையும் அவர்தான் பாக்கறாரா?**

ப: அவர் மேற்பார்வைதான். மத்தவாதான் வேலை பாப்பா.



(493) ஆந்திராக்காரர் கேட்டார்.

**கே: உங்களை மறக்காம எப்படி இருக்கறது?**

ப: மறக்கவே முடியாதுன்னு தெரிஞ்சுகொண்டா!

**கே: எப்படி மறக்கவே முடியாதுன்னு தெரிஞ்சுக்கறது?**

ப: மறந்துட்டேன்னு வர்ற நினைப்பையெல்லாம் விரட்டி விட்டுடணும்.

(495) எர்ணாகுளம் கல்லூரிப் பேராசிரியர் கேட்டார்.

**கே. பற்றில்லாமல் என் கடமைகளை எப்படிச் செய்யறது? எனக்கு மனைவி குழந்தைகள் இருக்கு. அவங்களுக்கு செய்ய வேண்டிய கடமை இருக்கு. பிரியம் அவசியமா இருக்கே! சரிதானே?**

ப: உங்களோட கல்லூரி உத்யோகத்தை எப்படிப் பாக்கறேள்?

**கே: சம்பளத்துக்கு.**

ப: பற்று இல்லாமதானே உங்களோட கடமையைச் செய்றேள்?

**கே: ஆனா மாணவர்கள் பிரியம் காட்டணும்ன்னு விரும்ப றாங்களே?**

ப: 'உள்ளே பற்றற்று... வெளியே பற்றுடன் உலவு'ன்னு யோக வாசிஷ்டம் சொல்றது.



(495) யாரோ ஒருவர் கேட்டார்.

**கே: உலக ஆசைகள் எல்லாம் திருப்தி அடைஞ்சாத்தான் உலகத்தை துறக்க முடியும். சரிதானே?**

ப: ஆமாமா...! கொழுந்துவிட்டு எறியற தீயை, பெட்ரோல் ஊத்தினாத்தான் ஓய் நல்லா அணையும்!

எவ்வளவுக்கு எவ்வளவு ஆசைகளை திருப்தி பண்றோமோ, அவ்வளவு ஆழமா ஸம்ஸ்காரம் ஏற்படும். ஆசையெல்லாம் ஒழிஞ்சாத்தான் ஸம்ஸ்காரம் தலைதூக்காமே பலமிழந்து அழியும். ஸம்ஸ்காரங்கள் பலமிழக்கணும்னா... தன்னை விடாது இருக்கணும். ஆசை வசப்பட்டு ஓடிடக் கூடாது.

**கே: எப்படி ஆசையை ஒழிக்கறது?**

ப: ஞானத்தாலே. நாம மனசு இல்லேன்னு தெரியணும். ஆசைகள் எல்லாம் மனசோடது. இது நம்மது இல்லே. நாமளும் இல்லேன்னு தெரிஞ்சா ஒழியும். எந்தனம் இல்லாத விறகு மாதிரி தானே ஓய்ஞ்சுடும்.

**கே: நடைமுறை வாழ்க்கையில ஆசைகளை அடக்க முடியறது இல்லை.**

ப: ஆசைகளைத் திருப்தி பண்ண முயற்சி பண்ற ஒவ்வொரு முறையும், இது இல்லாமே இருந்தா நல்லது.... இது தேவையில்லே...ங்கற ஞானம் வரணும். இப்படி அடிக்கடி இந்த ஞானம் வந்தா காலக்கிரமத்திலே ஆசைகள் பலமிழக்கும்.

நம்மளோட நிஜமான ஸ்வபாவம் என்ன? எப்படி நம்மளோட இயல்பை மறக்க முடியும்? விழிப்பு, கனவு, தூக்கம் நம்மளோட இயல்பை மறக்க முடியும்? விழிப்பு, கனவு, தூக்கம் மூணும் மனசோட நிலைமைகள். நமக்கு இல்லை. இந்த மூணு நிலைக்கும் நாம சாட்சி. தூங்கும்போது இருக்கோமே! அதுதான் நம்மளோட நிஜ ஸ்வபாவம்.

**கே: அப்போ தியானம் பண்ணும்போது ஏன் தூங்கக்கூடாதுன்னு சொல்லணும்?**

ப: மனோலயம்தான் கூடாது.

இப்போ முழிச்சு இருக்கேள்... பிறகு தூக்கம் வரும். அது உண்மையான தூக்கம் இல்லே.

தூங்கின பிறகு விழிச்சுப்பேள்... அது உண்மையான விழிப்பும் இல்லை.

இப்போ நீங்க விழிச்சுக்கொண்டு இருக்கேளா? இல்லை. உன்னுடைய உண்மை நிலையிலே விழிக்கணும். இந்தப்

பொய்யான தூக்கத்திலேயோ, பொய்யான விழிப்பிலேயோதான் மாட்டிக்கக் கூடாது.

'லய சம்போதயே சித்தம் விட்சிப்தம் சமயேத் புன்ஹ'

இதுக்கு என்ன அர்த்தம்ன்னா... இந்த மூணு நிலையிலே... எந்த ஒண்ணுலேயும் மாட்டிக்கக் கூடாது. அதுக்குமாறா, நம்மளோட இயல்பான நிலையிலேயே... இந்த மூணுலேயும் இருக்கணும்.

**கே: மூணு நிலையும் மனசுக்குத் தானே! நாம ஏன் மாட்டிக்கறோம்!**

ப: யாரோட மனசுக்கு?

அதைப்பிடிங்கோ. அப்புறம் சொல்லுங்கோ.

**கே: மனசைப் பிடிக்க முடியலை. அதுதான் எல்லாத்தையும் கொண்டு வருது. அதோட படைப்புகளை அனுபவிக்க முடியுதே தவிர அதோட மூல ஸ்வபாவம் தெரியலை.**

ப: சரியாச் சொன்னேள்! ஸ்படிகத்திலே நிறங்களைப் பாக்கறேள்... வெள்ளை ஒளிதான் ஸ்படிகத்துக்கு ஊடே பாக்கறப்போ ஏழு நிறமாத் தெரியறது. அது மாதிரிதான் ஆத்மாவும்.

அதுவேதான் மனம், புத்தி, உலகம், உடம்புகளாத் தெரியறது. நம்மளோட ஆத்மாவையேதான் மனசு, உடம்பு, உலகமா பாக்கறோம். அதைத்தான் ஆத்மாவை நீங்க எப்படி பாக்கறேளோ, அப்படியே தெரியும்ன்னு சொல்றா.

**கே: இது பயிற்சிக்கு ரொம்ப கஷ்டம், நான் இறைவனையே பிடிச்சுக்கறேன்; அவரையே சரணடையறேன்.**

ப: எல்லாத்தை விடச் சிறந்தது அதுதான் ஓய்!



(496) ***ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் சன்யாசி கேட்டார்.***

**கே: என்னுடைய ஸ்வபாவம் ஏன் இன்னும் அனுபவமாகலை? ஆனா இங்கேயே இப்பவே இருக்குங்கறீங்களே!**

ப: இங்கேயே இப்போவே இருக்குங்கற நிஜ ஸ்வபாவத்தை தெரிஞ்சுக்கறதுக்கு தடை உங்களோட அஞ்ஞானம்தான்.

**கே: எப்படி அஞ்ஞானத்தை போக்கிக்கறது?**

ப: 'யா ந வித்யதே ச அவித்யா'
எது இல்லையோ, அதுவே அவித்தை, அஞ்ஞானம்.
மலடி மகனை எப்படிக் கொல்றதுன்னு கேக்கறேள்.
அஞ்ஞானம் உண்மைன்னா... அஞ்ஞானம் 'இருக்கறது'ன்னா... எதை எப்படிப் போக்க முடியும்?

அது இல்லாதது. அதுக்கு இருப்பே இல்லை. அதனாலே அது மறைஞ்சுடும்.

**கே: எனக்கு புத்திபூர்வமா புரிஞ்சாலும், ஆத்மானுபவம் ஆகமாட்டேங்கறது.**

ப: இந்த நினைப்புதான் இங்கேயே இப்போவே இருக்கற ஞானத்துக்குத் தடை.

**கே: இருக்கறது ஆத்மா மட்டும்தான். ஆனாலும் இந்த நினைப்புல இருந்து விடுபடமுடியலை.**

ப: யார் இதைச் சொல்றது? ஏக ஆத்மாவா இதைச்சொல்றது. உங்களோட கேள்வியே பொருத்தமா இல்லை.

**கே: அருளாலேயேதான் இந்த ஞானம் வரும்.**

ப: நம்மள விட ஒரு மேலான சக்திதான் நம்மள எல்லாம் நடத்துதுன்னு புரியுறதே அருளாலேதான். அருள் உங்களுக்கு உள்ளேயே இருக்கு.

'ஈஸ்வரோ குருரத் மேதி'.

**கே: அருளையே உங்ககிட்டே பிரார்த்திக்கறேன்!**

ப: ம். ம்.



***வேறு ஒரு பேச்சின் இடையில் பகவான்:***

ப: சத்வம்தான் ஒளி.

ரஜஸ்தான் தன்மை: காண்பான்.

தமஸ்தான் முன்னிலை: காணப்படுபொருள்.

சத்வத்தோட ஒளியே பிரதிபலன ஒளிதான். சுத்த ஒளியாயிருந்தா அதிலே ஏன் திரிபு ஏற்படறது. மனாகாசமே பூதாகாசமா பிரதிபலிச்சு உலகமாயிடறது. காண்பான் காட்சி காணப்படுபொருளும், காண்பான் உலகத்திலே இருந்து வேறாவும் காட்டறது.

(497) **பகவான் பொதுவாகச் சொன்னது.**

ப: நம்மளோட தினசரி வாழ்க்கையிலேயே சமாதி இருக்கு. தினசரி வேலைகள் சமாதியிலேயேதான் நடக்கறது. ஸ்கிரீன்லே படம் தெரியும்போதும், படம் தெரியாதபோதும், ஸ்கிரீன்தான் இருக்கு. அப்படியேதான் சமாதி. சில சமயம் சமாதி மேலே வேலை இருக்கும். சில சமயம் வேலை இருக்காது.

ஜனங்க பொதுவா முக்த புருஷன் உலகத்துக்குப் போய் அவனுடைய விஷயத்தைப் பிரசங்கம் பண்ணணும்னு நினைக்கறா. ஒருத்தன் அவனைச் சுத்தி துன்பமும், பிரச்சனைகளும் இருக்கும்போது, எப்படி அவன் மட்டும் முக்தனா ஆனந்தமா இருக்க முடியும்?ன்னு கேக்கறா. அவா முக்தின்னா... என்னன்னே தெரியாமலே முக்தனோட நிலையைத் தீர்மானம் பண்றா. முக்தனோட பார்வையிலே அவாளோட தீர்மானம் இப்படித்தான்.

அதாவது... ஒருத்தன் கனவு கண்டான். அதிலே நிறைய பேரைப் பார்த்தான். முழிச்சபிறகு, கனவிலே இருந்தவாளும் முழிச்சுட்டாளான்னு கேட்டான். அப்படித்தான்.

இன்னொரு புண்ணியவான் 'எனக்கு முக்தியில்லேன்னாலும் சரி... நானே கடைசி ஆளா முக்தி யடையறேன். இவா எல்லாத்தையும் முக்திக் கரையேத்தி விட்டுட்டுத்தான் நான் கடைசியா முக்தியடைவேன்'ங்கறான். இது எப்படின்னா...

கனவிலே ஒருத்தன்... கனவிலே இருக்கற எல்லோரும் முழிச்சபிறகு நான் முழிச்சுக்கறேன்னு சொல்ற மாதிரிதான்.

(499) தரிசனத்துக்கு வந்த ஒருவர் கேட்டார்.

**கே: நீங்க ஞானமடைய என்ன அப்பியாசம் பண்ணீங்க?**

**ப:** ஞானம், அஞ்ஞானம் ஒரே உண்மையோட இரண்டு பக்கம் மாதிரி. இரண்டும் அஞ்ஞானியாலே கற்பனை செய்யப்படறது. ஞானிக்கு இந்த இரண்டு கற்பனையும் கிடையாது.

**கே: ஒரு ஞானி தப்பு பண்றதுக்கு வாய்ப்பு இருக்கா?**

**ப:** அஞ்ஞானி யாரையோ ஞானின்னு பாக்கறான். அந்த உடம்பையே ஞானின்னு பாக்கறான். ஏன்னா அவனுக்கு தன்னைத் தெரியாது. அஞ்ஞானி தன்னை உடம்புன்னே நினைக்கறான். அதே அறியாமையை ஞானி மேலேயும் ஏத்திப்பாக்கறான்.

அஞ்ஞானி உண்மையிலேயே கர்த்தா இல்லேன்னாலும் 'நான் கர்த்தா'ன்னு நினைச்சுக்கறான். உடம்போட செயல்களை தன்னோட செயல்ன்னு கருதறான். ஞானியையும் அப்படியே பாக்கறான். ஞானியின் நிலை, அஞ்ஞானியாலே உணர்றதுக்கு இல்லை. அதனாலே இந்தக் கேள்வி அஞ்ஞானிக்குத்தானே தவிர ஞானிக்கு இல்லை. கர்த்தா யாரோ அவனேதான் கர்மத்தைப் பத்தி கவலைப்படணும். ஆத்மா கர்த்தா இல்லை. யார்! காத்தான்னு பார்! பாத்தா ஆத்மாவே மிஞ்சும்.

ஞானியும், யாரையும் அஞ்ஞானின்னு பாக்கறது இல்லை. எல்லோரும் ஞானிதான் அவனுக்கு.

அஞ்ஞானத்தாலே தன்னோட அஞ்ஞானத்தை ஞானி மேலே ஏத்தி, அவன் வேலை பாக்கறான், அதைப் பண்றான், இதைப் பண்றான்னு தவறா சொல்றா.

ஞானியோட நிலையிலே அவன் ஆத்மாவுக்கு அன்னியமா எதையும் பாக்கறது இல்லை. இரண்டு நண்பர்கள்... பக்கத்திலே,

பக்கத்திலே படுத்துத் தூங்கினா. ஒருத்தன் கனவு கண்டான். இரண்டு பேரும் வடக்கே வெகுதூரம் யாத்திரை போனதா... முழிச்சதும் அவன் இன்னொருத்தனிடம், 'வடக்கே யாத்திரை போனோமே.... எப்படி இருந்தது'ன்னு கேட்டான்? அதுக்கு அவன், 'நான் எந்த யாத்திரையும் போகலே. அது உன் கனவு'ன்னு சொன்னான்.

**கே: நீங்க சின்ன வயசுலே அஞ்ஞானத்துலே இருந்தீங்களா? இப்போ ஞானம் அடைஞ்சிருக்கீங்களா?**

ப: உண்மையிலேயே ஞானமடையறதுன்னு ஒண்ணு கிடையவே கிடையாது. உலக வழக்குலே ஞானம் அஞ்ஞானம்ன்னு சொல்றது போலி, பொய். அது உண்மையும் இல்லை. நிரந்தரமும் இல்லை. உண்மை இரண்டற்ற ஆத்மா மட்டும்தான்.

அது அனாதியா இருக்கு. ஒருத்தன் அதை தெரிஞ்சாலும், தெரியலேன்னாலும் ஆத்மாவாவேதான் இருக்கான். கழுத்து நகையை தொலைஞ்சுடுத்துன்னு நினைச்சு தேடினவ கதைதான். பத்து முட்டாள்கள் ஆற்றைக் கடந்த கதைதான்.

**கே: யாராவது சுட்டிக் காண்பிப்பாங்களா?**

ப: சுட்டிக் காட்டற ஆளும் வெளியே இல்லை. ஒரு உடம்பையே குருன்னு தப்பா பாக்கறேள். குரு தன்னை அப்படிப் பாக்கலே. அவன் உருவற்ற ஆன்மா. அது உனக்குள்ளேயே இருக்கு. வெளியே உன்னை வழி நடத்தத் தோற்றமாகறது.



(500) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: தியானத்துலே எல்லா நினைப்புகளும் போய், மனம் சும்மாயிருக்கும்போது நான் காணாமப் போயிடறேன். சாதகன் என்ன செய்யணும்? பிரத்யட்சமா எதுவும்**

கனவிலே ஒருத்தன்... கனவிலே இருக்கற எல்லோரும் முழிச்சபிறகு நான் முழிச்சுக்கறேன்னு சொல்ற மாதிரிதான்.

(499) தரிசனத்துக்கு வந்த ஒருவர் கேட்டார்.

**கே: நீங்க ஞானமடைய என்ன அப்பியாசம் பண்ணீங்க?**

ப: ஞானம், அஞ்ஞானம் ஒரே உண்மையோட இரண்டு பக்கம் மாதிரி. இரண்டும் அஞ்ஞானியாலே கற்பனை செய்யப்படறது. ஞானிக்கு இந்த இரண்டு கற்பனையும் கிடையாது.

**கே: ஒரு ஞானி தப்பு பண்றதுக்கு வாய்ப்பு இருக்கா?**

ப: அஞ்ஞானி யாரையோ ஞானின்னு பாக்கறான். அந்த உடம்பையே ஞானின்னு பாக்கறான். ஏன்னா அவனுக்கு தன்னைத் தெரியாது. அஞ்ஞானி தன்னை உடம்புன்னே நினைக்கறான். அதே அறியாமையை ஞானி மேலேயும் ஏத்திப்பாக்கறான்.

அஞ்ஞானி உண்மையிலேயே கர்த்தா இல்லேன்னாலும் 'நான் கர்த்தா'ன்னு நினைச்சுக்கறான். உடம்போட செயல்களை தன்னோட செயல்ன்னு கருதறான். ஞானியையும் அப்படியே பாக்கறான். ஞானியின் நிலை, அஞ்ஞானியாலே உணர்றதுக்கு இல்லை. அதனாலே இந்தக் கேள்வி அஞ்ஞானிக்குத்தானே தவிர ஞானிக்கு இல்லை. கர்த்தா யாரோ அவனேதான் கர்மத்தைப் பத்தி கவலைப்படணும். ஆத்மா கர்த்தா இல்லை. யார்! காத்தான்னு பார்! பாத்தா ஆத்மாவே மிஞ்சும்.

ஞானியும், யாரையும் அஞ்ஞானின்னு பாக்கறது இல்லை. எல்லோரும் ஞானிதான் அவனுக்கு.

அஞ்ஞானத்தாலே தன்னோட அஞ்ஞானத்தை ஞானி மேலே ஏத்தி, அவன் வேலை பாக்கறான், அதைப் பண்றான், இதைப் பண்றான்னு தவறா சொல்றா.

ஞானியோட நிலையிலே அவன் ஆத்மாவுக்கு அன்னியமா எதையும் பாக்கறது இல்லை. இரண்டு நண்பர்கள்... பக்கத்திலே,

பக்கத்திலே படுத்துத் தூங்கினா. ஒருத்தன் கனவு கண்டான். இரண்டு பேரும் வடக்கே வெகுதூரம் யாத்திரை போனதா... முழிச்சதும் அவன் இன்னொருத்தனிடம், 'வடக்கே யாத்திரை போனோமே.... எப்படி இருந்தது'ன்னு கேட்டான்? அதுக்கு அவன், 'நான் எந்த யாத்திரையும் போகலே. அது உன் கனவு'ன்னு சொன்னான்.

**கே: நீங்க சின்ன வயசுலே அஞ்ஞானத்துலே இருந்தீங்களா? இப்போ ஞானம் அடைஞ்சிருக்கீங்களா?**

ப: உண்மையிலேயே ஞானமடையறதுன்னு ஒண்ணு கிடையவே கிடையாது. உலக வழக்குலே ஞானம் அஞ்ஞானம்ன்னு சொல்றது போலி, பொய். அது உண்மையும் இல்லை. நிரந்தரமும் இல்லை. உண்மை இரண்டற்ற ஆத்மா மட்டும்தான்.

அது அனாதியா இருக்கு. ஒருத்தன் அதை தெரிஞ்சாலும், தெரியலேன்னாலும் ஆத்மாவாவேதான் இருக்கான். கழுத்து நகையை தொலைஞ்சுடுத்துன்னு நினைச்சு தேடினவ கதைதான். பத்து முட்டாள்கள் ஆற்றைக் கடந்த கதைதான்.

**கே: யாராவது சுட்டிக் காண்பிப்பாங்களா?**

ப: சுட்டிக் காட்டற ஆளும் வெளியே இல்லை. ஒரு உடம்பையே குருன்னு தப்பா பாக்கறேள். குரு தன்னை அப்படிப் பாக்கலே. அவன் உருவற்ற ஆன்மா. அது உனக்குள்ளேயே இருக்கு. வெளியே உன்னை வழி நடத்தத் தோற்றமாகறது.



(500) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: தியானத்துலே எல்லா நினைப்புகளும் போய், மனம் சும்மாயிருக்கும்போது நான் காணாமப் போயிடறேன். சாதகன் என்ன செய்யணும்? பிரத்யட்சமா எதுவும்**

**இல்லை. பிரத்யட்ச பாவம் (அதாவது ஒரு மாம்பழத்தை மாம்பழமாவே பாக்கறது) வர நான் என்ன செய்யணும்?**

ப: காணாமப் போறதை யார் பாக்கறா?
எது பிரத்யட்சம்?
மூணு பிரத்யட்சம் சொல்றா.
இந்திரியப் பிரத்யட்சம்
மானஸப் பிரத்யட்சம்
சாட்சாத் பிரத்யட்சம் ன்னு

முதல் இரண்டும் போலி அறிவு. மூணாவதுதான் உண்மை அறிவு.

ஒரு மாம்பழத்தை மாம்பழமா பாக்கறது பிரத்யட்சம்ன்னு நீங்க சொல்றேள். அதுவா பிரத்யட்சம்? அதுக்கு கர்மம், கர்த்தா, கார்யம்... மூணு வேணும். அது போலி. உண்மையில்லே.

இப்போ ஏதோ இருக்குன்னு பாத்த பழக்கத்தாலேயே, அது இல்லேன்னா... நான் இல்லை, காணோம்ன்னு சொல்றோம். இது மனசோட வேலை. இருக்கேன், காணோம்ன்னு சொல்றதுக்கு ஆதாரமா இருக்கற இருப்பே பிரத்யட்சம்.

**கே: அப்போ அந்த காணாமப்போன இடம்தான் ஆத்மஞானமா? முயற்சி எதுவும் வேண்டாமா?**

ப: மனசு இருக்கற வரைக்கும், முயற்சி ஏதாவது ஒரு வடிவத்திலே இருக்கும். பண்ணுவேள்.

காணாமப் போற இடம்தான், எல்லாத் தத்துவ கொள்கைகளும் முட்டி மோதிக்கற இடம்.

**கே: ஆத்ம ஞானத்துல எதுவும் பிரத்யட்சமா விளங்குமா? இல்லை நாம இருக்கோம்கறதாத்தான் இருக்குமா?**

ப: பிரத்யட்சம் நாம இருக்கறதுதான். அது நினைப்பு இல்லை.

**கே: சாதகன் தன்னையேதான் தேடுறோம்ன்னு உணர்ற வரைக்கும் இந்த கேள்வி அவனுக்கு இருக்கும்.**

ப: உண்மை. நீங்க முதல்லே சாதகனா? . அஞ்ஞானிகளாருங்கோ.

நம்மள விழிப்புநிலையிலே இருக்கற போலி அறிவா... தப்பா எடுத்துக்கறோம். தூங்கும்போது நாம இல்லையா? அப்போ நம்ம, அறிவோன், அறியப்படுபொருள் அறிவு... இந்த திரிபுடி தாண்டி இருக்கோம்.

எது வரைக்கும் காண்பான் காட்சி இருக்கோ, அது வரைக்கும் அது போலி அறிவுதான். உண்மையறிவு அதுக்கு ஆதாரமாயிருக்கு. அது தெரியவந்தா எந்த சந்தேகமும் இல்லை. ஹிருதயகிரந்தி நாசமானா சர்வ சம்சயமும் நாசமாகும். அதுதான் பிரத்யட்சம். நீங்க நினைக்கற மாதிரி இல்லை.

அஞ்ஞானம் நீங்கறதுதான் ஆத்மஞானம். ஆத்ம ஞானம்ன்னு உபச்சாரமா சொல்றோம். உண்மையிலேயே அஞ்ஞானம்தான் நீங்கறது.



(501) மைசூர் இளைஞன் கேட்டது.

**கே: எனக்கு எப்படி உடம்பு வந்துச்சு?**

ப: 'நான்', 'உடம்பு'ன்னு சொல்லும்போதே இந்த இரண்டுக்கும் சம்பந்தம் இருக்கு. அதனாலே நீ உடம்பு இல்லே. உடம்புக்கு இந்தக் கேள்வி இல்லே. ஏன்னா அது ஜடம். தூங்கும்போது உனக்கு உடம்பு இல்லே. அங்கே இந்தக் கேள்வியில்லே. ஆனா நீ இருக்கே. இப்போ இந்தக் கேள்வி யாருக்கு வர்றது?

**கே: அகந்தைக்கு.**

ப: ஆமாம். அகந்தையும், உடம்பும் ஒண்ணாத் தோன்றி ஒண்ணா மறையறது.

உன் அகந்தையோட சம்பந்தப்படாமே தூக்கத்திலே இருக்கே. எது இந்த இரண்டு நிலையிலே உன்னோட உண்மை நிலை?

நீ தூங்கும்போதும் இருக்கே. இப்பவும் இருக்கே.

ஏன் இப்போ இந்தச் சந்தேகம் வர்றது?

அப்போ வரலே!

அகந்தைக்குதான் இந்தக் கேள்வி வர்றதுன்னு நீ சொல்றது சரிதான்.

ஆனா நீ அகந்தை இல்லையே! அகந்தை உடம்புக்கும் ஆத்மாவுக்கும் இடையிலே ஏற்படறது.

நீ ஆத்மாதான். அகந்தை எங்கேயிருந்து வர்றதுன்னு பாத்தா இந்த கேள்வி வராது.

சிறிது நேரம் கழித்து:

சாஸ்திர ரீதியா உன் கேள்விக்குப் பதில், உடம்பு கர்மத்தாலே வர்றது. அப்போ கர்மம் எப்படி வர்றதுன்னு கேள்வி கேக்கணும். அதுக்கு முற்பிறப்பு உடம்பாலேன்னு பதில் சொல்லணும்.

அது எப்படி வந்ததுன்னு கேட்டா.... முடிவுக்கு வராது.

அப்போ... யாருக்கு கர்மம்ன்னுதான் கேக்கணும்.

யாரோட கர்மம்? யாரோட உடம்பு?



(503) *ஜெ.எம். லோரி அமெரிக்க கனவான் கேட்டார்.*

**கே: என்னைவிட, என்னை பத்தி, உங்களுக்கு நல்லா தெரியும்ன்னு, உங்க முன்னாடி நின்ன உடனேயே தெரிஞ்சிடுச்சு. நான் ஊருக்கு போறேன். எப்பவும், உங்க கூட இல்லாதப்பவும், உங்க கூடவே இருக்க அருள் புரியணும்.**

ப: நீங்க நினைக்கற மாதிரி குரு வெளியே இல்லை. உள்ளே இருக்கு.

அது ஆத்மா. அதை உணருங்கோ!

அங்கேயே எப்பவும் இருங்கோ.

அதுதான் குருகூடவே இருக்கறது.

அருள் உங்களை எப்பவும் கைவிடாது.

நீங்களும் குருவை விட்டு எங்கேயும் போயிட முடியாது.

மனம் வெளியேயே ஓடும். வெளியே போற பழக்கத்தாலே குருவையும் வெளியேயே பாக்கறது. உண்மை வேற மாதிரி இருக்கு.

குரு எப்பவும் உள்ளேயே. உங்களுக்குள்ளே உங்களுக்காக இருக்கார்.

அவரேதான் நீங்களும். நீங்க பாக்கற மத்ததும். அவரைத் தவிர வேற எதுவும் இல்லை.

உங்களை உடம்பா நினைக்காதேள்!

நீங்க உடம்பு இல்லை. நீங்க ஆத்மா.

உங்களோட குருவை விட்டு நீங்க எப்படிப் பிரிய முடியும்?

அவர் உங்களோட ஆத்மா இல்லையா? நீங்க ஒருபோதும் குருவை விட்டு இருக்க முடியாது. இந்த உண்மை நல்லா மனசுலே பதியறதுதான் குரு கூடவே இருக்கறது.

இதை மறந்திடக் கூடாது.

**கே: நான் ஆத்ம ஞானம் அடைவேனா?**

ப: ஆத்ம ஞானமடையாமே எப்பவாவது இருந்திருக்கேளா? உங்களை விட்டு நீங்க எப்பவாவது இருந்திருக்கேளா?

நீங்க எப்பவுமே ஆத்மாதான். இனி ஒண்ணும் அடையறதுக்கு இல்லே.

**கே: என்னோட ஆத்மீகத்தை தினசரி வேலைகள்ல கொண்டு வரணும்னு நினைக்கறேன். எப்படி செய்யறது?**

ப: ரொம்ப நல்லது.

உங்களைநடத்தறசக்திக்குஉங்களைஒப்புக்கொடுத்துட்டா... எல்லாம் சரியாயிடும்.

உங்களை அதோட கருவின்னு உணருவேள்.

உங்களோட வேலையெல்லாம் அந்தச் சக்தியே பாத்துக்கும்.

அதோட பலனையும் அதே பாத்துக்கும்.

நீங்க எதனாலேயும் பாதிக்கப் படமாட்டேள்.

வேலை தடையில்லாமே நடக்கும்.

நீங்க அந்தச்சக்திகிட்டே ஒப்படைச்சாலும், ஒப்படைக்கலேன்னாலும் அதேதான் நடக்கும். மாறாது.

பார்வை மாற்றம்தான் நடக்கணும்.

ட்ரெயின்லே போற ஒருத்தன் சுமையைத் தலையிலேயா தாங்கிக்கொண்டு போவான்? கீழே இறக்கி வைப்பான்.

அப்படியே நம்மளோட கடமைகளும், தினசரி வேலைகளும், நாமளும்.

(503) **ஸித்திகளைப் பத்தி கேட்டதற்கு.**

ப: எதை அடைஞ்சாலும் அது நாளடைவிலே போயிடும். அது எதுவும் நித்யம் இல்லை. இங்கே இருக்கற ஒரே நித்ய வஸ்து, இருக்கறதுதான்.

நீ இருக்கேன்னு உனக்கு தெரியறதில்லையா...

கண்ணாடி தேவையில்லையே!

எந்தக் கணமும், நீ இல்லேன்னு சொல்ல முடியாது.

அப்படி சொன்னா, சொல்றதுக்கு நீ இருக்கணும்.

அதுதான் சுத்த இருப்பு.

இதைத்தான் சும்மாயிருக்கறதுன்னு சொல்றா.

(506) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: சத் (இருக்கறது)தான் சித்தா (அறிவா)?**

ப: நாம இருக்கறது, நமக்கே தெரியறதாலே, ஸத்துதான் சித்.
இரண்டும் ஒண்ணுதான்.

(507) **ஆரிய சமாஜத்தை சேர்ந்த ஒருவர் கேட்டார்.**

**கே: ஜாதி பேதங்களை போக்கறதுதான் என்னோட லட்சியமா வச்சுருக்கேன். அதை முதல்ல இங்கே நடைமுறைப்படுத்த முயற்சிக்கவா?**

ப: ஏன் உங்களைத் தொந்தரவு பண்ணிக்கறேள். போய்த் தூங்குங்கோ. எல்லாப் பேதமும் முயற்சி இல்லாமே போயிடும்.

(512) பகவான் பொதுவாகச் சொன்னது.

ப: எல்லோரும் போலி அறிவையே நம்மளோட அறிவா தவறாக் கருதறா. தூங்கும்போது, இந்தப் போலி அறிவு இல்லே.

ஆனா நாம இருக்கோம். குழந்தைகூட முழிச்சவுடனே நல்லாத் தூங்கினேன்னு சொல்றது.

அது இருந்ததைத்தானே குறிக்கறது. அப்புறம் 'நான்' கிளம்பிடறது. மனசு புலன்கள் வழியா விஷயங்களை அனுபவிக்கறது.

அதைத்தான் பிரத்யட்சம்னு சொல்றா. நீ பிரத்யட்சமா இருக்கியேன்னு சொன்னா குழம்பறா.

ஏன்னா.... போலி அறிவோடயே ரொம்ப ஜன்மமா சகவாசம் வச்சதாலே, 'நான்'னாலே.... இந்தப் போலி அறிவுதான்னு கெட்டியாயிருக்கு.

நாம இருக்கறதுதான் பிரத்யட்சம்னு சொன்னா இதை ஜனங்க ஏத்துப்பாளா? அவாளுக்குக் கடவுள் காளைமாட்டுலே பிரகாசமா எதிர்லே வந்து நிக்கணும்.

அதுதான் அவாளுக்குப் பிரத்யட்சம்... அந்தப் பிரத்யட்சம் மறைஞ்சுடும், நாம சொல்றது எப்பவும் இருக்கும்.

ஞானசம்பந்தர் .......

**'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்**
**சோதிக்க வேண்டாம் சுடர் விட்டுளன் எங்கள் சோதி**
**மாதுக்க நீங்கலுறுவீர் மனம் பற்றி வாழ்மின்**
**சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே!'** ன்னு...... பாடறார்.

இந்தத் தேவாரம் உண்மையை அப்படியே நேரே சொல்றது.



(513) மேஜர் சாட்விக் கேட்டார்.

**கே: பிரம்ம லோகம்ன்னா என்ன? சதோதய முக்தின்னா என்ன? கிரம முக்தின்னா என்ன?**

**ப:** பிரம்ம லோகத்தை உள்ளேயோ, வெளியேயோ எடுத்துக்கலாம். வெளியேன்னு எடுத்துக்கொண்டா... சாஸ்திரங்களை நம்பணும். அதுதான் பல லோகங்களை சொல்றது. உள்ளேன்னு எடுத்துக்கொண்டா... அது அனுபவம். எந்த சாஸ்திரமும் தேவையில்லே. பிரம்மலோகம்ன்னா... பிரம்ம ஞானம்தான். இங்கே ஆத்மஞானம்தான்.

பிரம்மலோகத்தை ஒரு உலகம்ன்னு எடுத்துக்கொண்டா... அதைத்தான் பௌராணிகர்களும், வேற சில கொள்கைகளைச் சேந்தவாளும் கிரம முக்தின்னு பேசறா.

கிரம முக்தின்னா... உபாசகன் அவனோட இஷ்ட தெய்வம் இருக்கற லோகத்துக்குப் போயிடுவான். அதுதான் அவனுக்கு பிரம்ம லோகம். எல்லா ஜீவர்களும், இறந்த பிறகு மத்த லோகங்களுக்கு போயிட்டு திரும்பவும் பிறக்கும். ஆனா பிரம்மலோகத்துக்கு போறவா பிறக்கறது இல்லை.

வேற லோகங்களுக்குப் போகணும்னா... அதுக்கு சில கர்மங்கள் வச்சிருக்கா. அதைப் பண்ணினா, அங்கே போகலாம்ன்னு சொல்றா. ஆனா பிரம்ம லோகத்துக்கு, ஆசை இருக்கற வரைக்கும் போக முடியாது. ஆசையற்ற நிலைதான் பிரம்மலோகம் சேக்கும். ஆசையில்லேங்கறதே அவன் மறுபடியும் பிறக்க மாட்டான்கறதோட குறிப்பு. பிரம்மலோகத்திலே இருக்கற ஆதிபத்யம் எப்போ முடியறதோ... அப்போ லோகமும் மறைஞ்சுடும்.

அந்த லோகத்திலே இருக்கறவாளும் அதோட சேர்ந்து முக்தியடைஞ்சுடுவா... எந்த நிலையிலே இருந்தாலும்... அதுதான் கிரம முக்தி.

ஆனா உபநிஷத்கள்... சதோதய முக்தியையே பேசறது. சதோதய முக்தின்னா... இங்கேயே, இப்போவே ஞானமடையறது.

கிரமமுக்தி கொள்கை சத்யோ முக்தியை ஒத்துக்கறது இல்லை. ஏன்னா ஞானமடைஞ்சா ஞானியோட உடம்பு இன்னும் இருக்கே!

மனம் இல்லேன்னா எப்படி உடம்பு இயங்கும்?

இதுக்குப் பதில் கொஞ்சம் விளக்கமாகத்தான் பேசணும்.

ஞானம் அஞ்ஞானத்துக்கு எதிரி இல்லே. தூங்கும்போது அஞ்ஞானம் விதைவடிவிலே, ஞானத்தோடேயேதான் இருக்கு. விழிப்பிலேயும் கனவிலேயும்தான் அஞ்ஞானம் ஞானத்தை மறைக்கறது.

அஞ்ஞானத்துக்கு இரண்டு அம்சம் இருக்கு.

- ஆவரணம்
- விட்சேபம்

ஆவரணம்ன்னா உண்மையை மறைக்கறது — திரை போடறது.

விட்சேபம்ன்னா பலவா மாறிடறது — வேலை பாக்கறது.

ஆவரணம் தூக்கத்திலே இருக்கு.

விட்சேபம் மத்த ரெண்டு நிலையிலே இருக்கு.

இந்தத் திரை விலகித்துன்னா.... உண்மை நல்லா பட்டவர்த்தமா தெரியும். இது ஞானிக்கு விலகி இருக்கு. ஆவரணம் இல்லே, அதனாலே அவனுக்குக் காரண சரீரம் இல்லே. விட்சேபம் மட்டும் இருக்கும்.

அதுவும் அஞ்ஞானிக்கு இருக்கற மாதிரி இல்லே.

அஞ்ஞானிக்கு எல்லா வாசனையும் உண்டு.

அதாவது கர்த்துருத்துவ வாசனை, போக்கிருத்துவ வாசனை.

ஞானிக்குக் கர்த்துருத்துவம் இல்லை. ஏன்னா... அங்கே கர்த்தா இல்லை. ஓரிரு வாசனைதான் அவனுக்கு இருக்கும். அதுவும் ரொம்பப் பலமிழந்துதான் இருக்கும். அவனை ஒண்ணும் செய்யாது. ஏன்னா... அவன் எப்பவும் ஆத்மாவாத்தான் இருக்கான். பலஹீனமான போக்கிருத்துவ வாசனை மட்டுமேயிருக்கறதாலேயே ஞானி உடம்போடு வாழறதா தெரியறது.

ஒரு ஞானிக்குக் காரண சரீரம் அழிஞ்சதாலே, ஸ்தூல சரீரத்திலே ஒரு பாதிப்பும் இல்லே. அதுவும் காலக்கிரமத்திலே அழிஞ்சுடும். அதனாலே ஸ்தூல சரீரமும் இல்லே. அவனுக்கு சூட்சும சரீரம் மட்டுமே உண்டு. அதைத்தான் 'ஆதி வாஹிக சரீரம்'ன்னு சொல்றா. இந்தச் சரீரத்தையே எல்லோரும் மரணத்துக்குப் பிறகு பிடிச்சுப்பா. இந்தச் சரீரத்தோடேயே பிற லோகங்களுக்குப் போறதும் அடுத்த சரியான உடம்பு கிடைக்கற வரைக்கும் அங்கேயே இருக்கறதும்.

ஞானி பிரம்ம லோகத்துக்கு இந்த சூட்சும சரீரத்தோடயே போறான். பிறகு அதுவும் கரைஞ்சுடறது. அதுதான் இறுதியான முக்தி.

இந்த மொத்த விளக்கமும் கேக்கறவனுக்குத்தான். ஞானிக்கு எந்தக் கேள்வியும் இல்லை. அவனோட சொந்த அனுபவத்திலேயே அவன் பந்தப்படலேன்னு தெரியும்.

**கே: இறுதி முக்தின்னு சொன்னீங்களே, அது என்னது?**

ப: ஆதிவாஹிக சரீரம் அல்லது சூட்சும சரீரம்ன்னு சொல்றது எதுன்னா... தூங்கறதுக்கு முன்னாடியும், தூங்கி முழிச்சவுடனேயும், அகந்தை எழுவதற்கு முன்னாடி அனுபவிக்கற சுத்தப் பிரகாசம்தான். அந்தப் பிரகாசம் ஹிருதயத்தோட பிரதிபலிப்புதான். அது தன்னோட மூல ஹிருதயத்தோட ஒளியாகறதுதான் இறுதி முக்தி.

**கே: ஆவரணம் நீங்கிடுச்சுன்னா காரண சரீரம் அழிஞ்சுடும்ன்னு சொன்னது ரொம்பத் தெளிவாப் புரிஞ்சது. ஆனா ஸ்தூல சரீரமும் இல்லைன்னு சொல்றீங்க! அது புரியலை.**

ப: வாசனை ரெண்டு விதம்.

- பந்தஹேது
- போகஹேது

ஞானி அகந்தையைக் கடந்ததாலே பந்தத்துக்கான எல்லாக் காரணங்களும் நீங்கிடும். அதனாலே பந்தஹேது இருக்காது.

போகஹேது பிராரப்தமா இருக்கும். அதனாலேதான் சூட்சும சரீரம் மட்டும் ஞானத்துக்கு பிறகு இருக்கும்ன்னு சொல்றது.

கைவல்ய நவநீதம். ஞானம் வந்தவுடன் சஞ்சிதமும் போயிடறதுன்னு சொல்றது. பந்தம் இல்லாததாலே ஆகமியமும் இருக்காது. பிராப்தம் மட்டும் காலக்கிரமத்திலே தீரும். அப்போ ஸ்தூல சரீரமும் தீரும்.

சாதகனை அவன் யார்ன்னு பாக்கத்தான் சொல்றோம். இதிலெல்லாம் ஆர்வம் காட்டக்கூடாது. ஆத்மாவை உணர்! அமைதி அடை!

(518) **வி. குப்தா, தெலுங்குப் பண்டிதர் கேட்டதற்கு.**

ப: அஹம் விருத்தி (போலி நான்) அஹம் கிடையாது.
பின்னது பரம்பொருள்.
முன்னது அகந்தை.
அது நாசமாகணும், ஆத்ம ஞானமடைய.

பரம்பொருளோட அஹம் தோன்றாது. அதோட முதல் தோற்றமே அஹம் ஸ்புரணம்... அதாவது நான்கறதோட பிரகாசம்.

பிரஹதாரண்ய உபநிஷத் 'அஹம் நாம அபாவத்' ங்கறது. அதாவது 'அவன் 'நான்' என்ற பெயர் கொண்டான்'ங்கறது. அதுதான் பரம்பொருளோட பெயர்.

**கே: குருவோட மனம் சிஷ்யனோட மனத்துல வேலை பாக்குமா?**

**அதுதான் அருள்புரியறதா?**

ப: மௌனந்தான் உயர்ந்த அருள் வடிவம்.
மௌனந்தான் சிறந்த உபதேசம்.

**கே: விவேகானந்தர் மௌனந்தான் உரத்த பிரார்த்தனைன்னு சொல்றார்.**

ப: சிஷ்யனோட உரத்த பிரார்த்தனைக்கு உரத்த உபதேசம்தான் குருவோட மௌனம்.

குரு மௌனமாயிருந்தா சிஷ்யனோட மனம் தானாகவே சுத்தமாயிடும்.

**கே: உலகத் துன்பங்களாலே பாதிக்கப்படும்போது குருவோட மௌனத்துக்கிட்டே வேண்டிக் கொள்ளலாமா?**

ப: சந்தேகமில்லாமே!

(519) ***தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.***

**கே: மௌனம் மகாவாக்கியத்தோட சிறந்ததா?**

ப: மகா வாக்கியங்களும், அதோட அர்த்தப்பிரயோகங்களும் முடிவில்லாத சிந்தனையையே கொடுக்கும். சாதகனோட மனத்தைப் புறமுகமாகவே வச்சிருக்கும். உண்முகமாகி நேரே நான்கறதுலே உக்காரணும். இந்த வெளிமுக வேலை எல்லாம் போய் அமைதி நிலைக்கும். தட்சிணாமூர்த்தி சிஷ்யர்கள் வந்தப்போ மௌனமாயிருந்தார். அதுதான் நேரே சீடனை சாந்தப்படுத்தி உண்மையிலே நிலைக்க வச்சது. மௌனதீட்சை மிகச் சிறந்தது. அது எல்லா தீட்சையையும் உள்ளடக்கினது.

(520) ***ஒரு அமெரிக்கர் கேட்டார்.***

**கே: நான் எல்லாம் ஒண்ணுன்னு நம்புறேன். ஆனாலும் ஜீவன் மாயையிலதான் இருக்கும்.**

ப: நீங்க எல்லாம் ஒண்ணுன்னு எதைச் சொல்றேள்? அதிலே ஜீவன் எப்படி இருக்க முடியும்?

**கே: பரம்பொருளைத்தான் ஒண்ணுன்னு சொல்றேன்.**

ப: அப்போ ஜீவன் அங்கே இருக்க முடியாது.

**கே: ஆனா ஜீவன் பரம்பொருளை உணரலை. தான் ஒரு தனியிருப்புன்னு நினைக்கறான்.**

ப: ஜீவன் தனியிருப்புதான். ஏன்னா... அப்படி இருந்தாத்தான் எதையாவது கற்பனை பண்ண முடியும்.

**கே: ஆனா, அது பொய்.**

ப: பொய் எந்த விளைவையும் ஏற்படுத்த முடியாது. நீங்க மலடி மகனைக் கொன்னுட்டேன்னு சொல்ற மாதிரிதான் அது. மலடிக்கு மகனே இல்லை.

**கே: என்னோட முட்டாள்தனம் புரியுது. ஆனா நான் உலகத்தோட பார்வையிலே இருந்து பேசறேன்.**

ப: நீங்க 'நான்'ன்னு சொல்றேல்ள்லியா...

யார் இந்த 'நான்'?

அதைக் கண்டுபிடிச்சா யாரோட கற்பனைன்னு தெரியும்.

நீங்க உலகத்தோட பார்வையிலே இருந்துன்னு சொல்றேள் இல்லையா...

தூக்கத்திலே எந்த உலகத்திலே இருந்தேள்?

**கே: இந்த உலகத்துலேதான் இருக்கேன்னு நினைக்கறேன்.**

ப: நீங்க 'நான் நினைக்கறேன்னு' சொல்றேள் இல்லையா...

அதை இப்போ முழிச்சிருக்கும்போதுதானே சொல்றேள். நீங்க தூங்கும்போது இருக்கேளா?

**கே: ஆமாம், ஆனா நான் செயல்படலே.**

ப: அப்போ நீங்க தூங்கும்போது இருக்கேள்! அதே ஆள்தானே இப்போவும் இருக்கறது? இல்லே வேற ஆளா?

**கே: ஆமாம்.**

ப: சின்ன வித்தியாசம் தூங்கும்போது செயல்படலே. இப்படி நினைக்கலே. இப்போ நினைக்கறேள். அதானே!

**கே: ஆமாம்.**

ப: அப்போ எது உங்களோட ஸ்வபாவம்? நினைக்கறதா? நினைக்காம இருக்கறதா?

**கே: புரியுது. ஆனா, நான் தூங்கும்போது என்னோட இருப்பு தெரியலையே!**

ப: இப்போதானே சொல்றேள்! தூங்கும்போது சொல்றேளா? இல்லே, தூங்கும்போது நான் இல்லேன்னு மறுக்கறேளா?

**கே: இல்லை.**

ப: அப்போ ரெண்டு நிலையிலும் நீங்க இருக்கேள்! அந்த இடை விடாத, மாறாத இருப்புதான் ஆத்மா! நீங்க இருக்கறது, உங்களுக்குத் தெரியறதில்லையா... கண்ணாடி காட்டணுமா?

அப்போ இருக்கறதேதான் அறிவு!

அதுதான் உங்களோட ஸ்வபாவம்!

அதைத்தான் சத்சித்ஆனந்தம்ங்கறோம்.

**கே: ஆனா, நினைப்பு அவசியம் வேணும், ஆத்ம ஞானத்துக்கே!**

ப: அந்த நினைப்பும், நினைப்பையெல்லாம் எப்படிப் போக்கறதுக்காகத்தான்.

**கே: என்னோட அஞ்ஞானத்தாலே, நான் பரம்பொருளோட இருப்பையும், பரமார்த்த அறிவையும் உணரலை.**

ப: யார் இந்த நான்? யாரோட அறியாமை? இந்தக் கேள்விக்கான விடையே போதும். நீங்க ஏற்கனவே ஞானமடைஞ்சுதான் இருக்கேள்ன்னு தெரியும். இந்த விடைதான் ஆதாரம். நிரூபணம்.

யாராவது தன்னோட இருப்பை மறுப்பாளா? யாராவது தூங்கும்போது நான் இல்லேம்பாளா?

தூக்க அனுபவம் போதும்! சுத்த இருப்புக்கு வேற என்ன ஆதாரம் வேணும்!

தூக்கத்துலே நான் இருக்கேன்றது தெரியறதனாலே... இந்த இருப்பே அறிவாவும் இருக்கு.

•

அதனாலே இங்கே எல்லா ஜீவாங்களும், ஞானமடைஞ்சேதான் இருக்கா. யாரும் இங்கே அஞ்ஞானி கிடையாது.

**கே: எனக்கு நல்லாப் புரியுது. ஆனா ஒரு சின்ன கேள்வி. இந்த ஆத்ம ஞானம்கறது ஆசையற்ற நிலை. மனிதன் ஆசைப்படலேன்னா அவன் மனிதனாவே இருக்க முடியாதே!.**

ப: தூங்கும்போது நீங்க இருக்கேள்லியா... ஆனா அங்கே தொழில்படலை. அப்போ எந்த உடம்பையும் பாக்கலே. அதனாலே எதையும் ஆசைப்பட முடியலே.

இப்போ விழிப்புலேயும் அதே இருப்பாத்தான் நீங்க இருக்கேள். ஆனா உடம்பு சேந்துடுத்து. உடம்பு சேர்ந்ததனாலே பல விஷயங்களைப் பாக்கறேள். அதனாலே ஆசைவருது.

தூங்கும்போது இருந்த சுகம்... இப்போ ஆசையோடு இருக்கற சுகங்களுக்கு எந்த விதத்திலேயும் குறைவா இல்லையே!.

அப்போ (தூங்கும்போது) எந்தத் தேவையும் இல்லே. எந்த ஆசையும் இல்லே. அதனாலே எந்தத் துக்கத்துக்கும் நாம ஆளாகலே. உண்மை இப்படி இருக்கறப்போ.... நீங்க ஏன் விழிப்பிலே ஆசைப் படணும்?

ஏன்னா...... உங்களை உடம்பாக் கருதறதாலேதான்.

ஏன் அப்படிக் கருதணும்!

ஆசைப்படணும்!

அதனாலே துக்கப் படணும்!

உடம்பு வந்து சொல்லித்தா, 'நான் இருக்கேன்'னு. அப்படி சொல்றது கண்டிப்பா உடம்பைத் தாண்டி அதை அறியற ஒரு அறிவுதான்.

அது எது?

அகந்தைதான்.

விழிச்சவுடனே வந்துடறது.

உடம்பு. 'நான் இருக்கேன்'ன்னு சொல்லாது. ஜடம். பரம்பொருளும் சொல்லாது. இந்த அகந்தைதான் சொல்றது.

தூங்கும்போது முக்திக்கு யாரும் ஆசைப்படறது இல்லை. விழிப்பிலேதான் முக்தி சிந்தனை. இப்படி விழிப்புலே ஆசைப்படறது எல்லாம் இந்த அகந்தைதான். நான்கற எண்ணம்தான்.

அது எதுன்னு கண்டுபிடிங்கோ!

அது எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ!

அது யாரோடதுன்னு கண்டுபிடிங்கோ!

இப்படிச் செஞ்சேள்னா எல்லாச் சந்தேகமும் போயிடும்.

(522) *தரிசிக்க வந்தவர் கேட்டார்.*

**கே: எனக்கு ஞானம் வேணும்.**

ப: யாருக்கு ஓய் ஞானம் வேணும்?

**கே: நான்தான் கேக்கறேன்.**

ப: யார் இந்த நான்?
நான்கறதைக் கண்டுபிடியும்!
அப்புறம் என்ன ஞானம் வேணும்ன்னு பாக்கலாம் ஓய்.

(523) *யாத்திரை வந்தவர் கேட்டார்.*

**கே: காமத்தை எப்படி ஒழிக்கறது? அதை எப்படி கடக்கறது?**

ப: அதோட வேரைத் தேடுங்கோ! கண்டுபிடிங்கோ! அப்புறம் சுலபம்.

காமம்ன்னா என்ன?

அதோடயே சேந்து இன்னொன்னும் இருக்கு. க்ரோதம். அதாவது வெறுப்பு.

காமக் குரோதம் சேந்துதான் இருக்கும்.

விருப்பு வெறுப்பு ஏன் வர்றது? விஷயங்களைப் பாக்கறதாலே. ஏன் விஷயங்களைப் பாக்கறோம்? ஏன் அனுபவமாகறது?

அஞ்ஞானத்தாலே. எதோ அஞ்ஞானம்?

ஆத்மாவைத் தெரியாததாலே. அப்போ ஆத்மாவைத் தெரிஞ்சா.... அதாவே இருந்தா.... காமக்குரோதங்களாலே பாதிக்கப்பட மாட்டோம். அதைக் கடந்துடுவோம்.

மறுபடியும் காமத்துக்குக் காரணம் என்ன?,

சுகமாயிருக்கணும், விஷயசுகத்தை அனுபவிக்கணுங்கற ஆசை.

ஏன் சுகம் அனுபவிக்கணும்னு ஆசைப்படறோம்?

ஏன்னா.... சுகமேதான் நம்மளோட ஸ்வபாவம். அதனாலே சுகத்துக்குப் பிரியமிருக்கறது. ஸ்வபாவம்தான்... ஆனாலும், இந்த சுகம் ஆத்மாவிலேயேதான் இருக்கு. அதை வெளியே தேடாதேள்! ஆத்மாவிலேயே தேடி அதை அனுபவிங்கோ!

நம்மளோட ஸ்வபாவமாவே இருக்கற சுகம் திரும்ப கண்டுபிடிக்கப்படறது. அதனாலே அது இழந்தது இல்லை. வெளிவிஷயங்கள்லே இருந்து வர்ற சுகம் நிரந்தரம் இல்லை. போயிடும். அதைத் தேடறதிலே பிரயோஜனம் இல்லை.

விஷய இச்சை அனுபவிச்சு போக்கிக்க முடியாது. அது நெருப்பைப் பெட்ரோல் ஊத்தி அணைக்கறது மாதிரி. அது முடியாது. அனுபவிச்சா போயிடும்ன்னு நினைக்கறது முட்டாள் தனம். அடக்க நினைக்கறது அதைவிட முட்டாள்தனம்.

சாத்வீக ஆகாரம், விரதம், யோகப் பயிற்சி, மருந்து இதெல்லாம் அடக்கறதுக்கான வழிமுறைகள். அதோட பலன் கொஞ்ச நாள்தான் இருக்கும். தடுப்பணை உடையும்போது முன்ன விட பலமா இச்சை தலைதூக்கும். அதோட மூலத்தை கண்டுபிடிக்கறதுதான் சரியான வழி.

**கே: நான் கிருஹஸ்தன் எனக்கும் முக்தி உண்டா? எப்படி?**

ப: குடும்பம்ன்னா என்ன? யாருடைய குடும்பம்?

இதுக்குப் பதில் தெரிஞ்சுடுத்துன்னா... மத்த கேள்விக்குப் பதில் அதிலேயே அடங்கியிருக்கு.

நீங்க குடும்பத்திலே இருக்கேளா? இல்லே குடும்பம் உங்ககிட்டே இருக்கா?

நீங்க யார்?

உங்களுக்கு மூணு நிலை இருக்கு... விழிப்பு, தூக்கம், கனவுன்னு. அதிலே தூக்கத்திலே குடும்பபந்தம் எதுவும் இல்லை. அதனாலே அங்கே எந்தக் கேள்வியும் இல்லை. இப்போ குடும்பம் கட்டு எல்லாம் இருக்கு. அதனாலே விடுபடணும்னு சொல்றேள். ஆனா இரண்டு நிலைமையிலேயும் நீங்க ஒரே ஆள்தானே?

**கே: இப்போ குடும்பம் பந்தம் எல்லாம் இருக்கறதுனால நான் முக்தி தேடணும்லையா?**

ப: சரிதான். நல்லா யோசனை பண்ணிச் சொல்லுங்கோ. நீங்க குடும்பத்திலே இருக்கேளா? இல்லே குடும்பம் உங்களிடம் இருக்கா? முதல்லே குடும்பம்ன்னா என்ன?

**கே: எனக்கு மனைவி இருக்கு. குழந்தைகள் இருக்கு. அதுதான் என் குடும்பம்.**

ப: இவாதான் உங்களைப் பந்தப்படுத்தறாளா? இல்லே. நீங்க அவாளோட பந்தப்பட்டுக்கறேளா?

அவா வந்து சொன்னாளா... 'நாங்கதான் குடும்பம்' 'உன்னை பந்தப்படுத்தறோம்'ன்னு... இல்லே, நீங்க சொல்றேளா?

**கே: நான்தான். அவங்க என் குடும்பம்ன்னு சொல்றேன். அவங்களோட பந்தப் படுத்திக்கறேன்.**

ப: சரி. நீங்கதான்... இன்னார் என் மனைவி, இன்னார் என் குழந்தைகள்ன்னு நினைச்சுக்கறேள். அதே மாதிரி நீங்கதான் அவாளுக்குப் பொறுப்புன்னு நினைக்கறேள். இதெல்லாம் உங்களோட நினைப்புதான். நீங்க இருக்கறதாலேதான் இந்த நினைப்பெல்லாம் வர்றது. இந்த நினைப்புகளை நீங்க வளர்க்கலாம் இல்லே விரட்டலாம்.

வளர்த்தா பந்தம். விரட்டிட்டா முக்தி.

**கே: எனக்கு புரியலை.**

ப: நீங்க நினைக்கணும்னா நீங்க இருக்கணுமே....

நீங்க இதை நினைக்கலாம். இல்லே வேற எதையாவது நினைக்கலாம். நினைப்பு மாறும். ஆனா நீங்க மாறமாட்டேள்.

மாறுகிற நினைப்பைப் பிடிக்காதேள். மாறாத உங்களைப் பிடிச்சுக்கோங்கோ.

நினைப்புதான் பந்தப்படுத்தறது. அது போயிடுத்துன்னா... முக்தி. பந்தம் வெளியே இல்லே. அதனாலே முக்தியை வெளியே தேடத் தேவை இல்லை.

அது உங்களோட நினைப்பைப் பொறுத்தது.

பந்தப்பட்டுக்கலாம்... இல்லே நினைப்பை ஓய்ச்சிட்டு முக்தி அடையலாம்.

**கே: நினைக்காம இருக்கறது ரொம்பக் கஷ்டமே!**

ப: யாரும் உங்களை நினைக்காமே, ஜடமா இருக்கச் சொல்லலே!

நினைப்போட மூலத்தை நினைன்னுதான் சொல்றோம்.

அதைத் தேடுங்கோ! அதைக் கண்டுபிடிங்கோ!

அதைக் கண்டுபிடிச்சுட்டா நினைப்பு அதுவா போயிடும்.

அதுதான் பந்தத்திலே இருந்து முக்தி.

**கே: எனக்குப் புரியுது. அதைப் பிடிச்சுக்கிட்டேன். குரு அவசியமா?**

ப: உங்களுக்கு நீங்க ஒரு ஆசாமிங்கற நினைப்பு இருக்கற வரைக்கும் குரு வேணும். குரு உங்களுக்கு எதுக்குன்னா... நீங்க எந்தக் காலமும் பந்தப்படவே இல்லே. எப்பவும் நீங்க முக்தி அடைஞ்சேதான் இருக்கேள்ன்னு காட்டறதுக்கு.



(525) **தரிசிக்க வந்தவர் கேட்டார்.**

**கே: கர்மம்தான் பந்தம். கர்மம் செய்யாம இருக்க முடியாது. அப்போ பந்தம் கூடிக்கிட்டேதானே போகுது. இந்த சூழ்நிலையிலே என்ன செய்யறது?**

ப: பந்தம் பலப்படாம கர்மம் பண்ணணும். அதனாலேயே பந்தம் பலமிழக்கும். அதுதான் நிஷ்காமிய கர்மம்.

(526) தரிசிக்க வந்தவர் கேட்டார்.

**கே: ஜனங்களா பாத்து இறைவனுக்கு பெயர் வச்சுட்டு, இதை திரும்பத் திரும்பத் சொன்னா ரொம்ப புனிதமானது, அதை புண்ணியம் தரும்ன்னு சொல்றாங்க. இதெல்லாம் உண்மையா? வெறும் சப்தம்தானே அது.**

ப: ஏன் உண்மையா இருக்கக் கூடாது? உமக்கு ஒரு பெயர் இருக்கு. கூப்பிட்டா திரும்பிப் பாக்கறீரில்லையா....

ஆனா உம்ம உடம்பு பெயர் போட்டு பிறந்ததா? இல்லே, 'என் பெயர் இதுதான்'னு அது சொல்லித்தா ஓய்.

ஆனாலும் உமக்கு ஒரு பெயர் இருக்கு. அதைச் சொல்லி கூப்பிட்டா நீர் பதில் சொல்றீர். ஏன்னா... உம்மை அந்தப் பெயரோட சம்பந்தப்படுத்திக்கறீர். அதனாலே நாமம் எதையோ குறிக்கறது. அது ஒண்ணும் சும்மா சப்தம் இல்லே.

அந்த மாதிரிதான் இறைவன் நாமமும். கூப்பிட்டா பலன் இருக்கும். அதை ஜபம் பண்றதுன்னா என்ன அர்த்தம்... அந்த நாமம் எதையோ குறிக்கறதில்லையா... அதை நினைக்கறோம்கறது தான். அதுதான் அதோட பலன்.

**கே: பகவானே நான் ஊருக்குக் கிளம்பறேன். உங்க அருள் வேணும்?**

ப: சரி, நான் கொடுத்தேன்னு சொல்றேன். வெறும் சப்தம் எப்படி அருள் தரும். உமக்கு நம்பிக்கை சப்தத்திலே இருந்தாத்தான் தரும். (சிரிக்கிறார்).



(527) கூர்கில் இருந்து வந்த சில பெண்மணிகள்.

**கே: நான் ஒரு மந்திர உபதேசம் வாங்கினேன். விபரீத விளைவுகள் ஏற்படும்ன்னு எல்லோரும் பயமுறுத்துறாங்க. அதை சன்யாசிகள்தான் சொல்லணுமாம். அது வேற ஒண்ணும் இல்லை. பிரணவம்தான். நீங்களே வழிகாட்டணும். அதை சொல்லலாமா? அதுல எனக்கு நம்பிக்கை இருக்கு.**

ப: தாராளமாச் சொல்லலாம். நம்பிக்கையோட சொல்லிக் கொண்டே வாங்கோ.

**கே: அதே போதுமா? இல்ல அதோட சேத்து வேற எதையும் செய்யணுமா?**

ப: அந்த ஜபத்தோட நோக்கமே, அந்த ஜபம் எந்த முயற்சியும் இல்லாம ஏற்கனவே எப்பவும் நடந்துகிட்டே இருக்குன்னு உணர்றதுக்குத்தான்.

வாயிலே பண்ற ஜபம் மானசீகமா மாறும்.

மானசீக ஜபம் கடைசில எப்பவும் இருக்கற தன்னையே வெளிப்படுத்தும்.

அந்த மந்திரம்தான் ஒவ்வொருத்தரோட, உண்மையான ஸ்வபாவமும் அதுதான் ஞான நிலையும்.

**கே: சமாதி சுகம் அதுனாலேயே ஏற்படுமா?**

ப: ஜபம் மானசீகமா மாறி கடைசியிலே ஆத்மாவுலே முடிஞ்சுடும். அதுதான் சமாதி.



(528) **ஆந்திராகாரர் ஒருவர் கேட்டார்.**

**கே: கடவுள் நினைப்பை ஏகாக்கிரம் பண்ண வேணுமா?**

ப: என்ன அப்பியாசம் பண்றேள்?

**கே: 'திராடக்' பார்வையை ஒரே இடத்துலே வைக்கறது.**

ப: எதுக்கு?

**கே: ஏகாக்கிரத்துக்கு.**

ப: அது கண்ணுக்கு சரி. மனசுக்கு?

**கே: அதுக்கு என்ன செய்யணும்?**

ப: கடவுளை நினைக்கணும்.

**கே: இந்தப் பயிற்சி நோயிலே கொண்டு போய் விட்டுடுமா?**

ப: வரலாம். அதுவே சரியாயிடும்.

**கே: முன்னாடி, தினமும் நாலு மணிநேரம் தியானம், இரண்டு மணி நேரம் திராடக் பண்ணுவேன். நோய் வந்துடுச்சு. நீ தியானம் பண்றதாலதான் நோய் வந்துச்சுன்னு சொன்னாங்க. அதனால தியானத்தை விட்டுட்டேன்.**

ப: எல்லாம் சரியாயிடும்.

(530) *அண்ணாமலை சுவாமி டைரியில் இருந்து.*

**கே: நான் குகையில போய் தியானம் பண்ணணும்னு நினைக்கறேன்.**

ப: எவன் உலக விவகாரங்களுக்கு நடுவிலே இருந்து கொண்டே... தன்னோட நிஜ ஸ்வபாவத்தை மறக்காமே, ஆசையில்லாமே இருக்கானோ அவனே உண்மையான மனுஷன்.

**கே: உலகத்தோட துயரங்கள்லே இருந்து விடுபட என்ன வழி?**

ப: எந்தச் சூழ்நிலையிலும் தன்னை மறக்காம இருக்கறதுதான். ஒரே வழி.

நான் யார்ன்னு விசாரிக்கறதுதான் பவநோய்க்கு மருந்து.

**கே: மௌனத்தோட சிறப்பு என்ன?**

ப: மௌனந்தான் சிறந்த பேச்சு.

சும்மாயிருக்கறதுதான் இடைவிடாத வேலை.

இப்படி அவன் ஸ்வானுபவத்திலே சும்மா இருந்தா ஆத்மாவோட மூலை முடுக்கெல்லாம் பரவியிருப்பான். எந்த சக்தியையும் எப்பவும் செலவழிக்கலாம். எங்கேன்னாலும்... எப்போன்னாலும்... அதுதான் பெரிய சித்தி.

**கே: நாமதேவர், துக்காராம், துளசிதாஸ் இவா எல்லாம் மஹாவிஷ்ணுவை பாத்ததா சொல்றீங்களே! எப்படி பாத்துருப்பாங்க?**

ப: நீ என்னை எப்படிப் பாக்கறியோ... நான் உன்னை எப்படிப் பாக்கறேனோ... அப்படித்தான் விஷ்ணுவைப் பாத்துருப்பா.

**கே: எப்படி வேலை பாக்கும்போது தியானத்துலே இருக்கறது?**

பகவான் மௌனமாயிருந்தார்.

கொஞ்ச நேரத்திலே சில குழந்தைகள் பகவான் தரிசனத்துக்கு வந்தன. அதுகள் பாடி ஆடின. அவா பாடின பாட்டோட அர்த்தம் 'தயிர் கடைவோமே.... தயிர் கடைவோமே... கிருஷ்ணனை மறக்காம தயிர் கடைவோமே......'

**பகவான்:** உன்னோட கேள்விக்கு பதில் இதோ இருக்கு பாரு.

(536) **யாரோ ஒருத்தர் கேட்டதற்கு.**

**ப:** நான் இந்த உடம்புன்னு நினைக்கறவன் பெரிய பாவி. ஆத்ம ஹத்தி.

நான் ஆத்மாங்கற அனுபவம்தான் பெரிய புண்ணியம். ஒரு நிமிஷம் இந்த தியானம் பண்ணினாலே, எல்லா சஞ்சித கர்மத்தையும் பொசுக்கிடும்.

சூரியன் முன்னாடி இருட்டு ஓடற மாதிரி கர்மம் ஓடிடும். இதையே எப்பவும் ஒருத்தன், இந்தத் தியானத்திலேயே இருந்தா, எந்தப் பாவமாவது, எவ்வளவு மோசமானதா இருந்தாலும் பொசுங்கிடும்.



**கே: ஏகாக்கிரத்துக்கு.**

ப: அது கண்ணுக்கு சரி. மனசுக்கு?

**கே: அதுக்கு என்ன செய்யணும்?**

ப: கடவுளை நினைக்கணும்.

**கே: இந்தப் பயிற்சி நோயிலே கொண்டு போய் விட்டுடுமா?**

ப: வரலாம். அதுவே சரியாயிடும்.

**கே: முன்னாடி, தினமும் நாலு மணிநேரம் தியானம், இரண்டு மணி நேரம் திராடக் பண்ணுவேன். நோய் வந்துடுச்சு. நீ தியானம் பண்றதாலதான் நோய் வந்துச்சுன்னு சொன்னாங்க. அதனால தியானத்தை விட்டுட்டேன்.**

ப: எல்லாம் சரியாயிடும்.

(530) *அண்ணாமலை சுவாமி டைரியில் இருந்து.*

**கே: நான் குகையில போய் தியானம் பண்ணணும்னு நினைக்கறேன்.**

ப: எவன் உலக விவகாரங்களுக்கு நடுவிலே இருந்து கொண்டே... தன்னோட நிஜ ஸ்வபாவத்தை மறக்காமே, ஆசையில்லாமே இருக்கானோ அவனே உண்மையான மனுஷன்.

**கே: உலகத்தோட துயரங்கள்லே இருந்து விடுபட என்ன வழி?**

ப: எந்தச் சூழ்நிலையிலும் தன்னை மறக்காம இருக்கறதுதான். ஒரே வழி.

நான் யார்ன்னு விசாரிக்கறதுதான் பவநோய்க்கு மருந்து.

**கே: மௌனத்தோட சிறப்பு என்ன?**

ப: மௌனந்தான் சிறந்த பேச்சு.

சும்மாயிருக்கறதுதான் இடைவிடாத வேலை.

இப்படி அவன் ஸ்வபாவத்திலே சும்மா இருந்தா ஆத்மாவோட மூலை முடுக்கெல்லாம் பரவியிருப்பான். எந்த சக்தியையும் எப்பவும் செயல்படுத்தலாம். எங்கேன்னாலும்... எப்போன்னாலும்... அதுதான் பெரிய சித்தி.

**கே: நாமதேவர், துக்காராம், துளசிதாஸ் இவா எல்லாம் மஹாவிஷ்ணுவை பாத்ததா சொல்றீங்களே! எப்படி பாத்துருப்பாங்க?**

ப: நீ என்னை எப்படிப் பாக்கறியோ... நான் உன்னை எப்படிப் பாக்கறேனோ... அப்படித்தான் விஷ்ணுவைப் பாத்துருப்பா.

**கே: எப்படி வேலை பாக்கும்போது தியானத்துலே இருக்கறது?**

பகவான் மௌனமாயிருந்தார்.

கொஞ்ச நேரத்திலே சில குழந்தைகள் பகவான் தரிசனத்துக்கு வந்தன. அதுகள் பாடி ஆடின. அவா பாடின பாட்டோட அர்த்தம் 'தயிர் கடைவோமே.... தயிர் கடைவோமே... கிருஷ்ணனை மறக்காம தயிர் கடைவோமே......'

**பகவான்:** உன்னோட கேள்விக்கு பதில் இதோ இருக்கு பாரு.

(536) **யாரோ ஒருத்தர் கேட்டதற்கு.**

ப: நான் இந்த உடம்புன்னு நினைக்கறவன் பெரிய பாவி. ஆத்ம ஹத்தி.

நான் ஆத்மாங்கற அனுபவம்தான் பெரிய புண்ணியம். ஒரு நிமிஷம் இந்த தியானம் பண்ணினாலே, எல்லா சஞ்சித கர்மத்தையும் பொசுக்கிடும்.

சூரியன் முன்னாடி இருட்டு ஓடற மாதிரி கர்மம் ஓடிடும். இதையே எப்பவும் ஒருத்தன், இந்தத் தியானத்திலேயே இருந்தா, எந்தப் பாவமாவது, எவ்வளவு மோசமானதா இருந்தாலும் பொசுங்கிடும்.



(537) *அண்ணாமலை சுவாமி கேட்டார்.*

**கே: மாயைன்னா என்ன?**

ப: ஆசையே மாயை.
நிராசையே கடவுள்.

(538) **கே: விவகாரத்துக்கும் சமாதிக்கும் என்ன வித்தியாசம்?**

ப: ஒரு வித்தியாசமும் இல்லை. ஒரே பொருளை வேறு வேறு வார்த்தையிலே வேறு வேறு பாஷையிலே சொல்ற மாதிரிதான்.

(539) **கே: தியானம் கண்ணை மூடி பண்ணணுமா? கண்ணை திறந்து பண்ணணுமா?**

ப: சுவத்துலே பந்தை எறிஞ்சா, நீ தூரத்துலே இருந்தா பந்து கைக்கு வரும். பக்கத்துலே நின்னா உன்னை விட்டு ஓடும்.

(540) **கே: தியானத்திலே சுகம் இருந்தும் மனசு உலக சுகத்தையே ஏன் நினைக்குது?**

ப: பல ஜன்ம வாசனை வேரூன்றி இருக்கு. அதெல்லாம் போகணும். போனாத்தான் சுகம் நம்மகிட்டேயே வெளிப்படும்.

(542) **கே: குகையிலே தனிமையில ரொம்ப சிரமம் இல்லாம கொஞ்சம் உணவு எப்பவும் எனக்கு கிடைச்சா, என்னோட நேரம் எல்லாத்தையும் தியானத்திலேயே கழிச்சுடுவேன். இந்த ஆசை அடிக்கடி வருது. இது நல்லதா... கெட்டதா?**

ப: இப்படியெல்லாம் நினைச்சா அதுக்கு ஒரு ஜன்மா வரும். நீ எங்கேயிருந்தா என்ன? மனசு ஆத்மாவிலே இருக்கணும். அதுதான் முக்யம்.

அது வெளியேயும் இல்லை. உள்ளேயும் இல்லை. மனசுதான் எல்லாம். மனம் வேலை பாத்தா, தனிமையும் ஜனக்கூட்டம்தான். கண்ணை மூடி பிரயோஜனம் இல்லை. நியாய வழியிலே நடக்கறவா இப்படி எல்லாம் பிளான் போட மாட்டா. ஏன்னா... கடவுள் நம்மள இந்த உலகத்துக்கு அனுப்பும் போதே பிளான் போட்டுதான் அனுப்பிருக்கார். அது நடக்கும்.

ஒரு நாள் பகவான் தரிசனத்திற்கு நிறைய ஜனங்கள் வந்து பகவானே எனக்கு பக்தியை தாணும் மோட்சத்தைத் தரணும்ன்னு பிரார்த்தித்துப் போனார்கள். பிறகு பகவான் தன் உடன் இருந்தவர்களைப் பார்த்து:

ப: எல்லாருக்கும் மோட்சம் வேணும்ன்னுதான் ஆசை. ஆனா உன்னை எனக்குக் கொடுத்துடுன்னா... அது மாட்டேங்கறா. அப்புறம் மோட்சம் எப்படி வரும்?

(544) ஒரு சமயம் பகவானோட பக்தர்களுக்குள்ளே இவர் பெரியவர்; அவர் பெரியவர்ன்னு பெரிய வாதங்கள் சில நாட்களாக நடந்தது. கடைசியில் பகவானிடம் இந்த பஞ்சாயத்து போய்ச் சேர்ந்தது. இதில் எது நியாயம் என்று பகவானிடத்தில கேட்டார்கள். அதற்கு பகவான் பதில் சொல்லாமல் மௌனமாகவே இருந்தார். வாதப்பிரதிவாதங்கள் வளர்ந்தது. ஒரு முடிவும் ஏற்படவில்லை.

கடைசியாக பகவான் பேச ஆரம்பித்தார்.

ப: யார் யார் என்ன முயற்சி பண்ணினாலும், எது உள்ளதோ, அதுதான் எப்பவும் நிலைக்கும். ஜனங்க பாத்து ஒருத்தனுக்கு பந்தமோ, மோட்சமோ கொடுக்க முடியாது. ஒவ்வொருத்தரும் தன்னை எல்லாரும் போற்றி புகழணும்ன்னு நினைக்கறது ஸஹஜம்தான். ஆனா அப்படி நினைக்கறதனாலே சுகத்தையோ, பெருமையையோ அடைஞ்சுட முடியாது.

கடவுளுக்குத் திருப்தி இல்லாத ஒருத்தன் உயர்ந்தவனில்லே. யாரொருவன் கடவுளுக்குத் தன்னோட உடம்பையும், மனசையும் எந்தெந்த விதத்திலே அர்ப்பணம் பண்ண முடியுமோ, அந்தந்த விதத்திலே அர்ப்பணம் பண்றானோ, அவனை ஈசன் உலகமெல்லாம் அறிந்து போற்றும்படி செய்வான்.

இந்தப் பாடல்களைச் சொன்னார்.

**'உன்னுகின்றனையுனை மண்ணோர் பெரியனென்றுணறுமா**
**செயவுன்பான்**
**மன்னுமீசனே பந்தம் வீடமளிப்பவன் மற்றை ரறிந்தென்னாம்**

அன்னவன்றிருப் பொன்னாடிக் கரியாத வந்தவஞ் செய்நெஞ்சே
பின்னை முன்னவ லுலகறிந்திறை ஞ்சுமா பெருமை
செய்குவனோரே'
- வைராக்கிய சதகம்

நாம் பெரிய ரென்னுமதை நாடத டக்குமவர்
தாம்பெரிய ரென்னமறை சாற்றியிடும் நாம் பெரிய
ரென்பார் சிறியரிவரலா திவ்வுலகிற்
றுன்பார் சுமப்பார் சொல்.
- சிவபோதச் சாரம்

ஈசனின் பதும பதம்பதியிதய மெவற் குறு மவன்றனைக் கண்டே
பாசமா ரியமன் மார்பிலே யுதையும் படுமென வஞ்சியோடு வானற்
றேசமா ரமரர் முடிமணி விளக்கற் சிறக்கநீ ராஞ்சனம் புரிவர்
பேசற முக்தி மாதுமே யனைவான் பின்னவற் கிங்கரி தெதுவே
- சிவானந்த லஹரி

(545) *அண்ணாமலை சுவாமி ஒரு முறை காம விகாரங்களால் மூணு நாள் சிரமப்பட்டார். அதைப் போக்கிக்க கடைசியில் மனசாந்தி இல்லாமல் உபவாசமிருந்தார். பகவானிடம் தனிமையில் முறையிட்டார்.*

பகவான் இரண்டு நிமிடம் சும்மா இருந்துவிட்டு:

ப: எப்பவோ நினைப்பு வந்ததுக்கு அதை ஏன் இப்போ தியானம் பண்றே? இந்த நினைப்பு யாருக்கு வந்ததுன்னு தியானிச்சா பறந்து ஓடும்.

(546) *யாரோ ஒருவர் கேட்டார்.*

கே: நல்ல காரியங்களையே செய்யற ஒருத்தனுக்கு கஷ்டம் வருது. கெட்ட காரியங்களையே செய்யற ஒருத்தனுக்கு எந்த கஷ்டமும் வரமாட்டேங்குது. இதோட உட்கருத்து என்ன?

ப: ஒவ்வொருத்தனுக்கும் முன்ஜன்ம கர்மானுசாரத்தாலே இந்த ஜன்மாவிலே சுகதுக்கம் மாறிமாறி வரும். பொறுமையா இரண்டையும் ஏத்துக்கணும். நம்மளோட நிலையிலே இருந்துகொண்டு, எந்தக் காரியம் செஞ்சாலும், அதிலே சுக துக்கம் பாக்காமே செய்யணும். அதுதான் நல்லது.

(549) **பல சமயங்களில் நமஸ்காரத்தின் தத்துவத்தை பத்தி பகவான் அடிக்கடி சொல்வது.**

ப: ஏதோ ஆதியிலே, பெரியவா, கடவுளுக்கு தன்னோட மனசையும், உடம்பையும், அர்ப்பணம் செய்றதுக்கு அடையாளமா, நமஸ்காரத்தை ஒரு சாதனமா ஏற்படுத்தினா. அதை அடியோடு விட்டுட்டு, சாமிக்கு ஒரு கும்பிடு போட்டுட்டா... சாமி வசியமாயிடுவார். பிறகு, நம்மளோட இஷ்டப்படி, இதை எல்லாம் கட்டி ஆளலாம்னு நினைக்கறதுதான் பிசகு. ஏன்னா... சாமி எப்பவும் ஏமாந்து போக மாட்டார். சுயநல கள்ளக் கும்பிடு போடறவாதான் ஏமாந்து போவா.

நமஸ்காரம் பண்ண வர்றவாளைக் கண்டாலே எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்காது. என்ன நமஸ்காரம் சாமிக்கு வேண்டிக் கெடக்கு? ஒருத்தன் மனசை நல்ல வழியிலே வச்சுருக்கறதுதான் பெரிய நமஸ்காரம்.



(550) **சாமர்செட் மாம்ஃம் பிரபல ஆங்கில எழுத்தாளர். பகவானை தரிசனம் செய்ய ஆஸ்ரமத்துக்கு வந்திருந்தார். அவர் மேஜர் சாட்விக் ரூமில் தங்கினார். சாட்விக் ரூமிலேயே ஏதோ மூர்ச்சையாகி விழுந்தார். சாட்விக் உடனே பகவானிடம் சென்று, சாமர்செட் மாமை தன்னோட ரூமுக்கு வந்து பாக்கணும்ன்னு வேண்டினார். பகவானும் அதற்கு சம்மதித்து, யாருக்கும் தெரியாமல் சாட்விக் ரூமுக்கு சென்று, சாட்விக் அளித்த ஒரு ஆசனத்தில அமர்ந்து, சாமர்செட் மாமை உற்று**

அன்னவன்றிருப் பொன்னாடிக் கரியாத வந்தவஞ் செய்நெஞ்சே
பின்னை முன்னவ லுலகறிந்திறை ஞ்சுமா பெருமை
செய்குவனோரே'
- வைராக்கிய சதகம்

நாம் பெரிய ரென்னுமதை நாடத டக்குமவர்
தாம்பெரிய ரென்னமறை சாற்றியிடும் நாம் பெரிய
ரென்பார் சிறியரிவரலா திவ்வுலகிற்
றுன்பார் சுமப்பார் சொல்.
- சிவபோதச் சாரம்

ஈசனின் பதும பதம்பதியிதய மெவற் குறு மவன்றனைக் கண்டே
பாசமா ரியமன் மார்பிலே யுதையும் படுமென வஞ்சியோடு வானற்
றேசமா ரமரர் முடிமணி விளக்கற் சிறக்கநீ ராஞ்சனம் புரிவர்
பேசற முக்தி மாதுமே யனைவான் பின்னவற் கிங்கரி தெதுவே
- சிவானந்த லஹரி

(545) *அண்ணாமலை சுவாமி ஒரு முறை காம விகாரங்களால் சிரமப்பட்டார். அதைப் போக்கிக்க மூணு நாள் உபவாசமிருந்தார். கடைசியில் மனசாந்தி இல்லாமல் பகவானிடம் தனிமையில் முறையிட்டார்.*

பகவான் இரண்டு நிமிடம் சும்மா இருந்துவிட்டு:

ப: எப்பவோ நினைப்பு வந்ததுக்கு அதை ஏன் இப்போ தியானம் பண்றே? இந்த நினைப்பு யாருக்கு வந்ததுன்னு தியானிச்சா பறந்து ஓடும்.

(546) *யாரோ ஒருவர் கேட்டார்.*

கே: நல்ல காரியங்களையே செய்யற ஒருத்தனுக்கு கஷ்டம் வருது. கெட்ட காரியங்களையே செய்யற ஒருத்தனுக்கு எந்த கஷ்டமும் வரமாட்டேங்குது. இதோட உட்கருத்து என்ன?

ப: ஒவ்வொருத்தனுக்கும் முன்ஜன்ம கர்மானுசாரத்தாலே இந்த ஜன்மாவிலே சுகதுக்கம் மாறிமாறி வரும். பொறுமையா இரண்டையும் ஏத்துக்கணும். நம்மளோட நிலையிலே இருந்துகொண்டு, எந்தக் காரியம் செஞ்சாலும், அதிலே சுக துக்கம் பாக்காமே செய்யணும். அதுதான் நல்லது.

(549) பல சமயங்களில் நமஸ்காரத்தின் தத்துவத்தை பத்தி பகவான் அடிக்கடி சொல்வது.

ப: ஏதோ ஆதியிலே, பெரியவா, கடவுளுக்கு தன்னோட மனசையும், உடம்பையும், அர்ப்பணம் செய்றதுக்கு அடையாளமா, நமஸ்காரத்தை ஒரு சாதனமா ஏற்படுத்தினா. அதை அடியோடு விட்டுட்டு, சாமிக்கு ஒரு கும்பிடு போட்டுட்டா... சாமி வசியமாயிடுவார். பிறகு, நம்மளோட இஷ்டப்படி, இதை எல்லாம் கட்டி ஆளலாம்னு நினைக்கறதுதான் பிசகு. ஏன்னா... சாமி எப்பவும் ஏமாந்து போக மாட்டார். சுயநல கள்ளக் கும்பிடு போடறவாதான் ஏமாந்து போவா.

நமஸ்காரம் பண்ண வர்றவாளைக் கண்டாலே எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்காது. என்ன நமஸ்காரம் சாமிக்கு வேண்டிக் கெடக்கு? ஒருத்தன் மனசை நல்ல வழியிலே வச்சுருக்கறதுதான் பெரிய நமஸ்காரம்.



(550) சாமர்செட் மாம்ஃம் பிரபல ஆங்கில எழுத்தாளர். பகவானை தரிசனம் செய்ய ஆஸ்ரமத்துக்கு வந்திருந்தார். அவர் மேஜர் சாட்விக் ரூமில் தங்கினார். சாட்விக் ரூமிலேயே ஏதோ மூர்ச்சையாகி விழுந்தார். சாட்விக் உடனே பகவானிடம் சென்று, சாமர்செட் மாமை தன்னோட ரூமுக்கு வந்து பாக்கணும்ன்னு வேண்டினார். பகவானும் அதற்கு சம்மதித்து, யாருக்கும் தெரியாமல் சாட்விக் ரூமுக்கு சென்று, சாட்விக் அளித்த ஒரு ஆசனத்தில அமர்ந்து, சாமர்செட் மாமை உற்று

நோக்கினார். உடனே அவர் எழுந்து பகவானை வணங்கி உட்கார்ந்தார். அவர் நிறைய கேள்விகள் கேக்கலாம்ன்னு இருந்தார். ஆனா வார்த்தைகள் வரவில்லை. பகவானும் அவரும் ஒருவரை ஒருவர் நோக்கியபடியே இருந்தார்கள். சுமார் 20 நிமிடம் சென்ற பின், சாட்விக், சாமர்செட் மாமை பார்த்து, 'உங்க கேள்விகளைக் கேளுங்க'ன்னார்.

பகவான் ஆங்கிலத்தில்

ப: 'ஹார்ட் டாக் இஸ் ஆல் டாக்'.
ஆல்டாக் ஃபினிஷ். சைலன்ஸ்.

(552) ஆச்ரமத்தில் கட்டப்படும் கட்டடங்களுக்கு எல்லாம், பகவான் தரிசனத்துக்கு வரும், எத்தனையோ எஞ்சினியர்கள், எத்தனையோ விதமா பிளான் போட்டு கொடுப்பார்கள். அதை எல்லாம் நடைமுறைப்படுத்த முடிவதில்லை. ஒரு முறை பகவானிடம் ப்ளான்களை காட்டி, எப்படி கட்ட வேண்டும் என்று கேட்டதற்கு பகவான் பிளான்களை பாத்தும் பாக்காமலும்:

ப: எந்தப் பிளான் படி எது நடந்தது? இந்த வேலைகள் எல்லாத்துக்கும், எல்லாப் பிளானும் போட்டுதான் இருக்கு. அது, அது, அந்தந்த வேளை வரும்போது எல்லாப் பிளானும் அப்போ தீர்மானம் பண்ணி நடக்கப்போறது.



(553) யாரோ ஒருவர் கேட்டார்.

**கே: முன் ஜென்மத்துல நாங்க யார்? எப்படி இருந்தோம்? பூர்வ ஜென்ம வரலாறு ஏன் தெரியலை?**

ப: போன ஜென்மத்தோட கதை இருக்கட்டும். இந்த ஜென்மத்திலே நான் யார்ன்னு தெரிஞ்சுகொண்டா போதும். ஜென்ம வரலாறுகளை எல்லாம் கடவுள் ஜீவர்கள் மேலே இருக்கற கருணையாலே மறைச்சு வச்சுருக்கார். ஏன்னா ஒருத்தனுக்கு நான் புண்ணியவான்னு தெரிஞ்சா... இப்போ

ரொம்ப கர்வம் வரும். நான் பாவின்னு தெரிஞ்சா... ஐயோ! நான் பாவி, எப்படிக் கடைத்தேறுவேன்னு ஏங்கி, மேலே போகமாட்டான். அதனாலே பூர்வ ஜென்ம வரலாறு தெரியாம இருக்கறதே நல்லது. உள்ள ஏற்பாடே உயர்ந்த ஏற்பாடுதான்.

**ஒருநாள் காலையில் பகவான் சொன்னது.**

ப: ஒரு காரியத்தை ஒருத்தன், ஒரு தடவை பாத்ததனாலேயோ, கேட்டதனாலேயோ மட்டும் சரியா செய்ய முடியாது. சின்னக் காரியத்துக்கே விடாம நல்லா செஞ்சு வந்தாலும், சில சமயம் தப்பாகறது. சாதாரண காரியத்துக்கே இப்படின்னா ஒரு தடவை மாத்திரம் நான் ஆன்மான்னு தெரிஞ்சுக்கறதனாலேயோ, குருகிட்டே கேட்டதனாலேயோ மட்டும் ஒருத்தன் தன்னைத் தெரிஞ்சுக்க முடியாது.



(557) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: புருவ மத்தியில லட்சியம் வச்சு தியானம் பண்ணச் சொல்றாங்களே! அது சரியா?**

ப: எல்லோருக்கும் நான்கறது நல்லாத் தெரியும். அதை விட்டுட்டு இறைவனைத் தேடறா. புருவமத்தியிலே தியானம் பண்றதாலே என்ன பிரயோஜனம்? புருவமத்தியிலேதான் கடவுள் இருக்கார்ன்னு சொல்றது முட்டாள்தனம். அதோட நோக்கம் ஏகாக்கிரத்துக்காக இருக்கலாம். ஆனாலும் அது முரட்டு வழி 'நான் யார்? விசாரணைதான் ஞானத்துக்கு சிறந்தது.

**கே: ஏதும் நியமம்.**

ப: மித சாத்விக ஆகாரம்.

**கே: எந்த ஆசனம் சிறந்தது?**

ப: நிதித்தியாசனம்.

**கே: வாழ்க்கையோட அர்த்தம் என்ன?**

ப: வாழ்க்கைக்கு அர்த்தம் என்னன்னு தேடறதே பூர்வ புண்ணியத்தாலேதான். இதைத் தேடலேன்னா வாழ்க்கை வீண்.

*(562) தரிசனம் பண்ண வந்தவர் கேட்டார்.*

**கே: விசார சங்கிரகம் நூல்ல ஒருத்தன் ஒரு முறை ஆத்மாவை இன்னதுன்னு தெரிஞ்சனாலையே முக்தனாக மாட்டான். வாசனைகள் அவனை விடாதுன்னு எழுதியிருக்கீங்க.**

**நீங்க அந்த நூல்லே குறிப்பிடறது ஞானியோட அனுபவம் தானே! ஏன் பலன்ல வித்தியாசம் ஏற்படுது?**

ப: அனுபவம் ஒண்ணுதான். எல்லாரும் தெரிஞ்சோ, தெரியாமலோ ஆத்மாவையேதான் அனுபவிக்கறோம். அஞ்ஞானியோட ஆத்மானுபவம் அவனோட வாசனைகளாலே மறைக்கப்பட்டிருக்கும். ஞானிக்கு அப்படி இல்லை. அதனாலே ஞானியோட அனுபவம் தனி. அது நித்யம்.

ஒரு சாதகனுக்கு நீண்ட அப்பியாசத்துக்கு பிறகு ஆத்மானுபவத்தோட சாயல் தெரியும். அது கொஞ்ச நேரந்தான் இருக்கும். அவனோட பழைய வாசனைகளாலே அலைக்கழிக்கப்பட்டு, அந்த அனுபவம் போயிடும். அவன், அவனோட மனனத்தையும், நிதித்தியாசனத்தையும் எல்லா வாசனையும் அழியற வரைக்கும் தொடரணும். அப்புறம் தன்னோட ஸ்வபாவ ஸ்திதியிலே அவனாலே எப்பவும் நித்தியமா இருக்க முடியும்.

**கே: ஒருத்தன் எதுவும் தெரியாம அஞ்ஞானியா இருக்கான். இன்னொருத்தன் இப்போ சொன்ன மாதிரி ஒரு முறை ஆத்மானுபவம் கிடைச்சும், அஞ்ஞானியா இருக்கான். இரண்டு பேருக்கும் என்ன வித்தியாசம்?**

ப: ஒருமுறை ஆத்மானுபவம் கிடைச்சவனிடம் முழுமையான ஞானம் வர்ற வரைக்கும் முயற்சி இருந்துகொண்டே இருக்கும்.

**கே: பிரம்மத்தை ஒரு முறை உணர்ந்தா அந்த ஞானம் எப்பவும் இருக்கும்ன்னு சுருதிகள் சொல்லுதே!**

ப: முழுமையான ஞானத்தைத்தான் சொல்றது.

(563) மைசூரில் இருந்து தரிசனம் பண்ண வந்தவர் கேட்டார்.

**கே: மனசை எப்படி நல்ல வழியிலே வச்சுக்கறது?**

ப: அப்பியாசத்தாலே... நல்ல சிந்தனையாலே... மனசை நல்ல வழியிலே பழக்கறதுனாலே...

**கே: ஆனாலும் அது நிலையாயில்லையே!**

ப: பகவத் கீதை மெல்ல மெல்ல கொண்டு வரச் சொல்றது.
அப்பியாசம் அவசியம்.
பலன் காலக்கிரமத்திலே மெதுவா வரும்.

**கே: ஆத்ம ஸமஸ்தம்ன்னா என்ன? யார் இந்த ஆத்மா?**

ப: உங்களை உங்களுக்குத் தெரியுமா?
நீங்க இருக்கேளே...! இல்லே... நீங்க இருக்கறதை மறுக்கறேளா?
நீங்க இல்லேன்னா... யாரு இந்த ஆத்மான்னு கேக்கலாம்.
நீங்க இல்லாமே எதையும் கேக்க முடியாது.
உங்களோட கேள்வியே நீங்க இருக்கறதைச் சொல்றது.
நீங்க யார்ன்னு கண்டுபிடிங்கோ! அவ்வளவுதான்.

**கே: நான் வேத சாஸ்திரங்களை நிறைய படிச்சுட்டேன். என் மனம் ஆத்மாவிலே அடங்கலே. எனக்கு ஏன் ஆத்மஞானம் வரலை?**

ப: சாஸ்திரத்திலே ஆத்மஞானம் இருந்தாத்தானே ஆத்ம ஞானம் வரும். சாஸ்திரத்தைப் படிச்சா சாஸ்திர ஞானம்தான் வரும். ஆத்மாவை படிச்சா ஆத்ம ஞானம் வரும்.

**கே: ஆத்ம சாட்சாத்காரம்னா என்ன?**

ப: நீங்கதான் ஆத்மா. இதோ... சாட்சாத்தா இருக்கேளே! அப்புறம் எங்கே இருக்கு காரம்... இதிலே.

இந்தக் கேள்வி உங்களை அனாத்மாவோட சம்பந்தப் படுத்திக் கொண்டதனாலேதான். இல்லேன்னா, இரண்டு ஆத்மா இருக்கணும். ஒண்ணு இன்னொன்ன உணர்றதுக்கு.

நீங்க உங்களை இந்த உடம்போட சம்பந்தப் படுத்தியிருக்கறது தான் உங்களோட கேள்வியோட வேர்.

சரி, இப்போ இந்தக் கேள்வியை கேக்கறேள். உங்களோட தூக்கத்திலே இந்தக் கேள்வி இருக்கா? இந்தநிலைக்கும் தூக்கத்துக்கும் என்ன வித்தியாசம்?

இப்போ கேக்கறேள்... தூக்கத்திலே கேக்க மாட்டேங்கறேள்......

நீங்க இப்போ உங்களை உடம்புன்னு நினைச்சுக்கொண்டு இருக்கேள்.

நீங்க உங்களைச் சுத்தி விஷயங்களைப் பாக்கறேள். அதேமாதிரி ஆத்மாவையும் பாக்கணும்ன்னு நினைக்கறேள். பழக்க தோஷம்.

புலன்கள் பாக்கறதுக்குக் கருவிதான். நீங்கதான் பாக்கறவா.

பாக்கறவாளா மட்டும் இருங்கோ!

என்ன இருக்கு பாக்கறதுக்கு?

தூக்கம் அப்படித்தான் இருக்கு. இப்படி இருந்தா கேள்வி வராது.

அப்போ ஆத்ம சாட்சாத்காரம்கறது... அனாத்ம நிராசனம்தான்.

**கே: ஒரே ஆத்மாதான் இருக்கா, பல ஆத்மாக்கள் இருக்கா?**

ப: மறுபடியும் உடம்பை ஆத்மாவோட போட்டு குழப்பிக்கறேள்.

நான் இங்கே இருக்கேன்... அவன் அங்கே இருக்கான்... அதோ அங்கே ஒருத்தன் இருக்கான்... இப்படி நீங்க நிறைய உடம்பைப் பாக்கறதாலே, நிறைய ஆத்மா இருக்குன்னு நினைக்கறேள். தூங்கும்போது... இதோ நான் தூங்கிக்கொண்டு இருக்கேன்....இன்னும் எத்தனை பேர் முழிச்சுக்கொண்டு இருக்கான்னு கேப்பேளா?

வராது. ஏன்னா அங்கே நீங்க மட்டும்தான் இருக்கேள். பலர் இல்லே.

**கே: என்னோட தத்துவம் என்ன?**

ப: நீங்கதான் உங்களோட தத்துவம். வேற யாராவது இருக்காளா உங்களோட தத்துவத்தை உணர்றதுக்கு.

தத்துவத்தை விட்டு நீங்க எப்படி இருக்க முடியும்?

நீங்க இருக்கறதாலேதானே இந்தக் கேள்வி கேக்கறேள். உங்களோட இயல்பே தத்துவம்தான். எல்லா சாஸ்திரங்களும், உங்களுடைய முயற்சிகளை, தத்துவம் அல்லாததிலே செலவு செஞ்சு வீணாக்காதேன்னுதான் சொல்றது.

தத்துவம் அல்லாததை விடுங்கோ! விட்டா தத்துவம் தானே ஒளிரும்.

**கே: நான் என்னுடைய தத்துவத்தையும், என் கடமையையும் தெரிஞ்சுக்கணும்.**

ப: முதல்லே உங்களோட தத்துவத்தைத் தெரிஞ்சுக்கோங்கோ. அப்புறம் கடமையிருந்தா கேக்கலாம். தத்துவத்தைத் தெரிஞ்சுக்கறதுக்கோ, கடமையைச் செய்யறதுக்கோ நீங்க இருக்கணும். அந்த நீங்க இருக்கறதை உணருங்கோ.

அப்புறம் கடமை என்னன்னு பாக்கலாம்.



(570) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: நிர்குண உபாசனை ரொம்ப கஷ்டம்... ஆபத்துன்னு சொல்றாங்களே உண்மையா?**

ப: நாம இருக்கோம்கறதை விட ரொம்ப நெருக்கமானதும், ரொம்ப சமீபத்திலே இருக்கறதும் வேற ஏதாவது உண்டா? அதை விட எளிமையானது என்ன இருக்கப் போறது!



(571) தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.

கே: நானா ஜீவ வாதம்ன்னா என்ன?

ப: ரொம்பப்பேர் இப்போ இதைப் பத்திதான் பேசிக்கொண்டு இருக்கா.

ஜீவன், நான்கறது மேல பிரதிபலிக்கற ஒளிதான், சந்திரன் எப்படியோ அப்படி. அவா தன்னை அகந்தையோட சம்பந்தப்படுத்திக்கொண்டு என்னை மாதிரியே நிறையப் பேர் இருக்கான்னு வாதாடறா. அவாளோட தவறை எவ்வளவு சுட்டிக்காட்டினாலும், ஒத்துக்கமாட்டேங்கறா. கனவிலே ஒருத்தன் பெரிய திருவிழா கூட்டத்தைப் பாக்கறான். விழிச்ச பிறகு அவாள்லாம் பத்திரமா ஊர் போய்ச் சேந்தாளான்னு கவலைப்படுவானா?

இது அவாளைத் திருப்திப் படுத்த மாட்டேங்கறது. அவா என்ன சொல்றா...

சந்திரன் இருக்கு. எங்கிருந்து யார் பாத்தாலும் ஒரே சந்திரன்தான். அது எல்லோருக்கும் தெரியும். இப்போ பல குடத்திலே ஜலமிருக்கு. அது சந்திரனைப் பிரதிபலிக்கறது. இதிலே ஒரு குடம் உடைஞ்சுடுத்து. பிரதிபலிப்பு இல்லை. அந்த கடசந்திரன் மறைஞ்சதனாலே உண்மையான சந்திரனுக்கு பாதிப்பு இல்லை. மத்த கடசந்திரங்களுக்கும் பாதிப்பு இல்லே. அப்படித்தான் ஒருத்தன் ஞானமடையறதும். அவன் மட்டும்தான் ஞானமடையறான்.

இந்த நானா ஜீவவாத கட்சி, இதை அத்வைதத்துக்கு எதிரான வாதமாவைக்கறா. ஜீவன் ஏகம்ன்னா ஒருத்தன் ஞானமடைஞ்சா... எல்லா ஜீவர்களும் ஞானம் அடைஞ்சுடணுமில்லையா...ங்கறா. அப்படி இல்லை. அதனாலே அத்வைதம் உண்மையில்லை. தவறுங்கறா.

இந்த நானா ஜீவவாத கட்சியோட ஓட்டை எங்கே யிருக்குன்னா... பிரதிபலிக்கற ஒளியை, தப்பா ஆத்மாவோட ஒளியாவே எடுத்துக்கறா.

அகந்தை. உலகம். அதிலே இருக்கற மத்தவாளும் ஒருத்தனோட வாசனைகளாலேதான். வாசனை இறந்துடுத்துன்னா... அவனுக்கு. சொப்னத்திலே இருக்கற மயக்கமும் முடிவுக்கு வந்துடும். அதுதான் இங்கே ஒரு குடம் உடையறது. போலி பிரதிபலனம் முடிஞ்சுடறது.

உண்மையிலேயே நாம எப்பவும் பந்தப்படவேயில்லை. அதனாலே நமக்கு முக்தியும் இல்லவே இல்லை. எல்லா சேஷ்டையும் அகந்தைக்குத்தான்.

**கே: நிறைய ஜீவர்கள் இருக்காங்கன்னு சொல்றதுல என்ன தப்பு? உண்மையிலையே நிறைய இருக்காங்க... ஏன்னா ஜீவன் அகந்தைதான். ஆத்மாவோட பிரதிபலிக்கற ஒளி. நிறைய ஆத்மாக்கள்ன்னு சொன்னாத்தான் தப்பு, ஜீவர்கள்...ன்னு சொல்லலாம்.**

ப: ஜீவன்னு ஏன் சொல்றோம்ன்னா.... அவன் உலகத்தை பாக்கறதாலேதான். கனவு காண்றவன் நிறைய ஜீவர்களைப் பாக்கறான். எல்லோரும் உண்மையா? அப்படியேதான் இங்கேயும்... உலகமும்.

இன்னொரு கட்சி இருக்கு அது ஏகஜீவவாதகட்சி. அது ஜீவன் ஏகம்தான். அதுதான் உலகத்தையும் ஏகப்பட்ட ஜீவர்களையும் பாக்கறதுன்னு சொல்லும்.

**கே: அப்போ ஜீவன் ஆத்மாதானே! அவங்க கட்சிப்பிரகாரம்.**

ப: ஆமாம். ஆத்மா பாக்கலே. ஆனா இங்கே பாக்கறதா சொல்லப்படறது. அதனாலே ஆத்மாவை ஜீவன்னு பிரிச்சு சொல்றா.

(572) **யாரோ ஒருவர் கேட்டார்.**

**கே: எல்லாத்துக்கும் மரணபயம் இருக்கு. அதனாலே என்ன பிரயோஜனம்?**

இருக்கு.
ப: உண்மைதான். எல்லாத்துக்கும் மரணபயம் ஏற்பட்டாலும், வாசனைகள் பலமாயிருக்கறதாலே மரணபயம் அது அவனை மனுஷன் இயற்கையா மரணமடையறான். விசாரத்துக்கோ.... வைராக்கியத்துக்கோ.... அதனாலே கூட்டிக்கொண்டு போக மாட்டேங்கறது.

**கே: அப்போ ஏன் வர்றவங்களுக்கு எல்லாம் தகுதி பாக்காம ஒரே உபதேசத்தை பண்ணுறீங்க?**

ப: என்னத்தைச் சொல்றது. அவாவாகிட்டே இருக்கற அகந்தை சாகணும். முதல்லே நம்மகிட்டே அகந்தை இருக்கா இல்லையான்னு, அவாவாதான் அதை யோசிக்கணும். இப்படி அடிக்கடி யோசிச்சா... விசாரிச்சா பக்குவனாயிடுவான்....

(573) ***நீண்டகால அன்பர் ரங்கநாத ஐயர் கேட்டார்.***

**கே: மரணத்துக்கும் மறுபிறப்புக்கும் இடைவெளி எவ்வளவு காலம்?**

ப: அதிகமாவோ, கொஞ்சமாவோ இருக்கலாம். இது ஞானிக்கு இல்லே. 'அவன் பிரம்மத்துலே ஐக்கியமாயிடுவான்'கறது பிரஹதாரண்யக உபநிஷத்.

சிலர் இறந்த பிறகு ஒளியிலே போயிடுவா. அவா மறுபடியும் பிறக்கறது இல்லேங்கறா. இருள்லே போறவா, சூட்சும சரீரத்திலே கர்ம பலனை அனுபவிச்சு மறுபடியும் பிறக்கறா.

பாவ புண்ணியம் சமமாயிருந்தா உடனேயே பிறந்திடுவா. புண்ணியம் அதிகமாயிருந்தா சூட்சும சரீரம் சொர்க்கத்துக்கு போயிட்டு, மறுபடியும் இங்கே பிறக்கறது. பாவம் அதிகமாயிருந்தா நரகத்துக்கு போயிட்டு மறுபடியும் பிறக்கறதுன்னு சொல்றா. இதெல்லாம் சாஸ்திரங்கள்லே இருக்கு.

ஆனா உண்மையிலேயே பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை. உள்ளது உள்ளபடி இருக்கு.



தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.

**கே: ஆசனங்கள்ன்னா என்ன? அது அவசியமா?**

ப: யோக சாஸ்திரங்கள்லே ஆசனங்களைப் பத்தி சொல்றா. புலித்தோல், தர்ப்பை, பத்மாசனம் சுகாசனம்ன்னு நிறைய இருக்கு.

இதெல்லாம் எதுக்கு?

தன்னை உணர்றதுக்குத் தானே!

நான் உடம்பு... உடம்புக்கு ஆசனம் வேணும்... இது தரை... இப்படி எல்லாம் நினைச்சுத்தான் ஆசனங்கள் ஏற்பட்டுத்து. தூங்கும்போது ஆசனத்தைப்பத்தியோ, படுக்கையைப் பத்தியோ நினைப்பு இல்லே. தூங்கும்போது அவன் இல்லையா? அப்போ அவன் எப்படி இருக்கான்?

உண்மை என்னன்னா... ஆத்மாவாயிருக்கறதிலே இருந்து அகந்தை ஒண்ணு கிளம்பி உலகத்தை உண்மைன்னு பாக்கறது. பொருள்களைத் தன்னிலிருந்து வேறா ஒரு போலி நான் நினைக்கறது.

அவன்தான் பாக்கற பொருள்களுக்கெல்லாம் ஆசனம்ன்னு தெரியாம, ஆசனம் தேடறான்.

கேட்டா... புலித்தோலுக்கு அந்தப் பலன், தர்ப்பைக்கு இந்தப் பலன்னும் பாதரட்சைக்கு இந்தப் பலன்... புவியீர்க்கறது... காந்த சக்தி... அது இதுன்னு கதை விடறான். இதெல்லாம் இல்லேன்னா சக்தி விரயமாயிடுமாம்.

இவாளுக்கு சக்தி எங்கிருந்து கிடைக்கறது? பலனையேதான் பாக்கறான். அதோட காரணம் என்னன்னு தேடி, அதை ஆசனத்தினாலேயும் பாதுகையினாலேயுந்தான்னு கற்பனை பண்றான். கல்லைத் தூக்கிப் போட்டா கீழே தரையிலே விழறதுங்கறான். இதெல்லாம் அவனோட நினைப்பிலே இருந்து வேறயா? இல்லையா? நல்லா யோசிச்சுச் சொல்லு.

இதெல்லாம் கல்லு... பூமி... புவியீர்ப்பு எல்லாம்... அவன் மனசுலேதான் இதெல்லாம் இருக்கு. அவன்தான் சக்தியும்

சக்திமானும். அவன்தான் மையமும் ஆதாரமும். அவனேதான் ஆதாரமும் ஆசனமும்.

ஆசனம் எதுக்கு? ஸ்திரமா உட்காரறதுக்கு. எங்கே... எப்படி அவன் தன்னிலையை விட்டு ஸ்திரமா உக்கார முடியும்? ஆக தன்னிலையேதான் ஆசனம்.

(575) **தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: காமத்தை ஜெயிக்கறது எப்படி?**

**ப:** காமம் துக்கத்தைக் கொடுக்கறது ஏன்? போலி நான் வந்ததால.... போலி நான்.... அஞ்ஞானத்தாலே வர்றது. அஞ்ஞானம் பேதத்தாலே வர்றது. பேதம், உலகம் உண்மைன்னு நினைக்கறதாலே வர்றது. நான் இந்த உடம்புதான், இந்த உடம்பு உண்மைன்னு நினைக்கறதாலேதான் உலகம் உண்மைன்னு நினைக்கறோம்.

நான் உடம்புதான்கற நினைப்பு, அகந்தை எழுந்த உடனேதான் வர்றது. அகந்தை எழலேன்னா மொத்த சங்கிலியும் அறுந்துடும். அதனாலே அகந்தையை எழ விடாதே! இது உன்னோட ஸ்வபாவ ஸ்திதியிலே இருக்கறதாலேயே ஏற்படும். ஸ்வபாவத்திலே இருந்தா காமத்தை வெல்லலாம்.

**கே: இதுக்கெல்லாம் அப்போ அஞ்ஞானந்தான் வேர்.**

**ப:** சரியாச் சொன்னே. அஞ்ஞானத்தாலேதான் தப்பா பாக்கறோம். அஞ்ஞானம்ன்னா என்ன? சுத்த பிரம்மத்திலே இருக்கா? இல்லை. தன்னைத் தெரியாததாலேதான் இந்தக் கேள்வி வர்றது. தன்னை உணர்ந்தா இந்தக் கேள்வி வராது. அஞ்ஞானத்தாலேயேதான் கேள்வி வர்றது. கேள்வி, கேக்கறவனிடம்தான் இருக்கு. ஆத்மாவிலே இல்லை. சூரியனைப் பாத்தா இருள் இருக்காது.

பொக்கிஷம் இருக்கும் பெட்டகத்திலே இருக்கு. மனுஷன் என்ன சொல்றான். பொக்கிஷம் என்னுதுங்கறான். பெட்டகம் அப்படிச் சொல்லலே. மமகாரம்தான் அப்படிச் சொல்ல வைக்கறது.

ஆத்மா இல்லாமே எதுவும் இல்லை. அஞ்ஞானம் கூட. அது ஆத்மாவோட சக்தி. அதிலேயே இருந்தாலும் அதை ஒண்ணும் செய்யாது. போலி நான்தான் மாட்டி வதைக்கும். அதனாலே அஞ்ஞானம் ஜீவனுக்குத்தான்.

இது எப்படின்னா என்னைத் தெரியலேன்னு மனுஷன் சொல்றான். இரண்டு நான் இருக்கா ஒண்ணு இன்னொன்னைத் தெரிஞ்சுக்கறதுக்கு. அதை ஒத்துக்க முடியாது. அதுக்காக அஞ்ஞானம் போயிடுத்தா?

இல்லே.

நான்னு ஒண்ணு கிளம்பறதுதான் அஞ்ஞானம். வேறே இல்லை.

(578) **பகவான் பொதுவாகச் சொன்னது.**

ப: இங்கே வர்றவா சிலபேர் அவாளைப் பத்தி கேக்க மாட்டா. ஜீவன்முக்தன் உலகத்தைப் பாப்பானா? கர்மத்தாலே பாதிக்கப்படுவானா?

விதேகமுக்தின்னா என்ன?

விதேகமுக்தி இறந்த பிறகுதானா இல்லே.... உயிரோடு இருக்கறபோதேவா?

ஞானி உடம்பு ஒளியா மாறிடுமா?

இல்லே மறைஞ்சுடுமா?

உடம்பை பிறர் பாக்க விட்டா அவன் ஞானியா?

இவாளோட கேள்வி முடிவில்லாதது. ஏன் பல வழிகளைப் பத்திக் கவலைப்படணும்?

இதைத் தெரிஞ்சுக்கறதுதான் முக்தியா?

அதனாலே கேட்டா இப்படித்தான் பதில் சொல்றது... முக்தியை முக்தி பாத்துக்கும் விட்டுடுங்கோ! பந்தம் இருக்கான்னு பாருங்கோ! இதைத் தெரிஞ்சுக்கோ! முதல்லே உங்களைப் பாருங்கோ!

(580) *யாரோ ஒருவர் கேட்டார்.*

**கே: ஞானி யோகிலே இருந்து... வேறையா? என்ன வித்தியாசம்?**

**ப:** பகவத் கீதை ஞானியே உண்மையான யோகி... உண்மையான பக்தன்னு சொல்றது.

யோகம் — சாதனை

ஞானம் — சித்தி

**கே: யோகம் அவசியமா?**

**ப:** யோகம் சாதனை. ஞானத்துக்கு பிறகு தேவை இருக்காது. எல்லா சாதனையும் யோகம்ங்கற பேர்லதான் வழங்கப்படறது. கர்மயோகம், பக்தியோகம், அஷ்டாங்க யோகம். யோகம்ன்னா என்ன? சேர்றது. எப்போ சேர முடியும்? வியோகம் இருந்தாத்தான். அதாவது பிரிஞ்சாத்தான். பிரிஞ்சுட்டோம்ன்னு மயக்கத்திலே இருக்கான். இந்த மயக்கம் நீங்கணும். நீக்கற முறைகள்தான் யோகம்.

**கே: எது சிறந்தது?**

**ப:** பக்குவத்தைப் பொறுத்தது. ஒருத்தன் பிறக்கும்போதே பூர்வ ஸம்ஸ்காரங்களோடதான் வர்றான். அதைப் பொறுத்து, ஒருத்தர்க்கு ஒண்ணு சுலபமாவும், இன்னொருத்தருக்கு இன்னொன்னு சுலபமாவும் இருக்கும். இதை இப்படித்தான்னு சொல்ல முடியாது.

**கே: எப்படி தியானம் பண்றது?**

ப: தியானம்ன்னா என்ன?

ஒரே நினைப்பிலே இருக்கறது. பிற நினைப்புகள் இல்லாம இருக்கறது. அந்த ஒரு நினைப்பும் காலக்கிரமத்திலே போயிடும். நினைப்பற்ற ஆத்மாவே மிஞ்சும்.

**கே: எப்படி அகந்தையை கொல்றது?**

ப: அதைப் பிடிச்சுக்கணும். அது தானா மறைஞ்சுடும். அதைச் செய் முதல்லே! மத்தது எளிது.

**கே: அதை எப்படி பிடிக்கறது?**

ப: ஒரு அகந்தை இன்னொரு அகந்தையைப் பிடிக்கப் போறதா?

ஒரு அகந்தை இன்னொரு அகந்தையை இல்லாமே பண்ணப் போறதா?

இரண்டு 'நான்' இருக்கா?

**கே: எப்படி பிரார்த்தனை பண்றது?**

ப: கடவுள்கிட்டே பிரார்த்தனை பண்றதுக்கு, நான்னு ஒண்ணு இருக்கணுமே, அது ரொம்ப சமீபத்திலேயும், நெருக்கமாவும் இருக்கு. ஆனா கடவுள் அப்படி இல்லே. அதனாலே நான்கற நெருக்கமானதைத் தெரிஞ்சுக்கோ. அப்புறம் தேவைப்பட்டா கடவுளைப் பிரார்த்தனை பண்ணலாம்.



(581) **பகவான் பொதுவாகச் சொன்னது.**

**ஒரு குழந்தை, பகவானுக்கு, காணிக்கையா கொண்டு வந்த ஏதோ ஒண்ண கையிலே வச்சுக்கொண்டு, பகவான்கிட்டே கொடுக்க மாட்டேன்னு சொன்னது. அதோட பெற்றோர், அதை சமாதானப்படுத்தி அதுதான் பகவான், குருன்னு சொன்னாங்க. அதுதான் பகவான்னு சொன்ன உடனேயே குழந்தை ரொம்ப சந்தோஷமா பகவான்கிட்டே கொடுத்துச்சு. அதை முன்னிட்டு பகவான் சொன்னது.**

ப: நம்மதுன்னு நினைச்சு பிடிச்சு வச்சுருக்கறதை அது பகவானோ அதுதான்னு தெரிஞ்சு உடனே சந்தோஷமா கொடுத்துடறதுதான் தியாகம்.

அதுதான் நிஷ்காம்ய கர்மத்தோட சாரம்.

அதுதான் உண்மையிலேயே துறவு.

இந்த கொடுக்கற குணத்தை வளர்த்துக்கொண்டா... அது தியாகமா மாறிடும்.

எதையும் சந்தோஷமா கொடுத்தா... அது கொடுக்கறவாளுக்கும் வாங்கறவாளுக்கும் ஆனந்தம். திருடினா ரெண்டு பேருக்கும் துன்பம். தானம், தர்மம், நிஷ்காம்ய கர்மம் எல்லாம் தியாகம்தான்.

'எனது'ங்கறதை கொடுத்தா... அது சித்த சுத்தி.

'நான்'கறதை கொடுத்தா... அது ஞானம்.

எதையும் துறக்கற ஸ்வபாவம் வளர்ந்து ஞானமாயிடறது.

**ஒரு சின்னப்பையன் தனியா பெற்றோர் துணையில்லாம பகவானை பாக்க வந்தான். செங்கத்துல இருந்து பஸ்ல வந்திருக்கான்.**

**பகவான்:** இந்த சின்னப்பையன், என்னைப் பாக்கறதுக்கு, அப்பா-அம்மாவை விட்டுட்டு வந்துட்டான். இதுவும் தியாகம்தான்.

(582) ***ஆந்திர கனவான் ஒருவரிடம் பகவான் கூறியது.***

**ப:** ஆசைப்பட்டுக்கொண்டே இருந்தா, ஒருத்தனோட ஆசைக்கு முடிவே இருக்காது. திருப்தியும் இருக்காது. ஒண்ணும் வேண்டாம்ன்னு இருந்தா அவனுக்குதான் எல்லாம் வரும்.

நாம, குடும்பத்திலேயோ, சொத்துபத்திலேயோ இல்லை. இதெல்லாம் நம்மளிடம் இருக்கு. அது அவரவர் பிராப்தம் பிரகாரம் தோன்றும்; மறையும். உலகத்தைப் பாத்தாலும் பாக்கலேன்னாலும் மனசு சும்மாயிருந்தா... அதுதான் சமாதி. சூழ்நிலை காலம் விஷயங்கள் எல்லாம் நம்மள்லேதான் இருக்கு. நம்மள விட்டுத் தனியா எப்படி இருக்கும்? நாம ரூபங்கள் வேணா வேற

வேறாயிருக்கலாம். ஆனா எல்லோரோட நாமமும் ஒண்ணுதான். அதுதான் 'நான்'. யாரைக் கேட்டாலும் நான்ன்னுதான் சொல்றான். ஈஸ்வரனே முன்னாடி வந்தாலும், 'நீங்க யாரு'ன்னு கேட்டா? நான் ஈஸ்வரன்னுதான் சொல்லணும். அதிலேயும் 'நான்'ன்னுதான் முதல்லே தன்னை குறிச்சுச் சொல்லணும்.

இடமும் அப்படித்தான். நான் உடம்புன்னு நினைக்கற வரைக்கும் இடமும் கற்பிக்கப்படும். அது போனா இடமும் போயிடும். 'நான்' உடம்பா? உடம்பு நான்ன்னு சொல்லலே. இதெல்லாம் என்னிலே இருக்கு. நான் உடம்புதான்னு நினைக்கறதை சுத்தமா போக்கிக்கொண்டா மிஞ்சறது அமைதிதான். இதுதான் சமாதி. இதுதான் நான்.

(586) **ஆந்திராக்காரர் ஒருவர் கேட்டார்.**

**கே: சும்மாயிருக்கறது எப்படி? ரொம்ப கஷ்டமாயிருக்கே! அதுக்கு பதிலா தியானம் பண்ணலாமா? இல்ல வேற வழியிருக்கா?**

ப: எது கஷ்டமில்லையோ, அது கஷ்டமாயிருக்கு. அலைஞ்சே பழக்கப்பட்டுட்டோம். வீட்டிலே சும்மாயிருன்னா... ரொம்ப கஷ்டமாயிருக்கு! வெளியே போகணும்ன்னு நினைக்கறோம்.

**கே: எந்த உபாசனை மத்த எல்லா உபாசனையையும் விட பலிதத்துல சிறந்தது?**

எல்லா உபாசனையும் பலிதத்திலே சிறந்ததுதான். ஆனா ஒவ்வொருத்தரோட பூர்வ வாசனைக்கு பொருந்துற உபாசனை லாவகமா வரும்.



(588) **பகவான் பொதுவாக சொன்னது.**

ப: சன்யாசம் பக்குவனுக்குத்தான். அது விஷயங்களைத் துறக்கறது இல்லே. விஷயப் பற்றைத் துறக்கறதுதான்.

வீட்டிலேயே சன்யாசத்தை யார் வேணாலும் கடைப்பிடிக்கலாம். அதுக்கு அவன் தகுதியா இருக்கணும்.

சன்யாசத்தை இரண்டு விதமா பிரிக்கறா.

வெளி வாழ்க்கையை வச்சு.

1. குடிசகன்:- இவன் சன்யாசம் வாங்கி ஒரே ஊர்லே குடிசையிலே இருப்பான்.

2. பஹூதகன்:- இவன் சன்யாசம் வாங்கி ஊர் ஊரா சுத்திக்கொண்டே இருப்பான்.

இன்னொன்னு அவனோட நிலையை வச்சு.

ஹம்சன்:- சாதனையிலே இருக்கற சன்யாசி.

பரமஹம்சன்:- ஞானமடைஞ்ச சன்யாசி.

(589) சோமசுந்தர சுவாமி கேட்டார்.

**கே: அறிவுன்னா என்ன? சுத்த அறிவுன்னா என்ன?**

அறிவுன்னா, பொருட்கள் எல்லாத்தையும் பாக்கற அறிவு. அது போலி அறிவு. ஆனா சுத்த அறிவு... தான் மாத்திரமா, வேற எதையும் அறியாமே, ஏகமா ஒரு படித்தா, எல்லாத்தையும் விளக்கற ஒளி.

**கே: அதை நாம தியானத்துலே பாவிக்கணுமா?**

ப: ஏன் பாவிக்கணும்?

எதையும் பாவனை பண்ணணும்னா நாம அதுக்கு வேறா இருக்கணும். ஆனா இந்த சுத்த அறிவுக்கு வேறா நாம இருக்க முடியாது. அதேதான் நாம கூட கிடையாது. அதுதான் இருக்கு. எப்படி அதை பாவிக்க முடியும்?

**கே: இப்போ எல்லாம் நல்லா புரியுது. மனசு லேசா இருக்கு. அப்புறம் மறந்துடுது.**

ப: மறக்கறதுன்னாலே அங்கே அறிவு இருக்குன்னுதான் அர்த்தம். இல்லேன்னா.... மறந்துடுத்துன்னு எப்படித் தெரியும்? மறந்துடுத்துன்னு எப்படிச் சொல்ல முடியும்? மறக்கறதுக்கும்

நீங்க இருக்கணும். மறந்துடுத்துன்னா நினைக்கறதுக்கும் நீங்க இருக்கணும்.

அப்புறம் வந்து கம்ப்ளைண்ட் (complaint) பண்றதுக்கும் நீங்க இருக்கணும். அதனாலே மறதியும்... சிதாகாசம்தான்.

**கே: அப்போ ஏன் எனக்கு சரியா புரியமாட்டேங்குது?**

ப: சித் எப்பவும் இருக்கற சாமான்ய சுத்த அறிவு. அதிலே இருந்து மனம் கிளம்பிடறது. மனம் நினைப்பாலே ஆனது. அஞ்ஞானம் குறுக்கிடறதாலே... சுத்த அறிவு எப்படி இருந்ததோ... அப்படித் தெரியாம, வேறயா தெரியறது. அதுதான் நம்மளாவும் உலகமாவும் பாக்கப்படறது. ஆசையும் பற்றும் வெறுப்பும் நிறைஞ்சு இருக்கு. அதனாலேதான் 'ஆசை கண்ணை (உண்மையை) மறைக்கறது'ன்னு சொல்றா.

**கே: எனக்குப் புரியலை.**

ப: 'நினைப்பு இல்லாம இரு.' 'நினைப்பற்ற உண்முகமான மனத்தாலேயே உணர்' ன்னு சுருதிகள் சொல்றது. அதனாலே நினைப்பற்ற மனம் ஹிருதயத்திலே ஒடுங்கிடும். அதுவே சித்.



(590) **தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: பிரம்மம் வேறு ஜீவன் வேற இல்லை. ஜீவன் மாயைல இருக்குன்னு சொன்னா... பிரம்மமே மாயைலே இருக்குன்னு சொல்ற மாதிரி ஆகுமில்லையா. எப்படிப் பொருந்தும்?**

ப: பிரம்மம் மாயையிலே இருந்தா... அது விடுபடணும்ன்னு அதுவே கேள்வி கேட்டுக்கட்டும்.

**கே: பகவானே நாம ஸ்மரணம் எப்படி ஆத்மஞானத்துல கொண்டு போய் சேக்கும்?**

ப: மூல நாம ஸ்மரணம் எப்பவும் முயற்சியில்லாமே இடைவிடாம நடந்துகொண்டே இருக்கு. அந்த மூல நாமம்தான்

'நான்'. ஆனா அது வெளிப்படும்போது அகந்தையா வர்றது. நாமஜபம், மானசீக ஜபமா மாறி, கடைசியிலே மூல நாமஸ்மரணத்திலே கரைஞ்சுடும்.

**கே: இராமகிருஷ்ணர் கும்பிட்ட காளிசிலை அவரோட பேசுமாமே? அது உண்மையா?**

ப: அது பேசறது அவருக்கு மட்டும்தானே தெரிஞ்சது! மத்தவாளுக்குத் தெரியலியே...! அவருக்குள்ளே இருக்கறதுதான் அப்படிப் பேசறது. அவருக்குள்ளே இருக்கறது.... வெளியே ஒரு உருவம் எடுத்துக்கொண்டு, அவரை உள்ளே இழுக்கறது. அது உயிரோடு இருந்தா... எல்லாராலேயும் அப்படிப் பாக்கப்பட்டு இருக்கணுமே?

ஆனா எல்லாம் இங்கே உயிர்தான்... அறிவுதான்.

அதுதான் உண்மை. ராமகிருஷ்ணர் மாதிரியே நிறையப் பேருக்கு ஆயிருக்கு.

**கே: எப்படிக் கல்லுலே உயிர் இருக்கும்... அறிவு இருக்கும்... அது ஜடம். அறிவற்றது.**

ப: மொத்த பிரபஞ்சமும் உயிர்தான்... அறிவுதான்... அதை ஜடம்ன்னு சொல்றது உன் அறிவுதானே...!

ஒருத்தன், இருட்டிலே ஒரு பொருளை, இருக்கா? இல்லையான்னு தேடணும்னா... ஒளி தேவை. அப்படியே அறிவுள்ளதா....அறிவற்றதான்னு சொல்றதுக்கு அறிவு தேவை. அதே ஒரு மனுஷன் இருட்டு ரூம்லே இருக்கான். அவனைத் தேட விளக்கு வேணாம். கூப்பிட்டா உடனே பதில் சொல்லுவான். அப்படி அறிவு சுயவிளக்கம் பொருந்தியது.

தூக்கத்தை உணர்வற்றது; விழிப்பை உணர்வுடையதுன்னு சொல்றே.

ஸத்யம்ன்னா என்ன? எப்பவுமே, மாறாம, இடைவிடாம இருக்கறது. அப்போ நீ சொல்றமாதிரி தூக்கத்திலே இருக்கற உணர்வற்ற நிலையும், இப்போ இருக்கற உடலுணர்வும் ஸத்யம் இல்லை.

ஆனா நீ இதை [illegible] ஒத்துக்கறே. அந்த சுத்த இருப்புதான் ஸத்யம்.

மத்தது சேர்க்கை. சுத்த இருப்பு உணர்வு இல்லாம இல்லை. தூக்கத்திலே இல்லைன்னா நீ இருந்தேங்கறத சொல்ல மாட்டே.

அப்போ உணர்வுதான் ஸத்யம். அது உபாதியோடு சேரும்போது நீ அதைத் தன்னுணர்வு, உணர்வற்றது, பிரபஞ்ச உணர்வு, ஆழ்மன உணர்வு, மனித உணர்வு, நாய்உணர்வு, மர உணர்வுன்னு சொல்றே.

இது எல்லாத்திலேயும் மாறாம இருக்கறதுதான் உணர்வு. அதனாலே தூங்கும்போது நீ என்ன உணர்விலே இருந்தியோ, அதிலேயே அப்படியே கல்லும் இருக்கு.

**கே: என்னோட உணர்வும், நாயோட உணர்வும் வேற வேற. நான் நாய்க்கு பைபிள் படிச்சு காட்ட முடியாது. மரம் நகராது. நான் நகருவேன்.**

ப: அப்போ மரத்தை, நகராத மனுஷன்னு சொல்லு. மனுஷனை நகர்ற மரம்ன்னு சொல்லு.

**(594) ஸ்பெயின் பெண்மணி கேட்டார்.**

**கே: ஜீவாத்மா பரமாத்மாவுல கரைஞ்சிடுச்சுன்னா எப்படி உலக சேமத்துக்காக இறைவன் கிட்டே பிரார்த்தனை பண்ண முடியும்?**

ப: நீங்க கடவுளிடம் பிரார்த்தனை பண்ணி முடிக்கும்போது, 'ஆமென்'னு சொல்றேள். அதுக்கு அர்த்தம், 'உன் இஷ்டமே நடக்கட்டும்'. உன் இஷ்டமே நடக்கட்டும்ன்னா... எதுக்குப் பிரார்த்தனை பண்ணணும்? கடவுள் இஷ்டம்தான், எல்லா நேரத்திலேயும், எல்லா சூழ்நிலையிலேயும் நடக்கறது. நம்மளோட இஷ்டத்துக்கு நடக்காது. இதை உணர்ந்து சும்மா இருக்கணும். எல்லோரையும்

அவர்தான் பாத்துக்கறார். அவர்தான் படைச்சார். எல்லோரும்ங்கறதிலே நாமளும் சேந்ததுதான். எல்லாத்தையும் பாத்துக்கறவர் நம்மள மட்டும் விட்டுடுவாரா? அவர் இஷ்டத்துக்கு விட்டுடணும், அடங்கிடணும். இந்த முடிவுக்கு வர சாமான்ய அறிவு போதும்.

உங்களோட தேவையை அவர்கிட்டே முறையிட வேண்டிய அவசியம் இல்லை. அவருக்கே தெரியும். பாத்துப்பார். ஏன் பிரார்த்தனை பண்றேள்? ஏன்னா உங்களாலே முடியலேன்னு தெரியறது. ஒரு சக்தி உங்களுக்கு உதவணும்ன்னு நினைக்கறேள்? உங்களைப் படைச்சு, பாதுகாக்கறவருக்கு உங்களோட இயலாமை தெரியாதா? நீங்க புலம்பினாத்தான் தெரியுமா?

**கே: ஆனா பிறர்க்கு உதவறவங்களுக்கே கடவுள் உதவுவார்!**

**ப:** நிச்சயமா. உங்களுக்கு உதவிக்கோங்கோ... அதுதான் கடவுளோட இஷ்டம்.

ஒவ்வொரு செயலும் அவர் தூண்டறதாலயே நடக்கறது. பிறர்க்காக பிரார்த்தனை பண்றது, வெளியே இருந்து மேலோட்டமா பாத்தா, சுயநலமில்லாதது மாதிரி தெரியும். அதை நல்லாப் பாத்தா, சுயநலம் ஒளிஞ்சு இருக்கும். நீங்க பிறர் சந்தோஷமாயிருக்கணும்ன்னு நினைக்கறது.... நீங்க சந்தோஷமாயிருப்பேள், அதுக்குத்தான். இல்லேன்னா.... பிறர்க்காகஇறைவன்கிட்டேமன்றாடினேன்கறபேருக்காகத்தான். கடவுளுக்கு இடையிலே ஆள் வேணுமா? நம்மளோட வேலையை ஒழுங்காப் பாத்தா, எல்லாம் சரியா இருக்கும்.

**கே: கடவுள் அவரோட வேலைகளை... இஷ்டத்தை சில குறிப்பிட்ட ஆட்கள் மூலமாத்தானே நடத்தறார்?**

**ப:** கடவுள் எல்லாத்திலேயும், இருக்கார், எல்லோர் மூலமாவும் வேலை பாக்கறார். ஆனாலும் அவருடைய சாநித்தியம் சுத்தமான மனதுகள்லே அறியப்படறது. அசுத்தமான மனதை விட சுத்தமான மனசு கடவுள் ஸாந்நித்தியத்தையும், அதன்

மூலமா அதோட செயல்களையும், நல்லா பிரதிபலிக்கறது. அதனாலே ஜனங்க அவாளைக் கடவுளாலே தேர்ந்தெடுக்கப் பட்டவான்னு சொல்றா. ஆனா அவன் அவனை அப்படி சொல்லிக்க மாட்டான். அப்படி அவன், 'நான் கடவுளுக்கும் ஜனங்களுக்கும் இடையிலே தூதர்'ன்னு நினைச்சா, அவன்கிட்டே இன்னும் தனித்தன்மை போகலே. அதனாலே சம்பூர்ணசரணாகதி அடையலேங்கறது தெளிவாகும்.

**கே: பிராமணர்கள் பூஜாரியாவோ, தூதர்களாவோ இறைவனுக்கும் மற்றவர்களுக்கும் இடையில கருதப் படறாங்களே, ஏன்?**

ப: ஆமாம். ஆனா யார் பிராமணன்? பிரம்மத்தை உணர்ந்தவன்தான் பிராமணன். அவனுக்கு ஜீவத்துவம் இருக்காது. அவன் அதனாலே நான் தூதர்... இடையிலேன்னு நினைக்க மாட்டான்.

ஒரு ஞானி பிறரைத் தனக்கு அன்னியமா பாக்க மாட்டான். அப்போ எப்படி பிரார்த்தனையெல்லாம் பண்ண முடியும்? யார்கிட்டே? எதுக்காக? அவனோட வெறும் இருப்பு மாத்ரமே, எல்லோருக்கும் எல்லாத்தையும் தரும். நீங்க பிறர்க்காக பிரார்த்தனை பண்றேன்னு நினைக்கற வரைக்கும், உங்களுக்கு அன்னியமா பிறர் இருப்பா. நீங்க வேறே பிறர் வேறேங்கறதுதான் அஞ்ஞானம். அஞ்ஞானத்தாலேயே இயலாமை வர்றது. பலஹீனம் ஏற்படறது.

உங்களுக்கே தெரியறது முடியலேன்னு.... அப்போ எப்படி நீங்க அடுத்த ஆளுக்கு உதவ முடியும்? நீங்க இறைவனிடம் முறையிடுவேன்னு சொன்னா... அவருக்குத் தெரியும். அவர் வேலையைப் பாக்க. உங்களோட உதவி தேவையில்லே.

உங்களுக்கே உதவிக்கோங்கோ! அதனாலே பலமாகுங்கோ! அது முழுசா சரணடையறதனாலேயே நடக்கும். நீங்க உங்களை ஒப்படைச்சிடுங்கோ! அப்போதான் சரணடைஞ்சப்றம் நீங்க இருக்க மாட்டேள். ஜீவத்துவம் இருக்காது. அவரிஷ்டமே

நடக்கும். அதுவே மௌனம். அதுதான் அடையத்தக்கது. எல்லாத்துலேயும் சிறந்தது.

**கே: பெரிய நிலையோட அனுபவம் எல்லோருக்கும் ஒரே மாதிரிதான் இருக்குமா? இல்லே அதிலே வித்தியாசம் இருக்குமா?**

ப: பெரிய நிலை சமமா இருக்கு. அதோட அனுபவமும் சமமா இருக்கும்.

**கே: ஆனா அதைப்பத்தி ஒவ்வொருத்தர், ஒவ்வொரு மாதிரி சொல்றாங்களே?**

ப: மனசை வச்சுதானே சொல்றது. மனசு வேற வேறயா இருக்கறதாலே அப்படி இருக்கு.

**கே: அதை உணர்ந்தவங்க ஏன் வேற வேற மாதிரி சொல்லுறாங்க?**

ப: அதைச் சொல்ற விதம் ஏன் மாறுபடறதுன்னா.... அதைத் தேடறவா, ஸ்வபாவம் வேற வேறயா இருக்கு. அவாளை வழிகாட்ட அப்படிச் சொல்றா.

**கே: ஒருத்தர் கிறிஸ்துங்கறார்... ஒருத்தர் இஸ்லாம்... ஒருத்தர் புத்த மதம்ங்கறார். ஏன் அவங்க வளர்ந்த விதத்துல அப்படியா?**

ப: வளர்ந்த சூழ்நிலை எப்படியிருந்தாலும், அனுபவம் ஒண்ணுதான். சொல்ற விதம்தான்... வேறவேறே.

(596) *சோப்ரா கேட்டார்.*

**கே: பகவான் நேத்து கடவுள் எல்லாரையும் பாத்துக்கறார்ன்னு சொன்னீங்க. அப்போ நாம ஏன் எதையாவது செய்யறதுக்கு முயற்சி பண்ணணும்?**

ப: முயற்சி பண்ண யார் சொன்னா? கடவுள்கிட்டே அவ்வளவு ஒப்படைப்பு இருந்தா இந்தக் கேள்வியே இருக்காது.

**கே: கடவுள் எல்லாத்தையும் வழிநடத்தறார்ங்கறது உண்மைதானே? அப்போ எதுக்கு இந்த உபதேசமெல்லாம்?**

**ப:** கேக்கறவாளுக்கு சொல்றா. உங்களுடைய நம்பிக்கை திடமாயிருந்தா அதிலேயே நில்லுங்கோ. உங்களைச் சுத்தி என்ன நடக்கறதுங்கறதை பத்திக் கவலைப்படாதேள்! உலகத்திலே இன்பம், துன்பம் இரண்டும் இருக்கும். இரண்டுக்கும் சரிசமமா இருங்கோ! கடவுளோட நம்பிக்கையிலேயே இருங்கோ! ஒப்படைப்பு முழுமையா இருந்தாத்தான் அப்படியிருக்க முடியும்.

**கே: அந்த ஒப்படைப்பை எப்படி பெறுவது?**

**ப:** சரியாச் சொன்னேள்... இதுக்குதான் எல்லாரும் உபதேசம் கேக்கறா.

எல்லாரும் துன்பத்தாலே பாதிக்கப்பட்டே, அதிலே இருந்து விடுபடணும்னு நினைக்கறா. அவாகிட்டே, 'என்ன நடக்குமோ நடக்கும். நடக்காதது நடக்காது. எல்லாம் கடவுள் இஷ்டம்'ன்னு சொன்னா ரொம்ப பக்குவனாயிருந்தா... அது போதும்... முக்தி அடைஞ்சுடுவான்.

மத்தவா அவ்வளவு சுலபமா சமாதானம் ஆக மாட்டா.

கடவுள் யார்?

அவரோட ஸ்வபாவம் என்ன?

அவர் எங்கே இருக்கார்?

அவரை எப்படி உணர்றது?

இப்படிக் கேப்பா. அவாளைத் திருப்திப்படுத்த புத்திபூர்வமா பேசி ஆகணும், அதை அவா அலசி ஆராய்ஞ்சா உண்மை நல்லா புத்தியிலே பிடிபடும்.

புத்திபூர்வமா புரிஞ்சுகொண்டதை பக்குவன் நடைமுறைப் படுத்துவான். எப்பவும் நான் யார்? யாருக்கு இந்த நினைப்பு வர்றதுன்னு, விசாரத்திலே... புரிஞ்ச உண்மை நல்லா அனுபவமாகற வரைக்கும், அதாவது எல்லாத்தையும் ஒண்ணுதான் நடத்தறதுங்கற உண்மை அனுபவமாகற

வரைக்கும்... விடமாட்டான். அதுதான் தீவிர பக்தி. கடைசியிலே அவன் சந்தேகமெல்லாம் தீர்ந்து... எந்த உபதேசமும் கேக்கமாட்டான்.

**கே: கடவுள் மேலே எங்களுக்கு நம்பிக்கை இருக்கு.**

ப: அப்போ இந்தக் கேள்வியே வராது. கடவுள் நம்பிக்கை இருக்கறவன் எப்பவுமே சுகமாயிருப்பான். ஆத்ம விசாரத்தாலேதான்... இந்தத் தளராத நம்பிக்கை ஏற்படும்.

விசாரம்தான் எல்லாத்தையும் உள்ளடக்கினது... பக்தி, ஞானம், கர்மம், யோகம்.

**கே: ஒருத்தனுக்கு உடல் தியானத்துக்கு ஒத்துழைக்கலைன்னா ஹடயோகம் பழகலாமா?**

ப: ஒவ்வொருத்தர் ஸம்ஸ்காரத்தைப் பொறுத்தது.

ஒருத்தருக்கு உடம்பு சரியில்லேன்னா ஹடயோகம் குணப்படுத்தும்ன்னு அதைப் பழகுவார்.

இன்னொருத்தர் கடவுள் குணப்படுத்துவார்ன்னு ஒப்படைச்சுடுவார்.

இன்னொருத்தர் அவரோட மனோபலத்தை உபயோகிப்பார்.

இன்னொருத்தர் இதைக் கண்டுக்க மாட்டார்.

ஆனா எல்லோரும் தியானத்தை விட மாட்டா.

நான் யார்ங்கறதுதான் முக்யம். மத்தது எல்லாம் இரண்டாம் பட்சம் உபரிதான்.

**கே: காலையிலே கொஞ்ச நேரமும், சாயங்காலம் கொஞ்ச நேரமும், ஆத்ம விசாரம் செஞ்சா போதுமா? இல்லே எப்பவும் செய்யணுமா? அதாவது நான் நடக்கும்போது... இல்லே நான் எழுதும்போது... எப்பவும் செய்யணுமா?**

ப: உங்களோடய ஸ்வபாவம் எது?

நடக்கறதா...? எழுதறதா...? இல்லே இருக்கறதா?

மாறாத ஒரே உண்மை, இருக்கறதுதான். இந்த உண்மையை நீங்க உணராத வரைக்கும் விசாரம் பண்ணணும். நிலைப்பட்டுட்டேள்ன்னா... அப்புறம் கவலையில்லே.

நினைப்பு வராம யாரும் விசாரம் பண்ணமாட்டா. நீங்கதான் நடக்கறேள்... எழுகோன்னு நினைக்கற வரைக்கும், விசாரம் பண்ணணும்.

நல்லா ஆத்மாவிலே நிலைப்பட்டா... வேலைதானா நடக்கும்.

நான் மனுஷன்... நான் மனுஷன்... நான் மனுஷன்னு ஒவ்வொரு நிமிஷமும் சொல்லிக்கொண்டேவா இருக்கோம்.

அப்படிச் சொல்றது இல்லே. ஆனா அவனோட வேலையெல்லாம் தானா நடந்துகொண்டேயிருக்கும்.

**கே: ஆத்ம விசாரத்துக்கு புத்திபூர்வமா உண்மை புரியணுமா?**

ப: ஆமாம். இல்லேன்னா எல்லாம் கடவுள்தான். எல்லாம் ஆத்மாதான்னு சொன்ன மாத்திரத்திலேயே உண்மையை உணர்ந்துடமாட்டானா?

அதுவே, அவன் கிட்டே போராட்டம் இருக்குன்னு காட்றது. அவனோட அவனே வாதம் பண்ணி, கொஞ்சம் கொஞ்சமா இந்த உண்மைக்கு சம்மதிப்பான். அப்புறம் அவன் நம்பிக்கை திடமாகணும்.

(597) **சுவிஸ் பெண்மணி கேட்டார்.**

**கே: ஆத்ம ஞானம் வந்தா விசேஷ சக்திகள் எற்படுமா... அதாவது சித்திகள் வருமா?**

ப: ஆத்மா ரொம்பவும் நெருக்கமா எப்பவும் இருக்கறது. ஆனா சித்திகள் அன்னியமானது.

ஆத்மாவுக்கு முயற்சி தேவையில்லே. சித்திகளுக்கு முயற்சி தேவை.

சித்திகள் மனத்தாலேயே தேடப்பட்டு... செய்யப்படறது. அதனாலே சித்திகள் செய்யணும்ன்னா... மனம் இருக்கணும்,

ஆத்மா மனோ நாசத்தாலேயே உணரப்படறது.

மனம்தான், தான் பிறர்ன்னு பிரிக்கும். மனம் இல்லைன்னா பாக்கறதுக்கு யாரும் இருக்கமாட்டா. ஆத்மா மனதுக்கு அப்பால்

இருக்கறது, மனத்தோட நாசத்தாலேயே உணரப்படறது. மனம் இறந்தா, பிறரைப் பத்தின கவலை போயிடும். அப்போ ஒரு ஞானிக்கு, பிறரைப் பத்தின நினைப்பு எப்படி வரும்? சித்திகளை உபயோகிக்க வேண்டிய அவசியம் என்ன?

ஆத்ம ஞானத்தோடு சேர்ந்து சித்திகளும் ஏற்படலாம்... ஏற்படாமலும் இருக்கலாம். ஆத்ம ஞானத்துக்கு முன்னாடி அதைத் தேடியிருந்தா... ஆத்ம ஞானத்துக்குப் பிறகு அதெல்லாம் கிடைக்கும். மத்தவா ஆத்மஞானத்தை மட்டுமே தேடினதாலே, அவாகிட்டே ஸித்திகள் ஏற்படாது.

ஆத்ம ஞானத்துக்குப் பிறகும், ஸித்திகள் வெளிப்படும். ஆனா... அப்போ அதுக்கு ஒரு சரியான காரணம் இருக்கும். பிறர்க்கு நன்மை ஏற்படறதுக்காக... சில ஞானிகளிடம் ஸித்திகள் வெளிப்படும். ஆனா அவா மயங்க மாட்டா.

**கே: இந்த சித்திகளால, பிறரை ஆத்மாஞானமடைய வைக்கறதுக்காக உபயோகிப்பாங்களா? இல்லை தன்னோட ஆத்ம ஞானமே போதுமா?**

**ப:** அவனோட ஆத்ம ஞானத்தோட வீரியமே வேற எல்லாத்தையும் விட சக்தி வாய்ந்தது. அவனுக்கு அகந்தையில்லாததாலே பிறர் இருக்க மாட்டா.

அதை விட என்ன பெரிய நன்மை பிறர்க்கு செஞ்சுட முடியும்? அதுதான் சுகம். சுகம் அமைதியாலேயே ஏற்படறது. அமைதி... தொந்தரவு இல்லைன்னாலே போதும். தொந்தரவு நினைப்பாலேயே வர்றது. நினைப்பு மனசுலே இருந்து வர்றது. மனசே இல்லேன்னா.... அதுவே முழுமையான அமைதி.

ஒருத்தனோட மனம் நாசமாகலேன்னா... அவனாலே அமைதியாவும், சுகமாவும் இருக்க முடியாது. அவனே சுகமா இல்லைன்னா... தன்னை அடுத்தவாளுக்கு எப்படி சுகத்தை வழங்க முடியும்? மனம் இல்லேன்னா... பிறர் எப்படி இருப்பா? அதனாலே அவனோட ஆத்ம ஞானமே எல்லோரையும் சுகமாக்க போதுமானது.

**கே: சமாதி ஏற்பட்டு அப்புறம் போயிடுமா?**

ப: சமாதின்னா [illegible]

சமாதிதான் [illegible] ஸ்வபாவம். அது எப்படி வந்துட்டு போகும்? [illegible] உண்மையான ஸ்வபாவம் தெரியலேன்னா [illegible] பார்வை தடைபடும்.

அது என்ன பார்வை தடை?

கண்டுபிடிங்கோ! [illegible]

அப்போ ஒருத்தரோட முயற்சி எல்லாம் தடையை நீக்கறதுக்குத்தான். உண்மையான பார்வையை மறைக்கறது இந்தத் தடை தான்.

ஸ்வபாவம் எப்பவும் மாறாது. அதை உணர்ந்தா அது நித்யமாயிருக்கும்.

**கே: உங்க முன்னாடி பால்பிரண்டன் ஒரு மணி நேரம் சமாதியில இருந்ததாச் சொன்னார். அதனாலயே கேட்டேன்.**

ப: ஒரு சாதகன் அமைதியும், சுகமும் முயற்சியாலேயே அடையறான். ஆனா அவனோட ஸ்வபாவம், முயற்சி அற்றது.

முயற்சியற்ற சகஜ சமாதியே உண்மையான சமாதியும் முழுமையான நிலையும். அதுவே நித்யம். முயற்சிகள் இடைவிட்டு செய்யப்படறது. விளைவுகளும் அது போலவே.

சகஜமோ, நம்மளோட தினப்படி வாழ்க்கைக்கு, எந்த விதத்திலேயும் முரணா இருக்காது. விவகாரமும் சமாதியும் ஒண்ணாத்தான் இருக்கும். அதுவே முயற்சியோட செய்யப்படற சமாதிக்கு வேலை தடையா இருக்கும். சகஜம் வந்துடுத்துன்னா எல்லோரோடு எல்லோரா அமைதி கெடாமயிருக்கலாம்.



**தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: ஆத்மஞானமடைய எவ்வளவு நாளாகும்?**

ப: முதல்லே ஆத்மான்னா என்னன்னு தெரிஞ்சுக்கும். அதை அடையறதுன்னா என்னன்னு தெரிஞ்சுக்கும். அப்புறம் எல்லாம் தெரியும் ஓய்.

**கே: மனம் ஹிருதயத்தை உணரணும்.**

ப: சரி. இருக்கட்டும் ஓய். மனம்ன்னா என்ன?

**கே: மனம் ஹிருதயம் எல்லாம் பெருமாளோட அவதாரம்.**

ப: அப்படின்னா நாம கவலைப்படத் தேவையில்லை.

**கே: இந்த மாதிரி எப்படி ஞானமடையறது?**

ப: மனதைப் பெருமாள்கிட்டே ஒப்படைச்சிடும்! அவரோட அவதாரம், அவரில்லாமே இருக்காது. அவரோடதை அவர் கிட்டே கொடுத்துட்டு, சுகமாயிரும் ஓய்!

**கே: அதை எப்படி செய்யறது?**

ப: நமக்கு மனசு இருக்குன்னு எப்படித் தெரியறது? அதோட செயல்களாலே. அதாவது நினைப்புகளாலே. எப்பெல்லாம் நினைப்பு வருதோ... அப்போல்லாம் நினைப்பு பெருமாளோடதுன்னு மறக்காம இரும்! பெருமாளை விட்டு நினைப்பு தனியா இருக்காது. இதுதான் மனசை ஒப்படைக்கறது ஓய். ஏதாவது இங்கே பெருமாளை விட்டு இருக்குமா?

எல்லாம் பெருமாள்தான். எல்லார் மூலமாவும் செயல் படறார். நாம ஏன் கவலைப்படணும் ஓய்?

(601) **ஜி.வி. சுப்பராமையா கேட்டார்.**

**கே: காலம்ன்னா என்ன?**

ப: ஒரு நிலைக்குள்ளே, நம்மளாலே அறியப்பட்டு, மாற்றங்களுக்கு ஆளாவதே காலம்.

இரண்டு நிகழ்ச்சிகளுக்கு, இடையிலே இருக்கற இடைவெளிதான் காலம்.

மனம் இல்லேன்னா நிலை ஏற்படாது. மனம் ஆத்மாவிலே இருந்து வர்றது.

தேசம் காலம் இரண்டும் மனசோட கற்பனை.

ஆனா நம்மளோட சொரூபம் மனம் கடந்தது. அதனாலே காலத்தைப் பற்றிய கேள்வியே.... நாம ஸ்வபாவத்திலே இருந்தா ஏற்படாது.

**கே: பகவான் சொல்றது. கேக்கறதுக்கு அவ்வளவு சந்தோசமாயிருக்கு. ஆனா அதோட பொருள் எங்களோட அறிவுக்கு அப்பாற்பட்டு இருக்கு. ஞானமடைய நினைக்கறதுக்கு கூட, ரொம்பத் தூரம் நானெல்லாம் போகணும்.**

அப்பொழுது இன்னொருத்தர்.

**கே: எங்களுக்கு புரியறது எல்லாம புத்தியிலதான். ஏதாவது பகவான் அப்பியாசம் சொன்னா... எங்களுக்கு ரொம்ப உதவியாயிருக்கும்.**

ப: உண்மையைத் தேடறவா, எதையாவது, அதைச் செய்... இதைச் செய்ன்னு சொல்றவன், உண்மையான குரு கிடையாது. அவாளே அதையும், இதையும் செஞ்சு, இளைச்சுப் போய்தான் வந்துருக்கா.

அவாளுக்குத் தேவையெல்லாம் அமைதியும், சுகமும்தான். அவாளே எல்லாம் ஓயணுங்கறா. அவாளைச் சும்மாயிருன்னு சொல்லி சுகப்படுத்தாமே... எதையாவது செய்யச் சொன்னா, அவன் குரு இல்லை. கொலைகாரனோ, பிரம்மனோ, யமனோதான் அவன் ரூபத்திலே வந்திருக்கான். அவன் சாதகாளை விடுவிக்க மாட்டான். மாட்டித்தான் விடுவான்.

**கே: நாங்க சும்மாயிருக்கணும்னு நினைச்சா, அதுவே பெரிய வேலையாயிடுது. சும்மாயிருக்க முடியலை.**

ப: உண்மைதான். குரங்கை நினைக்காமே மருந்தைக் குடின்னா... மருந்தைக் குடிக்க முடியுமா? அப்படித்தான் சும்மாயிருக்கறதும். சும்மாயிருக்கணும்ன்னு நினைச்சாலே போச்சு... நினைப்பு வந்துடும்.

**கே: அப்போ எப்படிதான் சும்மாயிருக்கறது?**

ப: சும்மாயிருந்து எதையோ அடையப் போறாம்னு நினைக்கறேள்.

என்ன இருக்கு இங்கே அடையறதுக்கு!

அடையணும்னா ஏற்கனவே அடையலேன்னுதான் அர்த்தம்.

நாம இருக்கறதேதான் 'அது'

ஒருத்தர்:

**கே: அப்போ ஏன் எங்களுக்குத் தெரிய மாட்டேங்குது?**

**அப்பொழுது அண்ணாமலைசுவாமி.**

**கே: நான் ஆத்மாங்கறதை மறக்காம இருக்க எப்பவும் முயற்சி பண்றேன்.**

ப: ஏன் ஒருத்தன் நான் ஆத்மான்னு நினைக்கணும்?

அவன் அதுவேதான்.

நான் மனுஷன்... நான் மனுஷன்னு ஒருத்தன் நினைக்கறானா?

**கே: நான் மனுஷன்கறது நல்லா ஆழமாயிருக்கு! அதனால தேவையில்லை!**

ப: ஒருத்தன் ஏன் தன்னை 'நான் மனுஷன்னு' நினைக்கணும். அதுக்கு மாறான 'நான் மிருகம்' ன்னு நினைப்பு வந்தாத்தான்... 'இல்லே... நான் மனுஷன்'ன்னு நினைக்கணும்.

அதே மாதிரி 'நான் அது' ங்கற நினைப்பு... 'நான் மனுஷன்'கற நினைப்பு இருக்கற வரைக்கும்தான்.

**கே: நான் மனுஷன்கற நினைப்பு திடமாயிருக்கு. போக்க முடியலை.**

ப: நீ இருக்கறதா இரு! ஏன் மனுஷன்னு நினைக்கறே!

**கே: நான் மனுஷன்கற நினைப்பு இயல்பா இருக்கு.**

ப: இல்லே. நான் இருக்கேங்கறதுதான் ஸ்வபாவமா இருக்கு.

அதை ஏன் மனுஷன்ல சேக்கறே!

**கே: நான் மனுஷன்கறது தெளிவாயிருக்கு. 'நான் அது'ங்கறது புத்திபூர்வமா புரிஞ்சுக்கறதாத்தான் இருக்கு. அனுபவமா இல்லை.**

ப: நீ இதுவும் இல்லை... அதுவும் இல்லை...
நான் இருக்கேன்கறதுதான் உண்மை.
நான் நானா இருக்கேன். (I Am that I Am)-ன்னுதான் பைபிள்லே சொல்றது. இருக்கறதுதான் ஸ்வபாவம். அதை நான் இந்த உடம்புதான்கற நினைப்புதான் மறைக்கறது.

**கே: வோட்டு எடுத்தா என் கட்சிக்குதான் மெஜாரிட்டி கிடைக்கும்.**

ப: நானும் உன் கட்சிக்கே ஓட்டு போடறேன்.
நானும் நான் மனுஷன்னுதான் சொல்றேன்.
ஆனா நான் இந்த உடம்பிலே இல்லை. இந்த உடம்புதான் என் மேல இருக்கு. அதுதான் வித்தியாசம்.

**கே: மனுஷ உபாதியை போக்கணும்லையா.**

ப: தூங்கும்போது எப்படி இருக்கே? அப்போ மனுஷ உபாதி என்ன ஆச்சு?

**கே: அப்போ தூங்கும்போது இருக்கற மாதிரி இப்போ இருக்கணும்...**

ப: ஆமாம். அதுதான் ஜாக்ர சுஷுப்தி.



(604) **ஒரு பெண்மணி பகவான் முன்னாடி ஒரு பக்தி பாடல் பாடினார்.**

**த்வமேவ மாதா (நீயே அம்மா)**
**பிதா த்வமேவ (நீயே அப்பா)**
**த்வமேவ பந்து (நீயே சொந்தம்)**
**த்வமேவ சர்வம் (நீயே எல்லாம்)**

ப: ஆமா... ஆமா... எல்லாம் நீ... நான் மட்டும் நீ இல்லை. நானே நீ...ன்னு முடிச்சுட வேண்டியதுதானே.

*மிகப்பிரபலமான ஒரு மகாத்மா, திரு வெங்கட கிருஷ்ணய்யாங்கற வக்கில் அடியார் சென்று தரிசிச்சப்ப, அவரை ஓம் நமஹன்னுதான் ஜபம் பண்ணனும்னு சொன்னார்.*

**சுத்த பிரணவம், கிருஹஸ்தர்கள் ஜபம் பண்ணக் கூடாதுன்னும், அதை சன்யாசிகள்தான் உச்சரிக்கணும்னும், மத்தவங்க ஓம் நமஹன்னுதான் சொல்லணும்ன்னு சொன்னதை பகவான் கிட்டே சொன்னார்.**

ப: ஏன் சன்யாசிகளுக்குதான் ஆத்மா இருக்காமா! மத்தவாளுக்கு இல்லையாமா? அவா மட்டும்தான் ஆத்மாவை உணரணுமாமா...! மத்தவா வணங்கணுமாமா...!

**(607) வேடி பேட்மேனிடம் பகவான் சொன்னது.**

ப: அசையாத மாறாத நிலை ஒண்ணு இருக்கு. கனவு, நனவு, தூக்கம் இது மூணும் அதுமேலே ஏற்படற மாற்றம். அசைவு. சினிமா ஸ்கிரீன்லே படம் ஓடற மாதிரி.

எல்லோரும் படத்தையேதான் பாக்கறோம். ஸ்கிரீனை விட்டுடறோம். ஞானிக்கு ஸ்கிரீன்தான் கவனம், படம்மில்லை. படம் ஸ்கிரீன்ல ஓடினாலும் ஸ்கிரீனை பாதிக்காது. ஸ்கிரீன் ஓடாது.

டிரெயின்லே போகும்போது, அவனே போறதா நினைச்சுக்கறான். ஆனா அவன் நல்லா இருக்கைலே (seat) உக்காந்துதான் இருக்கான். ரயில்தான் நகர்றது. ஆனா அதோட நகர்வை அவன் மேல ஏத்திக்கறான். ஏன்னா அவன் உடம்புன்னு நினைக்கறான். இந்த ஸ்டேசன் தாண்டிட்டேன்... அந்த ஸ்டேசன் தாண்டிட்டேன்... கிட்டே வந்துட்டேன்....கறான். கொஞ்சம்

யோசிச்சுப் பாத்தாலே, அவன் அங்கேயேதான் இருக்கைலே உக்காந்திருக்கான்காது தெரியும். ஸ்டேசன்தான் அவனைக் கடந்து போறதுன்னு புரியும். ஆனாலும் அவனே எல்லாத் தூரத்தையும் நடந்தே வந்த மாதிரி சொல்றான்.

ஞானி... உண்மையான நிலை இருக்கறது மாத்ரந்தான். அது மாறாம அப்படியே இருக்கு. அதிலே எல்லா வேலையும் அவனைச் சுத்தி தானா நடக்கறதுன்னு நல்லாத் தெரிஞ்சு இருக்கான்.

அவன் ஸ்வபாவம் மாறாது. அவன் நிலை எதனாலும் பாதிக்கப்படாது. எல்லாத்தையும் உதாசீன பாவத்தோடே . பாத்துட்டு அவன் சுகமாயிருப்பான்.

அவனுடைய நிலையே உண்மை நிலை. உண்மையான நிலை எப்பவும் ஆதியிலே இருக்கற ஸ்வபாவ ஸ்திதி. ஒருத்தன் அந்த நிலையை அடைஞ்சு அதிலேயே நிலைபெற்றுட்டா... அப்புறம் எப்பவும் மாறாது. அதனாலே பாதாள லிங்கத்திலே செல்லரிச்சு இருந்தப்போ இருந்த நிலை, குறுக்கீடு இல்லாமே, மாறாம தொடர்ந்து இருந்துகொண்டு இருக்கு. என்ன... அப்போ உடம்பு அசையாம கிடந்தது! இப்போ அசையறது! அவ்வளவுதான்.

உலகத்திலே நடந்துக்கற விதத்திலே, ஞானிக்கும், அஞ்ஞானிக்கும் ஒண்ணும் வித்தியாசம் இல்லே. உலகத்தைப் பாக்கற பார்வையிலேதான் வித்தியாசம். அஞ்ஞானி தன்னை ஒரு போலி நானோட சம்பந்தப்படுத்திக்கொண்டு ஆத்மாவோட காரியங்களை அவனே செஞ்சதா நினைப்பான். ஞானிக்கு அகந்தையில்லாததாலே எதனோடயும் சம்பந்தப் படுத்திக்க முடியாது. அவனோட நிலையை இந்த உதாரணங்கள் கொஞ்சம் விளக்கும்.

- தூங்கும் குழந்தை சாப்பிட்டது
- வண்டி துயில்வான் கதை.
- மனசை எங்கேயோ வச்சு கதை கேட்டவன் கதை
- இரண்டு நண்பர்கள்லே ஒருத்தன் கனவு கண்டது

**கே: தூக்கத்துலே ஒண்ணும் இல்லை. மந்தமா இருக்கு. ஆனா விழிப்புல அழகான விஷயங்களும் ஆர்வமான சங்கதிகளும் இருக்கு.**

ப: நீங்க எதை அழகாவும், ஆர்வமாவும் இருக்குன்னு சொல்றேளோ, அது ஞானிக்கு மந்தமான தூக்க நிலை.

**கே: விழிப்பு நிலையை விட தூக்கத்துல சுத்த அறிவுக்கு ரொம்ப நெருக்கமா இருக்கோமா?**

ப: தூக்கம், கனவு, நனவு இந்த மூணும் வெறும் தோற்றம். எப்பவும் சாமான்யமா இருக்கற அறிவிலே ஏற்படறது. யாரும் ஆத்மாவை விட்டு இருக்க முடியுமா?

அதனாலே இந்தக் கேள்வி அப்போதான் செல்லுபடி ஆகும்.

**கே: இல்லை, தூங்கும்போது சுத்த அறிவுக்கு நெருக்கமா இருக்கறதாகவும், விழிப்புல விலகிடறோம்னும் சொன்னாங்க. அதனால கேட்டேன்.**

ப: இந்த கேள்வியை வேற மாதிரி கேக்கலாம். விழிப்பு நிலையைவிட தூக்கத்திலேதான் நான்... எனக்கு ரொம்ப நெருக்கமா இருக்கேனா?

ஆத்மா... சுத்த அறிவு. யாரும் ஆத்மாவுக்கு வெளியே இருக்க முடியாது. இரண்டு இருந்தாத்தான் முடியும். சுத்த அறிவிலே துவிதம் இல்லை. ஒரே ஆள்தான் தூங்கறான், கனவு காண்றான், முழிச்சுக்கறான்.

**கே: விழிப்பு அழகாவும், ஆர்வமாவும் இருக்கு. அப்படி தூங்கும்போது இல்லை.**

ப: பேசறதுக்கு முன்னாடி இதை முதல்லே தெளிவு படுத்திப்போம். தூங்கும்போது நீங்க இருக்கேளா?

**கே: ஆமா... இருக்கேன்.**

ப: அதே ஆள்தானே இப்போ முழிச்சுருக்கறதும்.

**கே: ஆமா...**

**ப:** அப்போ ஒரு தொடர்ச்சி இருக்கில்லையா... தூக்கத்துக்கும் விழிப்புக்கும்.

அது என்ன தொடர்ச்சி? அதுதான் சுத்த அறிவு.

இரண்டு நிலைக்கும் வித்தியாசம் உண்டு. என்ன வித்தியாசம்? சம்பவங்கள். அதாவது உடம்பு, உலகம், விஷயங்கள் விழிப்புலே தோற்றமாறது. தூக்கத்துலே மறைஞ்சிடறது.

**கே: ஆமா எனக்கு தூக்கத்துல தெரியலையே!**

**ப:** உண்மை. அங்கே உடம்பும் இல்லே. உலகமும் இல்லே. ஆனா தூக்கத்திலே எனக்கு எதுவும் தெரியலேன்னு சொல்றதுக்கு நீ அப்போ இருந்திருக்கணும். இப்போ யாரு தெரியலேன்னு சொல்றது? முழிச்சு இருக்கறவன்தான் சொல்றான். தூங்கும்போது இருக்கறவன் சொல்லலே. அதாவது இப்போ நான் இந்த உடம்புதான்னு நினைக்கறவன்தான், எனக்கு தூங்கும்போது ஒண்ணும் தெரியலேங்கறான்.

நீங்க உங்களை உடம்போட சம்பந்தப் படுத்திக்கறதாலே... விழிப்பிலே உங்களைச் சுத்தி உலகத்தைப் பாக்கறே. விழிப்பு நிலை அழகாவும், ஆர்வமாவும் இருக்குங்கறேள்.... தூங்கும்போது நீங்க தனித்தன்மையோட இல்லே. அதனாலே இந்த உடல் உலகங்கள் இல்லை. அதை மந்தம்ங்கறேள். உண்மை என்ன? மூணு நிலையிலேயும் நீங்க இருக்கறது, தொடர்ச்சியா இருக்கு. ஆனா தனித்துவமும் உடல் உலகங்களும் தொடர்ச்சியா இல்லே.

**கே: ஆமாம்.**

**ப:** எப்பவும் தொடர்ந்து மாறாம இருக்கறதுதான் ஸத்யம். மாறுவது பொய்.

**கே: ஆமாம்.**

**ப:** அதனாலே நீங்க இருக்கேள்ங்கறது ஸத்யம். உடம்பும், உலகமும் பொய். உடலுலகங்கள் நீங்க இருக்கேள்ங்கறது

மேலே ஏற்படற தோற்றம். நீங்க இருக்கேள்ங்கறதுதான் மாறாத நித்யமான ஸ்கிரீன்.

**கே: ஒரு பேச்சுக்கு, தூக்கத்துல நாம விழிப்பு நிலையைவிட சுத்த அறிவுக்கு அருகாமைலே இருக்கோமா?**

**ப:** ஆமா. ஆனா இந்த விதமா, தூக்கத்திலே இருந்து விழிக்கும்போது நான்கற எண்ணம் கிளம்பறது. மனம் வெளிப்படறது. நினைவுகள் வர்றது. உடல் இயக்கங்கள் ஏற்படறது. இதையெல்லாம் ஒண்ணு கூட்டித்தான்... 'நான் முழிச்சுட்டேன்'னு சொல்றோம், இந்தக் கிரமமா நடக்கறது, தூக்கத்திலே இல்லே. அதனாலே அப்படியும் சொல்லலாம்.

அதுக்காக எப்பவும் தூங்கிக்கொண்டே இருக்க ஆசைப்படலாமா? முதல்லே அது முடியாது. ஏன்னா அடுத்த நிலை வந்துடும். இரண்டாவது ஒரு ஞானியின் நிலை, அந்த நிலை இல்லை. ஏன்னா அவனோட சுகநிலை மாறாத நிலை. மேலும் தூக்கத்தை ஜனங்க அறிவோட இருக்கறதுன்னு சொல்றது இல்லை. ஆனா ஞானி எப்பவும் அறிவு மாத்ரமாயிருக்கான். அதனாலே தூக்க நிலை ஞானியின் நிலையில் இருந்து வேறானது.

மேலும் தூக்க நிலையிலே நினைவுகள் இல்லை. அதோட வாசனைகள் செயல்பாடும் இல்லை. அதை நம்மளோட முயற்சியாலே மாத்த முடியாது. ஏன்னா அங்கே முயற்சி பண்ண முடியாது. அது சுத்த அறிவுக்கு அருகிலே இருந்தாலும், தன்னை உணர்றதுக்கான முயற்சிகளுக்கு தகுதி இல்லாத நிலையே!

தன்னை உணர்றதுக்கான வாய்ப்பு விழிப்பு நிலையிலேயே உண்டு. அதுக்கான முயற்சியும் அப்போதான் செய்ய முடியும். விழிப்பிலே, நமக்கு வர்ற நினைவுகள்தான்... தூக்கத்திலே இருக்கற சும்மா இருக்கும் சுகத்தை அனுபவிக்க தடையா இருக்கு. Be Still and Know that I Am God... சும்மாயிருந்து நான்கறதே கடவுள் என்பதை உணர். அப்போ சாதகனோட நோக்கம் சும்மாயிருக்கறதுதான்.

ஒரு சின்ன முயற்சி பண்ணி, ஒரே ஒரு நினைப்பை போக்கி, ஒரு நிமிஷம் சும்மாயிருந்தாக் கூட ஞானநிலையை நோக்கி போற பயணத்திலே ரொம்பத் தூரம் கடக்கற மாதிரி. முயற்சி வேணும். அது விழிப்பு நிலையிலேயே முடியும்.

இங்கேயே இப்போவே முயற்சி இருக்கு. இங்கேயே இப்போவே அறிவு இருக்கு. இங்கேயே இப்போவே உனக்கு நினைப்பு இல்லே... இதுதான் ஞானநிலை; சும்மாயிருக்கறது; தூங்காம தூங்கறது; ஜாக்ரசுஷுப்தி. இதுதான் ஞானியின் நிலை.

அது தூக்கமும் இல்லை. விழிப்பும் இல்லை. அது இரண்டுக்கும் நடுவிலே. விழிப்போட அறிவும் இருக்கு... தூக்கத்தோட சும்மாயிருக்கறதும் இருக்கு. இதுக்கு பெயர்தான் தூங்காம தூங்கறது.

இதுவே முழுமையான அறிவும் முழுமையான சும்மா அமைதியா இருக்கறதும் சேர்ந்த நிலை. இது தூக்கத்துக்கும், விழிப்புக்கும் இடையிலே இருக்கும். இரண்டு நினைப்புக்கு இடையிலே இருக்கும். இந்த நிலையே நினைப்புக்கு மூலம்.

இதிலே இருந்துதான் நினைப்பு வர்றது. நினைப்புதான் இந்த சும்மாயிருக்கற நிலையை கெடுத்து, விழிப்போட அலைக்கழிப்பை கொடுக்கறது. நினைப்போட மூலத்துக்குப் போ! அங்கே தூக்கத்தோட சும்மாயிருக்கற நிலை இருக்கு. தினம் தூக்கத்திலே அனுபவிக்கற சுகத்தை இப்போ முழு அறிவோட அனுபவிப்போம்.

ஏற்கனவே சொன்ன தூங்காம தூங்கற நிலை இது. இது மந்த நிலை இல்லை. ஆனந்த நிலை. இது மறையாது. எப்பவும் இருக்கும். இதிலே இருந்துதான் நினைப்புதானே வர்றது. நம்மளோட அனுபவம்ன்னு சொல்றது எல்லாம் நம்மளோட நினைப்பு தவிர வேற இல்லை. சுக துக்கம் வெறும் நினைப்பே!

நீங்க நினைப்புகள்லே இருந்து விடுபட்டு ஆனா அறிவோட இருந்தா... நீங்கதான் அந்தப் பூரணப் பொருள்.

**கே: நான் நாளைக்கு ஊருக்கு போறேன்.**

ப: நீங்க உண்மையிலேயே ஒரு இடத்தைவிட்டு இன்னொரு இடத்துக்குப் போறது இல்லே. நீங்க எப்பவும் நிலையா இருக்கேள். காட்சிகள் உங்களைக் கடக்கும். சாதாரணமா யோசிச்சாகூட, நீங்க அறையிலே (cabin) இருப்பேள். கப்பல் நகரும். நீங்க நகர மாட்டேள்.

சினிமாவிலே ஒருத்தன் ரொம்ப தூரத்திலே இருந்து பல மைல்கள் ஓடி நம்மளிடம் வர்றான். ஆனா ஸ்கிரீன் ஓடலே. படம்தான் ஓடறது.

**கே: புரியுது. ஆனா நான் ஆத்மஞானமடைஞ்சாத்தான் நல்லா தெளிவாகும்.**

ப: ஆத்ம ஞானம் எப்பவுமே அடையப்பட்டேதான் இருக்கு. ஞானம் இனிமே எப்பவோ வரப்போறதுன்னா... அது போயிடும். அப்போ அது நித்யம் இல்லை. அநித்தியம்.

அப்பவும், முடிவிலே துக்கத்தையே கொடுக்கும். அது முக்தியாகாது.

நீங்க எப்பவாவது அதை உணரலேன்னாதான் இனிமே உணரப் போறோம்னு சொல்லலாம். நீங்க எப்பவும் அதை உணர்ந்துகொண்டேதான் இருக்கேள். அதைப் பின்னாடி உணர்வேன்னு சொன்னா... இப்போ அதை உணரலேன்னு ஆயிடும். இப்போ உணராம இருந்தா... மீண்டும் எதிர்காலங்கள்லே உணராம போயிடலாம். அப்படிப்பட்ட ஞானத்தை நித்தியம்ன்னு சொல்லக்கூடாது. அது எப்பவும் மாறாத நம்மளோட நிலை.

**கே: இன்னும் கொஞ்ச காலத்திலே புரிஞ்சுக்குவேன்.**

ப: நீங்க ஏற்கனவே அதாத்தான் இருக்கேள். காலமோ, இடமோ அதை ஒண்ணும் செய்யாது. அது நீயே. நீங்க பாக்கறதெல்லாம் உங்களிடமே இருக்கறதுதான். இதுக்கு ஒரு கதை இருக்கு.

கழுத்திலே இருந்த நகையைத் தொலைச்சுட்டோம்னு தப்பா நினைச்சு தேடினவளோட கதையைச் சொன்னார்.

அதே மாதிரிதான் நம்மளோ ஆத்மாவை இனிவர்ற காலத்திலே உணர்வோம்னு நினைச்சுக்கறோம். ஆனா அப்படி நினைக்கறப்போலே நாம ஆத்மாவாவேதான் இருக்கோம். வேற எதாவும் இருக்க முடியாது.

**கே: நான் ஏதோ வேற உலகத்துல இருக்கற மாதிரி இருக்கு. பூமியிலே இல்லாத மாதிரி இருக்கு.**

ப: இதத்தான் தேவலோக சாம்ராஜ்யம்ன்னு பைபிள்லே சொல்றா. அது உனக்குள்ளேயே இருக்கு. இந்த தேவலோக சாம்ராஜ்யத்தைத்தான் ஞானி பாக்கறான். மத்தவா அதை உலகமா பாக்கறா. பார்வையிலேதான் வித்தியாசம்.

**கே: எப்படி உலகத்தையும், உலகத்துல இருக்கறவங்களையும், பொய்ன்னு ஒதுக்க முடியும். காலையில நான் சங்கீதம் கேட்டேன். அது அவ்வளவு அருமையா இருந்தது. வாக்னரோட சங்கீதம் அது. அதை என்னோடதுன்னு சொல்ல முடியாதில்லையா.**

ப: வாக்னரோ, அவரோட இசையோ, நீங்க இல்லாமே இருக்கா? இது வாக்னரோட இசைன்னு நீங்க இருந்துதானே சொல்லணும். அது தெரியறதா?

நீங்க இருக்கேள்ங்றது இல்லாமே.... அது எப்படி இருக்கும். தூங்கும்போது வாக்னரோட இசையிருக்கா? ஆனா நீங்கே இருக்கேளே.

அதனாலே வாக்னரும், அவரோட இசையும், உங்களோட நினைப்புகளே. அது உங்கள்லேதான் இருக்கு. உங்களுக்கு வெளியே இல்லை.



(610) **தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.**

**கே: ஜீவனும், பிரம்மமும் ஒண்ணா? இந்த படைப்புக்கு காரணம் என்ன? பிரம்ம ஞானிக்கு வலிக்குமா? மறுபிறப்பு**

**இருக்குமா? அவனோட வாழ்நாளை நீட்டிக்கவோ, குறைச்சுக்கவோ முடியுமா?**

**ப:** படைப்போட நோக்கம்.... ஜீவனோட அறியாமையைப் போக்கறதுதான். இந்தக் கேள்வி உங்களை உடம்போட சம்பந்தப்படுத்திக்கறதாலேயே ஏற்படறது. அதனாலேயே உடலுகங்களைப் பாக்கறேள். நீங்க உங்களை உடம்புன்னு நினைச்சுக்கறேள். உங்களோட மனசும், புத்தியும்தான், இந்தத் தப்பான பார்வைக்கு காரணம். நீங்க தூங்கும்போது இருக்கேளா?

**கே: ஆமாம்.**

**ப:** ஆதே ஆசாமிதானே இப்போ விழிச்சுக் கேள்வி கேக்கறது. அப்படித்தானா இல்லையா?

**கே: ஆமாம்.**

**ப:** அப்போ தூங்கும்போது இந்தக் கேள்வி ஏன் இல்லே? இருந்ததா?

**கே: இல்லை.**

**ப:** ஏன் இல்லே?

ஏன்னா, நீங்க உங்களோட உடம்பைப் பாக்கலே. அதனாலே நினைப்பு இல்லே. நீங்க உங்களை அப்போ சம்பந்தப் படுத்திக்கலே. அதனாலே கேள்வி எழலே. இப்போ உங்களை உடம்போட சம்பந்தப் படுத்தியிருக்கேள். அதனாலே கேள்வி வர்றது. அப்படித்தானே?

**கே: ஆமாம்.**

**ப:** இப்போ பாருங்கோ, உங்களோட ஸ்வபாவம் எதுன்னு? நினைப்பு இல்லாம இருக்கறதா? இல்லே, நினைப்புகளோட இருக்கறதா? இருப்பு தொடர்ச்சியா இருக்கு. நினைப்பு தொடர்ச்சியா இல்லை. எது நித்தியம்?

**கே: இருப்பு.**

ப: அதுதான். அதைக் கண்டுபிடிங்கோ! அதுதான் உங்களோட உண்மையான ஸ்வபாவம். உங்களுடைய ஸ்வபாவம் நினைப்பில்லாத, சாமான்யமான இருப்புதான்.

நீங்க உங்களை உடம்போட சம்பந்தப்படுத்திக்கறதாலே படைப்போட நோக்கத்தைப் பத்தி தெரிஞ்சுக்கணும்னு ஆசைப்படறேள். உலகமும் அதிலே இருக்கற விஷயங்களும், ஏன்... உங்களோட உடம்பு உட்பட எல்லாம் விழிப்பிலே தோன்றி தூக்கத்திலே மறையறது. ஆனா நீங்க இடைவிடாமே எல்லா நிலைமையிலும் இருக்கேள். எது மூணு நிலையிலும், இடைவிடாமே இருக்குன்னு தெரிஞ்சுக்கோங்கோ. கண்டுபிடிங்கோ! அதுதான் உங்களுடைய ஆத்மா.

**கே: அதை கண்டுபிடிச்சுட்டா அப்புறம் என்ன?**

ப: முதல்லே கண்டுபிடிங்கோ. அப்புறம் பாப்போம். யூகங்களுக்கு எல்லாம் பதில் சொல்ல முடியாது.

**கே: அப்போ பிரம்மத்தோட ஒண்ணாயிருப்பனா?**

ப: பிரம்மத்தைத் தொந்தரவு பண்ணாதேள். அதை விட்டுடுங்கோ. நீங்க யாருன்னு பாருங்கோ. பிரம்மம் பிரம்மத்தை பாத்துக்கும். நீங்க உங்களை உடம்போட சம்பந்தப் படுத்திக்கலேன்னா படைப்பு, பிறப்பு, இறப்பு இப்போ எந்தக் கேள்வியும் வராது. தூக்கத்திலே வரலே. உண்மை நிலையிலேயும் வராது.

அப்போ படைப்போட நோக்கம், தெளிவா நீங்க எங்கிருந்து வந்தேளோ, அங்கே போய் சேர்றதுக்குத்தான். தூக்கத்திலே படைப்பைப் பத்திய கேள்வி இல்லே.

ஏன்னா படைப்பு இல்லே. இங்கே ஏன் கேக்கறேள்ன்னா... நினைப்பு வந்துடுத்து... படைப்பு வந்துடுத்து... அப்போ படைப்பு உங்களோட நினைப்பு.

உங்களை நீங்க பாத்துக்கோங்கோ! பிரம்மஞானி அவனைப் பாத்துப்பான். உங்களோடாட உண்மையான ஸ்வபாவம் தெரிஞ்சா... பிரம்ம ஞானம்ன்னா என்னன்னு தெரியும்.

அதை இப்போ விளக்கறதிலே ப்ரயோஜனமில்லே. நீங்க உங்களை மாதிரியே ஞானியையும், உடம்போடயே பாப்பேள். அவனுக்கும் வலிக்கும்ன்னு நினைப்பேள். அவன் மறுபடியும் பிறப்பானான்னு கேப்பேள்.

**கே: ஆனா, உண்மையிலே ஞானி தானான்னு நான் தெரிஞ்சுக்கணும்ல.... அப்பத்தான், அவரை முன்னுதாரணமா எடுத்துக்கலாம்.**

ப: ஆமாம். அவன் உள்ளதைச் சொல்வான். முன்னுதாரணமா உத்வேகம் கொடுப்பான். அவன் சொல்றபடி செய்ங்கோ! நீங்க பாடம் படிக்க வந்துருக்கேள். பரீட்சை பண்ண வரலே.

ஞான லட்சணங்கள்ன்னு சாஸ்திரங்கள் சொல்றது.... சாதகனுக்கு ஒரு ஆர்வத்துக்காகத்தான். அதனாலே அவனுக்கு துன்பத்தை ஒழிச்சு சுகமா இருக்கறதுக்கு பிரியம் வரும். உபதேசங்கள், மார்க்கங்கள் அதுக்குத்தான். அதை கடைப் பிடிச்சா ஞானம் ஏற்படும். அந்த லட்சணங்கள் ஏற்படும். அது ஒருத்தரைப் பரீட்சை பண்றதுக்கு இல்லை.

(611) *தரிசிக்க வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: ஆத்மாங்கறது நமக்குள்ள இருக்கற ஒளின்னு நான் நினைக்கறேன். உடம்பு இறந்த பிறகு, அந்த ஒளி பிரம்மத்தில் கலந்துடும்னா... எப்படி அடுத்த உடம்புக்கு போகுது? தூங்கும்போது என்ன ஆகுது?**

ப: யாருக்குள்ளே இருக்கு?
யார் சாகறது?

**கே: நான் வேற மாதிரி என் கேள்வியை கேக்கறேன்.**

ப: கேள்வி தேவையில்லை. பதிலை யோசிங்கோ! அப்புறம் பாருங்கோ!

**கே: எப்படி.**

ப: உடம்பான்னு உங்களை நினைக்கறதனாலேதான் ஆத்மா உள்ளே இருக்குன்னு சொல்றேள். அதாவது உடம்புக்குள்ளே ஒளியிருக்கறதுன்னு சொல்றேள். கொஞ்சம் யோசிங்கோ! அப்புறம் பதில்சொல்லுங்கோ!

ஓய் உடம்பு கேள்வி கேக்குமா? அது ஜடம். நான்னு சொல்லாது.

வேற எதுவோதான் நான்னு சொல்றது. அது எது ஓய்?

அது ஆத்மாவா? ஆத்மா சுத்தமானது. அது வேறே எதையும் பாக்காததாலே நான்னு சொல்லாது.

அப்போ இந்த நான்னு சொல்றது, சுத்த சித்துக்கும், இந்த ஜடத்துக்கும் ஒரு முடிச்சுப் போடறது. அதுதான் அகந்தை. போலி நான்.

இப்போ நீங்க யார்? எது பிறந்தது? ஆத்மா எப்பவும் இருக்கு. அது பிறக்காது. உடம்பு தோன்றறது. மறையறது. உங்களுக்கு உடம்போட இருக்கற சம்பந்தத்தாலேயே உங்களை பிறப்பு இறப்பு பத்தி எல்லாம் பேச வைக்கறது.

உண்மையான நான் எப்போவாவது பிறக்குமா? யாருக்கு இந்த அடுத்த உடம்புக்குப் போற வேலை?

**கே: நாங்க இங்கே எங்களோட சந்தேகங்களைப் போக்கிக்கறதான் வந்திருக்கோம்.**

ப: நிச்சயமா.

**கே: எங்க சந்தேகம்... நாங்க கேள்வி கேட்டாத்தான் போகும்.**

ப: ஆமாம். யாரும் இங்கே நீங்க கேள்வி கேக்கறதைத் தடுக்கலியே!

**கே: 'பரிபிரசன்னேய சேவியா (மறுபடியும் மறுபடியும் கேள்வி கேட்பதாலும், சேவையாலும்)-ன்னுதான் சொல்லி இருக்காங்க. அதனால நாங்க கேட்டுக்கிட்டேதான் இருப்போம். நீங்க கருணையோட எங்கே சந்தேகங்களை போக்கணும்.**

ப: நீங்க சொன்ன சுலோகத்தை முடிங்கோ. உபதேக்ஷ்யந்தி தத்துவம் (அவா உண்மையை உபதேசிப்பா).

**கே: ஆனா எங்கே சந்தேகம் போகணும்.**

ப: அர்ஜுனனுக்கும் அப்படித்தான்.

கடைசியிலே என்ன சொன்னான் 'நஷ்டோ மோக: ஸ்மிர்திர் லப்த: (இழந்தது அஞ்ஞானத்தை மறுபடியும் கிடைத்தது ஸ்மரணையை (உணர்வை)

**கே: அது கடைசியில! ஆனா முதல்ல நிறைய கேள்வி கேட்டான்ல!**

ப: முதல்லேயே உண்மையைச் சொல்லியாச்சு. முதல் ஸ்லோகமே 'பிறப்பு இல்லை இறப்பு இல்லை எதுவும் நடக்கலே'...ங்கறதுதான்.

**கே: ஆனா கிருஷ்ணர் இதையும் சொல்றாரே, 'எனக்கும் உனக்கும் நிறைய பிறப்புகள் உண்டு. அதெல்லாம் எனக்கு தெரியும் உனக்கு ஞாபகம் இருக்காது'.**

ப: அது எப்படின்னா கிருஷ்ணர், 'இதுக்கு முன்னாடி இந்த உண்மையை நான் ஆதித்யனுக்கு சொன்னேன்'னு சொன்னப்போ, அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு பதில்தான் நீங்க சொல்றது.

அர்ஜுனனுக்கு முதல்லேயே உண்மையைச் சொல்லியாச்சு. அவனுக்குப் புரியலே. ஞானியோட நிலையைச் சொல்லி அதை அடையறதுக்கான வழிகளைச் சொல்லும்போது, அப்போ யதார்த்தமா கிருஷ்ணர், 'நான் இந்த உண்மையை ஏற்கனவே ஆதித்தனுக்கு சொன்னேன்னு சொல்றார். அர்ஜுனன் அதுவரைக்கும் கிருஷ்ணரை உடம்புன்னே நினைக்கறான். அதனாலேதான் நீ இப்போ கொஞ்ச வருசத்துக்கு முன்னாடிதானே தேவகிக்கு மகனா பிறந்தே... ஆதித்தன் முதல்முதலா படைச்சப்போ பிறந்தவன், எப்படி நீ அவனுக்கு இந்த உண்மையைச் சொல்லியிருக்க முடியும்னு கேக்கறான்.

அதுக்கு கிருஷ்ணர் சொல்ற பதில்தான், 'நிறைய பிறப்புகள் நமக்கு உண்டு. எனக்கு அதெல்லாம் தெரியும். உனக்குத் தெரியாது'.

**கே: எங்களுக்கும் உண்மை தெரியணும்.**

ப: உங்களுக்கு உண்மையைச் சொல்லியாச்சு. என்ன செய்யணும்ன்னு சொல்லியாச்சு. நீங்க யார்ன்னு பாருங்கோ! அதுதான் மொத்த உபதேசமும்... முடிவான உண்மையும்.

(612) தரிசிக்க வந்த திருமதி. ஹிக் கேட்டார்.

**கே: குரு சிஷ்யனை கண்ணால பாக்கறதுனாலேயே ஞானமடையறானா? இல்லை சிஷ்யன் குருவை பாக்கறதுனால ஞானமடையறானா? இதை விளக்கி சொல்லணும், இதை எப்படி புரிஞ்சுக்கறது?**

ப: யார் குரு? யார் சிஷ்யன்?

**கே: ஆத்மாதான்.**

ப: ஆத்மாதான் குருவும் சிஷ்யனும்ன்னா இந்தக் கேள்வி எல்லாம் வராது.

**கே: அதுதான் என் பிரச்சனையே. நான் ஆத்மாவை எனக்குள்ளதான் தேடணும், அப்போ எப்படி குருவும் சிஷ்யனும் பாத்துக்கறதுனாலையே ஆத்மஞானம்ன்னு சொல்றாங்க? இது பொருத்தமா இல்லையே!**

ப: அப்படி இல்லை. நீங்க தவறா புரிஞ்சு கொண்டிருக்கேள். சிஷ்யனுக்கு குருதான் ஆத்மான்னு தெரிஞ்சா, எல்லோரும் ஆத்மாதான்... பாக்கற எல்லாப் பொருளும் ஆத்மாதான்னு தெரிஞ்சுடும். அவன் சுகமாயிருப்பான். அவனுக்கு இந்தக் கேள்வி வராது.

எல்லாம் ஆத்மாதான்கற உண்மைய சிஷ்யன் நடைமுறைலே கொண்டு வர மாட்டான். ஏன்னா... அஞ்ஞானத்தாலே கொண்டு வரமுடியாது. அஞ்ஞானம் உண்மையிலேயே இல்லை.

அப்போ குருதான் சிஷ்யனை அஞ்ஞான உறக்கத்திலே இருந்து எழுப்பி விட வேண்டியதாயிருக்கு. அதனாலே இந்த வார்த்தைகள் எல்லாம் உண்மையைப் புரிய வைக்கறதுக்கு, உபயோகம் பண்ண வேண்டியிருக்கு.

நீங்க செய்ய வேண்டியதெல்லாம் ஒரே விஷயம்தான். உங்களைப் பாக்கணும். அது எங்கே இருந்தாலும் பண்ணலாம். உங்களை நீங்க உள்ளேதான் தேடணும். அந்தத் தேடுதல் எப்பவும் நடக்கணும். அது வந்துடுத்துன்னா... குருகூட ஸ்தூலமா இருக்க வேண்டியது இல்லை.

அந்த வாக்கியம் இருக்கற இடத்திலேயே உண்மையைக் கண்டுபிடிக்க முடியாதவர்களுக்கு சொன்னது.

**கே: உள்ளேயே உண்மைய பாக்க தெரிஞ்சா... ஏன் இவ்வளவு பிரையாசைப் பட்டு நாடுவிட்டு நாடு வந்து உண்மையை தெரிஞ்சுக்கணும்? நாங்க எந்த நேரமும், உண்மை எதுன்னுதான் சிந்திக்கறோம். இங்கே வந்தது எங்களுக்கு சரியாத்தான் படுது. இது அனாவசியமா?**

ப: நீங்க இங்கே வந்ததாலே நல்லதுதான் நடந்திருக்கு.

'ஈஸ்வரோ குருரத்மேதி'.

ஆத்மாவே கடவுள், குரு எல்லாம்.

ஒருத்தன் சுகத்தையே தேடறான். கடவுள்தான் தன்னை சுகமா வைக்க முடியும்ன்னு தெரிஞ்சுக்கறான். அவன் கடவுளையே பிரார்த்தனை பண்ணி கும்பிடறான். கடவுள் அவனோட பிரார்த்தனையைக் கேட்டு மனுஷ ரூபத்திலே குருவா வர்றார். வந்து அவன் பாஷையிலேயே பேசி உண்மையைப் புரியவைக்கறார்.

குரு... இறைவனே மனுஷனா வர்றது. குரு தன்னோட அனுபவத்தை சொல்லி, சிஷ்யனையும் அனுபவத்துக்கு கொண்டு வர்றார். அவரோட அனுபவம் ஆத்மாவாயிருக்கறதுதான்.

ஆத்மா உள்ளே இருக்கு. கடவுள், குரு, ஆத்மா இந்த மூணும் உண்மையை உணர படிகள். நீங்க படிச்சதிலே சந்தேகம் வந்து கேக்கறேள். தீந்துடுத்துன்னா சரிதான்.

**கே: ஆத்மாதான் குரு. அது உள்ளேயே இருக்கு. அதை உள்ளேதான் தேடணும். அதை நான் எங்கே இருக்கறனோ, அங்கேயே செய்யலாம்.**

**ப:** நீங்க புரிஞ்சுகொண்டு இருக்கறது தியரிதான் (பாடம்). இதைப் பயிற்சியிலே கொண்டு வரும்போதுதான் சந்தேகமும், சிரமும் வரும். நீங்க குருவோட ஸாந்நித்தியத்தை எங்கே இருக்கேளோ... அங்கேயே உணர்ந்தா உங்களோட சந்தேகம் எல்லாம் தீந்துடுத்துன்னு அர்த்தம். ஏன்னா குரு சந்தேகத்தைதான் போக்கறார்.

நீங்க இங்கே வந்ததோட நோக்கம், இனிமேல் உங்களுக்கு சந்தேகமே வராதுன்னா நிறைவேறிடுத்துன்னு அர்த்தம். நீங்க உங்களை ஆத்ம விசாரத்திலேயே முழுமையா ஈடுபடுத்திக்கலாம்.

**கே: இப்போ பேசறப்பவே தெரிஞ்சுக்கிட்டேன்.**

**ப:** நல்லது. உங்களோட முடிவுக்கு மறுப்பு இல்லே. உங்களோட சந்தேகத்துக்குத்தான்.

**கே: ஆத்மாவைப்பத்தி படிக்கும்போது புத்திபூர்வமாத்தான் இருக்கு. ஆனா அது தள்ளியிருக்கு. உங்கள நேர்ல பாத்தது, உண்மைக்கு பக்கத்துல கொண்டு வந்துடுச்சு. இதை நடைமுறைப்படுத்தற உறுதி வந்துடுச்சு. ஆனா தெரியலை. உங்கள மாதிரி நான் உண்மையை உணர்ந்து எங்கே ஊர்ல இருந்தா பைத்தியகாரங்களை பாதுகாக்கற இடத்துல அடைச்சிடுவாங்க.**

**ப:** நீங்க உங்களையே உள்ளே அடைச்சுக்கோங்கோ. இந்த உலகந்தான் பைத்தியம். அது உங்களைப் பைத்தியம்ன்னுதான் சொல்லும்.

எங்கே இருக்கு பைத்தியங்களை அடைக்கற இடம்? அந்த இடமும் நமக்குள்ளேதான் இருக்கு. நாம அந்த இடத்திலே இருக்க மாட்டோம்.

அந்த இடம்தான் நமக்குள்ளே இருக்கும்.

சந்தேகம், விபரீதம், பயம் எல்லாம் உண்மையை உணர்றவரைக்கும்தான் இருக்கும். அகந்தையிலே இருந்து இதெல்லாம் பிரிக்க முடியாது. இதெல்லாம் சேர்ந்ததுதான் அகந்தை.

**கே: அது எல்லாம் எப்படி மறையும்?**

**ப:** அதெல்லாம் அகந்தையோடது. அகந்தை மறைஞ்சா அதுவும் மறைஞ்சுடும்.

அகந்தைன்னா என்ன?

உடம்பு ஜடம், நான்னு சொல்லாது. ஆத்மா சுத்த அறிவு. அத்துவிதம். அதுவும் நான்னு சொல்லாது. தூக்கத்திலே யாரும் 'நான்' ன்னு சொல்றது இல்லை. அப்போ இந்த அகந்தை எது? இது ஜட உடலுக்கும் சித்துக்கும் இடையிலே ஏற்படறது. அதுக்கு தனியா இருப்பு இல்லை. தேடுனா மறைஞ்சுடும். பேய் மறையற மாதிரி. இருட்டிலே கருப்பா ஒரு உருவம் தெரியறது. அதை ஏதோ பேய் நிக்கறதுன்னு கற்பனை பண்றான். அது என்னன்னு பக்கத்திலே போய் பாத்தா, பேய் இல்லை. மரமோ... கட்டையோ... அவன் சரியாப் பாக்கலேன்னா பேய் அவனைப் பயமுறுத்தும். போய்ப் பாத்துட்டா... பேய் மறைஞ்சுடும். பேய் உண்மையிலேயே எப்பவும் இல்லை. அப்படித்தான் அகந்தை, சூட்சுமமான முடிச்சு ஜடத்துக்கும் சித்துக்கும். அது உண்மையில்லே. அது என்னன்னு தேடாத வரைக்கும் அது படுத்தியெடுக்கும். அது என்னதான்னு பாத்தா மறைஞ்சுடும். இருக்காது.

ஹிந்துக்கள் கல்யாணத்திலே, விருந்து அஞ்சாறு நாளைக்கு நடக்கும். அப்போ யாரோ ஒருத்தனை, பொண்ணுவீட்டுக்காரா, மாப்பிள்ளைத் தோழன்னு நினைச்சு விசேஷமா கவனிச்சா. பொண்ணுவீட்டுக்காரா விசேஷமா கவனிக்கறதைப் பாத்த மாப்பிள்ளை வீட்டுக்காரா, பொண்ணு வீட்டுப் பக்கத்திலே யாரோ முக்கியமான ஆள்ன்னு, அவாளும் விசேஷமா கவனிச்சா.

அவனும் ரொம்ப சங்கோஜமா எல்லாத்தையும் அனுபவிச்சான். அவனுக்கு விஷயம் தெரியும். இவா ஏன் இப்படிக் கவனிக்கறான்னு தெரியும். ஒரு தடவை மாப்பிள்ளை வீட்டுக்காரா, அவன் யார்ன்னு விசாரிச்சப்போ அவன் பிரச்சினையை புரிஞ்சுகொண்டு உடனே ஓடிட்டான். அப்படித்தான் அகந்தையும், அதை விசாரிச்சா ஓடிடும். அது வரைக்கும் படுத்தி எடுக்கும்.

அதை எப்படி விசாரிக்கறதுன்னு, ஏற்கனவே விசாரிச்சவா கிட்டே கேட்டு படிச்சுக்கணும். அதுக்குத்தான் குருவைத் தேடி போறோம்.

**கே: உள்ளேயே ஆத்மாவை தேட ஆரம்பிச்சா வெளியே குரு கூடவே இருக்கணுங்கறது தேவையா?**

ப: சந்தேகம் எல்லாம் தீர்ற வரைக்கும், குருகூடவேதான் இருக்கணும்.

**கே: பொய்யான அகந்தையை வளர்க்கறதுக்கு, ஏன் உலகத்துல இவ்வளவு கஷ்டப்படறோம்?**

ப: நான் யார்ன்னு கேள்வி வர்றதுக்குத்தான்.
அது வளர்றது அழியறதுக்குத்தான்.

**கே: ஆத்மிகத்துல ரொம்ப பக்குவமாக குழந்தை மாதிரி இருக்கணும்ன்னு சொல்றாங்களே, அது என்ன?**

ப: ஆமாம். குழந்தைக்கு அகந்தை வளர்ந்து இருக்காது.

**கே: நானும் அதைத்தான் சொல்றேன். அகந்தையை வளக்கறதுக்கு பதிலா... குழந்தையாவே இருந்துருக்கலாம்.**

ப: குழந்தையோட நிலையைத்தான் சொல்றாளே ஒழிய, குழந்தைய சொல்லலே. குழந்தைகிட்டே இருந்து யாரும் ஆத்ம ஞானம் படிக்க முடியாது. குருவோட நிலை குழந்தை நிலை மாதிரிதான். வித்தியாசம் இருக்கு. குழந்தை கிட்டே அகந்தை விதையா இருக்கு. ஞானிகிட்டே நாசமாயிடுத்து.

**கே: இப்போ புரியுது.**

ப: உண்மை மட்டும்தான் எப்பவும் இருக்கு. அதை புரிஞ்சாலே போதும். பழைய அஞ்ஞானம் தலை தூக்கக் கூடாது.

புரிஞ்ச இந்த உண்மை மலினமாகாம கவனிச்சுக்கணும்.

ஒரு சிஷ்யன், குருவுக்கு ரொம்ப நாள் சேவை பண்ணி ஆத்ம ஞானம் அடைஞ்சான். அவனோட ஆனந்தத்திலே குருவுக்கு எப்படி நன்றி செலுத்துறதுன்னு தெரியாம கண்ணீர் விட்டு அழுதான். குரல் தழுதழுத்துச் சொன்னான்.

"என்ன ஆச்சர்யம்! என்னோட ஆத்மாவை இவ்வளவு நாள் தெரியாமே இருந்தேனே! நான் ரொம்பக் கஷ்டப்பட்டுட்டேன்...! கருணையாலே என்னை வெளியே கொண்டு வந்து ஆத்மாவை உணரவச்சீங்க.

உங்களோட அருளுக்கு என்ன கைம்மாறு செய்யப் போறேன்! அதைச் செய்றதும் என்னோட சக்தியிலே இல்லே.

இதைக் கேட்ட குரு, கிட்டே வான்னு கூப்பிட்டு மறுபடியும் அஞ்ஞானம் ஏற்படாமே பாத்துக்கொண்டா, அதுவே நீ எனக்கு செய்யற உதவின்னார்.

***தரிசனம் பண்ண வந்த யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: நினைப்பு வெறும் ஜடமா?**

ப: நீர் என்ன சொல்ல வர்றீர்?
ஜடம்னா நீர் பாக்கற பொருள்கள் மாதிரியாவா?

**கே: ஆமாம் ஸ்தூலமா.**

ப: யார் இந்தக் கேள்வியை கேக்கறது? யார் நினைக்கறது?

**கே: 'சித்'தான் நினைக்கறது.**

ப: அப்போ 'சித்'தான் ஜடத்தை வெளிப்படுத்தறதா?

**கே: எனக்கு தெரியலை.**

ப: சரி சித்தையும் ஜடத்தையும் எப்படிப் பிரிப்பீர்?

**கே: சித் அறிவு. ஜடம் அறிவற்றது.**

ப: அறிவு எப்படி [illegible] அறிவற்றதை வெளிப்படுத்தும்.
ஒளி எப்படி [illegible] இருளை வெளிப்படுத்தும்.

(614) ***தரிசனம் பண்ணவந்த சில பெரிய மனிதர்கள் கேட்டது.***

ப: நடந்ததை நினைச்சுப் பாக்கறதாலேயோ, நடக்கப் போறதை யோசிக்கறதனாலேயோ, எந்தப் பிரயோஜனமும் இல்லை. நிகழ்தான் விஷயம். அதை என்னன்னு கவனமாயிருந்தா எல்லாம் சரியாயிருக்கும்.

**கே: ஆசைப்படறது தப்பா?**

ப: ஆசைப்பட்டது நடக்கறப்போ ஆனந்தமும், நடக்காதப்போ துக்கமுந்தான் தப்பு.

ஆசைப்பட்டது நடக்கறப்போ சந்தோஷப்படறது ரொம்ப ஏமாத்தும். இப்போ லாபமா தெரியறது நாளைக்கு நஷ்டமா தெரியும். அப்போ சந்தோஷம் துக்கமா மாறும். சுகதுக்க நினைவுகளுக்கு இடங்கொடுக்கக்கூடாது.

நாம ஏதாவது இங்கே அடையறதாலே வளர்றதும் இல்லே, இழக்கறதாலே தேயறதும் இல்லே. நாம எப்பவும் இருக்கற மாதிரியேதான் இருப்போம்.

**கே: நாங்க உலகத்துல இருக்கறவங்க. ஆசைப்படறதை தடுக்க முடியலை.**

ப: ஆசைப்படலாம். எந்த விளைவுகளுக்கும் தயாரா யிருக்கணும். முயற்சி பண்ணுங்கோ! ஆனா பலன்லே உங்களை இழந்துடாதேள்! சமசித்தத்தோட எல்லாத்தையும், என்ன நடந்தாலும், ஏத்துக்கோங்கோ! சுக துக்கம் மனோ விருத்தி. உலகத்திலே நடக்கறதுக்கும், அதுக்கும் சம்பந்தம் இல்லை.

எப்படி?

இரண்டு இளம் பிரம்மச்சாரி. தெற்கிலே கிராமத்திலே இருந்தாளாம். நல்லா சாஸ்திரங்களைப் படிச்சு நிறைய சம்பாதிச்சு, கஷ்டப்படற குடும்பத்தை முன்னேத்தணும்னு, பெத்தவாகிட்டே சொல்லிட்டு காசிக்குப் போனா. போற வழியிலேயே ஒருத்தன் காலமாயிட்டான். மத்தவன் தனியா போய் சேர்ந்தான், போய், கொஞ்ச காலத்திலேயே நல்ல பெயர் எடுத்தான். நல்லா சம்பாதிச்சான். இன்னும் சாம்பாதிச்சுட்டு ஊருக்கு போவோம்னு நினைச்சான். அப்போ காசிக்கு வந்த யாத்திரிகர் ஒருத்தர் ஊருக்கு திரும்பக் கிளம்பினார். அவர்.... இவா ஊர் வழியா போறார்ன்னு தெரிஞ்சுகொண்டு அவர்கிட்டே தன்னோட பெத்தவாளைப் பாத்து, தான் நல்லாயிருக்கறதாகவும், நல்லா சம்பாதிச்சுக்கொண்டு இருக்கறதாகவும், இன்னும் கொஞ்ச நாள்லே ஊருக்கு வர்றதாகவும், சொல்லச் சொல்லி, அப்படியே செத்துப்போனவனோட பெற்றோர்கள்கிட்டேயும் அவன் காலமான தகவலையும் சொல்லச் சொன்னான். அந்த யாத்ரிகனும்... அவனோட ஊருக்குப் போய், பெத்தவாகிட்டே தகவலைச் சொன்னார். ஆனா இரண்டு பேர் பெயரையும் மாத்திச் சொல்லிட்டார். அதனாலே உயிரோட இருக்கறவனோட பெத்தவா... ரொம்ப துக்கப்பட்டா. செத்தவனோட பெத்தவா... ரொம்ப சந்தோஷப்பட்டா.

அதனாலே சுக துக்கத்துக்கும், இங்கே நடக்கறதுக்கும் சம்பந்தமும் இல்லை. அது மனோ விருத்திதான்.

(616) ***தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.***

**கே: ஜீவநாடி உண்மையிலையே இருக்கா? இல்லை நம்ம கற்பனையா?**

**ப:** யோகிகள் என்ன சொல்றா... ஒரு நாடி, ஜீவநாடி, ஆத்மநாடி, பரநாடின்னு இருக்குங்கறா. உபநிஷத்கள், ஒரு மையத்திலே இருந்து ஆயிரக்கணக்கான நாடிகள் கிளம்பறதுன்னு சொல்றது.

சிலர் சஹஸ்ராரத்திலேன்னு சொல்றா. மத்தவா வேறு வேறு ஸ்தானம் சொல்றா.

கர்ப்போபணிஷத் கர்ப்பப் பையிலே ஒரு குழந்தையோட வளர்ச்சியைச் சொல்றது. ஜீவன் ஏழாவது மாசத்திலே குழந்தையோட உச்சிக்குழி வழியா நுழையறதாவும், அதுக்கு ஆதாரமா குழந்தைக்கு உச்சிக்குழி இளசா இருக்கறதையும், அது துடிக்கறதையும் சொல்றா. இந்த உச்சிக்குழி கெட்டியாக சில மாசம் ஆகும். இப்படி ஜீவன், உச்சிக்குழி வழியா நுழைஞ்சு ஆயிரக்கணக்கான நாடிகள் மூலமா உடம்பெல்லாம் பரவறது.

அதனாலே சாதகன் சஹஸ்ராரத்திலே ஒருமுகப் பட்டா மூலத்துக்கு போயிடலாம்ன்னு சொல்றா. பிராணாயாமம் மூலமா, ஒரு யோகி குண்டலினியை எழுப்பறான். குண்டலினி மூலாதாரத்திலே சுருண்டு கிடக்கு. அந்த சக்தி கிளம்பி, முதுகு தண்டு வடத்துக்கு நடுவிலே இருக்கற, சுழுமுனைன்னு ஒரு நாடி வழியா சஹஸ்ராரத்துக்குப் போறது. சகஸ்ராரத்திலே ஒரு முகப்பட்டா சந்தேகமில்லாம சமாதி ஆனந்தம் ஏற்படும். ஆனா வாசனைகள் நசியாது. அதனாலே சமாதி கலைஞ்சுடறது. ஒரு யோகிக்கு அதனாலே பந்தம் போகாது. அவன் இன்னும் முயற்சி பண்ணி வாசனைகளை ஒழிச்சாத்தான், சமாதி சுகம் நிரந்தரமாகும். அதுக்காக அவன் சஹஸ்ராரத்திலே இருந்து கீழே ஹிருதயத்துக்கு இன்னொரு நாடி வழியா வந்து சேர்றான். அந்த நாடிதான் ஜீவ நாடி.

சுழுமுனை அப்போ வளைவா இருக்கு. மூலாதாரத்திலே இருந்து சஹஸ்ராரத்துக்கு முதுகுதண்டு வழியா போய், அங்கேயிருந்து வளைஞ்சு, கீழே இறங்கி ஹிருதயத்திலே முடியறது. ஹிருதயத்துக்கு யோகி வந்துட்டா... சமாதி நிரந்தரமாகும். அதனாலே ஹிருதயம்தான் கடைசி ஸ்தானம்.

சில உபநிஷத்துகள் 101 நாடிகள் பத்தி பேசறது, அதிலே ஒண்ணு ஜீவ நாடி. யோகிகள் சொல்ற படி, ஜீவன், மேல இருந்து உச்சிக் குழி வழியா கீழே நுழைஞ்சு, சஹஸ்ராரத்திலே (மூளை) பிரதிபலிக்கறது. பிரதிபலிக்கணும்ன்னா ஒரு பரப்பு வேணும்.

அந்த பரப்பு எல்லையற்ற அறிவொளியை உடம்பளவா மாத்தணும். சுருக்கமா பிரம்மம் ஜீவனா குறுகிடறது. அந்த பிரதிபலிக்கற பரப்பு, அந்த ஜீவனோட வாசனைகளை கொண்டு இருக்கணும்.

பிரதிபலிக்கற பரப்பு, ஜலம் இருக்கற குடம் மாதிரி. அந்த பரப்பிலே இருக்கற ஜலம் வற்றிடுத்துன்னா பிரதிபலிப்பு இருக்காது. பிரதிபலிக்காமலே வஸ்து இருக்கும். இங்கே வஸ்துதான் பிரம்மம். அதைப் பிரதிபலிப்பிலேதான் பாக்கணும்ன்னு அவசியம் இல்லை. அது சுயம் பிரகாசம். அதனாலே சாதகனோட நோக்கம் ஜலத்தை வற்றப் பண்றதா இருக்கணும். அதாவது வாசனைகளை நாசமாக்கணும். அப்படி பண்ணா மூல ஒளி பிரதிபலிக்காம சுயமா பிரகாசிக்கும்.

இதை 'நான்கறது எங்கிருந்து வர்றது'ன்னு பாக்கறது மூலமா ஹிருதயத்திலே நுழைஞ்சுடறோம். இதுதான் ஆத்ம ஞானத்துக்கான நேர் மார்க்கம். இந்த வழியைக் கடைப்பிடிக்கறவா..., நாடிகள், சஹஸ்ராரம், குண்டலினி, சுழுமுனை, பரநாடி, பிராணயாமம், ஆறு ஆதாரம் இதைப் பத்தி எல்லாம் கவலைப்படத் தேவையில்லை.

ஆத்மா, எங்கேயோயிருந்தோவெல்லாம், வந்து உச்சிக்குழி வழியா உடம்பிலே நுழையலே. அது எப்பவும் இருக்கற மாதிரியேதான் இருக்கு. யோகிகள் சொல்ற மாற்றங்கள் எல்லாம் ஆத்மாவிலே இல்லே. ஆத்மா ஹிருதயத்திலே சூரியன் மாதிரி பிரகாசிக்கறது. அதோட ஒளியிலே இந்த மாற்றங்கள் தெரியறது. உடம்புக்கு ஆத்மாவுக்கு இருக்கற சம்பந்தத்தை ஒரு ஸ்படிகத்துக்கும் அதோட பின் புலத்துக்கும் இருக்கற சம்பந்தத்தோட ஒப்பிடலாம். சிவப்பு பூவை கீழே வச்சா சிவப்பு ஸ்படிகமா இருக்கும். இலைகளுக்கு கீழே வச்சா பச்சையா தெரியும். அப்படித்தான் ஜீவனும், உடம்பாவோ, மனசாவோ, அதோட இருப்பை ஆத்மாவிலே இருந்து எடுத்துக்கறது. செய்ய வேண்டியது எல்லாம் தவறான சம்பந்தத்தை நீக்கணும். அதைச் செஞ்சா, எப்பவும் இருக்கற ஆத்மா ஒரே அத்வைத ஸத்யமாயிடும்.

பிரதிபலிப்பு சூட்சுமசரீரத்திலேயே நடக்கறதா சொல்றா. அது நாடிகளாலேயே ஆனது. அதுவே, மூலாதாரத்திலே இருந்து தண்டுவடம் வழியா, சஹஸ்ராரம் வரைக்கும் நாடிகளா பரவி நிக்கறது.

மலையிலே இருக்கறப்போ... நாயனா, சஹஸ்ராரம்தான் ஜீவனோட ஸ்தானம்ன்னும் வாசனைகள் இருக்கற இடம்ன்னும் வாதம் பண்ணார். அங்கேதான் ஏகப்பட்ட மூளை செல்கள் இருக்கு. அது ஹிருதயத்திலே இருந்து வர்ற ஒளியை பிரதிபலிக்கறது. அதனாலேயே ஒருத்தன் காரியம் பண்றான்னார்.

அதுக்கு நான்... அது எப்படி இருக்க முடியும்? வாசனைகள் தன்னிடமேதான் இருக்க முடியும். நாம இருக்கற இடத்தை விட்டு வேற இடத்திலே வாசனைகள் இருக்காது. வாசனைகளுக்கு ஸ்தானம் சஹஸ்ராரம். ஆத்மாவுக்கு ஸ்தானம் ஹிருதயம்ன்னு சொன்னா... ஒருத்தன் தலையை வெட்டிட்டா ஞானம் அடைஞ்சுடணும். திரும்பப் பிறக்கக்கூடாது. அது உங்களுக்கே பொருத்தமில்லைன்னு தெரியும். அப்போ தூங்கும்போது ஏன் தலை கவிழணும்? மேலும் யாரும் தலையை தொட்டு 'நான்'ன்னு சொல்றது இல்லே. அதனாலே ஆத்ம ஸ்தானம் ஹிருதயம்தான். அங்கேதான் சூட்சும வடிவிலே வாசனைகள் இருக்கு. ஹிருதயத்திலே இருந்து வாசனைகள் வெளிவரும்போது, ஆத்ம ஒளியோட சேந்து, அவன் சிந்திக்கறான்னு சொல்றோம். சூட்சும வடிவத்திலே இருக்கற வாசனைகள், ஹிருதயத்திலே இருந்து சஹஸ்ராரத்துக்கு போற நாடி வழியா சஹஸ்ராரத்திலே திரையிடப்படறது. சஹஸ்ராரமே மனம், தொழில் படும் ஸ்தானம். அங்கே இருந்தே மனம் வேலைபாக்கறது.



(618) **ஹரித்வார் கனவான் ஒருவர் கேட்டார்.**

**கே: விசாரம் பண்ணும்போது, 'நான் புத்தி இல்லை'ங்கறதோட நின்னுடுது. அதுக்கு மேல போகமுடியலை. சுகமும் இல்லை.**

ப: புத்தி ஆத்மாவோட ஒரு கருவி. அது, அதைத் தாண்டியதை அறியறதுக்கு பயன்படாது.

**கே: எனக்கு புரியுது ஆனா சுகம் இல்லை.**

ப: தெரியாததைத் தெரிஞ்சுக்கறதுக்குத்தான் புத்தி வேணும்.
நீங்க இருக்கறதைத் தெரியறதுக்கு எதுக்கு புத்தி!
நீங்க இருக்கறதே ஆத்மாவைத் தெரிஞ்சுக்கறதுதானே!
புதுசா என்ன புத்தியாலே தெரிஞ்சுக்கப் போறேள்!
சுகம் இல்லைங்கறது ஒரு நினைப்பு. நாம இருக்கறதே சாமான்ய சுக நிலை. நீங்கதான் ஆத்மா. நீங்க சுக வடிவமேதான். அப்படி இருக்கும்போது சுகமில்லேன்னு சொல்றது ஆத்மாவா இருக்காது. அது அனாத்மா. அதைப் போக்கணும். அப்போதான் சுகம் தெரியும்.

**கே: அதை எப்படிச் செய்யறது?**

ப: நினைப்பு எங்கிருந்து வர்றதுன்னு பாருங்கோ!
மனசுலே இருந்து.
யாருக்கு மனசோ, புத்தியோ செயல்படறது?
எனக்கு! அந்த 'எனக்கு'லேயே மனசை... புத்தியைப் பதிக்கணும்,
இப்போ எனக்குன்னு சொன்னேளே அதுதான் 'நான்'.
அது எங்கிருந்து வந்ததுன்னு பாருங்கோ! அது மறைஞ்சுடும்.
ஆத்மாவே மிஞ்சும்.

(620) ***யாரோ ஒருவர் கேட்டார்.***

**கே: நேதி நேதி (இது அல்ல இது அல்ல) இதுதான் சாதகர்க்கு சொல்லப்படற உபதேசம். ஆத்மாவே பரம்பொருள்ன்னு சொல்றாங்க. அதை எப்படிக் கண்டுபிடிக்கறது?**

ப: ஆத்மாவைக் கேக்கறவன், பாக்கறவன், நினைக்கறவன்னு, சொல்றா. ஆனா அது மட்டும் அல்ல.

அதைக் 'காதோட காது' 'மனத்தோட மனம்' 'கண்ணுக்கு கண்' அப்படியெல்லாம் சொல்றா. பாக்கறவனை எப்படிப் பாக்க முடியும்?

**கே: ஆத்மா எதுன்னு சொல்லலையே?**

ப: நேதி நேதி (இது அல்ல இது அல்ல).

**கே: அது இல்லைன்னு தள்ளத்தான் செய்யுது. காட்ட மாட்டேங்குது.**

ப: (மௌனம்)

**கே: நீங்க ஆத்மாவைக் காட்டலே.**

ப: ஒரு மனுஷன் அவன் யார்ன்னு தெரியணும்னு விரும்பினான். அவன் பல மிருகங்களை, பல பொருட்களை அவனைச் சுத்திப் பாத்தான். அவனுக்குச் சொன்னா - நீ மாடு இல்லே. குதிரை இல்லே. மரம் இல்லே. இது இல்லே. அது இல்லேன்னு. மறுபடியும், அவன், நான் யார்ன்னு சொல்லலையேன்னான்... அதுக்குப் பதில் 'நீ மனுஷன் இல்லே'ன்னு சொல்லலே. அவன்தான் 'அவன் மனுஷன்'னு கண்டுபிடிக்கணும். நீங்கத்தான் உங்களை நீங்க யார்ன்னு கண்டுபிடிக்கணும்.

நீங்க உடம்பு இல்லே. மனசு இல்லே. புத்தியில்லே. அகந்தையில்லே. நீங்க நினைக்கற எதுவும் இல்லே. நீங்க உண்மையிலேயே யார்ன்னு கண்டுபிடிங்கோன்னு சொன்னா... இதைச் சரியா தேடினா.... மௌனமாயிடுவான். அதாவது சும்மாயிருப்பான். அதுதான் அதுவே... பதில் சொல்றது. அதுவேதான் பதில். தேடறவன்தான் தேடப்பட்ட ஆத்மா.

சுயம்வரத்திலே, பெண் போய்க்கொண்டே, ஒவ்வொருத்தர் முன்னாடியும் இல்லே இல்லேன்னு சொல்வாளாம். அவளுக்கு யாரைக் கல்யாணம் பண்ணப் பிடிச்சுருக்கோ, அவன் முன்னாடி நின்ன உடனே தலையைக் குனிஞ்சு மௌனமாயிடுவா.



(624) பக்தர் ஒருவர் கேட்டார்.

**கே: ஒவ்வொரு நினைப்பு வரும்போதும், நினைக்கறவனும் நினைக்கப்படும் பொருளும் தோன்றுது மறையுது. இந்த நினைக்கறவன் மறையல. ஏன் 'நான்'கறது மறைய மாட்டேங்குது? அப்போ நான் யார்ன்னு எப்படி விசாரத்தை தொடர்றது?**

ப: நினைக்கறவன் வெறும் மனோவிருத்திதான் (போலிதான்). விருத்தி மறைஞ்சாலும் அதுக்கு ஆதார ஸத்யம் மறையறது இல்லே. அந்த விருத்திக்கு ஆதாரமாயிருக்கறதுதான் 'நான்'. அதிலேயே மனோவிருத்தி தோன்றி மறையறது.

**கே: ஆத்மாவை கேக்கறவன் நினைக்கறவன் அறியறவன் அப்படியெல்லாம் சொல்லிட்டு மறுபடியும் கேட்டும் கேக்காதவன், நினைச்சும் நினைக்காதவன் அறிந்தும் அறியாதவன்னு சொல்றாங்களே! எப்படி?**

ப: அப்படித்தான். சாதாரண ஆள், அவன் இருக்கறதை, புத்தியிலே, போலி நான் எழுந்துக்கறப்போதான் தெரிஞ்சுக்கறான். போலி நான் உதிக்கும்... ஒடுங்கும்... அதனாலேதான் புத்தியை விஞ்ஞானமய கோசம்ங்கறா.

உண்மையான 'நான்' மட்டும் மிஞ்சினா அதுவேதான் ஆத்மா, பிரம்மம். நினைப்பு இல்லாமே நம்மளோட ஸ்வபாவ ஸ்திதியிலே இருக்கறதுதான் ஆனந்தம்.

ஆனந்தம் வந்து போச்சுன்னா... அது ஆனந்தமய கோசத்தோடது. நிரந்தரமாயிருந்தாத்தான் 'நான்'கறதோடது. நினைப்புகள் மறைஞ்சு பிறகு கவனம் கெட்டியா உண்மை நான்கறது மேலேயே இருக்கணும். இதை சூட்சுமமான மனத்தோடேயே செய்ய முடியும். இல்லேன்னா அந்த அனுபவத்தைச் சொல்ல முடியாதே!

இதைக் கைவல்ய நவநீதத்திலே, விவேக சூடாமணியிலே நல்லா விளக்கியிருக்கா. தூங்கும்போது ஆத்ம ஞானம் (நம்மளோட இருப்பு) இருந்தாலும் ஜீவனோட அஞ்ஞானமும் இருக்கு. அங்கே ஆத்ம ஞானம் அஞ்ஞானத்தை ஒண்ணும்

செய்யலே. இந்த அஞ்ஞானம் போகணும்னா முன்னாடி சொன்னேனே... 'சூட்சும மனத்தோடேயே செய்ய முடியும்'ன்னு. மனம் சூட்சுமமாகணும். இதை விருத்தி ஞானம்ன்னு சொல்றா.

அதாவது சூரிய ஒளி பஞ்சை எரிக்காது. அதுவே ஒரு லென்சை (lens) வச்சா பஞ்சு எரிஞ்சுடறது. அது மாதிரி ஆத்மா எப்பவுமே இருந்தாலும் அஞ்ஞானத்தை எரிக்கறது இல்லை. தியானத்தாலே இந்த மனம் சூட்சுமமாச்சுனா அஞ்ஞானம் எரிஞ்சுடும்.

இந்த சூட்சும மனம் உண்மையிலேயே மனத்தோட விருத்தி கிடையாது.

ஞானம் (நான்) விஞ்ஞானம் (போலி நான்)ன்னு இரண்டா பிரிக்கறா. ஒண்ணு ஸ்வபாவ ஸ்திதி (நிர்விசேஷம்). இன்னொன்னு விசேஷம் (பொருட்களாக தோன்றறது). முன்னது ஸத்யம். வஸ்து தந்திரம். பின்னது கர்த்து தந்திரம் அதாவது செய்றவனைப் பொறுத்தது. பின்னது போச்சுன்னா முன்னது வெளிப்படும். இதுக்குத் தேவை தியானம். முதல்லே திரிபுடி இருந்தாலும் கடைசியிலே திரிபுடி போய் ஞானமாயிடும். தியானத்துக்கு முயற்சி தேவை. ஞானத்துக்குத் தேவையில்லே.

தியானம் பண்ணலாம்... பண்ணாமயிருக்கலாம்... தப்பாவும் பண்ணலாம்... ஆனா ஞானம் அப்படி இல்லே. தியானம் கர்த்து தந்திரம் (செய்றவனைப் பொறுத்தது). ஞானம் வஸ்து தந்திரம் (பிரம்மத்தோடது).



(625) *மிஸ் மெர்ஸ்டன் கேட்டார்.*

**கே: 'நான் யார்'ங்கற நூலைப் படிச்சேன். நிறைய நேரம் யார்ங்கற விசாரத்துல இருக்க முடியலை. இரணடாவது, நான் இருக்கற சூழ்நிலை எனக்கு பிடிக்கலை, ஆனா ஏதாவது மனசுக்கு பிடிச்ச மாதிரி எனக்கு வாழ்க்கையில நடக்கும்ன்னு நம்புறேன்.**

**ப:** பிடிப்பு இல்லேன்னா நல்லதுதான். ஆனா ஏதாவது புதுசா நடக்கணும்னு நம்பிக்கை இருக்குன்னு சொல்றதாலே, இன்னும் வாசனை போகலே. கனவு மாதிரிதான் இந்த உலக வாழ்க்கையும். கனவு காண்றவன் முழிச்சவுடன் அங்கே அனுபவிச்ச இன்ப துன்பங்களைப் பொய்ன்னு ஒதுக்கறான். கனவு உலகம் உங்களோட ஒரு பகுதியாகவேயிருந்து, உங்கள்லே இருந்து வேறா இல்லே. இருந்தாலும் அதை இப்போ ஆர்வப்படறது இல்லையே...! அது மாதிரி இந்த உலகமும் கனவுதான். இந்தக் கனவிலே இருந்து முழிச்சா அது ஆர்வப்படாது. இந்த உலகத்தை உங்கள்லே இருந்து வேறையா பாக்கலேன்னா.... ஆசை வராது.

இந்த உலகம் உண்மையிலேயே நம்மளோட நினைப்புதான். இது புரிஞ்சாலே ஆசை வராது.

எல்லாம் ஜலத்திலே குமிழி மாதிரி. நீங்கதான் ஜலம். இந்த உடலும் உலகமும் குமிழிகள். குமிழி நீரை விட்டு வேறா இல்லை. ஆனா குமிழியே நீர் ஆகாது.

**கே: நான் என்னை நுரையாத்தான் உணர்றேன்.**

**ப:** அனாத்மாவோட சம்பந்தத்தை விட்டுட்டா, உங்களுடைய ஸ்வபாவம் தெரியும். அப்போ நீங்க திடமா இருப்பேள். எந்தச் சந்தேகமும் வராது.

**கே: ஆனாலும் நான் நுரைதான்.**

**ப:** நீங்க அப்படி நினைக்கறேள். அதனாலே கவலை வர்றது. அது தவறான கற்பனை. உங்களோட நிஜத்தை ஏத்துக்கோங்கோ.

ஜலமாய் இருங்கோ! நுரையாய் இருக்காதேள்! அது உங்களுக்குள்ளே முழுகறதனாலேயே வரும்.

**கே: முழுகினா கண்டுபிடி......**

**ப:** நீங்க முழுகலேன்னாலும் அதுதான். உள்ளே வெளியே எல்லாம் உங்களைத் தவறா கற்பனை பண்ணிக்கற

வரைக்கும்தான். உங்களோட நிஜத்தை நீங்க ஒத்துக்காத வரைக்கும்தான்.

**கே: நீங்கதானே சொன்னீங்க உள்ளே முழுகணும்ன்னு!**

ப: நீங்க உங்களை ஜலமா பாக்காம, தப்பா நுரைன்னு சொன்னதாலே உள்ளே முழுகணும்ன்னு சொல்ல வேண்டியதிருக்கு. இந்தக் குழப்பம் தீரத்தான், குழப்பத்தை சுட்டிக்காட்டி உங்களைச் சரியான வழிக்குக் கொண்டு வர வேண்டியதா இருக்கு. நீங்களும் நீங்க பாக்கற எல்லாமும் ஆத்மாவே. அதைத் தாண்டியும் எதுவும் இல்லை. அன்னியமாவும் எதுவும் இல்லே. இது தெரிஞ்சா... நீங்க எதுக்கும் ஆசைப்பட மாட்டேள். ஆசையில்லேன்னா... நீங்க திருப்தியா இருப்பேள்.

ஆத்மா எப்பவுமே அடையப்பட்டே இருக்கறது. ஏற்கெனவே அடையப்பட்டு. எந்த நேரமும் உணரப்பட்டே இருக்கறதை, அடையத் தேவையில்லே.

ஏன்னா நீங்க இருக்கறதை உங்களாலே மறுக்க முடியாது. அந்த இருப்பே அறிவு. ஆத்மா.

நீங்க இல்லாமக் கேள்வி கேக்க முடியாது. அதனாலே நீங்க இருக்கறதை ஒத்துக்கொண்டே ஆகணும். அந்த இருப்பே ஆத்மா. அது ஏற்கனவே உணரப்பட்டே இருக்கறது. அதை உணர செய்யப்படும் முயற்சி எல்லாம், இந்தத் தவறை உணர்வதாகவே முடியும். 'நான் ஆத்மாவை இன்னும் உணரலே'ங்கறதுதான் அந்தத் தவறு. புதுசா எந்த ஞானமும் வராது. நீங்களேதான் வெளிப்படுவேள்.

**கே: அதுக்கு கொஞ்ச வருஷம் ஆகும்.**

ப: ஏன் வருஷம்? காலம் மனக்கற்பனை. ஆத்மாவிலே காலம் இல்லை. அகந்தை வந்த பிறகே காலம் வர்றது. ஆனா நீங்க கால தேசம் கடந்த ஆத்மா. நீங்க கால தேசம் இல்லாதப்போவும் இருக்கேள்!



(626) *பக்தர் ஒருவர் கேட்டார்.*

**கே: அஹம்(நான்)கறது 'இதம்' (உலகம்)ங்கறதோட சம்பந்தத் தோடயேதான விளங்குது?**

ப: இப்போ அப்படி விளங்கறது. ஆனா 'இதம்' 'அஹம்'லே வியப்தம் (அடங்கியிருக்கு). வேற வேற இல்லே. இதம் அஹத்திலே கலந்து ஒண்ணா அஹமாத்ரமா விளங்கறதுதான்... சுத்த அஹம் (உண்மைநான்).

(627) *பக்தர் ஒருவர் கேட்டார்.*

**கே: குரு கூட தங்கியிருக்கறதுன்னா என்ன?**

ப: வேத அத்தியாயனம் பண்றதுதான்.

**கே: ஆனா குரு சந்நிதிக்கு சிறப்பு இருக்குல்ல?**

ப: ஆமாம். அது சித்த சுத்தியைக் கொடுக்கும்.

**கே: அது பலன். நான்... சிஷ்யன் எப்படி நடந்துக்கணும்னு கேக்கறேன்?**

ப: அது பிரம்மச்சாரியா... கிருஹஸ்தனாங்கறதையும் அவாவாளோட ஸம்ஸ்காரத்தையும் பொறுத்தது.

அந்தக் காலத்திலே ரிஷிகள் குழந்தைகளை வேறு குருகுலத்துக்குத்தான் அனுப்பியிருக்கா.

**கே: ஏன்?**

ப: படிப்புக்குப் பாசம் தடையாயிருக்கும்னுதான்.

**கே: ஞானிக்கு பாசம் தடையாயிருக்காது. சிஷ்யன் பக்கம் இருந்து வேணா அப்படி இருக்கலாம்.**

ப: ஆமாம்.

**கே: அதையும் குருவே போக்கக் கூடாதா?**

ப: நாளாகும். சிஷ்யன் மரியாதை எதிர்பார்ப்பான். அருள் வேலை பாக்க நாளாகும்.

அஞ்ஞானத்திலே இருந்து விடுபடறது... கெட்ட சொப்பனத்திலே இருந்து விழிக்கற மாதிரி. மனசுக்கு இரண்டு அழுக்கு இருக்கு. ஆவரணம், விட்சேபம். ஆவரணம் தீமை. விட்சேபம் இருக்கலாம். தூக்கத்தோட பிடி இருக்கற வரைக்கும், கெட்ட கனவு வரும். முழிச்சுக்கொண்டா பிடி போயிடும். இனி பயம் இல்லை. விக்ஷேபம் ஆனந்தத்துக்குத் தடை கிடையாது. உலகத்தோட விக்ஷேபத்தைப் போக்கறதுக்குத்தான் குருகூட இருக்கற விக்ஷேபம் ஏற்பட்டிருக்கு. அதாவது. வேதம் படிக்கறது கடவுளைக் கும்பிடறது. அதனாலே ஞானம் ஏற்படும்.

கடைசியிலே என்ன... கர்ணன் எப்பவும் குந்தியோட மகன்தான். பத்தாவது ஆள் எப்பவுமே இருந்தான். இராமன் எப்பவுமே விஷ்ணுதான். அதுதான் ஞானம். எப்பவும் இருக்கறதைத் தெரிஞ்சுக்கறதுதான் ஞானம்.

(628) ஐரோப்பிய பெண்மணி கேட்டார்.

**கே: நான் இருக்கறது மறந்துடுது. அதை எப்படி இடைவிடாம மறக்காம இருக்க வைக்கறது?**

ப: இடைவெளி நினைப்புகளாலே ஏற்படறது. நீங்க நினைக்கலேன்னா இடைவெளின்னு ஒண்ணு இருக்கறதாவே தெரியாது.

மறந்துடறேன்... மறக்காம இருக்கணும்... இதுவும் ஒரு நினைப்புதான்.

யாருக்கு இடைவெளிங்கற நினைப்பு வர்றதுன்னு பாருங்கோ!

யாருக்கு மறக்காம இருக்கணும்ங்கற நினைப்பு வர்றதுன்னு பாருங்கோ!

இந்தப் பயிற்சியை இடைவெளிங்கற நினைப்பு போற வரைக்கும் விடாதேள்!

அப்பியாசமேதான் இடைவெளி இல்லாத இருப்பை கொண்டுவரும்.

(629) *சிவராத்திரி அன்று சாதகன் கேட்டது.*

**கே: ஆத்மா விசாரம் பண்ணினா சூட்சும சரீரம் பிரியும். சரியா?**

ப: ஒரே நிலையைத்தான் பல பெயர்களாலே குறிப்பிடறா. ஒவ்வொரு கோணத்திலே இருந்து ஒவ்வொரு பெயர்.

விசாரம் பண்ணா புரியஷ்டகம் (சூட்சும சரீரம்) மறைஞ்சுடும்.

அஷ்டகம் போய் ஏகம் மிஞ்சும்.

விசாரம் புரியஷ்டகத்துக்குக் கொண்டு போகும். இந்தப் புரியஷ்டகம் பிரியறதைத்தான் விருத்தி ஞானம்ன்னு சொல்றா. விருத்தி ஞானம்தான் அஞ்ஞானத்தைப் போக்கும். புரியஷ்டகம் பிரிஞ்சாத்தான் அஞ்ஞானம் போகும்.

**கே: அப்போ விசாரம் பண்ணா புரியஷ்டகத்துக்கு போகலாம்.**

ப: ஆமாம், புரியஷ்டகம் எதையும் பிடிக்காதப்போதான்... ஆத்மா ஒளிரும். அதுதான் அஹம்ஸ்புரணம். ஸ்புரணம் ஓஞ்சுடறதுதான் புரியஷ்டகமும் மறைஞ்சிடறது.

(643) *தரிசனம் பண்ணவந்த ஒருவர் கேட்டார்.*

**கே: காமத்துலே இருந்து விடுபடறதுதான் துறவா? இல்லை வீடு, வாசல், தொழில் இதை விடுறதா? எது துறவு?**

ப: காமத்திலே இருந்து விடுபடறது ரொம்ப அவசியமான படி. அது வந்துடுத்துன்னா எல்லாம் வந்தமாதிரி.

**கே: சங்கரர் ஞானத்தையும், அதற்குப் படியா துறவையும், வலியுறுத்துறார். ஆனா கீதை கர்மத்தையே வலியுறுத்துது. அப்போ இரண்டு வழி இருக்கா?**

ப: கீதை ஆரம்பிக்கும் போதே 'நீ உடம்பில்லை; அதனாலே நீ கர்த்தா இல்லை'ன்னுதானே ஆரம்பிக்கறது.

**கே: அதோட அர்த்தம் என்ன?**

ப: ஒருத்தன் 'நான்தான் செய்றேன்'கற நினைப்பு இல்லாமே வேலை பாக்கணும். அவன் இல்லாமலே வேலை நடக்கும். ஒவ்வொருத்தரும். ஒரு காரணத்தோடதான் வந்துருக்கோம். அவன், நான்தான் செய்றேன்னு நினைச்சாலும், நினைக்கலேன்னாலும் அவனாலே செய்யப்பட வேண்டியதை செஞ்சே தீருவான்.

**கே: கர்ம யோகம்ன்னா என்ன? கர்மத்துக்கு பற்றற்று இருக்கறதா? பலனுக்கு பற்றற்று இருக்கறதா?**

ப: நான் செய்றேன்னு நினைக்காம இருக்கறது. வேலை தானா நடக்கும்.

**கே: கர்மப் பற்றற்று செய்றதா? இல்லை. பலன்ல பற்றற்று செய்றதா?**

ப: யாராவது செஞ்சாத்தான் இந்தக் கேள்வி. நீங்கதான் எதையும் செய்யலியே.

**கே: அப்போ கர்மயோகம்ன்னா... செய்றேன்னு நினைப்பு இல்லாம செய்யறது.**

ப: ஆமா.

**கே: கீதை கர்மத்தையே வலியுறுத்துதே...!**

ப: ஆமா. கர்த்தா இல்லாத கர்மத்தை.

**கே: அப்போ வீட்டை விட்டுட்டு துறவு தேவையில்லையா?**

ப: வீடு உங்களிடம் இருக்கா. இல்லே. நீங்க வீட்டுலே இருக்கேளா?

**கே: என் மனசுலேதான்.**

ப: அப்போ ஸ்தூல வீட்டை விட்டுட்டுப் போறதாலே என்ன ஆகப்போறது?

**கே: இப்போ புரியுது. துறவுன்னா கர்மம்தான். கர்த்தா இல்லாத கர்மம்.**

**ஜீவன் முக்தனுக்கு கர்மம் உண்டா?**

ப: ஜீவன்முக்தனா இந்தக் கேள்வியை கேக்கறான்.

**கே: இல்லை.**

ப: அப்போ முதல்லே அதை அடைங்கோ! அப்புறம் கேக்கலாம். முக்தின்னா மனசோட வேலை இல்லாததுதான்.

(644) ஒரு *முஸ்லிம் அரசாங்க அதிகாரி கேட்டார்.*

**கே: மறுபிறப்புக்கு என்ன அவசியம்?**

ப: இப்போ பிறப்பு இருக்கான்னு பாப்போம். அப்புறம் மறுபிறப்புக்குப் போவோம்.

**கே: எப்படி?**

ப: மறுபிறப்பைப் பத்தி பேசறதுக்கு இப்போ பிறந்திருக்கேளா?

**கே: ஆமாம். நிச்சயமா. அமீபாலே ஆரம்பிச்சு மனுஷப் பிறப்பு வரைக்கும் பரிணாம வளர்ச்சி ஏற்பட்டு இருக்கு. இப்போ அது பூரணமாயிடுச்சு. அப்போ எதுக்கு மறுபிறப்பு?**

ப: பரிணாமத்திலே யார் முடிவு பண்றது, இத்தோட போதும்ன்னு?

**கே: பௌதிகமா பூரணநிலைக்கு வந்தாச்சு. ஆனா ஆத்ம முன்னேற்றத்துக்கு வேணா இறந்த பிறகு ஏற்படலாம்.**

ப: யார் மனுஷன்? உடம்பா... ஆத்மாவா?

**கே: இரண்டும் சேத்துத்தான்.**

ப: உடம்பில்லாமே நீங்க இருக்கேளா?

**கே: எப்படி முடியும்? முடியாது?**

ப: தூங்கும்போது எப்படி இருக்கேள்?

**கே: தூங்கறது தற்காலிக மரணம். நினைவிழந்து இருக்கேன். அதனால ஒண்ணும் தெரியாது.**

ப: தூக்கத்திலே நீங்க இருந்தேளா? இல்லையா?

**கே: தூங்கும்போது ஆத்மா உடம்பை விட்டுட்டு எங்கேயோ போயிடுது. விழிக்கையில திரும்பி வருது. அதனால அது சின்ன மரணம்.**

ப: செத்தவன் திரும்பி வந்து நான் செத்துட்டேன்னு சொல்வானா? ஆனா தூங்கினவன் திரும்ப வந்து நான் தூங்கினேன்னு சொல்றானே!

**கே: ஏன்னா அது தற்காலிக சின்ன மரணம்.**

ப: மரணம் தாற்காலிகம்ன்னா பிறப்பும் தற்காலிகம்தான். அப்போ எது நிரந்தரம்?

**கே: நீங்க என்ன கேக்கறீங்க?**

ப: ஜனன மரணம் தாற்காலிகம். அப்போ ஏதோ ஒண்ணு நிரந்தரம் இருக்கணுமே! ஸத்யம்தான் நிரந்தரம்.

**கே: எதுவும் ஸத்யம் இல்லை. எதுவும் நிரந்தரம் இல்லை. எல்லாம் மாயை.**

ப: மாயை எதிலே ஏற்படறது?

**கே: இப்போ புரியுது. எல்லாம் மாயைதான். ஒண்ணும் இல்லை.**

ப: எதுவும் இல்லேன்னா... இந்தக் கேள்வியும் இல்லை.

**கே: ஏன் மறுபிறப்பு இருக்கணும்?**

ப: யாருக்கு?

**கே: பூரணமான மனுஷனுக்கு.**

ப: நீங்க பூரணம்ன்னா... ஏன் மறுபிறப்புக்குப் பயப்படறேள்? அதிலே இருந்தே நீங்க பூரணன் இல்லேன்னு தெரியறதே!

**கே: நான் பயப்படலை, நீங்கதான் சொல்றீங்க. நான் மறுபடியும் பிறக்கணும்ன்னு.**

ப: யார் சொல்றது? நீங்கதான் கேள்வி கேக்கறேள்!

**கே: நான் சொல்றது இதுதான். நீங்க பூரணமான ஆள். நான் பாவி. நீங்க, நான் பாவியாயிருக்கறதுனால மறுபடியும் பிறக்கணும்...... நான் பூரணமாகணும்னு சொல்றீங்களா?**

ப: இல்லே. நான் அப்படிச் சொல்லலே. அதுக்கு மாறா நீங்க பிறக்கவே இல்லை. இறக்கவும் மாட்டேள்ங்கறேள்.

**கே: நான் பிறக்கலைங்கறீங்களா?**

ப: ஆமாம். நீங்க உங்களை உடம்புன்னு நினைச்சு, பிறப்பு இறப்போட குழப்பிக்கறேள். நீங்க உடம்பு இல்லே. அதனாலே பிறப்பு, இறப்பு இல்லே.

**கே: நீங்க மறுபிறப்பு இருக்குன்னு ஒத்துக்கலையா?**

ப: ஒத்துக்கலே. அதோட நீங்க மறுபடியும் பிறப்பேள்ங்கற உங்களோட குழப்பத்தையும் போக்கப் பாக்கறேன்.

நீங்கதான் மறுபிறப்பைப் பத்தி நினைக்கறேள். இந்தக் கேள்வி யாருக்கு வர்றதுன்னு பாருங்கோ. கேள்வி கேக்கறவன் யாருன்னு தெரிஞ்சாலொழிய கேள்விகள் ஒழியாது.

**கே: இது என் கேள்விக்கு பதில் இல்லை.**

ப: எல்லா சந்தேகங்களுக்கும், நீங்க எந்தப் புள்ளிலே நிக்கறேளோ அதையே முடிவுக்கும், கொண்டு வர்ற பதில் இது.

**கே: இது எல்லாத்தையும் திருப்திப்படுத்தாது.**

ப: அடுத்த ஆள்களைப்பத்தி நமக்கு என்ன கவலை. நாம நம்மளப் பாத்துக்கொண்டா போதும். அவாவாளே பாத்துப்பா.

சில நிமிடம் கழித்து இன்னொருத்தர்.

**கே: பரிணாமக் கொள்கை உண்மையா?**

ப: நீங்க கனவிலே ஒரு பழங்கால நினைவுச்சின்னத்தை பாக்கறேள். அதை எப்படிக் கட்டினான்னு யோசிக்கறேள். ஒவ்வொரு செங்கல்லா எடுத்து எப்படி இவ்வளவு பெரிய விஷயத்தைப் பண்ணிருப்பான்னு யோசிக்கறேள். ஆனா கட்டினதைப் பாக்கலே. கட்டினவாளையும் பாக்கலே. அந்த நினைவுச்சின்னம் எப்படிக் கட்டப்பட்டது?

டக்குன்னு வந்தது கனவிலே. அப்படித்தான் பரிணாமக் கொள்கையும். அவனை மனுஷன்னு பாக்கறதாலே, அவன் ஏதோ அமீபாலே இருந்து பரிணாம வளர்ச்சி பெற்று வந்ததா நினைக்கறான். எப்படி கனவிலே நினைவுச் சின்னத்தை நினைச்சானோ அப்படி.



(647) **தரிசனம் பண்ண வந்த ஒருவரிடம்.**

**ப:** சிரவணத்தாலே ஞானம் வர்றது. அது தீபஜோதி மாதிரி. மனனத்தாலே ஞானம் மறைஞ்சுடாமே பாதுகாக்கப்படறது. ஜோதி எப்படிக் கண்ணாடியாலே பாதுகாக்கப்படறதோ அப்படியே. பிற நினைப்புகளாலே ஞானம் விட்டுப் போகாம பாத்துக்கணும். நிதித்யாசனம் திரியை துரிசுதட்டி தூண்டி வச்சுருக்கறது... பிறநினைப்பு விட்டு ஜோதியை எப்பவும் வந்தா, உண்முகமாகி ஞானத்திலேயே இருக்கறது. இது ஸ்வபாவமாயிடுத்துன்னா... அது ஸமாதி.

நான் யார்ங்கற விசாரம்தான்.........சிரவணம்
உண்மையான 'நான்'தெரியறதுதான்... மனனம்
அதை நடைமுறைப்படுத்தறதுதான். ...நிதித்தியாசனம்.
சும்மா 'இருக்கறது'தான். ........... ஸமாதி

(650) **கே: பக்தி, முக்தி சாதனமாகுமா?**

**ப:** பக்தி, முக்தியிலே இருந்து வேறே இல்லை. பக்தின்னா சொரூபமாயிருக்கறதுதான். எப்பவும் நாம அதுதான். இதை ஒருத்தன் உணர்றான். அவ்வளவுதான். அதை எந்த வழியிலே உணர்ந்தா என்ன...!

**கே: பக்தின்னா என்ன?**

**ப:** கடவுளை நினைக்கறது. அப்படின்னா மத்ததை நினைக்காம இருக்கறது. அதுதான் முக்தி. விசாரம்தான் ப்ரபத்தி.



(653) *தரிசனம் பண்ண வந்த ஒருவர் கேட்டார்.*

**கே: திக்குத் தெரியாத காட்டிலே அலையற மாதிரி அலையறேன். வழி தெரியலே.**

ப: காட்டிலே இருக்கோங்கற கற்பனை நீங்கினா போறும். அதுதான் எல்லாத் தலைவலிக்கும் காரணம்.

**கே: எனக்கு வழி தெரியலே.**

ப: உங்களைத் தவிர காடோ... வழியோ... எங்கேயிருக்கு. நீங்க நீங்களாவே இருந்துகொண்டு காடு வழின்னு என்ன கதைவிடறேள்.

**கே: நான் சமூகத்துலே இருக்க வேண்டியதாயிருக்கே!**

ப: உங்களோட காடு மாதிரிதான் சமூகமும்!

**கே: வீட்டை விட்டுட்டு வெளியே வந்தா சமூகம்தானே இருக்கு. சமூகத்துல கலக்க வேண்டியதா இருக்கே!**

ப: யாரு செய்யறா அதை?

**கே: உடம்புதான் போகுது... செய்யுது.**

ப: உடம்போட சம்பந்தப் படுத்திக் கொண்டதனாலேயே இந்தத் தொல்லை. மனசுலேதான் தொல்லையிருக்கு. நீங்க உங்களை உடம்பாவோ, மனசாவோ நினைச்சுக்கறேள். தூக்கத்திலே கனவு வர்றது. அது மனசோட வேலை. நனவு வர்றது. உடம்புன்னு நினைச்சுக்கொண்டு காடு, வீடு, சமூகம்ன்னு அதிலே உங்களைக் கிளப்பிடறது.

நீங்கதான் இந்த மூணு நிலையிலும் மாறாத இருப்பு. அது மேலேயே இந்த மூணு நிலையும் மாறிமாறி வர்றது. ஸ்கிரீன்லே படம் வர்ற மாதிரி. ஸ்கிரீன் நகர்றது இல்லை. அது மாதிரி நீங்க அசையாத இருப்பு. அதிலே உங்களோட உடம்பு படம் மாதிரி தெரியறது. நீங்க நீங்களாவேயிருந்தா உடம்பும் உடம்போட செயல்களும் உங்களைப் பாதிக்காது.

**கே: அது குரு அருளாலேயே நடக்கும். பகவத்கீதையில குருவோட பாதத் துளியாலேயே ஆனந்தம் ஏற்படுதுன்னு சொல்றாங்க. அதையே வேண்டிக்கறேன்.**

ப: நீங்க இருக்கறதேதான் ஆனந்தம். நீங்க இல்லையா? அதேதான் ஆனந்தம், நீங்க உங்களை மாறாத உண்மைன்னு உணரணும். உடம்பும் மனசும் இல்லை.

**கே: நான் இருள்ல இருக்கேன். நான் அஞ்ஞானி.**

ப: இந்த நினைப்புதான் போகணும். யார் அஞ்ஞானிங்கறது?

அஞ்ஞானத்தைப் பாக்கறவன்தானே! அஞ்ஞானத்தைப் பாக்கற அறிவு எப்படி அஞ்ஞானியாயிருக்க முடியும்?

எனக்குத் தெரியாதுன்னு தெரியும்ன்னா அது எப்படித் தெரியாததாகும்? அதுதான் ஞானம்.

**கே: உங்க கூட இருக்கும்போது ஆனந்தமா இருக்கேன். இதே இது வேலூர்ல என் வீட்டுல இருக்கறப்ப ஏன் ஆனந்தமா இருக்க மாட்டேங்குது?**

ப: இந்த இடத்திலே இருக்கறதா ஆனந்தம்?

உங்களோட இடத்துக்கு போனா துக்கம்ங்கறேள். அப்போ இந்த ஆனந்தம் நிரந்தரம் இல்லே. அதனாலே இடத்திலே ஆனந்தம் தேடக் கூடாது. அது நிரந்தரமாயிருக்கணும்.

அப்படி நிரந்தரமான ஒண்ணு நீங்க மட்டும்தான்.

நீங்க நீங்களா இருங்கோ! சும்மாயிருங்கோ! ஆனந்தமா யிருங்கோ! நீங்க எப்பவும் அதுதான்.

**கே: உலகத்தை அநித்தியம்ன்னு பாக்கலாமா?**

ப: எதுக்கு?

அதை நித்யம்னு நீங்க நினைக்கறதாலே சாஸ்திரங்கள் அநித்தியம்ன்னு சொல்றது. உங்களோட தவறான பார்வையை மாத்தறது.

அது நித்தியமான உங்களை உணர்றதுக்குத்தான். உலகத்தை அநித்தியம்ன்னு சொல்றதுக்கு இல்லே.

**கே: உதாசீனமா இருக்கச் சொல்றாங்க. உலகத்தை அநித்தியம்னு பாத்தாத் தான.... உதாசீனம் வரும்?**

ப: ஆமா. உதாசீனமே உபதேசிக்கப்படறது.

ஆனா அது என்ன?

அது விருப்பு வெறுப்பு இல்லாமே இருக்கறது.

இந்தத் தோற்றம் எல்லாம் எதிலே வந்து வந்து போறதோ, அதை உணர்ந்தா இந்த உலகத் தோற்றத்தை விரும்பவோ, வெறுக்கவோ மாட்டோம். அதுக்குப் பெயர்தான் உதாசீனம்.

**கே: வேலை செய்ய விருப்பம் இருக்கணுமே? வேலை செய்யறதா... வேண்டாமா?**

ப: நிச்சயமா வேலை செய்யணும். வேலையைச் செய்ய மாட்டேன்னு சொன்னாக்கூட உங்களை வேலை வாங்கும்.

செய்ய வைக்கும். இந்த உடம்பு எதுக்கு வந்ததோ... அதைச் செய்யட்டும். நாம குறுக்கே நிக்கக் கூடாது.

கிருஷ்ணர் கீதையிலே அர்ஜுனனிடம் இதைத்தான் சொல்றார். அர்ஜுனா நீ விரும்பலேன்னாலும், விரும்பினாலும் உன்னாலே ஆக வேண்டியதை செஞ்சே தீருவே. வேண்டாவெறுப்பா செய்யறதுக்குப் பதிலா சம்மதிச்சு சந்தோஷமா செஞ்சுட்டுப் போ. உனக்கு வேலையிருந்தா அதை விட்டு ஓட முடியாது. உனக்கு வேலையில்லேன்னா நீ எவ்வளவு தேடினாலும் கிடைக்காது.

**கே: இதை எப்படி செய்யறது?**

ப: நாடகத்துலே நடிகன் மாதிரி விருப்பு வெறுப்பு இல்லாமே இருக்கறதுதான் உதாசீனமா இருக்கறதுன்னு சொல்றா.

**சிவமணியம் முற்றிற்று**

**ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து**

# உள்ளடக்கம்

**கடவுளர்:**



**மஹான்கள்:**

**மஹா வாக்கியம்:**



**நூல்கள்:**

**ஸ்தலங்கள்:**

## அருஞ் சொற்கள்:

**பக்தர்களும் தரிசிக்க வந்தவர்களும்:**

**உபமானக் கதைகள்**

**குட்டிக் கதைகள்:**





**ஓம் தத் ஸத்**

சிவமணியம் என்னும் இந்நூல் ஸ்ரீரமண மகர்ஷிகளிடம் 1935 முதல் 1939ம் ஆண்டு வரையிலான நான்காண்டுகளில் நாடி வந்த அன்பர்களின் சந்தேகங்களுக்கு அருளிய தெளிவேயாகும். பற்பல நிலைகளினின்று கேட்கப்படும் சந்தேகங்களுக்கு பெரும்பாலும் தமிழ் மொழியிலேயே பகவான் அருளிய விளக்கங்களின் தொகுப்பாகும் இந்நூல். பேச்சுத் தமிழில் இந்நூல் அமைந்திருப்பது சிறப்பாகும்.

"உலகச்சரித்திரத்திலேயே பரமார்த்த சத்யம் பாமரரும் எளிதில் உணர்ந்து அனுபவிக்குமாறு இப்பொழுது காண்பிக்கப் பெற்றவாறு எப்பொழுதும் காண்பிக்கப்பட்டதே இல்லை" என்று பகவானை தரிசித்து பிறவிப்பயனுற்ற ஆங்கில பக்தர் கிராண்ட் டஃப் (Grand Duff) கூறியது மிகையல்ல என்பது இந்நூலை வாசித்தால் மட்டுமே உணர முடியும்.

